உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

(மூலமும்—உரையும்.)

பொருட்பால்

இரண்டாம்பாகம்.

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியன்

ஶ்ரீ

அதிகாரம்

.... 2193

.... 2238

.... 2280

குறிப்பு:—இப் புத்தகத்தோடு 6-வதாண்டு முடிவடைந்துள்ளது. சென்ற ஆண்டின் 12 புத்தகங்களையும் இவ் ஆண்டுடன் சேர்த்துப் பைண்டு செய்துகொண்டால் பொருட்பால் இரண்டாம் பாகமாகிய இது, 800 பக்கமுள்ள ஓர் அழகிய புத் மாய் இனிது அமைவதாகும்.

உ

சிவமயம்.

# முகவுரை

---

இந்நூலுள் அறத்துப்பாலும், பொருட்பாலின் முதற் பாகமும் இதன் முன்னர் வெளிவந்துள்ளன. பொருட்பாலின் இரண்டாம் பாகமாகிய இது, இப்பொழுது வெளிவருகின்றது. வினைத்தூய்மை முதல் கூடா நட்பு ஈறாகப் பதினெட்டு அதிகாரங்கள் இதில் அடங்கியுள்ளன. மலர்தலை உலகினுக்கு உயிரென நின்று செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந்தர்களும், அவருடனிருந்து உறுதுணையாற்றும் மந்திரிகள் முதலிய பண்புடையாளர்களும் நன்கு அறிந்துகொள்ள வேண்டிய ஒண்பொருள்கள் அனைத்தும் இதன்கண் ஒருங்கமைந்துள்ளன. சிறப்பு நோக்கி

அரசர்க்கு உரியனவாக உரைத்திருப்பினும், மக்களெல் லாரும் ஒக்க நின்று ஓதி உணர்ந்தொழுக வேண்டிய அரிய நீதி கள் யாவும் உரிய சரிதங்களோடு தெளிவுற அமைந்து விழுமிய நலனோடு இதில் ஒளிர் தருகின்றன.

நாம் செய்யும் தொழில்கள், எவ்வகையிலும் பழிபாவங்கள் கலவாமல் தூய்மையுள் ளனவாய்ப் பொருளோடு புகழும் பயக் கும் வழிகளைப் பொருந்தி யிருக்கும்படி தெளிந்துகொள்ளவேண் டிய திறங்களும், கருதியகாரியங்களை உறுதியோடு நின்று இனிது முடிக்கும் விதங்களும், செயல் வகைகளை நன்கு தெரிந்து பருவந் தவறாமல் வளம்பெறச்செய்யும் நலங்களும், அரசர்பால் செல்லும் தூதர்கள், அறிவும் உருவும்

அழகும் ஆண்மையும் முறையறிந்து இனிதாக மொழிதரு வன்மையும் உடையராய் அமைந்து ஒழுக வேண்டிய உண்மைகளும், அவையின் நிலையறிந்து அஞ்சாது



நின்று எவரும் வியந்துகொள்ளும் வண்ணம் சிறந்த நீதிகளை இனிதாகத் தெளிந்து சொல்லுந் திறங்களும், நாடும் நகரமும் நயத்தகு அரண்களும் பீடுற அமைந்து பிறங்கும் பெற்றியும், பொருள் செயல் வகையும், அதனுயர் பெருமையும், படைகளின் ஆண்மையும் பான்மையும் மேன்மையும், நடையுயர் நட்பும், நாடி ஆராய்தலும், பழைமையின் அருமையும் கிழமையின் நிலைமையும், பழுதுறும் உறவும் இழிவதன் ஒழிவும், கூடார் இயல்பும் நாடி

யறிந்து நலம்பெறத் தெளிந்து மலேவற நின்று நிலேபெற ஒழுக வேண்டிய முறைகளும், நெறிகளும், பிறவும் இதனுள் இனிதாகத் தெளிவுறக் காணலாம்.

உள்ளுணர்விற்குத் தெள்ளமிர்தமாக நம் வள்ளுவ வள்ளல் அருளியுள்ள ஒள்ளிய நலங்களே உள்ளங்கொண்டு எல்லாரும் உயர்ந்துகொள்ளவேண்டும் என்னும் கொள்கை யொன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள இந்நூல் முழுவதும் அழகுடன் விரைவில் இனிது நிறைவுற எம் செந்திற் பெருமான் திருவருளேச் சிந்தித்திருக்கின்றேன்.

பொய்யாத வாக்கும் பொருளும் எனக்கருளி
நைபாமற் காத்தருளும் நாதனே—வையாரும்
வேலோனே செந்தூரில் மேவிநிற்கும்

பொற்சதங்கைக் காலோனே நீயே கதி.

திருவள்ளுவர் நிலயம்
தூத்துக்குடி
17—8—30
தூசும் ஆண்டு ஆவணியீ கஉ

இங்ஙனம்,
ஜெகவீர பாண்டியன்.

---

5

உ
சிவமயம்

# இந் நூலைக்குறித்து அறிஞர்கள் அனுப்பியுள்ள சிறப்புரைகளுள் சிலவற்றின் சுருக்கங்கள்.

---

மகாமகோபாத்தியாயர்

பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள்.

அன்பர் ஜெகவீரபாண்டியாவர்கள் இயற்றிய திருக்குறட் குமரேச வெண்பா என்னும் நூலிற் சில வெண்பாக்களையும் அவற்றின் உரை முதலியவற்றையும் படித்துப்பார்த்து மெத்தச் சந்தோஷமடைந்தேன். இவர்களைப் பத்து வருஷங்களாக நான் அறிந்திருக்கிறேன். சிலமுறை இவர்களுடைய உபந்நியாசங்களை நான் கேட்டும் இன்புற்றதுண்டு. அதனால் நல்லவை வியப்பத் தமிழில் உபந்நியாசம் செய்வதில் இவர்கள் வல்லுநரென்பதை மட்டும் அறிந்திருந்தேன். இந்த நூலையும் உரையையும் பார்த்ததிற் செய்யுளியற்றுதலிலும், உரை யெழுதுதலிலும், பல நூலாராய்ச்சியிலும் திறமையுள்ளவர்களென்பது எனக்குப்

புலனாயிற்று.

திருக்குறள் சம்பந்தமாக இரங்கேசவெண்பா முதலிய சில பழைய நூல்கள் காணப்படினும் அவை இந்நூலைப் போல ஒவ்வொரு குறளுக்கும் ஒவ்வொரு வெண்பாவாக இயற்றப்படவில்லை. ஒவ்வொரு வெண்பாவிற்கும் ஒவ்வொரு கதையை அமைத்து இயற்றும் இவர்களுடைய பெருமுயற்சி மிகப் பாராட்டற்பாலது. இஃது இனிது நிறைவேறுமாறு திருவருளைச் சிந்திக்கின்றேன்.

தமிழ் நாட்டிலுள்ள அன்பர்கள் இந்நூலை வாங்கிப் படித்து இதனை இயற்றும் ஜகவீரபாண்டியரவர்களுக்கு ஊக்கத்தையளிப்பார்களென்று நம்புகின்றேன்.

தியாகராஜ விலாசம்,
இங்ஙனம்,
சென்னை
20—2—29

வே. சாமிநாதையர்.

---

6

சேந்தமிழ், தமிழ்ச்சங்கம்
மதுரை.

திருக்குறட் குமரேச வெண்பா என்னும் இவ் அரிய பெரிய நூல் திரு. ஜெகவீரபாண்டியனவர்களால் செய்யப்பெற்றது. இந்நூல், சிவசிவ வெண்பா, இரங்கேச வெண்பா, வடமலை வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா முதலியவற்றைப் போல்வ தொன்றென்பதே இதன் பெயர்

முகத்தான் அறியக்கிடப்பதாயினும்,
அவையெல்லாவற்றாலும் இது மிகமிக
ஏற்றமுடையதென்பதை எண்ணிடைக்கு
உடையாதிருத்தல் இயலாது.
திருக்குறள் நூலின் ஒவ்வொரு குறட்பாவை
மட்டிலும் எடுத்து அவற்றிற்கு மேற்கோளாக
ஒவ்வொரு கதையினைக் காட்டி விடுக்கும்
ஏனை நூல்கள் போலாது இக் குமரேச
வெண்பா அப் பொய்யா மொழியின்
ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்
குறள்களுக்கும் ஒவ்வொருண்மைச் சரித
நிகழ்ச்சியை மிகப் பொருட்
பொருத்தமுற இணைத்து வெண்பாவை
முற்றுவித்துச் செல்லும் திறம் வியந்து
பாராட்டற் பாலது. அதுவன்றியும்,
இந்நூலுள் பொழிப்புரை, கருத்துரை,
விசேடவுரை, கதைவிளக்க முதலிய
இன்றியமையாத பலவகைக்

குறிப்புகளும் தக்க
மேற்கோள்களுடன் இதன் ஆசிரியராலேயே
எழுதிச் சேர்க்கப் பெற்றிருத்தல் அன்னாரது
கல்விப் பரப்பையும், கட்டுரை வன்மையையும்
நன்கு வெளியிடுகின்றது. முட்டுப்பாடின்றி
இந்நூல் முடிவெய்துமாறு இறைவன்
திருவருள் புரிக.

மதுரைத் தமிழ்ச்சங்கம், 5—9—28

A READER WRITES:

The **Thirukural Kumaresa Venba** is a tamil work of great value and it is sure to be welcomed by all lovers of Tamil classics by its superior intrinsic literary excellence. The Kural couplets are aptly illustrated and verse composition is of a high order and savours of literary and poetic excellence The most striking feature

of the work is the scholarly commentary appended to each Kural couplet. The commentary is written



in a high class literary style and serves as an useful aid to the better understanding of the original. The author therein gives sufficient proofs of his rare originality, erudition, and analytical skill. Deep erudition, originality, and poetic genius are the *sine qua non* to ensure success in any attempt at a work of this type The presence of these significant qualities in the author will be patent to any reader of the present

publication.

Hence this beautiful and scholarly work richly deserves a high and unique place in Tamil literature. As years roll on, this work will surely shine forth as a remarkable literary production, handled by a delicate craftsman with superb skill and profound scholarship. The work itself, supplementing as it does, the ennobling ethical ideals enunciated in Thirukural, with concrete illustrations, drawn from the record of actual human experience is sure to be a fit companion to Kural and would also be useful for the better understanding of it. Thirukural with its effulgent

literary radiance, has survived the acid test of centuries of critical scrutiny; so it shall be with the present work also. May God grant an enduring and permanent place to this invaluable work, which is at once so thought-provoking and delightful to all readers.

---

## ஸ்ரீமான் துரைராஜா

அவர்கள்.

---

மலர்மகன்கோன் கடல்கடைந்து வானவருக்
கமிர்தமன்று வழங்கினாற்போல் நிலமகளின்
குலமகனுஞ் செகவீர பாண்டியப்பேர் நிருபன்
போந்து வலமலிவேற் குமரேச னருள்வலியால்
தமிழ்க்கடலை மதித்துத் தெய்வக் குலமறையின்
சுவைததும்ப நரர்தமக்கின் னுணர்வமிர்தங் கொடுத்தா
னம்மா. (1)

பரங்குன்றுபுரம்

பண்டிதர் மூ. நல்லசாமியவர்கள்

இயற்றியது. செயங்காட்டும் குணக்குரிசில்

ஜெகவீர பாண்டியனின் செய்ய சீர்த்தி மயங்காட்டி
யெழுந்துலவுங் குமரேச வெண்பாவை மதிக்கில்
என்றும் புயங்காட்டித் தமதுவலி மீக்கூறி வாதுபுரி
புலவோர் தம்மைப் பயங்காட்டி நல்வழியிலுய்க்கு
மொரு கருவியெனப் பகரலாமே. (1)

சீர்பரவும் ஜெகவீர பாண்டியனின் செய்தியெலாஞ்
சிறக்கக் கேட்டுப் பார்பொறுக்குஞ் சேடனுன்பால்
வரவெண்ணிற் செவியிலனே பாவம் பாவம் கார்தவழு
மலையத்தோன் குறுமுனியாதலின் நடையிற் காலஞ்
செல்லும் நீர்வளர்த்த அவனியிலுன் பெருமையவ
ரன்றி மற்றோர் நிகழ்த்தற்

பாற்றோ. (2)

சிவசுப்பிரமணியனார்

இயற்றியது. தென்றிருப் பொதியத்

தடவரைப்பிறந்த தெளிதமிழ்க் கலைக் கடற்றெருளோ
டொன்றிய வறிவென் புணைதுணையாக
வொருதனிக்கடந்த நல்லுரவோன் குன்றுதொ றாடுங்
குமரன்றன் மலர்கள் குலவிடு சிரத்தனற் குணத்தன்
என்றுமின் முகத்த னினிய
சொன்னலத் தனிதமவை நாடிச்செய்வினத்தன்.
கல்வியொன் றல்ல வொற்கத்தி னூற்றூங் கசடறு
கேள்வியென் கணிப்பில் செல்வமு முடையன்
திறப்படக் கிளக்குந் திறலுடை நாவலஞ் சிறந்தோன்
ஒல்லுங்க யெவர்க்கு முதவுமன்புளத்தன் உண்மையே
தெரிதரவுழைப்போன் புல்வினையறியாக் கருத்தன்
விற்பனத்தன் புண்ணியம் பல புரிந்துயர்ந்

[தோன். (2)

ஆண்டினி லிளையோனாயினும் ஆன்ற அறிவினான்
முதியனேயாகி சண்டியபுகழ்சே ரியற்கவி ராஜ
னெனப்படுவோன் செகவீர பாண்டியன்
ஒட்டநத்தமென்றோது பதியினிற்
சிறக்கவுற்பவித்தோன் யாண்டுமன் னெறிய நூல்கலா

தவரை யவமதித்திட வறியாதான். (3)

வேறு.

கைம்மாறு கருதாமல் காசினியோர் நெறிமுறைவாழ்
துய்ம்மாறு வள்ளுவனார் ஒருபெருநூல் பரிந்தளித்தார்
அம்மானூர் நூல்விளக்கி அருங்கதை கொண் டுண்மைதெரி
இம்மானூர்ச் செவ்வாற்று னியற்றுவமோ கைம்மாறே. (4)

---

# 66-ம் அதிகாரம்

# வினைத் தூய்மை.

அஃதாவது செயல்களது நன்மை. தூய்மை = சுத்தம். பழி பாவங்களைத் தருதற்குரிய பழுதுகள் யாதும் கலவாத விழுமிய தொழில்களைத் தெளிவுற நோக்கி அமைச்சர் செய்யவேண்டும் என்பதாம்.

மேல், சொல்லின் நன்மையை விளக்கினர், ஈண்டுச் செயலின் தன்மையை உணர்த்துகின்றார்; ஆகலால் அதன்பின் இது வைக்கப்பட்டது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

651 தேர்ந்த சனமித் திரனேன் வினைநலத்தைக்
கூர்ந்துணர்ந்து கொண்டான் குமரேசா—சார்ந்த
துணைநலம் ஆக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். (க)

இ—ள்.

குமரேசா! வினைநலங்களைத் தனக்கு இனியவாகச் சனமித்திரன் என் தெளிந்துகொண்டான் எனின், துணைநலம்

ஆக்கம் தரூஉம்; வினைநலம், வேண்டிய எல்லாந் தரும் என்க.

தரும் என்பது இடை நீண்டு அளபெடுத்து இசை நிறைந்து நின்றது.

பல நூல்களையும் வழுவறப்பயின்று தெளிந்தவன் ஆதலால் தேர்ந்த என்றும், கூர்ந்து உணர்ந்து என்றது பொருள் அறம் புகழ் முதலிய நலங்களைத் தருதற்குரிய சிறந்து என்றவாறு.

வினைகளை ஆராய்ந்து இது, நலம் பயக்கும் வினைகளையே என்றும் நாடிச் செய்க என்கின்றது.

துணை என்றது உறுதித்துணைவரை; அஃதாவது தாமும் அறிவுடையராய் நின்று

தம்மையடுத்தவரையும அறநெறியிற்
செலுத்தி ஆதரிப்பவர். நல்லினம் எனவும்
இவர் சொல்லப்படுவர்.

செய்யப்படும் வினைநலத்தை
விளக்குதற்குச் சேரப்படும்
இனநலத்தை எடுத்துக்காட்டி ணர்
அதனியல்பு தெளிவுற விளங்
குமென்பது கருதி.

195

1556 திருக்குறட் குமரேச
வெண்பா.

ஒருவன் சேர்ந்த இனம் நல்லதாயின்
அதனால் அவனுக்கு எல்லாச் செல்வங்களும்
உளவாம் என்பார் இனநலம் ஆக்கம் தரும்
என்றார். வினைத்தூய்மையோடு
இனத்தூய்மையையும் இணைத்துணர்த்தியது

அவ் இரண்டையும் மக்கள் எய்தவேண்டும் என்னும் மெய்ம்மை தோன்ற என்க.
"மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் இனந்தூய்மை தூவாவரும்: இனநலம் எல்லாப் புகழும் தரும்" என்பனவும் ஈண்டு எண்ணிக்கொள்க.

தன் துணைவாது நன்மை ஒருவனுக்குச் செல்வத்தை மாத்திரம் கொடுக்கும்; தொழிலது நன்மை விரும்பின எல்லாவற்றையும் ஒருங்கே பயக்கும் என்பதாம்.

வினைநலம் வேண்டியவெல்லாம் தரும் என்றதனால் அது தீங்குடையதாயின் வேண்டாத கேடுகளையெல்லாம் விளைவிக்கும் என்பதாயிற்று.

சேர்ந்த துணைவர் தீயராயின் சகுனியின் சேர்க்கையால் துரியோதனன் அடைந்ததுபோல் பெருங் கேடுகளெல்லாம் ஒருங்கே அடையும்; அவர் நல்லவராயின், கண்ணன் கலப்பால் பாண்டவர் எய்தியதுபோல் வேண்டியநலங்களெல்லாம்

விளைந்து நிற்கும் ஆதலால்
துணையது நலத்தையும் நன்கு ஆராய்ந்து கொள்ள
வேண்டும் என்க.

தீங்குபயவாத நல்ல தொழிலையே நீ
தெளிந்து செய்யவேண்டும் என்றார்; உடனே
அதனால் வரும் பயன் யாது? என ஒருவன்
வினவினான்; வேண்டியவெல்லாம் உனக்கு
அது தரும் என்று அவனை நோக்கி
இவ்வுரை நிகழ்ந்ததாகக் காண்க.

இம்மை மறுமை என்னும்
இருமைக்குமுரிய பொருள் அறம் புகழ்
இன்பங்களையெல்லாம் வினைநலம் விளைவிக்கும்
என்பார் வேண்டியவெல்லாம் தரும் என்றார்.

செல்வமுதலிய எல்லா நலங்களையும்
ஒருவன் எய்தவேண்டுமாயின்
துணைநலத்தையும் வினைநலத்தையும் அவன்
விரும்பிக் கொள்ளவேண்டும் என்பது
குறிப்பு. பழிகலவாத விழுமிய
தொழில்களையே அமைச்சர் என்றும்
விரும்பிச் செய்யவேண்டும் என்று

அதிகாரத்தோடு பொருந்த இதனை அமைத்து நோக்குக. 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.

1557

வினை நலமுடையவன் யாண்டும்
உயர்நலங்களை யடைவான்
என்பது இதில் உணர்த்தப்பட்டது.
பால் உணரப்படுப.
இவ்வுண்மை சனமித்திரன்

## கதை.

சனமித்திரன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சாவகநாட்டி லேநாகபுரம் என்னும் நகரிலே யிருந்தவன். இவனுடைய தந்தைபெயர் தருமமித்திரன் என்பர்.

இவன் பல நூல்களையும் நன்குபயின்று
புலமையிலுயர்ந்தவன்.
நினைத்ததை நினைத்தபடியே முடிக்கும்
வினைத்திறத்தோடு மிக்க
நேர்மையும் தக்க கூர்மையும் ஒக்க
வுடையவன். நுண்ணிய
நூலுணர்வோடு தண்ணிய சீலமும் வாய்ந்த இவனை அந்நாட்டு மன்னனாகிய புண்ணியராசன் என்பவன் தனக்கு அமைச்சனாகப் போற்றிக்கொண்டான். அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவனாய்நின்று அவ்வரசை இவன் இனிது பேணிவந்தான். எல்லாவுயிர்களிடத்தும் பேரிரக்க முள்ளவனாய் யாண்டும் இதமே புரிந்து தன் பெயருக்கேற்பவே எவர்க்கும் இவன் இனியனாய் நின்றான். மன்னன் குறிப்பறிந்து நடந்து புகழறங்களை விளைத்தற்குரிய தொழில்களையே பொருந்த ஆற்றிக் குடிகளுக்கு மகிழ்ச்சியை விளைத்து வந்த இவனது மாட்சியை வியந்து மறுபுல மன்னரும் மகிழ்ச்சி மீக்கூர்ந்தார்.

மறத்தான வேலான் மனக்கொள்கைதன் னெஞ்சன் வான
நிறத்தாடி நீழலெனத் தோற்ற நிறுத்து மற்றது
அறத்தா றெனில் ஆற்றுவர்; அன்றெனில் ஆக்கமாவி
இறத்தான் வரினும் மனத்தானும் இழைக்க எண்ணார்.

என்னும் உண்மை நிலைக்கு இவன் உரிமையாய் நின்று உதவி வந்தான். வருங்கால் அரசன் ஞான நிலையை விரும்பிச்சிறிது காலம் தனியா இருக்க எண்ணி அரசை இவன்பால் வைத்தான். அது பொழுது உறுதிபல கூறி இவன் தடுத்தும் கேளாமல் அவன் கடந்துச் சென்றான். அவன் பிரிவின் துயரம் சிறிதும் தோன்றாவண்ணம் உயிர்களைப் பேணிப் பின்பு போய் அறம் பல கூறி அவனை அழைத்துவந்து அரசிலிருத்தி இவன் ஆட்சியை



நடத்தினான். தன் வினைத் தூய்மையால் புகழும் இன்பமும் பொருந்தி இருமையினும் இவன் பெருமை யெய்தினான். துணை நலம் ஆக்கந்தரூஉம்; வினைநலம் வேண்டிய வெல்லாம் தரும் என்னும் உண்மையை உலகமறிய இவன் உணர்த்திநின்றான்.

மனப்பிவை றாயினன் மன்னென மந்திரி

சனமித் திரனவன் தாள் தொழு
தேத்தி
எங்கோ வாழி என்சொற்
கேண்மதி
நாங்கோன் உன்னைப் பெறுவதன்
முன்னாள்
பன்னீராண்டு இப்பதிகெழு நன்னாடு
மன்னுயிர் மடிய மழைவளங்
கரந்திங்
கின்றாள் குழவிக் கிரங்கா ளாகித்
தான்றனி தின்னுந் தகைமைய நா
யது
காய்வெங் கோடையிற் கார்தோன்
றியதென
நீதோன் றினையே நிரைத்தார்
அண்ணல்!
தோன்றிய பின்னர்த் தோன்றிய
வுயிர்கட் கு

வானம் பொய்யாது மண்வளம்
பிழையாது
ஊனுடை உயிர்கள் உறுபசி யறியா
தீயொழி காலை நின்னா டெல்லாம்
தாயொழி குழவி போலக் கூஉந்
துயர்நிலை யுலகங் காத்த லின்றிநீ
உயர்நிலை யுலகம் வேட்டனை
யாயின்
இறுதியுயிர்கள் எய்தவும் இறைவ
பெறுதி விரும்பினை யாகுவை
யன்றே
தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயிர்
ஓம்பும்
மன்னுயிர் முதல்வன் அறமும்
இதன்றால்
மதிமா றோர்ந்தனை மன்னவ
வென்றே
முதுமொழி கூற முதல்வன்
கேட்டு. (மணிமேகலை). இது, அரசைவிடுத்து

மன்னன் செல்லத்துணிந்தபொழுது இவன் சொல்லித்தடுத்தது. இவனது கல்வியறிவும், சொல்வன்மையும், உண்மையுணர்வும், உறவின் தன்மையும், உயிர்கள்மாட்டு வைத்துள்ள தண்மையும், உலகம் காத்த ஒண்மையும், மனநலமும் வினைநலமும் பிறவும் இதில் இனிது புலனுதல் காண்க. 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை. 1559

வினைநல முடையவனுக்கு எல்லா நலங்களும் எளிதில் உளவாம் என்பது இத னல் கூறப்பட்டது.

---

652 வள்ளல் வயந்தகனென்
வல்வினையை எள்ளளவுங்
கொள்ளாமல் நீத்தான்
குமரேசா—உள்ளுணர்ந்தே

என்றும் ஒருவுதல் வேண்டும்

புகழொடு

நன்றி பயவா வினை.

(உ)

இ—ள்.

குமரேசா! பழிபயக்கும்

இழிவினைகளை வயந்தகன் என் யாண்டும்

வெறுத்து ஒழித்தான் எனின், புகழொடு

நன்றி பயவா வினை, என்றும்

ஒருவுதல்வேண்டும் என்க.

இது, புகழ்பயவாத தொழிலைப்

பொருந்தலாகாதென்கின்றது.

உற்றவர்க்காகத் தன் உயிரையும்

உதவுதற்குரிய உள்ளமுடையவனுதலால்

வள்ளல் என்றும். வல்வினை என்றது பழி

பயக்கும் இழிதொழிலை. எள் அளவும்

என்றது சிறிதும் என்றவாறு. உம்மை

இழிவு சிறப்பு.

எஃறும் என்றது உயர்வு சமம் தாழ்வு என்னும் எக்காலத்தும் என்றவாறு. வேண்டும் என்றது ஒருவுதலின் துணிவினை உறுதிபெற உணர்த்திநின்றது.

ஒருவுதல் = ஒழிதல், தவிர்தல், நீங்கல். பணி ஒரீஇ நின் புகழேத்தி; என்று பரிபாடலிலும், போரெதிர் வேந்தர் தாரழிந்து ஒராலின்; ஒரூஉப நின்னை ஒரு பெருவேந்தே; எனப் பதிற்றுப் பத்தினும் திரிந்துநின்று மேற்குறித்த பொருள்களை இஃது உணர்த்திநிற்றல் காண்க.

நன்றி என்றது அறத்தை; நன்மைகள் யாவுமுடையது என்பதாம். நன்று என்பதும் அது. வீழ்நாள் படாமை நன்று ஆற்றின்; என்றதில் அஃது ஆற்றிநிற்கும் பொருளை ஆய்ந்து கொள்க.

பயவா வினையை ஒருவுக என்றதனால் பயக்கும் வினையை ஒருவாமல் என்றும்

உஞற்றவேண்டும் என்பதாயிற்று. 1560
திருக்குறட் குமரேச வெண்பா.

மேல், வினைநலம் எல்லா நலங்களையும் தரும் என்றார்; அங்ஙனம் பயன்தாரா வினைகளை யாண்டும் செய்யலாகாது என்று இதில் உணர்த்துகின்றார்.

புகழையும் அறத்தையும் உளவாக்காத தொழில்களை அறிவுடையார் எக்காலத்தும் தவிர்தல்வேண்டும் என்பதாம்.

இருமையினும் பெருமை தருதற்குரிய வினைகளையே அறிவுடையார் யாண்டும் செய்யவேண்டும் என்பது கருத்து.

புன்செய்யை நன்செய் யாக்கலும், வான்மாறினும் நீர்மாறாத வாறு குளமுதலியவற்றை உளவாக்கிக் குடிகளைப் பேணிவரப் பணித்தலும் முதலாயின வெல்லாம் புகழும் அறமும்

பொருளும் பயக்கும் விழுமிய தொழில்களாம் ஆதலால் அத்தகைய வினை களையே யாண்டும் செய்யவேண்டுமென்றிப் பயனில்லவாய கொடுந் தொழில்களை அமைச்சர் ஆற்றலாகாதென இயலோடு பொருந்த இதனை இணைத்து நோக்கிக்கொள்க.

எவ்வளவு அல்லல்கள் வரினும் நல்ல அமைச்சர் புல்லிய தொழில்களைச் சிறிதும் செய்யார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை வயந்தகன்பால் உணரப்படும்.

## கதை.

வயந்தகன் என்பவன் வத்தவநாட்டிலே கௌசாம்பி என்னும் நகரிலிருந்தவன். அந் நாட்டு மன்னனாகிய உதயணனுடைய மந்திரிகளுள் ஒருவன். அவன்பால் பேரன்புடையவன். இவன் வேதசிந்தகன் என்னும் வேதியனுடைய புதல்வன். பல கலைகளிலும் வல்லவன். சொல்வன்மையிற்

சிறந்தவன். மறையவ ராயினும் மன்னரும் வியக்கத்தக்க வில் வன்மையுடையவன். எதையும் நுணுகியறிந்து வருவதோர்ந்து உறுதிகூறி அரசனுக்குக் கண்போல்நின்று இவன் ஆட்சியை நடாத்தினான். ஆந்தை பல்லி முதலிய உயிர்வருக்கங்களின் ஒலிகளைக் கேட்டு நிமித்தங் களை புணர்ந்துகொள்வதிலும், வானிலுள்ள தாரகைகளை நோக்கிக் கால அளவைகளைத் தெரிந்துணர்த்துவதிலும், இவன் மிகத் தெளிந்தவன். பகைவர் செய்த வஞ்சச்சூழ்ச்சியால் உதயணன் 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை. 1561

வருந்தியின்றபொழுது இவன் அஞ்சாது புகுந்து ஆதரித்துநின்ற வன். பேரிடர்கள் வந்தகாலத்தும் நேர்மைகுன்றி நீதியல்லாத செயல்களை இவன் யாதும் செய்யாதவன். தான் செய்புகழொழி லால் தன் அரசனுக்குப்

புகழும் அறமும் பொருளும் பெருகி வருமாறே இவன் போற்றிச்செய்தான். அதனால் வழுக்கில் சீர்த்திவயந்தகன் எனவும் நயந்தேரி நாட்டத்து வயந்தகன் எனவும் அறிஞரனைவரும் இவனை வியந்து புகழ்ந்தார். இவனது வினைத் தூய்மையையும் மனத்தூய்மையையும் நினைந்து மகிழ்ந்து சிறந்த பயனைத்தருதற்குரிய நகரங்கள் பதினென்றைப் பரிசிலாக நயந்து தந்து நாள்தோறும் ஆயிரம் செம்பொற்காசும் உதவுவதாக உலகு மறிய உறுதிசெய்து எப்பொழுதும் தன்னுடனேயே இருந்து வரும்படி உதயணன் இவனை உவந்துகொண்டிருந்தான்.

வயந்தகன் தனக்கு வழுக்குப் புறமாகவைப்

> பயம்படு நன்னகர் பதினென் றீத்து
> வைகல் ஆயிரம் கைவயிற்
> கொடுத்து

பிரியா துறைகளை அருள் தலை
நிறீஇ;

என வரும் இவ்வடிகள் மேற்குறிக்க
வுண்மையை உணர்த்து கின்றன.
இழிவினைகளை யாண்டும் ஒருவி
வினைநலமுடையனாய் நின்ற புகழ்
அறங்களைப் பெருக்கி இவன்
உயர்நிலையடைந்தான். புகழொடு நன்றி பயவா
வினையை என்றும் ஒருவுதல் வேண்டும்
என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய்
நின்றான். விரிவைப் பெருங்கதையில் காண்க.

புகழ் பயக்குங்கொழிலையே யாண்டும்
செய்யவேண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

653 மாசில் புகழுருக்கு மாங்கதனைவ:
வம்பழியைக்
கூசி யொழித்தான் குமரே
ரசா—நீசமென

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்குஞ்
செய்வினை
யாஅதும் என்னு மவர்.
(௧.)

இ—ள்

குமரேசா! உருக்குமாங்கதன் பழிபடு செயலென்று
பண்டு என்பயந்து ஒழித்தான் எனின்,
ஆஅதும் என்னும் அவர்,
ஒளிமாழ்கும் செய்வினை, ஓஒதல் வேண்டும்
என்க.



அளபெடைகள் ஈரிடத்தும் செய்
புளோசையை நிறைந்து நின்றன. புகழ்க்து

மாசின்மையாவது நேர்மை ஆண்மை முத லிய நலமுடைமை என்க. கூசி = அஞ்சி. அஞ்சாத நெஞ்சனாகிய அவன், பழிவினையை அஞ்சினான் என்றது அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் என்பது கருதி.

ஒளிமாழ்கும்
வினை = புகழ்கெடுதற்குக்காரணமாய தொழில். அஃதாவது குடிமுறைகோறல், கொடுவரிவாங்கல், பிறனில்விழைதல் முதலாயின.

மாழ்குதல் = கெடுதல், தொலைதல்.
நல்வினை, தீவினை, பழவினை
என்பனபோலச் செய்வினை என்பது ஈண்டு இனங்கொண்டுநின்றது. செய்வினை என்றது தொழிலை.

ஓவுதல் என்பது இடைக்குறைந்து ஓதல் என நின்றது. ஓவுதல், ஒவல் என்பன

ஒழிதல் என்னும் பொருளை யுணர்த்தி வாரும.
காவலமைந்தான் கடலுலகம் காவலால்,
ஓவல் அறியா துயிர்க்குவகை எனவும்,
போர்க்களத்துள் ஓவான் எனவும் வெண்
பாமாலையில் இதன் உருவையும்
உணர்த்திநிற்கும் பொருளையும் உணர்ந்துணர்க.
காவா தொருவன்தன் வாய்திறந்து
சொல்லுஞ் சொல், ஓவாதே தன்னைச்
சுடுதலால்; என்றதுங் காண்க.

ஆதும் = மேலாமேவம்; தன்மை
முன்னிலை படர்க்கை என்னும் மூன்
றிடத்தும் உள்ளார் ஒன்றுகூடி உள்ளியபடி.
இது,

தும்வி தந்தி பெற்றுவந்த உளப்பாட்டுத்
தன்மை பன்மை என்க.

அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும்
உம் ஊர் கடதற இருபா லாரையும்

தன்னொடு படுக்குந் தன்மைப்
பன்மை என்னும் இயல்
விதியையும் ஈண்டு எண்ணிக்கொள்க.
மேல், புகழ்பயவாத வினையைச்
செய்யற்க என்றார்; இதில்,
பொருள்வருவதாயினும்
புகழ்கெடவருவதாயின் அத்தொழிலைத்
தொடாதே என்கின்றார்.

66-ம் அதிகாரம்

வினைத்தூய்மை. 1563

தாம் மேலாகவேண்டுமென்று
விரும்புகின்றவர் புகழ்கெடுதற்கு ஏதுவாய
தொழிலைச் செய்யாது ஒழிக என்பதாம்.

பழிதரும் செயல்களைச் செய்யாத
அறிவுடையாரையே அமைச்சராக அரசன்
அமைத்துக்கொள்ளவேண்டும் என்பது குறிப்
பு.

மேன்மையை அடைய விரும்புகின்றவர்
இழிவுறுஞ்செயல் களை யாண்டுஞ்செய்யார்

என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உருக்குமாங்கதன்பால் உணரப்படும்.

## கதை.

உருக்குமாங்கதன் என்பவன் விதர்ப்பதேயத்து வேந்தனாகிய வீமனுடைய புதல்வன். இவன் பேரழகுடையவன். அறிவு, ஒழுக்கம் அருள் ஆண்மைகளில் சிறந்தவன், எல்லாக்கலைகளிலும் வல்லவன். சத்துருசிங்கன் என்பவனை அமைச்சனக்கொண்டு நீதிவழுவாமல் இவன் உலகைப் பாதுகாத்துவந்தான். அல்லவை கடிந்து நல்லன செய்துவரும் இவன் ஆட்சியில் எல்லா நலங்களையு மடைந்து குடிகள் இன்புற்றிருந்தன. தன் சொல்லாலும் செயலாலும் எல் லார் க்கும் இதஞ்செய்துவந்தானதலால் இசைதிசை பரவ இவன் இனிதுவீற்றிருக்குங்கால்

உழையர் சிலருடன் ஒரு நாள் மாலைப்பொழுதில் ஓர் மலர்ச்சோலையை யடைந்தான். ஆங் குக் கவி என்னும் அந்தணனுடைய மனைவியும் பேரழகியுமாகிய முகுந்தை என்பவள் இவனைக்கண்டாள். கழிபெருங்காதல்கொண் டாள். இவனைக்கல ந்து மகிழவிழைந்து தன் கருத்தை உணர்த் தினாள். நல்லதையன்றித் தீயசெயலைக் கனவிலும் அறியாத இவன் அவள் நினைவினுக்கு இசையானாய் நீங்க நினைந்தான். அவள் நெருங்கிவந்தாள்.

பேரிகை முழக்கறுத பெருங்கடை வாய்தன் மன்னை
சாரிகை மொழியி னல்லார் தங்களுக்கிளமை மைந்தர்
காரிகை கண்டா லன்னோர் கலவியிற் றிளைப்பி னல்லால்
வேரிகை செய்தா லன்ன மிகுமயக் கொழிவ

அவள் எங்கி வெதண்டு இளித்துவைதாள்.
அவள் சுடுமொழியால் வந்த படுதுயரை நீக்கிப்
பழமைபோல்வந்து ஆசைப் பாது காத்துப்
பெருமை புகழோடு இவன் விளங்கி வந்தான்.
தீமையுள்ளன யாவையும் தந்திடும் சிறப்பும்
கோபில் செல்வமும் கெடுக்கும்
நல்லுணர்வினைத் தொலைக்கும் எமனென்றி
தடுத்திரு ஞெய்த்திடும் இதனல்
காமமன்றியே பொருபகை பண்டுகொல்
கருதின் என்னும் உண்மையைக் கரு
த்தில்வைத்து அப்புன்செயலை ஒழித்துவந்த
இவனது ஒண்மையை அனைவரும் உவந்து
புகழ்ந்தார். தன் மனைமொழி மெய்களால் தீய
தொழில்களை யாதும் செய்யாமல் நீதியோடு
நிலைத்து நின்று பின் நிறைநலமுற்றான்.
ஒழுகல் வேண்டும் ஒளியாழ்தும் செய்வினை
யாஅதும் என்னும் அவர்; என்னு மேவத
மொழிக்கு இவனோர் வித்தாய்நின்றான்.
விரிவை விநாயகபுராணத்தில் காண்க.

ஒளிகெட வரும் தாழிலை
ஒழித்துவிடவேண்டும் என்பது இதனல்
கூறப்பட்டது.

---

654 வென்றிக் குமானர் வெம்பிநின்றும்
செய்திலரேன்
குன்றுவன ஒன்றும்
குமரேசா—என்றும்
இடுக்கட் படினும் இளிவந்த
செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.
(ச)
66-ம் அதிகாரம் வினைத்தூய்மை
1565

இ—ள்.

குமரேசா! குமானர் என்பவர்
இடுக்கணுற்றும் இளி வந்த செயலை என்
செய்யவில்லை எனின், நடுக்கு அற்ற காட்சிய

வர், இடுக்கட்படினும் இளிவந்த செய்யார் என்க. உம்மை இழிவு சிறப்பு. இஃது, அழிவு வருமிடத்தும் பழிபடுதொழிலைச் செய்யலாகா தென்கின்றது.

குன்றுவன என்றது தம்புகழ் குன்றுதற்கு ஏதுவாகிய வினைகளை.
வெம்பிகின்றும் =
வறுமையால் வருந்தியிருந்தும். ஒன்றும் என்றது சிறிதும் என்றவாறு.

இளிவந்தன செய்யும்படி இடுக்கண் செய்துவிடும் ஆதலால் அதனை மீண்டு எடுத்துக்காட்டினர். இளிவந்த என்றது இளிவையுண்டாக்குந் தொழில்களை. இது வினையாலணையும் பெயர்.

நடுக்கு அற்ற காட்சியவர் என்றது எதுவந்தாலும் கலங்காத தெளிவினையுடையவர் என்றவாறு. நடுக்கம் = கலக்கம், அசைவு, அச்சம். உளக்கண்ணால் உண்மையை

உள்ளபடி காண்பவர் என்னும் கருத்தால்
தெளிவுடையாரைக் காட்சியவர் என்றார்.
காட்சி

மாத்திரம் உடையாராய் மனத்திண்மை
இலராயின் ஒரோவழி
அசைந்து இளிவரவில் இசைதலுங்
கூடுமாதலால் அதுகூடாமைக்கு நடுக்கற்ற
என்றார்.

படினும் செய்யார் என்றது படாவழி
அவர் பாடுதோன்ற நின்றது. காட்சியவர்
செய்யார் என்றதனால் செய்வாரது தாழ்ச்சி க
ாணப்படும்.

மழுவாள் வீரன்வந்து வதைப்பேன்
என்றபொழுதும் இளி
வான செயலைச் செய்யேன் என்று எதிர்த்து
நின்றவீடுமரும்,
ஆடுநனிமறந்த கோடுயர் அடுப்பின்,
ஆம்பிபூப்பத் தேம்புபசி யுழந்

தும் பழிபடுசெயலைச் செய்யாது
குமணன்முன் விழுமிதாக நின்ற
பெருந்தலைச் சாத்தனாரும்போன்று தெளிந்த
அறிஞர்கள் யாண்
டும் இழிந்த செயலைச் செய்யார் என்க.
மேல், உயர்வை யடைய
விரும்புகின்றவர் இளிவுதருந் தொ
ழில்களை ஒழிக்கவேண்டுமென்றார்; இதில்,
உயர்ந்தோர் யாண்டும்
அவற்றைச் செய்யார் என்கின்றார்.



வெண்பா.

தாம் துன்பத்திலே தோய்ந்தாலும்
கலக்கமற்ற தெளிவினை யுடையவர் இளிவான
தொழில்களைச் செய்யார் என்பதாம்.
பழிவினைகளைச் செய்யாமையே
தெளிவுடைமைச் சப் பயனும் என்பது
கருத்து.

உளத்தில் தோன்றிச் சிறிதுபோழ்தில் ஒழிவதாய இடுக்கண் இயல்பையும், என்றும் ஒழிவில்லாத பழியினின் நிலையையும் அறிவுடையார் நன்கு தெளிவராதலால் அதனை அவர் செய்யார் என்க.

பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர்
செய்கலார்—சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம்
அவைபோல்
அருநவை யாற்றுதல் இன்று.

எனவும்,

நல்லாறெழுக்கின் தலைநின்றார்
நல்கூர்ந்தும்
அல்லன செய்தற்
கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியேறறப்பசித்தும்
தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

எனவும்,

உடுக்கை யுலறி யுடம்பழிந்தக்
கண்ணும்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற்
குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும்
அரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

எனவும், வருவன ஈண்டு எண்ணற்குரியன.

எவ்வளவு துன்பம் அடைந்தாலும்
பழிகலந்த இழிதொழிலை அமைச்சர் என்றும்
செய்யலாகாது என்பது குறிப்பு.

தெளிந்த அறிவினையுடையவர்
தீயதொழில்களை யாண்டும் செய்யார்
என்பது இதில் உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை குமாரனார் பால் உணரப்படும்.

கதை.

குமாரனார் என்பவர் இற்றைக்கு

ஆயிரத்தெண்ணூறு ஆண்

டுகட்கு முன்னர்ச் சோழநாட்டின் உட்பகுதியா

கிய கோனாட்டிலே எறிச்சில் என்னும்

ஊரிலே யிருந்தவர். இவருடைய தந்தை



பெயர் மாடலன் என்பர். அரிய நூல்கள் பலவும் பயின்று பெரிய புலவராய் விளங்கி அக்காலத்தில் மதுரையில் சிறந்திருந்த சங்கத்தாருடன் சார்ந்து இவர் ஆங்குத் தங்கியிருந்தார். இவர் உறைந்த நாடு, பிறந்தவூர், பெற்றோன் பெயர், இருந்த இடம், இயற்பெயர் என்னும் இவ்வைந்துந் தோன்றக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் என்று பெயர்புனைந்து அனைவரும் இவரை அழைத்துவந்தார். தன்னைச் சார்ந்தனவும் ஆர்ந்த பெருமைகள் அடையுமாறு இவர் நேர்ந்திருந்தனரென்பது

இத ஞனும் தேர்ந்துகொள்ளலாம். குணஞ் செயல்களால் சிறந்து உயர்ந்த புகழுடையாராய் விளங்கியிருந்த இவர்பால் இழிந்த வறுமையும் இணங்கி யிருந்தது.
குடிப்பிறப்பழித்து விழுப்பங்கொன்று பிடித்த கல்விப் பெருமையையும் கெடுக்கவல்ல அக்கொடிய வறுமையை இவர் கூடியிருந்தும் சிறியவினை யாதும் செய்யாராய் உறுதியுடன் நின்று பரிசில்கருதி ஒருநாள் பெருந்திருமாவளவன் என்னும் சோழமன்னனையடைந்து அவன் மணிமன்றில் புகுந்தார். புகுங்கால் தம் தோளில் இட்டிருந்ததும், கிழிந்ததும், பல இழைகள் இடையே நுழைந்துள்ளவுமாகிய உத்தரீயத்தை எடுத்துத் தாழ்த்திக் கொள்ளாமல் தம் புலமையின் வீறு தோன்ற அரியணையில் ஏறுபோன்று வீற்றிருக்கும் அம்மன்னன் எதிரே சென்றார். இடுக்கட்பட்டவராயிருந்தும்

மிடுக்குடன் வருகின்ற இவரை அவன் கடுத்து நோக்கி மேலாடையை எடுத்துவிடுமாறு குறித்தான். உடனே அவன் குறிப்பைக் குறிப்பால் நோக்கி அவ்விழி வானசெயலைச் செய்தற்கு இவர் சிறிதும் இசையாராய் இதனடியில் வருகின்றதையிசைத்தார்.

வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரினர் எனாஅக்,
கடல் கண்டன்ன ஒண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ,
உருமுரற் றன்ன உட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ,

மண்கெழு தானை யொண்பூண்
வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ
இலமே;
1568 திருக்குறட்குமரேச
வெண்பா.

எம்மால் வியக்கப் படூஉ மோரே,
இடுமுட் படப்பை மறிமேய்ந் தொழிந்த
குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு
புன்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்
சீறூர் மன்னராயினும் எம்வயின்
பாடறிந் தொழுகும் பண்பி னோரே;
மிகப்பே ரேவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமை யுள்ளேம்;
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுதும் பெரும யாம் உவந்துநனிபெரிதே.
(புறம்)

வளி = காற்று. வாச்செலவல் இவுளி =

தாவிச் செல்லுதலில் வல்ல குதிரைகள்.
காற்றைப்போல் விரைந்து செல்லவல்ல குதி
ரைகளோடு தேர்களையும், கடலையொத்த
சேனையோடு யானைகளையும், இடியனைய
முரசங்களோடு போர்களத்திற் கொண்ட
வெற்றியையும், உடையராயினும் எம்
அருமையறியாத அரசரை யாம் மதிப்பதில்லை;
வறியராயினும் எம்மை அறிந்து
போற்றுவோரையே யாம் உவந்து
புகழ்வோம்; என்று இதில் இவர் துணிந்து
மொழிந்ததையுணர்ந்து அம்மன்னன் வியந்து
கொண்டாடித் தன்னோடு உடனிருக்கவைத்து
உயர்ந்த சிறப்புக்களைச்செய்து இவரது
மனத்திட்பத்தையும், வினைத்தூய்மையையும்
புகழ்ந்து போற்றினன்.
வறுமையுட்பட்டிருந்தும், சிறுமையிற்படாமல்
இவர் சிறந்திருந்தார். நடுக்கற்ற காட்சியவர்,
இடுக்கட்படினும் இளிவந்த செய்யார்
என்பதை உலகம்காண இவர் உணர்த்தி

நின்றார்.

இழிந்த செயலை உயர்ந்தோர் ஒருபோதும் செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

655 தேனார் கனியுகுத்தான் தேர்விசயன் பின்னிரங்கிக்
கூனுமேதன் நின்றான் குமரேசா—தானேபின்
எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(ரு) 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.
1569

இ—ள்

குமரேசா! அரிய கருநெல்லிக்கனியை

அருச்சுனன் எய்து

வீழ்த்திப் பின்பு அது குறித்து இரங்காமல் என் துணிந்து நின்றான் எனின், எற்று என்று இரங்குவ செய்யற்க; செய்வானேல், மற்று அன்ன செய்யாமை நன்று என்க.

தன்னை உண்டவர்க்குப் பன்னீராண்டு வரையும் பசிநோய் தீர்க்கவல்ல அமிர்தினையுடையதாதலால் தேன் ஆர் கனி என்றும். தேர்விசையன் என்றது தேரூர்தலிலும், தேர் தலிலும், வல்லுநன் தல் கருதி. கூறு து = வளையாது; என்றது தளர்ந்து வருந்தாமல் துணிந்து என்றவாறு.

எற்று = எத்தன்மைத்து. வினைவடியாத் தோன்றிய குறிப்பு முற்று. மற்று அன்ன = பின்பு அவ் இரங்கல்களை. இது குறிப்பாலணைந்த பெயர். இனி, அன்ன என்பதைச் சுட்டடியாக் கொள்ளாது உவம இடைச்சொல்லடியாகப் பிறந்ததாகக் கொண்டு அவைபோன்ற செயல்களை என்று கொள்ளினும் பொருந்துமா

யினும் அத்துணைப் பொருட் சிறப்பில்லை.
செய்தால் அதனால்
யாதும் பயனில்லாமையோடு பழியும்
இழிவும் உளவாம் ஆதலால்
செய்யாமை நன்று என்றார்.

எற்று என்று இரங்குவ = நான் என்
இதனைச் செய்தேன் என்று பின்
தானேயிருந்து இரங்குதற்கு ஏதுவாய
தொழில்களை

வஞ்சனை மானின்பின் மன்னைப்போக்கி
யென்

மஞ்சனை வைதுபின் வழிக்கொள்
வாயென

நஞ்சனை யானகம் புகுந்த நங்கை யான்
உய்ஞ்சனென் இருத்தலும் உலகங்
கொள்ளுமோ. என்று
முன்பு எண்ணாது செய்துவிட்டுப் பின்பு
சீதை எண்ணி இருந்து

இரங்கியது போன்ற செயல்களை யாதும் செய்யலாகாதென்பார்

எற்று என்று இரங்குவ செய்யற்க என்றார்.

மேல், இளிவுதரும் செயல்களைத் தெளிந்தோர் செய்யார்

என்றார்; இதில், ஒருவேளை மயங்கிச் செய்துவிடின் அதனையே

நினைந்துகொண்டு பின் வருந்தாதே என்கின்றார். 1570 திருக்குறட் குமரேச வெண்பா.

நான் செய்தது எந்தன்மைத்து என்று பின்தானே நினைந்து வருந்துதற்கு ஏதுவாகிய தொழில்களைச் செய்யாதொழிக; ஒருவேளை மயங்கிச் செய்து விடுவானாயின் பின்பு அவ் இரங்கல்களைச் செய்யாதிருப்பது நல்லது என்பதாம்.

எதையும் நன்றாக ஆராய்ந்தே செய்யவேண்டும்; ஒருகால் மயங்கி ஏதேனும்

தீயகாரியம் ஒன்றைச் செய்துவிட்டால், அது குறித்து வருந்தலாகாது; வருந்தின் அதனின்று உய்தி பெறுதற்கு உணர்வுதோன்றாது; அதுவுமன்றிக் கடந்து போனதை நினைந்திருந்து பேதைகள்போல் அழுங்குகின்றான் எனவும், ஊக்கமில்லாதவன் எனவும், உலகமும் பழிக்கும் ஆதலால் அது செய்யாமை நன்று என்க.

கழிந்ததற்கு இரங்குதல் இழிந்தவர் இயல்பே; எனவும்

கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்;

எனவும் வருவன காண்க

கழிந்துபோனதை நினைந்து உளைந்து வருந்தாமல் தெளிந்து நின்று தூயவினைகளைத் துணிந்து செய்வோரே அமைச்சருட் சிறந்தவராவர் என்பது குறிப்பு.

யாதொரு கருமமேனும் எண்ணியே துணிக; என்றும்

காதலிற் றுணிந்து செய்தால் எண்ணுதல்

கடனென்றென்றும்
ஒதுநூற் புலவர்சொன்னார்
உமக்குளவுணர்வற்றன்றே
பேதுற அடர்ந்தும் பின்னை யுருகி நீர்
பிழை செய்தீரே. இது
ஒருகாரியத்தைச் செய்துவிட்டு அதன்பின்
இரக்கங் கொள்வது
கூடாதென்று தனக்கு இசையும் வகையில்
சகுனி இசைத்ததாக
வில்லி சொல்லியது. எண்ணித்துணிக
என்று அடிகளருளியுள்
ளதை இஃது எண்ணிவந்துள்ளமை
காண்க. இதுவும் ஈண்டு
எண்ணத் தக்கது.
முடிந்துபோன காரியத்தைக்குறித்து
அறிவுடையார் பின்
இரங்கி வருந்தார் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்வு
ண்மை விசயன்பால்உணரப்படும்.

கதை.

விசயன் வனத்தில் வசித்துவருங்காலத்தில் ஒருநாள் தன் இனிய துணைவியாகிய துரோபதையோடு ஓர் அழகிய பூஞ்சோலை



யில் புகுந்து உலாவினன். இனிய காட்சிகள் பலவற்றையும் நோக்கி மகிழ்நனோடு மகிழ்ந்திருந்த பாஞ்சாலி ஆங்கோர் அரிய நெல்லிக்கனியைக் கண்டாள். அது மிக்க அற்புதம் வாய்ந்தது. ஆண்டுக்கு ஒருமுறை அருமையாகத் தோன்றிக் கனிவது. அழகிய நெல்லி அமிழ்தனைய தீங்கனி என்னும் பெருமையினையுடையது. அதனையுண்டவரைப் பன்னிராண்டுவரையும் பசிநோய் அணுகாது. அஃது அமித்திரன்

என்னும் முனிவருக்கு உரியது. பருவமறிந்து ஆண்டுவந்து அதனை அவர் உண்டுபோவர். அத் கனைய அரிய கனியைக் கொய்துதரும்படி அவள் சொல்லுமுன்னரே வில்லை வளைத்துப் பகழி தொடுத்து விசயன் வீழ்த்தி ரிந்தான். அயலிலிருந்த முனிவர் சிலர் அதனியல்பையறிந்தவ ராதலால் உண்ணவரும் முனிவரால் இவர்கு ஊறுவருமே என்று உளைந்தார். அருந்தவனாயினும் அமித்திரன் துருவாசரினும் பெருஞ்சினமுடையவனாதலால் அவன் சாபத்தியால் அனைவரும் சாம்பராவரேயென்று தேம்பி னொந்தார். இதனைத் தருமர் முதலிய நால்வரும் அறிந்து தத்தளித்து நின்றார்.

பெண்மொழி கேளா ரென்றும் பெரியவரெனக் கொண்டிந்த •
மண்மொழி வார்த்தைபொய்யோ வருத்தநீ ருற்றவெல்லாம்

எண்மிக எண்ணின்முன்ன
மென்பொருட்டன்றோ வென்று
கண்மலரருவி சோரக் கனற் பிறந்தாளுஞ்
சொன்னாள்.

இங்ஙனம் எல்லாரும் அழுங்கி அயருங்கால் இவன் தளராமல் நின்று தருமனை வணங்கி "யான் ஆராயாமல் செய்துவிட்டேன்; காரியம் முடிந்துபோயிற்று; இனி அதனையெண்ணி இரங்குவத

னால் வரும் பயன்யாது ? செய்த
என்னையன்றி அச்செய்தவன்
யாரையும் வைது கொல்லான்; ஆதலால்
நீங்கள் வருந்தவேண்
டாம் " என்று துணிந்து நின்று
தெளிந்தவுரைகள் பலமொழிந்து
தேற்றினான்.

வேந்தனம் மாற்றங்கேட்டு வில்வலான் தன்னைநோக்கி
வந்திழை சொல்ல ஓரா

திணிய இக்கனியின் நீர்த்தாய்
மாந்தரின் மடங்கலொப்பாய் வருத்தநீ
யுழக்க யாமோ
பேர்ந்துபோய்ப் பிழைப்போம் என்றுன்
பிதாவினும் கருணை
மிக்கான். பிறரும் இங்ஙனமே
பேதுற்றலமந்தார்.
197



அதன்பின் கண்ணனை எண்ணினர்; உடனே
அம்மணிவண்ணன் வந்து சில சூழ்ச்சிகளைச்
செய்து அந்நிறைசுவை அமுத நெல்லி
யங்கனியை முன் நின்ற கொம்பனைந்திடச்
செய்தான். எவரும் இரங்குதற்குரிய செயலை
மயங்கிச் செய்தும் பின் அதற்காக இருந்து
இரங்காது இவன் தெளிந்து நின்றதை

நினைந்து அனைவரும் இவனை வியந்து புகழ்ந்தார். எற்று என்று இரங்குவ செய்யற்க ; செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று என்னும் . உண் மைக்கு இவனோர் உவமையாய் நின்று உயர்ந்து விளங்கினன்.

செய்தவன் இனிதுமாந்தத் தேவர்நாள் ஒன்றுக் கொன்றங்
கைதவமில்லா நெல்லிக் கனியினைக் கருதுறுமல்
எய்தவன் தன்னையன்றி யாரையும் இடான்வெஞ்சாபம்
மெய்தவருறத சொல்லாய் வெருவுதல் என்கொல் என்றான்.

இது, தருமனை நோக்கி விசயன் சொன்னது. கலங்காத இவனது திண்மையும், கழிந்ததற்கிரங்காத தன்மையும், மேற்குறித்தவுண் மையும், இதில் விளங்குதல் காண்க.

கழிந்தெ சயலுக்கு இரங்கலாகாதென்பது இதனல் கூறப் பட்டது.

---

**656.**

ஈன்ருள் பசிகாண்பா ளாயினும் செய்யற்க
சான்ருேர் பழிக்கும் வினை. (க)

இ—ள்.

குமரேசா! தன்னைப்பெற்றதாய் வருந்துவதைக்கண்டிருந்தும் பெருஞ்சித்திரனர் என் இழிந்தவினையைச் செய்யாமல் இகந்து இருந்தார் எனின், ஈன்ருள் பசிகாண்பான்

ஆயினும், சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க என்க.

தன்னை ஈன்ற தாய் முதலியோர் வறுமையால் இருந்துயரு றுப்பதைக் கண்டிருந்தும் தாம் ஊன்றிய மாட்சியில் சிறிதும் குன்றமல் உறுதி கொண்டு நின்றார் ஆதலால் மாண்புடைய என்னும் அடை அவரை மருவி நின்றது.

66-ம் அதிகாரம் வினைத்தூய்மை. 1

573

நோவுகண்டும் = வருந்துவதைப்பார்த்திருந்தும். நோவு = மெலிவு, வருத்தம். கோடவில்லை என்றது சிறுமையைச் செய்ய இசையாமல் வறுமையிலும் செம்மையாய் நின்றமை கருதி.

ஈன்றாள் என்றது பெற்ற தாயை ; இது வினையாலணையும் பெயர். ஈனுதல் = பெறுதல். தந்தையைக் காட்டாது தாயை

யிங்கு முந்தவைத்தார் அவளது தகுதியின் மிகுதி தோன்ற.

சான்றோர் என்றது அறிவொழுக்கங்களால் உயர்ந்தோரை.

எத்தொழிலைச் செய்தேனும் பெற்றதாயைப் பாதுகாக்க வேண்டும் என்பது அறநூல் விதி ஆதலால் அவ்விதியைப் பொருள்நூல் வழியே ஒழுகும் அமைச்சர் மேற்கொண்டு புரியலாகாது என்பார் ஈன்றாள் பசிகாண்பானாயினும் சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யற்க என்றார்.

பெற்றதாய் வருந்தினாலும் குற்றமான தொழிலைச் செய்யாதே என்ற இதனால் வினைத்தூய்மையின் நிலைமையும், தலைமையும், வினையும் இனிது விளங்கும்.

பின் எண்ணி இரங்குதற்குரிய இழிவினைகளை யாண்டும் செய்யலாகாது என்று மேலருளினார்; இதில், எவ்வகையிடர்

வந் தாலும் அவ்வினையையியற்றலாகாது என்று உறுதிபெறஉணர்த்துகின்றார்.

தன்னைப் பெற்றதாய் பசித்து நோவதைத் தான் பார்த்து வருந்துவானாயினும், உயர்ந்தோர் பழிக்கின்ற வினைகளை ஒருவன் செய்யாதொழிக என்பதாம்.

எவ்வகை இடர் எய்தினும் வெவ்விய வினையைச் செய்யலாகாதென் பது கருத்து. பசிப்பிணி முதலியன பற்றுவகை தாயைப் பா துகாப்பதுபோல் பழிப்புரை முதலியன கலவாதபடி தொழி லைத் தூயதாகத் தெளிந்துகொள்ளவேண்டும் என்றவாறு.

தன்னை ஈன்ற அன்னையாகிய குந்தி தன்முன் நின்று வருந்து வதைக்கண்டிருந்தும் கன்னன் நிலைதிரியாமல் நின்று நீதிசெய் ததுபோல் அறிவுடையமைச்சர்

நெறிதிரம்பாமல் நின்று தம்தலைமையை நிலைநிறுத்துவரேயன்றிப் பழிவினையை யாண்டும் செய்யார் என்க.



வைத்தவ ருளமுவப்ப மலர்நிழல் கனியியாத
அத்தருத் தன்னை வெட்டி யழலிடு மாபோல் ஈன்று
கைத்தலந் தேந்திக்காத்த காதற்றாய் தன்னையோம்பாப்
பித்தரை யத்தன் கொன்று பெருநா கழற்சேர்ப்பானே.

என்றபடி பெற்றதாயைப் பேணுமை பெரும் பாவமேயாயினும் அத்தீர்வு கருதியும் தீயவினைகளைச்செய்யலாகாதென்பது கருத்து. தூயவினைகளைச் செய்தே தாயரையும் பேணவேண்டும் என்பது குறிப்பு.

பழிபயக்கும் தொழில்களை எவ்வகையானும் செய்யாத வினை கலமுடையாரையே அமைச்சராக அரசர் விரும்பிக்

கொள ள வேண்டுமென இயல்நோக்கி யீண்டு இயைத்துக் காண்க.

பொருள்பயந் திடினும் அறம்புகழ் பயவாப் புரைபடு வினை யென்றும் புரியார், மருளின் மற்றொருகாற் புரியினும் இரங்கார் வையகத் தேனையோர் போல, இருமுது குரவர் கற்புடைமகளிர் இளமக விவர் பசித்திடினும், பெருமிதப்பாத வினைசெயார் .உலகு பேணுகர்க் கேமஞ்செய் அமைச்சர்; என்றதும் இங்கு அறியத்தக்கது.

அழிதுயாடையினும் இழிவுதரும் செயல்களை அறிவுடையார் செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பெருஞ்சித்திரனர்யால் உணரப்படும்.

கதை.

புலவர் திலகராய் விளங்கியிருந்த பெருஞ்சித்திரனர்பால் கொடிய வறுமையும் குடிபுகுந்திருந்தது; ஆயினுஞ் சிறுசெயல் யாதும் செய்யாராய்ப் பெருமிதத்தோடே யிருந்தார். வானகம் பெறுவதாயினும் மானம் அழுங்கவரின் அதனை இவர் விரும்பார்.

மதிநுட்பத்தோடு மிக்க மனத்திட்பமும் வாய்ந்த இவர்,

புலமைக்:

சுவையிலேயே பொழுதுமுழுவதையும் போக்கி நின்றார் ஆதலால்

தம் அருமைத் தாய் முதலிய உரிமையாளரனைவரையும் பசிப்பிணி

மிக நலிவுசெய்திருந்தது. முதியவயதினளாய தம் அன்னைபடுந்

துயரை நோக்கிப் பரிசில்பெற்றுவாக்கருதி ஒருநாள் இவர் அதிய

மானிடம் அடைந்தார் . அவன் மிக்க மதியுடையவனாயிருந்தும்

66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.

1575

இவரது அருமையை அறியாமல் மறைவிலிருந்துகொண்டே சிறிது பொருளை ஏவலர் வாயிலாக இவர்பால் ஏவினன். நெடுந்தூரம் நடந்துவந்தும், பசிப்பிணியால் மெலிந்தும், இல்லிலுள்ளவர்கள்

இருந்தயருமுப்பதை யறிந்திருந்தும்,
இளிவரவோடு வந்தமைதனை அதனை
ஏற்றுக்கொள்ளாமல் இகழ்ந்துவிட்டு இவர்
எழுந்துசென்றார். அன்று செல்லுங்கால்
இவர் சொல்லிய கவி ஒன்றை இதனடியில்
காட்டுதும். அதன் பொருளை
ஆய்ந்துகாண்க.

குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில்
கொண்டனென்செலற்கென
நின்ற என் நயந்தருளி
யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென
என்னை
யாங்கறிந்தனனோ தாங்கருங்
காவலன்
காணாது ஈத்த இப்பொருட்கு
யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன்;

பேணிக்

தினையனைத் தாயினும் இனிதவர்
துணையள வறிந்து நல்கினர்
விடினே.

தாமறிந்துதரின் தினையளவாயினும் மகிழ்வுடன் பெறுவேன்; மலையளவாயினும் பழிபடவருவதாயின் அதனைக் கொள்ளேன் என்று எள்ளிச்சென்று குமணனையடைந்து தம் நிலைமையைக் கூறினர். இவரது அளவிடலரிய பெருமையையும், அழிவுறு துயரையும் நோக்கி அவ்வள்ளல் உளமிகவுருகி மணி பொன் முதலிய அரிய பொருள்கள் பலவும் உரிமையோடு உதவி உவந்து போற்றினன். தம் துன்ப நிலைமையைக் கூறுமிடத்தும் வீறு தோன்றவே கூறியதை நோக்கி அரசனைவரும் இவரை வியந்து புகழ்ந்தார். தாய் பசிக்கக்கண்டிருந்தும் தாம் பழிக்கப்படாமல் இவர் தகுதியுற்று

நின்றார். என்றாள் பசிகாண்பா ளாயினும்
சான்றோர் பழிக்கும் வினைசெய்யற்க;
என்னும் உண்மையை உலகம் இவர்பால்
உணர்ந்து மகிழ்ந்தது.

வாழு நாளோ டியாண்டுபல
வுண்மையின்

தீர்தல்செல் லாதென் உயிரெனப்
பலபுலந்து

கோல்கா லாகக் குறும்பல ஒதுங்கி

நூல் விரித் தன்ன கதுப்பினள்
கண்டுயின்று

1576 திருக்குறட் குமரேச
வெண்பா.

முன்றிற் போகா முதிர்வினள்
ஆயும்;

பசந்த மேனியொடு படரட வருந்தி
மருங்கிற் கொண்ட பல்குறு

மாக்கள்
பிசைந்து தினவாடியாமுலையள்
பெரிதழிந்து
குப்பைக் கீரை கொய்கண்
ணகைத்த
முற்றா இளந்தளிர்
கொய்துகொண்டு உப்பின்று
நீருலையாக ஏற்றி மோரின்று
அவிழ்ப்பத மறந்து பாசடகு
மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கையள்
அறம்பழியாக்
துவ்வாளாகிய என் வெய்யோளும்;
என்றாங், கிருவர் நெஞ்சமு
முவப்பக் காண்வர
கரிபுன மயக்கிய அகன்கண்
கொல்லை
ஐவனம் வித்தி மையுறக் கவினி

பினல் செல்லா எனற் கிழமெனக்
கருவி வானங் கலிஇ யாங்கும்
ஈத்த நின்புகழ் ஏத்தித்
தொக்கவென்
பசிதினத் திரங்கிய ஒக்கலும்;
முவப்ப
வியர்ந் தேந்து மருப்பிற்
கொல்களிறு பெறினும்
தவிர்ந்து விடு பரிசில்
கொள்ளலென் உவந்து நீ
இன்புற விடுதியாயிற் சிறிது
குன்றியும் கொள்வல்
கூர்வேற்குமண
அதற்பட அருளல் வேண்டுவல்
விறற்புகழ்
வசையில் விழுத்திணைப் பிறந்த

இசைமேந் தோன்றல்

நிற்பாடியயானே. (புறம்.) இது, குமணனை நோக்கிப் பெருஞ்சித்திரனர் கூறியது. தம் வறுமை வாழ்க்கையின் பரிபவநிலையினைச் சித்திரம்போல் இவர் இதில் வரைந்துகாட்டியுள்ளமை காண்க.

கூர்வேற்குமண, புகழ் மேம்பட்ட தோன்றல், ஆயும், என்மனைவியும், ஒக்கலும் உவப்ப நீ உவந்து இன்புறவிடுதியாயிற் சிறிது குன்றியும் கொள்வல்; கொல்களிறு பெறினும் தவிர்ந்து விடுபரிசில் கொள்ளலன்; ஆகலால் அதற்பட அருளல் வேண்டுவல் என அமைத்து, இவர் குறித்த கருத்தை நுனித்து நோக்குக. இதனல் இவரது வினைத் 66-ம் அதிகாரப் வினைத்தூய்மை. 1577

தூய்மையும், மனப்பான்மையும் பழிபடவாழாத பெருமையும், பிறவும் இனிது தெளிவாதல் காண்க.

எவ்வகையிலும் இழிவினையைச் செய்யலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

௬௭ பிண்டிபிடி புற்றிருந்தும் மெய்க்கலையார் மேன்மைமிகக்
கொண்டிருந்தார் என்னை குமரேசா—மண்டு
பழிமலிந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. (எ)

இ—ள்

குமரேசா! நரிவெரூஉத்தலையார் வறுமைமிக்கிருந்தும் என் பெருமைபெற்று நின்றார் எனின், பழிமலிந்து எய்திய

ஆக்கத்தின், சான்றோர் கழிகல்குரவே தலை என்க.

இஃது, எதுவந்தாலும் இழிதொழிலைச் செய்யற்க என்கின்றது.

மிண்டுமிடி = நெருங்கிய வறுமை. மேன்மைமிகக் கொண்டிருந்தார் என்றது முடியுடைமன்னர்க்கும் படிமுறைகூறும் உயர்நிலையுடையராய் நிலவியிருந்தமை கருதி.

பழிமலைந்து = பழியை மேற்கொண்டு. மலைதல் = சுமத்தல், மேற்கொள்ளல், சூடுதல், எதிர்த்தல். ஒள்வாண் மலைந்தார்க்கு என. வெண்பாமாலையினும், கன்னெரி ஒள்ளிணர் கடும்பொடு

மலைந்து என மலைபடுகடாத்தினும் இதன் பொருளினைக் காண்க.

ஆக்கத்தின் நல்குரவே தலை = செல்வத்தினும் வறுமையே

நன்றது. இன் உருபு எல்லைப்பொருளது. ஏகாரம் பிரிநிலை

பாடு கெளிவுந் தோன்ற நின்றது. கழி என்னும் உரிச்சொல்

குதியை புணர்த்திவரும். தீயவினைகளைச் செய்யற்க; அதனால் பழியுண்டாம் என்று அருள, அங்ஙனம் பழிக்கு அஞ்சி அவற்றைச் செய்யாதவர் வறுமையுற்று வருந்துகின்றார்; அஞ்சாது செய்தவர் செல்வமெய்திச் சிறந்திருக்கின்றார் என்ன அவரை நோக்கி இஃதியம்பியதாகக் காண்க.

1578 திருக்குறட்குமரேச

வெண்பா.

மேல், எவ்வகையானும் தீயவினையைச் செய்பலாகாதென் றார்; இதில், அதைச்செய்து செல்வமெய்துவதினும்; செய்யாது வறுமையுறுவதே நல்லது என்கின்றார்.

தீயதொழில்களைச்செய்து பழியை

மேற்கொண்டு பெற்ற செல்வத்தினும் அது கொள்ளாத மேலோர் அனுபவிக்கும் மிக்க வறுமையே சிறந்தது என்பதாம்.

பழிபாவங்களுக்கு அஞ்சாமல்நின்று தீயவினைகளைச்செய்து பொருளைத் திரட்டுவதினும் அங்ஙனம் செய்யாது வறுமையுற்றிருப்பதே மிகவும் நல்லதாம் என்றது புகழும் புண்ணியமும் பின்பயத்தல் கருதி.

பெருஞ்செல்வம் வருவதாயினும் பழிவிளைக்கும் தீயசெயல் களைச் செய்யலாகாது என்பதும், நல்லதொழில்களைச் செய்து செல்வத்தை யீட்டவேண்டும் என்பதும் இதன் கருத்தாகக் காண்க.

வினைத்தூய்மையுடையா ராய் நெறிநின்றொழுகுவார் வறுமை யுடையாராயினும் அவ்வறுமை அவர்க்குப்புண்ணியத்தைப் பயப்ப தோடு பிறர்

க்கும் நன்மையின் உண்மையை நன்கு உணர்த்திநிற்கும்; தீவினையாளரது பழிச்செல்வம் அங்ஙனம் பயந்துணர்த்தாது ஆதலால் இதனினும் அது சிறந்ததாயிற்று.

சிறியவ ரெய்திய செல்வத்தின், மாண்பு
பெரியவர் நல்குரவு நன்றே—தெரியின்
மதுமயங்கு பூங்கோதை மாணிழாய் மோரின்
முதுநெய்தீ தாதலோ இல்.

என்றது பழமொழி.

நறுநெய் சுருங்கியிருந்தாலும் புளித்திழிந்த மோரின் பெருக்கத்தினும் அது மிக மேன்மையுறும்; அதுபோல் புகழ்மலிந்த பெரியாரது வறுமை, பழிமலிந்த சிறியவர் செல்வத்தினும் சிறந்ததாம் என இதில் தெரித்துள்ள நயத்தைத்

தெளிந்துநோக்குக.

வறுமையுடையாராயினும் நல்வினையாளர் பெருமையடைவர்;

செல்வமெய்திநிற்பினும் தீவினையாளர் சிறுமையேயுறுவரென்பது

கருத்து. இதனால் வினைத்தூய்மையின் மேன்மை விளங்கிநிற்றல்

காண்க.

66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.

1579

செல்வம் இலராயினும் நல்லவினையாளர் எல்லாராலும் நன்கு மதிக்கப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நரிவெரூஉத்தலையார்பால் உணரப்படும்.

கதை.

நரிவெரூஉத்தலையார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்குமுன்னர்ப் பாண்டிநாட்டிலே

யிருந்தவர். சங்கப்புலவர்களுள் ஒருவர்.
எல்லா வுயிர்களையும் தன் இன்னுயிர்போற்
பேணுந் தண்ணளியுடையவர்.

இருளே உலகத்தியற்கை;
இருளகற்றுங்
கைவிளக்கே கற்ற வறிவுடைமை;
கைவிளக்கின்
நெய்யேதன் நெஞ்சத்
தருளுடைமை; நெய்பயந்த
பால்போல் ஒழுக்கத் தவரே
பரிவில்லா
மேலுலக மெய்துபவர். என்னும்

உண்மையை எங்கும் உறுதிபெற
உணர்த்திவந்தவர். பழவினைவயத்தால் உ
டலில் வனப்புத்தோன்றி இவர் உருவம்
வேறுபட்டிருந்தது. சேரமானாகிய ஒள்வாட்
கோப் பெருஞ்சேர லிரும்பொறை
என்னும்சேரமன்னனைக் கண்டபொழுது
அவ்வேறுபாடு நீங்கி நல்லுருவடைந்து
இவர் விளங்கினின்றார். முன்னைய

வினைப்பயனால் அம்மன்னனோடு தமக்கு அமைந்திருந்த உண்மையை உணர்ந்து அவனை மிக வுவந்து நோக்கினர்.

எருமை யன்ன கருங்கல்லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பிற்
கானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலின் நின்னொன் று

மொழிவல்

அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது

காவல்

குழவி கொள்பவரின் ஓம்பு மதி
அளிதோ தானேயது பெறலருங்

குரைத்தே. என அவனுக்கு இவர் செவியறிவுறுத்தினர். யானையையுடைய நாட்டினையுடையாய், பெரும, என அவ் அரசனை விளித்து நீ தீவினையாளரொடு சேராது குழவியைத் தாய் வளர்ப்பதுபோல் உலகத்தை நீ பாதுகாத்துவரவேண்டும் என்று இவர் உரைத்துள்ளமை

யை இதில் ஊன்றியுணர்க. இவரது மனநலத்தையும் மொழி நலத்தையும் வியந்து அரசர் பலரும் தம்பால் அழைத்துவைத்து இவரை உபசரித்துவந்தார். ஆயினும் யாரிடமும் யாதும்கொள்ளாமல் தம் உழைப்பால் வருவதையே உவந்துகொண்டு வாழ்ந்தார். செல்வத்தைத் தேடவிரும்பாமல் கல்வி ஆராய்ச்சியிலேயே தம் காலத்தை இவர் கழித்துவந்தாராதலால் நல்குரவும இவரை நணுகியிருந்தது. இருந்தும் செல்வரினும் இவர் சிறந்து நின்று வினைநலமே எல்லாநலங்கட்கும் காரணமாம் என்பதை விளக்கிவந்தார். செல்வமொன்றே சிறந்தது; என்னசெய்தேனும் அதனை யீட்டவேண்டுமென்று எண்ணித்தொகுத்து

மேலும் இயற்றிவருகின்ற செல்வர் சிலரை இவர் கண்டார். மிகவும் முதியராயிருந்தும் வினையின் இயல்பு தெரியாமல் இங்ஙனம் விளி கின்றாரே என்று அவர் இழிநிலைக்கு இரங்கினார்.

பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர்
திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற
லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர்
மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமின்
அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியு
மாரதுவே. (புறம்.) என்று அவர்

அறிவுற அருளினர். அவரும் அறிந்து தெளிந்து இவர் அருள்வழி ஒழுகினர். சால்புடைய இவர் வறுமையுற் றிருந்தும் செல்வமெய்தியுள்ள பிறரெ ரவரினும் பெருமைபெற்று நின்றார். பழிமலைந்து எய்திய ஆக்கத்திற் சான்றோர் கழிநல் குரவே தலை என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

செல்வம் எய்துவதாயினும் தீயவினைகளைச் செய்யலாகாது என்பது இதனல் கூறப்பட்டது.

---

66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.

1581

658 தண்டாமல் பொற்கண்ணன் தக்கன் முடித்தாலும்

கொண்டார் துபரேன்

குமரேசா—கண்டு

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா

முடிந்தாலும் பீழை தரும். (அ)

இ—ள்.

குமரேசா! இரண்யாக்கனும், கக்கனும், தாம் எண்ணிய வினையைச் செய்துமுடித்தும் ஏன் அதனால் பின்பு இழிவுற்றார் எனின், கடிந்த கடிந்து ஓரார் செய்தார்க்கு அவைதாம் முடிந்தாலும் பீழை தரும் என்க.

தண்டாமல் என்றது தண்டுதல் என்பதன் எதிர்மறையாய்த் தோன்றி மீண்டு எச்சமாய் நின்றது. தண்டுதல் = நீங்குதல், விலகுதல். தாம்செய்யும் தொழில் தீயதென்று தெரிந்திருந்தும் நீங்காமல்நின்று நிலைத்துமுடித்தார் ஆகலால் தண்டாமல்என்றாம்.

கடிந்த = நீக்கிய; என்றது

செய்யலாகாதென்று உயர்ந்தோரால் விலக்கப்பட்ட வினைகளை. கடி என்னும் வினையடியாகப் பிறந்த பலவின்பாற்பெயர். கடி = விலக்கு, நீக்கு. முடிபொரு ளுணர்ந்தோர் முதுநீருலகிற், கடியப்பட்டன ஐந்துள அவற்றிற், கள்ளும் பொய்யுங் களவும் கொலையும், தள்ளாதாகுங் காமந் தம் பால், ஆங்கது கடிந்தோர் அல்லவை கடிந்தோரென, நீங்கினரன்றே நிறைதவ மாக்கள்; என்ற மணிமேகலைத்தொடர் இங்கு மனங்கொள்ளத்தக்கது.

ஓரார் = நீக்காதவராய்; ஒருவுதல் என்பதன் அடியாகப் பிறந்த இவ் எதிர்மறைமுற்று ஈண்டு எச்சமாய் நின்றது.

பீழை = துன்பம்; பீடை என்பதும் அது. கடியப்பட்ட வினையை முடியச்செய்தல் நலமின்மையோடு அரிதுமாதலால் அதில் தலையிடாதே என்ன; அங்ஙனம் தலையிட்டுச் செய்தால் அதனால்

என்ன வந்துவிடும் என்பாரை நோக்கி
இஃதியம்பியதாகக் காண்க.
வறுமையுறினும் பழிபடுதொழில்களைச்
செய்யற்க என்று மேல் அருளினார்;
அவ்வினைகள் யாண்டும் துன்பமே
பயக்குமென்று இதில் உணர்த்துகின்றார்.
1582 திருக்குறட் குமரேச
வெண்பா.

செய்யலாகாதென்று நூலோரால்
விலக்கப்பட்ட வினைகளைத் தாம் விலக்கி
யொழிக்காமல் அமைச்சர் செய்வாராயின்
அவ்வினைகள் முடியினும்
அவர்க்குத்துன்பத்தையே கொடுக்கும்
என்பதாம்.

தீயவினைகளைத் துணிவுடையராய்நின்று
முடிவுபெறச்செய்தாலும் அவற்றால்
தீமையே விளையும் என்பது இதில் உணர்த்தப்
பட்டது. இவ்வுண்மை

இரணியாக்கன்பாலும், தக்கன்கண்ணும் உணரப்படும்.

## கதை.

இரணியாக்கன் என்பவன் திதிக்கும் காசிபருக்கும் புதல்வனாய்ப் பிறந்தவன். அசுரகுல வேந்தனாகிய இரணியனுடைய தம்பி. இவன் கண்கள் பொன்னிறமுடையனவாதலால் இப் பெயர் இவன் எய்தப்பெற்றான். இரணியம் = பொன். அக்கம் =
கண். கம்பர் இவனைப் பொற்கண்ணன் என்பர். இவன் பெரு வலியுடையனாயினும் கொடுமியாளன். அல்லவை செய்வதே தனக்கு நல்லதென்று இவன் உள்ளங் கொண்டிருந்தான். ஒரு நாள்
பொன்னுலகம் புகுந்து
அமரர்பலரையும் பொருது கொலைத்து ஆங்கு அமர்ந்திருந்த பொருள்களனைத்தையும்

கவர்ந்துகொண்டு பின்பு திசைகள்தோறும் சென்று அனைவரையும்வென்று தனக்கு எவரும் எதிரில்லையென்று இவன் இறுமாந்துநின்று பின்பு எல்லா வுலகங்களுக்கும் அரசனாகலாமென்று கருதிப் பூமிதேவி யைச் சிறைபிடிக்க விரும்பினான். சுக்கிரன் வந்து அச்செயல் தீது என்று கடிந்துமொழிந்துங் கேளாமல் தான் துணிந்தபடியே இவன் துணிந்து முடித்தான். அதுபொழுது திருமால் ஓர் பெரிய பன்றிவடிவாய் வந்து இவனைக்கொன்று தொலைத்து நிலமகளைப் பழமைபோல் நிலைபெறச் செய்தார். தீயதொழிலைத் தீராதுமுடித்தாலும் அதனால் தீங்கே உண்டாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. விரிவைப் பாகவதத்தில் காண்க.

ஏற்று வெண்ணிறக் கேழலோ ரிளங்கதிர்த் திங்கட்

கிற்றெனத் திகழ் மருப்பினாற்
கேழ்கிள ரகலம்
ஊற்றிருந்துசெங் குருதியா
றொழுகிடப் பிளப்ப
மாற்றருந் திறற் பொற்கணன்
ஆருயிர்மாய்ந்தான். (1) 66-ம் அதிகாரம்
வினைத்தூய்மை. 1583

தீட்டலின்றியே திகழ்தரு பழமறை
தெரிந்தோர்
வேட்டல்செய்யுமவ்
வேள்வியினுருவ வாண்கேழல்
கோட்டி னேந்திய நெடுநிலங்
கோளரா வரசின்
சூட்டினவைத்தது சடாம
யிமையவர் துதிப்ப. (2) இக்கவிகளில்
மேற்குறித்தவுண்மை இனிது
தெளிவாதல்காண்க.

கதை 2.

தக்கன் சிறந்தயிராயிருந்தும் சிவபரம்பொருளை இகழ்ந்து நின்றான் ஆதலால் அப்பொருளுக்கு முதன்மை இல்லையென்றும் படி ஓர் வேள்வியை முடிக்கத் துணிந்தான். அது தீயதென்று அறிஞர் பலர் கூறியுங் கேளாதவனாய்க் கொடுமையோடு நின்றான். முடிவில் அருள்வள்ளலாகிய ததீசி முனிவர் வந்து தீயவினையைச் செய்யலாகாது; அதனால் தீங்கே விளையும்; விதிமுறை தவறிய காரியத்தைப்புரிந்து உயர்நலமடைந்தவர் ஒருவருமிலர்; ஆதலால் ஒழிக என்றார்.

விலக்கினை மறையின்வாய்மை
வேள்விசெய் வினைமுற்றுக்
கலக்குமேலமலனை காண்டிபால
வனுக்கஞ்சா
வலத்தினர் யாவருண்டேன் மாய்வரே
மறையுமெய்ம்முன்
இலைப்பொலி சூலமேந்தும்
ஏகனென்றேத்திற் றன்றே.

ஆதலி னெவர்க்குமேலா மாதியை யிகழாநிற்றல்
பேதைமை யன்றி யீதோர்பெருமித மன்றுலாற்ற
நோதகவுன்னி யாரோ நோற்பவர் அனையை நீயே
வேதம தொழுக்கநீத்திவ் வேள்வியைப் புரியநின்றாய்.

என்று பல காரணங்களை யெடுத்துக்காட்டி அந்நெறிகேடாய வினையை நீக்குமாறு தெளிவுற விளக்கியும் தெளிவிலனாகித் தான் கருதியதைத் தன் செல்வச்செருக்கால் செய்துமுடிக்கவே துணிந்தான். நெறியுளார் செல் வம் பெற்றா னெறிநின்று நீடுவாழ்வார்

அறிவிலார் செல்வம் பெற்றால் அளவிலா அகந்தைப்பேயும்
பிறிதுகண் தெரியா நோயும் பிடித்திடு மவையையடாற்ற

வறுமையே, கண்டம்,
என்னுமிரண்டுயா மருந்து மாகோ.

என அவர் வெகுண்டுசென்றார். அதன்பின் இவன் எண்ணியதை முடிக்குங்கால் வீரபுத்திரர் தோன்றி அவ்வேள்வியை யழித்து 1584 திருக்குறட் குமரேச வெண்பா.

அல்லல் பலவுஞ்செய்து தம் வெள்ளியவாளால் இவன் தலையை வெட்டி வீழ்த்தினர். மேலோர் கடியப்பட்ட வினையை இவன் கடியாது முடித்தலால் இவ் அழிவு வந்ததே என்று அனைவரும் அழுங்கினர். கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதா முடிந்தாலும் பீழைதரும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

தீயவினை என்றும் துன்பமே பயக்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

659 வானோரழ மண்ணோரழ வந்தவெல்லாம்
எனிலங்கைக்
கோமகனின் போன
குமரேசா—எனின்
அழக்கொண்ட வெல்லாம்
அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.
(௯)

இ-ள்

குமரேசா! வானுலகத்தவரும்
மண்ணுலகத்தவரும் வருந்தி யழுமாறு வெளவி
வந்தன வெல்லாம் இலங்கையர்கோனை விடுத்து
ஏன் அவன் இறந்துபோயினன் எனின்,
அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; நற்பா
லவை இழப்பினும் பிற்பயக்கும் என்க.

வானோர்அழ மண்ணோர்அழ என்றது
வானுலகத்தவரும் மண்ணுலகத்தவரும் வருந்த
என்றவாறு. வான் மண் என்பன

ஆரும்பயர்கள். ஏனோர் = ஏனையோர்; என்றது பிறரை.

நற்பாலவை = நல்ல இயல்பினையுடையவை; என்றது தூய வினையால் வந்த பொருள்கள் என்றவாறு.

பிற்பயக்கும் = பின்பு வந்து பயன்கொடுக்கும். பின்பு என்றது மறுமையையும் குறிக்கின்றது.

இழந்த பொன்னை ஏவலன் எய்தியதுபோல் நல்லவினையால் வந்தபொருள் தன்னைச்செய்த கிழவனை நாடிப்பழவினைவந்தடைந் தாங்கு தன்னையுடையானைத் தேடிவந்து தன் பயனைத் தப்பாது தந்துநிற்கும் என்பார் நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும் என்றார்.

66-ம் அதிகாரம் வினைத்தூய்மை. ]

பிற ை ர அழச்செய்து
ஈட்டிய பொருளெல்லாம் தன்னை அழ
வைத்துப் போய்விடும்; நல்ல வினையால்
வந்த பொருள் கள் இழந்துபோயினும்
பின்வந்து பயன்கொடுக்கும் என்பதாம்.

தான் எய்திய பொருளை என்றும் இன்
புற அனுபவிக்க ஒருவன் விரும்புவனாயின்
தீயவினைகளால் அதனை அவன் தேடலாகா
தென்பது கருத்து.

நல்லவினையால் வந்த பொருளே
எல்லா இன்பங்களையும் நல்க வல்லது; எனத்
தீவினையால் வந்தது துன்பத்தையே
தந்து விரைந்து தொலைந்துபோம் என்க.

நல்வினை யென்னும் நன்பொற் கற்பகம்
மகளிரென்னும்
பல்பழ மணிக்கொம் பீன்று பரிசில்வண்
டுண்ணப்பூத்துச்
செல்வப்பொற் சிறுவரென்னும் காமங்கனி

தார்ந்தனின்றர.

சொல்லிப்போம் பாவக்காற் றின் ஒழிகஇப்புணர்ச்சியென்றுன். என்றது சிந்தாமணி. இஃது ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

எனைத்துணையராயினும் வினைத்தூய்மை யிலாராயின் அவர் விளங்கமாட்டார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இராவணன்பால் உணரப்படும்.

கதை.

இராவணன் பிரமனை நோக்கி அருந்தவம்புரிந்து பெருந் திருவடைந்தும் தன் நீண்டதோள்வலியால் திசைகள்தோறுஞ் சென்று யாண்டும் தீங்கிழைத்து மேலும் மேலும் பொருள்களைத் தொகுத்து முடிவில் குபேர வுலகையடைந்து கொள்ளையிடத் துணிந்தான். குபேரன் எதிர்வந்து இனியமொழிகள் பல கூறி

மைமேயாடு கூறியும் இவன் யாதுங்கேளாயல்
கா னை யோடு அள கைபிற்புகுந்து
அரியபொருள்கள் பலவற்றையும் வெளவி
அதன்
அழகைச் சிதைத்து அங்கிருந்த அற்புத விமா
னமாகிய புட்பகத் தையும் கைக்கொண்டு
இவன் போன்னெனச் சென்றன்.

வண்டுசேர் பொழிற் குபேர
மன்னன்வாழு மாநகர்
கண்டகண்ட மாடெலாக்
கவர்ந்துகொண்டு பண்டைநாள்
புண்டரீக வாசனன் கொடுத்த புட்ப
கத்தையும்
கொண்டு வென்றி கொண்ட ரக்கர்
கோனுவந்துபோயினன். 1586

திருக்குறட் குமரேச வெண்பா.

போனபின் அளகை வேந்தன் மிகவும்
நாணி அல்லலுற்றன். தேசநாசமானதென்ற

சித்தரும் இயக்கரும், வாசஓதிமாதராரும்
மைந்தரும் குலைந்து மறுகின்றார் .

இவ்வாறே எவரையும் வருந்தச்செய்து பொருளைத் திரட்டிக்கொண்டு இலங்கையில் இனிது வீற்றிருந்து இறுதியில் அல்லல் பலவுமெய்தினான். இலக்குவனை வெல்லமுடியாமல்வந்து தன் அருமைத்திருமகனாகிய இந்திரசித்து இவன்முன் நின்று தாம்செய்த தீயவினையாலே தீதுவிளைந்த தென்று சொல்லி இரங்கினான்.

நிலஞ்செய்து விசும்பும்செய்து
நெடியவன்படை நின்றனை
வலஞ்செய்து போவதென்றால்
மற்றினிப்புரைப்பதென்னே
குலஞ்செய்த பாவத்தாலே கொடும்பழி
தேடிக்கொண்டோம்

சலந்தெசா்பின் உலகமுரன் றும் இலக்குவன்

முடிப்பன் தானே.

என்று உரைத்துவிட்டுப் பின் முடி

ந்துபோனன். அடைந்து

நின்ற அரிய பொருள்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்று அழிய இரங்கி இவனும் பின் அழிந்துபோனன். தான் முன் இழுந்து நின்ற விமானத்தைக் குமேரன் பெற்றிமகிழ, எய்தி நின்ற அனைத்தையும் இவன் இழந்து கெட்டானே என்று அனைவரும் இரங்கி நின்றார். அழக்கொண்ட எல்லாம் அழப்போம்; இழப்பினும் பிற்பயக்கும் நற்பாலவை என்னும் உண்மையை உலகம் இவன் பால் உணர்ந்துநின்றது.

தீயவினையால் வந்தபொருள் தீங்கேவிளைக்கும் என்பது இத ஞல் தெரிப்பட்டது.

---

நீதுசெய்து கண்டகன்முன் சேர்த்துவந்தான்பின்பிழந்து
கோதுகொண்டான் என்னே குமரேசா—ஏதும்
சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. (ம)

இ—ள்.

குமரேசா! நீயசெயலால் பொருளைச் சேர்த்துவைத்து மகிழ்ந்த கண்டகசேதனன் பின் அதனை ஒருங்கேயிழந்து என்ஒழிந்து போயினன் எனின், சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல், பசுமட்கலத்துள் நீர்பெய்து இரீஇ அற்று என்க.

## 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை.

1587

கோதுகொண்டான் என்றது
வஞ்சமனத்துக் கொடும்பாவி மடிந்தாலன்றே
இனிதாகும் என்று எல்லாராலும்
பழிக்கப்பட்டு மாண்டமை கருதி.

அழக்கொண்ட வெல்லாம் அழப்போம்
என மேல் அருளியதைக் கேட்டவுடனே

தொகையாகப் பொருள் கைக்கு வந்தபின்
அஃதெப்படிப்போம் என்று ஒருவன்
எண்ணி நோக்க அவனை நோக்கி ஓர்
உவமையை எடுத்துக்காட்டி
இஃதுணர்த்தியதென்க.

ஏமார்த்தல், இரீஇயற்று என இயைத்து
நோக்குக.

ஏமம் ஆர்த்தல் என்பது
இடைக்குறைந்து ஏமார்த்தல் என நின்றது.
ஏமம் = காவல், மகிழ்வு. ஆர்த்தல் = செய்தல்.
இது, பொருளைச் சேர்த்துவைத்துப்
பாதுகாத்து மகிழ்தலைக் குறித்து நின்றது.
ஏமாத்தல் எனவும் பாடம். ஏமாத்தல் =
களித்தல், மகிழ்தல். இப்பாடங்கொண்டால்
இரீஇயற்று என்னும் பிற வினை
உவமையோடு அஃது இனிது பொருந்தாமை
காண்க.

சலத்தால் = வஞ்சத்தால்; சலம் என்பது
வஞ்சனை, சினம்,

மாறுபாடுகளையுணர்த்திவரும்.

வஞ்சனைசெய்யும் படையான் என்பதற்குச் சலப்படையான் எனப்பரிபாடலில் வந்துள்ளமை காண்க. சலம் புகன்று சுறவு கலித்த; என்றது மதுரைக் காஞ்சி. சலமிலன் சங்கரன் என்றது தேவாரம். சஞ்சலம் எனவரின் அது கவலையையும் துன்பத்தையும் காட்டும். அகரம் ஐகாரம் ஔகாரம் என்னும் இம்மூன்றுயிருடன் சகர மெய்கூடி மொழிக்கு முதலில் வாராது என்று ஆசிரியர் தொல்காப்பியனார் விதித்திருப்பவும் ஈண்டு அது வந்தது என்னை எனின்,

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ ஐ ஔவெனும் மூன்றலங் கடையே.

என்று

முன்னர் உரைத்துவிட்டுப் பின் கடிசோல் இல்லைக் காலத்துப்

படினே என எதிர்பொருளுணர்த்தல் என்னும் உத்தியால்

இசைத்திருத்தலால் ஆயுது என இசைத்துக் கொள்க.

இருத்தி என்னும் வினை எச்சம் விகாரமாய் இரீஇ என அள பெடுத்து நின்றது. இது சொல்லிசை அளபெடை.

இரீஇ அற்று = இருத்தியதனோடு ஒக்கும்.

199

1588 திருக்குறட் குமரேச வெண்பா.

நட்பிடை வஞ்சஞ்செய்தும் நம்பினார்க் கூன் மாறூட்டத்
துட்படக் கவர்ந்தும் ஏற்றார்க் கிம்மியும் உதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ அறத்தா றீட்டு நம்பொருள் படுமோ என்னை.

இது மாமனுக வந்து மதுரையில்
வழக்குரைத்தபொழுது பரம்
பொருளுரைத்தது. அறத்தான் வந்ததே
நிலைபெறும்; சலத்
தால் செய்த பொருள் விரைந்து
தொலைந்துபோம் என்பதை
இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மேல், பிறரை அழச்செய்து ஈட்டிய
பொருள் பின்பு தன்னை அழவைத்துப் போம்
என்ருர்; இதில், இருந்த இடம் தடந் தெரி
யாமல் அவனும் அதனேடு ஒழிந்துபோவான்
என்கின்ருர்.

வஞ்சனை முதலிய தீயவினைகளால்
பொருளைச் சேர்த்துத்
தன் குடியை ஒருவன் மகிழச் செய்தல்,
பசிய மட்கலத்துள்
நீரை நிறைத்து இருத்தியதுபோலாம்
என்பதாம்.

சுடப்படாத பசிய மண்ணின் கலத்தில் நீரைப்பெய்தால் நீர் பரவும்வரையும் இருப்பதுபோல் தோன்றிப் பசைந்தவுடனே உடைந்து அதனோடு ஒருசேர ஒழிந்துபோம் அதுபோல், வஞ்ச வினையால் பொருளையீட்டித்தொகுத்து அரசனை அமைச்சன் மகிழ வைப்பினும் சிறிது காலத்துள் அப்பொருளோடு அவனும் இருந் தஇடமும் தெரியாமல் ஒழிந்தே போவன் என இயைபோடுபொரு ந்த இதனை இணைத்து நோக்குக.

வினைநலம் வேண்டிய எல்லாம் தரும்; ஆதலால் நலமுறுந்
தொழிலையே நாடிச் செய்க; அல்லலுறினும் பொல்லாத தொழி
லையாண்டும செய்யற்க; தீய தொழிலால் தீங்கே உண்டாம்
என்று வினைத்தூய்மையின் மேன்மையை உடன்பாட்டானும் எதிர்மறையானும்

இதுவரை விளக்கிவந்த தொழில் நலமிலதா யின் அத்னையுடையவன் குடி அடியோடு ஒழிந்துபோம் என இறுதியாக உறுதிபெற இதில் உணர்த்தியருளினர்.

வினைத்தூய்மையில்லாதவன் எத்துணைய செல்வத்தையுடையனாயினும் அவன் நிலைத்து நிற்கமாட்டான் என்பதுகருத்து. 66-ம் அதிகாரம் வினைத்தூய்மை. 1589

தீயதொழிலால் ஒருவன் பொருளைச் சேர்ப்பானாயின் விரைவில் அப்பொருளும் தொலைந்து அவனும் இழிந்து அழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்டகசேதனன்பால் உணரப்படும்.

கதை.

கண்டகசேதனன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்துமுந் நூறு ஆண்டுகட்கு

முன்னர்ப் பாண்டி நாட்டிலே வரகுணமங்கை
யென்னும் நகரிலிருந்தவன். கனகதத்தன்
என்னும் வணிகனுடைய புதல்வன். இவன்
பொய்யே மலர்ந்த புன்சொல்வாயினன்.
ஆசையும் வஞ்சமும் அமைந்த நெஞ்சினன்.
தகுந்த கல்வியில்லாதவனாயினும் மிகுந்த
செல்வமுடையவன்; அங்ஙன மிருந்தும்
தன்னுயிரினும் பொருள்மேல் இவன் காதல்
மிக்கிருந்தான். பெரு
ந்தீமைகளெவற்றையுஞ்செய்து
அதனைப்பெருக்கத் துணிந்தான். காணியளவு
சிறுபொருள் தனக்கு வருவதாயின்
கோடியளவு பெருங்கேடுகளைப் பிறர்க்குக்
கோடாமற் செய்யும் குடிகேடன் என
உலகங்கூற இவன் ஓங்கி நின்றான்.

ஈறிலாநிதி யெய்தின னாயினும்
வீறி நாளும் பொருள்கவர்
வேட்கையான்
சீறி யாரும் இகழச் சிறுவிலை

கூறி நாடொறும் விற்கும்
கொடுமையான் (1)

கண்டமாற்றிக் கருப்புராஞ் சந்தனத்
தண்டமாற்றித் தண்டேன்கலப்
பாற்றியுங்
கொண்ட மாற்றுக்கு நான்மடி
கூறியும்
பண்ட மாற்றிப் படைக்கும்
பொருண்மையான் (2)

பேய்பசிக்குப் பெருவிருந் தாமுடன்
நோய் பசிக்குற நுங்குவ தோர்கிலான்
சேய் பசிக்கவும் செல்விருந் தேங்கவும்
தாய் பசிக்கவும் உண்ணுந்
தறுகணன். (3)

விண்ட காணியிற் கோடி விளைக்ினும்
கொண்ட கோடியிற் காணி
கொடுக்கலான்
மண்ட வான் பொருள் மண்ணிடை
தாழ்க்கவே

எனக்குற்றுலமான்மியத்தார் இவன் பொருள் செய்த கொடுமை யைக் கண்டு கூறியுள்ளமை ஈண்டுக் காணத்தக்கது. இங்ஙனங் கொடுங் கேடுகள் பலவும் செய்து பெரும் பொருளைத் தொகுத்து வைத்துத் தன் குடியை மகிழச்செய்து உயர்ந்தவன்போல் தானும் மிக மகிழ்ந்திருந்தான். பழிவளர இங்ஙனம் இருந்து வருங்கால் குட்டம் என்னும் தொழுநோய் வந்து இவனுடல் முழுவதையும் சூழ்ந்துகொண்டது. கள்வரால் இவன் பொருள் கள் சில கொள்ளை செய்யப்பட்டன. ஆவிபோகும் நிலையில் இவன் அயர்ந்து கிடக்கையில் தாயத்தார் முதலாகப் பலரும் வந்து பாவியென்று வைது பொருளைப் பற்றற வௌவிப்

போயினர்.

நிலையிலா வுடலும் வாழ்வும் நிச்சயமென்றே யெண்ணி
அலகிலாக் கொடுமை செய்தேன் அவத்தைவந் தடுத்த தந்தோ
விலகவோர் தருமமென்னும் மெய்த்துணை யில்லாப் பாவி
பலபடச் செய்தபாவம் பலித்ததென் றயர்ந்து சோர்ந்தான்.

பின்பு அல்லல்பலபட்டு ஆவி துறப்ப இவன் குடியும் பொருளும் அடியோடு அழிந்தன. தீவினையால் பொருளீட்டிச் செழித்தாலும் சின்னாளில், சாவினையே தலைப்பட்டுச் சதுரழிதல் சாதமே என்பதற்கு இவன் சரிதையையே அக்காலத்தவர் எவர்க்கும் எடுத்துக்காட்டி இசைத்து வந்தார். சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல், பசுமட்கலத்துள் நீர்பெய்து இரீஇ அற்று; என்னும் உண்மையை

உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

ஆறலைத்தல் கொள்ளை யதிகாரம்
பொய்வஞ்சம்
சிறிவெருட்டல் குறைமுடிப்பல்
செய்வலினிப்
பேறெண வின்ன பிறரறிய வெளவினும்
வேறல்ல கள்ள வினை.
பிறர்பொரு ளன்னு ருணராது பெட்பின்
சிறியகொளினுமவை நஞ்சினுக் தீய
இறைவ றெறுக்கும் பிழைப்பினு
மென்றும் உறைப இருள்சே ருலகு.
(இன்னிசை) 67-ம் அதிகாரம் வினைத்திட்பம்.
1591

அல்லது செய்வா ரரும்பொரு
ளாக்கத்தை
நல்லது செய்வார்
நயப்பவோ—ஒல்லொலி நீர்.

பாய்வதே போலும் துறைவகேள்
தீயன
ஆவதே போன்று கெடும்.
(பழமொழி)
அல்லல் வினையால் வந்தபொருள்
அழிந்தேபோம் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்
பொருள்.

நல்ல தொழிலையுடையவன் எல்லா
நலங்களையுமுடைவான். புகழறங்களை
உள்வாக்காத வினைகளை யாண்டும்
செய்யலாகாது. பொருள் வருவதாயினும்
புகழ்கெட வருமாயின் அத்தொழிலை அறவே
ஒழித்துவிடவேண்டும். அல்லலுற்றும்
பொல்லாத தொழிலை நல்லவர் செய்யார்.
தானே பின் இரங்கி வருந்துதற் குரிய
வினைகளை என்றும் செய்யாதொழிக. உன்

தாய் பசித்தழு தாலும் தீயதொழிலை நீ செய்யலாகாது. பழித்தொழிலைச்செய்து செல்வம் பெறுவதினும் அதனைச் செய்யாது அனுபவிக்கும் வறுமையே சிறந்தது. தீயதொழிலைத் துணிந்துமுடித்தாலும் அதனால் தீமையே உண்டாம். பிறரை அழச்செய்து ஒருவன் பொருள் ஈட்டின் அப்பொருள் பின்பு அவனை அழவைத்தே போய்விடும். அல்லல்வினையால் பொருளைச் சேர்த்தவன் அதனோடு ஒருங்கே அழிந்தேபோவான்.

௬௬-வது வினைத்தூய்மை முற்றிற்று.

---

# 67-ம் அதிகாரம்
# வினைத்திட்பம்.

அஃதாவது கருதிய தொழிலை

முடிவுபெறச் செய்தற்குரிய திண்மை. மேல், வினைத்தூய்மையின் மேன்மையை யருளினார்; அதனை ஆற்றுதற்குரிய பான்மையை இதில் அருளுகின்றார். வினை, நன்மையுடையதாயினும் திண்மையோடு நின்று அதனைச் செய்யவில்லையாயின் அதன் பயனை எய்த முடியாது ஆதலால் அவ்வுண்மையை உணர்ந்து கொள்ளுமாறு அதன்பின் இது வைக்கப்பட்டது.

1592 திருக்குறட் குமரேச

வெண்பா.

661 தண்டாத திண்மையொன்றே தாங்கிக் கருடன்போய்க்
கொண்டான் அமிர்தேன் குமரேசா—கண்ட
வினைத்திட்ப மென்ப தொருவன்
மனத்திட்பம்
மற்றைய வெல்லாம் பிற.

(க)

குமரேசா !

இ—ள்.

படை அரண் முதலிய வேறெதனையு நோக்காது தன் திண்மையே துணையாகச் சென்று கருடன் என் அமிர்தத்தைக் கொண்டான் எனின், வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்; மற்றைய எல்லாம் பிற என்க.

வினைத்திட்பம் என்பது இன்னது தான் என இஃதுணர்த் துகின்றது. அமரர்கோன் முதலிய அனைவரையுங் கண்டும் தன் உளவுறுதி குன்றாமல் சென்றான் ஆதலால் தண்டாத என்னும் அடை அவன் திண்மையைச் சார்ந்து நின்றது. தாங்கி என்றது திண்மையின் மிகுதி தோன்ற நின்றது. வேறெதையும் எதிர் நோக்காமல் தன் உறுதியொன்றையே கருதிச் சென்றான் ஆதலால் ஒன்றே தாங்கிப் போய் என்றும்.

ஒருவன் என்றது வினைசெய்தற்குரிய ஒருவன் என்றவாறு. மற்றைய எல்லாம் = வேறுள்ளனவெல்லாம்; அவை, பொருள் கருவி இடம் காலம் முதலியன. மனத்திட்பம் என முன் சுட்டியதால் அஃதொழிந்தவற்றை மற்றைய என்றார். மற்றையதென்பது சுட்டியதற் கினம் என்றது இயல். பெயரளவில் வினை

த்திட்பம் என்று வேறு கூறப்படினும் பொருளையூன்றி நோக்கில் மனத்திட்பத்தின் குணமாகவே அது மருவியுள்ளதாதலால் இங் ஙனம் ஒருமைபுற வுணர்த்தினர்.

வினையின்கண் திண்மையென்று சொல்லப்படுவது அதனைச் செய்துமுடித்தற்குரிய ஒருவன் மனத்திண்மையேயாம்; மற்றுள் ளனவெல்லாம் அதற்குத் திண்மையென்று சொல்லப்படா என்பதாம்.

ஒரு தொழிலைச் செய்து முடித்தற்குக் கருவி, காலம், இடம் முதலிய உபகரணங்களெல்லாம் நன்கு அமைந்திருப்பினும் அத னைச் செய்தற்குரியவன் மனத்திட்பம் இலனாயின் அவற்றால் யாதும் பயன் இல்லையாதலால் மற்றைய எல்லாம் பிற என்றார்.

## 67-ம் அதிகாரம்

வினைத்திட்பம். 1593

வினையாளன் திண்மையுடையனாயின் எல்லாத் தொழில்களும் அவனுக்கு எளிதில் முடியும் என்பது கருத்து.

இலங்கையை யிடந்து வேரோ டிவ்வயிற் றருகென்றாலும்
விலங்கினர் தம்மையெல்லாம் வேரொடும்

விளியநூறிப்

பொலன்குழை மயிலைக் கொண்டு
போமெனப் புகன்றிட்டாலும்

கலங்கலிர் உரைத்த மாற்றம் முடிக்குவல்
கடிதுகாண்டிர். என்று சாம்பவன் முதலிய
துணைவர்களுக்கு உறுதி கூறிவிட்டு
மறலியும் புகுதலரிய இலங்கைமேல் தான்
ஒருவனுகவே துணிந்து சென்ற
அனுமான்போல் மனத்திண்மையுடையவர்
எண்ணிய எதனையும் இனிது முடித்து
வினைக்கண் திண்ணியராய் விளங்கு
வரென்பார் வினைத்திட்பம்என்பது ஒருவன்
மனத்திட்பம் என்றார்.

எத்துணை அரிய வினையையும்
மனத்திட்ப முடையவன் எளிதில்
முடித்துவிடுவான் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கருடன்பால்
உணரப்படும்.

# கதை.

கருடன் என்பவன் காசிபருக்கும் விநதைக்கும் புதல்வனாய்ப்பிறந்தவன். பறவை முகமும் தெய்வ வுருவமும் சேரப் பெற்றவன். இவன், சிறந்த போர்வீரன். வேகத்தில் வாயுவுக்கு அடுத்த படியில்வைத்து எண்ணத்தக்கவன் . வினைத்தூய்மை யுடையவன். எதனையும் நினைத்தபடி முடிக்கவல்லவன். வைனன், வைனதேயன், பன்னகவைரி, பறவைவேந்தன், முதலிய பல சிறப்புப் பெயர்களையுடையவன். வைணவ மதத்தார் இவனைப் பெரியதிருவடி என்று அருமையாக அழைப்பார். இவனது அறிவும் ஆற்றலும் அளவிடலரியன. இவனுடையதாயும், சிற்றன்னையாகிய கத்துருவும் இந்திரன் குதிரையைக் குறித்து ஒரு நாள் விண்வாதம் புரிந்தார்கள். உச்சைச் சிரவம் என்னும் அவ் வெள்ளைப்பரியின் வாலில் ஓர் கறுப்பு உள்ளது என்று கத்துரு

கறைந்தாள். அஃது இல்லவே யில்லையென்று வினதை இசைத்தாள். வழக்கு வலித்து முதிர்ந்தது. தோல்விபடைத்தவள் வென்றவளுக்கு ஆறுமாதம்வரையும் அடிமையாக அமர்ந்திருக்க 1594 திருக்குறட் குமரேச வெண்பா.

வேண்டுமென்று இறுதியாக உறுதிசெய்துகொண்டார். பிரிந்தார். பின்பு தான் சொல்லியபடி யில்லையென்று உணர்ந்த கத்துரு தன் பிள்ளைகளுள் ஒருவனை விடுத்து வஞ்சித்து அதில் அஃது உள்ளதாகக் காட்டினாள். பேதை வினதை யாதும் தேராமல் அடிமையாகவே அமர்ந்து கவன்றாள். அதனை யுணர்ந்த இவன் மிகவும் வருந்தி என்னவேண்டுமாயினும் தருகின்றேன்; என் அன்னையை அடிமையினின்றும் விடுவிக்க

வேண்டுமென்று அச் சிறிய தாயிடஞ் சென்று
வேண்டினன். புத்தேளுலகத்துள்ளு
புத்தமிர்தத்தைக் கொணர்ந்தாரின் நீ
சொற்றபடி விடுவல் என அவள்
சொல்லிவிடுத்தாள். அவ் அரியவினையை
முடித்து வருதற்கு வேறு
உதவியொன்றையும் விரும்பாமல் தன்
நெஞ்சே துணையாக நேர்ந்து சென்று
அமராபதிக்கண் அமரர் பலர் புடை சூழ அரிய
பாதுகாவலிலிருந்த அவ் அமிர்தினைக்
கவர்ந்துகொண்டு திரண்டுவந்த அனைவரையும்
வெருண்டோடவென்று, மேலும் வருபவர்
யாவரும் வருக என்று யாவரும் அறிய
வீரமொழிகூறி, இவன்வெளியே வருங்கால்
இந்திரன் வந்து எதிர்ப்ப, அவனையும் எதிர்ந்து
பொருது மேன்மையானபொருள்கள்யாவும்
ஆண்மையுடையார்க்கே உரிமையாம் என்னும்
பான்மையையுணர்த்தி அதனை இப்படியிசைத்

தந்து தன் அன்னையின் அடிமையை நீக்கினன். ஒரு துணையுமின்றித் திண்மையோடு வந்து இதனைச் செய்து சென்றனே என்று அனைவரும் இவனது மனத்திட்பத்தை மதித்துப் புகழ்ந்தார். வினைத்திட்ப மென்பது, ஒருவன் மனத்திட்பம்; மற்றைய வெல்லாம் பிற என்னும் உண்மையை உலகம் அறிய இவன் அன்று உணர்த்தி நின்றான். கடுவன் இளவெயினனார் என்னும் புலவர் பெருமானரும் வயங்குபூண் அமரரை வெளவிய அமிழ்திற், பயந்தோள் இடுக்கண் களைந்த புள்ளினை என்று பரிபாடலில் இவனது வினையாண்மையை வியந்து பாடியுள்ளார். விரிவைக் கருடமான்மியத்தில் காண்க.

தள்ளாமல் எவ்வினையுந் தான்முடியுந் திண்மையொன்று

கோள்வாயேல் உண்மையிது கோள்.

மனத்திண்மையுடையவனே வினைகளை மாண்புற முடிப்பன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

67-ம் அதிகாரம் வினைத்திட்பம்.

1595

662 உற்றவினை யூறுபட்டும் ஒல்காதேன் மாறனன்று
கொற்றமுற்று நின்றான் குமரேசா—எற்றேனும்
ஊறொரால் உற்றபின் ஒல்காமை யிவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள். (உ)

இ—ள்.

குமரேசா! தூய வினைகளையே செய்துவந்த தோயன் மாறன் என்பவன்

இடையூறு உற்றும் என் தளராது நின்றான் எனின், ஆய்ந்தவர் கோள் ஊறு ஒரால், உற்றபின் ஒல்காமை; இவ் இரண்டின் ஆறு என்பர் என்க.

உற்றவினை = பொருந்திய தொழில்; தனக்கு உரிமையாகத் தெளிந்துகொண்ட காரியம் என்றவாறு. கொற்றமுற்று என்ற து அல்லலுற்றபொழுதும் தன் ஆண்மை குன்றாமல் வினையை அவன் ஆற்றி நின்றமை கருதி. எற்றேனும் = சிறிதேனும்.

இஃது உற்றவினை ஊழால் கலங்கிவிடினும் நீ உன் உள்ளங்கலங்காதே என்கின்றது.

ஆய்ந்தவர் = நீதிநூல்களை ஆராய்ந்து தெளிந்தவர்; அவராவார் வியாழன் சுக்கிரன் முதலாயினோர். அமரருக்கும் அசுரருக் கும் முறையே அமைச்சராயிருந்து அரசநீதிகளை வழுவற ஆராய்ந்து தெளிந்தவராதலால்

இவர் இங்கு முதன்மை தோன்ற நின்றார். கோள் = குறிக்கோள்; முடிவான துணிபு என்க.

ஓராலும் ஒல்காமையும் என முன்னர்க் கூறியதனால் இவ் இரண்டு என அண்மையுறச் சுட்டினார்.
ஊறு = ஊறுபாடுடையதை; அஃதாவது செய்தார்க்குத் துன்பம் பயக்கும் தீயதொழில்களை. ஓரால் = நீங்குதல், தவிர்தல்; இஃது ஒருவு என்பதன் அடியாகப் பிறந்தது . ஒல்காமை = தளராமை. ஒல்கலுள்ளமொடொருபுடைத் தழீஇ என்றது புறம்.

ஊறு ஓரால் என்றது அல்லலுறும் வினையைச் செய்யலாகாதென்றவாறு; செய்யும் வினை தூய்மையுடையதாகத் தேர்ந்து கொள்ளவேண்டும்; அங்ஙனம் தேர்ந்துகொண்ட பின் தெய்வ கதியால் இடையே ஏதேனும் இடையூறு தோன்றித்

தடைப்

200



படுத்திலும் அதற்குத் தளராகாது என்பதாம். இது வினைத் தூய்மையோடு வினைத்திட்பத்தையும் இணைந்துணர்த்தியதென்க.

அறிவுநூல்களை ஆராய்ந்தவரது உறுதியான முடிவாவது, ஊறுபடுத்தும் வினைகளைச் செய்யாது ஒழிதலும், தான் செய்யும் வினை ஊழால் ஊறுபட்டவழி அதற்குத் தளராமையும், ஆகிய இவ்விரண்டின் நெறிதான் என்பர் மேலோர் என்பதாம்.

ஓரால், புறத்தே தள்ளத்தக்கது; ஒல்காமை, உள்ளே கொள்ளத் தக்கது என்க. வினைநல்லதாகவும், அவ்வினையைச் செய்கின்றவன் அல்லலுக்கு அஞ்சாதவனாகவும்

அமைந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

நல்லதொழில்களையே நாடிச் செய்க; அங்ஙனம் செய்யுங்கால் அல்லல்வந்ததாயின் அதற்கு அஞ்சிவிடாதே; என்று தாமே விதித்துவிடாமல் ஆய்ந்தவர் கோள் என்ப என உறுதிபெற அடிகள் மதித்துக் கூறிய திறத்தை இதில் நுனித்து நோக்குக.

இடையூறுகள் பல எதிர்ந்தாலும் மனத்திட்பமுடையவர் வினைத்திறத்திற்றளர்ச்சியுறார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தோயன்மாறன்பால் உணரப்படும்.

## கதை.

தோயன்மாறன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற் றைம்பது ஆண்டுகட்குமுன்னர்ப் பாண்டிநாட்டிலே ஈர்ந்தூர் என்னும் ஊரிலே இருந்தவன். திண்மையோடு தண்மையுமுடையவன். தன்பால் உள்ளது எதையும் உவந்து ஈந்து

தன்னையடைந் தவரெவர்க்கும் இதம் புரிந்தவன். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த சித்திரவர்மன் என்னும் பாண்டியமன்னனுக்குச் சேனைத்தலைவனாகவும் தேர்ச்சித்துணை வனாகவும் இவன் சிறந்திருந்தான். மன்னன்பால் இவன் பேரன்புடையவன். யாதொரு அல்லலும் அவனை அணுகாவண்ணம் ஆட்சியை இவன் ஆற்றினான். பழுதுபடுஞ் செயல்களை அறவே ஒழித்துப் பொருள் அறங்களை விளைத்தற்குரிய வினைகளையே இவன் புரிந்து வந்தான். குடிகளுக்கும் அரசனுக்கும் மிகுதியான வருவாய்கள் உளவாம் என்று கருதிச் சீர்திருந்தாது கிடந்த புல்லிய நிலங்களையெல்லாம் 67-ம் அதிகாரம் வினைத்திட்பம். 1597

நல்லசெய்களாக இவன்

சிர்திருத்தஞ்செய்தான். திருத்தியமுறை
யில் அவை சிறந்து வருங்கால் மிகுந்த
மழைபெய்தது; அதனால் அவை சிதைந்து
போயின; போயினும் இவன் யாதும்தளர்வி
ன்றி வேறுவழிகளில் பேறுதரும்வினைகளைத்
தெளிந்துகொண்டு இவன்
துணிந்துசெய்தான். ஒருகால்
பொருபடையுடனே ஒருவரும்
அறியாவகையில் மருவலர்வந்து
தன்மன்னனை வளைந்து
கொண்டபொழுது இவன் துணிந்துசென்று
அனைவரையும் அடங்கவென்று அரசினை
நிலைநிறுத்தினான். அப்பொருகளத்தில்
இவன் உடல்முழுதும்
புண்பட்ட தன்மையையும், பண்பட்டிருந்த
வுண்மையையும் வியந்து மதுரைக் குமரனார்
என்னும் புலவர் பெருமானார் புகழ்ந்து
மகிழ்ந்துள்ளார். அப்பாட்டை இதனடி

யில்காட்டுதும் அதன்பொருளை
ஆய்ந்துகாண்க.
நிரப்பாது கொடுக்கும் செல்வமும்
இலனே
இல்லென மறுக்குஞ் சிறுமையும்
இலனே
இறைபுறு விழுமந் தாங்கி அமரகத்து
இரும்புசுவைக் கொண்ட விழுப்புண்
நோய்தீர்த்து
மருந்துகொள் மரத்தின் வாள்வடு
மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன்,
கொடையெதிர்ந்து
ஈர்ந்தையோனே, பாண்பசிப் பகைஞன்,
இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவா யிரவல
யாந் தன் இரக்குங்காலைத் தான்எம்
உண்ணு மருங்கு காட்டித் தன்னூர்க்

கருங்கைக் கொல்லனை இரக்குந்
திருந்திலை நெடுவேல் வடித்திசின்
எனவே (புறம்).
வடிந்தயாக்கையன், ஈர்ந்தையோன்,
பாண்பசிப் பகைஞன், அவனை யாம்
இரக்குங்காலை, எம் மருங்கைக்காட்டி
வேலைவடித்துத் தா என்று தன்
ஊர்க்கொல்லனை அவன் இரக்கும்
எனக்கூட்டிக் காண்க. இடையறாது
தொடர்ந்துகொடுத்தற்குரிய பெரியசெல்வ
முடையனல்லனாயினும், இரந்தவர்க்கு
இல்லையென்னாது கொடுக்கும்
அருமையுடையவன்; அரசனுக்குற்ற
துன்பங்களைத் தான் தாங்கிக் கொண்டு
போர்க்களத்துட் புக்குப்படைக்கலங்களால்
1 598 திருக்குறட் குமரேச
வெண்பா.
உடல்முழுதும் புண்பட்டு மருந்துவாங்கிக்

கொள்ளப்பட்ட மரம் போல்
அமர்ந்திருந்தபொழுதும் வேலைத்திட்டி த்தா
பகைவரைப் பொருதுவலந்தேனும்
இரவலர்க்குதவுவேன் என்று வினைத்திட்பத்
துடன் இவன் சிறந்துநின்றான் என இவனை
வியந்து கூறி யிருத்தல் காண்க. ஊறுபடும்
வினைகளை ஒழித்து உற்றதற்கு ஒல்காத வனுய்
இவன் உயர்ந்திருந்த உண்மையை இதில்
வுணர்ந்துணர்க.

தேர்ந்த வினையைத் திருத்தமுறச்
செய்யுங்கால்
நேர்ந்ததுயர்க் கஞ்சாதே நில்.
தாங்கிய வினை தடையுறினும்
தளர்ந்துவிடலாகாதென்பது இதனால்
கூறப்பட்டது.

---

663 வென்றி இராவணிசெய்
வேள்வியிடைத் தோன்றியதால்

குன்றிநின்ற தென்னே
குமரேசா—என்றும்
கிடைக்கொட்கச் செய்தக்க தாண்மை
யிடைக்கொட்கின்
எற்றா விழுமந் தரும்.
(௯)

இ—ள்.
குமரேசா! இந்திரசித்துசெய்த வேள்வி இடையே புலப்பட்டதால் என் முடிவில்லாத துன்பமடைந்தான் எனின், கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை; இடைக் கொட்கின் எற்றா விழுமம் தரும் என்க.

இராவணி என்றது இந்திரசித்தை; இராவணனுடைய மகன் என்றவாறு; இது தத்திதாந்த நாமம். தானொருவனே நின்று வானவரோடு வானவரிறைவனையும் வென்று வந்தானாதலால் வென்றி என்னும் அடை அவனை ஒன்றி நின்றது. என்றும் என்றது படை அரண் பொருள்

முதலியவற்றால் வலிய ரான காலத்தும் என்றவாறு. அவ்வன்மையுற்ற விடத்தும் வினையை இடைதெரியும்படி விடலாகாதென்பதாம்.

இஃது, எடுத்த வினையை இன்னபடி முடிக்கவேண்டும் என் கின்றது. தம் காரியம் நன்கு முடிந்து கைகூடும் வரையும் அதனை வெளிக்காட்டாதே என்ன அங்ஙனங் காட்டிவிடின் 67-ம் அதிகாரம்

வினைத்திட்பம். 1599

ஆதலால் என்ன வந்துவிடுமென்பாரை நோக்கி இஃது இயம்பிய தாகக் காண்க.

கடைக் கொட்க = முடிவிலே வெளிப்பட; அஃதாவது செய் யப்படும் வினையை இடையே பிறர் அறிந்துவிடாதபடி மறைத்து

ளைத்து முடிவின்கண் புலப்படுமாறு.
செய்தக்கது = செய்வதே.
கொட்க என்னும் வினையெச்சம்
செய்தக்கது என்பதைக்
கொள்ளுகின்றது. கொட்குதல் = சுழலல்,
வெளிப்படல். இதில்
வந்துள்ள கொட்க, எற்று, என்னும்
இரண்டு பிரயோகங்கள்
பழந்தமிழ் நூல்களிலும் எளிதிற்
காணப்படுவன வல்ல.
கொட்கின் தரும் என்று
அச்சுறுத்தியது கொட்காவகை கூர்ந்து
செய்யவேண்டும் என்பது கருதி.
எற்று விழுமம் = இடை நீங்காத
துன்பம். எற்று என்பது
எற்றுதல் என்பதன் அடியாகப்பிறந்த எதிர்
மறைப் பெயரெச்சம். எற்றுதல் =
தள்ளுதல், நீக்கல். சீர்மை மேன்மைகளைக்
குறித்துவரும் விழுமம் என்னுஞ் சொல்

ஈண்டு இடும்பையை புணர்த்தி நின்றது.
வெயதுறு விழுமமோடு விம்மல் கூரெனவும்,
மிசைச்செலவசாஅ விழும வெந்நோய் எனவும்
பெருங்கதையில் நின்று இது தரும் பொருள்
காண்க. விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு
மிடும்பையும் என்றது தொல்காப்பியம்.

மேல், செய்யும் வினையில் இடையே
தளருறினும் தள்
ளாதே என்றார் ; பிறரால் தவறு
புகாவண்ணம் தற்காத்துக் கொள்ளுதற்கு
உரிய உபாயமொன்றை இதில்
உணர்த்துகின்றார்.

தான் செய்யுங் காரியம் முடிவில்
புலப்படும்வகை செய்வ
தே ஒருவனுக்கு ஆண்மையாம் ;
இடையே புலப்படுமாயின்
நீக்கமுடியாத துன்பத்தை அது கொ
டுத்துவிடும் என்பதாம்.

மொழி, செயல், குறி, குணங்களால்

பிறரெவரும் உணரா

வண்ணம் அடக்கமாகவைத்து வினையைச் செய்துமுடித்தல்

ஆண்மையுடையார்க்கே அமைவுமாதலால் அச்செயலையே ஆண்

மை என்றார். அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னும் ஆடூ

உக்குணம் நான்கனுள் இது நிறையுள் அடங்குதல் காண்க.



தான் எடுத்தவினையை இடையே பழுதுபடாதபடி பாதுகாத்து முடிப்பவனே ஆண்மையுடையவன் என்பது கருத்து.

அரசபாரத்தை ஆற்றி நிற்கும் அமைச்சர் தம் காரியத்தை இடையே புலப்படாவண்ணம் போற்றிச் செய்யாவிடின் பகைவரால் பல்வகை இடர்களை விளைத்து

முடிவுறுதபடி கெடுத்துவிடுவாதலால் இடைக்கொட்கின் எற்று விழுமம் தரும் என்றார்.

குறைத்தொழிலைக் குருக்களுக்கும் காட்டலாகாது என்னும் வினைஞர் வழக்கும் ஈண்டு நினைவுறத்தக்கது. இதிலுள்ள உம்மையினுண்மையை ஊன்றியுணர்க.

தான் குறித்த காரியம் நன்குமுடியும்வரையும் புறத்தே புலனாகாவண்ணம் இருத்தல் வேண்டும்; அங்ஙனமின்றி இடையே புலப்படவிடின் அதனால் பெருந்தீங்கு விளையுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இந்திரசித்துவால் உணரப்படும்.

## கதை.

இந்திரசித்து என்பவன் இலங்கையர் வேந்தனாகிய இராவணனுடைய அருமைப் புதல்வன். நல்ல போர்வீரன். வில்லாண்மையில் மிக மேன்மை பெற்றவன்.

வானுலகம் புகுந்து அமரரினைவரையும் அடக்கவென்று அமரர் கோனாகிய இந்திரனைப் பிணித்து வந்து இலங்கையில் சிறைவைத்தவன் ; அதனால் இந்திரசித்து என்று இவன் பெயர் பெற்றான். இந்திரசித்து என்றதற்கு இந்திரனை வென்றவன் என்பது பொருள். இவனது இயற்பெயர் மேகநாதன் என்பது. இராவணி எனவும் கூறப்படுவான். அறிவிலும் உருவிலும் ஆற்றலிலும் இவன் மிகச் சிறந்தவன். இவன் சிலையெடுத்து நின்றால் எவரும் இவன் முன் தலையெடுத்து நில்லார்.

இவனையின்றுணை யுடையபோர்
இராவண னென்னே
புவன மூன்றையும் வென்றதோர்
பொருளெனப்புகறல்
சிவனைநான்முகத் தொருவனைத்
திருநெடு மாலாம்

அவனையல்லவர் நிகர்ப்பவ ரென்பதும் அறிவோ. எனவும்

முக்கணோக்கினன் முதன்மகன் அறுவகை முகனும்

திக்குநோக்கிய புயங்களும் சிலகரந் தனையான். எனவும் 67-ம் அதிகாரம் வினைத்திட்பம். 1601

கம்பர் இவனை விரிந்து புகழ்ந்துள்ளார். முனைமுகத்திற் புகுந்து பகைவரை முடிய வெல்லுதல்போல் வினைமுகத்தினின்று அதனை இனிது முடித்தலிலும் இவன் வல்லுநன். இராமன் படையொடெழுந்து இலங்கையை வளைந்தபொழுது இலக்குவனையும் அவனுடனின்றவரையும் பலமுறை இவன் கலங்கச்செய்தான். நேர்வழியில் நின்று வெல்லமுடியாதென்று தெளிந்து இறுதியில் ஓர் வேள்வியை இயற்றத்

துணிந்தான். அதுமுடிந்த பின் இவனை வெல்ல எவராலும் முடியாது. அத்தகைய அரிய வேள்வியை இலங்கையின் தென்கீழ்த் திசையிலுள்ள நிகும்பலை என்னும் இடத்திலிருந்து இவன் முடிக்கத்துணிந்து அதற்கு வேண்டிய உபகரணங்களையெல்லாம் தொகுத்துக்கொண்டு தொடங்கினன். பகைவருக்குத் தெரியாவண்ணம் முன்னதாக நன்கு பாதுகாத்துக்கொள்ளாமல் தான் கருதியவினையில் இவன் கண்ணூன்றி நின்றான். இங்ஙனஞ் செய்துவருங்கால் சில இங்கிதங்களால் அறிந்து அனுமான் முதலிய வீரர்பலரும் வந்து இடையே வளைந்துகொண்டு செய்யவொட்டாதபடி இவனை நிலைகுலைத்து அவ்வேள்வியையுஞ் சிதைத்தழித்தார்.

மானமும் பாழ்பட வகுத்த வேள்வியின்
மோனமும் பாழ்பட முடிவிலா

முாட

சேனையும் பாழ்படச் சிறந்த மந்திரத்

தேனையும் பாழ்பட இனைய செப்பினன்.

தொடங்கிய வேள்வியின் தூம வெங்கனல்

அடங்கிடா தவிந்துள தமையு மாமன்றே

இடங்கொடு வெஞ்செரு வென்றி யின்றெனக்

கடங்கிய தென்பதற்

கேதுவாகுமால். என உள்ளுற நொந்து இவன் உளைந்தெழுந்தான். பின்பு உடன்று பொருது ஒழிந்துபோனான். முன்னியவேள்வி கடைபோக முடிந்திருப் பின் நம் மன்னன் மகனுக்கு இவ் இன்னல் வந்திராதே என்று அரக்கரனைவரும் இரங்கியேங்கினர். செய்தவினை இடையே புலப்பட்டதனல் அல்லலும் பழியும்

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாந்
சொல்லிய வண்ணஞ் செயல்.
(௪)

இ-ள்.

குமரேசா! சகன்மாவும், அக்கனும், மன்னர்முன் நின்று வென்று விடுவதாகச் சொல்லினர்; பின் என் அவர் சொல்லிய படியே செய்யாது தொலைந்தார் எனின், சொல்லுதல் யார்க்கும் எளிய; சொல்லிய வண்ணம் செயல் யார்க்கும் அரியவாம் என்க. யார்க்கும் என்பது பின்னும் கூட்டப்பட்டது.

இது, சொல்லுகின்றவனினும் சொன்னபடி செய்கின்ற வினை சிறந்தவன் என்கின்றது.

அன்று என்றது பாரதப்போரின் பன்னிரண்டாம் நாளினையும் அனுமான் இலங்கைபுகுந்த அமையத்தையும் என்க.

தாம் வினைமேல் செல்லுதற்கு
முன்னதாக எல்லாரும் விய
ந்து கொள்ளுமாறு அவையில் நின்று தம்
வல்லமைதோன்றச்
சொல்லினர் ஆகலால், முன் நன்று
சொன்னார் என்றும். நின்று
கொண்டு என்றது வினைமேற் சென்று
கொள்ளாமையை விளக்கி
நின்றது.

யார்க்கும் = யாவர்க்கும்;
மனத்திட்பம் இல்லாதவர்க்கும்
என்றவாறு. உம்மை இழிவு சிறப்பு.

சொல்லுதல் எளிய; செயல் அரிய;
எனஇயைத்துக்காண்க.
சொல்லுதல், செயல் என்பன ஒருமையாய்
நிற்பினும் எளிய,
அரிய என்னும் பலவின்பால்
முற்றுக்களுக்கு இயைய அவற்

றைப் பன்மையாக்கிக்கொள்க.
இங்ஙனம் வருவது சாதி
67-ம் அதிகாரம்
வினைத்திட்பம். 1 603 யொருமை
என்க. இருந்த இடத்தில் இருந்து
கொண்டே ஒரு காரியத்தைக் குறித்து
ஆரவாரத்தோடு பிறர் வியக்குமாறு முடித்து
விடுவதாகச் சொல்லிய ஒருவன் பின்பு
ஏதோ சிறிது ஒப்புக்குச் செய்யவுங்கூடும்;
ஆயினும் அருமையாக அதுமதிக்கப்
படாதென்பார் சொல்லிய வண்ணம் என்றார்.
மேல், அடக்கமாகவைத்தே வினையை
முடிக்க வேண்டும் என்றார்; அங்ஙனம்
அடக்கமின்றிச் சொல்லுதல் இழிக்கப்படும்
என்று இதில் உணர்த்தியருளினர்.
இவ்வினையை இன்னபடி
செய்து முடிப்பேம் என இனிது நச்
சொல்லுதல் யாவர்க்கும் எளியனவாம்; தாம்

சொல்லியபடி அதனைச் செய்துமுடித்தல் யாவர்க்கும் அரியனவாம் என்பதாம்.

சொல்லுதல் எளிய என்று இழித்துக் காட்டினார் அரிய தைச் செய்து எல்லாரும் பெரியராதல் வேண்டும் என்பது கருதி.

சொல்லுதல் வல்லார் உலகத்தில் உயர்ந்தவரெனவும், அவரைக்காணின் ஞாலம் விரைந்து தொழில் கேட்கும் எனவும், அஃது எல்லார்க்கும் எளிதில் அமையாது எனவும் கூறி ஈண்டு அச் சொல்லுதல் யார்க்கும் எளிய என்றது ஒல்லுமோ எனின், ஒல்லும்; என்னை? அது, அறிவோடு கலந்து முறைபிறழாது எவரையும் தன் வசஞ்செய்யும் பொருளுரை எனவும், இது பயனற்ற பிதற்றுரை எனவும் வேறுபாடுண்மையான் மாறுபாடு இன்மை யறிக.

ஒரு தொழிலைக்குறித்து விரித் துச் சொல்லுகின்றவனினும் அதனை இனிதாகச்செய்து முடிப்பவனே

சிறந்தவனுவன் என்பது குறிப்பு.

கலைகடற்படை யுடனிரைக்
கணங்கவர்ந் தவரை
முனைபடப்பொரு திமைக்குமுன்
முதுகுகண் டிடுவேன்

என்று முன்பு நிமிர்ந்து சொல்லிய உத்தரன் பின்பு முதுகுகாட்டி ஓடியதுபோல், நிலையிலிருந்துகொண்டு பிறர் வியக்கும்படி பல படச் சொல்லும் வல்வாயர்கள் இவ்வுலகில் பலருளராதலால் அவரை வினைத் திட்பமுடையாராக மதித்து அரசர் அணைத்துக்

201



வெண்பா.

கொள்ளலாகாது என இயலோடு பொருந்த இதனை இணைத்துக்கொள்க.

செயலின் மேன்மையை உணர்த்தற்குச் சொல்லே இணைத் துக் காட்டியது அஃது அதன் இனமாதலான் என்க.

சொல்லலாம் இருந்துழிச் சொன்ன சொற்படி

வெல்லலாம் என்பது விதிக்குங் கூடுமோ ? இது, கன் ணனைக்குறித்து அசுவத்தாமன் இளித்துச் சொ ல்லியதா க வில்லி சொல்லியது: அடிகளது அடியை இது படியொற்றியுள்ளமை காண்க.

திருந்தமுற வினையைச்செய்து முடிக்கமாட்டாதவரும் பொ ருந்தமுறப் பல சொல்லுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுசன்மனிடமும், அக்கன்பாலும் உணரப்படும்.

கதை.

சுசன்மன் என்பவன் தி ரிகர்த்தம் என்னும் தேசத்துக்கு அதிபதியாகிய சுதன்வனுடைய புதல்வன். இத்தேசம்

இமயத் திற்கும் விந்தமலைக்கும் இடையேயுள்ளது. அதில் பதுமைபுரி என்னும் நகரிலிருந்து இவன் அரசுபுரிந்தான். இவனது காலம் இற்றைக்கு ஐயாயிரத்தைம்பது ஆண்டுகட்கு முன்னராம். இவன் நல்ல அழகுடையவன். பொருள்படைகளிற் சிறந்தவன். உறுதி மொழி கூறி எவரையும் ஊக்க வல்லவன். பாண்டவர்கட்கும் கௌரவர்கட்கும் அமர் மூண்டபொழுது, துரியோதனனுக்கு இவன் துணைபுரிந்து நின்றான். பதினோராம்நாட் போரில் தன் மகனாகிய இலக்கணகுமாரனை அருச்சுனன் குமாரனாகிய அபிமன் என்பான் பிடித்துச் சிறிதுபொழுது தேரில் கட்டிவைத்திருந்து பின்பு ஓடிப்போ என்று மீளவிட்டான்; அதனை நினைந்து வருந்தி அதற் குப் பதிலாகத் தருமனைப் பிடித்துக் கட்டிவிடவேண்டும் என்று துரியோதனன் கருதித்

துரோணரிடம் துயரோடு மொழிந்தான்

பெற்றோன் தனிழுஞ் சதமடக்கு வலியோன் வீமன் பின்னிற்கப்

பொற்றோன் விசயன் முன் னிற்கப் பொரும்போர் முனையிற் போருதவி

யற்றோர் போல வில்வலியால் அறத்தோன் தன்னை யகப்படுத்தல்

மற்றோர் பிறப்பிற் றெரியாதிப் பிறப்பின் முடிக்க மாட்டேமால்.

67-ம் அதிகாரம் வினைத்திட்பம். 1

605

என்று அம்மறையவருரைத்தார்.

எப்படியும் அவனைப்பிடித்துக்கன் கருத்தைமுடித்தே விடவேண்டும்; இன்றேல் யான் முடிந்தே போவன் என்று அவ்வணங்காமுடியோன் மீட்டும் வற்புறுத்தி மொழிந்தான்.

தம் முன்னவனைப் பாதுகாத்துக் கொண்டு முன்னும் பின்
னும் நிற்கும் விசயனையும் வீமனையும் சற்று நோம் இட்டவா
வொட்டாதபடி கடுத்துத்கருணையாயின் தருமனையான் பிடித்துத்
தருகின்றேன் என்று அவ் வில்வீரா் மிக விநயமாக மொழிந்தார்..
அதன்பின் அருகிலிருந்த படைத்தலைவர்களை நோக்கி அதனைச்
செய்து தரும்படி வேண்டினான். அது பொழுது அங்கிருந்த
சுசன்மா என்னும் இவன் தன்படைவலிகொண்டு தானே அதனை
முடித்துத் தருவதாக அவையோா் வரும் வியப்புறச் சூளுரை
கள் பல சொல்லினான். தன்படைகளோடு நின்று அன்று இவன்

ஆணையிட்டுச் சொல்லிய உறுதி மொழிகள் என்றும் நினைவுறத்
தக்கன; ஆதலால் அவற்றை மீண்டுக் கொண்டுவந்து தருகின்
றேம்; உங்கள் நெஞ்சில் குறித்துவைத்துக் கொள்ளுங்கள்.

அருளை வடிவு கொண்டனை யோன் அருகங் கமரில் அணுகாமல்
உருளை ரிரதத் தருச்சுனனை யொருநாள் முழுதுந் தகைந்திலமேல்
மருளை கொண்டு குடிவருந்த மனுநூல் குன்றி வழக்கழியப்
பொருளை வெஃகும் அரசரைப்போற் புகுவேம்யாமு நரகென்றார். (1)

மறனிற் சிறந்த புயவலியால் வரைபோன் றனிலன் மைந்தனெனப்
புறநிற் பானைத் தம்முனிடைப் போகா வண்ணந் தகைந்திலமேல்

அறனிற் கொண்ட தன்மனையாள் அமளித்
தலத்தின் அழுதிரங்கப்
பிறனிற் றேடும் பெரும்பாவி பெறும்பே
றெமக்கும் பேறென்றார். (2)
கன்றால் விளவின் கனியுதிர்த்தோன் கடவுந்
திண்டே ரவனுக
வன்றாட் டடக்கை மாருதியேயாக அமரின்
மறித்திலமேல்
என்று நாளை முனிபோரின் எந்நன்றியினுஞ்
செய்ந்நன்றி
கொன்றார் தமக்குக் குருகுலத்தார் கோவேயாமுங்
கூட்டென்றார். (3) இங்ஙனஞ்சொல்லி
யெழுந்தும் மறுநாட்போரில் யாதும் செய்ய
மாட்டாமல் எல்லாரும் மறுகி மீண்டார்.
உண்மையில் இவன்
வீரமும் மானமும் உடையவனாதலால்
தான் சொல்லியபடி
செய்யவில்லையே என்று துன்பமிக்கூர்ந்தான்.

குமரேச வெண்பா.
ணஞ் செயல் யார்க்கும் அரியவாம் என்பதை இவன் அன்று அறி ந்துணர்த்தினான். வி ரிவைப் பாரதத்தில் காண்க.

கதை 2.

அக்கன் என்பவன் இராவணனுடைய இளையபுதல்வன்; இந்திர சித்துக்கும் அதிகாயனுக்கும் தம்பியாவன்; மற்போரிலும் விற் போரிலும் இவன் மிகவும் வல்லவனாயினும் வலியறிதல் காலமறி தல் இடனறிதல் முதலிய அரசர்க்கு வேண்டிய அறிவு நிலைகளைச் சிறிதும் கருதாதவன். அனுமான் இலங்கையில் புகுந்து அசோ கவனத்தையழித்து சம்புமாலி முதலிய அரக்கர் பலரையும் கொன்று கலக்கிநின்ற பொழுது அவனைப்பிடித்து வருவதாக இராவணன் முன்னின்று பலபட இவன் தொடுத்துச் சொல்லினான். கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத் துருவுகொண்டு

கய்தவ மியற்றியீண்டோர் சிறுபழி யிழைக்குங் கற்பால்
எய்தினன் இமையா முக்கண் ஈசனே யென்றபோதும்
நொய்தினின் வென்று பற்றித் தருகுவெ னொடியினுன்பால்
துண்டத் தூணதனிற் றோன் றுங் கோளரி சுடர்வெண்கோட்டு
மண்டொத்த நிமிரான் கேழலாயினும் மலைதலாற்று
தண்டத்தைக் கடந்து பொங்கி யப்புறத்தகலி னென்பால்
தண்டத்தை யிடுதியன்றே நின்வயிற்றந் தேலெனல்.
இங்ஙனம் அவையினின் றுவரிசைபடச் சொல்லினானே யன்றி அங்குப்போய் யாதும் செய்யமுடியாமல் அயர்ந்து விழித்தான். வில்லிழந்தும் வாளிழந்தும் வேலிழந்தும் வென்றவனைத்தருவலெ . ன்னும்,

சொல்லிழந்தும், வலியிழந்தும அயருழந்தே நின்று பின்பு தொலைந்தான் எனறபடி அனுமான் முன்பு வந்து தொல்லைப்பட்டுத் துஞ்சிவீழ்ந்தான். ஈசனையும் வெல்வனென்று கூசாமல் சொல் லிவந்த இவன் யாதும் செய்யமாட்டாமல் ஒரு குரங்கால் குன்றிப் போனனேயென்று அனைவரும் அன்று குறித்துரையாடினர்.

சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லியவண்ணஞ் செயல்;
என்னும்உண்மையை உலகமறிய இவன் உணர்த்தி நின்றான்

புல்லியருஞ் சோல்வார் புகன்றபடி செய்தவரோ
வல்லுநராய் மாண்பெய்து வார்.

சொல்லுதலினும் செய்தலே சிறந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

---

67-ம் அதிகாரம்

வினைத்திட்பம். 1607

665 வீண்டுபுகழ் நாகனுயர் மாண்வினையை

எனுள்ளில்

கொண்டுவந்தார் மற்றோர்

குமரேசா—தண்டாமல்

வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம்

வேந்தன்கண்

ஊறெய்தி உள்ளப் படும்.

(ரு)

இ—ள்.

குமரேசா! நாகனது வினைமாட்சியை எல்லாரும் தன் உள்ளில் நின்று உவந்து போற்றினார் எனின், வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம், வேந்தன்கண் ஊறெய்தி உள்ளப்படும் என்க.

தன் கீர்த்தி எங்கும் நிறைந்து

நிற்குமாறு சிறந்து நின்றான் ஆதலால் மண்டுபுகழ் என்னும் அடை அவன் பெயர்முன் வந்து நின்றது. அறிவும் ஆண்மையும் உடையனாய் நின்று அரியவினைகளை ஆற்றித் தன் அரசனுக்கு உயரிய நலங்களை உளவாக்கினமையை நினைந்து அனைவரும் உவந்து போற்றினர் ஆதலான் உயர்மாண்வினைப மற்றோர் உள்ளங்கொண்டு உவந்தார் என்றும். இது, வினைத்திட்பமுடையாரை எவரும் வியந்து போற்றுவர் என்கின்றது. திட்பம், உள்ளப்படும் எனச் சேர்த்துக்காண்க.

வீறு = சிறப்பு, மேன்மை, உயர்ச்சி, நன்மை. வீறெய்தி என்றது உள்ளத்தால் பிறரெவரினும் உயர்வெய்தி என்றவாறு. இது, தலைமக்கட்கன்றி எவர்க்கும் எளிதில்லையாது. வீறியலமைச்சன் எனப் பெருங்கதையினும், வீறுடை இளைஞர்

னச்சிந்தா மணியினும், இது நின்றுணர்த்தும் பொருளையுணர்க.

மாண்டார் — மாட்சிமைப் பட்டார்; ஆண்மை அமைதி முதலிய குணங்களால் சிறந்தவர் என்க.

வேந்தன்கண் — உறுஎய்தி — அரசன்பால் உறுதலை எய்தலான். எய்தி என்னும் எச்சம் இதில் ஏதுப் பொருளதாய் நின்றது.

மனமாட்சியும், மதிமாட்சியும் உடைமையாது வினைமாட்சியால் தகைமையுடைய அரசனுக்கு எல்லாமாட்சிகளும் உளவாம் ஆதலால் அவர் மாட்சி என்றும் மறக்கப்படாமல் எவராலும் மதிக்கப்படும் என்பார் மாண்டார் திட்பம் உள்ளப்படும் என்றார்.

வெண்பா.

மேல், தான் செப்பியபடியே வினையைத் தப்பாது முடிக்கும் திட்பமுடையானை இவ்வுலகிற் சிறந்தவனுவன் என்றார்; இதில், அத்தகையோனை எல்லாரும் நன்கு மதித்துப் போற்றுவர் என்கின்றார்.

மேன்மையெய்தி மாட்சிமைப் பட்டாரது வினைத்திட்பம், அரசன்கண் உறுதலை எய்தலான் எல்லாராலும் நன்கு மதித்துப் போற்றப்படும் என்பதாம்.

சிறந்த வினையாளனை உலகத்தார் என்றும் உவந்து போற்றுவர் என்பது கருத்து.

பெருந்தன்மைவாய்ந்த உயர்ந்த வினையாளனை அரசன் உடையனாயின் எதிர்த்த இடையூறுகள்யாவும் நீங்க எல்லா

நலங்களையும் அவன் அடைவன்; அவ் அடைவைநோக்கி உடையான்முதலாக அனைவரும் அவனை நினைந்து புகழ்வர் என்றவாறு. இதனால் வினைத்திட்பத்தின் நிலைமையும் அதனையுடையானது தன்மையும் விளங்கி நிற்றல் காண்க.

அங்கார தாரை குடர்மாலைசூடி யலைவேலைதாவி யடையார்

தங்காரணங்கள் பொடியாகநூறி வருசம்பு மாலி முதலோர்.

பொங்கார வார மொடுநேர் பொருந்த வவர்சேனை யானைபரிதேர்

சங்கார மாடும் அநுமானையொக்கு மவரார் சகத்திலினியே (1)

வளையோடுருத்தி ரணமீதெடுத்த வயவாளரக்கன் மகனைத்

தரையோடரைத்து நகாதி மடுத்து வருசேனையைச் சலதியில்

திரையோடமுக்கி யொருதாவிலத்தி

வடதிரமுற்ற திசைமேல்

உரையோடு வெற்றி யநுமானை யொக்கு முரவோர் சகத்திலுளரோ. (2)

இவனு லருக்கன் மகனோடெமக்கு மினிதாய நட்பு மியல்பும்

இவனு லளப்பில் பெருநீரடைத்த தினையா வயத்தநுமானும்

இவனால் அரக்கர் பொருசேனையிற்சென் றிடையூறகற்றியவெலாம்

இவனால் அரக்கர் குலம் வேரறுத்த தினியா னுரைப்பதெவனோ. (3)

என அனுமானது வினைத்திட்பத்தால் எய்திய மேன்மைகளை நினைந்து இராமன் முதலிய அனைவராலும் அவன் வியந்து பாராட்டப்பட்டதுபோல் வினைத்திட்பமுடையார் என்றும் எவராலும் நினைந்து போற்றப்படுவர் என்க.

67-ம் அதிகாரம் வினைத்திட்பம்.

வினைத்திட்பத்தைத் தன் உள்ளத்திலுடையவன் உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உள்ளவனாவான் என்று வினைத்திறத்தின் உண்மையை மக்கள் உணர்ந்து கொள்ளுமாறு இதனை கடுநாயகமாக அடிகள் உள்ளிவைத்த வுண்மையை இதில் ஊன்றியுணர்க.

சிறந்த வினைத்திட்பமுடையானை எல்லாரும் புகழ்ந்து போற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாகன் பால் உணரப்படும்.

## கதை.

நாகன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே நாலைஎன்னும் ஊரிலேயிருந்தவன். இவன் மறவர் மரபினன். பெருங்கொடையாளன். வில்

வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் இவன் மிகச் சிறந்தவன். யார்க்கும் அஞ்சாதவனாயினும் அருளமைந்த நெஞ்சினன். தன்னோடு ஒருவன் சிறிது பழகினும் அவனோடு பெரிதும் உறவினனாய்ப் பேருதவி புரிந்தவன். ஒருநன்றி செய்தாரை உள்ளத்தே வைத்துப் பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர் என்னும் ஆன்றவுரைக்கு இவன் சான்றாய் நின்றவன். எதையும் நூனித்துத் தெளியும் மதித்திறத்தோடு எடுத்த வினையை இனிது முடிக்கும் மனத்திடமுமுடையனாய் இவன் விளங்கி வந்தான். மதுரையிலிருந்து அரசுபுரிந்த வீரவழுதி என்னும் பாண்டியன் இவனைத்தனக்குப் படைத்துணைவனாக அமைத்துக் கொண்டான். அமைந்து நின்று பலவகையினும் அம்மன்னனுக்கு இவன் உதவி செய்துவந்தான். மறுபுல மன்னர்பலர் திரண்டு தன் ஆட்சிக்கு இடர்

விளைத்தபொழுது இவன் மிக்க
சூழ்ச்சியோடு சென்று அவ ரனைவரையும்
தொலைத்து அரசை நிலைநிறுத்தினான்.
படைமுகத் தில் திண்மைமிக்க
போர்வீரனாகவும், கொடைமுகத்தில் தண்மை
மிக்க பெருவள்ளலாகவும், உறவுசூழ்வதில்
உண்மைமிக்க மதி மந்திரியாகவும் விளங்கி
இவன் உதவிவந்தானாதலால் புகழ் முதலிய
உயர்நலங்கள் யாவும் அம்மன்னன்பால்
உற்று நின்றன. வினையாண்மைமிக்க
இவனால் தனக்குண்டான மேன்மைகளை
வியந்து அவ்வேந்தன் இவனுக்கு வேண்டிய
சிறப்புக்களைச் செய் தான். இவனது
வினைமாட்சியை நினைந்து அனைவரும் புகழ்ந்
1610 திருக்குறட் குமரேச
வெண்பா.

தார். வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம்
வே ந்தன்கண் ஊறெ ய்தி உள்ளப்படும்

என்னும் உண்மைக்கு இவன் முதலில் உள்ள நின்றான். வடநெடுந் தத்தனார் என்னும் புலவரொருவர் இவனைக் குறித்து ஒருபாடல் பாடியுள்ளார்; அதனை இதனடியில் காட்டுதும் அதன் பொருளை ஆய்ந்து காண்க.

ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென
ஏலாது கவிழ்ந்தவென் இரவன்மண்டை
மலர்ப்போர் யாரென வினவலின்
மலைந்தோர்

விசிபிணி முரசமொடு மண்பல தந்த
திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்
படைவேண்டுவழி வாளுதவியும்
வினைவேண்டுவழி அறிவுதவியும்
வேண்டுப வேண்டுப வேந்தன் றேஎத்
தசைநுகம் படாஅ ஆண்டகை

யுள்ளத்துத்

தோலா நல்லிசை நாலை கிழவன்
பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்
திருந்துவேல் நாகற் கூறினர் பலரே.

(தத்தனார்).

இரவல் மண்டை = இரத் தலையுடைய பாத்திரம்; பரிசிலேற் கும் கலமாகப் பாணர்கள் கொண்டிருந்ததனை மண்டை என்பது பண்டை வழக்கு. திரு வீழ் நுண் பூண் பாண்டியன் = திருமகள் விரும்பிய நுண்ணிய தொழில் பொருந்திய அணிகளையுடைய பாண்டியமன்னன். வீழ்தல் = விரும்புதல். கொடுப்போர்இன்மை யால் கவிழ்ந்த என் இரப்புக் கலத்தை இட்டு மலர்த்தவல்லார்யார் ? என யான் வினவிய பொழு து பாண்டியன் மறவன், நாலைகிழவன்
நாகன் எனப் பலர் கூறினர் என்று கூட்டிக் காண்க. தான் பூண்ட நுகம் தளராமல் ஈர்த்துய்க்கும் பகடுபோல வேண்டுவன வெல்லாம் அரசனிடத்து உதவி வீறெய்தி மாண்ட வினைத்திட்ப முடையனாய் இவன் விளங்கி நின்றதும்,

இவனது நல்லிசையை உலகம் உள்ளி
உவத்தலும், மேற்குறித்த பிறவும் இதனுள்
ஒளிர்

தல் காண்க.

நல்ல வினையாளன் எல்லாராலும்
நன்கு மதிக்கப்படுவான்
என்பது இதனால் கூறப்பட்டது.

---

67-ம் அதிகாரம்

வினைத்திட்பம். 1611 666

வென்றிமிகு சிங்கமுகன் வேண்டிநின்ற
வெல்லாம்பின்

குன்றுமே தன் கொண்டான்
குமரேசா—நன்றாக

எண்ணிய எண்ணியாங் கெய்துப
எண்ணியார்

திண்ணிய ராகப் பெறின்.

(க)

இ—ள்.

குமரேசா! தான்
எய்தவேண்டுமென்று முன் எண்ணிய
பொருள்களெல்லாவற்றையும் சிங்கமுகன்
எண்ணியவாறே ஏன் எய்தினான் எனின்,
எண்ணியார் திண்ணியராகப் பெறின்,
எண்ணிய எண்ணியாங்கு எய்துப என்க.
இது, வினைத்திட்பமுடையவனுக்கு
நினைத்தவை யாவுங் கைகூடும் என்கின்றது.

திசைகள்தோறுஞ் சென்று அரக்கர்
அமரர் முதலிய அனைவரையும் வென்று
இசைமிகுத்து வந்தானாதலால் வென்றிமிகு
என்றும். வேண்டிநின்ற எல்லாம் குன்றாது
கொண்டான் என்றது
தானெய்தவேண்டுமென்று முன் எண்ணி
நின்ற எல்லாவற்றையும் குறைவற எய்தினான்
என்றவாறு.

பெறின் எய்துப என்றதனால் பெறார்
தாயிற்று.
எய்தார் என்ப

எண்ணிய என்றது தாம் எய்தவேண்டும் என்று எண்ணிய பொருள்களை. எண்ணிய ஆங்கு என்பது எண்ணியாங்கு என நின்றது. எண்ணியபடியே என்றவாறு. எய்துப = பெறுவர்.

எண்ணிய பொருள்கள் யாவும் ஒருவன் எண்ணியாங்கு எய்த வேண்டுமாயின், அவன் என் செய்யவேண்டுமென்பாரை நோக்கி யிஃது இயம்பியதென்க.

மேல், வினைத்திட்பமுடையவன் எல்லாராலும் வியந்து போற்றப்படுவன் என்றார்; இதில் அவன் விரும்பியன யாவும் ஒருங்கே பெறுவன் என்றார்.

எண்ணியவர் திண்மையுடையாராயின், தாம் எய்த எண்ணிய பொருள்கள் எல்லாவற்றையும் எண்ணியவாறே எய்துவர் என்பதாம்.

தமக்கு எய்தவேண்டுமென்று எண்ணிய உயர்வினை எண்ணியபடியே திண்ணியராய்

நின்று விசுவாமித்திரர் எய்தியதுபோல்

202



வெண்பா,

வினையை ஆற்றுதற்குரியவன் உறுதி
புடையனுயின் அவன் கருதியனவெல்லாம்
எளிதிற் கைகூடும் என்பார்
திண்ணியராகப்பெறின் எண்ணிய
எண்ணியாங்கு எய்துப என்றார்.

திண்ணியனாய் நின்று
வினைசெய்யாதவனுக்கு எண்ணிய எதுவும்
கைகூடாதாதலால் இவ்வுண்மையை
உணர்ந்து மக்கள் உறுதியோடு தொழிலில்
முயலவேண்டுமென்பது குறிப்பு.

வினைசெய்வதில் திண்மையுடையவன்
எண்ணிய எல்லாவற்றையும் எளிதில்
எய்துவான் என்பது இதில்
உணர்த்தப்பட்டது,'' இவ்வுண்மை
சிங்கமுகன்பால் உணரப்படும்.

## கதை.

சிங்கமுகன் என்பவன் அசுரகுல திலகனாகிய சூரபன்மனுடைய அருமைத் தம்பி. தாரகனுக்கு மூத்தவன். அறிவிலும் ஆண்மையிலும் இவன் மிகச் சிறந்தவன். பொருகளத்திற் புகுந்தவரைப் புறம்போகா வகைசெய்யும் போர்வல்லாளன் என்று போர்வீரர்களால் இவன் போற்றப்பட்டவன். இவன் ஆயிரந் தலைகளும் இரண்டாயிரம் கைகளும் உடையவன் எனப் புராணம் கூறும்; அதில் ஐயுறவு தோன்றின் அஃது இவனது ஆற்றலின் ஏற்றத்தை நோக்கிச் சாற்றியதென்று தேற்றிக் கொள்க. குறித்த எதையும் குறித்தபடியே முடிக்கவல்ல இவன் பருவமெய்தியபின் இவ்வுலகிலுள்ளவரெவரினும் உயர்ந்து விளங்கவேண்டுமென்று எண்ணினான். அதற்கு உபாயம் யாதெனத் தன் துணைவ

பிருவரோடும் உசாவினன். அங்ஙனம் உசாவுங்கால்

அளப்பரும் விஞ்சையே யன்றி மேன்மையும்
உளப்படு தன்மையும் உயர்ந்த கீர்த்தியும்
கொளப்படு கொற்றமும் பிறவுங் கூட்டலால்
வளத்தினிற் சிறந்தது மற்றொன் றில்லையே. என்று தன் தாயாகிய மாயை சாற்றினாள். செல்வமே எல்லாவற்றையும் நல்குமென்று தெளிந்து அதனை எய்த விழைந்து ஆலவனம் என்னும் ஓர் இடத்தையடைந்து அரிய வேள்வியொன்றைத் துணைவரோடு தங்கி ஆற்றி நின்றான். ஆண்டுகள் பதினாயிரங் கழிந்தும் தாம் எண்ணியபடி கண்ணுதற் பரமன்

யால் அண்ணனாகிய சூரான் ஆனவரையும் பார்த்துமுடிவில் வேள்
விக் குண்டத்திடை நாட்டியிருந்த வச்சிரகம்பத்தில் பாய்ந்து மாய்ந்து போயினான். அவன் ஒழிந்து போனதைக்கண்டும் இவன் உள்ளந் தளராமல் நின்று உள்ளியதை எய்திவிடவேண்டுமென்று மேலும் ஊக்கி முயன்றான். முயன்றும் முன்னவன் வந்திலனாதலால் தன் தலைகளையறுத்து வேள்வித்தழலிடையிட்டுத் தளராது ஆற்றினான். இவனது வினைத்திண்மையை வியந்து பரமன் தோன்றி உனக்கு வேண்டியது யாதென இவன் முன் விருப்பி நிற்ப முன் முடிந்துபோன தன் முன்னவன் முதலில் எழுந்து வரும்படி இவன் நுதலிவேண்டினான். அங்ஙனமே

இறைவனருளால் அவன் எழுந்து வந்தான். அதன்பின் தான் எண்ணிய படியே எல்லாவற்றையும் எய்தி ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் தன் அண்ணன் தலைவனுகி நிலவ உலகமுழுவதையும் வென்று வடகடலிடையே ஆசுரபுரி என்னும் ஓர் அழகிய நகரை அமைத்து அதிலிருந்து இவன் அரசுபுரிந்தான். மஹேவஸி என்னும் தனதினிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அதிசூரன் முதலிய புதல்வர்களைப் பெற்று இவன் புகழ்பெற்று வாழ்ந்தான். அனைவருக்கும் அரசனுகி அரிய நலங்கள் யாவும்
அடைந்திருக்கவேண்டுமென்று தான் எண்ணியபடியே திண்ணியனாய் நின்று முயன்று அவற்றை எய்தினுன் ஆதலால் எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார் திண்ணியராகப் பெறின் என்னும் உண்மையை உலகம் இவன்பால்

உணர்ந்து தெளிந்தது. விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

வினைத்திண்மை புடையார்க்கு நினைத்தனவெல்லாம் கைகூடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

667 எள்ளவந்த வாமனரும் இவ்வுலகை ஓரடியுட்

கொள்ளநின்றார் என்னே குமரேசா—கொள்ளும்

உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்

கச்சாணி யன்னா ருடைத்து. (எ)

இ-ள்.

குமரேசா ! குறுகிய வடிவினராய

·உருவுகண்டு எள்ளாமை வேண்டும் =
வடிவின் சிறுமையை நோக்கி எவரையும்
இகழ்தலை ஒழிக. காண்டலே எள்ளலுக்குக்
காரணமாகுமாதலால் அவ் இயைபுதோன்ற

அது முதலில் நின்
றது. நிலத்தேர்க்கு
கவலையில்லையாதலால்

அச்சாணியில்லையாயினும் அதனால் யாதும்
அதனை விளக்குதற்கு உருள்தேர் என்றார்.
உருள்தேர் என்னும் வினைத்தொகைக்கு
இடையே நின்ற பண்புச்சொல் அத்தேரின்
பெருமையை விளக்கி நின்றது. அச்சு
என்றது தேருக்கு ஆதாரமாய் உருளைகளைக்
கோத்து நிற்கும் மரம்; இஃது இரும்பானும்
செய்யப்படும். உருள் = சக்கரம். ஆணி
என்றது சக்கரங்கள் கழலாதபடி அச்சின்

கோடிகளில் செருகப்பட்டு நிற்பது.
உருவாணி எனவும் இஃதுரைக்கப்படும்.
இக்காலத்தார் இதனைச் சாவி என்பர்.
மேல், எண்ணியன யாவும்
திண் ணியார்க்கு எய்துமென்றார்;
அத்திண்மையுடையார் உருவத்தில்
சிறியராயிருத்தலும் கூடுமாத
லால் அவரை உய்த்துணர் ந்து போற்றுக
என்று இதில் உணர்த்து கின்றார்.
உருள்கின்ற பெரிய தேர்க்கு
அச்சின்கண் ஆணிபோல்
வாரை இவ்வுலகம் உடையது ஆதலால்,
வடிவின் சிறுமையை
நோக்கி எவரையும் இகழுதலாகாது
என்பதாம்.
வினைத்திறத்தின் பெருமையைக்
கொண்டு ஒருவனை மதித் தல்

கொள்ளவேண்டுமேயன்றி உருவின் சிறுமையைக் கண்டு

67-ம்

அதிகாரம் வினைத்திட்பம். 1615

அவமதித்துவிடலாகாது என்றவாறு.

உடலின் சிறுமைகண்டு ஒண்புலவர் கல்விக் கடலின்பெருமை கடவார் என்றதுங்காண்க.

மனத்திட்பமுடையவனுக்கு அச்சாணியை ஒப்பாக வைத்தது எற்றுக்கெனின்? உருவத்தால் சிறியதாயிருந்தும் பெரிய தேரைப் பிறழாதவாறு தாங்கி நடத்தும் அதன் தன்மை நோக்கி என்க.

மன்ற லின்குழு நிறைதலாற் றாழ்ந்தது வடபெருந்திசையாவும்
நின்ற தெக்கணம் வானுற வுயர்ந்தது நெளிந்தன னாகேசன்
தென்றிசைக்கடல் வடதிசைக் கெழுந்தது

திகைத்தது வடமேரு மென்றளிர்க்காம்
விதிர்த்தனள் பார்மகள்
வெருவினவுலகெல்லாம். என்றவாறு பரமன்
திருமணம் இமையமலையில் நிகழுங்காலத்தில்
இவ்வுலகம் நிலைகுலைய அவ்வமையம்
உருவிற் சிறிய அகத்திய முனிவர் போந்து
நிலைப்படுத்தியது போல், உருவத்தில்
சிறியவ ராயினும் அரிய காரியங்களையும்
எளிதில் முடித்தற்குரிய பெரிய
ஆற்றல்களையுடையவராய் இவ்வுலகில் சிலர்
ஒடுங்கியிருப்பர் ஆக லால் உரு வம் நோக்கி
இகழ்ந்து விடாமல் உள்ளத் திண்மையை
புணர்ந்தே அவரை உ வந்து
கொள்ளவேண்டும் என்பார் உருவு கண்டு
எள்ளாமைவேண்டும் என்றார்.

யழிபடும் வினைகளைப் பற்றாதவ ராய்,
வினைமுடியும் வரை யும் இடையே
தோற்றாதபடி அடக்கமாகவைத்து
முடிக்கவல்ல வராயுள்ள செவ்விய

திண்மையாளரையே அமைச்சராக அரசன் அமைத்துக்கொள்ளவேண்டும்; என்று உணர்த்தி, அவர் பருவ வருவங்களில் சிறியராயிருக்கவும் கூடுமாதலால் அதனைக் கண்டு இகழ்ந்துவிடாது அவரது அருமையைக்கருதிப் புகழ்ந்து போற்றிக் கொள்க என்று இஃதுணர்த்தியதாக இயலோடு பொருத்தி இதனை இணைத்துக் காண்க.

*வீறுசேர் வினையைப் புரிதரார் வீழால் வீறுவந் தடுப்பினும் கலங்கார்*

*தேறுகாரியத்தை முடிப்புழி யன்றிச் செயன்மொழி யாதியாலிடையே*

*வேறுபோ மாறு விளக்குறார் துணிந்த வினைதுளங் காதுவல் விரைவார்*

*வீறுசே ரிவரை யுருவுகண் டெள்ளா வேந்தனே வேந்தனு மைந்தா.*

என்றதும் கண்டு உளங்கொள்ளத்தக்கது.

வெண்பா.

பருவ உருவங் களில் பெரியராயிருப்பினும் வினைத்திறமில் லாதவர் உள்ளீடற்ற முள் முருங்கைபோலவும், ஒதிமரம் போல வும் தொழிலுலகில் ஒருபயனுமில் ராய் வறிதேநிற்பர், அவற்றால் சிறியராயினும் வினைத்திட்பமுடையவர் ஒளிர்மணிபோல் உயர்ந்து விளங்குவர் என்க.

மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும். என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

மண்ணீரும் ஆகாது = உடம்பைக் கழுவுதற்கும் உதவாது. மண்ணுதல் =

கழுவுதல். உம்மை இழிவு சிறப்பு.

உருவத்தில் சிறியவராயிருப்பினும் உள்ளப்பெருமையுடை யவர் உலகமுழுவதும் கொள்ளப்பெறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வாமனர்பால் உணரப்படும்.

## கதை.

வாமன ர் என்பவர் காசிபருடையபுதல்வர். இவர் திருமா லின் ஐந்தாவது அவதாரமாவர். குறுகியவடிவினர் ஆகலால் இவரை வாமனர் என்றார். வாமனர் என்றதற்குக் குள்ளன் என் பது பொருள். குறளன் எனவும் கூறப்படுவர். இவரது உடலி னளவு இரண்டரையடி உயரம் என்பர். இவரது நடை உடை மொழி செயல் முதலிய எல்லாம் எவர்க்கும் வியப்பும் உவகையும்

விளைத்தற்குரிய விதத்தோடிருந்தன.
வுலகில் பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

இவர்பிறந்தபொழுது இவ்
இவர் வடிவை நோக்கிய
பெற்றோரும் வருந்தியிகழ்ந்து வளர்த்து
வந்தார். பயந்தவர்களும் இகழ் குறளன்
என்பர் கம்பர். உலகமுழுவதையும்
தனக்கு உரி மையாக்கொண்டு மாவலி
ஆண்டுவருங்கால் இடையே தோன்றிய
அல்லலுக்கு ஆற்றாமல் முனிவர் தேவர்
முதலிய அனைவரும் இவர்
பால் வந்து தம்மை ஆதரித்தருளுமாறு வேண்டினார். தம்
கண்டு எள்ளிவிடாமல் உள்ளப்பெருமையை உணர்ந்து
உருவு
வந்து
பணிந்து வேண்டிய படியால் இவர்
அவரைப்பரிந்து நோக்கி 67-ம் அதிகாரம்

நீவிர் விரும்பியபடியே மாவலியை அடக்கிவருவல் என மொழிந்து தேற்றி உறுதியோடு விரைந்து போயினார்.

> முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
> கற்பதொர் நாவன் அனற்படு கையன்
> அற்புதன் அற்புதரேயறியுந் தன்
> சிற்பதமொப்பதோர் மெய்க்கொடு

சென்றான்.

என்றபடி சென்ற இவர் மாவலி முன் நின்று மூன்று அடி மண்தா என்றார். அவன் யாதும் ஆராயாமல் தந்தேன் என்ன உடனே உலகமுழுவதையும் இவர் ஓர் அடிக்குள் ஒடுக்கி அவனையும் அடக்கி அருள்புரிந்து வைத்து அமரரை ஆதரித்து நின்றார். உருவத்தாற் சிறியவராயிருந்தும் அரியகாரியத்தை எளிதில் முடித்த இவரது பெருமையை வியந்து அமரர் முதலினைவரும்

புகழ்ந்து போற்றினர்.

உருவுகண்டெள்ளாமை வேண்டும்; உருள் பெருந்தேர்க்கு அச்சாணியன்னாருடைத்து என்னும் உண்மையை உலகம் உணர்ந்து தெளிய இவர் அன்று உணர்த்தி நின்றார். விரிவைப் பாகவதத்தில் காண்க.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு
மாண்டியால்
ஞால முழுது ந
பந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண்
பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

என நம் தேவர் குறளோடு ஒப்பாகவைத்துப் பாணர் இவரைப்பாடியுள்ளார்.

ஈரொரு பிறப்பி னொருசிறு குறளா யாவருந் தேவரும் வியப்பக்
காரொரு வடிவு கொண்டெனச் சென்று

காவல்கூர் மாவலியளித்த

நீரொரு கரத்தில் வீழுமுன் றரங்க நீனிற

மகரநீருடுத்த

பாரொரு கணத்தில் அளவிடுங் கமலபாதனார்

நாதனார் நமக்கே. இது வில்லி சொல்லியது.

வடிவாற் சிறியராயிருந்தும் பெரிய

வினைகளைக் கொண்டு முடித்த இவரது

திண்மையும், மேற்குறித்த வுண்மையும் இதில்

விளங்குதல் காண்க.

வினைத்திட்பமுடையாரை உணர்ந்து

பது இதனால் கூறப்பட்டது.

போற்றவேண்டுமென்

---

1618 திருக்குறட் குமரேச

வெண்பா.

668 நன்றென்று கண்டவுடன் நாடி

அருச்சுனனேன்
குன்றமன் செய்தான்
குமரேசா—நின்று
கலங்காது கண்ட வினைக்கட்
டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.
(அ)

இ—ள்.

குமரேசா! இனிது என்று
தெளிந்துகொண்டபின்
அருச்சுனன் என் தவ வினையை விரைந்து
செய்தான் எனின்,
கலங்காது கண்ட வினைக்கண் துள
ங்காது தூக்கம் கடிந்து
செயல் என்க.
பகைவரை வென்று உயர்
நிலையடைதற்குப் பரமனிடஞ்

சென்று பாசுபதம் வாங்கிவருதலே நல்லது என்று தெளிந்த அன்றே அதனைச் செய்வதாகத் துணிந்து சென்றான் ஆதலால் நன்று என்று கண்டவுடன் என்றும். நாடி என்றது எண்ணிய தை எண்ணியாங்கே எய்துதற்குரிய உபாயத்தை இனிது ஆராய்ந்து என்றவாறு.

இது, நல்லதென்று தெளிந்துகொண்ட வினையை விரைந்து செய்யவேண்டும் என்கின்றது.

கலங்காது கண்ட வினைக்கண் = கலக்கமின்றி ஆராய்ந்து

தெளிந்த தொழிலின் கண். கலங்கிக் காணின் தனக்கு நலந் தராத வினையையும் நலந்தருமென்று கொண்டு பின் வருந்த நேரு மாதலால் அங்ஙனம் நேராதபடி காணவேண்டுமென்பார் கலங் காது கண்ட என்றார்.

ப

துளங்காது = தளராது; இது துளங்கல் என்பதன் அடியாகப் பிறந்த எதிர்மறை வினையெச்சம். துளங்கல் = அசைதல், தளர்தல், சலித்தல். தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது என்று புறத்திலும், திரைமுற்றிய துளங்கிருக்கை என மதுரைக் காஞ்சியிலும், துளங்குகுடி திருத்திய வலம்படுவென்றி எனப் பதிற்றுப்பத்திலும், இதன் பொருளைக் காண்க.

தூக்கம் கடிந்து = சோம்பலை ஒழித்து; செயல் செய்க; இஃது உடன்பாட்டுவியங்கோள் முற்று.

## 67-ம் அதிகாரம் வினைத்திட்பம்.

16
19

மேல், வினைத்திட்ப முடையாரை அறிந்து பேணவேண்டும் என்றார்; இதில் தெளிந்துகொண்ட வினையைத் துணிந்து செய்ய வேண்டும் என்கின்றார்.

மனங்கலங்காமல் நின்று ஆராய்ந்து தெளிந்த வினையின்

கண் பின் சலிபாது நின்று சோம்பலை
ஒழித்து விரைந்து செய்ய
வேண்டும் என்பதாம்.

துளங்கினும் தூங்கினும் வினை இனிது
முடியாதாதலால்
துளங்காது தூக்கம் கடிந்து செயல் என்றார்.

இது நல்லது தானோ ? என்று
முன்னதாக வினையை ஆராய்ந்து தெளிதலும்;
அங்ஙனம் தெளிந்துகொண்டபின் காலந்தாழ்க்
காமல் அதனைத் துணிந்து
செய்தலும்வேண்டும் என இது விதித் தமைதென்
க.

கலங்குதல், துளங்குதல், தூங்குதல்,
என்னும் இம் மூன்
றையும் வினைத்திட்பமுடைய அமைச்சர்
ஒழித்தொழுகவேண்டுமென்பது கருத்து.

தமக்கு உறுதிதரும் என்று
தெளிந்துகொண்ட வினையை உடனே அறிஞர்

துணிந்து செய்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை அருச்சுனன்பால் உணரப்படும்.

கதை.

அருச்சுனன் முதலிய ஐவரும் அரசை யிழந்து வனத்திற் புகுந்து வருந்தி யிருந்த பொழுது ஆங்கு வியாசமுனிவர் வந்தார். உறுதிகள் பல கூறி உள்ளந்தேற்றியபின் மேல் ஆகவேண்டிய
காரியத்தைக் குறித்து ஐவரும் அவரோடு
ஆராய்ந்தார். பகை
வரை வென்று, மீண்டும் அரசை அடைய
வேண்டுமாயின் அரனி
டம் சென்று பாசுபதம் என்னும் பகழியை
வாங்கிவரவேண்டு மென்று முனிவர்
முடிவுசெய்தார். அம்முடிவை இனிது
என்று
தெளிந்தவுடனே அதனை முடித்து
வருவதாக மொழிந்து அருச்

சனன் இமயமலையையடைந்து பரமனை
நோக்கி அருந்தவம் புரிந்
தான். புரியுங்கால் இடையே நிகழ்ந்த
அல்லல் பலவற்றிற்கும்
யாதும் அசையாதவனாய் ஆற்றி நின்றான்.
இறுதியாக இவனது
மனவுறுதியை அறிய விரும்பி இந்திரன்
மாறுருவந்தாங்கி இவன்
203
1620 திருக்குறட் குமரேச
வெண்பா.

பால் வந்து நீ மூண்டிருக்குந் தொழிலை
முற்றும் விடுக; இறைவனைக்காண்டல்
எவர்க்கும் அரிது ; இதனால் ஒரு பயனும்
எய்த மாட்டாது என்று உரைத்துக்
கலைத்தான். கலைத்தும் உளங்கலங் காமல்
நின்று இவன் உஞற்றிவந்தான்.
பருகுநீர் துறந்து காற்றும்வெவ் வெயிலும்

பாதபங்களின் சிலையுதிர்ந்த
சருகுமே யொழியக் காய்கனி கிழங்குந் தானினி
தருந்துதல் தவிர்ந்தான்
உருகுமா மனத்தை நாமுவர் திருத்தற்குறைபதி
யாக்கி நம்மிடத்தே
செருகினன் உணர்வை யாவரேயிவன்போற்
செய்தவஞ் சிறந்தவரென்றால்

என்று பரமன் உமையிட மொழிந்து உருமாறிவந்து உள்ளி யகிலையில் ஊன்றி நிற்கும் இவனது உள்ளத் திண்மையைச் சோதித்துப் பின் இவன் உரைத்த நலங்களையெல்லாம் உவந்தருளினர். இவன் பெற்று மீண்டு துணைவரை யடைந்து உயர் புகழோடு உயர்ந்து விளங்கினன். தமக்கு உறுதியாயகென்று தெளிந்தபின்னர்த் தாமதமும் தளக்கமும் சிறிதுமின்றி விரைந்து சென்று வினைமுடித்து வந்த இவனது மனத்திடத்தை அனைவரும் வியந்து புகழ்ந்தார். கலங்காது

கண்டவினைக்கண் துளங் காது தூக்கம் கடிந்து செயல் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்ருன். விரிவை அருச்சுனன் தவத்திலில் காண்க.

நன்றென்று தேர்ந்துகொண்ட
நல்வினையை யன்றேநீ
குன்ருமல் செய்துயர்ந்து கோள்.

தெளிந்த வினையை விரைந்து செய்யவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

669 கன்றியதுன் புற்றும் கலியஞர் என்துணிந்து
குன்ருது செய்தார் குமரேசா—மன்றமே
துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை
(௯)

இ—ள்,

குமரேசா! கவிநேர்திரராயனர் மிகத்துன்பமுற்றும் தாம் கருதி நின்ற வினையை உறுதி குன்றாது வென்று உயர்ந்தார்.

67-ம் அதிகாரம்

வினைத்திட்பம். 1621

எனின், துன்பம் உறவரினும், இன்பம் பயக்கும் வினையைத் துணிவு ஆற்றிச் செய்க என்க.

கன்றிய = மிகுந்த; துனி நனி கன்றிடின் என்ற பரிபாடலில் கன்றுதல் என்பதன் பொருளைக்காண்க. பல்வகைத் துன்பங் கட்கும் நாயகமாகிய நல்குரவு வந்து தன்னை நலிந்து நிற்பப் பட்டினி கிடத்தல், தொட்டதை இழத்தல் முதலிய துயரங்களடைந்தும் தான் கருதியதைஉறுதியோடு நின்று கடைபோகச் செய்தார் ஆதலால் துன்புற்றும் குன்றாது துணிந்து செய்தார்

என்றும். உள்மை சிறப்புணர நின்றது.

இது, முன்னதாக அல்லல் வரினும் பின் நலந்தரும் வினையை நயந்து செய்க என்கின்றது.

உறஎன்னும் செயவெனெச்சம் உறுஎன்பதன் அடியாகப் பிறந்தது. உறு = மிகுதி. உற = மிக.

துணிவு ஆற்றி = துணிவைச் செய்துகொண்டு: திண்மையாய் நின்று என்றபடி . தெளிந்து எனினுமாம். துணிவு என்பது திண்மையையும், தெளிவையும் உணர்த்திவரும்.

எடுத்தவினையை முடிக்க முயலுங்கால் இடையே தோன்றும் இடையூறுகளுக்கு ஆற்றாமல் அஞ்சுவானாயின் அஃது இனிது முடியாததாகலால் துணிவாற்றிச் செய்க என்றார்.

மேல், தெளிந்தவினையை விரைவாகத்

துணிந்து செய் என்றார்; இதில், அங்ஙனஞ் செய்யுங்கால் முன் எய்தும் துன்பங் கட்கு அஞ்சற்க என்கின்றார்.

முன்பு துன்பம் மிகவரினும், பின்பு இன்பம் பயக்கும் வினையைத் துணிவுகொண்டு செய்க என்பதாம்.

இன்பம்பயக்கும் வினை என்றது. புகழும் பொருளும் தருதற் குரிய தொழில்களை. அவை கனி மாங்களைவைத்தல், விளைபுலங் களைத்திருத்தல், நிலவளங்கள் மிகுமாறு நீர்நிலைகளை ஆக்கல் முதலாயின. இனி உம்பருலகின்கண் இன்பமனுபவித்தற்குரிய நல்வினைகளையும் ஈண்டு நாடிக் கொள்க.

வினைநல்லதாயின் எவ்வகையானும் தன்பயனாகிய இன்பத்தை அது தப்பாது தந்தேவிடும்; அத்தகைய தொழிலைச் செய்

யுங்கால் முதலில் மெய் வருத்தம், கைப்பொருளழிவு, காரியச் சிதைவு முதலிய கவலைகள் பல வந்து கலக்கினும் கலங்காது நின்று அவ்வினையின் பயனை எதிர்நோக்கிக்கொண்டு துணிந்து செய்யவேண்டும் என்றவாறு.

முன்பு முயற்சியால் வருந்துன்பத்தை நோக்காது வினையைத்துணிந்து செய்வோரே பின்பு உயர்ச்சியை யடைவர் என்பது கருத்து.

எவ்வளவு இடர்கள் வந்தாலும் தாம் எடுத்த வினையை மனத்திண்மையுடையார் முடித்தே விடுவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கலியனார்பால் உணரப்படும்.

## கதை.

கலியனார் என்பவர் தொண்டை நாட்டிலே திருவொற்றியூரிலே சக்கரப்பாடி

என்னும் இடத்திலே செக்கார் குலத்திலே பிறந்தவர். இவர் பெருந்திருவோடு உயர்ந்த குணங்கள் பலவும் ஒருங்கே நிறைந்தவர். நிலங்களைப் பண்படுத்தி வளங்களை மிகுத்து எவர்க்கும் உபகாரியாய் இவர் இருந்து வாழ்ந்தவர். தீயவற்றைக் கனவிலும் நாடாதவராய்த் தூயவினைகளையே துணிவுடன் ஆற்றிச் செல்வத்திலும் கீர்த்தியிலும் இவர் சிறந்து விளங்கினார்.

தெண்கடல் வளாகம் பொதுமையின்றி
வெண்குடை நிழற்றிய வொருமையோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லாம் ஓரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.

என்னும்
உண்மையுணர்வுடையாராய் ஒப்புர வாற்றித்
தாம் ஊக்கித் தொகுத் தவை யுயிர்களுக்குதவி
வந்த இவர் அப்பதியிலுள்ள சிவாலயத்
துள் நாள்தோறும் பல திரு விளக்குகள்
ஏற்றி இறைவனை அன்
போடு வழிபட்டுவந்தார். தாம் குறித்த
வினையைச் சிறிதும்
67-ம் அதிகாரம்
வினைத்திட்பம். 1623 தவறாமல்

முடித்து வருகின்ற இவரது உளப்பான்மையை
உலகம் அறியும்படி இறைவன்
செய்யவிரும்பினாராதலால் இவர் செல்வம்
முழுவதும் தேய்ந்து நின்றது. இன்மை
மேவியும் தாம் செய்து வந்த நன்மையை
வழுவாமல் வருந்தி முயன்று இவர் செய்து வந்
தார். துன்பங்கள் பலதொடர்ந்து வந்தும்
தான்கருதியவினையைத் துணிவாற்றிச்

செய்தார். செய்தும் முடியாமையால் தைலத்துக் குப் பதிலாகத் தம்கழுத்தை யரிந்து உதிரத்தை விளக்கெரியும் தகழியில் ஒருநாள் ஊற்ற உடனே இறைவன் தோன்றி இன்னருள் புரிந்தார். அதன் பின்பு புகழும் பொருளு மெய்தி உயரின் பமுற்றார். பெருந்துன்பங்களனைத்தும் துணிந்து நின்று தூய வினைகளைச் செய்து வந்தமையால் இரு மையினும் இன்பமெய்தி இவர் சிறந்து நின்றார். துன்பமுறவரினுஞ் செய்க துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை என்னும் உண்மையை உலகம் அறிய இவர் அன்று உணர்த்தினின்றார். விரிவைப்பெரிய புராணத்தில் காண்க. தின்னக் கரும்பு தெறுவார் காமறப்புண்

டின்னற் படஉு முளவினையி

னின்புற

எண்ணித் தொடங்கின்

இடறுமுள அஞ்சாமே

திண்ணத்தாற் பின்னுஞ் செயல்.

இன்னிசை.

அல்லலுறற் கஞ்சாமல் ஆய்வினையை
எல்லையிலா இன்பமெய்து வார்.

யாற்றினர்பின்

துயர் பல வரினும் தூயவினையைத் துணிந்து செய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

670 எள்ளா தலங்களுற்றும் ஏனோ
மகோதரனைக்
கொள்ளவில்லை மேலாக் குமரோ
சா—உள்ளா
எனைத்திட்ப மெய்தியக் கண்ணும்
வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.
(ம)

இ-ள்.

குமரேசா! படை அரண் முதலிய கலங்களெல்லாம்
உடையனுயிருந்தும் மகோதாரை என் உயர்வுடையனுக உலகம்
கொள்ளவில்லை எனின், எனைத்திட்பம் எய்தியக் கண்ணும்,
வினைத்திட்பம் வேண்டாரை உலகு
வேண்டாது என்க. 1624
திருக்குறட் குமரேச வெண்பா.

எள்ளாநலங்கள் = இகழப்படாத நன்மைகள். என்றது எவரும் புகழ்ந்து போற்றத்தக்க சிறப்புக்களை; அவை பொருள் படை முதலாக அவன் கொண்டிருந்த உயர்நடைமைகள் என்க. உம்மை உயர்வுசிறப்பு. மேலாக் கொள்ளவில்லை

என்றது சிறந்த வகை உலகத்தார் மதிக்கவில்லை யென்றவாறு. எய்துதலின் அருமையோடு உயர்வையும் உம்மை உணர்த்திநின்றது.

இது, வினைத்திட்பமில்லாதவனை உலகம் வெறுத்துவிடும் என்கின்றது.

வினைத்திட்பமுடையவரே இவ்வுலகில் உயர்ந்து விளங்குவர், அனைவரும் அவரை வியந்து போற்றுவர், எண்ணிய வெல்லாம் அவர் எண்ணியாங்கு எய்துவர் என வினைத்திட்பத்தால் உளவாம் மேன்மைகளை இதுவரை உணர்த்தி அவ்வின்மையால் எய்தும் இழிவினை இறுதியாக உறுதிபெற இதில் உணர்த்துகின்றார்.

எனைத்திட்பம் எய்தியக்கண்ணும் = வேறு எவ்வளவு திண்மை கலையுடையாராயிருப்பினும். எனை என்பது எத்தனை எனப்பண் மையின் வன்மை

தோன்றுகின்றது. எத்தனையோபலர் எனற் பாலது எனைப்பலர்
எனப்பெருங்கதையுள்ளும், எல்லாப்பகையும் அறிவான் ஆய் என்ற இடத்து
எனைப்பகையும் அறியுனன் ஆய் எனப் புறத்திலும் இதுபோந்தமை காண்க.
எனைப்பயஞ் செய்யுமோ விடலை நின்செலவே என ஐங்குறுநூற்றிலும்,
எனைப் பெருந் தொழில்செய் எனோர் என மணிமேகலையிலும் இதன் பொருளுணர்க.

மேல், தொடக்கத்தில் துன்பம் மிகவரினும் தூயவினைகளைத் துணிந்து செய்யவேண்டும் என்றார்; இதில், அங்ஙனந்துணிந்து செய்யாது தளர்ந்து விடுவோரை உலகம் இகழ்ந்து விடும் என்கின்றார்.

வேறு எத்துணைத்திண்மைகளை எய்தியிருப்பினும், வினைத் திண்மையைத் தமக்குச் சிறப்பாக விரும்பிக் கொள்ளாதாரை உல

கத்தார் விரும்பார் என்பதாம்.

திண்ணியராய் நின்று வினைகளைச் செய்து முடிப்பதெல்லாம் பொருள் படை அரண்முதலிய ஆக்கங்களை எய்தற்காக

67-ம் அதிகாரம் வினைத்திட்பம்.

1625

வேயாம்; அவற்றை இயல்பாகவே எய்தியிருப்பவர்க்குத் தொழி
ற்திறம் இல்லையாயின் அதனால் வரும் இழிவு என்னை என்பாரை
நோக்கி இஃது இயம்பியதாகக் கொள்க.

வேறுவகையில் எவ்வளவு உயர்ச்சியுடையாராயினும் வினை செய்தற்கண் திண்மை இலராயின் அவரை ஒருபொருளாக உயர்ந்தோர் மதியார் என்பார் உலகு வேண்டாது என்றார். உலகு இதில் ஆகுபெயர் என்க.

இருக்கிறதைகவைத்துக்கொண்டு கொண்டிருப்போம்; முயற்சி யொன்றும நமக்கு வேண்டாம் என்று தமக்கு எய்தியுள்ள செல்வத்தை யெண்ணிச் செருக்குற்றுச் சோம்பியிருக்கும் சிறுமையா ளர் கருமவுலகில் பெருமை பெறார் என்றவாறு. செல்வ முதலிய நலங்களால் ஒருவன் மிகச்சிறப்புற்றிருப்பினும் வினைத் திட்பமுடையனாய் அவன் விளங்கியிருக்க வேண்டும் என்பது குறிப்பு.

எத்தனை மேன்மைகளை எய்தியிருப்பினும் வினைத்திட்பம் இல்லாதானை உலகம் உவந்து கொள்ளாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மகோதரன்பால் உணரப்படும்.

## கதை.

மகோதரன் என்பவன் இராவணனுக்கு அருமைத் தோழனாகவும், அமைச்சனாகவும்

அமைந்திருந்தவன். வஞ்சசூழ்ச்சியில் இவன் மிகவும் வல்லவன். இவனை மாயைகள் பலவும் வல்ல மகோதரன் என்பர் கம்பர். யானையேற்றத்திலும் அதன் குணங் களையறிதலிலும் இவன் பெரிதும் சிறந்தவன், உள்ளத்தில் திண்மையிலனாயினும் உடல் வன்மையில் உயர்ந்தவன். பருத்த தொந்தி வயிற்றையுடையவனாதலால் மகோதரன் என அனைவரும் இவனை அழைத்து வந்தார். மக—பெரிய; உதரம் = வயிறு; அதனை யுடையவன் மகோதரன் என்க. இவனது இயற்பெயர் மோதரன் என்பர். கொடிய சூழ்ச்சியுடையவனாயினும் எதனையும் முடிய ஆற்றகில்லான். முதனாட்போரிற்புகுந்து இராமனது போராற்றலையும் போராற்றலையுங்கண்டு மீண்டு வந்து இராவணன் கலங்கி நிற்பதை அறிந்து மாலியவான் அறவுரைகள் பலகூறிச் 1626

சிறையை விட்டு விடும்படி தேற்றி நிற்குங்கால், விடாதே என்று அடுத்து நின்று இவன் கடுத்துக் கெடுத்தான் .

நன்றீயீ தென்று கொண்ட நயத்தினை நயந்து வேறு
வென்றியே யாக மற்றோர் தோற்றுயிர் விடுதலாக
ஒன்றிலே நிற்றல் போலாம் உத்தமர்க் குரியதொல்கிப்
பின்றுமே லவனுக் கன்றே பழியொடு நரகம் பின்னே- (1)
வென்றவர் தோற்பர் தோற்றோர் வெல்குவர் எவர்க்குமேலாய்
நின்றவர் தாழ்வா தாழ்ந்தோருயர்குவர்

நெறியு மஃதே

என்றனாறிஞ ரன்றே யாற்றலு க்

கெல்லையுண்டோ

புன்றவரிருவர் போரைப் புகழ்தியோ

புகழ்க்கு மேலோய் (2)

என்று தன்மனம் போனவாறு

புகன்று அவன் முனம் போனபடியே

இவன் ஊக்கி நின்றான். இங்ஙனமே

வினைவலியும், தன்வலியும், மாற்றான்வலியும்

அறியாமல் மனச் செருக்குடன் திமிர்ந்து

திரிந்தான். திண்ணியனாய் நின்று

வினைகளைச் செய்து முடித்து அதனால்

மேன்மையடைய வேண்டுமென்ற பான்மை

யில்லாத இவனைப்பத்துக் கோடி

தேர்ப்படைகளையும், பலகோடி அரக்கர்

களையும் உடன் கொண்டுபோய்

இலக்குவனைப் பொருது வென்றுவா என்று

இராவணன் இறந்நொழிந்தான். சென்று இவன் வகைதெரியாமல் இராமனையே முதலில் வந்தவனொந்து சோதிதடுத்தும் கேளாமல் நேர்ந்து புகுந்து உடனே மாய்ந்து விழுந்தான். பல்வகைத்திண்மைகளையுடையனுயிருந்தும் முனை முகத்தில் நின்று இனமறிந்து வினையை ஆற்றுந்திண்மை யின்மையால் உயர்ந்தோரனைவரும் இவனை இகழ்ந்து கூறினர், எனைத் திட்பமெய்தியக் கண்ணும் வினைத்திட்பம் வேண்டாரை வேண்டாதுலகு என்பதை இவன் அன்று உணர்த்தி நின்றான்.

உற்றவினைத் திண்மை உறாதான் உலகமெலாம்
பெற்றிடினும் பீடுபெறான் பின்.

வினைத்திட்பமில்லாதவனை உலகம் மதியாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

68-ம் அதிகாரம்
வினைசெயல்வகை.

இவ்வதிகாரத்தின் தொகைப் பொருள்.

மனத்திட்ப முடையவனே வினைத்திட்ப மடைவான். உற்ற வினை யூறுபடினும் உளங்கல ங்கலாகாது. எடுத்தவினையை அடக்கமாக வைத்தே இனிது முடிக்கவேண்டும். தான் சொல்லிய படி செய்யவல்லவனே எவரினும் சிறந்தவனாவன். வினைமாட்சி யுடையவனை எவரும் வியந்து போற்றுவர். திண்ணியராவோர் எண்ணியபயாவும் எண்ணியாங் கெய்துவர். உருவிற் சிறியவ ராயினும் வினைமாட்சியிற் சிறந்தவரே இவ்வுலகில் உயர்ந்தவராவர். தெளிந்த வினையைச் சோம்பாது துணிந்து செய்ய வேண்டும். இடர்பல எய்தினும் இனிய வினையைத் துணிவொடுசெய்க. வினைத் திட்பமுடையவனையே இவ்வுலகோர் விரும்பிக்கொள்வா.

ஏழாவது அதிகாரம் வினைத்திட்பம்

முற்றிற்று.

---

# 68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

அஃதாவது செய்விதென்று தெளிந்துகொண்ட தொழிலைச் செய்து முடிக்குந் திறம். இந் நுட்பம் வினைத்திட்ப முடையார்க்கு இன்றியமையாது வேண்டப்படுமாதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

671 சார்ந்து தெளிந்தபின்பு தாழான் வருடகன்முன்
கூர்ந்தெழுந்தான் என்னே குமரேசா—நேர்ந்துநின்ற
சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு

தாழ்ச்சியுட் டங்குக நீது.

(க)

இ—ள்.

குமரேசா ! வருடகாரன் என்பவன் ஆராய்ந்து தெளிந்தபின்பு வன் தாமதியாது வினை மேற் சென்றான் எனின், சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் ; அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது என்க.

சார்ந்து தெளிந்த என்றது உதயணனோடு பொருந்தி உசாவிப் பின் வினையை ஆய்ந்து தெளிந்தமை கருதி. சூழ்ந்து துணிந்த பின்பு தப்பாமல் முடிக்கும் ஒட்பத்துடன் ஊக்கிச் சென்றான்





ஆதலால், தாழான் கூர்ந்தெழுந்தான் என்றும். தாழான் என்னும் முற்றை

எச்சமாக்கிக்கொள்க. நேர்ந்து நின்ற = ஆராய்ச்
சிக்கு உரிமையாய் அணுகியிருந்த என்றவாறு.

இஃது ஒரு வினையைக் குறித்து ஆராய வேண்டிய அள
வையும், அதன் பின் ஆற்றவேண்டிய முறையையும் உணர்த்துகின்றது.

சூழ்ச்சி = ஆராய்தல், ஆலோசித்தல், விசாரித்தல், உசாவுதல்.

சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் = சூழ்ச்சிக்கு எல்லையாவது சூழ்கின்றவன் இனி இது இனிது முடியும் என்னும் துணிவினையடைதல். துணிவு = திடன், தெளிவு, நம்பிக்கை.

அத்துணிவு = அங்ஙனம் முடிவாகத் துணிவு பெற்ற அவ்வினை; துணிவு என்றது துணியப்பட்ட தொழிலையுணர்த்தி நிற்றலால் ஆகு பெயரென்க. வரைந்துகொண்டு

ஆலோசனையில்
வைத்துத் தெளிய நின்றதாகலால்
அத்துணிவு என்று சுட்டப் பட்டது.
தாழ்ச்சி = காலதாமதம்; அஃதாவது
செய்யவேண்டிய கால
த்தில் வினையைச் செய்யாமல்
காலங்கடத்தல் : இது நெடுநீர் எனப்படும்.
சூழ்ச்சியுஞ் சூழ்பொருட்டுணிவு மெல்லாம்
தாழ்ச்சி யின்றி எனப் பெருங்கதையினும்;
சூழ்ச்சிய தகலமும் துன்னல் போகிய துணிவு
எனப் புறத்தினும் நின்று இவை தரும் பொ
ரு
ளைக் காண்க.
ஒரு வினையைக் குறித்து விசாரித்தற்கு
வாம்பாவது இனி அது தவறாது என்னும்
தெளிவினை யடைதலேயாம் ; அங்ஙனம்
துணியப்பட்ட வினையைப் பின்
தாமதத்துள் வைத்தல் தீமை யாம் என்பதாம்.

தெளிந்துகொண்ட வினையைத் துணிந்து செய்யாமல் காலங் கடத்திவரின் ஒன்னலர் கண்டு ஊறுவிளைப்பர்; பின்னர் எவ்வகை யாலுஞ் சிறந்து முடியாது இழிந்துபடும் ஆதலால் அவ்வினை தூழ்ச்சியுள் தங்குதல் தீது என்றார்.

காரியத்தைக் கருதித் தெளிந்தபின் காது என்பது கருத்து.

காலத்தை நீட்டிக்கலா

68-ம் அதிகாரம்

வினைசெயல்வகை. 1629

இனிதென்று துணிந்து கொண்டவினையைச் சிறந்த அமைச் சர் விரைந்து செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்

வுண்மை வருடகாரன் பால் உணரப்படும்.

கதை.

வருடகாரன் என்பவன் மகதநாட்டிலே இராசகிரியம் என்
னும் நகரிலிருந்தவன். அதிலிருந்து அரசுபுரிந்த அந்நாட்டு மன்னனாகிய தருசகனுடைய தலைமையமைச்சன். பல நூல்களிலும் நல்ல பயிற்சியுள்ளவன். சொல்வன்மையில் மிகச்சிறந்தவன்; இவனது காலம் சற்றேறக்குறைய இற்றைக்கு இரண்டாயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னாகும். வருவதோர்ந்து, உறுவது சூழ்ந்து தன் அரசனுக்கு உறுதிகள் பல உதவி நின்றவன். காரகாரி, சத்தியகாயன், தருமதத்தன், என்னும் அமைச்சர்மூவரினும் இவன் மிகச் சிறந்தவனாய், ஆள்வினை யாண்மைகளில் மேன்மை பெற்றிருந்தானாதலால், பேரன்புடையனாய் அரசன் இவனைப்

பேணிவந்தான் . தான் ஆலோசித்த காரியங்களை யெல் லாம் தப்பாது முடிக்கும் ஒட்பமுடையனாய் உயர்ந்து நின்றமை யால் அனைவரும் இவனை உவந்து போற்றினர்.

தாமே சென்று தம்வினை முடிக்கும்
மாமாத்தியருள் மதிமீக் கூறிய
பகைப்புலந் தேய்க்கும் படைத்திறற்
றடக்கை
வகைப்பொலி மான்றேர் வருடகாரன்.

எனக் கொங்கு வேளார் இவனைக் கூறியுள் ளார். தன் வினைத்திட்பத்தால் இசை திசை பரவ இவன் இருந்துவருங்கால், வத்தவதேயத்து மன்னனாகிய உதயணன் வந்து தனக்கு உதவிசெய்ய வேண்டினான். தன் அரசனுக்கு அவன் மிக்க உறவினனாதலால் யாது குறை? என இவன் அன்புடன் உசாவினான். பாஞ்சால தேயத்து மன் னனாகிய ஆருணி என்பவன் தனக்குக் குலப்பகைவனாய் நின்று அல்லலை

மிக விளைத்து வருகின்றானாதலால் அவனைத் தொலைத்து விட வேண்டுமென்று அவன் உரைத்து நின்றான். அவ் அரிய காரியத்தை எவ்வகையில் முடிக்கலாம் என்று ஆழ்ந்து சூழ்ந்து
பருவமறிந்து கருவிகளைத் தொகுத்து இனித் தப்பாது என்று



வெண்பா.

துணிந்து எழுந்து தன் அரசனிடம் விடைபெற்று உதயணனை உடன் கொண்டு இவன் உவந்து சென்றான். செல்லுங்கால்,

வடுத்தொழில் அகன்ற வருடகாரா!
உடற்றுநர்க் கடந்த வுதயண குமரன்
அடைக்கல நினக்கென அவன்வயிற் கையடுத்து
ஓம்படைக்கிளவி பாங்குறப் பயிற்றி.

அரசன் பரிந்து விடுத்தான். சென்ற இவன்

பாஞ்சால மன்னனை வென்றுமுடித்தான். அம் முனைமுகத்தில் புதுமுன் வினையகத்தில் நின்று இவன் சூழ்ந்த விதத்தையும் சூழ்ந்தபடியே துணிந்து செய்த திறத்தையும் வியந்து புகழ்ந்து உதயணன் இவனை மகிழ்ந்து தழுவித் தான் அணிந்திருந்த அணிகளையும், எறிவந்த யானையையும் இன்னுரையோடு தந்து தன்னுடன் கொண்டுபோய்ப் பன்னாள் வைத்திருந்து சிறந்த பரிசுகளை உதவினான். பின்பு மீண்டுவந்து தன் அரசனை அணுகினான். இவனது வினைமாட்சியால் மகத மன்னன் மிகுமாட்சியடையத் தன்னை யொப்பாரின்றி இவன் உயர்ந்து நின்றான். பொருசமனை நேர்ந்து வெல்லப் போர்வல்லா ருளரேனினும், வருடகனைச் சூழ்ந்து வெல்ல வல்லார் யார் இவ் வுலகில் என்று

அக்காலத்துள்ள அரசர், அமைச்சர் முதலிய எல்லாரும் வியந்து போற்ற இவன் விளங்கியிருந்தான். சூழ்ந்து துணிந்த பின் தாழ்ந்து நில்லாமல் வினையைச் சதுருடன் முடித்தாலுதலால் சூழ்ச்சி முடிவு துணிவெய்தல்; அத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது; என்னும் உண்மைக்கு இவன் இங்கு உரிமையாய் நின்றான். விரிவைப் பெருங்கதையில் காண்க.

வகைமிகு மான்தேர் வத்தவர் கோமான்
வருடகாரன் பொருடெரி சூழ்ச்சி
பொய்யாது முடித்தலின் மெய்யுறத் தழீஇ
ஏறிய யானையுந் தன்மெய்க் கலனும்
கூறுபட வின்றிக் கொடுத்தனன் கூறி.

வத்தவகாண்டம்.

இவனது வினைத் திண்மையும், மேற் குறித்த வண்மையும் இதன் கண்ணும் விள ங்குதல் காண்க.

சூழ்ந்து துணிந்த வினையை விரைந்து

செய்யவேண்டும் என் பது இதனல் கூறப்பட்டது.

---

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.
1631

672 வென்றிமிகு நித்தனின்றன் வீமன் விரைந்தேனே
குன்றமற் செய்தான் குமரே ரசா—நன்றாகத்
தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. (உ)

இ—ள்.
குமரேசா! தான் செய்யக்கருதிய வினையைத் நித்தன் காழ்த்துச் செய்தான்; வீமன் என் தூங்காது நின்று செய்து முடித்தான் எனின், தூங்கிச் செயற்பால

தூங்குக; தூங்காது செய்யும் வினை தூங்கற்க என்க.

வென்றிமிகு என்றது அவனது ஆண்மையும் ஆற்றலும் கருதி. தான் கருதிய வினையை எவ்வாறு செய்து முடிப்பதெனெ ஆராய்ந்துகொண்டு இரவும் பகலும் கண்விழிப்புடையனாய் அவையும் நோக்கி அமர்ந்திருந்தானாகலால் நின்றான் என்றும்.

நன்று ஆகஎன்றது தன காரியம நனமையாக முடியுமாறு எனக.

இனித் காமதித்தல் தீது என்று தான் கருதிய அன்றே உறுதியோடு முடித்தானாகலால் விரைந்து என்றும்.

இது, வினையின் இயல்பை உணர்ந்து அதற்கியை அமைந்து செய்க என்கின்றது.

தூங்குக என்றது காலத்தை நீட்டிக்க என்றவாறு ; தூங்கற்க= காலதாமதம் செய்யாதே என்பதாம். தூங்காமை என்று இறைமாட்சியுள்

சுட்டியுள்ளதையும் ஈண்டுச் சூழ்ந்து நோக்குக.

தூங்கி = தாமதித்து; தூங்காது = தாமதியாது.

செயற்பால = செய்தற்பாலன வாயவினைகளை; இது பலவின் பாற்குறிப்பு வினையாலணையும் பெயர்.

தன் வலிவளர்வை நோக்கிச் சீவகன் அடங்கியிருந்தது போலவும், பருவ வரவை நோக்கிப் பஞ்சவர் பதுங்கியிருந்தது போலவும், தம் வினை முடிவுக்கு வேண்டிய அமைவுகள் அமையும் வரையும் அமர்ந்திருக்க வேண்டுமென்பார் தூங்கிச் செயற்பால தூங்குக என்றார்.

1682 திருக்குறட் குமரேச வெண்பா.

காற்றுள்ள பொழுதே தூற்றிக்கொள் என்றபடி அமையாம்

வாய்ந்தபொழுது அயர்ந்திராதே என்பார் தூங்காது செய்யும் வினை தூங்கற்க என்றார்.

மேல், வினையைச் சூழ்ந்து துணிந்தபின் தூங்கலாகாதென் றார்; இதில், வினைகளின் தரமறிந்து அவற்றிற்கியை ஆற்றுக என்கின்றார்.

தாமதித்துச் செய்யத்தக்க வினைகளை மெல்லத் தாழ்த்துச் செய்க; காலத்தை நீட்டியாது விரைந்து செய்தற்குரிய வினைகளை உடனே துணிந்து செய்க என்பதாம்.

அமர்ந்து செய்யவேண்டிய காரியத்தை விரைந்தும்; விரைந்து செய்தற்குரியதை அமர்ந்தும் செய்யலாகாதென்பது கருத்து.

மழைபெய்த ஈரம் அமையும் வரையும் எதிர்நோக்கியிருந்து, அமைந்தவுடனே அமைந்து விதைத்தால் சிறந்தபயனுறுதலும் அவ்வாறின்றி மாறிச் செய்யின் அது வீணாயொழிதலும்போல் வினைவகையால்

நலமும் கேடும் நணுகுமாதலால் அவற்றை நனு கிநோக்கி அமைச்சர் வினை செய்யவேண்டும் என்பது குறிப்பு.

தம் காரியமுடிவுக்கு வேண்டிய அமைவுகளை நோக்கிக் காலத்தை நீட்டியும், அமைந்துளதாயின விரைந்தும் உணர்ந்தோர் செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நித்தன் கண்ணும், வீமன் பாலும் உணரப்படும்.

## கதை.

நித்தன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டு கட்கு முன்னர் உறையூரிலிருந்த ஒரு சோழமன்னன். குதிரை யேற்றத்தில் இவனுக்கு நிகரானவர் அக்காலத்தில் எவருமிலர். இவன் அரிய நூல்கள் பலவும் பயின்றவன். பெரும் புலவர் களும் வியக்கத்தக்க சிறந்த கவிகளை விரைந்து பாடவல்லவன்.

புனிதை என்னும் தனது இனிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து ஐயை என்றோர் அழகிய புதல்வியையும், நற்கிள்ளி என்று ஒரு புதல்வனையும் இவன் பெற்று மகிழ்ந்தான். அறிவும் ஆண்மையும் உடையவனுயினும் பிறாது பான்மையை அறிந்து அதற்கியைய ஒழுகாதவனுதலால் மறுபுல மன்னர் பலர்

68-ம் அதிகாரம் வினை செயல்வகை.

1633

இவன்பால் பெரும் பகை கொண்டிருந்தார். சிறந்த வீரனுயிருந் தும் உடனே அவர்மேல் இவன் வெகுண்டு போகாமல் காலமும் வலியும் கருதி அடங்கியிருந்தான். பகைவர்கள் எளிதில் வந்து அணுகாதபடி அரிய அரண்க ளை உளவாக்கிப் பிடவூர்க் கிழார் மகன் பெருஞ்சாத்தன் என்பவனைத் துணைக்கொண்டு உறுவது கருதி ஒன்றும் அறியாதவன்போல் இவன் ஒடுங்கியிருப்ப ஒரு நாள் இரவு எவரும் அறியாவண்ணம் கட்டி, பாணன் என்னும் பகைவிருவர்

இவனது நகரை யணுகிப் பொழிலொன்றுட் புகுந்து ஒளிந்து கொண்டிருந்தார். பரிசில்கருதி இவன் பால் வந்த பாணர்கள் வழக்கம்போல் மகிழ்ச்சி ததும்ப முரசங்களை முழக்கினர். ஒளிந்திருந்தவர் அதனைப் போர்முரசின் முழக்கமென்று மாறுபடக் கருதி நம் ஒளிப்பை உணர்ந்துகொண்டான் போலும் என ஓடிப்போயினர். போகவே இவனும் பின் ஆகவேண்டியவை அமைத்துக்கொண்டு அனைவரையும் எதிர்ந்து வென்று இசை பெற்று மீண்டான். இவனது சூழ்ச்சித் திறத்தையும், வகையறிந்து செய்யும் வினைமாட்சியையும், வியந்து புலவர்பலரும் புகழ்ந்து மகிழ்ந்தார்.

சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண் யானைப்
பெறலருந்தித்தன்
செல்லா நல்லிசை யுறைந்தகக்
குறைந்து என நக்கீரரும்,

அரிபெய் சிலம்பின் ஆம்பலந் தொடலை
யாம்போ மூவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோள் ஐயை தந்தை
மழைவளந் தரூஉம் மா வண் தித்தன் எனப் பாணரும்,
இவனை உவந்து பாடியுள்ளார்.
காலந்தாழ்த்து நின்று பருவம்
பார்த்துச் செய்து தான் கருதிய வினையை
முடித்தானதலால்
ஆங்குக தூங்கிச் செயற்பால என்னும்
உண்மை மொழிக்கு இவன்
உரிமையாய் நின்றான். இவன் சரிதம்
புறநானூறு முதலிய
பழைய நூல்கள் பலவினும் புலனும்.
வலிமிகு முன்பிற் பாணனொடு
மலிதார்த்

இத்தன் வெளிய னுறைந்தை
நாளவைப்

1634 திருக்குறட் குமரேச
வெண்பா.

பாடின் றெண்ணினைப் பாடுகேட்
டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ கோடிய ஆர்ப்பினும்
பெரிதே. (அகம்)

இதனானும் மேற் குறித்தவுண்மை
தெளிவாதல் காண்க.

## கதை 2.

பாண்டவர்கள் வாரணா வதத்தில்
தங்கியிருக்குங்கால் புரோசனன் என்னும்
துன்மதி யமைச்சன் உட்பகையாய்
உடனமர்ந் திருந்து மெழுகினால் ஓர்
மாளிகை யமைத்து அதில் வாழ்ந்து

வாரும்படிசெய்து அவரை அடியோடழித்துவிட அமையம் நோக்கியிருந்தான். அவனது இருப்பைக் குறிப்பாலுணர்ந்த ஐவர் ஐய மீக் கூர்ந்து யாதுசெய்வ தென அகங் கலங்கி நின்றார்.

மெழுகினால்நமக் காலயம் வகுத்ததும் விரகே
ஒழுகுகின்றதன் றொழுக்கமும் வஞ்சனை யொழுக்கே
எழுகடற்படை யாவையும் இவன்வழி யனவே
தொழுதகையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்.

எனத் துளங்கியிருக்குங்கால் அங்கு வந்திருந்த கம்மிய னொருவன் உண்மையை யுணர்த்தினன். அவ்வஞ்சமனையை அமைத்தற்குக் கம்மியர் பலரை அழைத்துவருங்கால் விதுரனால் இவன்

விடுக்கப் பெற்றவன், காளன் என்னும் பெயரினன்.

வினைத்திறத்திற் சிறந்தவன்.

வந்தவினையாளரோடு உடனிருந்து மாளிகையை அமைக்குங்கால் நிலவறை யொன்று செய்து எவரும் அறியாவகை ஒருதூணை நிறுத்தித்தன் இயல்பையும் தப்பிச் செல்லுதற்குரிய வழி வகைகளையும் வீமனிடம் வந்து அவன் தனியே உணர்த்திச் சென்றான். அதன் பின் காலதாமதம் செய்யாமல் ஒருநாளிரவு தாயையும், துணைவர்களையும் எடுத்துக்கொண்டு மாளிகையில் தீயை வைத்துவிட்டு அத்தூணைப் பிடுங்கி யெறிந்து அதன் வழியாக விரைந்துபோய் இடும்பவனத்

தை யடைந்தான். காலத்தை நீட்டிக்காமல் வினையைத் துணிந்து
செய்ததனால் தன் குடும்பத்தைக் காத்து இவன் நெடும்புகழ்
பெற்றான். தூங்கற்க தூங்காது செய்யும் வினை என்னும் உண்மையை உலகம் காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1635

தோள்கரம் புறந் தன் னி லன்னையுந் துணைவர் கால்வருந் தொக்குவைகவே கோள்கரந்த பஃ றலை யராவெனக் குகா நீணெறிக் கொண்டுபோயபின்
தாள்களின்கதித் தாள்பறிந்துவீழ் தரு வனத்ததோர் சாரன்மன்னினன்
மூன்கடுங் கொடுஞ் சினவனற் கண்மா மும்மதக்களி றனையமொய்ம்பினன்.

இது பாரதம். தூங்காது நின்று

வீமன் வினைமுடித்த திண்மையும், தன்னைச் சேர்ந்தாரைக் காத்துவந்த தன்மையும் இதில் காணப்படுகின்றன.

வினையின் இயல்புணர்ந்து அதற்கியைய அதனை முடிக்க வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

673 உற்றவினை யொல்லுமென
ஓர்ந்தவுடன் என்பிஞ்சிலி
கொற்றமுறச் செய்தான்
குமரேசா—முற்றவே .
ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே
யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச்செயல்.
(௩)

இ—ள்.

குமரேசா! மிஞ்சிலி என்பவன் தன் காரியம் இனிதுமுடியுமென்று

தெளிந்தவுடனே என் துணிந்து செய்தான் எனின், ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்றே ; ஒல்லாக்கால், செல்லும் வாய் நோக்கிச் செயல் என்க.

உற்றவினை = தான் ஆற்றுமாறு அமைந்து நின்ற காரியம். ஒல்லும் வாய் உறும்வரையும் ஒடுங்கியிருந்து பின்பு உற்றபொழுதே உடனெழுந்தாலுதலால் ஓர்ந்தவுடன் என்றும். கொற்ற முறச் செய்தான் என்றது தன் தந்தையைத் தொலைத்தவனைத் தான் தொலைத்து வெற்றித் திருவோடு விளங்கி நின்றமை கருதி. இது, முற்றுந்திறம் நாடிவினையை முடிக்கவேண்டும் என்கின்றது.

ஒல்லும்வாய் = இயலும் இடம் ; என்றது தடையின்றித் தன்காரியம் முடியும் இடத்து. ஒல்லல் = இயலல், முடிதல், இசைதல், பொருந்தல்.

ஒல்லாக்கால் = முடியாத இடத்து. பாசறையல்லது நீ யோல்லாயே என்றது புறம்.



யாதொரு தடையுமின்றித் தன் கருத்து நிறைவேறுமாயின் தான் கருதிய வினையைப் பருவந் தப்பாமல் முடித்துக்கொள்க; அங்ஙனம் நிறைவேறுதென்று தெரியின் அது நிறைவுறுதற்கு வேண்டிய உபகரணங்களைத் தொகுத்துக்கொண்டு பொறுத்திருந்து எற்றதோர் உபாயத்தால் அதனை ஆற்ற வேண்டும் என்றவாறு.

மேல், வினைகளின் இனமறிந்து செய்க என்றார்; இதில், வினையாளன் தன் நிலைமையை யுணர்ந்து அதற்கியைய அவற்றைச் செய்ய வேண்டும் என்கின்றார்.

தடையின்றி முடியும் இடத்தெல்லாம்

தன் காரியத்தைத் துணிந்து செய்தல் நல்லதே ; அங்ஙன முடியாத இடத்து அஃது இனிது முடிவதோர் உபாயத்தை நாடிச் செய்க என்பதாம்.

தன் வினை இனிது முடிதற்கு ஏற்றவிதத்தை முன் எண் ணிச் செய்யவேண்டும் என்பது கருத்து.

ஒல்லும் இடத்து உன் வினையைப் போர்வகையில் செய்க ; ஒல்லாத இடத்துச் சாமம், பேதம், தானம் என்னும் மூன்று உபாயங்களுள் இயைபு நோக்கி ஏற்ற தோன்றல் அதனை ஆற் றுக என இயல் நோக்கி இதனை அமைத்துக் கொள்ளினுமாம்.

ஒல்லும் இடமும், செல்லும் விதமும், தேர்ந்து வினைசெய்ய வேண்டும் என்பது குறிப்பு.

உள்ளியதை ஊக்கிமுடிக்க இயலவில்லையாயின், அது இய லும் இடம் நோக்கி அறிஞர் முயல்வர் என்பது இதில்

உணர்த் தப்பட்டது. இவ்வுண்மை மிஞிலிபால் உணரப்படும்.

கதை.

மிஞிலி என்பவன் சோழ மண்டலத்திலே அன்னிகுடி என் னும் நகரிலிருந்த குறு நிலமன்னனாகிய அன் னியினுடைய புதல்வன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டு கட்கு முன்னாம். இவன் அறிவும் மானமும் அமைதியு முடைய வன். தான் கருதிய எதனையும் உறுதிபெற முடிப்பவன். இவ னுடைய தந்தைக்கும் திருவழுந்தூரிலிருந்த திதியன் என்னும்

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1637

குறுநில மன்னனுக்கும் பெரும்பகை மூண்டிருந்தது. குறுக்கை என்னும் இடத்தில் அவன் வைத்து வளர்த்த காவன் மரமாகிய

புன்னையை அன்னிபோய் வெட்டி வீழ்த்த அதிகாரணமாக அங்
குப் பெரும்படை திரண்டது. கொடும் போர் நிகழ்ந்தது. அதில்
அன்னியின் கண்ணை அவன் பிடுங்கிவிட்டான்.

பயங்கெழு வைப்பிற் பல்வேல் எவ்வி
நயம்புரி நன்மொழி அடக்கவும் அடங்கான்
பொன்னிணர் நறுமலர் புன்னை வெஃகித்
திதியனொடு பொருத அன்னி போல; என நக்கீரரும்,

அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிய

நன்னர் மெல்லிணர்ப் புன்னை போல

; எனக்கயமனாரும்,

அன்னி குறுக்கைப் பறந்தலைத்

திதியன்

புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்

இன்னிசை யார்ப்பினும்

பெரிதேயானே ; என வெள்ளி வீதியாரும்,
இவன் கதையை உள்ளிக் கூறியுள்ளார். தன்

தந்தை

யைத் தொலைத்த அத் திதியனை வெல்லக்
கருதிய இவன் அது பொழுது ஒல்லாமை தனை
வுணர்ந்து செல்லும்வாய் நோக்கிச் செற்ற
முற்றிருந்தான். இருந்த இவன், பின்பு
குறும்பியன் என்பவ
னைத் துணைக்கொண்டு அமையமறிந்துபோய்

அவனை அடியோ

டழித்தான். இவனது மனத்திடத்தையும்
வினைத்திறத்தையும் மதிமாட்சியையும் வியந்து

அவனமர்ந்திருந்த திருவழுந்தூரிலே யே சிறந்த ஆரவாரத்துடன் இவனை எழுந்தருளச் செய்து அனை வரும் இறை செலுத்தி நின்றார். முன் போர்புரிந்த குறுக்கை என்பது இது பொழுதுள்ள கும்பகோணத்துக்குத் தென்பால் இரண்டு மைல் தூரத்திலிருந்த தென்பர். செல்லும் இடம் நோக்கித் தன் வினையைச் செய்து முடித்துத் திருவும் புகழும் எய்தி இவன் சிறந்து விளங்கினனதலால் ஒல்லும் வாயெல்லாம் வினை
நன்றே, ஒல்லாக்கால் செல்லும்வாய் நோக்கிச் செயல் என்னும் உண்மைக்கு உரிமையா யீண்டு உள்ள நின்றான்.

வாய்மொழித் தந்தையைக் கண்களைத் தருளர

தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்

வெண்பா.

கலத்து முண்ணுள வாலிது முடாஅள
சினத்திற் கொண்ட படிவ மாறுள்
மறங்கெழு தானைக் கொற்றக்
குறும்பியன்
செருவியல் நன்மான் றிதியற்
குரைத்தவ
ரின்னுயிர் செகுப்பக் கண்டுசின
மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்
மலிந்து
ஆனு வுவகையே மாயினேம்.
(அகம்.)

திதியனை வெல்ல விரும்பிய இவள் செல்லும் வாயறிந்து வினையைச் செலுத்தி முடித்த திண்மையும், மேற் குறித்த வுள்ளமையும் இதனுள்ளும் விளங்குதல் காண்க.

தலைவியை நீங்கிச் செல்லுங்கால் தலைவன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதாகத் துறை யமைத்துப் பாணரால் இது பாடப்பட்டது.

இயலுந் திறமறிந்து வினைசெய்யவேண்டு என்பது இதனால் கூறப்பட்டது.

---

674 அன்றேன் வினையொழிவை அஞ்சி வளவன்பின்
குன்றுமற் செய்தான் குமரேசா—நின்ற
வினைபகை யென்றிரண்டின் எச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.
(ச)

இ—ள்.

குமரேசா! கரிகால்வளவன் வினையின் ஒழிவை அஞ்சி என் அதனை விரைந்து

தீர்த்தான் எனின்; வினை, பகை என்று இரண்டின் எச்சம், நினையுங்கால் தீ எச்சம் போலத் தெறும் என்க.

அன்று என்றது காவிரியில் அணைகட்டிய அக்காலத்தில் என்றவாறு. வினையெச்சம் தீ எச்சம் போலத் தெறும் என்று தெளிந்திருந்தானாதலால் அஞ்சாத வளவனும் அஞ்சினான் என்க. குன்றுமல் செய்தான் என்றது பின்பு எஞ்சாமல் செய்து முடித்தமை கருதி.

வினைக்குறையால் கேடுவிளையுமாதலால் ஒழுகவேண்டுமென்று இஃதுணர்த்துகின்றது.

அதனை ஒழித்து

68-ம் அதிகாரம்

வினைசெயல்வகை. 1639

எச்சம் தெறும் என இயைத்துக் காண்க.

ஈண்டு எச்சம் என்றது மிச்சத்தை; எஞ்சி நின்றதென்பதாம். தெறும் = அழிக்கும்; திருந்தார் தெம்முனை தெறுதுவர் எனவும், தெறு கதிர்க் கனலி எனவும் வருவன காண்க.

செய்யத் தொடங்கிய வினையிலும், களையத் தொடங்கிய பகையிலும் சேடம் வைத்தலாகாது என்றருள, அங்ஙனம் வைத்து விடின் அதனால் என்ன வந்துவிடும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க. இயலுரிமையின் தலைமைதோன்ற வினை, முதலில் நின்றது.

வினை எச்சத்தின் தீமையைத் தெரித்தற்குப் பகையின் எச்சத்தை உடன் வைத்துணர்த்தினார்; அங்ஙனம்

உணர்த்தியும் உணராதவர்க்குத் தீயின் எச்சத்தையும் பின் சேர்த்துக்காட்டினர் என்க. வினை பகை தீ என்னும் இம் மூன்றன் எச்சத்தால் உளவாகும் கேடுகள் ஒன்றினும் ஒன்று எளிதில் தெளிவாதல் காண்க.

மேல், செல்லும் வாய் நோக்கி வினைத் திருந்தச் செய்க என்றார்; அங்ஙனஞ் செய்யாது சிறிது ஒழியவிடின் அழிவுவரும் என்று இதில் அறிவுவர அருளினர்.

வினையென்றும், பகையென்றும் சொல்லப்படுகின்ற இரண்டினது மிச்சம் ஆராயுங்கால் தீயின் சேடம்போல் தீங்கு பயக்கும்

என்பதாம்.

என்று என்னும் எண்ணிடைச் சொல்பிரிந்து சென்று வினை யோடும் இசைந்து நின்றது.

என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடோறும்
நேரும். என்றது இயல்.

செய்யப்படுந் தொழிலில் எச்சமாகச்
சிறிது மிச்சம் வைப்
பின் குறைபடக் கோலிய நீரணைபோல முன்
செய்ததும் வீணாய்;
ஆகவே பயனொழிந்து பழிப்பு மிகுமாதலால்
வினை எச்சம் தீ எச் சம்போலத் தெறும்
என்றார். கருமசேடம் கனலினுங் கொடிதே
என்பதுங் கருதத்தக்கது.

1 640 திருக்குறட் குமரேச
வெண்பா.

தனக்குப் பகையாயுள்ளவரை
யழிக்குங்கால் அனைவரையும் அறவே
யழியாமல் இவன் சிறவன்தானே யென்று
ஒருவனை இகழ்ந்து விட்டுவிடின் அவன்
மறைந்து வளர்ந்து பின் இடங்காலம்
நோக்கிவந்து மாரீசன்போல் பேரிடர்

விளைப்பதலால் பகை எச்சமும் அரசர்க்கு ஆகாதெனவுடன் வைத்துணர்த்தினர். தான் இகழ்ந்து விட்டிருந்த சுக்கிரீவன் பின் வளர்ந்துவந்து தன்னை ஒரு கோலால் கொல்வித்தபொழுது பகைஎச்சத்தின் கொடுமையை நினைந்து வாலிகொதித்துக் கூறியதும் ஈண்டுக்குறித்துக் கொள்க.

ஓர் இல்லில் பற்றிய நெருப்பை அவிக்குங்கால் சிறிது எஞ்சி நின்றது; இனி இது என்செய்யுமென்று அனைவரும் பராமுகமாக இகழ்ந்து சென்றார்; செல்ல அது மெல்லவளர்ந்து நடுயாமத்தில் அயலிருந்த இல்லிற் பற்றி அதன்பின் அடுத்தும் தொடர்ந்து அங்ஙனமே அவ்வூர் முழுவதையும் எரித்துத் தொலைத்தது; தீ எச்சத்தால் நேருந் தீமையை அன்று நேர்ந்து கண்டு எல்லாரும் நெஞ்சம்நடுங்கினர்; ஆதலால் வினை, பகை, நோய், கடன் முதலிய தெறும் இயல் புள்ள எச்சங்கட்கெல்லாம்

உவமையாக அஃது எண்ணநின்றது.

செய்யுந் தொழிலில் சேடம் வைத்தலாகாதென்பது கருத்து.

வினை, பகைகளில் எச்சம் வைக்காமல் அறிஞர் எண்ணி முடிப்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கரிகால்வளவன்பால் உணரப்படும்.

## கதை.

கரிகால்வளவன் காவிரிப்பூம்பட்டினத்திருந்து அரசு செய்து வருங்கால் தன் நாட்டுக்கு உயிர் போன்றமைந்துள்ள காவிரி நதியில் ஓர் அணை கட்ட விழைந்து தன் குடைக்கீழ்ப்பட்ட குறுநில மன்னரைக் குறிக்கொண்டு விடுத்தான்; விடவே பல்லாயிரந் தொழிலாளர்களை விடுத்துத் தத்தமக்குரிய பாகத்தை அவர் கட்டி முடித்து மன்னன் முன் வந்து மகிழ்வுற மொழிந்தார்.

இவன் இன்னருள் செய்து எழுந்து சென்று ஆக்கியுள்ள அணை யை நோக்கி வருங்கால் கட்டப்படாமல் இறிது எஞ்சி நின்றது.

## 68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1641

அவ் எச்சம் யாருடையதென்று அருகில் நின்ற சுதன்மன் என்னும் அமைச்சனை வினவினன். அது முகரியுடையதென்று அம் மதி மந்திரி பகர உடனே அவன்போல் ஒருபடம் எழுதிவரச் செய்து அப்படத்திலுள்ள அவன் கண்ணை மந்திர முறையோடு ஒரு கோலால் குத்தினன். இங்கு இது செய்யவே அங்கு அவன் கண்கலங்கிக் குருடுபட்டது அவன் சிற்றரசரைபினும் பெருந் திறலுற்றவன். எவ்வாயும மதியாத பெருமிதமுடையவன். பிரதாபருத்திரன் என்னும் புனைவுபெயரினன்.

தனதுகுற்றத்தை யுணர்ந்து உறவோடெழுந்து

விரைந்து வந்து தன் குறையாய் நின்ற அவ்
அணையை முடித்து இவனை அடி தொழுது
நின்றான். அதன்பின் அவனை இவன்
ஆதரித்து விடுத்தான். இங்ஙனம் வினைகளை
வழுவற முடித்தும், பகைவரை யடக்கியும்
புகழுடன் இவன் விளங்கிவருங்கால் வழுதி,
சேரன் என்னும் இருபெரு வேந்தரும், சில
குறுநில மன்னரும் இவன் மேல் கறுவு
கொண்டு நின்று ஒரு முறை
பொருபடையுடன் வந்தார். வெண்ணி என்
னும் ஊர்ப்புறத்தே அவரனைவரையும் வென்று
மீண்டு அதன்பின் எங்கும் பகை இல்லாவாக
இவன் எண்ணி ஆற்றினான். வினை
பகைகளில் மிச்சம் வைக்காமல் செய்து
இமயமலைவரையும் சென்று வென்று
தன்குடையும் கோலும் எங்கும் தடையறச்
செலுத்தினான். வினை பகை என்றிரண்டின்
எச்சம், நினையுங்கால் தீ எச்சம்
போலத்தெறும்; ஆகலால் அதனை

மொழித்தொழுக வேண்டு மென்னும் உண்மையை உலகம காண இவன் உணர்த்துகின்ருன்'

செண்டு கொண்டுகரி காலஞெரு காலி னிமயச்

சிமய மால்வரை திரித்தருளி மீள வதனைப்

பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்

பாய்புலிக்குறி பொறித்தது மறித்த பொழுதே

தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்

ருேடா வந்திடா முகரியைப் படத்

தெழுது கென்றுகண் டிவைமி கைக்கணென்

றிங்க ழிக்கலை யங்க ழிந்ததும்
எனக் கலிங்கத்துப் பரணியிலும்,

வெண்பா.

களியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ
சென்றமர்க் கடந்தநின் ஆற்றல்
தோன்ற
வென்றோய் நின்னினும் நல்ல னன்
றே
கலிகொள் யாணர் வெண்ணிப்
பறந்தலை எனப் *புறத்தி
காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க்
கரிகால் [லும்,
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத்

தொழியப்

பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா வழுந்தூர் ஆர்ப்பினும்

பெரிதே என அகத்தி

மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட

வாராதான் [னும்,

கண்கொண்ட சென்னி கரிகாலன்

எனக் குலோத்துங்க சோழனுலாவினும்,

சென்னிப் புலியே றிருத்திக்

கிரிதிரித்துப்

பொன்னிக் கரைகண்ட பூபதி என

விக்கிரம சோழனு லாவினும், மேற்குறித்த இவன் சரிதம் விளக்கப்பட்டுள்ளது.

நேர்ந்தவினையை நிறைவுறச்

செய்யவேண்டும் என்பது இதனால்

கூறப்பட்டது.

---

675 ஆர்ந்த கருவியிடம் ஆய்ந்து மலையமான்

கூர்ந்து செய்தான் என்னே குமரேசா—சார்ந்த
பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருடீர வெண்ணிச் செயல்.

இ—ள்.

(ரு)

குமரேசா! மலையமான் என்பவன் கருவி இடம் காலமுதலிய வற்றை வழுவற ஆராய்ந்துகொண்டு பின்பு என் வினை செய்தான் எனின், பொருள், கருவி, காலம், வினை, இடன் ஒடு ஐந்தும் இருள் தீர எண்ணிச் செயல் என்க.

68-ம் அதிகாரம்

வினைசெயல்வகை. 1643

ஆர்ந்த = பொருந்திய, நிறைந்த. ஆய்ந்து = ஆராய்ந்து. கூர்ந்து = நுனுகி நோக்கி, தன் வினைமுடிவுக்கு வேண்டிய படை பொருள் இடம் முதலியவற்றை

முதலில் நன்றாகத் தெளிந்து அமைத்துக் கொண்டான் ஆதலால் ஆர்ந்த கருவியிடம் ஆய்ந்து என்றும்.

தான் கருதிய வினையைச் செய்தற்குமுன் தெளிவுற ஒருவன் எண்ணவேண்டியவை இவை என இஃதுணர்த்துகின்றது. ஒடு என்னும் எண்ணிடைச் சொல்லைப் பொருள் முதலியவற்றோடு தனித்தனி கூட்டிக்கொள்க. பிறவுமுளவேனும் அவை இவ்வைந்துள் அடங்குமாதலால் ஐந்தும் என முற்றும்மையாற் கூறினார்.

இருள்தீர எண்ணி = மயக்கமற ஆராய்ந்து. இருட்டு, கருமை முதலியவற்றைப் புணர்த்திவரும் இருள் என்னுஞ் சொல் ஈண்டுமயக்கத்தைக் குறித்து நின்றது. ஐந்து இருள் அற நீக்கி என்றது பரிபாடல். மயக்கமாவது ஒன்றை மற்றொன்றாகக் கருதி மருளுதல் ; இது,

தெளிவுக்கு மறுதலையாயது ; இதனைத் திரிபு என்பர் ; ஐயத்தினும் இது வெய்யது.

ஒரு காரியத்தைச் செய்து முடித்தற்கு உரிமையாக வேண்டப்படும் உபகரணங்களுள் பொருள் சிறந்தது ஆதலால் அதனை முதலில் வைத்தார். அடுத்துள்ளவற்றின் இயல்புகளையும் வைப்புமுறை நோக்கி யுய்த்துணர்ந்துகொள்க.

மேல், எச்சம் வையாமல் வினையை முற்றுறச் செய்க என்றார் ; இதில் அங்ஙனம் எஞ்சாமல் செய்தற்கு வேண்டிய உபகரணங்களை முன்னதாகவே தெளிவாக எண்ணிக்கொள்க என்றார்.

பொருளும் கருவியும் காலமும் தொழிலும் இடமும் என்னும் இவ்வைந்தனையும் ஐயமற எண்ணிப் பின்பு வினையைச் செய்க என்பதாம்.

எண்ணாது செய்யின் வினை இனிது முடியாமையோடு இழிவும் நேருமாதலால்

எண்ணிச் செயல் என்றார்.
206



தன் காரிய நிறைவுக்குவேண்டிய காரணங்களை முதலில் நன்றாக அமைத்துக்கொண்டு அதன்பின் அதனைத் தொடங்கவேண்டும் என்பது கருத்து.

தனக்குள்ள பொருளும், அமைந்த படையும், ஆனகாலமும், எதிர்ந்தவினையும், ஏற்றஇடமும் என்னும் இவற்றால் தனக்கும் மாற்றானுக்குமுள்ள ஏற்றத் தாழ்வுகளைத் தூக்கி நோக்கித் தன் அரசனுக்கு ஆக்கம் பயக்கும் வகையில் அமர் முதலிய வினைகளை அமைச்சன் ஆற்றவேண்டும் என அதிகாரத்தோடு பொருந்த இதனை அமைத்து

நோக்குக.

இடம் பொருளேவல்களை நன்றாக ஆராய்ந்து தெளிந்து கொண்டே ஒரு வினையைத் தொடங்கவேண்டும் என்பது குறிப்பு.

எற்ற கருவிகளை எதிராறிந்து செய்வோர்க்கு எல்லாக் காரியங்களும் எளிதில் முடியும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மலையமான் பால் உணரப்படும்.

கதை.

மலையமான் என்பவன் மலையமா நாட்டுள்ள கோவலூரி லிருந்து அரசுபுரிந்த குறுநில மன்னன். இவன் அறிவும் தகவும் ஆற்றலுமுடையவன். வீரவள்ளலாய் விளங்கியிருந்த திருமுடிக் காரியின் அருமைப் புதல்வன். பெருங்கொடையாளன். இவனது

காலம் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற் றைம்பது ஆண்டுகட்கு

முன்னராம். மிக்கவளமுடைய முள்ளூர் மலையைத் தனக்கு உரிமையாக வுடையவன். கனிமரங்களாலும் பிற நலங்களாலும் அம்மலை மிகச் சிறந்தது. முரண்கோள் துப்பிற் செவ்வேள் மலை

யன், முள்ளூர்க்கானம் எனக் குறுந்தொகையினும், தொலையா நல்லிசை விளங்கு மலையன், மகிழா தீத்தவிழைபணி நெடுந்தேர், பயன்கெழு முள்ளூர் மீமிசைப், பட்டமாரி யுறையினும் பலவே எனப்புறத்தினும், கபிலரால் அது புகழப்பட்டுள்ளது. இவன் காலத்தில் உறையூரிலிருந்து அரசுபுரிந்துவந்த சுபதேவன் என் னும் சோழமன்னன் இவன்பால் பேரன்புடையனாயிருந்தானாத லால் அவனுக்கு உயிர்த் துணைவனாய் நின்று உதவிகள் பல

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.
1645

இவன் உளுற்றிவந்தான். எண்ணிய வினையை இனிது முடிக்குந் திண்ணியனாய இவனை மந்திரியாகவும், தந்திரியாகவும் அமைத்து

க்கொண்டு அவன் மகிழ்ந்துவருங்கால் பகைவர் வந்து வளைந்து பெரும்போர் புரிந்தார். அதில் அவன் படைகள் பொருமுரணழிந்து புறங்காட்டி ஓடின. அவ்வமையம் இவன் சூழ்ச்சியோடு துணிந்து புகுந்து தனக்கு உறுதியாய இடத்தில் நின்று சோழனது வெற்றிக் குடையை விளங்க நிறுத்தி வீரமுழக்கஞ் செய்தான். அதனால் ஓடிய படைகள் உடனே மீள இவன் உடன்று பொருது பகைவரனைவரையும் ஒருங்கே வென்றான். முன்னமுகத்தில் நின்று இவன் செய்தவினையாண்மையைச் சோழன் அறிந்து மகிழ்ந்து ஏனாதி என்னும பட்டமும் தந்து உரிமையாகச் சில ஊர்களும் உதவி உவந்து புகழ்ந்தான். ஏனாதி என்பது அரசனால் உவந்து கொடுக்கப்படுவதோர் பட்டப்பெயர். மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணன் எனச் சிறப்புப் பெயரோடு இவன் அழைக்கப்படுவான். தனக்கு வலியான

இடங்காலங் களைத் தெளிவாக அறிந்து வினை செய்ததனால் சிறந்த புகழுடன் இவன் விளங்கி நின்றான். பொருள் கருவி காலம் வினை இடனொடைந்தும் இருள்தீர எண்ணிச் செயல் என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய் நின்றான். இவனது குணஞ்செயல்களை வியந்து மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவர் பாடியுள்ளார். அப்பாடலை இதன் அடியில் தருதும். அதன் பொருளை ஆய்ந்துகாண்க.

- அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்

சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவால் தீரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்கு
அரசிழந் திருந்த அல்லற்காலை
முரசெழுந் திரங்கு முற்றமொடு கரைபொரு

திரங்குபுன னெரிதரு மிகுபெருங் காவிரி
மல்ல னன்னாட் டல்லல் தீரப்
பொய்யா நாவிற் கபிலன் பாடிய



வெண்பா.

மையணி நெடுவரை யாங்கணொய் யெனச்
செருப்புகன் மறவர் செல்புறங் கண்ட
எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை
யருவழி யிருந்த பெருவிறல் வளவன்
மதிமருள் வெண்குடை காட்டி யக்குடை
புதுமையி னிறுத்த புகழ்மேம் படுந!
விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்
ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென்
றுணீஇய ருயர்ந்தோருலகத்துப் பெயர்ந்தன
னாகலின்
ஆறுகொள் மருங்கின் மாதிரந் துழவுங்
கவலை நெஞ்சத் தவலந் தீர
நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்!

கல்கண் பொடியக் கானம் வெம்ப
மல்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்
கோடை நீடிய பைதறு காலை
யிருநில நெளிய வீண்டி
யுருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே.

பைதறு காலை மழைபொழிந்தாங்கு அவலந் தீர நீ தோன்றினை என அமைத்துக் காண்க. பைதறு = பசுமையற்ற.

அமரர்கட்கும் அசுரர்கட்கும் அமர் நிகழ்ந்துழித் தங்கள் வலி மிகு காலமாகிய நிசியினை யடையவேண்டிச் சூரியனைக் கவர்ந்து கொண்டுபோய் அசுரர் சிலர் மறைந்து நிற்ப அவ்வமையம் திருமால் சென்று அக்கதிரைக் கொணர்ந்து நிறுத்தி அமரரை ஆதரித்தது போல், படைதொலைந்தபொழுது இவன் புகுந்து வென்று வளவன் குடையை நிலைநிறுத்தினன் ஆகலால் அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு வளவன்குடை புதுமையினிறுத்த புகழ் மேம்படுந என்று இதில் இவன் போற்றப்பட்டான். இவனது வன்மையும், திண்மையும், மன்னுயிர்க் கிரங்குந் தன்மையும், எதையும் இருள்தீர எண்ணிச்செய்யும் ஒண்மையும் மேற்குறித்த வுண்மையும் இதில் ஒளிர் கின்றன; ஊன்றியுணர்க.

தன் நிலைமையைத் தெளிவாக அறிந்து
டும் என்பது இதனால் கூறப்பட்டது.

வினைசெயல்வகை. 1647

676 முற்றியபின் எய்துபயன்
முன்னியேன் காளிங்கன்
கொற்றமுறச் செய்தான் குமரே
சா—உற்ற
முடிவு மிடையூறு முற்றியாங்
கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.
(சு)

இ—ள்.

குமரேசா! முடிந்தபின்பு
எய்துகின்றபயனை எண்ணி எக்
காளிங்கராயன் முன்பு துணிந்து
வினைசெய்தான் எனின், முடிவும் இடையூறும்

முற்றியாங்கு எய்தும் படுபயனும் பார்த்துச்
செயல் என்க.

முற்றியபின் எய்து பயன்முன்னி
என்றது தான் தொடங்கிய காரியம்
முடிக்கபின்னர் அதனால் தனக்கும் பிறர்க்கும்
உண்டாம் பயனை முன்னதாகவே எண்ணி
நின்றமை கூறி. உற்ற தடைகளுக்கெல்லாம்
உளங்கலங்காமல நின்று எடுத்த வினையை
முடிமன்னரும் வியக்கத்தக்கபடி முடித்து
விளங்கினான் ஆகலால் கொற்றமுறச்
செய்தான் என்றும். உற்ற என்றது
பொருந்திய என்றவாறு.

இது, தான் செய்யும் வினையால் எய்தும்
பயனை எதிர்ந்து செய்க என்கின்றது.

முடிவும் = வினை இனிதுமுடியும்
விதமும். இடையூறும் = இடையிலே
தோன்றுகின்ற தடைகளும்.

முற்றி ஆங்கு = முடிந்தபொழுது.
என ஆங்கு எழுசமங்க டந்த என்புழிப் போல

ஆங்கு என்பது ஈண்டுக் காலந்தோன்ற
நின்றது. பார்த்துச்செயல் = நோக்கிச்
செய்க; நோக்கல் உளக்
கண்ணால் ஆராய்தல். எய்தும் பயன்
என்றது படு என்பதை
இடையே படுத்தியது எற்றுக்கோ
எனின், முடிவுற முதலில்
தொடங்கிய முயற்சிக்கும், இடையே
இளைத்த தடைகளுக்கும்,
அவற்றை நீக்கி முடித்த ஆற்றலுக்கும்,
ஏற்றபடி பெரும் பயனை
நோக்கி என்க. படு என்றது ஈண்டு
மிகுதிக் குறிப்பை யுணர்த்
தின்றது. படுகளி வண்டார்ப்ப;
எனவும், படுகடன் ஆதியிற்
பட்டதை நினையான்; எனவும் வருவன
வற்றுள் படுசொல் மிகு 1648
திருக்குறட் குமரேச வெண்பா.

கிளை யுணர்த்தி நிற்றல் காண்க.
பெரும்பொய்பனைப் படுபொய்
யன் என்பர். முடிவுக்கு எய்தும் பயனும்,
இடையூற்றுக்குப் படு
பயனும் என இயைத்து நோக்கினும்
அமையும்.

மேல், வினைக்குவேண்டிய சாதனங்களை
முன்னதாக நன்கு
அமைத்துச் செய்க என்றார்; இதில்,
அவ்வினையின் முடிவையும்
அதனால் வரும் பயனையும் ஆராய்ந்து செய்க
என்கின்றார்.

தான் தொடங்கிய வினை தொடர்ந்து
முடியும் வகையையும்,
அதற்கு இடையே தோன்றும் தடையையும், அது நீங்கி முடிந்
தால் அதனால் எய்தும் பெரும் பயனையும் முன்னதாகவே சீர்
தூக்கி நோக்கி ஒருவன் செய்யவேண்டும்

என்பதாம்.

பயனெய்தாமைபோடு இடரும் பயப்பதாய வினையை எண்ணாமல் செய்த அறிவிலிகள் இழிவுறுவார்களால் அங்ஙனம் உறா வண்ணம் எதையும் முன்னதாக நன்கு எண்ணி அறிவுடைய அமைச்சர் செய்யவேண்டும் என்பார் பார்த்துச் செய் என்றார்.

காரணம் தப்பினால் மாரணம் என்றபடி துயருறுக் எவ்வகையினுந் தொடலாகாதென்பது குறிப்பு.

தொழில்

கடைபோகா வாயினலங் காட்டா வெனினும்
இடரில செய்க இருநீர்க் கிணறு
திடனுறத் தாண்டிற் சிறந்திழுக்கு

மேலும்

இடைசெய்தல் தப்பாமை யின்.

என்றதும் ஈண்டு எண்
ணத்தக்கது. பின்பு பெரும்பயன் தருமென்று தெரிந்தால் அவ் வினையை அறிஞர் வருந்தியு முடிப்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை காளிங்கன் பால் உணரப்படும்.

## கதை.

காளிங்கன் என்பவன் இற்றைக்கு அறுநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்க் கொங்கு நாட்டிலே பூந்துறைவாம்பிலே வெள்ளோடை யென்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவன். இவன் மிக்க மதிவன்மையுடையவன். பருவமெய்திய பின் அரியநூல்கள் பலவும் பயின்று எத்துணைப் பெரியகாரியந் தனையும் எளிதில் முடிக்கும் உறுதியாளனாய் உயர்ந்து விளங்கி

## 68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1649

னான். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த அதிவீரன் என்னும் பாண்டியவேந்தன் இவனது உண்மை

திண்மைகளை யுணர்ந்து தனக்கு அமைச்சனாக இவனை அமைத்துக்கொண்டான். அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவனாய் நின்று குடிகள் இன்புற இவன் கோமுறை புரிந்தான். பொருள் வருதற்குரிய வாயில்களை விரியச் செய்து நிலங்களை வளம்படுத்திச் செல்வங்களை வளர்த்து எய்துவ எவற்றையும் எதிர்ந்து காத்தான். தான் தொடங்கிய வினைகளையெல்லாம் முடங்காது முடித்தும், அடங்கலர்க்கு மடங்கலேறு போன்றும் இவன் மன்னிவருவதை மன்னன் நோக்கி மகிழ்ச்சி மீக்கூர்ந்து அரியவரிசைகள் பலவும் உரிமைபுரவுதவி உவந்துபேணினான். எதையும் வழுவறத் தெளிந்து பழுதற முடிக்கும் இவனது வினைசெயல் வகைகளை மறுபுல அமைச்சரும் மதித்துப் போற்றினர். பின்பு, தான் பிறந்த நாட்டிற்கும் சிறந்த

நலங்களைச் செய்ய விரும்பிப் பன்னாளுஞ் சூழ்ந்து பவானி நதியில் ஓர் அணை கட்டத் துணிந்து யாவரும் வியப்ப ஆற்றி முடித்தான். அது, காளிங்கராயன் அணை என்று இன்றும் இவன் பெயரால் நின்று நிலவுகின்றது. அவ் அணை நீரால் எய்திய பெரும் பயனையும் இவனது வினையாண்மையையும் அனைவரும் வியந்து புகழ்கின்றார்.

திரைகொண்ட வாரியை மாலடைத்தான் செழுங் காவிரியை
உரைகொண்ட சோழன் முன்னடைத்தானுல கேழறிய
வரைகொண்ட பூந்துறை நன்னாடு வாழ்கவவ் வாணிதனைக்
கரைகொண்டடைத்தவன் வெள்ளோடை சாத்தந்தை காளிங்கனே
எற்று திரைப்பொன்னி கூடுறுவாணி யிடைபடக்க

வெற்றி மிகுத்த அதிவீர பாண்டிய வேந்தமைச்சன்

கற்ற அறிவினன் காளிங்க ராயன் செய் கால்கழிநீர்

உற்ற வனத்தை வளவயலாக வுயர்த்தியதே.

என்று புலவர் சிலரும் இவன் வினை நலத்தை வியந்து பாடியுள்ளார்.

ஒருவினையைச் செய்யுங்கால் அதனை முடிக்கத் துணிந்த தன் உழைப்புக்கும், இடையே மிடைந்து வரும் தடைகளுக்கும் அஞ்சாமல், முடிந்தபின் எய்தும் பயனைச் சீர்தூக்கி நோக்கிச் செய்த இவன் பேர்பெற்று நின்றான். முடிவும் இடையூறும் 1650 திருக்குறட் குமரேச வெண்பா.

முற்றியாங்கு எய்தும் படுபயனும் பார்த்துச்

செயல் என்னும் உண்மையை உலகம்
இவன்பால் பார்த்துநின்றது.

காவிரி யோடு கலக்குறு வானியைக்
கட்டனை நீர்

பூவிரி செய்களுக் கூட்டிநற் காஞ்சி
புத்தகிசை

தேவர்கள் சாப்பவர் பாவாண செல்
லாந் தினமகிழ

மாவிசபம்பெறு காளிங்கனுங்
கொங்கு மண்டலமே. எனக் கொங்குமண்டல
சதகத்தினும் இவன் சரிதங்கூறப்பட்டுளது.

வினையாலெய்தும் பயனை முதலிற்
சீர்தூக்கிச் செய்யவேண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

677 பண்டு சுமாலி பணியசார்
கோனைபுனக்

கொண்டுசெய்தான் என்னே
குமரேசா—கண்டமற்

செய்வினை செய்வான் செயன்முறை
யவ்வினை

யுள்ளறிவான் உள்ளங் கொளல்.

(எ)

இ—ள்.

குமரேசா ! சுமாலி அசுரர்கோனை
உளத்திற்கொண்டு தன் வினையை என் ஹன்றிச்
செய்தான் எனின், செய்வினை செய்வான்
செயல் முறை, அவ்வினை உள் அறிவான் உள்ள
ங் கொளல் என்க.

பண்டு என்றது திருமால் அரக்கரை
யழித்தொழித்த பின்
பாதலத்துப் புக்கிருந்த அக்காலத்தை.
அசுரேந்திரன் செய்து போந்தவுபாயத்தையே
தான் சிந்தித்துச் செய்தான் ஆதலால்

கோனையுளங்கொண்டு பணிசெய்தான் என்றும்.
பணி = தொழில்.

தண்டாமல் = நீங்காமல்; இந்த உடல் நீங்கும்வரையும் நீங்காது வினையின்கண் ஊக்கித்திற்றல் வேண்டும் என்னும் உண்மை தோன்ற நின்றது.

டீன்

இது, முன்செய்து கைதேர்ந்த ஒருவனது கருத்தை காரியத்தைச் செய்க என்கின்றது.

நோக்கி

செயன் முறை உள்ளங்கொளல் எனச் சேர்த்துக் காண்க, 68-ம் அதிகாரம்
வினைசெயல்வகை. 1651

செய்வினை = செய்யப்படுந் தொழில்;
வினை என்றது செய் என்று முன்

எய்தவைத்தது எற்றுக்கோ எனின், வழக்கிலுள்ள
அதன் நிகழ்ச்சி தோன்ற என்க. செய்வினை மடிந்தோர்ச் சேர்க் துறை விலலேள, மைபரு தாமரை மலர்மகள்; என்றதுங் காண்க.

நான் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கின் அத்தகைய
காரியத்திற் கைதேர்ந்த ஒருவன் முன் செய்துபோந்த உபாயத் தைக்
கருதிக்கொண்டு அதின்படி செய்தால் அஃது இனிது முடியும் என்பார் அவ்வினை உள்ளறிவான் உள்ளங் கோளல் என்றார்.

மேல், முடிவும் பயனுமுன்னறிந்து வினை செய்பவேண்டும் என்றார்; இதில் முன்செய்து போந்தவன் செய்த
படியினையறிந்து அதனைப் பற்றுக என்கின்றார்.

செய்யத்தகும் வினையைச்
செய்கின்றவன் செய்யும் முறைமையாவது அவ்வினையின் உளவினை உணர்வானது

உட்கருத்தை உணர்ந்துகொள்ளுதல் என்பதாம்.

தனக்கு ஒரு காரியத்தில் தேர்ச்சியில்லையாயின் அதில் கை தேர்ந்த ஒருவன் கருத்தை ஓர்ந்து அதனைச் செய்யவேண்டுமென்பது கருத்து.

தான் கருதிய வினை இனிது முடியாமையால் மீண்டும் அதனைச் செய்யத் தொடங்குகின்றவன் அத்தகையதொன்றை முன் முயன்று முடித்தவன் பயின்ற வுபாயத்தைத் தான் உணர்ந்துகொள்ளவேண்டும் என்று இஃதுணர்த்தியதென்க. தூக்கி வினைசெய் என்றதும் ஈண்டு நோக்கத்தக்கது.

தேர்ந்த வினையாளனது செயல்வகையை நோக்கி வினை செய்வார் சிறந்த பயனையடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுமாலிபால்

உணரப்படும்.

கதை.

சுமாலி என்பவன் அரக்கர்குல முதல்வனாகிய சுகேசனு டைய புதல்வன். தாய் பெயர் தெய்வவதி. மாலியவான் மாலி என்னும் இருவருக்கும் இவன் நடுவே பிறந்தவன். அறிவு நூல் களையும் கருவி நூல்களையும் நன்கு பயின்றவன். அஞ்சா நெஞ்

207



சினன். எதையும் நுணுகி நோக்கிச் செய்பவன். கேதுமதி என்

னும் தனது அழகிய மனைவியோடமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து கேகசி வனசவிலோசனை என்னும் புதல்வியரிருவரைப்

பெற்றுப் பெருமகிழ்வுற்றவன். தன் அண்ணனாகிய மாலியவான் அரசர் பெருமானாய் ஆட்சிபுரியுங்கால் அமைச்சனாகவும் இவன் அமைந்து நின்றான். அமரர் வேண்டுகோட்கிணங்கித் திருமால் வந்து அரக்கரையழித்து இலங்கையைச் சிதைத்தபொழுது துணைவரோடு ஓடி இவன் பாதலத்தில் புக்கிருந்தான். நெடுங்காலங் கழிந்தபின் இடங்காலம் நோக்கித் தனியேயெழுந்து வந்து தன் இலங்கையையும் அதிலிருந்து அரசுபுரிகின்ற குபேரனையும் நோக்கி உளங்கவன்று எவ்விதத்தானும் பழையபடி தன் அரசுரிமையை யடையவேண்டுமென்று இவன் அவாவி நின்றான். தன்கருத்து நிறைவேறுதற்குரிய உபாயங்கள் பலவற்றையும் உன்னியுன்னி ஆராய்ந்தான். இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தான். முன்னதாகத் தன்போல்

அரசிழந்து தொந்திருந்த அசுரேந்திரன் தன் மகளாகிய சுரசையைக் காசிபன்பாலேவி அவள் வாயிலாகத் தன் குலந்தழைக்கச்செய்து பின் சிறந்து நின்றதை இவன் நினைந்து கொண்டு தானும் அவ்வகையே செய்ய எண்ணினான். விரைந்து வந்தான். தன் மகளும் பேரழகியுமாகிய கேகசியை அழைத்து ஆகவேண்டியதை யுணர்த்தி விச்சிரவசு என்னும் முனிவன்பா லேவி அவள் வாயிலாக இராவணன் முதலாயினோரைப் பெற்றான். பெருவீரனாகிய தசமுகன் பருவமெய்தியபின் ஒருநாள் இவன் அருகணைந்தான். அலையடுத்த கடற்றயிலும் அச்சுதனுக் கமரழிந்த அரக்கரெல்லாம்; தலையெடுக்கப் பிறந்தாய்நீ வருகவென வுயிர் பொருந்தத் தழுவிக் கொண்டான். கொண்டு, தன் குலத்தின் மேன்மையையும் அதுபொழுது

அது குலந்துள்ள பான்மையையும் குறித்து அவன் குறிக்கொள்ளக் கூறினன்.

தண்ணுக்குத் தடமலரோன்வழிவந்த தசக்கிரிவன் றன்முன்பாண்ட

மண்ணுக்கும் பலரறிய மணம் புகுந்து மனையாளாய் வகுக்கப்பட்ட

பெண்ணுக்கும் படாதார்தம் பெருவாழ்விற் பிச்சையே நன்றுகாண்பேம்

கண்ணுக்கும் பொறிபறக்கக் கடலிலங்கை யாள்கின்றான் குபேரன் காண்டி. 68-ம் அதிகாரம் வினைசெயல்வகை. 1653

தேனத்தார் திகழ்மார்பன் தென்னிலங்கை யாள்கின்ற குபேரன் சேர்ந்த

மானத்தால் உணக்கந்த வளாகரம்விடுகிலான் சாமபேத

தானத்தால் தாரானேல் தண்டத்தாற் கொள்ளுதிநீ கொள்ளாயாகில்.

வானத்தார் நகைசெய்வர் மாசுண்ணும் நின் வலியும் வாழுமென்றான். (2) இங்ஙனம் உ ரமுற மொழிந்து வலி இழந்த அரசை அவனுமெய்தி இலங்கையையடைந்து பின்பு இன் புற்றிரு ந்தான். கருதியதை யெய்துமாறு வினை செய்யத்தொடங்கிய இவன் அதன் முன் செய்து கைகண்ட ஒருவனது உள்ளக்கருத்தை உள்ளிச் செய்து அதனால் உயர் பயனெய்தினான். இவனது வினையாண்மையால் அரக்கரனைவரும் பெருமாண்பெய்தினர். செய்வினை செய்வான் செயன் முறை, அவ்வினை உள்ளறிவான் உள்ளங் கோளல் என் னும் உண்மைக்கு உரிமையா யீண்டு இவன் உள்ள நின்றான். விரிவை இராமாயணத்தில் காண்க.

முன்னொருவன் போன முறையறிந்து செய்வானேல்

பின்னவனுக் கென்ன பெரிது.

முன் கைமேதர்ந்த ஒருவன் கருத்தைநோக்கிக் காரியஞ்செய் யவேண்டும் என்பது இதனல் கூறப்பட்டது.

---

678 தெள்ளுபுகழ் வில்லவன்முன் செய்வினையால் வென்றியொன்றும்
கொள்ளநின்றான் என்னே குமரேசா—உள்ளும்
வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானை யால் யானை யாத் தற்று. (அ)

இ—ள்.

குமரேசா! வில்லவன்கோதைஎன்பவன் அறத்தோடு வெற்றி யும் அமையுமாறு என் ஆய்ந்து வினை செய்தான் எனின், வினையால் வினையாக்கிக் கோடல், நனைவுகள்

யானையால் யானை யாத்து அற்று எனக.

பிற நாட்டவரும் வியந்து போற்றத்தக்க பெருங் கீர்த்தியை யடைந்திருந்தானாதலால் தெள்ளுபுகழ் என்னும் அடை புணர்ந்து நின்றான். கருதிய அறத்தோடு வெற்றியும் கைக்கொள்ளச் செய். 1654

திருக்குறட் குமரேச வெண்பா.

தானுதலால் வென்றி ஒன்றும் கொள்ள நின்றான் என்றும். உம்மை இறந்தது தழீஇயது. உள்ளும்—எண்ணிச் செய்கின்ற. ஆக்கிக் கோடல்—முடித்துக்கொள்க. கோடல் என்றது ஈண்டு ஏவல் கண்ணிய வியங்கோள். இனி இதனைத் தொழிற் பெயராகக்கொண்டு யாத்தற்று என்பதற்கு எழுவாயாகக் கொள்ளினும் அமையும். இஃது ஒரு வினையைச் செய்புங்கால் அதனால் பிறிதுமோர் பெரும்பயனுண்டாமாறு பேணிச்

செய்யவேண்டும் என்கின்றது. யாத்தகற்று என்பது யாத்தகற்று என நின்றது.
யாத்தல்—பிணித்தல், கட்டுதல்.
இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன் என்றதுங் காண்க.

நனைகவுள் யானை என்றது மதத்தால் நனைந்த கன்னத்தினை யுடைய யானை என்றவாறு; என்றது மதயானையை.
கவுள்— கன்னம், கதுப்பு, கபோலம். இது மதத்தால் எப்பொழுதும் நனைந்திருக்குமாதலால் நனைகவுள் எனப்பட்டது. வினைத்தொகை. தேரும் புரவியும் வார்கவுள் யானையும் எனப் பெருங் கதையினும், களிறு கவளடுத்த எறிகற்போல எனப் புறத்தினும், காய்ந்தெறி கடுங்கற் றன்னைக்கவுட்கொண்ட களிறுபோல எனச் சிந்தாமணியினும், காந்தியங் கந்தாகக் கவுட் கொண்ட களிறுபோல எனச்

சூளாமணியினும், இரு கவுள் கவிழ்த் தகடம் எனப் பரணியினும், இகலியளி முரல் இரு கவுளினும் உடனிழிபு மதமழை குமிழிக ளெழ எழ எனப் பாரதத்தினும், இது போந்துள்ளமை காண்க.

மேல், தேர்ந்த வினையாள னொருவனது செயன் முறையை ஓர்ந்துகொள் என்றார்; இதில், அங்ஙனம் ஓர்ந்தபின் பெரும் பயன்கள் உளவாமாறு கூர்ந்து வினைசெய் என்கின்றார்.

ஆற்றுகின்ற ஒருவினையால் அதுபோல் பிறிதும் ஓர் வினையை ஆக்கிக்கொள்க; அங்ஙனம் கொள்வது நனைந்த கபோலத்தை யுடைய ஒரு மதயானையால் மற்றொரு மதயானையைப் பிணித்தது போலாம் என்பதாம்.

தான் செய்யும் ஒரு காரியத்தால் இரு வகைப் பெரும் பய

ஐம் மெய்யும்வகை நாடிச் செய்யவேண்டும் என்பது கருத்து.
சயத்திரதனையும் அவனைக் கொல்பவர் கொலையுறுமாறு சூழ்ந்

## 68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1655

திருந்த அவன் தந்தையாகிய சிந்துபதியையும் ஒரே தொடையால் ஒழிவித்துக் கண்ணன் உறுதி சூழ்ந்ததுபோல் இறைவினை புரியும் அமைச்சர் தமது ஒரு வினையால் இரு பெருங்* குறிகள் எய்துமாறு எண்ணிச் செய்யவேண்டும் என இயலோடு பொருந்த இதனை இணைத்து நோக்கிக்கொள்க.

ஒரு யானையைக் கொண்டு மற்றொரு யானையை வயப்படுத்திக் கைக்கொள்ளும் வழக்கம் மன்னர்பால் முன்னர் விளக்க முற்றிருந்ததாதலால் அவர்வினைகளை யாற்றும் அமைச்சர்க்கு ஈண்டு அஃது எடுத்துக் காட்டாக வந்தது.

ஆணை முடைய அறிவினார்க் கல்ல
மாணு மறிவி னவரைத்தலைப் படுதல்
மாணமர் கண்ணாய் மறங்கெழு
மாமன்னர்
யானையால் யானையாத் தற்று.
என்றார் பிறரும். ஒரு சிறு வினையால் பல
பெருநலங்கள் உளவாமாறு அறிவுடையார்
கருதி வினைசெய்வார் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
வில்லவன்கோதைபால் உணரப்படும்.

கதை.

வில்லவன்கோதை என்பவன்
வஞ்சிநகரிலிருந்து அரசுபுரிந்த செங்குட்டுவன்
என்னும் சேரமன்னனுடைய முதல் மந்தி
ரி. கூர்ந்து வினைசெய்வதில் எவரினும் இவன்
தேர்ந்து நின்றவன். அறிவும் நிறையும்
ஆண்மையும் பொறையும், உறுவது சூழும்
உயர்பெருந்திறனும், நண்பும் தகவும்
பண்புமுடையவன். இவன்து காலம்

இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராகும். வீரருள் வீரனை
அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவனாய் நின்று அரசை இவன் இனிது நடாத்தினான்.
தான் ஆற்றும் வினையால் பெரும் பயன்கள் தோற்றுமாறு சூழ்ந்து இவன் ஆற்றிவந்தான்.
வருங்கால் கனக விசயர் என்னும் வடநாட்டு மன்னர் தமிழ் வேந்தரை இகழ்ந்து வருகின்றார் என்பதை அங்கிருந்து வந்த முனிவர் சிலரால் ஓர்ந்து முனிவுகொண்டான்; ஆயினும் அதுபொழுது யாதும் புரியாமல் அடங்கியிருந்தான். கற்புத்தெய்வமாகிய கண்ணகிக்குக் கோயில் கட்டிவைத்து வழி

1656 திருக்குறட் குமரேச வெண்பா.

ப . டு செய்யவேண்டுமென்று அரசன் உசாவியபொழுது உருவ மைத்தற்கு இமயமலையிலிரு ந்துதான் கல்

வரவேண்டுமென்று இவன் கருதியுரைத்துப் பெரும்படைசூழ அரசை எழுந்தருளச் செய்தான். இடையே கிடந்த நாடுகள் பலவும் கடந்து ஆரிய நாட்டுட் புகுந்து ஆங்கு அவமதித்திருந்த கனகவிசயர்களை வென்று கைக்கொண்டு சென்று இமயமலையை யடைந்து குறித்தபடி யெடுத்த கல்லைப் பிடித்தவர் தம் முடித்தலைமேலேற்றித் தன் மன்னவன் முதுநக ரடைய முன்னியாற்றிப் பின் அவரை இன்னலற நீக்கி இறைசெலுத்தி வருமாறு முறைசெலுத்தி விடுத்தான். கற்புத் தெய்வத்தை வணங்கவேண்டுமென்று கருதித் தொடங்கிய அறவினையோடு வெற்றித் திருவையுமெய்துமாறு உற்றுச்சூழ்ந்து வினை ஆற்றிய இவனது ஒண்மையையும் திண்மையையும் வியந்து அனைவரும் உவந்து புகழ்ந்தார். வினையால் வினை யாக்கிக் கோடல்

நினைகவுள் யானையால் யானையாத்தற்று என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சிலப்பதிகாரத்தில் காண்க.

ஆற்றுகின்ற வொன்றால் அரிய பலநலங்கள்
தோற்றநின்று தூக்கிவினை செய்.

ஒரு வினையால் பலநலங்கள் உளவாமாறு உணர்ந்து செய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

679 திண்டிறன்மெய்க் குண்டலன்முன் சோரரை யேன்விரைந்து
கொண்டான் துணையாக் குமரேசா—கொண்டாடி
நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

(௬)

இ-ள்.

குமரேசா ! தம்முடன் ஒட்டாதிருந்தாரைப் பூரணகுண்டலன் என் விரைந்து நட்பாக்கிக் கொண்டான் எனின், ஒட்டாரை ஒட்டிக்கொளல், நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்தது என்க.

உறுதியும் வீரமும் உண்மையுமுடையனாய் அரசன்பால் மிக்க வுரிமையுற்றிருந்தானாதலால் திண் திறல் மெய் என்னும்

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1657

அடைமொழிகளை அவன் உடையனாயினான். முன் என்றது உதயணன் வீறுகொண்டு போருக்கு எழுமுன்னுள்ள காலத்தை.

கொண்டாடுதலை நட்டலுக்கும் செயலுக்குந் தனித்தனி ஒட்டிக் கொள்க. கொளல், விரைந்தது எனக்கூட்டிக் காண்க. ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது. விரைந்து கொள்ளாவழி உளந் திரிந்து விடுவர்; அதனால் அமைந்த பயன் இழந்துபடுமாதலால் ஒட்டிக்கொளல் விரைந்தே என்றார். விரைந்து செய்யத்தக்கது என்னும் விதியுரையீண்டு விரைந்தது என நின்றது.

இது, பகைவர் நொதுமலர் நட்பினர் என்னும் இவர்பால் வகையறிந்து செய்யவேண்டிய முறைகளை புணர்த்துகின்றது.

நட்டார் = உறவோர், நண்பர். ஒட்டார் = பகைவர், சேராதவர்; ஒட்டுதலில்லாதவர் என்பதாம். ஒட்டுதல் = உடன்படல், சேர்தல். உவமரு

நெஞ்சின் ஒட்டா மன்னவருர்ந்த யானை என்றது சிந்தாமணி.

நட்டோன் றுணிந்த கட்டழற்கருமம் எனவும், ஒட்டாக் கிளைஞரை நட்பினுட் கெழீஇப எனவும், நன்று நட்ட அவன் நண்மார் பு முயங்கி எனவும், நட்டோர்க் கல்லது கண்ணஞ் சலையே எனவும் வருவன காண்க. நல்ல என்றது இன்னுரை பகர்தல், உள்ளியனவுதவல் முதலிய நன்னயங்களை. இது குறிப் புவினையாலணைந்தபெயர்.

ஒட்டிக்கொளல் = நட்பாகத் தழுவிக் கொள்க.

மேல், ஒருவினையால் பலநலங்கள் உளவாமாறு உணர்ந்து செய்யவேண்டும் என்றார்; இதில், உற்றார்கண்ணும், உறாதார் பாலும் ஓர்ந்து செய்யவேண்டிய திறனை உணர்த்துகின்றார்.

உறவினர்க்கு இனிய உதவி களைச் செய்தலினும் உறவிலராகி ஒதுங்கியுள்ளாரை விரைந்து அணைத்துக் கொள்ளுதல் சிறந்த தாம் என்பதாம்.

ஒட்டார் என்பதற்குப் பகைவர் என்று நேரே பொருள் கொள்ளாமல் நட்பும் பகையுமின்றி நொதுமலராயுள்ளாரை யீண்டு நோக்கிக் கொண்டது என்னையெனின்,

ஒன்றுரைத் தே றேல் எனவும், பலநல்ல கற்றக் கடைத்தும்—மனநல்ல ராகுதல் 1658 திருக்குறட் குமரேச வெண்பா.

மாணுர்க்கு அரிது எனவும், பகை நட்டல் கெடுவது காட்டுங்குறி எனவும்,

பிறவும் வருவன கருதி என்க. இனி, பகைவர் என்றே பொருள் கொள்ளின் பிரச்சோதனன் உதயணனை ஒட்டிக் கொண்டதுபோல் பின்பு மாறு அன்புடையராய் மருவியிருப்பாரா யின் அவரை மருவிக்

கொள்ளலாமெனக் கருதிக் கொள்க.

உறவாகி ஒட்டியுள்ளாரை உவந்து பேணியும், அங்ஙனம் ஒட்டாது அகன்று நிற்பாரை அணைத்துவைத்தும், அமையமறிந்து அமைச்சர் வினைபுரிய வேண்டும் என்பது கருத்து.

தம்மொடு சேராது வேறு நின்றாரை அமையம் வாய்த்த பொழுது ஆவது கருதி நட்பாக்கி அமைச்சர் அமைத்துக் கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குண்டலன்பால் உணரப்படும்.

## கதை.

குண்டலன் என்பவன் சற்றேறக்குறைய இற்றைக்கு இரண்டாயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாஞ்சால நாட்டிலே கனகபுரம் என்னும் நகரிலிருந்தவன். அரிய நூல்கள் பலவும் பயின்றவன். யாவர்மாட்டும்

பேரன்புடையவன். நேர்ந்த காரியங்களைத் தீர ஆராய்ந்து திருத்தமுறச் செய்துமுடிப்பதில் இவன் மிகச் சிறந்தவன். இவனது குணஞ் செயல்களையறிந்து அந்நாட்டு மன்னனாகிய ஆருணி என்பவன் தனக்கு அமைச்சனாக இவனை அமைத்துக்கொண்டான். குடிகளைப் பேணிக் கோன்முறை திருத்திப் படிவளஞ் சுரக்கும் பண்புபல ஆற்றி அரசை இவன் பாதுகாத்து வந்தான். வருங்கால் வத்தவதேயத்து மன்னனாகிய உதயணன் என்பவன் மீண்டு படையோடு சூழ்ந்து தன் அரசோடு அமர்செய்ய நினைந்திருந்தமையை இவன் எதிரறிந்து சூழ்ந்து தன்னொடு சேராதிருந்த அடவியன், மிலேச்சன் முதலிய அரசரெழுவரையும் நட்பாக்கி அணைத்துக்கொண்டான். இவனது மதிநுட்பத்தையும் வினைத்திட்பத்தையும்

மாற்றுரநிந்து

யாதும் தோற்றுவண்ணம் சிறிதுகாலம் ஆற்றியிருந்தார். பெரு வீரனுகிய தன் அரசனுக்கு உயிர்த்துணைவனுய் உழையிருந்து உறுவதைபோர்ந்து இவன் உணர்த்திவந்தும் பகை நிலைமையை

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1659

உ ணை

ர ாமல்தன்னூ க்கமிகுதியால்போர்மேல்ஒருநாள் அவன் உட ன் றெழுந்தான். அப்பொழுது நிமித்தம் நன் றாக இல்லையாதலா ல் நீ நிற்கவேண்டுமென்று அடுத்துநின்று அவனை இவன் தடுத்துக் கூறினான். அறிவு த கைமை ஆண்மை அமைதி முதலிய உயர் குணங்கள் பலவும் நிறைவுற இவன் நிலவி நின்றான் ஆகலால் பூரணகுண்டலன் என அனைவரும் இவனைப் புகழ்ந்து போற்றினர். ஆகவேண்டியதைக் காலமறிந்து செய்து ஆட்சியைப் பேணிவந்த இவனது மாட்சியை

நினைந்து மறுபுல மன்னரும் புகழ்ந்தார். பகைவர் மிகைசெய்வர் என்றறிந்தவுடனே உறுதிருந்தாரும் நட்பினராய்த் தம்முடன் உவந்துறுமாறு உறுவதை விரைந்து செய்து மேவிக்கொண்ட இவனது உணர்வின் திறத்தை அரசனும் வியந்து மகிழ்ந்தான். நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே ஒட்டாரை ஒட்டிக் கொளல் என்னும் உண்மையை உலகமறிய இவன் ஒட்டியுணர்த்தினன்.

புள்ளும் நிமித்தமும் பொல்லா வாக
விள்ளா நண்பின் விறலோன் அமைச்சன்
பூரண குண்டலன் தாரணி மார்ப!
பெயர்த்து நகரம் புகுதும் இந்நாள்
அலைக்க தரிந்தனை யருண்மதி நீயென்
றடையார்க்கடந்து தடையா டகற்றிய

வறிந்துபடை விடுப்ப தன்னது பொருளெனச்
செறிந்த தாகச் செப்பலின் ; என மேற்தறிக்க இவன் கதையைக் குறிந்துக்கொங்குவேளார் தம்நூலில் கூறியுள்ளார்.

நேர்ந்த வலியின் நிலையறிந்து நேரானைத்
தேர்ந்தமர்ந்து சேர்ந்து கோளல்.

ஒட்டாதிருந்தாரையும் ஊறுறத்தன்னுடன் ஒட்டிக்கொள்ள வேண்டும் என்பது இதனல்கூறப்பட்டது.

680 பண்டுதிறற் சூானுறப் பார்த்தஞ்சி யேன்பணிந்து
கொண்டான் திருதி குமரேசா—கொண்ட
உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்

கொள்வர் பெரியார்ப் பணிந்து.

208

(ய) 1660 திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா! சூரபன்மன் வந்தவுடன் திருந்தி என் அஞ்சிப் பணிந்து கொண்டான்எனின், உறை சிறியார் உள்நடுங்கல் அஞ்சிக்குறைபெறின் பெரியார்ப்பணிந்துகொள்வர் என்க.

பண்டு = பண்டைக்காலத்தில்; அஃதாவது சூரபன்மன் திக்குவிசயஞ் செய்துவந்தபொழுது. அவன் வருமுன்னரே உணர்ந்தெழுந்து உளங்கலங்கி எதிர்வந்துபணிந்து உரிமைகூறிஉறவு கொண்டான் ஆகலால் உறப் பார்த்து அஞ்சிப் பணிந்துகொண்டான் என்றும்.

கொண்ட = தங்குதற்குரியதாகத்

தான்கொண்டுள்ள.

இது, தன் நிலைகுலையாதபடி இனமறிந்து வினைசெய்யவேண்டும் என்கின்றார். அறியார் கொள்வர் எனச் சேர்த்துக்காண்க. பெறவில்லையாயின் தான் பணிந்துகொண்டதனால் பயனில்லையாதலால் பெறின் என்றார். தான் அந்தரத்து, உள்நடுங்கலும்; அது நடுங்கற்கு, உறைசிறுமையும் உரிமையாதல்கருதி வான்முறை தோன்ற வைத்தார். சிறுகாமலும் நடுக்காமலும் கருவிமுதலியன குறைவுறாமலும் அமைந்தவாயின் பணிவிலனாகி அமர்கொடங் கலாமென்க. உறை = இடம்; தங்கும் இடம் என்க. அடக்கருஞ் சீறார் அரணக உறையுளர் என்றதில் உறைபுணர்த்தி நிற்கும் பொருளை புணர்க.

உறை சிறியார் என்றது தமக்கு

உரிமையான இடம் மிகச் சிறியதாகவு
டையவர் என்றவாறு. உடைமையின் சிறுமை
உடையார்மேல் ஏற்றப்பட்டது. ஈண்டு
இடம் என்றது தாம் ஆளும் நாட்டை. உள்
என்றது தன் நகரினும் நாட்டினும் உள்ள
படை குடி முதலிய அங்கங்களை.

உள் நடுங்கல் அஞ்சி = தன்
நாட்டிலுள்ள குடிகள் நடுங்குதலை நினைந்து,
தான் பயந்து.

குறைபெறின், பணிந்து கோடலை
விரைந்துகொள்ள வேண்டு மென்பது
தோன்றக் கொள் வினை அதனோடு இணைந்து
நின்றது.

மேல், உறவிலாய் ஒதுங்கி நிற்பவரை வினை நலங்கருதி
விரைந்து மேவிக்கொள் என்றார்; இதில் வலிமிகவுடையார் அமர்

68-ம் அதிகாரம் வினைசெயல்வகை.

1661

கருதிவரின் அமைச்சதைச்செய்து
அவர்க்குத் தமராக அமர்ந்து கொள்க என்றார்.
தமக்குரியநாடு மிகச்
சிறியதாகவுடையவர் தம் குடிகள் நடுங் குதற்கு
அஞ்சித் தமது நறை நீங்கப்பெறாயாயின்,
வலியாய்த் தம்மை நலியவந்த பெரியாரைத்
தாம் பணிந்து போற்றிக்கொள்வர்
என்பதாம்.
பேரரசர் போர் தொடங்கவரின்
தம்நிலையறிந்து தாழ்ந்த கேண்மை யாளராய்க்
குறுநிலமன்னர் அவரைச் சூழ்ந்து கொள்
ளவேண்டும் என்பார் உறைசிறியார்
பெரியாரைப் பணிந்து கொள்வர் என்றார்.
இங்ஙனம் உலகியல் மேல் வைத்துக்கூறி
யது அவர்தம் உளங்கோடலை நோக்கி என்க
தன்உரிமை கூறிக் குபேரன் பணிந்து
வேண்டியும் தசமுகன் பொருந்தாமல்
பொங்கி நின்றதுபோல் தன்குறைய எற்

ஹக் கொள்ளார் பால் பணிபற்க; பணியின்
மானம்போமெயன்றி ஆணபயன் யாதும்
இன்றும் என்பார் குறைபெறின் கோள்வர்
என்றார்.

குறை என்றது ஈண்டு எளிமைகூறி
இரந்து கோடலை. வே' ந்து குறையுறவுங்
கோடாஅன்; எனவும், யான்
குறைகொள்ளும்
பொருளினை மற்றவன், தான் குறை கோடல்
தவக்கது வினைவு
எனவும், கொமபடு நுசுப்பினைக்
குறையிரந்தழுந்து நின்ற; எனவும், குறை
யிரந்து குற்றேவல் செய்வர்: எனவும்
வருவன வற்றுள் குறைபுணர்க்கி நிற்கும்
பொருளைபுணர்க.

மன்னுயிரிழப்ப நேரினும்
மானமுடைய மன்னர், குறையிர
க்கது பிறரைப்பணிந்து கொள்ளார்; ஆயினும்
தம் குடி வருந்தாதற்

கிரங்கி அதனைக்கொள்வர் என்க.

தான் அஞ்சாதவனாயினும் தன் அங்கம் நடுங்கலை அஞ்சியேனும் அமர்தொடங்காமல் அரசன் அமர்ந்துகொள்ளவேண்டும் என்று இதனால் குடியோம்புவதில் அவனுக்குள்ள தனியுரிமை இனிது புலனும்.

1662 திருக்குறட் குமரேச வெண்பா.

வலிமுதலியவற்றால் தம்மினும் பெரியார் தம்மோடெதிர்த்த பொழுது இயைந்ததைச்செய்து தமக்கு இனியராக அமைச்சர் அவரை அமைத்துக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

வினைகளை நன்றாக ஆராய்ந்து. பருவந்தவறாமல், தம் நிலைமை யை யுணர்ந்து, இடங்காலம் நோக்கி, உறுவதை யுணர்ந்து முடிவு பெறச் செய்யவேண்டும் என்று வினை செயல்வகையை அமைச்சருணர இதுவரை

விரித்து, இறுதியாக ஆராய்ந்தடைமந்து அவர் நடந்துகொள்ள வேண்டிய வுண்மையை உறுதிபெற இதில் உணர்த்தி யருளினர்.

துணிவுறு மனவுஞ் சூழ்ந்துபி னிரந்து சூழ்வினை பொருந்தும் வாயெல்லாம் தணிவற முடித்த லதுதகா தாயிற் றருபொருள் வினையிடங்காலம்
அணியுறு கருவி யைந்துமாய்ந் திகலை யடர்த்தலொட் டவர்க்கறிவுறுங்கால் பணிவுசெய் தேனுங் காத்தன்முத் தொழிலும பண்புடை யமைச்சர்தந்தொ ழிலே. • என்றதும் கண்டு எண்ணத்தக்கது. இத்தகைய செயல் வகைகளில் சிறந்த அமைச்சனையே அரசர் துணையாக நயந்து கொள்ளவேண்டுமென்பது குறிப்பு.

வலிய ராயினர் தம்மை வருந்த வந்தபொழுது அவர் இளங்குமாறு மெலியார் அவரை வணங்கிக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நிருதிபால் உணரப்படும்.

கதை.

நிருதி என்பவன் திக்குப்பாலகருள் ஒருவன். தென்மேற்குத் திசைக்குத் தலைவன். இவன் முன்பு வேடர்கள் தலைவனாயிருந்தவன். பிங்கலாக்கன் என்னும் பெயரினன். பின்பு இறைவனை நோக்கி அருந்தவஞ்செய்து இவ்வுயர் பதவியை எய்தினன். இவனுடைய மனைவி பெயர் தீர்க்காதேவி. அவள் பொறையும் கற்பும் பொற்பும் உடையவள். அப்பொழகியோடமர்ந்து பெருமபோகங்களை நுகர்ந்து இந்திரன் முதலிய நண்பர் குழாங்களுடன் இவன் இன்புற்றிருந்தான். ஆண்மை அமைதிமுதலிய மேன்மைக்குணங்கள் யாவும் மேவப்பெற்றவன். நூலறிவோடு சாமம் பேதம் தானம் முதலிய நால்வகை உபாயங்களிலும் நன்கு தேர்ந்தவன். எதையும் எதிர்நிந்து காத்துத் தன் ஆட்சியை மாட்சிபெற இவன்

68-ம் அதிகாரம்

ஆற்றிவந்தான். வருங்கால் சூரபன்மன் துணைவர்களோடு சென்று திசைகள்தோறும் வென்று இயமனையும் அடக்கி இறுதியில் இவன்மேல் வந்தான். அவன் வரவை உணர்ந்து இவன் தமர் முதலிய அனைவரும் நடுங்கினர். அதனை நோக்கி இவன் மிகவும் வருந்தினன். அதிவீரனான சூரபன்மனோடு எதிர்த்தல் கூடாதென்றும், நிறைந்த தவபலங்களால் அவன் சிறந்து விளங்குதலையும் உணர்ந்து கொண்டு மணிபணி முதலிய சில அரிய கையுறைகளோடு விரைந்துசென்று "யான் உன்மரபினன்; என்னை ஆளுதற்கருள வேண்டுமென்று" இவன் அவனை அம தொழுது நின்றான்.

திருதியும் இஃதெலாம் கேடி ...மிவர்ப்

பொருவரும் அரியகாற் போரி யற்
றினும்
வருதிற லில்லையால் வசைய
கேயெனக்
கருதினன் அவரொடு கலத்தற்
குன்னினன். (1)
உன்னினன் காளைபோ டொருங்கு
மேவியே
மன்னவ னெதிர்புகா வழுத்தி
மற்றவன்
தன்னடி வணங்கியுன் குமரி
யாளினைப்
பன்னினன் காரகன் பாங்கர்
எகினன். (2) இவன் உரிமைகூறி
வந்து பணிந்தவுடனே அவன் உறவினைக்
மதித்து உவந்து போயினன். அதன்
பின்னரும் அரசு இனிது
நடைபெறவேண்டித் தன் அருமை மகளாகிய
சவுரியென்பவளைக் காரகனுக்குத் திருமணஞ்

செய்து கொடுத்து அவனைத் தனக்கு மருமகனாக அணைத்துக் கொண்டான். இவனது வினை செயல் வகையை வியந்து அமார்கோன முதலிய அனைவரும் புகழ்ந்தார். உறைசிறியார் உள் நடுங்கல் அஞ்சிக் குறை பெற்றுக் கொள்வர் பெரியார்ப் பணிந்து என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைக் காசிமான்மியத்தில் காண்க.

வல்லோன் நலிய வரினமைந்தோன்
றீந்தேனும்
மெல்லோன் உறவுறலே மேல்.

தம் நிலைமையை யுணர்ந்து வலியாரினை மெலியார் வணங்கிக்கொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1664 திருக்குறட் குமரேச வெண்பா.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

வினையைச் சூழ்ந்து துணிந்த பின் தாழ்ந்து நில்லாதே, நின்று செய் தற்குரியதை நிறுத்திவை; விரைந்து செய்யவேண் டிய காரியத்தை உடனே உணர்ந்துசெய். இயலுமிடம் நோக்கி வினையை என்றும் முயல்க. வினை யொழிவு தீயொழிவுபோல் தீய தாதலால் அதனைத் தீர்த்தொழுக வேண்டும். தனக்கமைந்துள்ள பொருள் கருவிமுதலிய ஏதுக்களின் வலிமை எண்ணி அவற்றிற் கியைந்தவகையில் நலமடையக்குமாறு வினையைச்செய்க. முடிவை யும் பயனையும் முன்னதாக முன்னி ஆற்றுக. முன்புசெய்து தேர் ந்த ஒருவனது உள்ளப்பான்மையை நீ ஓர்ந்து செய்க. ஒருவினை யால் பிறிதொன்று இனிதமையுமாறு பேணிச்செய்க. வினைக்கு

ஆகவேண்டியவரை விரைந்து கூட்டிக்கொள்க. தன்னினும் வலி யாரொருவன் நலிவு செய்யவரின் அமையம் நோக்கித் தனக்கு இனியனாக அவனை அரசன் நயந்துகொள்ளவேண்டும்.

௬அ-வது வினைசெயல் வகை முற்றிற்று.

---

# 69-ம் அதிகாரம்

## தூது.

அஃதாவது தூதாது இயல்பு. தூதராவார் மறுமன்னரிடஞ் சென்று தம் அரசன்கூறியதை உறுதிபயப்ப இனிதுரைத்துவருவோர். மனத்திட்பமுடையராய் நின்று வினைகளைமாட்சிபெறச் செய்துமுடிக்கும் அமைச்சரைப்போலவே அரசகாரியத்துக்கு

இ—ள்.

குமரேசா! உற்றார் பலரிருப்ப உன்னை தூதுபோ. கற்றுத் தக்கான் என்று தெளிந்து என் ஐவர் அன்று உய்த்தார்: எனின், அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், வேந்து அவாம் பண்புடைமை தூது உரைப்பான் பண்பு என்க.

இது, தூதனுக்குரிய தகுதி கூறுகின்றது.

மாறு இல் என்றது என்றுந்திரிபிலனாகி யாவர் மாட்டும் நேர்மையுடையனாய் நெறி நின்றொழுகினமை கருதி. மாணார் பாற் சென்றுவா மதியுடையான் இவன் என்று எவருங்காணக் கண்ணன் புகழ்ந்து விடுத்தான் ஆதலால் மாண்பமைந்த தூதன் எனக் கூறி உய்த்தார் என்றாம்.

உய்த்தல் = செலுத்தல். ஊறுகின்ற = சுரக்கின்ற. நிகழ்வுதோன்றக் கூறியது அன்பின் நிலைமைதோன்ற. அன்புடைமை என்றது தாய்தந்தையரிடத்தும் சுற்றத்தார் மாட்டும் அன்புடையனாதலே. இவ்வுடைமை யில்லாதவன் தன் கடமையைப் பேணிப் பிறர்பால் உரிமையோடு ஒழுகானாதலால் அங்ஙனம் ஒழுகும் தூதனுக்கு மிகவுரிமையாக அதனை முதலில் உண ரவைத்தார்.

ஆன்றகுடி = அமைந்தகுடி; என்றது படிமுறையாகத் தகுதி வாய்ந்த குடியை. ஆன்றல் = அமைவு, சின்யானை என்றது புறம். நிறைவு. முபங்கல் ஆன்றி

வேந்து அவாம் பண்பு = அரசரால் விரும்பப் படுங்குணம்.

கள. அவை,

குறிப்பொடு காலம் அறிந்திறை விரும்பக் கோதறு
பயன்மிகப் பயக்கும் வெறுப்பில வினையை
விளம்பிவேண்டாத வினையினைக் கேட்பினும் விளம்.
பார் - சிறப்புற வோர்வ தாயினும் மறைதான்
செப்பிடிற் கேட்பினல்லாது மறப்பினுங் தொடரார்
ஓர்தரார் அணுகார் மருங்ககலார் வினவலித்தார்.
எனவருவனவும், இவைபோல்வன பிறவும்
என்க.

வழிவழியாகப் பெருந்தன்மை வாய்ந்த
வுயர்குடிப் பிறப்புத் தூதனுக்கு உரிமையாக
வேண்டுமென்றது அவர்தாம் மாறாத
மாண்பினராய் மருவியிருப்பர் என்பது
கருதி என்க. ஓதலும் தூதும் உயர்ந்தோர்
மேன என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும்.

1666 திருக்குறட் குமரேச
வெண்பா.

வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந்

தூது போதற் றொழிலுரித்தாகும். என்றது இலக்கணவிளக்கம்.

அன்புடைமையும், அமைந்த குடிப்பிறப்பும், அரசர் விரும்பும் பண்புடைமையும், தூது சென்று சொல்வானுக்குக் குணங்களாம் என்பதாம்.

சுற்றத்தொடர்புடையவன் பழிக்கு நாணுவனாதலால் தன்பாற் பிழை புகாவண்ணம் பேணி யொழுகுவன் என்பது கருதி அவர்பாலன்பினைத் தூதன் உறுதியாக முன்பு உடையனாதல் வேண்டும் என்றார்.

அன்பிருந்தாலும் குடிமாண்பிலதேல் அரசோடமைந்து வினைகளை ஆற்ற இயலாதாதலால் குடிப்பிறத்தலை அதன் பின் அடுத்து நிறுத்தினார்; அவ் இரண்டும் உடையனாயினும் அரசரால் விரும்பப்படும் குணங்கள் இலனாயின் அவனைத் தூதனாக அவர் சூழ்ந்து கொள்ளார் ஆதலால் வேந்தவாம பண்புடைமையும் உடன் கூறினார்.

இவை யாவும்மலரிடை மணம்போல்
இயல்பாகவேஅவனிடஞ் சிறந்திருத்தல்
வேண்டும் என்பார் பண்பு என்றார்.

அன்பு, குடிப்பிறப்பு, அரசர் விரும்பும் பண்பு என்னும் இந்நலங்களில்லாதவனைத் தூதனாக அரசர் நயந்து கொள்ளலாகா தென்பது குறிப்பு.

1. [அரசர்க்குத் தூதனாக

அமையத்தக்கவன் அன்பு முதலிய குணங்களை யெல்லாம் தனக்கு உரிமையாக உடையனாய் உயர்ந்
திருக்க வேண்டும் என்பது கருத்து.

அன்புடைமை யாய்ந்த அறிவுடைமை யிற்பிறப்பு
நன்குடைமை நல்ல
நயனுடைமை—நன்கமைந்த
சுற்ற முடைமை வடிவுடைமை
சொல்வன்மை
கற்றடங்கல் தூதின் கடன்.

என்றதும் ஈண்டுக்காண்க.

அன்பு பெருந்தன்மை அமைதிமுதலிய
குணங்களையுடையா
ரையே தமக்குத்தூதராக அரசர்
அமைத்துக்கொள்வர் என்பது
இதில்உணர்த்தப்பட்டது இவ்வுண்மைஉலாகன்பால்
உணரப்படும்

கதை.

உலாகன்என்பவன் இற்றைக்கு
ஐயாயிர ஆண்டுகட்குமுன்
குருநாட்டிலே உபலாவியம்என்னும்
ஊரிலிருந்தவன், மறை 69-ம் அதிகாரம் தூது.
1667
யவர்மாயினன். அரியநூல்கள்பலவும்
பயின்றவன். அழுக்காறு அவாமுதலிய
இழிகுணங்கள் யாதும்இன்றி எல்லாரும்
இனிது வாழவேண்டுமென எண்ணியொழுகிய
இன்னருளாளன். இவனுடைய
முன்னோர்கள் சந்திரகுலமன்னர்கட்கு

அமைச்சராகவும், புரோகிதராகவும்
அமர்ந்திருந்தனர். இவனும்
அரசியற்றுறைகள் யாவும் வழுவறவுணர்ந்து
பாண்டுமன்னன்பால் ஈண்டியகேண்
மையோடிசைந்திருந்தான். அரசுறவோடு
இவ்வுலகிற்சிறந்த நிலையில் அமர்ந்திருந்தாலும்
இவன்நெஞ்சம் நிலையாமையின்கண் ணேயே
நிலைத்துநின்றது.

விண்ணி லின்பமும் வீதல்
கேட்டுமால்
மண்ணி லின்பமு மாய்தல்
காண்டுமால்
எண்ணி லின்பமா மீறிலா ததே
நண்ணி நாமினி நயக்கற் பாலதே.

எனை. இவன்நயந்து நின்றான். நடுவுநிலை
திறம்பாமல் நின்று எவரிடமும் உண்மையை
உறுதிபெறவுணர்த்தவல்லவன். மன்னரிடை
மாறுபாடுதோன்றின் உரைமுடிவுகாண

இருதிறத்தாரும் இவனையேநாடுவர்.
பாண்டவர் வனத்திருந்து வந்தபின் அவர்க்குரிய பாகத்தைத் தந்துவிடுமாறு துரியோதனன்பாற் சென்று உரிமையோடு இனிது உரைத்தற் குரியார் யார்? என அரசர் சிலர் குழுமி ஆராய்ந்தார். அதற்கு இவனை தக்கவன்என்று கண்ணன் கருதியுரைத்தான். அதன்பின் உரியன பலகூறி தருமன் இவனை உவந்துவிடுத்தான்.
ஆதலின் இவன் துரியோதனன்பாற் சென்றபொழுது அங்கிருந்தவீடுமன் முதலியோர் விபந்துபோற்ற மகிழ்ந்திருந்து தான்வந்த உண்மையை மன்னனுக்கு உணர்த்தினன். தான் வணங்கிஉரைத்தும் அவ்வணங்காமுடியோன்
இணங்காதிருந்தமையை உணர்ந்த வுடனே இவன் மனங்கொதித்தான்.
ஆண்டு பன்னிரண் டடவியுற் றொருவரு மறிவுறா

விசயனுங் களம்புகிலனைவீரும் பொன்றியேவிடு
கின்றனிர்முனிவர் சொற்பொய்க்குமோ
பொய்யாதே. என்று இவன்புகன்றெழுந்தான்.
ஈண்டு நிகழ்ந்தவற்றையும் நிலைகளையும்
மீண்டுபோய் உரைத்து ஐவர்க்கும்
உயர்வுண்டாகுயாறு உள்ளியிருந்தான்.
அன்புடைமை ஆன்றகுடிப்பிறத்தல் வேர்து
அவாம்பண்புடைமை தூதுரைப்பான்பண்பு
என்பதைக் கண்ணன்காட்ட உல
கம்இவன்பால் கண்டது. விரிவைப்
பாரதத்தில் காண்க. இருவேறு
நிலத்திற்குரிய அன்னமும், மயிலும், ஒரு
சேரக்கூடி விளையாடும் நாட்டீர் என இவர்
நாட்டி விளித்தது, ஒருகுலத்திற் பிறந்துள்ள
நீங்கள் ஒருமையுற்று வாழவேண்டும்
என்பதை யுணர்த்துதற்கென்க.

சுற்றத் தொடர்புன்மை தோன்மை
யிறைவிழைசீர்

உற்றவனே தூதனென ஓர்.
அன்போடு அரசர்விரும்பும்
பண்புமுடையவனே தூதனாவான் என்பது
இதனாற்கூறப்பட்டது.

---

682 தண்டாத அன்பமைந்த சாதகனைத் தூதனெனக்
கொண்டாடினரேன் குமரேசா—உண்டான
அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று. (உ)

இ—ள்.
குமரேசா! அன்பும்
சொல்வன்மையுமுடைய சாதகனைச்
சிறந்த தூதன்என்று ஏன் அனைவரும்
வியந்துகொண்டார்

எனின், அன்பு, அறிவு,
ஆராய்ந்தசொல்வன்மை தூதுடைப்பார்க்கு
இன்றியமையாத மூன்றுஎன்க.

இது, தூதுரைக்கவுரியானுக்கு
மிகஉரிமையாக அமைந்திருக்கவேண்டிய
குணங்கள் இவையென உணர்த்துகின்றது.
69-ம் அதிகாரம் தூது.
1669

தண்டாத அன்பு அமைந்த என்றது
தன் அரசன்பால் என்றும் நீங்காத
அன்புடையனாய் இருந்தமைகருதி.
தம்பால்வைத்த அன்பையும் தான்தூதனாய்
நின்றுசெய்த அருமையையும் வியந்து
உதயணன், யூகிமுதலாயினோர் பாராட்டி
மகிழ்ந்தாராதலால் தூதன்எனக்
கொண்டாடினார் என்றும்,

இன்றி அமையாத = இல்லாமல்முடியாத;
உறுதியாக அமைந்திருக்கவேண்டிய
என்றவாறு.

முன்னர் நங்கூறி ஈண்டு மீண்டும் அன்பு
என்றது மிகையன்றோ? எனின், ஆண்டுச்
சுற்றத்தார் முதலியயாவர்மாட்டும்
பொதுவாக அன்புடையனாதலைச்சுட்டினர்;
இதில் தம் அரசன்மாட்டு அது
சிறப்பாகவேண்டுமென்பதை
புணர்த்துகின்றார் ஆதலால் ஆகாதென்க.
அதில் உடைமை வாசகத்தால் உரைத்துள்
ளமையையும் ஓர்ந்து கொள்க.

மேல், அன்புடைமை குடிப்பிறப்பு
அரசர் விரும்பும் பண்பு என்னும்
இம்மூன்றும் தூதனுக்கு இயற்கையாக
அமைந்திருக்க வேண்டும் என்றார்; இதில்,

செயற்கையாக அவன்பால் சிறந்திருக்கவேண்டியன மூன்று என்று தெளியவுணர்த்தினர்.

தம் அரசன்பால் அமைந்த அன்பும், அரசியலில் தேர்ந்த அறிவும், ஆராய்ந்தியைந்த சொல்வன்மையும், தூது உரைப்பார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்றும் என்பதாம்.

இன்பம் விழையாமை, இடும்பை இயல்பென்கை, பிரித்தல், பேணிக்கொளல், பிரிந்தாரைப் பொருத்தல், பொருந்தாரைத் திருத்தல் முதலிய பிறகுணங்களும் தூதனுக்கு வேண்டுமாதலால் அவற்றை நோக்கி ஈண்டு இன்றியமையாத மூன்று என்றார். தன்னுயிர்க்கு இறுதி வருவதாயினும், தன் அரசனுக்கு உறுதிவருமாறு அஞ்சாமல் நின்று அநுமான்போல் உரைக்குந்தன்மை அவன்பால் அன்புடையானுக்கே

அமையுமாதலால் அதனை முன்பு வைத்தார். தன்பால் உணர்த்திய வினைகளை முறைப்படுத்தி நினைப்பில் வைத்தற்குரிய அறிவும், தகுதிநோக்கி இகல் வேந்தர் பால் இனிதுரைக்குந் திறலும், அவனுக்கு உறுதியாகவேண்டுமாதலால் அறிவும் சொல்வன்மையும் அதன்பின் குறித்தார். 1670 திருக்குறட் குமரேச வெண்பா.

தன்பால் அன்பு தன்னுரை வன்மை—நன்றியறிவு சென்றுபுரி திண்மை முதலிய குணங்களமைந்தவனையே தூதனாக அரசர் தெளிந்துகொள்ளவேண்டும் என்பது கருத்து.

அறிவு அன்பு சொல்வன்மை முதலிய குணங்களைத் தனக்கு மிக வுரிமையாகவுடையவனே தூதனுக்குத் தகுதியாவன் என்பது இதில்

உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாதகன்பால் உணரப்படும்.

கதை.

சாதகன் என்பவன் வத்தவநாட்டிலே கௌசாம்பி நகரிலே யிருந்தவன். குலத்தாற் குபவன். வினைசெயல் வகையில் மிகவும் தேர்ந்தவன். நுழைபுலனுடையவன். யாவரும் வியந்துகொள்ளத்தக்க சிறந்த குணங்கள் பலவும் இவன்பால் நிறைந்திருந்தன. அந்நாட்டு மன்னனாகிய உதயணன் தனக்கோர் உதவியாளனாக இவனை உவந்துகொண்டிருந்தான். இவன் முன்னோர் பலரும் அம்மன்னவன் மரபோர்க்குக் கலஞ்செய் உரிமையிற் கலந்திருந்தனர். இவனும் அவன்பால் பேரன்புடையனாய்ப் பேணி நின்றான். பகையரசரால் நிலையழிந்து உஞ்சை நகரில் அவன் சிறைப் பட்டபொழுது ஒருவரும் அறியாவகை அங்கோரிடத்தில் மறைந்

திருந்துகொண்டு அவனுக்கு வேண்டிய உதவிகளை இவன் உதவி வந்தான். சிறை நீங்கி அவன் உயர் நிலையுற்றபொழுது இவனது அன்பின் தன்மையை நினைந்து முன்பினும் இவன்பால் இன்புற்றிருந்தான்.

குடிகெழு வளமனை குழீஇய செல்வத்துக்
கன்னிநன்மதிற் கடிக்கோ சம்பி
மன்முதரோறுந் தொன்முதல் பிழையாது
பெருங்கலக் கைவினைப் பேறது பெற்றுத்
தானகத்தாக்கிய வூனமில் செலவின்
இட்டிடர்ப் பொழுதி னின்ப நீக்கிக்
கட்டமுற் புகூஉஞ் சுட்டுறு கோல்போல்
கட்டை யிட்டு காட்டகத் துறந்து தம்

பெருமகற் கொள்ளும் வேட்கையிற்
போக்க

69-ம் அதிகாரம் தூது. 1671

குயமகன்; என மேற்குறித்த
இவனது இயல்பினை விய ந்து
கொங்குவேளார் கூறியுள்ளார். மேலவரிடம்
இவனைத் தூதாக விடுத்தே உதயணன் பின்பு
ஆவதைச் செய்துவந்தான். யாவ ரிடமும்
வில்லாத அதியிரகசியங்களையும் இவனிடம்
அவன் சொல் லிவிடுவான். அவனுடைய ம
ந்திரிகளாகிய உருமண்ணுவா, யூகி என்னும்
இருவருக்கும் இடையே நின்று தன்
அரசுக்குரிய கரு மங்களை இவன் கருதிச்
செய்தான். "தீதில் கேள்விச் சாதகன்
என்போன்—உருமண்ணுவாவும் யூகியுந்
தறிபாக்—கரும மேற் கொள்

தெரிநூலாகப்—பாண்டு குழலின் ஆயிடைத்தி ரிதா" என்

றபடி இவன் திரிந்து வினைமுடித்தமையை நினைந்து அனைவரும் வியந்து புகழ்ந்தார். பகைவருங்கூட இவன்சொல்லில் உவகை மீக்கூர்ந்து உறவுகொண்டார். 'தூதுசெல் லொழுக்கிற் சாதகன்' என்றே எவரும் சிறப்போடு இவனை அழைத்து வந்தார். மந்திரிக் குரிய மாட்சிகளோடு அன்பிலும் அறிவிலும் சொல்வன்மையிலும் நின்று தூதுவினையாற்றிவந்த இவனது மேதகவை நினைந்து பெருங்குயம் என்னும் ஓர் உயர்ந்த பட்டத்தையும் மிக்க வருவாயையுடைய இரண்டு ஊர்களையும் உதயணன் இவனுக்கு உரிமையாக உதவினன்.

இலாவாணகவழிச் சாதகனென்னு

ம்

குலாலற் கேற்பப் பெருங்குயம்

அருளி

இருக்கினி துறைகென இரண்டுர் ஈத்து; எனவரும் அடிகள் இவ்வுண்மையை யினிதுணர்த்துகின்றன. அன்பு அறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூது ரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று என்னும் உண்மைக்கு இவனோர் விரிவைப் பெருங்கதையில் காண்க.]

சான்றாய் நின்றான்.

அறிவமைதி சோல்வன்மை
யாண்மையிலான் தூது
யுறுவதுக் தாகி யுறும்.

அறிவும் சொல்வன்மையுமுடையவனே அதனுதற்கு உரியவ னுவன் என்பது இதனுல் கூறப்பட்டது.

683 கற்றுவல்ல சஞ்சயனை
காவலர்பாற் தூதுசென்றான்
கொற்றமிகு வேற்கைக்
குமரேசா—உற்றுணர்ந்த
நூலாரு ணூல்வல்ல னாகுதல்
வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. (௩)

இ—ள்.

குமரேசா! கல்வியில் வல்ல சஞ்சயன் என் ஒருவர்பால் அன்று தூதுரைக்கச் சென்றான் எனின், வேலாருள் வென்றி வினையுரைப்பான் பண்பு, நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் என்க.

இது, தூதனுக்குரிய வன்மை கூ.

றுகின்றது.

காவலர் = அரசர்; காத்தலில் வல்லவரென்பதாம். கற்று வல்ல என்றது அரிய நூல்கள் பலவும் கற்று வழுவறச் சொல்லவும் வல்லனாய் நிலவியிருந்தமை கருதி. கொற்றமிகு வேல் என்றது அண்டங்களொருகோடியாயினும், குலகிரியனைத்துமாயினும் ஏவினால் அடையவுருவிப்புறம் போய் அடையவரைத் தடையற அழித்து மீளும் அதன் ஆற்றல் கருதி என்க.

நூலோர் என்றது நீதி நூல் பலவும் ஓதியுணர்ந்தவர் என்றவாறு.

உள் = ஏழுருபு; ஈரிடத்தும் இடப்பொருளுணர்த்தி நின்றது. உரைப்பான் பண்பு, வல்லனாதல் என ஒட்டிக் காண்க. ஆதல் உரைப்பான் பண்பு என்றதனால் அங்ஙனம் ஆகாதவன் வேலாரிடைச் சென்று

வினையுரைத்தற்கு ஆகாதென்பதாயிற்று.

வேலார் என்றது வேலையுடைய அரசரை. வாள் வில் முதலிய பிற படைக்கலங்களையுடையாரினும் வெல்லும் இயல்பினது என்னும் சொல்லமைதியும், உலகுயிரடங்கலும் காக்கவந்த எம்பெருமான் கைக்கொள்ள நின்ற இதனை உரிமைபெற வைத்தார்.

பெருமையும் கருதி அரசர்க்கு இங்ஙனம் படையுடைமையாற் கூறியது அவரிடைச் சென்று வினையுரைத்துவரும் அருமை தோன்ற என்க. வேலார்பால் வில்லார் செல்லின் வினை துயர் விளையுமாதலால் நூலாரே செல்லவேண்டும்

என்றவாறு.

வேற்றரசரிடைச் சென்று பிரித்தல் பொருத்தல் முதலிய திருத்தல்களைச் செய்தற்குரிய தூதன், அங்கு அவர்பக்கல்

நின்று 69-ம் அதிகாரம் தூது.



ள்ள மதியமைச்சரினும் தான் மிக்க மதியுடையனாதல் வேண்டும்; இலனேல் தன் வினையுரை வறிதே பிழிவுறும் ஆதலால் நூலாருள் நூல் வல்லன் ஆதல் அவனுக்குப் பண்பு என்றார்.

மேல், அறிவும், சொல்வன்மையும் தூதனுக்கு உறுதியாக அமைந்திருக்கவேண்டும் என்றார்; இதில், கல்வியினுடமிக வல்லுநனைப் அவன் விளங்கி நிற்கவேண்டும் என்கின்றார்.

வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தம் அரசனுக்கு வெற்றிபுறுங் காரியத்தை விளங்கச்

சொல்லும் தூதனுக்கு இயல்பாவது, நூலறிவுடையாருக்குள் நூலறிவில் தான் மிகக வல்லனாதலேயாம் என்பதாம்.

தூதனுக்கு நூலறிவு சாலவும் வேண்டும் என்பது கருத்து.

3. [உழையிருந்து உறுதிகூறும் அமைச்சர்தாம் பல நூல்களையும் வழுவறப் பயின்று வல்லராதல்வேண்டும்; அவரை அலைந்து வரும் தூதனும் உறுதியாக அதனை உடையனாதல் வேண்டும் என்றது என்னையெனின்? மறு மன்னனிடஞ்சென்று பிழைபடப் பேசித் தன் அரசனுக்கு உறுதியை விளைக்கும் தூதன் கல்வியிலனாயின் எல்லா நன்மையும் புல்லிதாமாதலால் அவ்வன்மை அவனுக்கு உயிர்த்தன்மையாயுறைந்திருக்கவேண்டும் என்க. மந்திரிக்குரிய மாட்சிகளெல்லாம் தூதன்பால் மருவியிருக்கவேண்டும் என்பதாம்.

ஆகிநா லமைச்சர்க் கோதும் மாண்பெலாம்

அமைந்து நின்றான்
தூதனுச்சொல்லிற் சொல்லாச் சூழ்பொருள் இல்லைபோலா
யேதிலார்க் காவனுண்டோ இன்னண புகுந்த போழ்திற் [றான். கோதிலாக் குணங்கள் தேற்றிக் கொழித்துரை கொளுந்தலென் நூல்வல்லனுய் நின்று வினைபுரைத்த தூதனது மேன்மையை வியந்து தோலாமொழித்தேவர் இதில் ஒதியுள்ளமை காண்க.]

மிக்க நூலறிவுடையவனே தூதுபோய் வருதற்குத் தக்கவனவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சஞ்சயன்பால் உணரப்படும்.

கதை.

சஞ்சயன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் அத்தினபுரியிலிருந்தவன். அந்தணர் மரபினன். இவ 1674 திருக்குறட்

னுடைய தந்தை பெயர் சந்நிகன் என்பர். இவன் வடமொழியி லுள்ள கலைகள் பலவும் கசடறக் கற்றவன். மிக்க அடக்கமுடை யவன். சஞ்சயன் என்பதற்குப் புலன்களை வென்றவன் என்பது பொருள். தன் சொல்வன்மையால் எவரையுந் தன் வசஞ்செய் யுந் தன்மையன் .
செஞ்சொல்முனி, ஞான முனி என மானவர் இவனை மதித்துப் புகழ்வர்.
அக்காலத்திருந்த அரசர் பலரும் இவன்பால் அன்புற்றிருந்தார். இவன் திருதராட்டி ரனுடைய உயிர்த் தோழன். தன் குலத்துக்குக் குருவாகவும், புரோகித னாகவுங்கொண்டு அம்மன்னன் இவனை மிக மதித்துப் பேணி வந்தான். வருங்கால் பாண்டவர் வந்து தமக்குரிய தாய பாகத்தைத் தரும்படி கேட்டார். அவர்

நாட்டிலிருந்தால் கொடிய அமர்
மூண்டு தன்தமருக்கு அழிவுநேருமென்று
கருதி அவரை மீட்டுங் காட்டுக்கு ஓட்டி விட
அவன் கடுஞ்சூழ்ச்சி செய்து இவனாலேயே அ
து முடியுமென்று முடிவில் தெளிந்தான்.
“இவ்வுலக வாழ்வு விரைவில் அழியும்
இயல்பினது; அழிவில்லாத வாழ்வையே
அறிவுடையார் அடைய முயலவேண்டும்;”
என்று நிலையாமையைப் போதித்து அவரை
அங்கு நிலைக்கவொட்டாதபடி செய்துவிட
வேண்டுமென்று தனியே வைத்து
உரைசெய்து அவரிடம் இவனைத்தூதாக
அனுப்பினான். அவன் சூதாகக் கூறினும்
நிலையாமையில் இவன் நிலைத்த
நெஞ்சினனாதலால் அது தீதென்று நில்லாமல்
அவர்பால் தூதாகிச் சென்றான்.
நீதிகளைப் போதினான்.

புடவியாளுதல் விட்டு நன்னெறி புரியு மாதவர்
தம்மினீர்

அடவியாளவும் வல்லிராயினிர்
ஆதலானவமானதே
மடவியார்கிலை யற்றசெல்வ மகிழ்ந்துவாழ்
தினமாறினுல்
விடவியாரழ லுற்றெனப்பெரு நரகிலாழ்
வுறவீழ்வரால்
உ ற்றயோனிக டம்மிலுற்பவி யாமன்
மானுடவுற்பவம்
பெற்று வாமுத லரிதுமற்றது
பெரிலுமாயைசெய் பெருமயக்
கற்று ஞானிக ளாய்விளங்குக லரிதுவீடுற
மறிவுபின்
பறறுமா றரிதிக்தனக்கிவை பண்பிஞேடு
பலித்தவே.
திகந்த வெல்லை யுறப்பெ–ரும்புவி செல்லரேமி
செலுத்திலும்
அகர்தையோடமராட வெண்ணிடும்
அரவகேதன னுங்களோ
டுகர்துவாழ வொருப்படானினி யுற்றதாயமு

முரிமையும்
இகந்து மாதவ முயறலேகட னீறிலா
வுலசெய்தவே.

69-ம் அதிகாரம் முற்று.

1675

பாரிலாசையு மின்னிராசபதத்தி லாசையு
மன்னுசிவம்
போரிலாசையு மேயமங்கையர் போகமன்பொடு
புசிதுணுஞ்
சீரிலாசையும் விட்டுநன்னெறி சேருநன்னுதி
நீயெனத்
தாரிலாசை யறத் துறந்தருள் சுருதிமாமுனி
சொல்லவே.

இங்ஙனம் சொல்லியதைக் கேட்டவுடனே அக்கண்ணில்லாதவன் செய்துவிட்ட வஞ்சமென்று அவர் கண்டுகொண்டார். "அரச தருமத்தைக் கொள்ளவேண்டிய யாங்கள் இந்த அந்தண தருமத் தை

இதுபொழுது கொள்ளோம்; பகைவரை யழித்து அரசினை யாளுதலே எங்களுக்கு அருந்தவமாகும்;" என அவர் அறைந்து விடுத்தார். ஆண்டு நிகழ்ந்ததை இவன் மீண்டுபோய்க் கூறினன். வில் வீரராகிய அவர்பால் வேறு எவரையும் விடாமல் கல்வி வீரனாகிய இவனையே விழைவுரைத்து வருமாறு தூதாக விடுத்தமையால் நூலாருள் நூல்வல்லனாதல் வேலாருள் வென்றிவினையுரைப்பான் பண்பு என்பதற்கு இவன் நண்பாய் நின்றான். பின்பு பாரதப் போர் நிகழ்ந்தபொழுது அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் அடிக்கடி சென்று திருதராட்டிரனிடம் இவன் கூறிவந்தான்.

கோற்றவர்பாற் செல்லுங்
குலத்தூதன் நூல்பலவும்
கற்றவனாய் நிற்றல் கடன்.

தூதனாய்ச் செல்பவன் நூலில் வல்லவனாயிருத்தல் வேண்டும் என்பது இதனால்

கூறப்பட்டது.

---

684 காதலர்பல் லோரிருப்பக் கண்ணனென் தூதுசென்றான்
கோதைபுனை வைவேற் குமரேசா—நீதி
அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. (ச)

இ-ள்.

குமரேசா! அன்புடையார் பலரிருப்பக் கண்ணன் என் முன்பு தூது சென்றான் எனின், அறிவு உரு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன் செறிவுடையான் வினைக்குச் செல்க என்க.

கோதை = பூமாலை. இது, மாதர் முதலிய பொருள்களையும் குறித்துவரும்.

பூப்புனை மாலையும் மாலைபுனை மாதரும்,
தோற்



புனைவின்னுண் தொடர்ை நக் கட்டியும்,
கோச்சேரான் பெயருங் கோதை என்றுகும்
என்றது திவாக ரம். வென்றியின் மேன்மை
கருதி வேலில் மாலைசூட்டப்படும் என்க. வை
= கூர்மை.

காதலர் பல்லோர் என்றது
யாகசேனன், குந்திபோசன்,
விராடன், வீரகீர்த்தி முதலாயினோர்.
கொடியவனைப் துரியோ தனன்பால்
தூது சென்று வருதற்குரிய அறிவு முதலிய
செறிவுடையார் தன்போற் பிறரில்லாமையால்
செல்லா இபல்பினைப கண்ணனே அன்று
செல்ல நேர்ந்ததென்க.

இது, அறிவும் அழகுமுடையவனே தூது விணைக்குப் பெரிதும் உரியவனுவன் என்கின்றது.

அறிவு என்றது இயற்கை அறிவை. இது கருவிலேயேபமைந்த தனி அறிவாதலால் இயற்கை என நின்றது. கருவோடியைந் தமையால் இயற்கையறிவை முதலிலும், அதனோடு அமைந்தெழுந்தமையால் உருவை அதன்பின்னும், அஃது உயர்ந்தோங்கிய பின்னரே செயற்கை அறிவுக்கேதுவாகிய கல்வியைப் பலரோடும் பயின்றுகொள்ள இய லுமாதலால் அதனை இறுதியிலும், முறையே கருதவைத்தார். உருவென்றது தோற்றப் பொலிவை. எண்ணிடைச் சொல் இடையே வாராமையால் இறுதியில் தொகைபெற்று நின்றது. மேற்குறித்த மூன்றினும் தூதன் மிகச் சிறந்திருக்கவேண்டும் என்பார் மூன்றன் செறிவுடையான் என்றார். செறிவு = நிறைவு, மிகுதி. செறிவில்லான் சென்றால்

வினை இனிது முடி பாமென்பது கருதி உடையான் செல்க என்றார்.

மேல், சிறந்த கல்வியுடையவனே தூதனைச் செல்லுதற்குத் தகுந்தவன் என்றார்; இதில், அறிவும் உருவும் அதனோடு அவன் அமைந்திருக்கவேண்டும் என்றார்.

இயற்கையறிவும், இனிய வுருவும், ஆராய்ந்து தெளிந்த கல்வியும் என இம்மூன்றனை து

நிறைவையுடையவனே வேற்று அரசரிடம் தூது வினைக்குச் செல்லவேண்டும் என்பதாம்.

கண்டவுடனேயே நன்குமதித்து எவரும் விரும்பிப் போற்றுதற்குரிய ஏற்றத்தை உரு உதவி நிற்குமாதலால் அதனையுடை யவன் தூதுவினைக்குச் சென்றால், கருதிய கருமம் இனிதுமுடியும்

69-ம் அதிகாரம் தூது.

என்பது கருதி உருவுடைமைகூறினர். இது முன்னைத் தவமுடையார்க்கன்றி எவரும் எளிதில் பெறுதலரிதென்க.

கருவி மாமழை கனைபெயல்
பொழிந்தென வழிநாள்
அருவிபோற் றொடர்ந் தறாதன
வரும்பிணி யழலுட்
கருவிற் காய்ந்திப கட்டலைப்
படிமையிற் பிழைபா
டுருவின் மிக்கதோ ருடம்பது
பெறுதலும் அரிதே. என இவ்வுருவின் அருமையை வியந்து திருத்தக்கதேவருரைத் துள்ளமை காண்க

உருவும் கல்வியும் அறிவுமுடையவரே தூதராய்ச் செல்லுதற்கு மிகவுமுரியவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணன்பால் காணப்படும்.

## கதை.

சஞ்சயன் தூதுவந்து போனபின்பு இறுதியாகத் துரியோதனனது உறுதியை யறியவேண்டி அவன்பால் ஒரு தூதனை அனுப்பத் தருமர் கருதினார். அக்கொடிய மன்னன்பாற் சென்று வினையை முடிவுசெய்து வருதற்குக் கண்ணனே தக்கவன் என்று துணிந்து தம் கருத்தை யுணர்த்தினார். உடனே போர் தொடங்காமல் தூதுவிடுத்து இங்ஙனம் நேர்மை நாடுவதில் தம்பியர் இசைதிலர். தமக்குள்ளேயே வெம்பி மொழிந்தார். தான் போனால் அனைவரையும் பார்த்து வரலாமென்று கருதித் தன்னையனுப்பும்படி வீமன் வேண்டினான். சூடுகின்ற துழாய்முடியோன் சாருடனே முனிவர்களுஞ் சுருதிநான்குந் தேடுகின்ற பதஞ்சிவப்பத் திருநாடுபெறத் தூது செல்ல வேண்டாம் வாடுகின்ற மடப்பாவை தன்வாழ்வும் என்வாழ்வும் வழுவா வண்ணங் கோடுகின்ற

மொழியவன்பா லெனைத் தூது விடுகவினிக்

கொற்றவேந்தே. எனக்கூறி வேண்டியும் தூது

போதற்கு நீ ஆகாதென்று சொல்லி

வீமனைத்தடுத்துக் கண்ணனையே அவர் செல்ல

விடுத்தார். கண்ணன்சென்று

அத்தினபுரியை யணுகி யங்கோர் சோலையில்

தங்கினான். அதனையறிந்த சிலர்

விரைந்துசென்று துரியோதனன் முன் நின்று

அன்று தூதுகோண் டிலங்கைதீ விளைத்தவன்

ஐவர்க்கு— இன்று தூதுவந்து எயிற்

புரத்திறத்தனன் என்றார். இதனைக்கேட்ட

வுடனே வீடுமன்முதலியோர்

வியந்தெழுந்துபோய் எதிர்கொண்டு 1678

திருக்குறட் குமரேச வெண்பா.

கண்டார். இவன் அவருடன் உவந்து

சென்றான். மேல் உறுவதை நோக்கி

விதுரான் மனையில் தங்கி விருந்துண்டு மறுநாள்

அரசவையையடைந்து அரசன்

முன்னிருந்து தான் கருதிவந்ததை
உறுதிபெற உரைத்தான்.
குதிரைவா சிழந்துநின்றுணைவர் சொன்னசொல்லும்
வழுவாதுபோய் எதிலார்க ளென வொத்து
தண்ணிழலிலாத கானினிடையெய்தியே நீதிவாவகை
குறித்நாள்பல கழித்துவந்தனர் செகத்தினிற்
கோதிலாத குரு குலதீப! அரைசுரிமை நண்பொடு
கொடுத்தியே. சொல்லவா வுரக துவச நின் னுரிய
துணைவர் தங்களையழைத்துநீ வல்லவாறு
சிலநாடளித்தவர்க டம்முடன் கெழுமி வாழ்தியேல்
நல்லவாய்மை நிலையுடையை யென்றரசர் நாடொறும்
புகழ்வர்நண்புகொண் டல்லவா மெனமறுத்தியேல்
அறமுமாண்மையும் புகழு மல்லவே. என அவன்
கொள்ளுமாறு நல்லுரைகள் பல சொல்லி
வேண்டினான். வேண்டியும் அவன்
இசைந்திலன். அவர்க்கு உரிமையாயதை
முழுவதும் தாராயாயின் பாதியாயினும்
தருக என்றான். அதனையும் மறுத்தான்.
மீண்டு பல கூறியும் தன் கொடுமையி
னின்று அவன் மீண்டானில்லை.

இறுதியில் ஐவர் இருந்து வாழுமாறு ஐந்து ஊரேனும் உதவுக என்றான். இவ்வுலகெலாம் உதவும் உந்தியான் சில ஊர்களை உதவுக என வுரைத்து வேண்டியும் அக்கொடியவன் உதவானாகித் தன் கொடுமையில் ஊக்கி

னான்.

நீ வெறுக்கிலென் இருந்த மன்னவர் திகைக்கிலென் பல நினைக்கிலென் போய் நகைக்கிலென் உரைத்த வண்மை மொழி பொய்த்ததென் றமரர் பகலிலென், வேய் மலாத்தொடைய வைரென்னுடன் மிகைத்து வெஞ்சமர் விளைக்கிலென், ஈ இருக்குமிட மெனினும் இப்புவியில் யானவர்க்கரசினிக் கொடேன், என அவன் எதிர்த்து நின்றான். அவனது நிலையை நோக்கி அங்கு நின்றிருந்தவரும் நெஞ்சங் கவன்றார். இவன் பின்னருஞ் சில இன்னுரை புகன்றான்.

தந்தை காதலுறு தன்மைகண்டிளைய தாய் பயந்த இரு தம்பியர்க்கிந்த வாழ்வும் அரசுங் கொடுத்தவனு

நின் குலத்தொருவ னிவ்வுளான் முக்தமாகில
மனைத்திணுக்குமுயர் முறைமையாலுரிய வரசருக்
கைந்து மாநகரும் நீ கொடா தொழியின்
என்னதாகுமென தரசியல்.

69-ம் அதிகாரம் தூது

1679

ஒரு குலத்தினி லிரண்டு மன்னவ ருடன்
பிறந்தரிமை யெய்தினால் இரு குலத்தவரு மொக்க
வாழ்வுறுதல் எக்குலத்தினு மியற்கையே
பொருகுலக்களிறு வளர்திசைக்கண் மிது புகழ்
பரப்பியெழு புவிபெறுங் ஒரு குலத்தவ ரியற்கை
நன்றெனமொழிந்தனன் சரிய சேர்வலன்.

கொடுத்தவன் ஒருவன் என்றது வீடு
மனை. இக் குறிப்பபை இங்கு எடுத்துக்
காட்டிக் கண்ணன் உரைத்த நயத்தை
யுண்டு ஊன்றி புணர்க. இங்ஙனம்
அறவுரைகள் பல பகர்ந்தும், அவன்
திருந்தாமையைக் கண்டு தன்

உரிமைபாளராய இவர்க்கும் உறுதியான
சில அரிய சூழ்ச்சிகளைச் செய்து கொண்டு
மீண்டுவந்து அரசைப்படைத்து வேண்டிய
நலங்களை விளைத்து நின்றான். இவனது
வடிவழகையும், அறிவமைவையும்
தூதுகிச்செய்த மேதகவையும் உலக
முழுவதும் உவந்து புகழ்ந்தது. அறிவுரு வா
ராய்ந்த கல்வியின் மேன்றன் செறிவுடையான்
சொல்க வினைக்கு என்னும் உண்மைக்கு
உரிமையாய் இவன் சென்றுணர்த்தினான்.

முன்னோர் தூது வானரத்தின் வா
யின் மொழித்தாக்கள்

மன்னார் தன்னை வாளியினன் மாள
முனிந்தவனே

பின்னோர் தூதாகி மன்னர்க்காகிப்
பெரு நிலத்தார்

இன்னார் தூதன் என நின்றான்; என
இவனது தூதாண்மையை வியந்து ஆழ்வார்
அருளியுள்ளதுங் காண்க.

ஆற்றலினும் நல்ல அழகேமெய்த்
தூதனுக்
கேற்றமுற வாற்றுமேன எண்.
தூதனுக்கு அறிவோடு உருவும்
வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

685 மாறில் புகழேந்தி மாண்பாணர்
தூதுசென்றேன்
கூறினர் நன்றெய்தக்
குமரேசா—தேறித்
தொகச்சொல்லித் தூவாத நீக்கி
நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.
(ரு)

இ—ள்.
குமரேசா! புகழேந்தியும்,
பாணரும் தூது சென்று
நலம் பயப்ப என் நாடிச் சொல்லினர் எனின்,
தொகச் சொல்லி

தூவாத நீக்கி நகச் சொல்லி நன்றி பயப்பது
தூதாம் என்க. 1680 திருக்குறட்
குமரேச வெண்பா.

இது, தூது சென்றவன் வேற்று
வேந்தர் முன்னின்று சொல்லுந் திறங்
கூறுகின்றது.

மாறு இல் என்பதைப் பாணருக்கும்
கூட்டுக. என்றும்
நிலையிற் பிரியாமல் நெறியில் நிலைத்து
நின்றமை கருதி இவ் அடை
புணர்க்கப்பட்டது. தம் அரசருக்கு நலம்
பயக்குமாறு
நாடிச் சொன்னார் ஆகலால் நன்று பயக்கக் கூ
றினார் என்றாம். தேறி என்றது எவ்வாறு
சொல்லின் இசைவர் என்று தெளிந்து என்க.

தொகச் சொல்லி என்றது சுருக்க
மாகத் தொகுத்துச் சொல்லி என்றவாறு.

தூவாத என்றது தூய்மையில்லாதவற்றை. அஃதாவது வெறுக்கத்தக்க வெய்ய சொற்களை.

நன்றி பயப்பது—நன்மையை விளைப்பவன். தூது என்பது பொருளால் உயர்திணை யாயினும் சொல்லால் அஃறிணையாதலின் அதற்கு ஏற்பப் பயப்பது என வந்தது. வரினும் பயப்பவனை தூதனாவான் எனப் பகுத்துணர்ந்து கொள்க.

மேல், அறிவும் உருவும், கல்வியுமுடையானை தூதனாகச் செல்லவேண்டும் என்றார்; இதில், தன் அரசனுக்கு நன்மையுண்டாகுமாறு மாறு மன்னர் முன் நின்று அவன் சொல்லவேண்டும் என்கின்றார்.

தொகுத்துச் சொல்லியும், இழிந்த சொற்களை நீக்கி இனிய சொற்களால் மகிழச் சொல்லியும், தன் அரசனு

க்கு நன்மையைத்

தருபவனே தூதனாவான் என்பதாம்.

நன்றி பயப்பவன் தூதனாவான்

என்றதனால் அங்ஙனம் பயவாதவன் தூதனாகான் என்பதாயிற்று.

பலபடச் சொல்லின் பொருந்துக் கேட்கமுடியாமல் வெறுத்து விடுவாதலால் தொகச் சொல்லி என்றும், விருப்பமில்லாத வெவ்வுரையாடின் வெகுண்டு விடுவாதலால் தூவாத நீக்கி என்றும், நயவாதிருப்பினும் மனமகிழச் சொல்லின் நயந்து கொள்ளுவாதலால் நகச் சொல்லி என்றும், நயம் பயப்பக் கூறினார். சொல்லாடுந்தன்மையைத் தூதர் உணர்ந்துகொள்ளுமாறு தேவர் உணர்ந்தருளிய நுண்மையை இதில் வைத்தி உணர்க.

69-ம் அதிகாரம் தூது. 1681

ர [காம் கருதியவற்றைத் தம் வாயால் பிறர்க்குணர்த்தி மக்கள் வாழ்ந்து வருதல் போல் தான் உள்ளியதை உணர்ந்துத் தூதனையே அரசன் அனையாகக்

என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புகழேந்தி கண்ணும், பாணர் பாலும் உணரப்படும்.

## கதை.

இனிய மொழியாளராகிய நமது புகழேந்திப் புலவரது துணிவு தூய்மை முதலிய குண நலங்களை புணர்ந்த பின் தன்னுடனிருந்து வரும்படி குலோத்துங்கசோழன் இவரை மிக உவந்து பேணினான். இனிய நலங்கள் பல இவரால் எய்தினான். தன் வில்வலியால் வெல்ல முடியாதவரையும் இவர் தம் சொல்வலியால் இணக்கித் தனைக் கொண்டு வாழ்ந்தான். வாழ்ந்து வருங்கால் ஒரு நாள் அரசன் தேவி அவனோடு சிறிது சினங்கொண்டு அந்தப்புரத்தில் மனங் கவன்றிருந்தாள். அவளைத் திருத்தி மகிழ்வித்து வருமாறு தன்னருகிருந்த பட்டத்துப்புலவனாகிய

ஒட்டக் கூத்தனை அரசன் அனுப்பினான். கூத்தன் வருவதை யறிந்து கதவைச் சிறிது தாளிட்டு வைக்கும்படி தேவி செய்தாள். இவன் போய்க் கதவினருகே நின்று தன் தகுதியின் வீறு தோன்றப் பெருமிதத்தோடு சில புகழ் மொழிகள் கூறினான். அரசி யாதும் கூறாது உள்ளே யமர்ந்திருந்தாள்.

1682 திருக்குறட் குமரேச வெண்பா.

நானே யினியுன்னை வேண்டுவதென் கொல் நளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடுவாய் திறவாவிடிலோ
வானே றனைய இரவி குலாதிபன் வாசல் வைத்தான்
தானே திறக்கும் நின் கைத்தல மாகிய தாமரையே.

னைக் கூத்தன் காவன்மையோடு பாவுரை யாடினன். அவன் நிலைமையை நோக்கி நீட்டு ம் ஒரு நாள் அரசி போட்டிடச் செய்தாள். அந் நிகழ்ச்சி தான் இன்றும் ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட் டைத்தாள் என்று பழமொழியாய் நின்று எங்கும் நிலவி வருகின் றது. பாவம்! நகச்சொல்லக்கெரிபாத கூத்தன் என் செய்வான்? நகை யிழந்த முகத்தனப் மீண்டு போய் ஆண்டு நடந்ததை அரச னிடம் உணர்த்தினன். அவன் மிக வருந்தி அவளை யிகந்தெய்து வருமாறு தூதாக இவரை யனுப்பினன். இவர் சென்றார்; கூடி வருகை நின்றார்.

இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடை யேந்திய பொற்
குழையொன் றிரண்டு விழிபணங் கொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானுபரணன் நின் வாசல் வந்தால்
பிழையொன் றிரண்டு பொறாயோ குடியிற் பிறந்தவரே. என்றார்.

இழை—நூல். ஒரு நூலை இரு பிளவாக வகிர்ந்து வைத்

தாற் போன்ற நுண்ணிய இடையினையும்,
காதளவு நீண்டு பரந்த
கண்களையுமுடைய தெய்வமாதே !
வண்மையும் மானமுமுடைய நின் நாயகன்
பிழையை இம்முறை பொறுத்தருளவேண்டும்
என்னும் பொருள் பொதிந்த இவரது
இனிய வுரையைக் கேட்ட வுடனே அரசி
அருள் மிக உடையளாய்ப் பெரு
மகிழ்வடைந்து தானே விரைந்து கதவைத்
திறந்து புலவர் திலகமே ! எம் தலைவனை
இங்கு வரவிடுக என்று புன்னகையோடு
இன்
னுரையாடினள். இவர் சென்று கூறினர்.
அதனை உணர்ந்து
அரசன் அக மிக மகிழ்ந்துபோய் அரசியை
யடைந்து ஆர்வமீக்
கூர்ந்தமர்ந்திருந்தான். தன் ஊடலை
நீக்குமாறு இவர் கூறிய

பாடலை அக் காரிகை பாடக் காவலன் கேட்டான். பெண்களுக்கு உத்தம இலக்கணம் என்று சிற்றிடையைச் சுட்டிக், தான் சொல்வதைச் செவியேற்று அருள் நோக்கம் செய்யவேண்டும் 69-ம் அதிகாரம் தூது. 1683

என்பது தோன்றக்குழையையும் விழியையும் இணைத்து, அழகின் இயல்புதோன்ற அணங்கே யென விளித்துத், தங்கள் குடிப் பிறப்பைக் கூறின் பெண்கள் மகிழ்வர் என்று கருதி அத்தை உறுதி பெற வுணர்த்தி, மிகைபட விரிக்காமல் நகைபுறச்சொல்லித். தனக்கு நன்மை பயப்பித்த இவரது நன்மையை வியந்து அரசன் மகிழ்ந்துவந்து இவரைப் புகழ்ந்து தழுவிப் போற்றி நின்றான். ஆடவரொவரும் புகவொல்லாத அந்தப்புரத்தில் தம் காதலிகள் பால் நீதிகள்

கூறிவருமாறு அக்காலத்துப் புலவர்களை அரசர் தூது அனுப்பிவைத்தார் என்றால் அவர்தம் தூய்மையும் சீலமும் எத்துணையவா யிருந்திருக்குமென்பதை இக்காலத்துப் புல வர்களும் பிறரும் ஈண்டு உய்த்துணர வேண்டும். தம் சொல்வலி யால் தனக்கு நன்றிபுரிந்துவந்த இவர்பால் அரசன் பின்பு பெரு நன்றியுடையனாய் உரிமை செய்திருந்தான். தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி நன்றிபயப்பதாந் தூது என்பதை உலகம் இவர்பாலுணர்ந்து நின்றது.

## கதை 2.

பரணர் என்பவர் சங்கப் புலவர்களுள் ஒருவர். அறிவு. நூலோடு பண்டைக்காலத்துச் சரிதநூல்கள் பலவும் பயின்றவர். கபிலர்பால் பெருநண்புடையவர். அதனால் கபில பரணர் என உம்மைத் தொகைத் தொடர்க்கு உதாரணமாக இலக்கண நூல் களில் இணைந்து உணர்த்த

நின்றவர். செங்குட்டுவன் என்னும் சேரமன்னன்மீது பத்துப் பாடல்கள் இவர்பாடியதற்காகப் பல ஊர்களையுடையதொரு நாட்டையும், குட்டுவன் சேரல் என்னும் தன் அருமைத் திருமகனையும் இவர்க்குப் பரிசிலாக அவன் கொடுத்தான். அக்காலத்திருந்த முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் இவர்பால் பாடல்பெறுவதைத் தமக்கோர் பீடுடைமையாகப் பெரிதும் கருதினர். எவர்க்கும் இவர் இனிய பண்பினர். அரச ராயினும் குடிகளாயினும் ஒருவரோடொருவர் மாறுபடுவாராயின் இவர் இடையே புகுந்து அறவுரைகள் பலகூறி இருதிறத்தாரையும் உறவாக்கி விடுவார். பாணன் பாடினன் மற்கொன் மற்றநீ என்று இவரால் அதிகமான் பாடப் பெற்றிருப்பதை ஒருபெரும்

வெண்பா.

புகழாக ஔவையார் வியந்து கூறியுள்ளார். தாம் கருதிய தை முடித்தற்கு அரசர் இவரையே உறுதிபெற விடுப்பர். நெறி வழுவாமல் எல்லாரும் இனிது வாழுமாறே இவர் இயற்றிவந்தார். வருங்கால் பேகன் என்பவன் தன் அருமைத் துணைவியாகிய கண்ணகியை அவமதித்துவிட்டு ஓர் காதற்கிழத்தியை விரும்பிக் களிப்புற்றிருந்தான். தன் தலைவனைப் பிரிந்து அவலமுற்றிருக்கும் அவளது பரிவினுக்கு இரங்கி ஒருநாள் • இவர் அவன்பாலடைந்தார். பேராண்மையாளனாகிய நீ இச்சீரழிவு செய்யலாகாதென்று அவன் மகிழ்வோடு உணர்ந்துகொள்ளுமாறு பல கூறி அவளை யடைந்து வாழும்படி செய்தார். அவ்வமையம் அவனை நோக்கி இவர் சொல்லிய கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறைநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியாம் இரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
யின்னா துறைவி யரும்படர் களைமே.

(புறம்.)

படாஅம் ஈத்த = பட்டுப் போர்வை கொடுத்த. கலிமான் = குதிரை. இன்னாது உறைவி = துன்பமாக உறைந்திருப்பவள்;" என்றது இவளைப்

பிரிந்தமையால் வருந்தித் தனியே தங்கியிருக் கும் கண்ணகியை. பேக ! உறைவி, படர்களை; என உய்த்துக் காண்க. குளிரால் நடுங்குமென்று ஒரு மயிலுக்குப் போர்வை கொடுத்து அதனால் அழியாப் புகழைபடைந்த பேகனே, உன் தலைவியைத்தனியே வருந்தவிட்டிருப்பது உன்தகுதிக்குப் பொருந் துமோ? சிறிதும் பொருந்தாது; இப்பொழுதே தேரேறி விரைந்து போய் அவளை இனிது பேணுக என்று இதமுறச் சொல்லி இன் பம் பயப்பித்த வுண்மையும், இவரது பெருந் தன்மையும், சொல் வன்மையும், பிறவும் இதில் இனிது புலனாகுதல் காண்க. இவரது 69-ம் அதிகாரம் காண்க.

1685

நட்பின் தகவையும், நலமுறச் சொல்லித்

தனக்கு இசை விளைத்த இயல்பையும் பேகன் பின்பு எண்ணிப்பெண்ணி யின்புற்றிருந்தான்.
நகச்சொல்லி நன்றி பயப்பதே தூதாம்
என்னும் உண்மையை உலகம் காண இவரும் உணர்த்தி நின்றார்.

இதமுறச் சொல்லித் தன் அரசனுக்கு நலம் விளைப்பவனே தூதனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

686 அன்று கடோற்கசனேன் அஞ்சாமல் தூதுசென்று

குன்று துரைத்தான்
குமரேசா—நன்றாகக்
கற்றுக்கண் ணஞ்சான்
செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

(௯).

இ—ள்.

குமரேசா! கடோற்கசன் அஞ்சாது நின்று துரியோதனனுக்கு என் அறிவுரைக் கூறினன் எனின், கற்றுக் கண்அஞ் சான் செலச் சொல்லிக் காலத்தால் தக்கது அறிவது தூதாம். என்க. ஆல் உருபு உடனிகழ்ச்சிப்பொருளது.

இது, மறுமன்னர் முன்னர் அஞ்சாது நின்று தூதர் ஆவ தைப்பரியவேண்டும் என்கின்றது. அன்று என்றது பாரதப் போரின் பதின்மூன்றும் நாளை. பகை மிக வளர்த்திருத்தலையும் படைவீரர் மிடைந்து நின்றதையும் மதியாது புகுந்து துரியோதன் செயிர்த்து நோக்கியபொழுது அதற்கஞ்சாமல் நின்று எதிர்த்தியாடினமை கருதி அஞ்சாமல் சென்று துன்றுதாரத்தான் என்றும். நன்று ஆக என்றது கசடற

என்றவாறு. நூல்வன்மையும்,
கல்வியுடைமையும் தூதனுக்கு வேண்டும்
என மேல் ஒதியிருத்தலால் கற்று என்றதற்கு
நூல்களோடு தனக்கு வேண்டிய உபாய
ங்களெவற்றையும் உணர்ந்து என்று கொள்க.
கண்ணஞ்சான் என்றது வேற்றரசரிடம்
போய்த் தூதுரைக்குங்கால் அவர் செயிர்த்த
நோக்கின் அதற்கு அஞ்சாதவனாய்
என்றவாறு. அஞ்சான் என்னும் முற்று
இதில் எச்சமுற நின்றது. அஞ்சாமை
நெஞ்சுறுதி யென்க.

1686 திருக்குறட் குமரேச
வெண்பா.

அஞ்சாதாய் அறிவது தூதாம்
என்றதனால் அஞ் சுதலும் அறி
யாமையுமுடையான் தூதனாகான்
என்பதாயிற்று.

அரசனுக்கு • உறுதிசூழும்
உரிமையாளர்களுள் தூதுவன் "எப்பொழுதும்
மருவலரிடங்களில் சென்றுவ T
வேண்டியவனாத
லால் அஞ்சாமையும், சொல்வன்மையும்,
உய்த்துணர்வும் அவனு
க்கு எஞ்சாமல் என்றும் இருக்கவேண்டும்
என்பார் அஞ்சான், சொல்லி, அறிவது தூது
என்றார்.

மேல், இதமுறச்சொல்லித் தன்
காரியத்தைத் தூதன் இனிது முடி
க்கவேண்டும் என்றார்; இதில், அவன் யா
ண்டும் அஞ்சானாய் நின்று
வேண்டியவிடத்துத் தக்கவுபாயங்களைத் .
தானே யறிந்துகொள்ள வேண்டுமென்றார்.

நீதிநூல் முதலி।। கலைகள் பலவும்
கற்று எவ்விடத்திலும்
அஞ்சாது நின்று தன்கருத்தைப்
பிறருளங்கொளச் சொல்லிக்,

காலத்திற்கேற்பத் தகுதியான வுபாயங்களை
விரைந்தறிபவனே
தூதனாவான் என்பதாம்.
கல்வியறிவும்
அஞ்சாமையுமுடையனாயினும் கேட்போருளங்
கொளச் சொல்லு ந் திறன் இலனாயின்
தூதனுக்கு அவை யாதும்
பயன் படா ஆதலால் செலச் சொல்லுதலும்,
இவையெல்லாமிருப்
பினும் இடங்கால ங்கட்கேற்ற வுபாயங்களை
அவ்வப்போது கூர்ந்
தறிந்து கொள்ளானாயின் போந்தவை
யாவும் வீழ்ந்துபடுமாத
லால் காலத்தால் தக்கது அறிவதும்,
அவனுக்குத் தகுதியாக வேண்டுமென்க.
சிறந்த கல்வி, தெளிந்த சொல்வன்மை,
துணிந்த நெஞ்சம் வேண்டியவிடத்து
வேண்டிய வுபாயங்களை விரைந்துணர்ந்து
கொள்ளும் ஒண்மை என்னும்

இத்தன்மைகளை யுடையவனையே தனக்குத் தூதனாக அரசன் துணைக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

இடன் காலங்கட்கேற்ற வுபாயங்களை விரைந்தறிந்தாற்றி எதற்கும் அஞ்சாதவனே தூதனாவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கடோற்கசன்பால் உணரப்படும்,

## 69-ம் அதிகாரம் தூது.

1687

### கதை.

ஆண்மை நேர்மைகளிற் சிறந்த கடோற்கசனைப் பாரதப் போர் நிகழுங்காலத்தில் பதின்மூன்றும் நாளிரவு துரியோதனன் பால் தூதுபோய் வருமாறு தருமர் ஏவினார். தன் மகனாகிய அபிமன்னனை அன்று அநியாயமாகக் கொன்றுவிட்ட சயத்திரதனை மறுநாள் இரவு

வருமுன் கொன்றுவிடுவதாக வஞ்சினங்கூறி அரனிடம் அருச்சுனன் வரம்பெறச் சென்றிருப்பதைப் பாசறையிலிருக்கும் அவனிடம் சொல்ல இவன் அமைந்து சென்றான். பெரும்படை விடைந்து நிற்கும் அந்த இவன் துணிந்து புகுந்து அரசன் முன்னின்று தான் முனைந்துவந்த காரியத்தை அவன் மனங்கொள உரைத்தான்.

தன்றிரு மைந்தனை மெளலி துணித்த சயத்திரதன்றனைவான்
வென்றிகொள் காவலர் காவன்மிகுப்பினும் வெயிலவன் வீழ்வதன்முன்
கொன்றிடு வேனது தப்பி னருக்கனை யூடுசுதித்திடுவேன்
என்றுமொழிந்தகன் வாழ்கயி லாயமு மெய்தினன் வில்விசயன்.

வஞ்சனை யாலமரிற் பல கதன்னை மலைப்பது பாதகமென்
றஞ்சின ஞதலின் நீயறியும்படி யையன்விடுத்தனை

ஜூல்

எஞ்சின ஞானியும் மைத்துனனென்றுகோன்
என்றனன் வன்றிறல்கூர்

நெஞ்சினில் வேறொரு சஞ்சலமற்ற நிசாசரன்
மாமருகன்.

இங்ஙனம் உரைத்ததைக் கேட்டு
உணர்க்கலையாமல் அக்கொடி-
யவன் இவனைச் சினந்து நோக்கினான்.
அதற்கு இவன் சிறிதும் அஞ்சாமல் நின்று

தன் அரசற்கு வேண்டிய உறுதிகளையே
உறுதிபெற வுணர்த்தினான். யாதும்
அஞ்சானாய் இவன் எதிர்த்து
ரையாடி யதை நினைந்து அவன் மீண்டும்
செயிர்த்து நோக்கிச் சிறு மொழிகள் பல
கூறினான். பயந்து நடுங்கி அரனிடம்
படைவாங்கச் சென்றவனை நாங்கள் அடுவது

திண்மை; பிறர் அடவியில்
அலைவது உண்மையெனப் பலபட அவன்
இகழ்ந்து மொழிந்தான்.

இவண்மொழிந்த இகழுரைகேட்டிடும்பன் மருமகன்
வெகுளுற்றென்சொன்
னாலும், அவனிதல முழுதுமினி யரசாள நினை
க்கிருந்தீர் அறிவிலீர்காள்
சிவனெரிசெய் புரம்போலும் பாடிவீடழலூட்டிச்
சேனையாவும்
பவனன்மகன் மனைவென்றும் பரிசறியத்
தொலைத்திடு படுத்துவேனே. (1) 1688
திருக்குறட் குமரேச வெண்பா.

தசைகுருதி நிணமொழுகத் தனித்தனியே
யெதிர்த்தவரைத் தலைரன்சிர்த
விசையன்வரவேண்டுமோ மற்றுள்ளார்
திரண்டுவரவேண்டுமோதான்
இசைபுலரு முனமுழைந்து நீறாக்கி விடுதுவ
னெச்சிருபன் சொன்ன
வசைவின்மொழி மறத்து டற்ற லாகாதென்
றிருக்கின்றே னறிவிலீரே.
இருவரெதிரெதிர் தம்மி லிகல்பொருத

லுலகியற்கை யாருக்கூடிப்
பருவமுறாத் தனிக்குதலைப் பாலகனுக் காற்றமற்
பறந்துபோனீர்
ஒருவனெடுத் தோழிக்க வொருவன்
மலர்க்கைதுணிக்க ஒருவன் பின்னைப்
பொருவனென வறைகூவிப்பொன் றுவித்தான்
இதுகொண்டோ புகல்கின்

- - -

றீரே.
தேனிடறிப் பாண்முரலுஞ் செழுந்தாம
விசயனுடன் செருவில் வந்தால்
மானிடரிற் பொரவல்லார் சிலருண்டோ தெரியாது
வானுளோரிற்
கோனிடையுற்றருகிருந்த திறல்வேந்தர்
காதநிடினுங் குறித்த வீரன்
தானிடருற்றுயிரழிகை தப்பாதென்பது
முரைத்துத் தனயன் மீண்டான். இவற்றுள்
இவனது துணிவும் சொல்வன்மையும்

அணிபெற்று நிற்றல் காண்க. பகைவர் முன் யாதும் அஞ்சாது நின்று தான் கருதியதை உறுதிபெற உரைத்துக் காலமறிந்து வந்த இவனது வினையாண்மையை வியந்து தருமர் முதலிய அனைவரும் புகழ்கின்றார். கற்றுக் கண்அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால் தக்கது அறிவதாம் தூது என்னும் உண்மைக்கு உரிமையாகி அன்று
இவன் உணர்த்தி நின்றான். தூதகடோற்கசம் யில் இவன் பெயரால் ஒரு நூல் உள்ளது.

என வடமொழி

அஞ்சாமையும் அறிவும் அமையப் பெற்றவனே என்பது இதனால் கூறப்பட்டது.

தூதனாவான்

---

687 ஓர்ந்துரைக்க வல்லவ னாயானுமான்

தூதருள்ளே
கூர்ந்துநின்றான் என்னை குமரே
ரசா—நேர்ந்த
கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் தலை.
இ—ள்.

(ள)

குமரேசா! ஆய்ந்து சொல்லவல்ல தூதருள்ளே அநுமான் என் மிகச் சிறந்தவனுயினுன் எனின், கடன் அறிந்து, காலம் கருதி, இடன் அறிந்து, எண்ணியுரைப்பான் தலை என்க.

இது, தலைமைத் தூதன் தன்மை கூறுகின்றது.

## 69-ம் அதிகாரம் தூது.

1689

ஓர்ந்து உரைக்கவல்ல = தானுகவே உய்த்துணர்ந்து சொல்ல வல்ல. உயர் என்னும் அடைமொழி அறிவாண்மைகளில் எவரினும் அவன் உயர்ந்து நின்ற மை

தோன்ற நின்றது. சூர்தல் = மிகுதல், சிறத்தல். நேர்ந்த = பொருந்திய.

கடன் அறிந்து = கடமையையுணர்ந்து; அஃதாவது தூதனுய்ச் சென்ற தான் செய்யவேண்டிய வுரிமையையும், காரியத்தின் முறைமையையும் இனிது அறிந்து என்றவாறு. கடன் கடமை, முறைமை. கடனமைக்கதுவென இடனறு சூழ்ச்சியன் என்றதுங் காண்க.

தலையென்றது தலைமையானவன் என்றவாறு. இஃது ஆகுபெயர். தெய்வச் சாதிக்குத் தலைவனுகிய இந்திரனை தெய்வத்துத் தலை என்ருர் பரிபாடலில் குன்றம் பூதனுர். உடலில் தலை உயர்ந்து விளங்குதல்போல் கடனறிதல், காலங்கருதல், இடனறிதல், எண்ணி யுரைத்தல் என்னும் இந்நாற்கூறும் நன்கு அமையப்பெற்றவன் தூதருள்ளே முதல்வனுகி விளங்குவன் என்பதாம். தூதர்என்றது அதிகாரத்தால்

கொள்ள நின்றது.

மேல், எதற்கும் அஞ்சாமல் நின்று வற்ற உபாயங்களை யறிந்து தூதர் இனிது சொல்ல வேண்டுமென்றார்; இதில் எல்லாவற்றையும் தானே உய்த்துணர்ந்து உறுதிபெறச் சொல்பவன் அவ ரெவரினும் உயர்ந்தவனாவான் என்றார். தன் கடமையையறிந்து, காலத்தை நோக்கி, தான் சென்ற இடனியல்புணர்ந்து, தான் சொல்லுதற்குரியதை முன்னதாக நுண்ணிதாக ஆராய்ந்து, துணி வுறச் சொல்ல வல்லவனே தூதருள் சிறந்தவன் என்பதாம்.

தான் செய்ய நின்ற காரியத்தின் முறைமை முதலியவற்றை நுணுகியுணரினும் தகுதிபெற நின்று இடங்காலங்கட்கேற்ப இனிதுரையானாயின் அவ்வுணர்வு பயன்படாதாதலால் அதனை யுணர்ந்து கொள்ளுமாறு, எண்ணியுரைத்ததை யிறுதியில் வைத்தார்.

7. [தன் அரசன்கொடுத்த ஓலையைக்கொண்டுபோய்க் கொடுத்து நிற்பவன் கடைத்தூதன்; அவன் சொல்லியவற்றைச் சொல்லி



யாங்கே சொல்பவன் இடைத்தூதன; அவன் சொல்லாதவற்றையும் அமைய நோக்கித் தானே கற்பித்து அமைய வுரைப்பவன் தலைத்தூதன்; எனத் தூதர்கள் மூவகையாக மதிக்கப்படுவராதலால் இங்கு இவன் தலையென நின்றான்.

தானறிந்து கூறும் தலைமற் றிடையது
கோனறைந்த தீதென்று கூறுமாற்—றானறியா
தோலையே காட்டுங் கடையென் றொருமூன்று
மேலையோர் தூதுரைத்தவாறு.

என்றார் பெருந்தேவனார்.

அமைச்சர்க்கு வேண்டிய மாட்சிகள் யாவும் அமையப்பெற்று, ஈதற்குரிய முறைமையை யறிந்து அன்புடைமை முதலியகுணங்களெல்லாமுடையனாய், இடங்காலங்களின் இயல்புகளை யினிது அறிந்து, 'கற்றவன் கற்றவன் கருதுங் கட்டுரைக்கு— உற்றன வுற்றவுய்த்துரைக்கும் ஆற்றலான்' என்றபடி வேற்று வேந்தன் மாற்றமெவற்றிற்கும் ஏற்றவாறு இன்புறச் சொல்லித் தன் அரசுக்கு ஆக்கமுற ஆற்றிவருபவனே தலைமைத் தூதன் எனத் தக்கவன் என்க.

" குடிப்பிறந் திருநூல் கற்றறிந் தமைச்சர்
குணங்களுமுடையனாய்ச் சுற்றங்
கடப்படு மரச னிடத்தூறு மன்புங் கருதவேற்றரசவாம் பண்பும்
விடப்படா வின்சொல் வன்மையு முருவும்
வெருவுறாத்திண்மையு மருவி
யிடத்தொடு செவ்வியறிந்துகா லத்துக் கேற்றவு

முரைப்பவன் தூதன்.
என வரும் இஃது ஈண்டு எண்ணத்தக்கது]

தன் அரசனுக்கு உறுதி பயக்கும் வகைகளை யெல்லாம் தானு கவே உய்த்துணர்ந்து உயர்ந்த தூதன் உரைப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அநுமான்பால் உணரப்படும்.

## கதை.

அநுமான் இராமகாரியமாக இலங்கை புகுந்தபொழுது ஆவ தை யெதிர்நோக்கித் தூதனுகி இராவணனை யடைந்தான்; அவ னைக் கண்டவுடனே கனன்றான் ஆயினும் இடங்காலங்களையறிந்து அடங்கி நின்றான். அவன் சீதையை விடும்படி நீதிமொழிகள்பல நிலைபெற ஓதியுணர்த்தினன்.

## 69-ம் அதிகாரம் தூது.

ஓத நீருல காண்டவ ருன்றுணைப்
போதநீதிய ராருளர் போயினர்

வேதநீதி விதிவழிச் செல்வரும்
காதனீ யறத் தெல்லை கடத்தியோ.
திறந்திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்தம் மதியின் மயங்கினார்
இறந்திறந் திழிந் தேறுவதே யலால்
அறந்திறம்பினா ரருளராயினர்.

1691

(1)

(2)

வெறுப்புண்டாய ஒருத்தியை வேண்டி
னால்
மறுப்புண்டாயபின் வாழ்கின்ற
வாழ்வினின்
உறுப்புண்டாய் நடுவோங்கிய நாசியை
யறுப்புண்டா லதழகென லாகுமே.

(3) தீமை நன்மையைத் தீர்த்த
லொல்லாதெனும் வாய்மை நீக்கினை
மாதவத்தால் வந்த
தூய்மை தூயவ டன்மையிற் றேன்றிய
நோய்மையாற் றுடைக்கின்றனை
நோக்கலாய். (4) பாரைஞ்
ஞூறுவ பற்பல பொற்புயம்
ஈரைஞ் ஞூறு தலையுள வென்னினும்
வரைஞ் ஞூறுங் கடுங்கண லுட்பொதி
சீரைஞ் ஞூறவை சேமஞ் செலுத்துமோ.
(5) இச்சைத் தன்மையி னிற்பிற ரில்லினை
நச்சி நாளு நகைபுற நாணிலன்
பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉம்
கொச்சை யாண்மையுஞ் சீர்மையிற்
கூடுமோ. (6) பிறந்துளார்
பிறவாத பெரும் பதம்
சிறந்துளாசர் மற்றுந் தேவர்க்குந் தேவாய்
இறந்துளார் பிறர் யாரும் இராமனை
மறந்துளாருள ராகிலர் வாய்மையால்.

(7) ஆதலாற் றனரும் பெறற் செல்வமும்
ஓதுபல் கிளையும் முயிரும் பெறச்
சீதையைத் தருகென்றெனச் செப்பினான்
சோதியான் மகன் நிற்கெனச்
சொல்லினான். (8)

212



இவற்றால் அநுமானது கடனறி திறனும் கல்வியும் தகவும் இடனறு சூழ்ச்சியும் இனிது புலனும். இங்ஙனம் ஓர்ந்துணர்ந்தியும் உணராதவனாய் இவனை அவன் உறுத்துநோக்கினான்;

குரக்கு வார்த்தையும் மானுடர் கொற்றமும்
இருக்க நிற்க நீயென் கொலடா இரும்
புரத்தினுட் டருந் தூது புகுந்தபின்
அரக்கரைக் கொன்ற தன்மை

யாமென்ருன்.

இதனைக் கேட்டவுடனே அவனுக்கேற்ற விடையாக இவன் எதிருரைத்த திறம் எவரும் வியக்கத்தக்கது.

காட்டுவாரின்மை யாற்கடி காவினை
வாட்டினே னென்னைக் கொல்ல வந்தார்களை
வீட்டினேன் பின்னு மென்மையினுன்றன்
மாட்டு வந்தது காணு மதியினல்.

என்று தன் மதிவன்மையை இவன் காட்டினின்ருன்.

இடனிலையறிந்து நகைச்சுவைததும்ப இப்புண்ணியத் தூதன் எண்ணியுரைத்த நுண்ணிய பொருளையும் திண்ணியதகவையும் இதில் நுனித்து நோக்குக; இன்னன இன்னும் பலவுள; ஈண்டு விரிப்பிற்பெருகும். தன் மன்னனுக்கு உறுதிபயப்பப் பின்னுஞ் சிலகூறிப்பெயர்த்துவந்தான். கடனறிந்து

காலங்கருதி இடனறிந்து எண்ணியுரைப்பான்
தலை என்னும் உண்மைக் குரிமையாய்த் தூத
ருள் இவன் உயர்ந்து நின்ருன்.

இதனுல் தலைமைத் தூதனது நிலைமை
கூறப்பட்டது.

---

688 தூதுசென்ற ஔவை துணிந்தேனே
தொண்டைமன் முன்
கோதொழியச் சொன்னுள்
குமரேசா—தீதகன்ற
தூய்மை துணைமை துணிவுடைமை
யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.
(அ)

இ—ள்.

குமரேசா! தூது சென்ற ஔவையார்
தொண்டைமான்

இளங்கிரையனிடம் ஏன் துணிந்து உரைத்தார் எனின், தூய்மை, துணைமை, துணிவுடைமை இம்மூன்றின் வாய்மை வழியுரைப் பான் பண்பு என்க.

## 69-ம் அதிகாரம் தூது.

1693

துணிந்து என்றது எவரும் பணிந்து கூறவேண்டிய அவ் அரசன் முன் இவள்யாதும் அஞ்சாது துணிந்து நின்றமை கருதி என்க. அவன் கொண்டிருந்ததருக்கு ஒழியுமாறு இவள் உரைத் தாளாதலால் கோது ஒழியச்சொன்னாள் என்றும். கோது = குற்றம். தீதகன்ற என்றது தூய்மையின் இயல்புதோன்ற நின்றது.

இது, தூதனுக்குவேண்டிய உடைமைகள் இவையெனவுணர்த்துகின்றது.

தூய்மை = தூயனுந்தன்மை; அஃதாவது மனநேர்மை. இத் தன்மையுடையானைப் பரிசுத்தன் என்பர்.

வழியுரைப்பான் என்றது தூதனே. தன் அரசன் சொல்லிய வற்றை அவன் சொல்லிய வாறே சென்று வேற்று வேந்தர்க்குச் சொல்லுவான் என்பதாம்.

துணைமை என்றது உதவியாந் தன்மையை. அஃதாவது தான் சென்ற இடத்தில் தனக்கு ஏதேனும் தீங்குநேரின் பாங்குற நின்று நெறிமுறைகூறித் தாங்குவாரை. அவராவார், தூது வந்த கண்ணனைத் துரியோதனன் கொல்ல எண்ணியபொழுது

பழியுடைப் பகைஞரேனுந் தன்பெரும் பதியில்வந்தால்
அழிவுறக் கோறல்பாவம் ஆண்மையும் அல்லவென்பார்
கழிகடற் சேனையோடு கங்குலின் வளைந்திட்டாலும்
எழிலுடைக் கொண்டல்வண்ணன் அகப்படான் எவர்க்கு

மென்று கூறித் தடுத்த விகர்ணன்போல்வார் எனக.

மேல், தலைமைத் தூதனுக்குவேண்டிய தகைமைகூறினர்; இதில், பொதுவாக அவனுக்கு உரிய உடைமைகளிவையென வுணர்த்தியருளினர்.

தூய்மையுடைமையும், துணைமையுடைமையும், துணிவுடை மையும், இம் மூன்றனோடு வாய்மையுடைமையும் தூதனுக்குக் குணங்களாம் என்பதாம்.

௧. [தூய்மையிலனாயின் பொருள் கொடுத்தேனும் காதலின்பத் தைக் காட்டியேனும் வேற்றரசர் தூதன் மனத்தை மாற்றிவிடக் கூடுமாதலால் அங்ஙனம் மாறாதிருத்தற்

பொருட்டுத் தூய்மையும், சென்ற இடத்தில் அனுமானுக்கு வீடணன் நின்றதுபோல் கூடு 1694 திருக்குறட் குமரேச வெண்பா.

மாணவரை தனக்கு ஆன மாதலால் துணைமையும்,

உதவியாளரிருப்பின் எதுவும் இனிதா தன் நெஞ்சிலுள்ளதை அரசனிடம் யாதும் அஞ்சாமல் சொல்லுதற்குத் துணிவுடைமையும், இவை யெல்லாம் உடையனாயினும் மெய்மையின்றேல் ஐயுற்று யாரும் நம்பார் ஆகலால் நம்பிக்கொள்ளும் பொருட்டு வாய்மையும், தூதனுக்கு உரிமையாகவேண்டும் என்றார்.

பகைவர் பல்வகை உபாயங்களைச் செய்து பேதிப்பினும் வழிவழியாகச் சிறந்தமைந்த தூதர் தம் அரசனுக்கு மாறாக யான்

டும் நிலைநிரியார் என்க.

படையளவு கூறுர் பெரியார்முன் யாற்றுர்
படையளவிற் றென்று வியவார்—கொடைவேந்தன்
ஈத்ததுகண் டின்புறுர் எந்திழையார் தோள்சேரார்
பார்த்திபர்தூ தாயடைந்தார் பண்பு. என்றதுங் காண்க.

உண்மை திண்மை ஒழுக்கம் என்னும் இவ்விழுப்பங்களை
புடையவனையே தமக்குத் தூதனுக வேந்தர்
விரும்பிக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

யாண்டும் அஞ்சாமல் நேர்மையோடு
நின்று தன் அரச

னுக்கு மேன்மையை விளைத்துவருபவனே
தூதனுவான் என்பது

இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
ஒளவையார்பால் உண

ரப்படும்.]

## கதை.

தொண்டைமான் என்னும் அரசனிடஞ்
சென்று அவன்

கருத்தை யறிந்துவருமாறு ஔவையாரை அதிகமான் ஒருமுறை

தூதனுப்பிவைத்தான். அவ்விருவருக்கும் இடையே நெடும்பகை

மிடைந்திருந்தது. அதிகமான் மானமும் வீரமும் அதிகமுடைய

வனாயினும் இருநிலக் குடிகளும் வறிதே துயருறுமென்று கருதி

அதுபொழுது போர்செய்ய விரும்பாது நேர்செய்ய நினைந்தான்.

இவன் நினைவோடு தோலன் நினைவும் நேர்படுமாறு செய்ய இவர்

நினைந்து சென்றார். காஞ்சிநகரத்தையடைந்து அம்மன்னவனைக்

கண்டு இன்னுரையாடினார். அவன் சிறந்த கல்வியுடையவனாத

லால் இச்செல்வியின் வரவால் உவகைமீக்கூர்ந்து மிகவும் உபசரித்

தான். அதன்பின் தான் கருகிவந்ததை அவனுளங்கொள இவர்

69-ம் அதிகாரம் ஙஅ.
1695

உறுதிபெற உரைத்தார். அவன் உணர்ந்து விருப்பி உடனே உடன்பட நினைந்தும் தன் இடம்படு வலியை இவர்க்குக் காட்ட எண்ணி வேல் வாள் முதலிய படைக்கலங்களை யழகுபெற அடுக்கி வைத்திருக்கும் ஆயுதசாலைக்கு இவரை அழைத்துச் சென்று தன் போர்க் கருவிகளை நோக்குமாறு ஆக்கி நின்றான். அவனது செருக்குநிலையை யறிந்து தனக்குள்ளேயே இவர் சிரித்துக்கொண்டு கிழவியாகிய எனக்குங்கூட உன் படைக்கலங்கள் பயங் கொடுக்கவில்லையே; இறு மன்னனோடு பழகி புண்ணிய தால் வந்த நன்னயம்போலும் என்று

புன்னகையோடு புகன்று மேனுட அம்பன்னனை நோக்கினர். "எம் மன்னனுகிய அதிகமானுடைய படைக்கலங்களினும் உன்னுடையவை, மிக அழகாகவும் புதிதாகவும் காணப்படுகின்றன. அவை ஒடிந்தும், நகர்ந்தும், உதிரந்தோய்ந்தும், பகைவரது நிணங்களழுங்கியும், முனைகள் மழுங்கியும், பிடிகள் கழன்றும், அடிகளிழந்தும் மீண்டும் புதுக்குமாறு கொல்லனது கூடத்தில் குடிபுகுந்துகிடக்கின்றன. இவையோ, பொருகளத்தை ஒருபொழுதும் காணுமல், யாதும் நோவுறல், என்றும் காயாமல், ஒரு சிறிதும் தேயாமல், காண்பதற்கழகாகக் காட்சிச் சாலையிலுள்ளனபோல் மாட்சிபுற்றிருக்கின்றன" என்று பழிப்பும் புகழ்ச்சியும் தம்முள் ஒளித்தொளித்து விளங்க இவர் உரைக்கின்றார். இவரது உரையினுண்மையையும் உள்ளத்திண்மையையும் அருகி னின்ற அமைச்சர்

முதலாயினோர் அறிந்து தமக்குள் ளேயே மகிழ்ச்சி மீக்கூர்ந்தார். அரசனும் தெளிந்து நாளை இவர் மொழிப்படியே நடந்துகொண்டான். அதன்பின் இவர் மீண்டு வந்து அதிகமானைக்கண்டு அமைந்ததைப் புணர்த்திப் பழமைபோல் அமர்ந்திருந்தார். மறுமன்னனிடஞ் சென்று ஒருமறுவும் இன்றி துணிவுகொண்டு நின்று தனக்கு உயர்ச்சி கூறி உண்மையோடு உறுதிசெய்துவந்த இவரது பெருமையை வியந்து அதிகமான் இவர்பால் அதிக அன்புசெய்தான். இவரது துதின் தகைமையை அக்காலத்திலிருந்த அரசரும் பிறரும் அடிக்கடி ஓதி மகிழ்ந்தார். தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின் வாய்மை வழியுரைப்பான் பண்பு என்னும் உண்மைக்கு இவர் உரிமையாய் நின்றார். இவர் தொண்டைமானிடந் துணிந்துரைத்த

பண்டைத் தூதரெல்லாரும் பாடஞ்செய்து தம்
முளத்திற்பதித்து
வைத்திருந்தார். அதனை பிதனடியில்
பொருளை ஆய்ந்துகொள்க.
வைக்கின்றேம்; அதன்

இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருந்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடுநுதி
சிதைந்து
கொற்றுறைக் குற்றில ; மாதோ
என்றும்
உண்டாயிற் பதங் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி

வேலே. (ஔவை)

இவ்வே = இவைதாம்; என்றது தொண்டைமானுடைய படைக்கலங்களை. வியன்

நகரவ்வே = அகன்றமாளிகையிடத்தன. அவ்வே = அவைதாம் ; என்றது அதிகமானுடைய ஆயுதங்களை. கொல்துறைக் குற்றில = கொல்லனது பணிக்களமாகிய குறிய கூடத்தில் கிடக்கின்றன. பதம் = உணவு. இவ்வேவியனகரவ்வே; அவ்வே குற்றில எனக்கூட்டிக்காண்க. தம் அரசனது வென்றிச் சிறப்பும், கொடைச் சிறப்பும் விளங்கக் கூறித் தமது தூய்மை

துணிவுவாய்மைகளை ஔவையார் விளங்கவைத்துள்ள ஒண்மை யையும், மேற்குறித்த வண்மை யை யும் இதில் ஊன்றியுணர்க.

பகைப்புல னானூ யுய்த்தார் பகர்ந்தது

பகர்ந்து பற்றார்

மிகைப்புல னடக்கி மெய்ம்மை
விளம்புதல் விரதம்பூண்ட

தகைப்புலக் கருமத் தோரைக் கோறலிற்
றக்கார் யார்க்கும்

நகைப்புலன் பிறிதுண்டாமே நங்குலம்
நவையுண்டாமே.

இது தூதனாய் நின்ற அநுமானை இராவணன் கொல்லத் துணிந்தபொழுது விபீடணன் சொல்லித் தடுத்தது. அணுகிப், பகர்ந்து அடக்கி மெய்ம்மை விரதம்பூண்ட தகைப்புலக் கருமத்தோர் என்று தூதரைக் கவிகுறித்திருக்கும் அழகை இதில் கருதிக்காண்க. அடிகள் சுட்டியுள்ள தூய்மை முதலிய தூதியல்புகளை நம் கம்பர் ஈண்டு ஒட்டியுள்ளமை உணரலாகும்.

தூய்மையும் துணிவும் தூதனுக்கு என்பது இதனால் கூறப்பட்டது.

வாய்மையாகவேண்டும்

---

69-ம் அதிகாரம் தூது.

1697

689 சோரான் துணிந்துநின்றான்
தூதான அங்கதனை
கூராரும் வேற்கைக்
குமரேசா—நேரே
விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான்
வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.
(க)

இ—ள்.
குமரேசா! தூதுரைக்கச் சென்ற

அங்கதன் யாதும் சோர்வுறாது என்
துணிந்து நின்றான் எனின், விடுமாற்றம்
வேந்தர்க்கு உரைப்பான், வடுமாற்றம்
வாய்சோரா வன்கணவன் என்க.

இது, யாண்டும் சோர்வின்றித்
தூதன் அமைந்தாக்க வேண்டும்
என்கின்றது.

பலவகை ஈரமொழிகளைச் சொல்லிச்
சோரும்படி இராவணன் செய்தும்
சோராமலும், பின்பு வீரமொழிகள் கூறி
வெருட்டியதற்கு அஞ்சாமலும் நின்றான்
ஆகலால் சோரான் துணிந்து நின்றான் என்றும்.

மாற்றம் = சொல்: வடு = குற்றம்,
தழும்பு, வசை, இழிவுகளை புணர்த்திவரும்.
வடுமாற்றம் என்றது தன் அரசனுக்கு
இழிவான சொல்லை.

விடுமாற்றம் என்றது = தன் அரசன்
சொல்லிவிட்ட சொல் என்றவாறு. விடுத்தல்

ஈண்டு அனுப்புகல் என்க. அது,

அறத்துறை யன்று வீரர்க்
கழகுமன் றாண்மை யன்று
மறத்துறை யன்று சேம மறைந்துறைந்
தொதுங்கி வாழ்தல்
நிறத்துற வாளிகோத்து நேர்வந்து
நிற்குமாகின்
புறத்துற எதிரேவந்து போர்தரப் புகறி
யென்று;

இராகவன் அங்கதனிடம் சொல்லிவிட்டதும்,

மயேந்திர முதுவேகி வல்லீர் யமலன்
நல்குஞ்
சயேந்திர ஞாலத் தேரோன் றனையடுத்
தொருகாற் றந்தக்
கயேந்திரன் மதலை வானோர் காட்டைவிட்
டறந்தா னன்னி
கயேந்திர வனத்தினோடு முறைகென
நவிறி யென்று, எம்பெரு

தன் அரசன் சொல்லியனுப்பியதை வேற்று அரசர்க்குச் சென்று சொல்லுகின்ற தூதன், தன் அரசனுக்குத் தாழ்வுதருஞ் சொல்லை வாய்மறந்தும் சொல்லாத மனவுறுதியுடையவனே என்பதாம்.

9. [தன் அரசனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்தும் சொல்லாத திண்மையாளனே தூதனாவான் என்றதனால் சோர்ந்துரைக்கும் புன்மையாளன் அஃதுரைத்தற்குப் பொருந்தான் என்பதாயிற்று. யாதும் களர்வின்றி யாண்டும் புகுந்து எவர்முன்னும் நின்று தடுமாற்றம் சிறிதுமின்றித் தன் அரசனுக்கு உறுதிபயப்ப உரைத்தல ர வல்லவனே தூதனாவான் என்பார் விடுமாற்றம் உ ரைப்பான், வடுமாற்றம் வாய்சோரா வன்கணவன் என்றார்.

தடுமாற்ற மின்றித் த கைசான்ற
சொல்லான்
வடுமாற்றம் வாய்சே ா ரா

ஞகி—விடுமாற்றம்

எஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கால்
அஞ்சா தமைவது தூது. என்றார்

பெருந்தேவனாரும்.

தன் அரசனுக்குத் தாழ்வுதரும் சொல்லை எவ்வகையானும் தூதர் சொல்லலாகாதென்பது கருத்து. வாழ்வுதர ஆற்றவல்ல அவர் தாழ்வுவ ரச்சொல்லுவாராயின் அவரைத் தூதராக அரசர் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

சிறந்த தூதர் தன் அரசனுக்கு இழிவுதருஞ் சொல்லை மறந் தும் உரையார் என்பதும், யாண்டும் உறுதிபயப்பவே உரைத்து வருவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. அங்கதன்பால் உணரப்படும்.]

இவ்வுண்மை

கதை.

அங்கதன் இராம தூதனுய் இலங்கையுட் புகுந்து அதன் நிலைகள் பலவும் ஓர்ந்துகொண்டு இறுதியில் இராவணனையடைந்து தான் கருதிவந்ததை உறுதிபெற வுரைக்குமாறு உற்று நின்முன். அப்பெருவீரன் இவனைச் சிறிதும் மதியாமல் சினந்து நோக்கி நீ யாவன் ? இங்கு வந்தகாரியம் என்னை ? எம்மவர் உன்னைக் கொன்றுதின்னுமுன்னங் கூறுதி என்முன். அதற்கு இவன் யாதும் அஞ்சாமல் நின்று புன்னகையோடு முன்னுரையாகச் சில இன்னுரையாடினன். பின்னர் அவனை நிமிர்ந்து நோக்கினன்.

பூதநா யகனீர் சூழ்ந்த புவிக்கு நாயகனைப்பூமேல்

சீதைநாயகன் வேறுள்ள
தெய்வநாயகனீ செப்பும்
வேதநாயகன் மேனின்ற விதிக்கு
நாயகன் தான்விட்ட
தூதன்யான் பணித்தமாற்றம்
சொல்லியவந்தே னென்றான்.

இதனைக் கேட்டவுடனே அவன் செயிர்த்து நோக்கிச் சிறுமொழிகள், சிலகூறி இங்குவந்து இதனைச் சொன்ன தூதன் நீயாவன் ? உன் பெயர் என்னை ? உரையென்றான்.

இந்திரன் செம்மல் பண்டோ ரிராவணனென்பான் றன்னைச்
சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிகடாவித் திரிந்தனன் ; தேவ நண்ண
மந்தரக் கிரியால் வேலை கலக்கினான் மைந்தனென்றான்.

முன்னிலைப் புறமொழியாக இராவணன் முன்னின்றுரைத்த இவனது இவ்வுரை நயத்தையும் அதன் அழகமைவுகளையும் ஊன் றியுணரவேண்டும். தன்னைத் தூதனுப்பிய நாயகனது பெருமை யை அவன் உணர்ந்துகொள்ளவில்லையே யென்றிரங்கி அவனுக்கு உணர்வுவரத் தன்னை இங்ஙனம் இவன் உணர்த்தினான். அதன் பின் இவனை நயந்துகொண்டு அவன் தன் வசஞ்செய்ய நினைந்தான். " உன் தந்தையாகிய வாலி எனக்குச் சிறந்த நண்பன் ; அவனுடைய மைந்தனாகிய நீ இன்று என்பால் வந்தாய்; எம் மிருவர்க்கும் முன்னமைந்திருந்த வுறவுக்கு நின்வரவு மிகவுரிமை யாயிற்று; தந்தையைக் கொன்று அரசை வஞ்சித்துக்கொண்ட சுக்கிரீவனையும், இராமனையுங்கொன்று கிட்கிந்தையை உனக்கே

தந்து பொன்னரி சுமந்த பீடத்தில்வைத்து அமரர் போற்றிசெய்ய மன்னவனாக்கி உன்னையான் மகுடஞ் சூட்டுவன் " என்று அவன் நயம்படவுரைத்தான். அதனைக்கேட்டு இவன் நிரம்பச் சிரித்தான். எனக்கு நீ அரசு தருவதாக வாய்வந்தபடி சொன்னது ஒரு சிங்கத்துக்கு நாய் ஒன்று தருவதெனின் அதனை யொக்கும் என நகையுறச்சொல்லி மேலும்அவன் மிகைபடக்கூறவண்ணம் இவன் விளங்கி நின்றான். இவனது நெஞ்சுறுதியைக் கண்டு நெடிது வெகுண்டு நீ தூது வந்ததை ஒது என்று அவன் உறுத்துரைத்தான். எம் ஐயன் அம்பைவிட்டழிக்காமல் தூதாக என்னை

முன்புவிட்டது நீ உணர்ந்துய்யவேண்டும் என்னும் அருளினலே தான்; ஆதலால் எங்கள் அம்மையைவிட்டுவிடு; அங்ஙனம் விடு வையேல் இம்மையும் மறுமையும் நீ இன்பமுறுவாய்; இன்றேல் இழிந்து தொலைவாய் ; என அவன் உணர்ந்து தெளியுமாறு பல உறுதிகள் கூறினன். அவன் தெளிந்துகொள்ளாமையால் தான் செய்வதைச் செய்துவிட்டுத் திரும்பிவந்து இராமனைத் தொழுது " முற்ற ஓதியேன் மூர்க்கன் முடித்தலை—அற்றபோதன்றி ஆசை அறான் " என்று உற்றதைச் சுருக்கமாக வுரைத்துவிட்டு மேல் உறுவதைச் செய்தான். கொடியகூற்றுவன் போன்ற மாற்றலன் முன்போய் நின்று தன் அரசனுக்கு வடுமாற்றம் யாதும் இன்றி உய்த்ததை உறுதிபெற வுரைத்து உயர்வுதோன்ற வந்த இவனது ஒண்மையை வியந்து அனைவரும்

உவந்து புகழ்ந்தார். விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்—வடுமாற்றம் வாய்சோரா வன்கணவன் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

கூவியின்றென்னை நீபோய்த் தங்குல முழுதுங் கொல்லும்
பாவியை யெய்தி யஞ்சி யரண்புக்குப் பதுங்கி னானைத்
தேவியை விடுக வன்றேற் செருக்களத் தெதிர்ந்து தன்கண்
ஆவியை விடுக வென்றான் அருளினம் விடுகிலாதான். (1)

பருந்தொடு நிழல்சென் றன்ன இயைபென இராமன் பின்னர்

பருந்தணப் பாட்டியாக்கை படுத்தநாள் படைஞ
மருந்தினு மினிய மாமன் மடிந்தநாள் வனத்துள்

ரோடும்

வைகி

இருக்குழி வந்த நங்கை யிருஞ்செவி மூலையு மூக்கும்
அரிந்தான் வந்திலா தான் இனிச்செய்யும் ஆண்மையுண்டோ. (2)

## 69-ம் அதிகாரம் தூது. 1701

கிளையொடும் படைஞரோடும் கேடிலா
வுயிர்கட் கெல்லாம் களைபனை தம்பிமாரை
வேரொடுங் களையக் கண்டும் இளையவன்
பிரியமாயம் இபற்றியே கொண்டு போய
வளையெயிற் றரக்கன் வெம்போர்க்கினியிவண்
வருவதுண்டோ(3) எந்திழை தன்னைக்
கண்ணுற் றெதிர்ந்தவர் தம்மை யெற்றிச்
சாந்தெனப் புதல்வன்றன்னைத் தரையிடைத்
தேய்த்துத் தன்னூர்க் காந்தெரி மடுத்துத்தானுங்
காணவே கடலைத் தாவிப் போந்தபின்
வந்திலாதான் இனிப்பொரும் போரு
முண்டோ. (4) உடைக்குலத் தொற்றார் தம்பா
லுயிர்கொடுத் துள்ளக்கள்ளம் துடைக்குழி
வருணன் வந்து தொழுதுழி

தொழாத கொற்றக் குடைத்தொழி
லும்பிகொள்ளக் கொடுத்தழி வேலைவேலி
யடைத்தழி வந்திலாதான் இனிவர
வையமுண்டோ. (5) மறிப்புண்ட
தேவர்காண மணிவரைத் தோளின் வைகும்
நெறிப்புண்ட நீகமன்ன முகத்தியர் முன்னே
நென்னல் பொறிப்புண்ட நீகம்போலும்
ஒருவனாற் புனைந்த மோலி பறிப்புண்டும்
வந்திலாதான் இனிப்பொரும்பான்மை
புண்டோ (6) என்றிவை யியம்பி வாவென்
றேவின னென்னை யெண்ணி ஒன்றனக்
குறுவதுன்னித் துணிந்துரை புறதிபார்க்கின்
துன்றிருங் குழலை விட்டுத் தொழுதுவாழ்
சுற்றத்தோடும் பொன்றுதி யாயினென்பின்
வாயிலிற் புறப்படென்றான். (7)

இவை இராவணன்முன் தூதனாய்நின்ற
அங்கதன் கூறியன. வடுமாற்றமின்றி
வாய்சோராது மனத்துணிவோடு நின்று
தன் அரசன் சொல்லிவிட்டதோடு தானும்

பலவுள்ளி உரைத்து உறுதி செய்துவந்த
இவனது ஊக்கத்தின் தன்மையும், உரையின்
வன்மையும், மேற்குறித்த வுண்மையும்
இவற்றுள் ஒளிர்தல்காண்க.

யாண்டுஞ் சோர்வுறாத
துணிவுடையவனே தூதனாவான் என்பது
இதனால் கூறப்பட்டது.

---

1702 திருக்குறட் குமரேச
வெண்பா.

690 ஊறுயிர்க்கு நேருமென ஓர்ந்தும்
விறல்வாகு
கூறினர் சீர் என்னே குமரே
ரசா—மாறி
இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(ய)

இ—ள்.

குமரேசா! தம் உயிர்க்கு முடிவு நேருமென்று தெரிந்தும் வீரவாகு தேவர் என் சூரபன்மன் முன் உண்மையை உறுதி பெற வுரைத்தார் எனின், இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு உறுதி பயப்பது தூது ஆம் என்க.

இது, தூதனுக்கு இறுதியாக வேண்டிய உறுதி கூறுகின்றது. கொடிய அசுரர்கள் தம் உயிர்க்குத் தீங்கிழைப்பரென்று தெரிந் திருந்தும் அகற்று அஞ்சாமல் நின்று எம் ஐயன் குறித்து விடுத் ததைச் சூரன்பால் உறுதி பயப்ப உரைத்து வந்தார் ஆகலால் ஊறு உயிர்க்கு நேருமென ஓர்ந்தும் சீர் கூறினர் என்றும். உம்மை முன்னது உயர்வு சிறப்பு; பின்னது இழிவு சிறப்பு. மாறி என்றது தான் கூறிய நீதி மொழியே தன் உயிர்க்குத்

தீ,தாகத் திரும்பி என்ற வாறு. மாறுதல்= திரும்புதல்.

இறுதி=முடிவு; ஈண்டு உயிர் உடலோடு கூடிவாழும் எல்லையின் மேலதாய் அதனழிவை புணர்த்தி நின்றது. எஞ்சாது = குன்றாது; என்றது ஊக்கி நின்ற துணிவு ஒழிந்து விடாது என்றபடி. எஞ்சுதல்= குறைதல், ஒழிதல். பயப்பது தூது ஆம்= பயப்பவனே தூதனுவான். பயத்தல்= தருதல், விளைத்தல்.

மேல், தன் அரசனுக்கு இழிவுதருஞ் சொல்லை மாற்றரசரிடம் தூதன் மொழியலாகாதென்றார்; இதில், தான் சாக நேரிடினும் அவனுக்கு ஆகவேண்டிய நன்மையை அவன் ஆற்றவேண்டும் என்றார்.

தான் கூறுவது தன்னுயிர்க்கு அழிவைத் தருவதாயினும்

அதற்கு அஞ்சி விடாமல், தன் அரசனுக்கு உயர்வைத் தருமாறு உரைப்பவனே தூதனவான் என்பதாம். எஞ்சாது பயப்பவன் தூதன் என்றதனால் எஞ்சி ஒழிபவன் தூதனாகானென்பதாயிற்று. 69-ம் அதிகாரம் தூது. 1703

10. [தன் அரசன் சொல்லிவிடாததையும் இடம் அறிந்து தானே யடைத்துக்கூறுவோர், சொன்னதை மாத்திரம் போய்ச் சொல்லி வருபவர், கொடுத்த ஓலையைக் கொண்டுபோய்க் கொடுத்து நிற்பவர், எனத் தூதரை மூவகையாக்கி அவரை உத்தமர் மத்திமர் அதமர் என முறையே பகுத்து நீதி நூலார் நிரலே நிறுத்துவர் முன்னவரையே யன்றிப் பின்னைய இருவரையும் தூதராக மன்னவர் கொள்ளலாம் என்க.

உறு பொருள் காமம் விருப்புறாத் தூய்மை யுயிர்க்கழி
வுறினும் அஞ்சாமை மறு புலத் தமைச்சர்
துணைமையாத் தன்மை வாய்மைசொற் சோர்வுறாத்
துணிவு, மறுவற வுடையனுய் வழியுரைப்பான் மத்திமத்
தூதனும்; முடங்கல்
குறுதுபு கொடுப்பான் கடைப்படுந் தூதன் கூறிய
என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.]

இவரையுந் தழீஇக்கொள்.

அன்பு குடிப்பிறப்பு பெருந்தன்மை அஞ்சாமை அறிவு அழகு முதலிய நலங்களெல்லாம் அமையப்பெற்று, நீதிநூல் முதலாக யாவுங் கற்று, வேற்றரசரிடைச் சென்று அவரது நிலைமையோடு இடங் காலங்களின் இயல்பையும் இனிதறிந்து கொண்டு, யாண்டும் சோர்வின்றித் தன் அரசனுக்கு வேண்டிய நன்மைகள் விளைந்து

வருமாறு தூதன் மொழிந்து வரவேண்டும் என இதுவரை உணர்த்தி, இறுதியாக அவன் அரசுக்கு ஆற்றவேண்டிய திறனை உறுதிபெற அறுதியிட்டு இதில் உணர்த்தியருளினார்.

என்னதுய ரெய்தினும் தன் அரசனுக்கு மேன்மை தருந் திறனையே யாண்டுந் தூதர் விளங்கச் சொல்லவேண்டும் என்பது கருத்து. தம் உயிரை ஒரு பொருட்டாக எண்ணாமல் தம் அரசனுக்கு உறுதியாவதையே உத்தமத் தூதர் உரைத்து வருவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீரவாகு தேவர்பால் உணரப்படும்.

## கதை.

வீரவாகு தேவர் என்பவர் உமாதேவியாரது திருவடிச் சிலம்பிலிருந்த ஒளிர் மணியினின்று சிவ பரம்பொருளின்

திருவருளால் பிறந்தவர். அறிவிலும் அழகிலும் ஆண்மையிலும் இவர் மிகச் சிறந்தவர். வீரகேசரி வீரமகேந்திரன் வீரமகேச்சுரன் வீர 1704 திருக்குறட் குமரேச வெண்பா.

புரந்தரன் வீரராக்கதன் வீரமார்த்தாண்டன் வீராந்தகன் வீரதீரன் என்னும் எண்மரும் இவர்க்குத் தம்பியராவர். அத்துணைவர்களோடு இணைபிரியாமனின்று ஆறுமுகப் பெருமானுக்கு அன்புகனிந்து இவர் ஏவல் புரிந்துவந்தார். எம்பெருமான் அசுரர்மீது அமர்குறித் தெழுந்து திருச்செந்திலம்பதியை யடைந்து அங்குத் தெய்வத் தச்சன் செய்த செம்பொன்செய் கோவிலிலே அமரர் புடைசூழ அரியணையிலமர்ந்திருந்தபின் சூரபன்மனிடம் ஒரு தூதனைவிடத் திருவுளங் கொண்டார். அப் பெரிய வீரனிடம் தூதுபோய் வ

றுவதற்குத் தகுதியானவர் இவரே யென்று
தெளிந்து எம் ஐயன் இவரை அங்குத்
தூதனுப்பினார். கோன் முறை கோடிக்
கொடுமை செய்துவரும் அவன் உறுதி நாடி
யுய்யுமாறு பலவுரைகள் கூறிப் பாமன் உய்த்த
பின்னர் இவர் ஊக்கியெழுந்து விரைந்து
சென்று வீரமகேந்திரத்தை யடைந்தார்.
கொடிய வீரர்கள் பலர் மிடைந்து நிற்கும்
அவையிடைப் புகுந்து அனைவரையுங் கடந்து
அரசனை யணுகி யமைவுற நின்றார். அவன்
செயிர்த்து நோக்கி நீ யாவன் என இவரைச்
சினந்து கேட்டான். திருவினுந் திறலினுஞ்
சிறந்து பெரியவனயிருந்தும் தீமையிற்
றிமிர்ந்து நிற்கும் அவனது
சிறுமையை நோக்கித் தமக்குள்ளேயே சினந்து
கொண்டு இவர் துணிந்துரைத்தார்.

புரந்தரன் குறை யையன்முத லமரர்தம்
புன்மை

வருந்தும் வானவர் சிறையெலா நீக்கி
மற்றவர்கள்

திருந்து தொல்சிறை யுதவுவான்
செந்திமா நகர்வந்

திருந்த ஆகியம் பண்ணவன்
அடியனேன் என்றான்.

தாரகப் பெய ரிளவலைக் கடவுளை
தன்னை

யோரிறைக்குமுன் படுத்தவே
லறுமுகத் தொருவன்

சூரெனப்படு நின்னிடைத் தமியனைத்
தூதாப்

போருட் டிரத் துய்த்தனன்
என்றனன் பெரியோன்.

இதனைக் கேட்டவுடனே அவன்
புன்னகை செய்துகொண்டு

என்னகாரணமாக உன்னை இங்கு அன்னவன்
உய்த்தனன் என்

றான். அதற்கு இவர், இந்திர குமாரனுகிய சயந்தனேடு அமரர் பலரையும் கடுஞ் சிறையில் வைத்து நீ கொடுங்கோல் செய்கின்



றாய் என்று எம் ஐயன் கேள்வியுற்றார் ஆதலால் அச் செய்கையை யொழித்து உய்யும் வகை உனக்கு உறுதிகளை புணர்த்திவருமாறு உய்த்தார் என்றார்.

மேலை யாயிரத் தெட்டெனு மண்டமும் வென்றே
யேனு கின்றதோர் தனியிறை யாகிய வெனக்குக்
கோலவாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பாலனே கொலா மினையன புந்திகள் பகர்வான்.

என்று அவன் பகர்ந்து சினந்து பிடித்த சிறையை யான் என்றும் விடுவ தில்லை யென இகழ்ந்து நின்றான். "சிறையில் வைத்துள்ள

அமை ஈனைவிட்டு, உன் ஆசை நீறு முறையில் வைத்து நீயும் நெறி நின் ஒழுகவேண்டும் ; இன்றேல் எம் ஐயன் வேல் உன் உயிரை உடலில் வைக்காது" என்று உறுதி பெற இவர் உரைத்தார்.

இவரைக் கொன்றுவிடத் துணிந்த அசுரர்பலர் கொதித்துச் சூழ்ந்தார். அவரனைவரையும் கொலைத்தொழித்து மீளவும் சில உறுதி கலை உணர்த்திவிட்டு உயர்ந்தெழுந்து விரைந்து வந்து ஆண்டு நிகழ்ந்ததை புரைத்துப் பின் ஆண்டவனுக்கு வேண்டிய நலங்களை இவர் விளைத்திருந்தார். யாரும் அஞ்சத்தக்க சூரன் முன் சென்று தன் உயிர்க்கு இறுதி வருவதாயினும் அதனைச் சிறிதும் அஞ்சாமல் தம் இறைவனுக்கு உறுதிபயப்ப இவர் உரைத்து வந்த திறத்தை அனைவரும் உவந்து போற்றினர். இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு உறுதி பயப்பதாம் தூது என்னும் உண்மைக்கு

இவர் உரிமையாய் நின்றார். விரிவைக் கந்தபுராணத்தில் காண்க.

வாழியானைநின் ஆயுளும் வன்மையும் வாழும்
கேழில் சுற்றமும் பசடகளும் வான்றொடக்
கிளர்ந்து பூழியாலுயர் மால்வரைச் சூழலிற்
புகுந்த
ஆழிமாருதம் போலடும் எம்பிரான் ஒருவேல்
(1) ஆகையாலிவை யுணர்ந்திலை யிணையிலா
தமர்ந்த ஏகநாயக முதல்வனைப் பாலனென்
றிகழ்ந்தாய் சேகுலாவிய மனமுடைக் கற்பிலா
ச் சிறியோய் போகபோகயா மிவ்வொரு
தவற்றையும் பொறுத்தாய் (2) 1706
திருக்குறட் குமரேச வெண்பா.

உறுதியின்னமொன் றுரைக்குவ
நீயுமுன் கிளையும்
இறுதி யின்றியே பெருஞ்சுதல்
வேண்டுமே லிமையோர்

அறை விடுக்குறு யிகலினைத் தவிருறு செல்வ
அறைகழற் றணை யாணமென் றுன்னியே யமர்தி (3)

இவ்வாறாகாய் நின்ற வீரவாகு தேவர் இறுதியாகச் சூரபன்மனிடம் உரைத்தன. தம் இறைவர்க்கு உறுதி பயப்ப இவர் உரைத்துவந்த வுண்மையை இவற்றால் ஊன்றி புணர்க.

எவ்வகையாயினும் தன் அரசனுக்கு உறுதி வர வுரைத்து வாவல்லவனே தூதனுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

அன்பு குடிப்பிறப்பு முதலிய நலங்களைத் தூதன் உடையனாதல் வேண்டும். தன் அரசன்பால் நண்பும், அறிவும், சொல் வன்மையும் அவனுக்கு அமைந்திருக்கவேண்டும். கல்வியில் எவ

ரினும் அவன் வல்லனாதல்வேண்டும். சிறந்த அறிவோடு நிறைந்த அழகும் பொருந்தியிருப்பவனே தூதனாதற்குத் தகுந்தவனாவான். சுருங்கிய சொல்லால் எதையும் விளங்க வுரைத்துத் தன் அரசனுக்குநலம் பயப்பவனே தூதனாவான்.

அஞ்சாமையோடு ஆன வுபாயங்களையுங் கற்று ஆவனவை அவன் அறிந்துகொள்ள வேண்டும். தன் கடமையை யறிந்து இடங் காலங்களுக்கேற்ப எதிரியினிலை யுணர்ந்து உரைப்பவனே தூதருள் தலைவனாவான். தூய்மையும் வாய்மையும் துணிவும் தூதனுக்கு இயல்பாக இருக்க வேண்டும். தன் அரசனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய் மறந்தும் அவன் சொல்லலாகாது. தன் உயிர்க்கு இறுதி வருவதாயினும் தன் அரசனுக்கு உறுதி வர அவன் உரைத்துவர வேண்டும்.

---

# 70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல்.

அஃதாவது அமைச்சர், தூதர் முதலாயினோர் அரசரைச் சார்ந் தொழுகும் திறம். அறிவு ஆண்மை முதலிய நலங்களெல் 70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். 1707

லாம் அமையப் பெறினும் இவ் ஒழுகலை உண ராராயின் அவை யாவும் பயன்படா ஆதலால் அவருணர்ந்து கொள்ளுமாறு இதின் உணர்த்துகின்றார் . தம் அ ரசரிடத்து மாத்திரமன்றி மறு மன் னர் மாட்டும் பொருந்தி நின்று திறனறிந்து உரை செய்தற்குரிய தூதர்க்கு

வேந்தவாம் பண்புடைமை உறுதியாக வேண்டுமெண மேல் விதித்தகையே யீண்டு விரிக்கின்றார் ஆதலால் அதனபின் இது வைக்கப்பட்டது.

691 சார்ந்த எயிற்றியனார் தார்வேந்தன் சீராற்கேன்
கூர்ந்தொழுகி நின்றார் குமரேசா—ஓர்ந்தே
அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். (க)

இ—ள்.

குமரேசா ! எயிற்றியனார் சோழனை மிக நெருங்காமலும் அறவே நீங்காமலும் என் அமைந்து நின்று ஒழுகினார் எனின், இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார், அகலாது அணுகாது தீக் காய்வார் போல்க என்க.

சார்ந்த என்றது அரசரைப் பொருந்தி

யிருந்த அவரது பெருந்தன்மை தோன்ற. தார் = மாலே. தான் சேர்ந்த அரசரது இயல்பினை நன்கறிந்து அதற்கியைய நின்று உறுதி கூறி என்றும் இனியராய் ஒழுகி வந்தார் ஆகலால் சீர் அறிந்து கூர்ந்தொழுகி நின்றார் என்றும். ஓர்ந்து என்றது வேந்தரது மேன்மையும் மாண்மையும் உணர்ந்து என்றவாறு.

இஃது அரசனைச் சேர்ந்து

ஒழுகவேண்டியவிதம் கூறுகின்றது.

போல்க = போல நிற்க ; இஃது இடைச்

சொல்லடியாகப்

பிறந்த வியங்கோள். இம் முற்று காயுந்தன்மையோடு ஆய நின்றது. தீக்காய்வார் என்றது குளிர் காய்வாரை. இகல் என் னும் அடை அரசரது இயல்புதோன்ற நின்றது. இகல் = வலி_ மாறுபாடு. வலியுஞ் சினமும் கண்டோரது நலியுந்திறனு முடையார் என்ற வாறு.

தம்முயிர்க்கு இறுதி வரினும் தம் அரசர்க்கு உறுதி பயத்தற் குரிய சூதர் முதலாயினோர் அவரைப் பொருத்தி நின்று இதம்
214

1708 திருக்குறட் குமரேச
வெண்பா.

பெற ஒழுகவேண்டிய விதங்களை எளிதாக உணர்ந்துகொள்ளுமாறு, ஒழுகுவார் காய்வார்போல்க என ஓர் உவமங் காட்டி புணர்த்தியருளினார் என்க.

இகல் மிகுந்த அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிக நீங்காமலும், மிக நெருங்காமலும், தீயையணுகிக் குளிர் காய்பவர் போல் நிலைபரிந்து கொண்டு இடைபட நின்று ஒழுக வேண்டும் என்பதாம்.

குளிர் காய்வார் நெருப்பைவிட்டு மிக நீங்கி விடின் தம் குளிர் நீங்காது ; மிக நெருங்கின் அந்நெருப்பு அவரை நிலையறச்

சுட்டுவிடும்; அதுபோல் அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் தூதர் முதலாயினோர் அவரைவிட்டு அறவே விலகிவிடின் தம் உரிமை இழந்து போவர்; மிக நெருங்கின் தம்மை இகழ்ந்து அது செய்தார் என்று அவர் சினந் தொழிப்பச் சிதைந்தழிவர் ஆதலால் இவ் இழவழிவுகள் எய்தாவண்ணம் இயல்பறிந்து நிலை பெற நின்று ஒழுகவேண்டும் என்பார் தீக்காய்வார் போல்க என்றார்.

ஆசிரியனைச் சார்ந்து மாணாக்கன் ஒழுகவேண்டிய முறையினை புணர்த்துங்கால்

அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி
நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமொடு
எத்திறத் தாசான் உவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி
வழிபாடே. என்று இலக்

கணம் உணர்த்தி நின்றது. அகலாது
அணுகாது என அடிக
ளருளி யுள்ளதை இவ் வியல் விதி
தழுவியுள்ளமை காண்க.
நெருங்கிப் பழகியிருந்தாலும் அரசனை
நெருப்பைப்போல்
நினைத்தொழுக வேண்டும் என்பது குறிப்பு.
அல்லது மிகு நட்பேயென்
றற்றநோக்காது செல்லின்
ஒல்லையில் நினக்குண்டாயிற்
றுறுமலமான மெய்யே
கல்லதன் மனையின்
வாக்குகறுநெயுண் டொளிர்வதேயென்
றெல்லடர் சுடரை மூத்த மிடிற்சுடா
தமைவதுண்டோ.
என்றதும் ஈண்டெண்ணத் தக்கது.
70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல்.
1709

தண்ணளியுடையராய் நின்று உயிர்கட்கு நன்மை செய்தற்குரிய அரசரை யிங்கு நெருப்போடு நோவைத்தது என்னை யெனின், அத் தன்மையோடு அவர்தம் வெம்மையும் விளக்கமும் விளங்க என்க.

ஈண்டுநீர் மிசைத்தோன்றி யிருள்
சீக்குஞ் சுடரேபோல்
வேண்டாதார் நெஞ்சுட்க வெருவந்த
கொடுமையும்
நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச்
சேர்ந்தார்க்குக்
காண்டகு மதியென்னக் கதிர்விடு
தண்மையும் ; என மன்னரியல்பைக் குறித்து வருங் கலியடி யிங்கு மனங்கொள்ளத் தக்கது.

தீண்டினார்தமைத் தீச்சுடும் மன்னர்
தீ
யீண்டு தன் கிளை யோடும்
எரித்திடும் ; என்றது சீவக சிந்தாமணி.

இதன் கண்ணும் அரசரை நெருப்போடு நேரவைத் துள்ளமை காண்க. அரசர் பால் அன்பும் அச்சமுங் கொண்டு அளவறிந்து நின்று என்றும் இன்புற இயைந்தொழுக வேண்டும் என்பது கருத்து.

அமைச்சர் தூதர் முதலிய அங்கத்தார் தம் அரசனோடு அமைந்தொழுகவேண்டிய முறையினை அறிந்து கொள்ளுமாறு அடிகள் அருளியுள்ள நயத்தை இதில் ஆய்ந்து காண்க.

மன்னரது மாண்பறிந்து நடப்போரே என்றும் மதிப்படைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை எயிற்றியனார் பால் உணரப்படும்.

## கதை.

எயிற்றியனார் என்பவர் இற்றைக்கு இரண்டாயிரத்திருபது ஆண்டுகட்கு முன்னர்ச் சோழ நாட்டிலே புல்லாறு என்னும் ஊரிலே யிருந்தவர். இவர் வேளாண் மரபினர்.

நீதிகள் பலவும் ஓதி யுணர்ந்தவர். கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். அரசியற் றுறைகளை வழுவறவுணர்ந்தவர். அருளும் அமைதியும் அமையப்
பெற்றவர். வியக்கத்தக்க
சொல்வன்மையுடையவர். இவரது செயல் இயல்களை யறிந்து மகிழ்ந்து கோப்பெருஞ் சோழன் என்
னும் மன்னன் இவரை யழைத்துவைத்துத் தன்னுடன் இருந்து
வருமாறு புகழ்ந்து வேண்டினன். மதிமாட்சி மிக்க அம் மன்ன

1710. திருக்குறட் குமரேச வெண்பா.

னது இன்னுரையின்படியே அங்கு இவர் இருந்துவந்தார். உட ற்கு உயிர்போல், இவர் உடனிருந்துவரினும் அம்மன்னனது உயர்வினையும் தகவினையும் ஓர்ந்துகொண்டு

அதற்கியைய ஒழுகி நின்றார். தனக்குச் சூழ்ச்சித் துணை வராய் முன் அமைந்திருந்த அமைச்சரெவரினும் இவர்பால் அவன் அன்புமீக் கூர்ந்தான். பேரறிவாளனாகிய அம் மன்னனுக்கு ஓரறிவுமில்லாத புதல்வர் இருவர் உதித்திருந்தனர். அச் செல்வச் சிறுவர், கல்லாமடையரும் பொல்லா நடையருமாய புல்லர் பலருடன் பொருந்திப் பொல்லா தனவே புரிந்தார். அதனை நினைந்து அரசனும் இவரும் மிகவும் வருந்தினார். உணர்வுரைகள் பல ஓதி யுணர்த்தினார். உணர்த்தியும் உணராமல் தாம் உணர்ந்தபடியே அவர் துணிந் தொழுகினார்.

மொய்சிதைக்கும் ஒற்றுமையின்மை; யொருவனைப், பொய் சிதைக்கும் பொன்போலும் மேனியைப்; பெய்த, கலன் சிதைக்கும் பாலின் சுவையைக்; குலஞ்சிதைக்கும், கூடார்கட் கூடிவிடின்,

என்றபடியே தாம் கூடிய சிற்றினத்தால்

அவர் பிடிழுந்து நின்றார். பின்பு பொருள் கொடுத்துப் பலரைத் துணையமைத்துக் கொண்டு அரசனோடு அமர்விளைக்கத் துணிந்தார். அதனை யெதிரறிந்தவுடன் அரசன் பெருஞ் சினங்கொண்டு அவரனைவரையும் பொருதழிக்க வெண்ணினான். அணுகியிருந்த இவர் அது தகாதென்று தடுத்து மறுமையின் பெருமையை அவன் மனத்துட் பதித்தார். இவரது இன்னுரைகேட்டு அம் மன்னன் மனந்திரும் பினான். குருவென நினைந்து இவரை மிக மகிழ்ந்து பேணினான். இங்ஙனம் புகழ்ந்து பேணினும் அவனைத் தெய்வமாகவே கருதி நிலையறிந்து நின்று இவர் முறையோடு ஒழுகினார்.

அருளுமேல் அரசாக்கு மன்காயுமேல்

வெருளச் சுட்டிடும் வேந்தனு மாதெய்வம்

மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்

அருளி யாக்க லழித்தலங் காபமோ.

என்னும் உண்மையை யாவரும் உணர இவர் உணர்த்தி வந்தார். நீங்காமலும் மிக நெருங் காமலும் நிலை புணர்ந்து நின்று அரசனைப் பொருந்தி இவர் ஒழுகிவந்த ஒண்மையை யனைவரும் உவந்து புகழ்ந்தார். அகலாது அணுகாது தீக்காய்வார்போல்க இகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகு 70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல்.

1711

வார் என்னும் உண்மையை உலகம் இவர்பாலுணர்ந்து நின்றது. மக்கள்மேல் மாறுபட்டு மன்னன் வெல்ல எழுந்தபொழுது இவர் சொல்லிய கனியொன்று இதனடியில் வருகின்றது.

மண்டம ரட்ட மதனுடை நோன்றாள்

வெண்குடை விளக்கும் விறல்கெழு
வேந்தே!
பொங்குநீ ருடுத்தவிம் மலர்தலை யுல
கத்து
நின்றலை வந்த இருவரை நினைப்பிற்
றொன்றுறை துப்பினின் பகைஞரும்
அல்லர்;
அமர்வெங் காட்சியொடு மாறெதிர்
பெழுந்தவர்
நினையுங் காலை நீயு மற்றவர்க்கு
அனையை யல்லை; அடுமான்
தோன்றல்,
பரந்துபடு நல்லிசை யெய்தி மற்று நீ
யுயர்ந்தோ ருலக மெய்திப் பின்னும்
ஒழித்த தாயம் அவர்க் குரித்தன்றே
அதனால், அன்ன தாதலும்
அறிவோய் நன்று
மின்னுங் கேண்மதி யிசைவெய்
யோயே

நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி யிளையோர்
தோற்பின்
நின்பெருஞ் செல்வம்
யார்க்கெஞ் சுவையே
அமர்வெஞ் செல்வ நீயவர்க் குலையின்
இகழுந ருவப்பப் பழியெஞ்
சுவையே
அதனால், ஒழிகதி லத்தைநின்
மறனே வல்விரைந்
தெழுமதி வாழ்க நின் னுள்ள
மழிந்தோர்க்
கேமமாகு நின் றுணிபுல் மயங்காது
செய்தல் வேண்டுமா லன்றே
வானோர்
அரும்பெற லுலகத் தான்றவர்
விதுப்புறு விருப்பொடு விருந்தெதிர்
கொளற்கே. (புறம்.)
விறல்கெழு வேந்தே, நின்தலை வந்த

பென்றுமுறத்
தேர்ந்தொழுகல் சேர்ந்தார் திறன்.

நீங்காமலும் மிக நெருங்காமலும் நிலையறிந்து நின்று அரசரோடு ஒழுகி வரவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

692 உள்ளி விழையா வுயரிசைச்சன் பின்பாசாற்
கொள்ளநின்றான் சீரேன் குமரேசா—தெள்ளியசீர்
மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.
(உ)

இ—ள்.

குமரேசா! தன் வேந்தன் விரும்பியதை விரும்பாதொழுகிய இசைச்சன் பின்பு என் அவனால் பெருஞ் செல்வமடைந்

தான் எனின், மன்னர் விழைப விழையாமை, மன்னரால் மன்னிய ஆக்கம் தரும் என்க.

உள்ளி என்றது மன்னரது மாட்சியை உணர்ந்து என்றவாறு. உள்ளுதல் விழையாமைக்கும் அஃது அவன் உயர்ச்சிக்கும் ஏது வாயினமையால் அவ்வுரிமை தோன்ற நிரலே நின்றன. அரசு என்றது உதயணனை. இஃது அரசர்க்கு உரிமையான உயர்வுகளை அமைச்சர் விரும்பலாகாதென்கின்றது. விழையாமை ஆக்கம் தரும் என்றதனால் விழையின் கேடுண்டாம் என்பதாயிற்று. மன்னரைச் சேர்ந்தொழுகுவோர் உணர்ந்துகொள்ளவேண்டிய ஒழுங்குகளுள் இவ்விழையாமை எல்லா நலங்களையும் அவர்க்கு விளைக்குமாதலால் முன்னதாக அவர் விழைந்துகொள்ளுமாறு ஈண்டு அதனை விளக்கியருளினார்.

விழைப = விரும்புவன ; அவை, அவர்

அநுபவித்தற்குரிய அணி உணவு ஆடை ஊர்தி முதலியன. அரசர் புண்ணியப் பொலிவோடு தேவர்போல் இங்கு கண்ணுமின்றவராதலால் அவர் 70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். |
713

போல் உயர்ந்தபோகங் க ளை நு கர் ந்து கொள்ளப் பிறர் விரும்பலாகாது; விரும்பின் வெறுக்கத்தக்கவராய் அவர் இழிக் கப்படுவர் என்க. அறத்தொடு கல்யாணம் ஆள்வினை கூரை

பிறப்புப் பெருகியக்
கண்ணும்—சிறப்புபட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க
செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும்.

என்றது ஆசாரக்கோவை.

மேல், அன்பும் அச்சமுமுடைய ராய்க்

தகுதியறிந்து நின்று அரசரிடம் ஒழுகவேண்டும் என்றார்; இதில், அவர்க்குரிமையான போகங்களைத் தாம் விரும்பலாகாதென்று உணர்த்தியருளினார்.

தம் அரசர் விரும்புவனவற்றை அமைச்சராகிய தாம் நுகரு மாறு விரும்பாதொழிக; அங்ஙனம் ஒழியின், அவ் அரசரால் தமக்கு நிலைபெற்ற செல்வத்தை அது கொடுக்கும் என்பதாம்.

அரசனது தகுதியையும் தங்கள் நிலைமையையுமுணர்ந்து அவனுக்குரிய உயர்ச்சிகளையும் நுகர்ச்சிகளையும் அமைச்சர் முதலாயினோர் கொள்ள விரும்பாமல் அடங்கியிருப்பின் அவ் அடக்கத்தை நோக்கி மகிழ்ச்சி மீக்கூர்ந்து அவர்க்கு என்றும் உரிமையாகச் சிறந்த செல்வங்களை அவன் நினைந்து கொடுப்பன் ஆதலால் விழையாமை மன்னரால் மன்னிய ஆக்கந்தரும் என்றார்.

மன்னனது விருப்பத்தைத் தமக்கு உரிமையாக அடைய விரும்புகின்றவர் அவன் விரும்பிய இன்பங்களைத் தாம் நுகர விரும்பலாகாதென்பதாம். 'பெரியார் உவப்பன தாமுவவார்' எனவும் 'கோல் நேர் செய்யார்' எனவும் வருவன ஈண்டு எண்ணற் குரியன.

மன்னுதல் நுகர்ச்சிகளை விழைந்து மன்னிய ஆக்கத்தை யிழந்துவிடுதல் மதியீனமாகுமாதலால் மன்னனைச் சேர்ந்தொழுகும் மதியுடையார் அதனை மருவலாகாதென்பது குறிப்பு.

தம் அரசனுக்குரிய போகங்களை விரும்பாதிருப்பவர் பின்பு அவனால் சிறந்த மேன்மையை யடைந்து திகழ்வர் என்பது இதில உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இசைச்சன்பால் உணரப்படும்.

கதை.

இசைச்சன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத் தெழு நூ று ஆண்டுகட்கு

முன்னர் வத்தவ நாட்டிலே யமுனையாற்றங்


வெண்பா.

கரையிலிருந்த கௌசாம்பிபுரம் என்னும் நகரிலிருந்தவன். இவன் வேதியர் மரபினன். வேத முதலிய கலைகள் பலவும் ஓதியுணர்ந்தவன். இவன் இளமையிலிருக்கும் பொழுதே தாய் தந்தையரிருவரும் இவனைத் தனியேவிட்டு இறந்துபோயினர். தானாகவே இவன் முயன்று பயின்று உணர்வொழுக்கங்களிற் சிறந்து விளங்கினன். இவனது குணநலங்களையறிந்து அந்நாட்டு மன்னனாகிய உதயணன் இவன்மேல் மிகவும் விருப்புற்றிருந்தான். அவனுக்கு உயிர்த்தோழனாகவும் மந்திரியாகவும் அமைந்து அவனோடு இவனுடனமர்ந்திருந்தான். பேரழகியாகிய தன் மனைவியைப் பிரிந்து அம்மன்னன் வருந்தி நின்ற பொழுது

இவனருகிருந்து அரிய வுபாயங்களைச்செய்து அவனைத் தேற்றி நின்றான். மாற்றலரோடு பொரப் புகுந்த போதும் உடனிருந்து அவனுக்கு இவன் இதம்புரிந்து வந்தான. இங்ஙனமே எவ்வகையாயினும் அவன் இன்புறும் வண்ணமே இவன் எண்ணிச் செய்தானுயினும் அவனுக்குரிய அரச போகங்களை யாதும் விரும்பாமல் அடங்கியிருந் தான்.

இவனது அடக்கத்தையும் தன்பால் வைத்துள்ள அன்பையும் வியந்து இன்னுயிர்போலெண்ணி அம்மன்னன் இவனை இனி து பேணினான். மகததேசத்து மன்னனாகிய தருசகன், போரில் தனக்கு உதவிசெய்ததை நினைந்து தன் தங்கையாகிய பதுமா பதியை மணஞ்செய்துகொள்ளும்படி அம் மன்னனை வேண்டிய பொழுது இவனுக்கு மணமுடித்த பின்னரே தானதைச் செய்து கொள்வதாக

வுறுதிபெற அவன் உழைத்து நின்றான். அங்ஙனமே ஆப்பியாயினி என்னும் அழகிய ஒரு பார்ப்பனக் கன்னியை இவனுக்கு மணஞ்செய்துவைத்துப் பெருஞ் செல்வத்தோடு என்றும் இனிதிருந்து வாழுமாறு மிக்க வருவாயையுடைய பல ஊர்களையும் அம் மன்னன் உரிமையாக உதவினான். இன்னுயிர்த்துணை வனுயிருந்தும் அம் மன்னவன் விழைந்ததை விழையாதிருந்தமையால் பின்பு அவனால் இவன் பெருஞ் செல்வமடைந்தான். மன்னர் விழைப விழையாமை மன்னரால் மன்னிய ஆக்கந் தரும் என்னும் உண்மையை உலகம் இவனால் உணர்ந்து மகிழ்ந்தது. இவனைப் பெருங் கதையில் காண்க.

70-ம் அதிகாரம் மன்னரைச்

சேர்ந்தொழுகல். 1715 வயத்தகு

கோன்றன் வயந்தகத் றழீஇ
இசைச்சன் என்னும் என்னுயிர்த் தோழன்
அருமறை நாவி னந்தண னவன்றனக்
கிருமுது குரவரு மிறந்தன ராதலின்
வேதத் தியற்கையின் எதந்திரக்
கிரிசையின் வழாஅ வரிசை வாய்மையோ
ரந்தணன் கன்னியை யந்திர விதியி
னவன்பாற் படுத்த பின்னர் என்னையும்
இதன்பாற படுக்க வெண்ணுக தானென
என்கூற்றாக இவையக் கூறி
முன்கூற் றமைத்து முடித்தனின் கடனென
வயந்தக குமரனும் நயந்தது நன்றென
இன்னொலிக் கழற்கால் மன்னனைக் குறுகிப்
பொருத்தம் படவவ னுரைத்ததை
யுணர்த்தலின் விருப்பொடு கேட்டு விறல்கெழு
வேந்தன் நங்கை தோழி நலத்தொடு புணர்ந்த
அங்கலுழ்பணைத் தோள் ஆப்பியாயினி
யெனுஞ் செழுக்கயன் மழைக்கட் சேயிழை
யரிவை ஒழுக்கினும் குலத்தினும் விழுப்ப

மிக்கமை சென்றுரை செம்மற் கென்றவ
ஞெருப்பட இலக்கணச் செந்நீத் தலைக்கையி
னிரீஇ
யிழுக்கா வியல்பி னிசைச்ச குமரன்
விழுப்பெரு விதியின் வேட்டவட்
புணர்கென முழுப்பெருங் கடிநகர் முழுதுட
னுணரக் கோப்பெரு வேந்தன் யாப்புறத்
தமைத்தபின் வதுவைச் செல்வத்
தொளிநகைத் தோழனை நீங்கல் செல்லான்
பூங்கழ லுதயனன்.
எனவரும் இவற்றானும் மேற்குறித்த
வுண்மை இனிது புலனும். ஆண்டகை
மன்னரைச் சேர்ந்தார் அலனுறினும்
ஆண்டொன்றும் வேண்டுதும் என்ப
தின்றயற்க பூண்டிருக்கு மார்ப பொருட்க்கா
வேண்டாமை வேண்டி யுதெல்லார் தரும்.
215
(பழமொழி.) 1716 திருக்குறட்
குமரேச வெண்பா. மன்னர்பால் யாதும்

விழையாதிருப்பின் அதனால் விளையும்
மேன்மையை இதுவும் விளக்கிநிற்றல் காண்க

தன்றலைவன் போலுயர்வைத்
தான்விரும்பல் பின்பழிவில்
நின்றலைவார் நேர்ந்த நெறி.

*அரசர்க்குரிய போகங்களைப் பிறர் நுகர விரும்பலாகாதென் பது இதனால் கூறப்பட்டது.*

---

693 *தேற்றினுமேன் வாலிபன் புதோமல் தம்பிதனைக்*
*கூற்றெனவே தீர்த்தான் குமரேசா—ஆற்றலோடு*
*போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்*
*தேற்றுதல் யார்க்கு மரிது.*

இ—ள்.

குமரேசா ! வாலி
கடுத்துச்சினந்தபின் பலர்வந்து தேற்றியும் கேட்காமல் சுக்கிரீவனை
வன்கொதித்தொழித்தான் எனின், போற்றின் அரியவை போற்றல்; கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது என்க.

தான் பிழை செய்யவில்லையென்று சுக்கிரீவன் பலவாறு பணிந்து வேண்டியும், தெளிந்தருளாமல் சினந்தொழித்தானாதலால் தேற்றினும் தேறாமல் தீர்த்தான் என்றும். தம்பியைக் கூற்றெனவே நம்பிக் கொதித்த வாலிக்கு அங்ஙனமே அவன் ஆண்மையுந் தோன்ற இஃதமைந்து நின்றது. ஆற்றலொடு = மிக்க வூக்கத்துடன். இது போற்றலின் ஏற்றந் தோன்ற நின்றது.

மன்னரைச் சேர்ந்தொழுகுவார்
இன்னலுறாவகை தம்மைக் காக்கக் கருதின்

அரிய பிழைகள் தம்மிடம் அணுகாவண்ணம் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்பார் போற்றின் அரியவை போற்றல் என்றார். போற்றல் = விரும்பிப் பாதுகாத்துக் கொள்ளுதல். போர் பல கடந்த வேலோய் மாயங்கோல் போற்றி என்றாள் என்றவிடத்தும் இது நின்றுணர்த்தும் பொருளையுணர்க. அல்லீற்றுவியங்கோள் விதிமுறையினின்றது.

70-ம் அதிகாரம்

மன்னரைச் சேர்ந்தொழுகல். 1717

அரியவை என்றது பொறுத்தற்கரிய பிழைகளை; அவை, மன்னர்க்குரிமையான மகளிரொடு மருவல், காவாக அரும்பொருள் கவர்தல், அமரிடைக் கைவிட்டகன்றோடுதல் முதலாயின.

கடுத்தபின் = ஐயுற்றுச் சினந்தபின். கடுத்தல் என்பது, ஐயம் சினங்களை

புணர்த்திலரும். இப்பதக்கை இங்கு உபயோகித்திருக்கும் அழகை யூன்றி நோக்குக.

தேற்றுதல் = தெளிவித்தல். யார்க்கும் = எத்தகையோர்க்கும். உம்மை உயர்வோடு எஞ்சாமையையுமுணர்த்தி நின்றது.

மேல், அரசர்க்குரிய கலங்களைத் தமக்கு வேண்டுமென விரும்பிக் கொள்ளாதவரே பெரும் பயன்கொள்வர் என்றார்; இதில் அம்மன்னர் கடுப்புறவண்ணம் என்றும் தம்மை அவர் காத்தொழுகவேண்டுமென்று உணர்த்தியருளினார்.

அரசனைச் சார்ந்தொழுகுவார் என்றும் மாண்புறத் தம்மைக் காக்கக் கருதின், அரிய பிழைகள் தம்மிடம் புகாமல் காக்க; அவை புகுந்தனவாகக் கேட்டு அவ் அரசர் ஐயுற்றுச் சினந்தால் அதன் பின் அவரைத் தெளிவித்தல் யாவர்க்கும் அரிதாம் என்பதாம்.

இவன் பிழைசெய்யான் என்று அரசர்

நம்பிக்கை கொள்ளும்வண்ணம் ஒருவன் நடந்துகொள்ளவேண்டும் இன்றேல் அவனு க்கு நாசம் உண்டாகும் என்றார்; இதனைக் கேட்டவுடனே ஒருவேலை பிழைசெய்துவிட்டால் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்று அவரைப் போற்றிக்கொள்ளலாமன்றோ? என அவனை நோக்கி இது கூறியதாகக் காண்க.

வினைத் திட்பமுடையராய்ச் சூழ்ச்சியும் முடிவும் தாழ்ச்சியின்றிச் செய்து உலகைப் போற்றிவருதற்குரிய அமைச்சர் வழு வுறுவண்ணம் முன்னதாகத் தம்மைப் போற்றியொழுகவேண்டும் என்பதாம். அரசர் பொறுப்பரென்றெண்ணி வெறுப்பன செய்யலாகாதென்பது குறிப்பு.

பொறுப்பரென் றெண்ணிப்
புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை
வேண்டும்—வெறுத்தபின்

ஆர்க்கு மருவி யணிமலை நன்றுடை
பேர்க்குதல் யார்க்கு மரிது.

என்றது நாலடி. அடிகளது காலடியை இது கருதிநிற்றல் காண்க.

17 18 திருக்குறட் குமரேச வெண்பா.

ஆனவன்போல் நின்றே யகம்பிழைத்த மந்திரியை
வானவர்கோன் கோன்றொழித்த

வாறுபோல் அரசர் ஐயுற்றால் உடனே தலைபற அவரை அழித்து விடுவாராதலால் அவரை யடுத்தொழுகுவோர் மிக்க கருத்தோடு மனந் தூயராய் அமைந் தொழுக வேண்டுமென்பது கருத்து.

பிழைசெய்ததாகக் கருதி ஒருவன்மீது அரசன் ஐயுறுவானாயின் பின்பு அவனை எவ்வகையாலும் தேற்ற முடியாது என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை

வாலியால் உணரப்படும்.

## கதை.

வாலி கிட்கிந்தையிலிருந்து அரசுபுரிந்து வருங்கால் சுக்கிரீவன் இளவரசனாகவும் அமைச்சனாகவும் அமைந்திருந்தான். இருக்குங்கால் மாயாவி என்னும் அசுரவீரன் அங்கு அமர் குறித்து வந்தான். அந்த வீரனை வாலி தோள் தட்டி யெழுந்து அவனோடு போர் செய்யப் புகுந்தான். சொல்லருந் திறலோடு இருவரும் மல்லமர் புரிந்தார். முடிவில் மாயாவி அமர்செய்ய முடியாதவனாகி அஞ்சியோடி ஒரு படுமுழை வழியாப் பாதலமெய்தினான். இவனுந் தொடர்ந்து சென்றான். செல்லுங்கால் அப் பகைவன் மீண்டு வெளியேறித் தப்பி ஓடிவிடாதபடி அப்பிலத் துவாரத்தின் வாசலில் தன்தம்பியைக் காவல்வைத்துச் சென்றான். சென்றவன் இருபத்தெட்டு மாதங்களாகியும் மீளவில்லை. நெடுந் திறன்

மிக்க அவனோடு அந்தக் கடும்போர்
நிகழ்ந்தது; ஆண்டு இது நிகழ
ஈண்டிருந்தவர், வாலி மாண்டு போனான்
மாயாவி மீண்டுவந்து அடியோடு தம்மை
மாண்டிடச் செய்வன் என்று மனங் கலங்கி
அப்பிலத்தின் வழியைக் குன்றுகளைக்
கொண்டடுக்கி நன்றாக அடைத்துவிட்டு
அரசினை ஆண்டு வரும்படி சுக்கிரீவனை
வேண்டினார். முதலில் தன் துணைவனுக்காக
அவன் இரங்கியழுதான். பின்பு போனதை
நினைந்து பயனென்னையென்று அரசாள
இணங்கினான். அவன் இணங்கி
அரியணையில் ஏறும் அமையம், பகைவனைக்
கொன்றுவிட்டு வீரவெற்றியோடு இவன்
மேலேறி வந்தான். பிலத்தின்
தலைப்பையடைந்து தம்பியை அழைத்தான்.
மாற்றம் யாதும் கேட்கப் பெற்றிலன்.
கடுத்தான் உள்ளம். அடுக்கியிருந்த
மலைகளைக் காலால் மடுத்தெற்றினான்.

70-ம் அதிகாரம் மன்னரைச்
சேர்ந்தொழுகல். 1719

வால்விசைத்துவான் வளி
நிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன் கடிதினெற்றலும்
நீல்நிறத்தவின் னெடுமுகட்டவும்
வேலை புக்கவும் பெரிய வெற்பெலாம்.

என்றபடி பெயர்ந்து போயின.
வெகுளியோடு வெளியில் வந்தான். பாவம்!
சுக்கிரீவன் என் செய்வான்.
உள்ளங்கலங்கினன். ஓடிவந்தான். அடி
பணிந்தான். நடந்ததைக் கூறி நடுங்கி
நின்றான். "ஆணை யஞ்சி யிவ் அரசை
யெய்திவாழ், நாணிலாத என் நவையை நல்கு
வாய்" என்று அபயம் புகுந்தான். பு
குந்துமென்! "என் அரசை விரும்பியே இவ்
அரும்பிழை செய்தாய்" என்று இவன்
அகற்றிரீக்கான். அறைந்து கொல்ல
நினைந்தான். கடல் கடைந்த தன்

காதலங்களால் கண்டவர் குடல் கலங்க
அவனுடல் கடைந்தான். பின்பு அவன்
ஓடியொளித்தான். பலர்வந்து தேற்றியுந்
தேறாமல் உடனிருந்தவரனைவரையும்
ஒறுத்து அவனோடு ஓட்டிவிட்டான்.
பிழையுற்றதாக
அரசன் ஐயுற்றதால் சுக்கிரீவனுக்கு இவ்
அழிவுற்றதேயென்று அனைவரும் அழுதி
ரங்கினர். போற்றின் அரியவை போற்றல்;
கடுத்தபின், அரசனைத் தேற்றுதல் யார்க்
கும் அரிது என்பதை உலகம்
இவன்பாலுணர்ந்து நின்றது.

நீர்த்தன் னொருவர் நெறியன்றிக்
கொண்டக்கால்

பேர்த்துத் தெருட்டல் பெரியோர்க்கு
மாகாதே

கூர்த்தநுண் கேள்வி யறிவுடையார்க்
காயினும்

ஓர்த்த திசைக்கும் பறை.

(பழமொழி).

அரசர் கடுத்துக்கொண்டால் அதனையடுத்துத் திருத்தல் யார்க்குமுடியாது ஆதலால் அவர் பிறழக் கொள்ளாதவாறு தன்னையொருவன் பேணிக்கொள்ளவேண்டும் என்பதை இதுவும் பேணிநிற்றல் காண்க.

வேந்தர் கடுத்தால் விளிவாம் பெரும்பிழைகள்
கூர்ந்துபடா தோர்ந்து கோளல்.

அரசர் ஐயுறுவண்ணம் அமைச்சர் பிழைபற அமைந்தொழுகவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---



694 தேர்ந்த விதிமுன்னே சேர்ந்தாரைச் செய்தகங்கை

கூர்ந்திழிந்தாள் என்னே
குமரேசா—சார்ந்த
செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு
மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

இ—ள்.

குமரேசா! பிரமன் முன்னிருந்து வருணனை நோக்கி நகைத்ததனால் கங்கை என் பின் இழிவுகொண்டாள் எனின், ஆன்ற பெரியார் அகத்து, செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல் என்க.

தேர்ந்த என்றது அவனது கலைபுணர்வின் ஆன்ற பெருமை தோன்ற நின்றது. தான் வருணனை நோக்கி நகைத்தமையே தன் உயரிய தெய்வ நிலைமை யிழந்து இங்கு இழிந்திடச் செய்த காதலால் எச்சமும் முற்றும் கங்கைக்கு முன்னும் பின்னும் இசைந்து நின்றன.

சார்தல் = பிறரோடு பொருந்தல்.

இஃது அரசன் முன்னிருக்குங்கால் ஒருவன் அமர்ந்திருக்க வேண்டிய அமைவு கூறுகின்றது.

ஆன்ற பெரியார் என்றது ஈண்டு அரசரை. அறிவு செல்வம் ஆற்றல் முதலிய பெருமைகள் யாவும் அமைந்தவர் என்றவாறு. அகத்து = இடத்து. அருகில் என்க.

செவிச்சொல் என்றது ஒருவன் செவியில் மற்றொருவன் உற்றுச் சொல்லுதல். சேர்ந்தநகை என்றது ஒருவனைப்பார்த்து முறுவலித்தலை. ஒருவன் முகத்தை ஒருவன் நோக்கி இருவரும் தம்மில் இணைந்து நகுதலால் இது சேர்ந்த நகை என நின்றது.

அவித்து ஒழுகல் = தவிர்ந்து ஒழுகுக. ஒழுகல் = அல்லீற்று வியங்கோள். ஒழுக எனவும் பாடம். அச் சொல்லும் நகையும் தம்மிடத்துள்ளனவே யெனினும் அரசன் முன்னிருக்கும் பொழுது முகங்காட்டாதபடி

அவற்றை முற்றும் அடக்கி யிருக்க வேண்டும் என்பார் அகத்து அவித்தொழுகு என்றார். பிறரோடு மந்திரங் கொள்ளார் எனவும், செவிச் சொல்லுங் கொள்ளார் பெரியாரகத்து எனவும் வருவன ஈண்டு எண்ணற்குரியன.

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல்.

1721

மேல், அரசனை அணுகி வாழ்பவர் பிழைபுரா வண்ணம் தம்மைப் பேணி யொழுகவேண்டும் என்றார்; இதில், அவர் உழை யிருக்குங்கால் தாம் அமர்ந்திருக்கவேண்டிய உடலொழுக்கங்களை யுணர்த்தியருளினார்.

பெருமைநிறைந்த அரசாது அருகிலிருப்பவர் ஒருவரோ டொருவர் செவியுட் சொல்லுதலையும், சேர்ந்து சிரித்தலையும் அறவே ஒழித்து ஒழுகவேண்டும் என்பதாம்.

அரசன்முன் இருந்துகொண்டு ஒருவனை ஒருவன் நோக்கி நகைக்கல்,
நுண்ணுரையாடல், பின்னுரை கோடல் முதலிய சின்னச் செயல் களைச் செய்யின் தன்னைக் குறித்து அவை செய்வன வாகவோ, அன்றித் தன்னை மதிக்கவில்லையென்றோ அவன் எண்ணிக் கொதிப்பன்; அதனால் இழிவும் துன்பமும் எய்துமாதலால் அவற்றை அறிந்து ஒழுகவேண்டும் என்றார்.

உடுக்கை யிகவார் செவி சொறண்டார் கைமேல்
லெடுத்துரையார் பெண்டிர் மே னோக்கார் செவிச்சொல்லுங்
கொள்ளார் பெரியா ரகத்து; எனவும்,

நகை கயொடு கொட்டாவி காறிப்பு தும்மல்
இவையும் பெரியார் முன் செய்யாரே செய்யின்
அசைபாதுநிற்கும் பழி; எனவும்,

வரும் ஆசாரக் கோவை

ஈண்டு அறித்ற்குரியது.

அரசர்முன் அமர்ந்திருக்கும்பொழுது பல்லைக்காட்டல், புல் லிப் பேசல், மெல்லச் சிரித்தல் முதலிய இழிந்த செயல்களை உயர்ந்தோர் செய்யலாகாதென்பது கருத்து.

மன்னர் திருமுன் மறுமுகம்பார்த் தே நகைத்தால்
இன்னலுற வெய்தி யிழிவரால்—அன்னவர்முன்
சேர்ந்துநகை செய்யார் செருமார் சிகைவிரியார்
ஆர்ந்த அறிவினவர். இதனை ஈண்டு ஓர்ந்து கொள்க.

அரசன்முன் அடக்கமாக அமர்ந்திருக்க வேண்டுமென்பது கருத்து. வேந்தன் முன்னிருந்து விளைகை செய்வோர் ஏந்திய சீரிழந்து இழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கங்கையால் உணரப்படும்.

கதை.

கங்கை என்பவள் தெய்வ மகள். பஞ்சபூதங்களி லொன் றாகிய நீருக்கு

அதிதேவதை. நீர மகள் எனவும் கூறப்படுவள். 1722 திருக்குறட் குமரேச வெண்பா.

புண்ணிய வடிவினள். வெண்ணிறமுடையவள். பேரழகோடு பேரறிவும் வாய்ந்தவள். ஒரு காரியத்தைக் குறித்து ஆராய்தற்குத் தேவர்கள் கூடுவாராயின் அக்கூட்டத்துக்கு இவளையும் வருமாறு வேண்டிக்கொள்வர். விண்ணுலகம், மண்ணுலகம், பாதலம் என்னும் மூவகை புலகங்களினும் இவள் கலையால் மூன்று நதிகள் ஓடுகின்றன. அவை முறையே மந்தாகினி, கங்கை, போகவதி என்று கூறப்படும். எம்பெருமான் உலக முய்ய அனற் பிழம்பாய்த் தோன்றிய பொழுது இவள் தாங்கிச் சென்று இமயமலைச்சாரலிலுள்ள சரவணப் பொய்கையிலுய்த்து அகனல்

தவமிகப் பெற்றவள். புனிதமான எண்ணங்களை யுடையவள். மூன்றாக்கோடி தீர்த்தங்கட்கும் இவள் முதல்வி யாவள். இவள் ஒருநாள் பிரமனுடைய சமைக்குவந்தாள். அங்கு அமரர் பலரும் குழுமியிருந்தார். இருந்தவருள் வருணனும் ஒருவன். அவன் இவள்மீது பெருங்காதல் கொண்டிருந்தா னாதலால் அயர்ந்திருந்த பின் காதற்குறிப்போடு இவளைக் கனிந்து நோக்கினான். இவளும் எதிர்நோக்கி இன்னகை செய்தாள். புதியன கண்டபோது விடுவரோ புதுமைபார்ப்பார் என்றபடி இருவரும் ஒருவரையொருவர் கூர்ந்து பார்த்தார். பிறரறியாவகை சேர்ந்து நகைத்தார். அங்கு முதல்வனாய் நின்ற பிரமன் இந்நகைவகைகளை யோர்ந்துகொண்டான். அடிக்கடி மிக்கு நிகழ்ந்தது. தான் இருப்பதையும் மதியாமல் இச்சிறு நகையை இவர் சேர்ந்து

செய்தாரேயென்று அவன் பெருஞ் சினங்கொண்டான். மனிதாகி மண்ணுலகையடை மின் என்று வன்மொழி தந்தான், அவ்வாறே அவன் குருகுலத்தில் வந்து சந்தனுவாக இவள் கங்கையென்னும் பெயராலே அவனுக்குரிய மங்கையாயினாள். பெரியார் முன் அடக்கமில்லாமல் நகை செய்ததால் வந்தவகையென்று நொந்து வருந்தியிருந்தாள். செவிச் சொல்லும் சேர்ந்த நகையும் ஆன்ற பெரியாரகத்து அவித்தொழுக வேண்டும் என்பதும், இன்றேல் அவமதிப்பெய்தும் என்பதும் உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

சேர்ந்து நகைத்தல் செருமல் செவிசாய்த்தல்

வேந்தவைமுன் வீந்தார் வினை.

அரசர்முன் அடக்கமாக அமர்ந்திருக்க வேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

மன்னரைச் சேர்ந்தொழுகல். 1723 695

உற்றொன்றுங் கேளா தொடுங்கி
மதிதயனேன்
கொற்றவன்பா னின்றான்
குமரேசா—ஒற்றியே
எப்பொருளு மோரார்
தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.
(ரு);

இ-ள்.

குமரேசா! மதிதயன் என்பவன் தன் அரசனிடம் எதையும் தொடர்ந்துகேளாது ஏன் அடங்கியிருந்தான் எனின், எப்பொருளும் ஓரார்; தொடரார்; மற்று அப்பொருளை விட்டக்கால் மறை கேட்க என்க. முன் தொடாதே என்று விலக்கிப் பின் கேட்க என்றதனால் மற்று

என்பது வினைமாற்றின்கண் வந்தது.

தன் அரசன் மொழிந்ததையன்றி நெருங்கி வேறெதனையும் வலிந்து கேளாமல் அறிவோடு அமர்ந்திருந்தானாதலால் உற்று ஒன்றும் கேளாது ஒடுங்கி நின்றான் என்றும். ஒற்றி—மறைவாக ஒன்றி நின்று.

இது, மன்னரிடம் மருவிநின்று கேட்கும் மாபு கூறுகின்றது.

எப்பொருளும்—யாதொரு பொருளையும் ; ஓர்தற்கும் தொடர்தற்கும் உரியதேயாயினும் என்றவாறு. உம்மை எஞ்சாமையை யுணர்த்தி நின்றது. ஓரார் தொடரார் என்னும் முற்றுக்களை எச்சமாக்கிக் கொள்க.

ஓர்தல்—செவிசாய்த்து உணர்தல். உற்றுக்கேட்டு உண்மையை யுணர்பவனை ஓர்த்த செவியன் என்பர். தொடர்தல்—நெருங்கி வினவல். கோடவிழ்தார் யானுந் தோடர அவனுமென், பாடகச் சீரடியின் மேற்பணிய

என்புழித் கொடா என்பது வினவ என்னும் பொருளில் வந்துள்ளமை காண்க.

மறை—இரகசியம் ; பிறர் அறியாவகை மறைக்கப் படுவ தென்பதாம். இதனை அந்தரங்கம் எனவும் வழங்குவர். அரச னுக்கு மிக உரியராயினும் பிறர் மறையின்கட் சேவிடாய் என்றபடி அவனது மறையில் செவிசாய்க்காது அடங்கியிருக்கவேண்டும் என்றவாறு. மேல், வேந்தன்முன்னிருக்குங்கால் வீணை உரையும், நகையும் ஆடல் கூடாதென்றார் ; இதில், எதனையும் அவ னிடம் வலிந்து கேட்கலாகாதென்கின்றார்.

216

1724 திருக்குறட் குமரேச வெண்பா.

அரசன்மறை செய்துழி யாதொரு பொருளையும் செவி சாய்த்துக் கேளாது,

தொடர்ந்து வினவுவதுஞ் செய்யாது அம் மமறப் பொருளைத் தானாகவே அவன் வெளிப்படுத்தினால் அப்பொழுது அதனைக் கேட்கவேண்டும என்பதாம்.

வேந்தரைச் சேர்ந்தொழுகுவார் ஓர்ந்துகொள்ள வேண்டிய உண்மைகளை இதில் ஊன்றி யுணர்க. இறைவனைச் சாரார் சேவி யோரார் சாரிற் பிறிதோன்று, தேரார்போல் நிற்க தெளிந்து என்றதும் ஈண்டுத் தெளியத்தக்கது.

அரசன் பிறரோடு ஏதேனும் ஒரு இ ரகசியம் பேசிக்கொண் டிருப்பனாயின் அதனை ஒளிந்திருந்து உற்றுக் கேட்டலும், தனி யே வந்தபின் மொழிந்துவிடுமா று வலிந்து வினவலும் , கூடா தெ ன்பார் எப்பொருளும் ஓரார் ; தொடரார் என்றார். அங்ஙனம் ஓர் தலையும் தொடர்தலையும் உயர்ந்தோர் செய்யார் என்பது தோனற உயர்திணை வாய்பாட்டா லுணர்த்தினே ரும்

ஓராது கொடாது என அவ் எதிர்மறை முற்றுக்களை எச்சமாக்கிக், கேட்க என்பத ளோடு இணைத்து நோக்கிக் கொள்க.

ஒருவனிடம் ஒன்று முடுகிக் கேட்டால் அவன் அதனை உரை யாளுயின் கேட்டவன்சினந்து " இராசகாரியமோ? அது " என்று இகழ்ந்துபோகின்றான் ; இதனுல் மன்னாது மறையருமை யினிது புலனும்.

அரசனிடம் அடக்க ஒடுக்கமாக அமர்ந்து நின்று அவன் மொழிந்தவை நுணங்கி புணர்ந்து கோடலேயன்றி வே றெதனை யும் வலிந்து கேட்கலாகாதென்பது கருத்து.

நின்றக்கால் நிற்க அடக்கத்தால் என்றும்

இருந்த க்கால் எவாமை யேகார்—பெருந்தக்கார்

சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்

விளைவற்க சொல் லொழிந்தக் கால் ;
என்றது ஆசாரக் கோவை. இதனை ஈண்டு உளங்கொடல் வேண்டும்.

தன் அரசன் உரைத்ததை மாத்திரம் உவந்து கேட்டுக் குறிப் பறிந்து நடந்து அமைதியோடு அறிவுடையார் அவன்பால் அமர்ந் திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மதி துயன்பால் உணரப்படும்.

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல்.

1725

கதை.

மதிகயன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற்றெழுபது ஆண்டுகட்கு முன்னர்க் காஞ்சி நகாத்திலிருந்து அரசுபுரிந்த துணையிளங்கிள்ளி என்னும் மன்னனுடைய மந்திரிகளுள் ஒருவன். பேரறிவோடு பெருந்தன்மையும் வாய்ந்தவன். துணிவும்

பணிவும் தூய்மையுமுடையவன். நிலைதிரியாத நேர்மையாளன் என்று அக்காலத்துப் புலவர் பலராலும் இவன் போற்ற நின்றவன். எப்பொழுதும் அரசனருகிருந்து அவனுக்கு வேண்டிய உறுதிகளையுணர்த்தி வந்தவன். வரினும் அவனது அருமை பெருமைகளை மறவாமல் அடங்கி அன்புசெய்துநின்றான். மிக்க வாயடக்கமுள்ளவன். பெரும் பயனில்லாத சொல்லை இவன் மறந்துஞ் சொல்லான். நெருங்கிப் பழகியிருந்தாலும் தன் அரசனது குறிப்பையும் காலத்தையுங் குறித்தறிந்தே யெதையுந் திருந்தமுறச் சொல்வான். அவன் குறியாத ஒன்றை உரையென இவன் குறித்துக் கேளான். இங்ஙனம் இருந்துவருங்கால், கால•கதியால் அங்கு மழைவறங் கூர்ந்து வறுமை மிக அரசன் வருந்தியிருந்தான். தூவதிகன் என்னும் தேவதை ஒன்று வான்வழி வந்து "மன்னவ வருந்தல்; சின்னாளில் மணிமே

கலை என்பவள் இங்கு வருவள்; அவள்
வரவால் மழைபொழிந்து வளமிகும்;
அதன்முன் இந்நகர் நடுவே ஒரு
பொய்கையையும், சோலையையும்
செய்துவை" எனத் தேற்றிச் சென்றது.
அவன் வியந்து அவ்விரண்டையும் அங்ஙனமே
செய்தான். அச் செயலுக்குரிய மறையினை
வினைவை ஓயுற்று அவன் செப்பாதுகின்றான்.
உயிருந்த உடல்போல் நின்ற
உரிமையாளனாகிய இவனும் அதனை உரை
எனக் கேளாது ஒடுங்கியிருந்தான். குறித்த
படியே அங்கு மணிமேகலை வந்தாள்.
அரசன் மந்திரிகளுடன் மகிழ்ந்து சென்று
அவளைப் பணிந்து நின்று தன் அரசுக்குற்றிரு
ந்த வறுமையையும், அவள் வரவை
நோக்கியிருந்த உரிமையையும் கூறி
அப்பொய்கையையும், காவையும் பொருந்தக்
காட்டினன். அங்ஙனம் காட்டும்பொழுதுதான்
அதன் உண்மையை இவன் கண்டு

தெளிந்தான். பின்பு வளமிகப்
பழமைபோல் அரசன் மகிழ்வு பெற்றான்.
தெய்வங் கூறியதென்று அப்பொருளை உரை



வெண்பா.

யாதிருந்தும் தன் உழையிருந்த இவன்
சிறிதும் வினவாது உரிமை செய்திருந்ததை
உவந்துரைத்துப் பலரும் அறிய வியந்து புக
ழ்ந்தான். எப்பொருளும் ஓரார்,
தொடரார், மற்றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை என்னும்
மையாய் நின்றான்.

மறைமொழிக்கு இவன் உரி
மந்திரச் சுற்றமொடு மன்னனும்
விரும்பிக்
கந்திற் பாவை கட்டுரை யெல்லாம்
வாயாகின்றென வந்திக் கேத்தி
ஆய்வனை நல்லான் தன்னுழைச் சென்று

செங்கோல் கோடியோ செய்தவம்
பிழைத்தோ
கொங்கவிழ் குழலார் கற்புக்
குறைபட்டோ
நலத்தகை நல்லாய் நன்னாடெல்லாம்
அலத்தற் காலை யாகிய தறியேன்
மயங்குவேன் முன்னரோர் மாதெய்வந்
தோன்றி
யுயங்கா தொழிநின் னுயர்தவத்
தாலோர்
காரிகை தோன்றும் அவள் பெருங்
கடிநையின்
ஆருயிர் மருந்தா லகனில மூய்ப்பும்
ஆங்கவ ளருளால் அமரர்கோ னேவலிற்
றூங்கா மாரியுந் தானனி பொழியும்
அன்ன ளிந்த அகநகர் புகுந்த
பின்னாள் நிகழும் பேறம் பலவாற்
கார்வறங் கூறினும் நீர்வறங்கூராது
பாரகவீதியிற் பண்டையோ ரிழைத்த

கோமுகி யென்னும் கொழுநீ
ரிலஞ்சியொடு
மாமணி பல்லவம் வகுத்த நீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமின்னென்
றறைந்தத்
தெய்வதம் போயபிற் செய்தியாம்
அமைத்தது
இவ்விடம் என்றே அவ்விடம் காட்ட;
(மணிமேகலை).
மேற்குறித்த வுண்மையை இதுவும் காட்டி
நிற்றல் காண்க.
ஒன்றிநிற்றல் ஓர்தல் உரையென்னல்
மன்னவர்முன்
குன்றினர் கூடுங் குறி.
அரசனிடம் எதையும் வலிந்து
கேட்கலாகாதென்பது இதனால்
கூறப்பட்டது.

---

70-ம் அதிகாரம் மன்னரைச்

696 காலங் கருதியேன் கண்ணனார் மன்னரிடங்
கோலமுறச் சொன்னார் குமரேசா—ஏலுங்
குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். (௬)

இ—ள்.

குமரேசா! கண்ணனார் காலம் பார்த்துக் குறிப்பறிந்து அம்மாசர் விரும்பிக் கொள்ளுமாறு என் விளங்கச் சொன்னார்

எனின், குறிப்பு அறிந்து, காலம் கருதி, வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல் என்க.

வழுதியும் வளவனும் அமர்ந்திருக்கும்பொழுது தாம் கருதிய

வுறுதியை அமையம் நோக்கி அழகுபெற
வுரைத்தாராகலால்
காலங்கருதி மன்னரிடங் கோலமுறச்
சொன்னார் என்றும். கோலம் = அழகு.
எனும் = இயலுகின்ற.

இது, வேந்தனுக்கு ஒன்று
சொல்லுங்கால் ஓர்ந்து கொள்ள வேண்டிய
திறங்களை புணர்த்துகின்றது.

வேண்டுப = வேண்டுவன; தனக்கு
இன்றியமையாது வேண் டத்தக்க காரியங்கள்
என்க. இது பலவின்பாற்பெயர். வெறு
ப்பு இல என்பதும் அது.

வேட்பச் சொலல் = விரும்புமாறு
சொல்லுக. இவ்வியங் கோள் முற்றை
அறிந்து சொலல்; கருதிச் சொலல்,
வெறுப்பில சொலல்; வேண்டும சொலல்;
எனத்தனித்தனி கூட்டி முடித்துக் கொள்க.
அரசனுக்கு வெறுப்பில்லனவும்,
வேண்டுவனவுமாய காரியங்களையாயினும்

அவனது குறிப்பையும் சமயத்தையும் அறியாமற் கூறுவாராயின் அவனால் சினந்து இழிக்கப் படுவார தலால் குறிப்பறிந்து, காலங்கருதி எனக் குறித்துணருமாறு முதலில் நிறுத்தினர்.

மேல், அரசன் சொல்வதை அமைச்சர் முதலாயினோர் செவி யேற்றுக் கொள்ளும்வகை கூறினர்; இதில், அவனுக்கு ஒன்று சொல்லுங்கால் அவர் குறித்துக் கொள்ளவேண்டியதைக் குறித் துணர்த்தினர்

.

1728 திருக்குறட் குமரேச வெண்பா.

அரசனுக்கு ஒன்று சொல்லுங்கால் அப்பொழுது நிகழுகின்ற அவனது குறிப்பினை யறிந்து காலத்தையும் நோக்கி வெறுப்பில் லனவும் விருப்பத் தக்கனவுமாயவற்றை அவன் விரும்பிக் கொள்ளும் வகை சொல்லவேண்டும் என்பதாம்.

தனக்கு உறுதிபயதும் மிகுந்த
பயனுடையதுமாகிய தகுந்த காரியங்களை
விரும்பிக் கொள்ளுமாறு சுருக்கிய
சொற்களால் மிக இனிமையாக
அமையமறிந்து அரசனிடம் விளங்கக் கூற
வேண்டும் என்பார் வேண்டுப வேட்பச்
சொலல் என்றார்.

விரைந்துரையார் மேன்மேலுரையார்
பொய்யாய

பரந்துரையார்
பாரித்துரையார்—ஒருங்கெனைத்துஞ்

சில்லெழுத்தினாலே பொருளடங்கக்
காலத்தால்

சொல்லுக செவ்வி யறிந்து.

என்ற ஆசாரக் கோவை யீண்டு அறியத்தக்கது.

தூதர்கள் அரசனிடம் தங்கள்
கருத்தைச் சொல்லுங்கால் உணர்ந்து
கொள்ளவேண்டிய திறங்களைத் தமயந்தி
நளனிடம் அன்னத்தைத் தூது விட்டபொழுது

சொல்லியுள்ளமை யீண்டுச் சூழ்ந்து
நோக்கத்தக்கது.

வேற்றரசர் திறைகொணரும்
வேலையினுஞ் சொல்லற்க
மாற்றரசர் பால் வெகுளும் அமையத்
தும் வகுத்துரையேல்
தேற்றமுடை மதிவல்லோர்
தேர்ச்சியிலுந் தெரிந்துரையேல்
சாற்றி னுரைத்தனவெல்லாந் தவறாக
லறிதியே. (1)

என்குறைநீ வயவேந்தற் கியம்புதியேல்
வடங்கிடந்து
பொன்பிதிர் மின்சுணங்கார்ந்த
பொம்மலிள முலையினர்பால்
அன்புறு நல் லமையமதில் அறையற்க
அறைகுதியேல்
நன்குறைதீங் காமவர்பால் நயப்புற்ற
தன்மையினால். (2)

பொறிசெறித்த மாண்பினராய்ப்

பொருந்தலர்ச் செற்றிருந்தியஞ்
செறிகருமா றீட்டியரு வினை வாங்கு
செயலினரும்
உறுபிழைபுட் சிறிதியற்றி னுறத்திடுவர்
வயவேந்த
ரறுதிபெற நீமொழியும் அமையமறிந்
துரைத்தியால். (3)
அரசரைச் சேர்ந்தொழுகுவார்,
அவர்தம் குறிப்பறிந்து உரை
க்கவேண்டிய முறைகளை யிவை
புணர்த்துநிற்கும் விதங்களை யூன்
றியுணர்க.
70-ம் அதிகாரம் மன்னரைச்
சேர்ந்தொழுகல். 1729
பழகினவன் என்று கருதி
அமையமறியாமல் அரசனிடம். யாதுங்
கூறலாகாதென்பது குறிப்பு.
தாம் கருதியதைக் குறிப்பறிந்து
அமையமறிந்து தம் அரச னிடம்

இனிமையாக அறிவுடையோர் உரைப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணனார்பால் உணரப்படும்.

## கதை.

கண்ணனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறாண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே காவிரிப்பூம் பட்டினத்திலேயிருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் காரி யார் என்பர் இவர் வணிக மரபினர். காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் என இவர் கூறப்படுவர். சிறந்த அறிவும் நிறைந்த கல்வியுந் தெளிந்த சொல்வன்மையு முடையவர். சங்கப் புலவர்களுள் ஒருவர். இவருடைய கவிகள் செறிவு தெளிவு இனிமை அமைதி முதலிய பெருமைகளை உடையன. சொல்லாடலில் இவர் மிகவும் வல்லவர். எதனையும் நுணுகி யறிந்து நடுவுநிலை பிறழாமல் உண்மையை

யுறுதிபெற உரைப்பவர். ஒருவன் அகக்கருத்தை அவனது முகக் குறிப்பால் உணர்ந்துசொல்வதில் இவர் மிகச் சிறந்தவர். இவரது குணஞ் செயல்களை வியந்து அக்காலத் திருந்த அரசரும் பிறரும் இவரை மிக மதித்திருந்தார். உறையூரி லிருந்து அரசுபுரிந்த பெருந் திருமாவளவன் என்னும் சோழ மன்னன் இவரைத் தனக்கோர் உறுதித் துணைவாகக்கருதி யுடன் வைத்துக்கொண்டான். குறுநில மன்னர் சிலருடன் அவன் கொண்டிருந்த பகைமையை நீக்கி யினியரா ராய் அனைவரையும் இவர் இசைந்து வாழும்படி செய்தார். எவரும் விருப்புறக் குறிப்பறிந்து கூறும் இவரது பொருளுரையைப் பொன்போல் போற்றி யின்போடு பொருந்தி வாழ்ந்தார். இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய பாண்டியன் என்பவனுக்கும் வேண்டிய நீதிகளைக் கூறி ஈண்டிய கேண்மையாய் இவர்

இருந்துவந்தார். இங்ஙனம் வருங்கால் தன் மன்னன் பெருவழுதி என்னும் வேந்தனோடு பெரு நட்புடையனாயிருந்து வருதலைச் சிலர் கலைக்க எண்ணினார். அவர் எண்ணம் யாதும் பலியாதபடி இவர் எதிர்ந்து 1730 திருக்குறட் குமரேச வெண்பா.

காத்து எவரும் இனியராயிருந்துவரச் செய்தார். ஒருநாள் அம் மன்னரிருவரும் ஒன்றுகூடி உரையாடி மகிழ்ந்து ஒருங்கிருந்தார். நெடுநாளாகத் தான் கருதியிருந்ததை உறுதிபெற உணர்த்த அது தான் அமையமென்று இவர் அணுகி நின்றார். இவரது நிலையைக் கண்டு அவர் முகமலர்ந்து நோக்கி புன்னகைகொண்டு யாது வேண்டும் என்றார். "நீங்களிருவீரும் என்றும் இன்றுபோல் ஒன்று கூடி அன்பாயிருக்கவேண்டும்; கொள்வோர்கை

வாளினும் புல்லர்வாய்க் கோளே மிகவும் கொடியதாதலால் அதனைச் செவிக் கொள்ளலாகாது; ஒற்றுமையுடையவர் இவ்வுலக முழுவதையும் ஒருங்கே கைக்கொள்வர்" எனச் சுருங்கிய மொழியால் அவர் விரும்பிக்கொள்ளுமாறு விளக்கி யருளினார். அமையநோக்கித் தமக்கு வேண்டியதை இனிது சொல்லிய இவரது அருமையை நோக்கி யவ்விருவரும் உவகைமீக் கூர்ந்தார். குறிப்பறிந்து காலங்கருதி வெறுப்பிலவேண்டுப வேட்பச் சொல்லல் என்னும் உண்மைக்கு இவர் உரியவராய் நின்றார். இவர் நமது தேவர் நூலை வியந்து

ஐயாறு நூறும் அதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்
விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்

வன்றேவனாகி

அந்தா மரைமேல் அயன். என

அருளியுள்ளார்.

குறிப்பறிந்து அம்மன்னர்க்கு இவர்

உரைத்தபொழுது சொல்லிய கவி

இதனடியில் வருகின்றது. அதன்

பொருளை ஆய்ந்து காண்க.

நீயே, தண்புனற் காவிரிக் கிழவனை

யிவனே

முழுமுதல் தொலைந்த கோளி யாலத்துக்

கொழு நிழல் நெடுஞ்சினை வீழ்பொறுத்

தாங்குத்

தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்

செல்லாது

நல்லிசை முதுகுடி நடுக்கறத் தழீஇ

யிளைய தாயினும் கிளையரா வெறியும்

அருமரை யுருமிற் பொருநரைப்

பொறாஅச்

செருமாண் பஞ்சவரேறே; நீயே,
அறந்துஞ் சுறந்தைப் பொருநனை;
யிவனே,

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். • 1731 நெல்லு நீரு

மெல்லார்க்கும் எளியவென
வரைய சாந்தமும் திரைய முத்தமும்
இமிழ்குரான் முரச மூன்றுட னாளும்
தமிழ் கெழு கூடற் றண்கோல் வேந்தே
பாணிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்
றிருபெருந் தெய்வமு முடனின் றாஅங்கு
உருகெழு தோற்றமொ டுட்குவர விளங்கி
யின்னீ ராகலின் இனியவும் உளவோ?
இன்னுங் கேண்மினும் இசைவா ழியவே
ஒருவீர் ஒருவீர்க் காற்றுதிர்; இருவீரும்
உடனிலை திரியீ ராயின், இமிழ்திரைப்
பௌவ முடுத்தவிப் பயங்கெழு மாநிலங்
கையகப் படுவது பொய்யா காதே;

அதனால், நல்ல போலவும் நயவபோலவும்
தொல்லோர் சென்ற நெறிய போலவும்
காதல் நெஞ்சினும் மிடைபுகற்கு அலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது
இன்றே போல்கநும் புணர்ச்சி;
வென்றுவென் றடுகளத் துயர்கநும் வேலே;
கொடுவரிக் கோண்மாக்
குயின்ற சேண்விளங்கு தொடுபொறி
நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய வாக பிறர் குன்றுகெழு நாடே.
(புறம்) பலராமனும் கண்ணனும் போல்
துணையுரிமைகொண்டு வள வனும வழுதியும்
இணைபிரியாதிருக்கவேண்டுமெனவும்,
அதனால் எய்தும் பயனையும், அவர்
உவகையோடுணர்ந்து கொள்ளுமாறு அமைய
நோக்கி இவருரைத்துள்ள ஒண்மையை
இதில் ஊன்றி யுணர்க. நும் வேல் உயர்க;
பிறர் நாடு கெண்டையொடு கொடு
வரிபொறித்த குடுமியவாக எனக் கூட்டிக்

காண்க.

மாண்டமைந்தா ராய்ந்த
மதிவனப்பே வன்கண்மை
ஆண்டமைந்த கல்வியே
சொல்லாற்றல்—பூண்டமைந்த
217



வெண்பா.

காலமறிதல் கருதுங்காற் றூதுவர்க்கு
ஞாலமறிந்த புகழ்.

(எலாதி). வேந்து விரும்ப விதிமுறைதேர்ந்
தெவ்வுரையும் ஓர்ந்துரைத்த லேசீ ருணர்.
அரசன் குறிப்பறிந்து விருப்புறச்
சொல்லவேண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

697 என்றும் இதமே யிசைத்தேனோ

சாத்தனர்
குன்றுமொழி நீத்தார்
குமரேசா—நன்றாக
வேட்பன சொல்லி வினையில
வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.
(எ)

இ—ள்.

குமரேசா ! வேறொன்றையும் விரிக்காமல் அரசனுக்கு வேண்டியவற்றை மாத்திரம் என் சாத்தனர் விருப்புறச்சொன்னர் எனின், வேட்பனசொல்லி, எஞ்ஞான்றும் வினையில கேட்பினும் சொல்லாவிடல் என்க.

என்றும் இதமே இசைத்து என்றது வாணிகம் புரிந்த காலத்தும், கல்வி வல்லராய்ச் சிறந்து வேந்தரோடு சூழ்ந்திருந்தபொழு

தும், பயனும் நயனும் பொருந்தவே இவர் பகர்ந்து வந்தமை
கருதி என்க. பயன் குன்றியதும், பிறர்க்கு வருத்தத்தை விளைப்
பதுமாயசொற்களை யாண்டும் உரையாது ஒழுகினாரதலால் குன்று
மொழிநீத்தார் என்றும். நன்று ஆக என்றது கேட்பவர் நன்மை
யடையும் பொருட்டு இதமாகச் சொல்லி என்றவாறு.

இஃது அரசனிடம் சொல்வனவும் தவிர்வனவும் தொகுத் துணர்
த்துகின்றது.

வேட்பன என்றது அ ரசன் விரும்புவனவற்றை. இது வினை
யாலணைந்த பெயர். வினையில = காரியமில்லாத; அஃதாவது பய
னில்லாதவற்றை. கேட்பினும்

சொல்லாவிடல் = அரசன் கேட்டா
லும் சொல்லாதுவிடுக. உம்மை
சிறப்புணர்த்தி நின்றது. விடல்
என்னும் வியங்கோள் முற்று துணிவு
தோன்ற நின்றது.

70-ம் அதிகாரம் மன்னரைச்
சேர்ந்தொழுகல். 1733

வினையில்லன அரசன் கேட்பினும்
சொல்லாதே யென்றதனால் வினையுள்ளன
அவன் கேளாதிருப்பினும் சொல்லவேண்டும்
என்பதாயிற்று

வேந்தனுக்கு
விருப்பமானவற்றைச்சொல்லவேண்டும் என்ற
வுடன் தனக்கு நன்மை பயவாதனவற்றையும்
அவன் விரும்புவனாயின்
சொல்லிவிடவேண்டுமோ ? என்பாரை
நோக்கி இது சொல்லியதாகக் காண்க.

மேல், காரியமான வார்த்தையைக்

குறிப்பறிந்து அரசனிடம் கூறுக என்றார்; இதில், காரியமல்லதை அவன் கேட்பினும் சொல்லற்க என்கின்றார்.

அரசன் விரும்புவனவும் பயனுள்ளனவுமாய காரியங்களைக் கருத்துறச் சொல்லி, எக்காலத்தும் பயனிலவாயவற்றை அவன் கேட்டாலும் தூதர் சொல்லாது ஒழித்துவிடவேண்டும் என்பதாம்.

வேட்பன சொல்லி வினை முன் உரைத்துவிட்டுப் பின் கேட்பினுஞ் சொல்லாதே என்ற இதனால் மன்னரைச் சேர்ந்தொழுகுவார்க்கு அவரோடு உரையாடுவதில் உள்ள வுரிமையும் பொறுப்பும் இனிது புலனும்.

துரியோதனனுக்குச் சகுனி சொல்லியதுபோலவும், இராவணனுக்குச் சூர்ப்பணகை சொல்லியதுபோலவும் நன்மையொன்றுமின்றித் தாம் கண்டபடி

வேட்பனவே சொல்லின் வேந்தர்க்குத் தீமையைவிளை வித்தவராவ ராதலால் அவ்விதமானவற்றையாண்டும் எக்கா லத்தும் சொல்லலாகாதென்பார் வினையில எஞ்ஞான்றும் கேட்பினும் சொல்லாவிடல் என்றார்.

சீதையை நாடி இலங்கைபுகுந்தபொழுது அங்குப் பல நிகழ்ந் திருப்பவும் அவற்றையெல்லாம் விரிக்காமல் சுருக்கமாக

மா ண்பிறந்தமைந்த கற்பின் வா ணுதல் நின்பால் வைத்த

சேண்பிறந்தமைந்த காதல் கண்களிற் றெவிட்டித் தோக்

காண்பிறந்தமையா னீயே கண்ணகன் ஞாலந் தன்னுள்

ஆண்பிறந்தமைந்த செல்வமுண்டனை யாகியன்றே.

வெண்பா.

என்பதாதியர்க வேட்பன் சில் சொல்லி
வினையிலதள்ளி இராமனிடம் விளங்கிநின்ற
அநுமான்போல் அரசரிடம் தூதர் அமைந்
தொழுகவேண்டும் என்க.

இனி, வேற்றுவேந்தரிடைச் சென்று அவர்க்கு வேண்டுவன மாத்திரம் உரைத்துவிட்டு வினையில்லன அவர் வினவினும் சொல்லாது விடவேண்டும் எனத் தூதாமைவோடு அமைத்துக் காண வும இஃது அமைந்து நின்றது.

காரியமான வார்த்தைகளை மாத்திரம் கருதிச் சொல்லவேண் டுமேயன்றி, நாவடக்கமின்றி வாயில்வந்தபடி யெல்லாம் அரச னிடம் வார்த்தையாடலாகாதென்பது கருத்து.

அரசர்க்கு வேண்டிய காரியங்களையே அறிவுடையார் யாண் டும் விரும்பிச்

சொல்லுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாத்தனாரால் உணரப்படும்.

## கதை.

சாத்தனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டி நாட்டிலே சீத்தலையென்னும் ஊரிலே பிறந்தவர். வணிகர் குலத்தவர். இவர் பருவமடைந்தபின் மதுரையையடைந்து வாணிகம் புரிந்தார். இளமையிலேயே பல நூல்களையும் வழுவறப் பயின்று புலமை நிரம்பியிருந்தார். இருந்தும், தமது தொழில் முறையிலேயே அழுகுற இவர் பழகி வந்தார். மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் என இஞ்ஞாலம் போற்ற நின்றார். கூலம்என்பது நெல்லு,புல்லு,வரகு,தினை முதலிய தானிய வகைகளுக்கெல்லாம் உரிமையாயதோர் பொதுப் பெயர். அவ்வுணவுப்

பொருள்களையேவைத்து விலைசெய்து உதவி வந்தாராதலால் அப்பெரும் பெயரோடு இவர் விளங்கி நின்றார். இவரது தொழில் முறை,நெறி பிறழா வண்ணம் எவர்க்கும் உறுதி தருமாறு நிலைத்திருந்தது. காலையில் கடைவைத்து மறுநாள் மாலைக்குள் தாம் ஒரு பெரு நிதிக்குத் தலைவராய் நிலவவேண்டும் என்னும் பேராசையால் நடுவுநிலை சிறிதுமின்றிக் கொடுவிலை பகர்ந்துவந்த வடுவினையாளர் எல்லாரும் தம் தீமையை ஒழித்துய்யுமாறு இவர் உணர்வொளி கொடுத்தார். வஞ்சனையால் தொகுத்த

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். 1735 பொருள் வழிமுறையை முழுதழித்து வசையே தந்து, நஞ்செனவே நலிந்தென்றும் நலம்பயவா தொழியும் எனவும், பிறர் பொருளையும் தமபோற் பேணிச் செய்கலை மாபுநிலை திரியாத வணிகர்க்கு முறைமையாம் எனவும்,

இவர் போதித்துவந்தார். இவரது படி முறையைப் பின்பற்றி அனைவரும் நெறியுடையாரா யொழுகினர். எதையும் நுணுகி யுணர்ந்து தெளிவுபெற இனிது சொல்லவல்ல இவரது அறிவுடைமையை வியந்து சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்னும் பாண்டிய மன்னன் ஈண்டியகேண்மையுடை யனாய்த் தனக்கோர் உறுதித்துணைவராக இவரை வேண்டிக் கொண்டான். அவ் வேந்தன் வீரருள் வீரன். உண்மையோடு வண்மையு முடையவன்; ஆயினும வெஞ்சின மிக்கவன். சிறிது பிழை காணினும் எரியெனப் பெரிதழிவு செய்வான். தேர்ந்த அறிஞரும் அவனைச் சேர்ந்தொழுக அஞ்சுவர். அவ் ஆண்டகையின் நெஞ்சுக்கினியராய் இவரொருவரே சேர்ந்தொழுகி நின்றார். அமைய நேர்ந்துழியெல்லாம் அவனுக்குறுதியாயதை யோர்ந் துணர்த்தி

வந்தார்.

ஆரந் தாழ்ந்த அணிகிளர் மார்பிற்
ருடோய் தடக்கைத் தகைமாண் வழுதி
வல்லே மன்ற நீரபந் தளித்தல்
தேற்ருய் பெரும பொய்யே யென்றுங்
கா ய்சினந் தவிராது கடலூர் பெழுதரு
ஞாயி றனையைநின் பகைவர்க்குத்
திங்க ளனையை யெம்மனோர்க்கே.

என்று அவனை நோக்கி ஒருநாள் இப்பாவினை உரைத்தார். நல்லோர்க்குத் தண் மையும், தீயோர்க்கு வெம்மையுமுடையனுப் நின்று உறுபகை யொடுக்கி இவ்வுலகங் காக்கவேண்டும் எனனும் உண்மையை இனிதாக வுணர்ந்து கொள்ளுமாறு இதில் இவர் உணர்த்தி யுள்ள ஒண்மையை வியந்து நோக்கி உவந்துகொண்டான். இங்ஙனமே

அவன் வேட்பன சொல்லி, வினையில எஞ்ஞான்றுங் கேட் பினுஞ் சொல்லாது அமைச்சருள் மாட்சியுற்று நின்றார். இவரது நிலையினையறிந்து செங்குட்டுவன் என்னும் சோ ழன்னனும் இவ ரைக் காண விரும்பினன். இன்னுயிர்த் துணைவனாகிய தம் மன் 1136 திருக்குறட் குமரேச வெண்பா.

னனது ஆணைபெற்று அன்னவனிடம் அணுகினர். இவரது மன்னிய அறிவையும் இன்னுரை யுயர்வையும் அம்மன்னவன் கண்டு மகிழ்ச்சி மீக்கூர்ந்தான். கற்புத் தெய்வமாகிய கண்ணகி யின் அற்புதச் செயல்களை இவர் அறிவுறுத்தியதால் அவளுக்குப் பொற்புறு கோ யிலமைத்து நா ளும் அவன் அன்புடன் வழிபாடு செய்துவந்தா ன். சிலம்பு காரணமாக விளங்கி நின்ற அவள் சரி தமாகிய சிலப்ப

திகாரத்தை இவர் பாட விரும்பியிருந்தார். இருந் தும், குட்டுவனிடம் கூறுங்கால் துறவுபூண்டு உடனிருந்த அவன் தம்பியாகிய இளங்கோவடிகள், " அரசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றுவதூஉம், உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும், ஊழ் வினை யுருத்துவந்தூட்டு மென்பதூஉஞ், சூழ்வினைச் சிலம்பு கார ணமாகச் சிலப்பதிகாரமென்னும் பெயரால், நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் " எனக் கேட்டுக்கொண்டதனால் அதனை விடுத்து அதன் துணை நூலாகிய மணிமேகலையை இவர் அணி பெறப்பாடினார். இவரது மதி நலமும் பிற நலங்களும் அதில் உயிர்பெற்றொளிர்கின்றன. இவர் மீண்டு மது ரையை யடைந்து சங்கப்புலவர் களுடன் தங்கித் தமிழை ஆராய்ந்துவருங்கால் அங்கு அரங்கேற்றவரும் நூல்களிற் பிழைகள் காணப்படுமாயின் அவற் றை ஆக்கிய ஆசிரியர்கள் மீது குற்றங்கூறமாட்டார்; "

இப்பிழை களைக் கேட்டதும்படி நான் என்ன பிழைசெய்தேனோ ?'' என்று தம் தலையிலேயே தாக்கிக்கொள்வார். இக்கொள்கை, தமிழ் மீது இவர்வைத்திருந்த பேரன்பைக் காட்டுகின்றது. இக்காலத் துத் தமிழாதரவையும ஈண்டுச் சிறிது நோக்கிக்கொள்ளவேண் டும். இங்ஙனம் குத்திக்கொண்டே வந்ததனால் இவர் தலையில் சீயுற்றிருந்தது. அதனால் சீத்தலைச் சாத்தனார் எனச்சிறப்புற்று நின்றார். நின்றுவருங்கால் நமது அருமைத் தெய்வமாகிய திரு வள்ளுவப் பெருமான் தமது திருக்குறளை அங்கு அரங்கேற்றக் கொண்டுவந்தார். அதனையுற்றுநோக்கிப் புலவரனைவரும் புத் தமிர்தம்பெற்றார்போல் மொய்த்துத்துய்த்தார். இவர் கொண்ட வுவகைக்கு அளவேயில்லை. பிழை களைக் கண்டு முன்கொண்டிருந்த துன்பமெல்லாம் அதனைக்கண்டவுடனே விண்டிடப்பெற்றார்.

இதனை உடனிருந்து கண்ட மருத்துவன்தாமோதரனர் என்னும் புலவர் பெருமானர் ஒருபாடல் பாடினர்.

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். 1737

சிந்நீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(மருத்துவன்றமோதரனர்.)

பிறர்வருத்தமொழியாத இவரது திருந்திய பண்பும் பெருந் தன்மையும் இதனல் இனிது புலனதல்காண்க. ‘போய்யில்புலவன்’ என நம் வள்ளுவப்பெருமானை இவர் போற்றிப் புகழ்ந்

துள்ளார். வளங்கெழு கூல வாணிகன்
சாத்தன்; நன்னூற்
புலவன்; தண்டமிழாசான் சாத்தன்; எனப்
பண்டையோர்கள்
எல்லாரும் இவரைக் கொண்டாடினார்.
இவரது பாடல்கள் நற்றிணை, குறுந்தொகை
அகநானூறு முதலிய நூல்களினும் உள்ளன.
சேர அரசனிடத்தும், பாண்டியமன்
னனிடத்தும், பொருந்தியிருந்து அவர்க்கு
உறுதிகளை மாத்திரம் கருதியுரைத்து
வறிதுரையாதும் உரையாமல் ஒழுகிவந்த
இவரது அருமையை வியந்து அனைவரும்
புகழ்ந்தார். மன்னரைச் சேர்ந்தொழுகுவார்
அவரோடு உரையாடு முறைமைக்கு
இவரையே முதலுரிமையாக எடுத்து
மொழிந்துவந்தார். வேட்பன
சொல்லிவினையில எஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லாவிடல் என்னும்
உண்மையை உலகம் இவர்பாலுணர்ந்து

நின்றது.

நல்லனவே சோல்வார் நயந்தாலும் அல்லதனைச்

* சோல்லார்வேந் தோர்ந்ததுணை வர்.

தன் அரசனுக்கு உறுதியல்லதை யாண்டும் உரைக்கலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

698 ஏனை இளையனென எண்ணார்

பிடர்த்தலையார் கோனு வுவந்தார் குமரேசா—ஆனு

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற ஒளியோ டொழுகப் படும்.

(அ) 1738 திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா! இரும்பிடர்த்தலையார் என்பவர் கரிகால வளவனை இளையன் என இகழ்ந்து நோக்காமல் என் புகழ்ந்து போற்றினார் எனின், இளையர் இனமுறையர் என்று இகழார்; நின்றஒளியோடு ஒழுகப்படும் என்க.

இளையன் என எண்ணுதற்குரிய பருவத்தையும் உரிமையையும் உடையராயிருந்தும் அங்ஙனம் எண்ணாது ஒழுகினார் ஆகலால் என்னோ? எண்ணார் என வினாவோடு அவர் எண்ண நின்றார். தன் மருமகனைக் கருதாமல் வேறோர் அரசனாகவே கருதி அமைந்து ஒழுகி வந்தாராதலால் கோனை உவந்தார் என்றும். ஆன = நீங்காத; பருவமுதிராத என்றவாறு.

இது, மன்னரது நிலைமை நோக்காமல் அவர் தம் தலைமைநோக்கியே ஒழுகிவர வேண்டுமென்று உணர்த்துகின்றது.

இனமுறை யர் = இன்னமுறையினையுடையர்; என்றது மாமன் மைத்துனன் முதலிய வுறவின் முறைமையை.

இகழார் என்னும் முற்றை எச்சமாக்கி ஒழுகப்படும் என்பதோடு இணைத்து முடித்துக்கொள்க.

இகழார், ஒழுகப்படும் = இகழாது ஒழுகவேண்டும். இதில் படும் என்பது விதிப்பொருளதாய்த் துணிவுணர்த்தி நின்றது.

தம்மினும் பருவத்திற்சிறுமையும், பழகிவந்த உறவின் முறைமையும், உடைய ஒருவன் அதிகாரமுதலியவற்றால் எவ்வளவு பெரியவனாயிருப்பினும் 'இன்னார்தானே!' என்று எளிதாக உலகர் மதியாது கூறுவாராதலால் இளமையும் இனமுறைமையும் பழகிய முறையில் இகழ்தற்கேதுவாம் என உலகியல்புணர ஈண்டு எடுத்துக்காட்டினார்.

அரசனுக்கு உறுதியாயதையே
உரைக்கவேண்டும் எனமே
லுரைத்தார்; இதில், அவனது உயர்வையே
உணர்ந்து ஒழுக
வேண்டும் என்று உணர்த்தியருளினர்.
இவர் எமக்கு இளையர் என்றும்
இன்னமுறையினையுடையர்
என்றும் அரசனை இகழாது, அவரிடம்
நிலையாக அமைந்துள்ள
உயர்வோடு பொருந்த ஒழுக வேண்டும்
என்பதாம்.
70-ம் அதிகாரம் மன்னரைச்
சேர்ந்தொழுகல். 1739. அரசன்
உருவத்தில் மனிதனாயினும் காத்தற் கடவுள்
போல் நின்று இவ்வுலகத்தைப் போற்றிவரும்
ஏற்றமுடையவனாதலால்
அத் தன்மையையுணர்ந்து அதற்கு இயைய

மக்கள் ஒடுங்கி ஒழுக
வேண்டும் என்பார் நின்ற ஒளியோடு
ஒழுகப்படும் என்றார்.

திலகநீண்முடித் தேவரும் வேந்தரும்
உலக மாந்தர்கள் ஒப்பவென்
றேதுப
குலவுதார் மன்னர்க்கி யானிது
கூறுவன்
பலவு மிக்கனர் தேவரிற் பார்த்திவர்.
உறங்கு மாயினும் மன்னவன்
றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங்
காக்குமால்
இறங்கு கண்ணிமை யார்விழித்தே
யிருந்து
அறங்கள் வெளவ அதன்புறங்
காக்கலார்.

என்றதும் ஈண்டுச்
சிந்திக்கத்தக்கது. இதனால், அமரர்க்கும்
அரிய அரசரது ஒளியினுண்மை உணரலாகும்
எம் பெருமானை இளையன் என்று

கருதிப் பிரமனும், இறைவனை
உறவினனென்று எண்ணித் தக்கனும்
ஒழுகி இழிந்ததுபோல் இளமை உறவுகளை
நினைந்து அரசரிடம் தரமறியாது நடந்தால்
அதனால் அழிவே யடைவர் என்க. "
முந்தைநாள் நட்பை யெண்ணி முடுகி நீ
செலக்கூடாதால், எந்த நாளினும் பூபாலர்
யாவர்க்கும் நண்பால்லர்" என்பதுங்
காண்க..

மன்னரைத் தெய்வமாகவே எண்ணி
மக்கள் ஒழுகவேண்டுமே யன்றி
என்னவகையிலும் அவரைத் தம்மோடு
ஒத்தவராக வைத்து எண்ணலாகாதென்பது
கருத்து. இளையர் என்று கருதி அரசரை
அவமதிப்பவர் அழிவர் என்பது குறிப்பு.

அளையுறை பாம்பும் அரசும் நெருப்பும்
முழையுறை சீயமும் என்றிவை
நான்கும்
இளைய எளிய பயின்றன வென்
றெண்ணி

இகழின் இழுக்கந் தரும். என்றது ஆசாரக்கோவை.

பருவ வுருவங்களில் மிகச்சிறியவராயினும், உறவின் முறையினராயினும் அரசரை மிகப் பெரியாராகவே கருதி உணர்ந்தோர் ஒழுகுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரும்பிடர்த்தலையார்பால் உணரப்படும்.



கதை.

இரும்பிடர்த்தலையார் என்பவர் சோழ நாட்டிலே அழுந்தூர் என்னும் நகரிலே யிருந்தவர். மன்னர்க்கு மகட்கொடை நேர்தற்குரிய வேளிர் மரபினர். இவர் அரிய நூல்கள் பலவும் பயின்ற பெரிய புலவர்.

உலகியலுணர்வோடு உயர் குணங்களெல்லாம் ஒருங்கே நிறைந்தவர். அக்காலத்தில் உறையூரிலிருந்த இளஞ்சேட்சென்னி என்னும் சோழ மன்னனுக்கு இவருடன் பிறந்தவளாகிய வேண்மாள் என்பவளை மணம் புரிந்திருந்தது. அவளுடைய வயிற்றில் பிறந்த மகன்தான் பின்பு அரசர்பெருமானாய் நின்று திசைகள் தோறும் இசைகள் பரப்பிய கரிகால் வளவன் என்பவன். அவன் இளையனாயிருக்கும்பொழுது பகைவர் செய்த சதியால் தந்தை தாயரிருவரும் ஒருங்கே அழிந்துபோகத் தனியே எரியிடைத் தப்பி வருந்தியிருந்த அவனை இவர் அணைத்து ஆதரித்து வந்தார். அவன் பருவமெய்து முன்னரே இறைவனருளால் அரசனாயினன். அப்பொழுது இவரே அவனுக்கு அமைச்சராகி ஆட்சியை நடாத்தினர்.

பகைவர்கள் செய்த அல்லல் பலவற்றையும் நீக்கி அரசை நல்ல நிலையிலாக்கினார். இளையவனாயுள்ள அவனுக்குச் சிறந்த துணைவலியைச் சேர்த்து வைக்க விரும்பினார். மதுரையை யடைந்து அங்கு அரசுபுரிந்திருந்த பெரும்பெயர் வழுதி என்னும் பாண்டிய மன்னனை யடைந்து ஒரு பாடல் பாடினார். முன்னரே அம்மன்னனை உறவது கருதி உறவாக்கிக் கொண்டிருந்தாராதலால் இவர் வேண்டியபடியே அப்பாண்டியன் இணங்கி அவ் இளஞ்சோழனுக்கு ஆதரவு செய்துவந்தான். ஆழ்ந்த யோசனையோடு எதையும் எதிரறிந்து காக்கும் இவரது சதுரப் பாட்டை வியந்து மறுபுல மன்னரும் பெருமகிழ்ச்சி யடைந்தார். இத்தகைய சூழ்ச்சித்திற மிக்க இவர் அக்கரிகாலனை இளையவன் எனவும், மருமகன் எனவும் என்

ஞமல் அவனது பதவியின் பெருமையை நினைந்து தெய்வம் போலவே பாவித்துப் பணிந்து ஒழுகிவந்தார். தம்மைச் சேர்ந் தொழுகும் மந்திரியர் ஆறுவர் முதலிய யாவர்க்கும் இவரை முன் மாதிரியாக எடுத்துக் காட்டி அக்காலத்திலிருந்த மன்னர்களெல் லாரும் மொழிந்து வந்தனர். இவரது அமைச்சியல் மாட்சியை

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். 1741

யும், அரசனைப் பொருந்தியொழுகிய அமைதியையும் நினைந்து அனைவரும் புகழ்ந்தார். தன் மாமனாகிய இவரது துணைவலிகொண்டு தன் ஆணை எங்குஞ்செல்ல அவன் செங்கோல் செலுத்தினன்.

சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்

பிடர்த்தலைப் பேரானைப்
பெற்றுக்—கடைக்காற்
செயிராறு செங்கோல்
செலீஇயினுனில்லை
உயிருடையார் எய்தா வினை.
என்று இவரால் அவ். இளையவனெய்திய நிலைமையை நினைந்து பழமொழியாரும் வியந். தார். மன்னவரது மன்னிய தன்மையை மதித்துப் பின்னவரெ வரும் உன்னியொழுகுமாறு ஒளியோடு இவர் முன்னுற ஒழுகினமையை இன்னமும் பலர் எண்ணி யுவந்துள்ளார். இளையர் இனமுறையர் என்றிகழார், நின்ற ஒளியோடொழுகப்படும் என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.
காணநின்ற தெய்வமெனக் காவலனைப்
பேணினர்சீர்
பேணநின்ற ராவர் பெரிது.

அரசரைப் பெரியாராகவே கருதி என்றும் ஒழுகி வரவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

699 வள்ளல் வழுதிகொள மாண்புற்றும் என்மருதர்
கொள் ளாத நீத்தார் குமரேசா—உள்ளிக்
கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சியவர். (௯)

இ—ள்.

குமரேசா! வழுதிமன்னன் மிக மதித்துத் தழுவியிருந் தும் மருதனார் அவன் விரும்பாததை யாதும் செய்யாது வன் மேவி நின்றார் எனின், துளக்கு அற்ற காட்சியவர், கொளப்பட் டேம் என்று

எண்ணிக் கொள்ளாத செய்யா என்க.

மாண்புற்றும் என்றது பிறரெவரும் வணங்கும்படி மிக நன் குமதித்து அரசன் இவரை உவந்திருந்தமை கருதி என்க. தம் மன்னனுக்கு உவகை தாராததை ஒருபோதும் செய்யாமல் உணர் 1742

திருக்குறட் குமரேச வெண்பா.

வோடு இவர் ஒழுகி வந்தாராதலால் கொள்ளாத நீக்தார் என்றும். உள்ளி = பெரிதாக மதித்து.

இஃது அரசனுக்கு வெறுப்பாயதை யாண்டுஞ் செய்யற்க என்று கூறுகின்றது.
காட்சியவர் செய்யார் எனக்கருதிக்காண்க.
காட்சியே செய்யா மைக்குக்
காரணமாகுமாதலால் அதன் மாட்சிதோன்ற வுடைமை யாக மருவ வைத்தார். காட்சி

என்பதாஎண்டு உணர்ச்சியை. உளக்கண்ணால் காண்பது என்பதாம். கொளப்படுதல் அரச ரால் நன்கு மதித்துத் தமக்குத் துணைவாகஅணைத்துக் கொள்ளப் படுதல். கொள்ளாத என்றது அரசன் விரும்பிக் கொள்ளாத வினைகளை யென்றவாறு.

துளக்கு அற்ற காட்சி = அசைவற்ற அறிவு; என்றது என் றும் திரிபின்றி நிலைபெற்ற உணர்வினை.
இவ்வுணர்வுடையார் அரசாது இயல்பையும் தம் உரிமையையும் நன்கு தெளிவாதலால் அவர் வேண்டாதவற்றை யாண்டுந் தீண்டாது ஈண்டிய கேண்மையோடிசைந்திருப்பர். இக் காட்சியவரையே எவரினும் மாட்சியுடையாக மன்னர் மதித்துக் கொள்வர் என்க. பறை யன் மகனேனினுங் காட்சியுடையான், இறைவ னேனவுணரற் பாற்று; என்ற அருங்கலச் செப்பும் இங்கு

ஒருங்குணரத்தக்கது.

பிறப்பால் மனிதனாயினும் அரசனைத் தெய்வமென்றே கருதி பொழுகவேண்டும் என்று மேல் விதித்தார்; இதில், அவனுக்கு வெறுப்பான செயலை யாண்டும் செய்யலாகாதென்று விளக்கி அருளினர்.

நிலைபெற்ற அறிவினையுடையவர், அரசனால் நன்கு மதித்து யாம் கைக்கொள்ளப்பட்டேம் என்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார் என்பதாம்.

தனக்குத் துணைவராக அரசன் அனைத்துக் கொள்ளுமுன் பணிவுடையராய்க் குறிப்பறிந்து நடந்து, கொண்ட பின்பு அவனுக்கு விருப்பமில்லாதவற்றைச் செய்து வெறுக்கப்படுவார் அளவு இலா அறிவினரேயாவர் ஆதலால் அங்ஙனம் செய்யாரைத் துளக்க ற்ற காட்சியவர் என்றார்.

மன்னரைச் சேர்ந்தொழுகல். 1743

வேந்தனுக்கு வெறுப்பான காரியங்களை யாண்டுஞ் செய்ய லாகாதென்பது கருத்து.

தமக்கு அரசன் இனியனாயுள்ளான் என்றுகருதி அவனுக்கு விருப்பமில்லாதவற்றை அமைச்சர் ஆற்றலாகாது; ஆற்றின் அவனால் வெறுத்து அகற்றப்படுவரென்பது குறிப்பு.

கைவரும் வேந்தன் நமக்கென்று காதலித்த

செவ்வி தெரியா

துரையற்க—ஒவ்வொருகால்

எண்மைய னேனும் அரியன்

பெரிதம்மா

கண்ணிலன் உள் வெயர்ப்பினன்.

என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

தமக்குத் தலைமையான உரிமையை அரசன்

தந்தவைப்பினும் தம் நிலைமை திரிந்து அறிவுடையார் என்றும் அவனிடம் ஒழுகார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வு ண்மை மருதனார்பால் உணரப்படும்.

## கதை.

மருதனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே மாங்குடி என்னும் ஊரிலேயிருந்தவர். இவர் கலைகள் பலவுந் தெளிந்த காட்சியாளர், பெருந்தன் மை வாய்ந்தவர். சொல்வன்மையிற் சிறந்தவர். பிறந்த ஊரையும் இணைத்து மாங்குடி மருதனார் என்றே சிறப்புடன் அனைவரும் இவரை அழைத்து வந்தார். துணிவுந் தூய்மையும் மிகுந்து எவர்க்கும் இனியராய் இசைதிசை பரப்பி இவர் இனிது வீற்றிருந்தனைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பா ண்டிய மன்னன் கேள்வியுற்று

வ ரவழைத்துத் தன்னுடனிருந்து வருமாறு விரும்பி மொழிந்தான். இவரும் மதுரையடைந்தபின் அங்கிருந்த அமைச்சர்களுக்கும் புலவர்களுக்கும் தலைவராகி நிலவியிருந்தார். இவரது மதிநலத்தையும் தகுதியறிந்து நடக்கும் பெருமிதத்தையும் புகழ்ந்து அனைவரும் இவரைப் பின்பற்றிப் பேணி நின்றார். அரசரது உயர்வையும் அவர் உலகங்காக்கும் ஒண்மையையும் தன்மையையும் எவரும் உணருமாறு இவர் ஒழுகியுணர்த்தினர். அம்மன்னன் அருந்திற லோடு பெரும் புலமையுமுடையவனாதலால் இவரது பெருந்தன் 1744 திருக்குறட் குமரேச வெண்பா.
மையை நினைந்து மகிழ்ந்து மிகுந்த அன்பு செய்தான். உடம்புக்குக் கண்போலத்

தனக்கு இவரை அவன் உவந்துகொண்டு நின்றான். ஒருநாள் அவன் வெகுண்டு போருக் கெழுந்தபொழுது "பகைவரை யான் இன்று வென்றுகொள்ளேனாயின், என்னாடு புலவரால் பாடாது ஒழிக என்று வஞ்சினங் கூறுங்கால், "ஓங்கிய சிற ப்பின்உயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் தலைவனாக, உலகமொடு நிலைஇய பலர் பு கழ் சிறப்பிற், புலவர் பாடாது வரைக என் நில வரை" என்று பலருமறியக் கூறினான். வெகுளிக் காலத்தும இவர்மீது அவன் கொண்டிருந்த கருதிப் பாட்டை வியந்து அனைவரும் இவரது தகைமையைப் புகழ்ந்தார். இங்ஙனம் மிக நன்கு மதித்துத்தன்னை அம்மன்னன் கைக்கொண்டிருப்பினும் அவனது மெய்க்கொண்ட தன்மையை நினைந்து அவனைத் தெய்வமாகவே கருதி நிலையறிந்து நின்று தம் அமைச்சுரிமையை ஆற்றி நின்றார்.

" கைச்சுட்டிக் கட்டுரையார் கான்மேல்

எழுத்திடார்

மெய்ச்சுட்டி யில்லாரை யுள்ளாரோ டொப்புரையார்

கையில் எதுவும் கொடுப்ப இருந்தேலார்

ஐயமில் காட்சியவர்"

என்னும் மெய்யுரை இவரது செய்கையை நினைந்து தோன் றியதென்னும்படி அரசனிடம் இவர் அமர்ந்து செய்து வந்தார். இவர் சங்கஞ் சார்ந்து புலவர்களுடன் கூடித் தமிழை ஆராய்ந் திருந்த பொழுது நமது பெருந்தகை காணர் ந்த அருந்தமிர் தனைய திருக்குறளை நோக்கி அதன்பொருட் பெருக்கை வியந்து பெரு மகிழ்ச்சி கூர்ந்தார்.

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி

வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்

உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள

முருக்குமே

வள்ளுவர் வாய்மொழி மாண் பு.
என்று இவர் வாழ்த்

திப் போற்றினர். அரசனிடமும்
புலவரிட மும் உல கரிடமும் நடுவுநிலை
பிறழாது நின்று நெறிமுறை செய்துவந்த
இவரது
தெளிவுடைமையை அக்காலத்திருந்த
அனைவரும் அகமகிழ்ந்து
துதித்தார்.
கொளப்பட்டேமென்றெண்ணிக் கொள்ளாத
செய் யார் துளக்கற்ற காட்சியவர் என்னும்
மாட்சியை உலகம் இவர்
பால் உணர்ந்து நின்றது. மதுரைக் காஞ்சி
என்னும் ஓர் அரிய
70-ம் அதிகாரம் மன்னரைச்
சேர்ந்தொழுகல். 1745 நூலை இவர்
இயற்றியுள்ளார். தம் அரசன்பால் இவர் ெ

காண்டி ருந்த அன்பும், அவளது அருந்திறலும், இவரது பெரும் புலமையும் அதில் ஒருங்கிணைந்து பொலிந்து விளங்குகின்றன. இவரது துளக்கற்ற காட்சியை அக்காஞ்சியில் காண்க.

ஆர்ந்த தலைமை யமைந்ததேன வேந்துளத்தைத்
தேர்ந்துசெயார் சீரழிந்தார் தேர்.

அரசனுக்கு வெறுப்பாயதை யாதும் செய்யலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

---

700 அன்றறவென் றன்னியம்பி
காபதியோன் றாற்றினன்பின்
குன்றினன் என்னே
குமரேசா—என்றும்
பழைய மெனக்கருதிப் பண்பல்ல

செய்யுங்

கெழுதகைமை கேடு தரும்.

(ம)

இ—ள்.

குமரேசா! தான் மிகப்

பழகினவன் என்று கருதித் தன் அரசன்பால் அல்லதொன்றைச் செய்த அம்பிகாபதி என்பவன் அதனால் அழிவுற்றான் எனின், பழையம் எனக் கருதிப் பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை கேடு தரும் என்க.

அன்று என்றது ஆதித்த சோழன் அரசுபுரிந்த அக்காலத்தில் என்றவாறு. ஒன்று என்றது அரசகுமரியை விழைந்து செய்த அதனை. குழுவாக இங்ஙனங் கூசிக் கூறியது அதன் வசிகருதி யென்க. மன்னனை மிக்க உறவினன் என்று உன்னிய ஊற்றமே அதனைச் செய்தற்கு ஊக்கி நின்றதாதலால் உற வென்று உன்னி

ஆற்றினன் என்றும். உன்னல் = நினைத்தல்
கிளர்ந்தெழுதல். தன்னிலை குன்றி
அழிந்தான் ஆதலால் குன்றினான் என்றும்.
என்றும் என்றது தொன்றுதொட்டு
என்றவாறு, கருதல் தருதல் என்னும்
இருவினைக்கும் இசைவாக இஃதெண்
ணநின்றது

இஃது, அரசரை உறவினரென்று கருதி
அடாதன செய்யலாகாதென்று
கூறுகின்றது.

1746 திருக்குறட் குமரேச
வெண்பா.

பழையம் = நெடுநாட் பயின்று
வுறவினையுடையேம்; இது
பழமை என்னும் பண்படியாப் பிறந்தது.
ஒவ்வொருவனும்
தன்னைக் குறித்தபொழுதுஉயர்வாகவே
கருதிக் கொள்வானாதை

லால் பண்டியம் எனப் பன்மைதோன்ற வைத்தார். இது கெழு தகைமையின் வளமை தோன்ற நின்றது.

பண்பு அல்ல = தமக்கு இயல்பல்லாதன; என்றது தகாத செயல்களை. கருதாமற் செய்யின் அறியாமையாற் செய்தான் என்று கருதி அரசன் ஒருவேளை அருளி விடுப்பன்; அங்ஙனமின்றிக் கருதிச் செய்யின் அழிவுக்கே ஏதுவாகுமெனக் கருத் தஞ் செயலுங் காணநிறுத்தினர்.

கெழுதகைமை = உரிமை; அஃதாவது நட்பின் தன்மை. "முருகென மொழியுமாயிற், கெழுதகை கொல்;" என ஐங்குறு நூற்றினும், "கிள்ளி வளவனொடு கெழுதகை வேண்டி" என மணி மேகலையினும், இஃதுணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க.

மேல், தெளிவினையுடையார்
அரசனிடம் விளிவினையைச் செய்யார்
என்றார்; இதில், அது செய்வார் கெடுவார்
என்கின்றார்.

யாம் அரசனுக்கு மிகப்
பழைமையுடையேமென்று கருதித்
தமக்கியல்பல்லாத செயல்களைச் செய்வாராயின்
அவ்வுரிமை அவர்க்கு அழிவினைக்
கொடுத்துவிடும் என்பதாம்.

நெருப்பென நினைந்தொழுகவேண்டிய
அரசனிடம் உரிமை கருதி அளவுகடந்து
நெருங்கித் தூதர் முதலியோர் தகாத காரி
யங்களைச் செய்வாராயின் அவன்
வெறுத்தொறுப்ப விளிந்தழிவர் என்பார்
பண்பல்ல செய்யும் கெழுதகைமை கேடு தரும்
என்றார். வழிவழியாக அரசனிடம்
உரிமையோடு பழகி வந்திருப்பினும்
அக்கெழுதகைமையை எவ்வளவுக்கு
உபயோகித்துக் கொள்ள வேண்டுமோ அவ்

அளவுக்கு மிஞ்சிச் செய்யின் அது அழிவைத்
தந்துவிடுமாதலால் அதனை என்றும்
உணர்ந்துகொள்ளவேண்டும் என அடிகள்
உணர்த்தியருளிய ஒண்மையை இதில்
ஊன்றி யுணர்க.

அரசனைச் சேர்ந்தொழுகுவார்
அவன்பால் அன்பும் அச்ச
முங்கொண்டு அளவறிந்து நின்று, அவன்
விரும்பிய உயர்வுகளைத் 70-ம் அதிகாரம்
மன்னரைச் சேர்ந்தொழுகல். 1747

தாம் நுகர்ந்துகொள்ள விரும்பாமல்,
பிழையுறுவண்ணம் தம்மைப் பேணிக்காத்து,
அடங்கி ஒடுங்கி அமர்ந்திருந்து, குறிப்ப
றிந்து வேண்டியதை விருப்புறச் சொல்லி,
ஏதும் இகழாமல், இழிவினையை யாதுஞ்
செய்யாமல் இசைந்திருக்கவேண்டுமென
இதுவரை யுரைத்துவந்து இறுதியாக அவனை
உறவினனென்று கருதிப் பிழை

செய்வாராயின் அதனால்
அழிவேயடைவர் ... உறுதிபெற
அறுதியிட்டு இதில் உணர்த்தியருளுகின்றார்
அரசனிடம் நெடுநாட் பழகியிருந்தாலும்
ஒருநாள் ஏதேனும் ஒரு பிழை செய்வாராயின்
அவரது கிழமை பழமை கேண்மை
முதலிய எதையும் நோக்கியருளாமல்
உறுதியாக அவரை அவன் ஒறுத்தே விடுவன்
ஆதலால் அதனை உணர்ந்து ஒழுகவேண்டும்
என்றவாறு.

பழமை கடைப்பிடியார்
கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங்
கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே
யிறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரும் இல்லை யவர்க்கு.
என்றதும் அறிக.

உரிமை கருதி அரசரிடம் தகாத

செயலையாதும் செய்யலாகாதென்பது கருத்து.

தானுசரித்துவரு தெய்வமிது என்று
பொய்ச்சத்தியம் செயில்விடாது
தன்வீட்டில் ஏற்றிய விளக்கென்று
முத்தந்தனைக்கொடுத்தாலது சுடும்
ஆனாலு மேலவர்கள் மெத்தவுந் தனதென்றடாது
செய்தாற் கெடுதியாம்
யானைதான் மெத்தப் பழக்கமானாலுஞ்செயாது
செய்தாற் கொன்றிடும்
தீனையினிதென்று மீதுண்விரும்பினுற்
றேகபீடைகளே தரும்
சேகராச குறவென்ன ஏலாத காரியஞ்செய்தால்
மனம்பொறார் காண்; என்றதும்
ஈண்டெண்ணற்குரியது.

பழகினவன் என்று கருதிப் பழுதுபடும் வினைகளை அரசனிடம் செய்வார் அழிவே அடைவார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை அம்பிகாபதியால்

உணரப்படும்.

கதை.

அம்பிகாபதி என்பவன் கம்பருடைய அருமைத் திருமகன், அழகிலும் அறிவிலும் இவன் மிகவுயர்ந்தவன். கவிச்சக்கரவர்த்தி





யாகிய தன் தந்தையும் கருதிக் கேட்குமாறு கவிகள் பாடவல்லவன். அகப்பொருட் பொலிவோடு நகைச்சுவை ததும்பப் பாடுவதில் எவரினும் இவன் மிகச்சிறந்தவன். இவனது கவிகள் காதற் சுவையை மிகவுங் கனிந்து காட்டும். தாம் பாடிய இராமாயணத்துக்குக் கம்பர் இவனிடம் சாற்றுக்கவி வாங்கியுள்ளார். [illegible] உரிமைப் புலவரது அருமைப் புதல்வன் என்று கருதியும் [illegible]ருவுகளின் பெருமையை

வியந்தும், சோழமன்னன் இவனி டம் மிக வுறவுகொண்டிருந்தான். அதனால் இவன் தனியுரிமை கொண்டு எங்குந் தடையின்றிச் சென்று அங்கு இனிதமர்ந்திருந் தான். இங்ஙனம் இருந்துவருங்கால் அரசன் குமரியாகிய அமுத வல்லியை யவனைய விழைந்தான். அவளும் இவன்மீது காதல் மீக்கூர்ந்தாள் இருவர் காதலும் முறுகி வளர்ந்தது; தாம் கருதிய இன்பத்தை இருவரும் களவிற் கலந்து நுகர்ந்தார்.

மைவடிவக் குழலியர்தம் வதனத்தை யெவ்வா மதியே! மானே!
செய்வடிவைச் சிற்றிடையைத் திருநகையை
வேய்த்தோளைத் தெய்வமாக இவ்வடிவைப் படைத்தவடி
வெவ்வடிவோ யானறியே னுண்மையாகக்
கைபடியத் திருமகளைப் படைத்திவளைப் படைத்தனனற்
கமலத்தோனே. என்று அவள் அழகையும் நலனையும் வியந்து பலபாடல்கள் பாடி னான். அவளும் கல்வியறிவுடையவளாதலால் இவனது கவின்

சுவையோடு கவிச்சுவையையுங் கலந்து துய்த்து
மகிழ்ந்து வந் தாள். இங்ஙனம் அவளது
நுகர்ச்சியில் திளைத்து இவன் நாள் பல
கழித்தான. பின்பு தனக்குள்ள உரிமையின்
பெருமையை நினைந்து வெளிப்படையாகவும்
ஒழுகத்துணிந்தான். அதனால் அரசன்
ஐயுற்றான். அதனை நன்கு தெளியவிரும்பிக்
கம்பரையும்
இவனையும் தன்னுடனிருந்துண்ணுமாறு ஒருநாள் அரசன்
பணித்தான். அங்ஙனமே விருந்துண்ண அமர்ந்தபொழுது பணி
யாளர்களை நிறுத்திவிட்டுத் தன்மகளையே உணவுப் பொருள்களை
அரசன் கொணரும்படி செய்தான். அவள்
கொண்டுவந்தாள்.
பொற்றட்டையேந்தி ஒல்கி ஒசிந்து இடை
தைக்கண்ட இவன் உளம் பொறுதவனாய்

இவள அவள் வருவ

இட்டடி நோவ எடுத்தடி கோப்புளிக்க

வட்டில் சுமந்து மருங்கசைய

என்றான்;

70-ம் அதிகாரம் மன்னரைச் சேர்ந்தொழுகல். 1749 உடனே ஆ! குடியைக் கெடுத்தானே! என்று கம்பர்,

கோட்டிக்
கிழங்கோ கிழங்கென்று கூறுவாள்
நாவில்
வழங்கோசை வையம் பெறும்; என்று

அரசன் ஐயுறுதபடி பாவை வேறொரு வழியில் பாடி முடித்தார். நீர் பின்னடி பாடியது என்னே? யென்று மன்னன் கேட்டான். ஒரு மங்கை தெருவில் கொட்டிக் கிழங்கை விற்றுக்கொண்டு போகின்றாள் அவளது மொழிவழியே அழகைபறிந்து அம்பிகாபதி பாடினான்; அதனை ஒட்டி நானும் அவள் மொழியை வியந்து பாடினேன் என்றார். " அங்ஙனம் தெருவில் யாரேனும் போகின்

ளர்களா ? பார்" என்று அரசன் அமைச்சனை யேவினன். பாவம் ! கம்பர் என்ன செய்வார் ? உடனே அன்னையை நினைந்தார். அந்நாமகளும் அவ்வண்ணமே நடந்து காட்டினள். இந்தக் கம்ப ரது தெய் வத்தன்மையைச் சிறிது சிந்திக்கவேண்டும். இல்லம் வந்தபின்னர் தம் மகனுக்கு நல்ல புத்தி சொன்னர். சொல்லியும் என்ன ?

மங்கைமாரிடத் தின்பமே யின்ப மற்றவரோ

டிணங்குவாழ்வு றும் வாழ்க்கையே யியல்புறும் வாழ்க்கை

அங்கவர்ப்பெறு செல்வமே செல்வமற் றவர்கள்

கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர் வறுமை

என்று தனக்குள்ளேயே கருதிக்கொண்டு தன் கருத்தின்படியே நடந்தான். நடத்தை

நன்கு வெளிப்பட்டுவிட்டது. நயந்து பார்த்தும் முடியவில்லை ஆதலால் அரசன் மிகச் சினந்து இவனைக் கொன்று விடும்படி முடிவில் கூறி விடுத்தான். இதனைக் கேட்டுக் கம்பர் கலங்கினார். அவ்வமயம் இவன் அவரை நோக்கி ஒரு கவி கூறினான். அஃது இதனடியில் வருகின்றது.

இந்நாள் இதுவினையு
மென்றெழுத்துத் தானிருக்க
என்னாலே யாவதொன்று
மில்லையே—என்னாலே
வந்ததுகாண் ஐயா வரும்விதியை
யார்தடுப்பார்
எந்தைமக தேவர் செயலே.

( அம்பிகாபதி). இவனது துணிவும் தெளிவும் இதனால் இனிதுணரலாகும்.

என்ன இருந்தும் தன் தகாத செயலால் அழிந்தே தீர்ந்தான். தன் பழைமையை நினைந்து அரசனிடம் பழுதுசெய்ததனால் இவ் 1
750 திருக்குறட் குமரேச வெண்பா.

அழிவு வந்ததேயென்று அனைவரும் இவனை நினைந்து அன்று அழுதிரங்கினர். பழையம் எனக்கருதிப் பண்பு அல்ல செய்யுங் கெழுதகைமை கேடுதரும் என்னும் உண்மையை உலகங்காண இவன் உணர்த்தி நின்றான். இவன் பாடிய பாடல்கள் இவன் பெயரால் அம்பிகாபதி கோவை என்று வழங்கி வருகின்றது.

வேந்துறவேன் றெண்ணி
விளிவினையைச் செய்வார்பின்
சாந்துயர மேயடைவார் தான்.

வேந்துவிழை போகம் விழையார் இளையரினர்
ஆந்துணைவர் முன்னு ளறிந்தவரேன்—றேர்ந்தே
நிலைதிரிய என்றும் நெருங்கார் நிறைந்த
கலைதெளிந்த காட்சி யவர்.

கருதியில்லாத செயலை அரசரிடம் என்றும் செய்யலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின்
தொகைப்பொருள்.

அரசரை விட்டு நீங்காமலும் மிக நெருங்காமலும் அன்பும் அச்சமுங்கொண்டு அவரோடு அமைந்தொழுகவேண்டும். அவர்க்குரிய சிறந்த போகங்களைத் தாம் நுகர்ந்துகொள்ள விரும்பலாகாது. தம்மை அவர் விரும்பிப் பேணும்வண்ணம் பிழைகள் யாதுமின்றி மெய்ம்மையோடு தாம் பொருந்தி யிருக்கவேண்டும். அவ ருகிருக்கும்பொழு து வீணுரை யாடாமல் அடங்கியிருக்க வேண்டும். எதையும் உரைத்து விடுமாறு அவரை வருத்திக் கேளா மல் அவர் உரைத்ததைக் கேட்டே ஒதுங்கவேண்டும்.

தாம் கருதியதை அவர் குறிப்பறிந்து அமயநோக்கி விருப்புற உரைக்க வேண்டும். பயனில்லாத காரியங்களை அவரிடம் எவ்வகையிலும் சொல்லலாகாது. பருவத்தால் சிறியராயினும் அரசரை மிகப் பெரியராகவே பேணி யொழுகவேண்டும். தம்மை அவர் விரும் பியுள் ளார் என்றெண்ணி அவர்க்கு வெறுப்பாயதை யாதும் செய்யலாகாது. தாம் பழையம் என்று கருதி அவரிடம் தகாத தைச் செய்தால் அதனால் தமக்குக் கேடுண்டாகும்; ஆகலால் அஃதுணர்வண்ணம் அறிவோடு அவருடன் அமைச்சர் முதலாயி ஞேர் அமைக்தொழுகவேண்டும்.

எழவது மன்னரைச் சேர்ந்தொழுகல் முற்றிற்று.

---

# 71-ம் அதிகாரம்
# குறிப்பறிதல்.

அஃதாவது அரசனது கருத்தை அவன் உரையாமலே குறிப்பால் உணர்ந்துகொள்ளுதல். மன்னரைச் சேர்ந்தொழுகும் நன்னயமுடையார்க்கு இவ்வுணர்வு இன்றியமையாது வேண்டப்படுவதொன்றாகலான் அதன்பின் இது வைக்கப்பட்டது. மேல் குறிப்பறிந்து எனப் பொதுவாகச் சுருக்கி யுரைத்ததையே யீண்டுச் சிறப்பாக விரித்துணர்த்துகின்றார் என்க. அதிகா

முறைமையும் இதனானே விளங்கும்.

701 கூறாத முன்னே குறித்துணர்ந்த மாறுஇசிர்
கூறநின்றான் என்னே குமரேசா—வேறாகக்
கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி.

(க)

இ—ள்.

குமரேசா! உரையாமலே பிறர்கருத்தைக் குறிப்பா லுணர்ந்துகொண்ட அனுமானை உலகோர் ஏன் உவந்துகொண்டாடினர் எனின், கூறாமை நோக்கிக் குறிப்பு அறிவான், எஞ்ஞான்றும் மாறாநீர் வையக்கு அணி என்க.

யாரும் கூறாமலே 'தருமமும் தகவுமிவர்' என்பது முதலாக இராம இலக்குவாது

நிலைமை முழுவதையும் அவர்தம் உடல்
நிலையை நோக்கியே
உணர்ந்துகொண்டானாதலால் கூறுதமுன்னே
குறித்துணர்ந்த எனக்குறிக்க நின்றான்.
வேறாக என்றது பிற ரெவரும் பிறிதொரு
வகையாக என்றவாறு.

இது, குறிப்பறிவானது சிறப்புக்
கூறுகின்றது.

குறிப்பு = மனநிகழ்ச்சி. அஃதாவது தன்
அகத்தில் ஒருவன் நினைத்துள்ள காரியத்தை.
மாறாநீர் என்றது கடலை; வற்றாதநீர் என்றபடி.
அவ்வற்றுதல் எக்காலத்தும்
அதற்கில்லையாதலால் எஞ்ஞான்றும் மாறாநீர்
என நின்றது.

வைய்க்கு = உலகத்திற்கு;
மகரவொற்றை மீற்றிலுடைய சொற்கள்

உருபுகளோடு புணருங்கால் அத்துச்சாரியை பெற்று 1752 திருக்குறட் குமரேச வெண்பா.

வரும்; இதில் அது தொக்கு நின்றது. மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை என்ற இயல் விதியையும் ஈண்டு எண்ணிக் கொள்க.

ஒருவன் உள்ளக் கருத்தை அவன் உரையா முன்னரே அவன் உடமபை நோக்கி உணரவல்லவன் கடல் சூழ்ந்த இவ்வுலகுக்கு ஓர் அணிகலனாவான் என்பதாம்.

குறிப்பறிதலில் வல்லவனை இவ்வுலகம் பெறவில்லையாயின் ஒளியிழந்த கண்போல் பொலிவிழந்து நிற்குமாதலால் அதற்கு அவன் அணி என்றார். அணி = அழகு, ஆபரணம். கன்னியுடை யாளுக்கு அணிகலன் அலங்காரமாதல்போல் குறிப்பறிவான் இவ் வுலகிற்கு ஓர்

அலங்காரமாய் விளங்கிப்பிருப்பன் என்பதாம். இனி, கணி எனப்பிரித்துக் காணவும் இது பொருத்தமுற்று நின்றது. கணி = உறுவதை முன்னறிந்துரைப்போன்; இவனை நிமித்திகன் என்பர். குறிப்பறிவான் இவ்வுலகில் வருவதை எதிரறிந்துரைக்கும் நிமித்திகன்போல்வான் என்றவாறு; ஆயினும் அத்துணைப் பொருட் சிறப்பில்லை.

இவ்வுலகிலுள்ள மக்களெல்லாருள்ளும் குறிப்பறிந்துகொள்ளுமவனே மிக்க சிறப்பினையுடையவன் என்பது குறிப்பு.

தான் கருதியுள்ள காரியங்களைத் தன் வாய்திறந்து கூறு முன்னரே குறிப்பறிந்து செய்ய வல்லவனையே தனக்கு அமைச்சனாக அரசன் அமைத்துக் கொள்ளவேண்டும் என அதிகாரத்தோடு பொருந்த இதனை அமைத்து நோக்கிக் கொள்க. கூறுமை அரசன் தொழில்; நோக்கியறிதல்

அமைச்சனுக்குரியதென்க. உலகுக்கெல்லாம் பொதுவாகக் குறித்துள்ளதை அவர்க்கு மாத்திரம் சிறப்பாகக் கோடல் அமையுமோ? எனின் அவ்வுயர்ந்தார் மேல் வைப்பின் எங்கும் அது பரந்து செல்லும் ஆதலாலும் அரசுக்குரிய அங்க இயலே இங்கு நடைபெறுகின்றதாதலாலும் அமையுமென்று கொள்க.

மன்னரைச் சேர்ந்தொழுகுவார் அவர் ஒன்று உரைக்கு முன்னரே குறிப்பாலுணர்ந்துகொள்ளத் தக்க ஒண்மையுடைய ரையச் சிறந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல். 1753

குறிப்பறிதலில் சிறப்பாடுடையானை

இவ்வுலகோர் என்றும்

சிறப்பாக

பட்டது.

உவந்து கொண்டாடுவர் என்பது இதில் உணர்த்தப் இவ்வுண்மை அநுமான்பால் உணரப்படும்.

## கதை.

பேரறிவாளனாகிய அநுமானிடம் சொல்வன்மை, சூழ்ச்சி, துணிவு, தூய்மை, காலங்கருதல், இடங்கண்டெழுதல், வலியறிதல், எண்ணியாற்றல், இருந்தமைதல் முதலிய குணங்கள் பல நிறைந்திருந்தனவாயினும் அவற்றுளெல்லாம் குறிப்பறிதலில் இவன் மிகச் சிறப்புற்றிருந்தான். அவ் அறிவு இவனிடம் அமைந்திருந்த அமைவினை வியந்து அமரரும் புகழ்ந்தார். இராம இலக்குவர்களை முதன்முதல் இவன் கண்டபொழுது அவர் தங் கருத்தமைவுகளை யாதுங் கூறாமலே குறித்தறிந்து கொண்டான். அவர் நடந்து செல்லுஞ் செயலைநோக்கிச் சிந்தையிற் சிறிது

துயருடை யர் எனவும், அருமையான
உரிமைப் பொருளொன் றை இடை யே
இழந்துவிட்டுப் பலவிடங்களிலும் உழந்து
தேடுகின்ருர்கள் எனவும் இவன்
நாடியறிந்தான்.

தருமமுந் தகவுமிவர் தனமெனுந்
தகையரிவர்

கருமமும் பிறிதொர்பொருள் கருதியன் றதுகருதின்
அருமருந் தனையதிடை யழிவுவந் துளததனை

இருமருங் கினுநெடிது துருவுகின் றன
ரிவர்கள்.

என இவன் துருவியுணர்ந்து
மாறுருவுகொண்டு அவர் முன் மருவி நின்று
மேலுந் தெளியச் சிலமொழிகள் பகர்ந்தான்.
இவ னது அறிவின் திறத்தை இராமன் மிகவும்
நோக்கி
வியந்து இளையவனை,

மாணியாம் படிவமன்று மற்றிவன் வடி
வமைந்த

ஆணியிவ் வுலகுக் கெல்லா மென்னலாம் ஆற்றற் கேற்ற
சேனையர் பெருமை தன்னைச்சிக்கறத் தெளிந்தேன் பின்னர்க்
காணுதி மெய்ம்மையென்று தம்பிக்குக் கழறிக் கண்ணன்.

மற்றுமிவ் வுலகத்துள்ள முனிவர் வானவர்களாதிச்
சொற்றிற முடையார் மற்றைச் சுருதியின் றொகுதியாவும்
முற்றறிதரு மிம்மாணி மொழிக்கெதிர் முதல்வராய
பெற்றியர் மூவர்க்கேயும் போற்ற லரிது மன்னோ.

1754 திருக்குறட் குமரேச

வெண்பா.

என்று பலகூறிப் பெரிதும் புகழ்ந்தான். பின்னர் இவன் சீதை யைத்தேடி இலங்கையை யடைந்தபொழுது இரவு பதினைந்து நாழிகைக்குமேல் அந்நகரிடைப் புகுந்து பல இடங்களையுந் துருவிச் சென்று இந்திரசித்தினது மாளிகையை யடைந்தான். அதுபொழுது அழகிய மங்கையர் பலர் புடைசூழ்ந்துறங்க இடையே சிறந்த அணைமேல் அவன் அயர்ந்து துயின்றான். அவனது உருவையும் அழகையும் இவன் உற்று நோக்கினான்.

"வளையும் வாளெயிற் றரக்கனோ கணிச்சியான் மகனோ
அளையில் வாளரி யனையவன் யாவனோ அறியேன்
இளைய வீரனும் ஏந்தலு மிருவரும் பலநாள்
உளைய வுள்ளபோர் இவனொடு முளதென வுணர்ந்தான்.

இதில் ஏந்தல் என்றது இராமனை. பின்னோனை முன்வைத்து முன்னோனைப் பின் நிறுத்தியது பின் நிகழ்கின்றதை நோக்கி யென்க. அயர்ந்துறங்கும்பொழுதும் அவனது நிலையினை இவன் குறித்தறிந்த திறத்தையும் இக்கவியின் கருத்தமைவையும் கருத் தூன்றிக் காண்க. அதன்பின் மண்டோதரி மாளிகையை யடைந் தான். அங்கு

அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசியாதியர் மலர்க்காமன்
சரம்பெய் தூணிபோற் றளிரடி தாங்தொடச் சாமரை பணிமாறக்
கரும்பையுஞ்சுவை கைப்பித்த சொல்லியர் காமரங்கனியாழின்
நரம்பினின்னிசை செவிபுக நாசியிற் கற்பகவிரை நாற; என்றபடி
பொற்பமைந்த அமளிமேல் அழகொழுக அவள் அமர்ந்து தூங்கு
வதை இவன் புகுந்து கண்டான். சனகியோ? என முதலில்
மறுகி ஐயுற்றுப் பின் கருதி நோக்கி வேறு எனத் தெளிந்தான்.
அதுபொழுது அவளது உடலில் நிகழ்ந்த சில குறியீடுகளை யுய்த்
துணர்ந்து "சிறந்த இலக்கணங்களை யுடையளாயினும் மலர்க்
கருங்குழல் சோர்ந்து வாய் வெருவி உளறுகின்றாளாதலால் இவ
ளது கணவனும் இந்நகரமும் உரிமையும் ஒருங்கே அழிவதற்
குரியதொரு பெருங்கேடு நெருங்கியுள்ளதே" என்று இரங்கி நின்
றான். இவனது அருளியல்பை இங்கு நன்கு ஆய்ந்துகொள்க.

## 71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1755

இலக்கணங்களுஞ் சிலவுள என்னினும் எல்லைசென்
றிருக்கில்லா அலக்கணெய்துவ தணியதுண்டென்
றெடுத்தறைகுவ திவள்யாக்கை மலர்க்கருங்குழல்
சோர்ந்துவாய் வெரீஇச்சில மாற்றங்கள்

பறைகின்றான் உலக்குமிங்கிவன் கணவனு மழிவுமிவ்
வியனகர்க்குள தென்றான். இன்னணம் இவன்
குறிப்பறிந்த திறங்கள் பலவுள. விரிப்பிற்
பெருகுமாதலால் இவ்வளவில்
நிறுத்துகின்றேம். மேற் குறித்த வாற்றால்
இவனது அறிவும் அரும்புலத்தின் செறிவும்
பிறவும் இனிது புலனும். குறிப்பறியும் தன்
சிறப்புணர்வால் இவ்வுலகுக் கெல்லாம் ஓர்
உயிரணியாய் இவன் உயர்ந்து நின்றமையை
வியந்து உயர்ந்தோர் பலரும் உவந்து
புகழ்ந்துள்ளார். கூருமை நோக்கிக்
குறிப்பறிவான் எஞ்ஞான்றும் மாறாநீர்
வையக்கணி என்னும் பொய்யா மொழிக்கு
இவனே உரிமையாய் முன் பொருந்தி
யிருந்தான்.

ஓர்ந்து குறிப்பை யுணர்வான்
உடற்குயிர்போல்
ஆர்ந்த வுலகுக் கணி.

குறிப்பறிபவன் இவ்வுலகுக்கோர் சிறப்புடைமையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

702 உள்ளியதைத் தேர்ந்துரைத்த
ஒண்டருமர் வள்ளுவரோ
கொள்ளநின்றார் தேவாக்
குமரேசா—எள்ளளவும்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(உ)

இ—ள்.

குமரேசா! பிறர் நினைத்திருந்ததை உணர்ந்துரைத்த தருமரையும் வள்ளுவநாயனாரையும் தெய்வமாக ஏன் புகழ்ந்து கொண்டாடினார் எனின், அகத்தது ஐயப்படாது உணர்வானைத் தெய்வத்தோடு ஒப்பக் கொளல் என்க.

உள்ளியதை என்றது இயமன் முதலியோர் தம் உளத்தில் எண்ணியிருந்ததை. ஐயம் யாதும் இன்றித் தெளிந்து கூறினர் ஆதலால் தேர்ந்துரைத்த என்றும். ஒண்மையை வள்ளுவருக்கும் கூட்டுக. எள் அளவும் என்றது சிறிதும் என்றவாறு.

220



வெண்பா.

இது, குறிப்பறிதலில் வல்லவனைத் தெய்வமாகவே மதித்துப் போற்ற வேண்டுமென்று கூறுகின்றது.

ஐயப்படாது = சந்தேகமின்றி; தெளிவாக அளபெடை இசை நிறைத்து நின்றது.

என்றவாறு.

அகத்தது என்றது பிறர் மனத்தின்கண்

நிகழும் நிகழ்ச்சியை. இது
குறிப்புவினையாலணைந்த பெயர். அகம் =
மனம். சத்துவ முதலிய முக்குணங்களும்
அவைபற்றி நிகழ்வனவும் பலவாமாயி னும்,
அகத்தே நிகழும் ஒருமையின் உரிமையால்
அகத்தமெனநின்றது. அகத்தெழு
சுவையான் அகமெனப் படுமே என்றது
சயந்தம். ஒப்பக்கொளல் = சமமாகக் கொள்க. புறத்ததையுணரு
மியல்பினையுடைய மக்களுள் அகத்ததை யுணரவல்லான் ஒருவ
னுளனாயின் அவ் உணர்வின் உயர்வால் அவனைத் தேவருள் ஒரு
வனாகவே உணர்ந்துகொள்ளவேண்டும் என அடிகள் உணர்த்தி
யருளிய ஒண்மையை இதில் ஊன்றியுணர்க.

மேல், குறிப்பறிய வல்லவன் இவ்வுலகிலுள்ள எவர்க்கும் ஓர் அணியாயுள்ளான் என்றார்; இதில், அவனைத் தெய்வமாகவே கருதிப் போற்றவேண்டும் என்கின்றார்.

பிறர் மனத்தின்கண் நிகழும் நிகழ்ச்சிகளை ஐயுறவின்றித் தெளிவாக உணரவல்லானைத் தேவரோடு ஒப்ப நன்குமதித்துக் கொள்ளவேண்டும் என்பதாம்.

உருவினாலும், கண்ணிமைத்தல் கால்
லிய செயல்களானும், ஒவ்வானாயினும் பிறர்

நிலந்தோய்தல் முக
கருதியதை யுணருந்
தெய்வத்தன்மை யுடையனுதலால் குறிப்பறிய வல்லானைத் தெய்வத்தோடு ஒப்பக் கொளல் என்றார்.

கண்ணன் உள்ளியிருந்ததைச் சகதேவன் உணர்ந்துகொண்டதுபோல் பிறர் நினைத்ததனை ஐயுறாது அறியவல்லாரைத் தெய்வமாகவே கருதவேண்டும் என்றது அவர் தேசுடைமையால்

உலகமெய்துந் தெளிவு நோக்கி என்க.

முருகவிழ்க்கும் பசுந்துளப முடியோனே யன்றலகை முலைப்பாலுண்டு
மருதிடைச்சென் றுயர்சகடம் விழவுதைத்துப் பொதுவர்மனைவளர்ந்தமாலே
ஒருவருக்குந் தெரியாதின் குன்மாயை யானறிவேன் உண்மையாகத்
திருவுளத்துக் கருத்தெதுவோ அது எனக்குங் கருத்தென்றான் தெய்வ

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1757

மன்னன். இது வில்லி சொல்லியது.
சகதேவன் ஐயப்படாது அகத்ததுணர்ந்த
உண்மையும் அவனைத் தெய்வமென்று
கொண்ட உண்மையும் இதில் உளவாதல்
காண்க.

பிறர் உளக்கருத்தைத் துணிவாக உணர்ந்து சொல்வாரைத் தெய்வமாகவே உயர்ந்தோர் தெளிந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமர்பாலும், திருவள்ளுவர் கண்ணும் உணரப்படும்.

## கதை.

தருமர் பிறருடைய வுள்ளநிகழ்ச்சிகளைப் புறத்தில் நிகழுகின்ற இங்கிதங்களால் உறுதியாக வுணர்ந்துகொள்வதில் உயர்ந்திருந்தார். இவர் வனவாசஞ்செய்யுங்கால் தம்பியர் நால்வரும் நீர் வேட்கையால் தனித்தனி பிரிந்துபோய் ஓரிடத்தில் நச்சுநீர் குடித்து ஒருங்கே மாண்டார். இவர் அவர்களைத் தேடியலைந்து ஓர் ஆலமர நீழலில் மடிந்து கிடக்கக்கண்டார். கலங்கினார். அதன் அருகே ஒரு நீர்நிலையிருந்தது. அது

நஞ்சு தோய்ந்த தென்றும் அந்நீரைப் பருகியதால் அவர் அழிவுற்றூர் என்றும் குறிப்பால் அறிந்து இ ரங்கினர். பிரிவாற்றுமையால் உயிர்விடத் துணிந்து இவரும்போய் அந்நீரை இருகையாலும் வாரினர். துரி யோதனன் செய்த வஞ்சத்திலிருந்து இவரைப் பிழைப்பிக்கும் பொருட்டே அந்நச்சுப்பொய்கையை அறக்கடவுளாகிய இயமன் அமைத்துவைத்திருந்தானுதலால் அசரீரியாய் நின்று "தருமா! நீரைப் பருகாதே; நான் உறுதியாகக் கருதியுள்ளதைக் குறிப்பா லுணர்ந்து நீ உரைத்துவிடுவையாயின், இந் நஞ்சுநீர் நல்லநீராம்" என்று சொல்லினன். இவர், எடுத்தநீரைக் கீழே விடுத்துவிட்டு நீ உரைக்கவேண்டியதை உரை என்றூர். அவன் குறித்த வினு வும், குறிப்புணர்ந்து இவர் உரைத்த விடையும் அடியில் வரும் வில்லிபாடல்களால் இனிதுணாலாகும்.

சொல்லு நூல்களில் பெரியதேது ? அரிய மெய்ச் சுருதி
இல்லறத்தினுக் குரிய தேது ? எண்ணுடை யில்லாள்
மல்லன் மாலையின் மணமுளதேது ? வண்சாதி
நல்லமாதவமேது ? தங்குலம் புரி நடையே. (1) 1758
திருக்குறட் குமரேச வெண்பா.
முனிகுலந் தொழு கடவுள் யார் ? மொய்துழாய் முகுந்தன்
கனிமண ங்கமழ் குழலினர்க்கியற்கையாது ? உயர் நாண்
தனமிகுந்தவர்க்கேதாண் ? தகைபெறு தானம்
இனியதே திரு செவிக்கு ? இளங்குதலையரின் சொல். (2) நிற்பதேது
கொல் ? நீடிசையொன்றுமே

நிற்கும்
கற்பதேது கொல்? கசடறக்
கற்பதே கல்வி
அற்பமாவதே தீனத்தினும்? அயற்கரத்
தேற்றல்
சிற்பமாமிவை செப்பெனச் செப்பினன்
சிறுவன். (3) இங்ஙனம்
தன்னுள்ளத்திற் கருதியதை உறுதிபெற
இவர் உணர்ந்து உரைத்தமையை வியந்து
அத் தெய்வமகன் உருவுடன் தோன்றி
இவரை உவந்து தழுவி இறந்தவர்களையும்
எழுப்பித் தந்து இன்னருள் செய்து
சென்றான். குறிப்புணர்விற் சிறந்தவர்
தேவரென மதிப்புறுவர் என்பதை இவர்
அன்று உணர்த்தி நின்றார். இவரது
நுண்ணுணர்வின் மாட்சியை முனிவர் பலரும்
எண்ணிமகிழ்ந்தார்.

## கதை 2.

நமது வள்ளுவப்பெருமான் பிறரது அக நிலைகளை ஐயமுறாது அறிந்துகொள்ளு மெய்யறிவுடையராய் விளங்கியிருந்தார். ஒரு நாள் ஏலேலசிங்கரது இல்லஞ்செல்ல அதுபொழுது அவர் இறை வழிபாடு செய்துகொண்டிருந்தார். அடிகள் அவர் உடல் நிலையினை நோக்கினார். வட்டித் தொகை முதலிய எட்டிய பொருள்களில் உள்ளம் பட்டிமாடுபோல் ஓடியலைய இறையருளொன்றி யோக நிலையிலுள்ளார்போல் எண்ணும்படி அவர் நண்ணியிருத்தலை அடிகள் நுண்ணிதினுணர்ந்து புன்னகை செய்து நின்று அவர் எழுந்தவுடனே "செட்டியாரே வட்டி வந்ததா?" என்றார். தனது அகநிலையை ஐயுறாது உணர்ந்துகொண்டமையை வியந்து அடிகளது அடியில் விழுந்து பணிந்து அவர் அடியவராயினார். அக்காலத்தில்

திருவாலங்காட்டில் காளியின் செருக்கடக்கப் பாமர் திருநடனஞ் செய்புங்கால் சிதறிவிழுந்த காதணியைக் குனிந் தெடாமல் ஆடிவருங்காலானே அணைத்தெடுத்து மேல்நோக்கி நீட்டிச் செவியில் செவ்விதாக வைத்துச் சதியில் வழாது சதுரு டன் ஆடினர். அவ்வற்புதத்தை நினைந்துகொண்டு முனிவர் 71-ம் அதிகாரம்

குறிப்பறிதல். 1759

சிலர் நமது பெருமானிடம் வந்து அதனை வெளிப்படையாக வுரையாது நயமாக வினவினர். அதற்கு இவர்.

பூவில் அயனும் புரந்தானும் பூவுலகைத்
தாவி யளந்தோனுந் தாமிருக்க—நாவில்
இழைகக்கி நூல் நெருடும் ஏழை யறிவேனோ

குறைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து.
என்று அவர்தம் உள்ளக் கருத்தைக் குறிப்பாலுணர்ந்துரைத்தார். இதனைக் கேட்டவுடனே தாம் கருதிவந்ததை ஐயமுறாதறிந்துரைத்தாரே என்று அவர்களனைவரும் மகிழ்ந்து தெய்வமாகவே மதித்து இவரைப் போற்றிப் புகழ்ந்து சென்றார். ஐயப்படாஅது அகத்தது உணர்வானைத் தெய்வத்தோடு ஒப்பக் கொளல் என்று தாமுரைத்த மெய்மைக்கு இவரே ஓர் மெய்புருவாக விளங்கி நின்றார் என உலகம் உவந்து நின்றது.

உருவான் மகனேனினும்
உட்கருத்தை யோர்வான்
அருவான தெய்வமென லாம்.

குறிப்பறிய வல்லானைத் தெய்வமாகவே மதிக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

703 ஓர்ந்து குறிப்பறிந்த ஒண்கூட
லாரையேன்
கூர்ந்துகொண்டான் மன்னன்
குமரேசா—தேர்ந்து
குறிப்பிற் குறிப்புணர் வாரை
யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.
(௩)

இ—ள்.

குமரேசா! குறிப்பறிதலில் வல்ல கூடலூர் கிழாரை இரும்பொறை என்னும் அரசன் தனக்கு உறுதித் துணையாக உவந்துகொண்டான் எனின், குறிப்பின் குறிப்பு உணர்வாரை உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் என்க.

நேர்ந்த எதனையும் அதன் நிலை நோக்கி உண்மையை நிலை பெற உணர்ந்து உரைக்கும்

ஒண்மை யுடையாராயிருந்தாராதலால் ஓர்ந்து குறிப்பறிந்த ஒண்கூடலார் என்றும், மன்னன் கூர்ந்து 1760 திருக்குறட் குமரேச வெண்பா. கொண்டான் என்றது தன்னையடுத்திருந்த பொருள்களைவற்றி னும் மிகச் சிறப்பாகச் சேரலிரும்பொறை இவரை மதித்துக்கொண்டமைகருதி. தேர்ந்து = தெளிந்து. இது, உணர்தலின் உயர்வு தோன்ற நின்றது.

இது, கொடுத்தற்கரிய பொருள்களைக் கொடுத்தேனும் குறிப்பறிவாரைத் தனக்குத் துணை யாக அரசன் பேணிக்கொள்ள வேண்டுமென்று கூறுகின்றது.

குறிப்பின் = குறிப்பினால்; தங்கண் நிகழ்வது, பிறர்பாலுறு வது என்னும் இருவகைக் குறிப்புகளையும் இது கருத

நின்றது.

உறுப்பு என்றது கை கால் கண் முதலிய உடம்பிலுள்ள அங் கங்களை. அவற்றுள் எதனைக் கொடுத்தாயினும் குறிப்புணர்வாரை த் துணைக்கொள்ள வேண்டுமென்றது எய்தற்கரிய அவரது தெய் வத்தன்மையை எண்ணியென்க. இனி, அரசர்க்குப் புறத்துறுப் பாயுள்ள படை, குடி, கூழ் முதலியவற்றுள் எதையாவது ஒன் றனைக் கொடுத்துக் கொள்க எனவும் இது கொள்ள நின்றது.

கொளல் = கொள்க. இவ்வியங்கோள் முற்றுக்கு எற்ற எழுவாயை வருவித்துக் கொள்க.

மேல், குறிப்பறிய வல்லானைத் தெய்வமாக மதிக்கவேண்டு மென்றார்; இதில், தமக்குத் துணையாக எவ்வகையினும் அவனை அரசர் பேணிக் கொள்ளவேண்டும் என்கின்றார்.

தம் குறிப்பினுல் பிறர் குறிப்பறியுந் தன்மையாளரைத் தம் உறுப்புக்களுள் அவர் விருப்புற்றதொன்றனை க் கொடுத்தாயினும், தமக்குத் துணையாக அரசர் அவரைப் பேணிக் கொள்ள வேண்டு மென்பதாம்.

கொடுத்தற்கரியதைக் கொடுத்தேனும் குறிப்பறிவாரைத் துணைக்கொள்ளவேண்டும் என்பார் உறுப்பினுள் யாது கொடுத் தும் கொள்ல் என்றார். இங்ஙனம் கூறியது அக்கொள் முதலால் பின்பு எய்தும் தெள்ளிய ஊதியத்தின் சிறனைத் தேர்ந்து என்க. உம்மை சிறப்புணா நின்றது. யாதுங் கொடுத்துக் கொளல் எனவும் பாடம்.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல். 1761

குறிப்புணர்தற்குத் தன் உளக் குறிப்பும், பிறர் முகக் குறிப்பும் காரணமாகுமாதலால் பொதுவாகக்

ணர்வார் என்றார், தான்
உவகையுடையனாயின்
" நிவந்தினி தாகிய
கண்மலருடைமையும்
இனிதினியன்ற வுள்ள முடைமையும்
முனி வி னகன்ற முறுவனகை
யுடைமையும்
இருக்கையுஞ் சேறலுங் கானமும்
பிறவும்
ஒருங்குட னமைந்த குறிப்பிற்
றன்றே." என்றபடி கூடுமாதலால் இவ்
இயல்புகள் பிறனொருவனிடம் காணப்படுமா
யின் அவன் உவகையுற்றுள்ளான் என
உணர்ந்துகொள்வர்; இனி,
" இழுக்கொடு புணர்ந்த
இசைபொருளுடைமையும்
கூம்பிய வாயுங் கோடிய வுரையும்
ஒம்பாது விதிர்க்கு ங்

கைவகையுடைமையும்

ஆணங் காகிய வெருளியுடைமையும்

காரண மின்றி மெலிந்த முகமுடைமையும்

மெலிவொடு புணர்ந்த இடும்பையும் ''

ஒருவனிடம் மேவி யிருப்பின் அப் புறக்குறிப்புகளால் அவனை அழுக்காறுடையவன் என்று உணர்ந்துகொள்வர் என்க.

குறிப்பறியவல்ல அமைச்சர் உடற்குக் கண்போல் அரசர்க்கு உறுதியாவராதலால் அவரை எவ்வகையாயினும் பேணி அவர் மேவிக்கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

குறிப்பறியும் சிறப்புடையாரைத் தமக்கு உயிர்த் துணைவராக உணர்வுடையார் உவந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கூடலூர் கிழார்பால் உணரப்படும்.

கதை.

கூடலூர் கிழார் என்பவர் மலைநாட்டிலே கூடலூர் என்னும் ஊரிலிருந்தவர். இவர் தாளாண்மையோடு வாளாண்மையுமுடைய வேளாண் மரபினர். இயல் இசை நாடகம் என்னும் மூவகைத் தமிழும் இவர் முறையுறக் கற்றவர். மிக்க நுண்ணறிவாளர். கணிதநூற் புலமையில் இவர்க்கு நிகரானவர் அக்காலத்தில் எவ

1762 திருக்குறட் குமரேச

வெண்பா.

ரும் இலர் கோள்களின் நிலைகளைக் கூர்ந்தறிந்து இன்னகாலத்தில் இன்ன நிலையில் இன்னபடி இன்னது நிகழுமென்று முன்னதாகவே இவர் சொல்லிவிடுவாராயின் அதன்படியே அது நிகழ்ந்து தீரும். விருந்தினரை உபசரித்து அருந்தவரைப் பேணித் திருந்திய பண்போடு இல்லறத்தில் இவர் இருந்து வாழ்ந்தார். இவரது அருமை மனைவியும் குறிப்பறிந்து செய்யும் சிறப்பினையுடையவள்.

எவ்வகையிலும் இவர் இன்புறும் விதமே நாடி அவள் அன்பு செய்து வந்தாள். ஒருநாள் அவள் தயிரைக் கடைந்துகொண்டி

ருக்கும் பொழுது அடுப்பில் வைத்திருந்த புளிக்குழம்பு பதமுறக் கொதித்தது. உடனே விரைந்துசென்று புகை கண்களில் படுவதையுங்கவனியாமல் அது பதங்கெடாதபடி

தாளித்துவைத்தாள்.
அதனை இவர் இனிமையாயுள்ளதென உண்டதைக் கண்டு அவள் உவகை மீக்கொண்டாள். இவர் இல்லில் நிகழ்ந்த அவ் இனிய வுண்மையை ஒருதலைவி செய்ததாக ஒரு பாடலில் அமைத்து வைத்துள்ளார். அது, அருந்தமமிர்தம் போல் குறுந் தொகையின்கண் இருந்து நிகழ்கின்றது. உளத்தில் பொருத்திக் கொள்ளுமாறு அதனை யிங்குப் பொருந்த வைக்கின்றேம்.

முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங்கழாஅது உடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண் ணுதல்
முகனே. உணர் வொளி ததும்ப

இல்வாழ்க்கையில் இவர் இங்ஙனம் இருந்து

வந்
தார். இவரது மங்கலத்தை வியந்து அனைவரும் இவரைப் புகழ்ந்து போற்றி இவர்மொழிக்கபடியே நடந்து வந்தார். உடற் குறிப்பை நோக்கிப் பிறர் உளக்கருத்தை யோர்ந்து கொள்வதில் இவர் மிகத்
தேர்ந்தவர். கொடியவர்களும்

கூடலூரார்முன் வஞ்சகங் கூடா தென்பர்.
குறிப்பறிதலில் வல்ல இவரது
சிறப்பினையறிந்து யானைக்கட் சேய் மாந்தாஞ்
சேரலிரும்பொறை என்னும் சேரமன் னன்
இவரைத் தனக்கு அமைச்சராகவும் அருமைப்
புலவராகவும் 71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.
1763 அமைத்துக் கொண்டான். இவரும்
அம்மன்னனுக்கு எல்லா
வகையிலும் இனியராய் நின்று இசையுடன்
ஒழுகி வந்தார். எதையும் இவருடன்
ஆராய்ந்து கொண்டே அவன் அரசினை
ஆற்றிவந்தான். வருங்கால் ஒருநாளிரவு ஓர்

விண் மீன் கீழே வீழக் கண்டார்.
அக்குறிப்பால் தம் அரசனுக்கு இன்ன நாளில்
மரணமுண்டாமென்று இவர் அறிந்து
கவன்றார். வேண்டிய விதங்களைச் செய்தும்
அவன் மாண்டே தீர்ந்தான். பின்பு அவ
னது குணநலங்களை நினைந்து நினைந்து இவர்
மனமுருகித் துதித்தார். முன்னுற இவர்
குறிப்பறிந்து கூறியபடியே முடிவடைந்த
தைக்கண்டு அனைவரும் இவரை வியந்து
கொண்டாடினார். அதன் பின் வந்த
இளவரசனும் தனக்கு ஆருயிர்த்
துணைவராயிருந்து வரும்படி பேறுகள் பல
தந்து இவரைப் பேணிக் கொண்டான்.
குறிப்பிற் குறிப்புணர்வாரை உறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல் என்பதற்கு
உரிமையாக அன்று இவர் கொளப்பட்டு
நின்றார்.

ஆடியல் அழற்குட்டத்து
ஆரிருள் அரையிரவின்

முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக் குளத்துக் கயங்காயப்
பங்குனி யுயாமுவத்துத்
தலைநாண் மீன் நிலை திரிய
நிலைநாண்மீ னதனெதிர் எர்தாத்
• தொன்னாண் மீன் துறைபடியப்
பாசிச் செல்லா தூசி முன்னு
தளக்கர்த்திணை விளக்காகக்
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி

ஒருமீன் விழுந்தன்றால் விசும்பினானே
அதுகண்டு, யாமும் பிறரும் பல்வே
றிரவலர்
பறையிசை யருவி நன்னாட்டுப் பொருநன்
நோயில னாயின் நன்றுமற் றில்லென
அழிந்த நெஞ்ச மடியுளம் பரப்ப
அஞ்சினம் எழுநாள் வந்தன் றின்றே;
221

வெண்பா.

மைந்துடை யானை கைவைத் துறங்கவும்,

திண்பிணி முரசங் கண்கிழிந் துருளவும்,
காவல் வெண்குடை கால்பரிந் துலறவும்,
காலியுற் கலிமாக் கதியின்றி வைகவும்,
மேலோ ருலகம் எய்தின னாகலின்
ஒண்டொடி மகளிர்க்கு உறுதுணை யாகித்
தன்றுணை யாயம் மறந்தனன் ெ
கால்லோ ?
பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல்
நசைவர்க்கு
அளந்துகொடை அறியா ஈகை
மணிவரை யன்ன மாஅயோனே.
(புறம்)

ஆடு என்றது மேடவிராசியை. அழல் என்றது கார்த்திகை நட்சத்திரத்தை. குட்டம் என்றது அதன் காற்பாகத்தை. முடப் பனை என்றது அனுடத்தை. குளம், கயம்

என்பன புனர்பூசத்தை. ஆடு இயல்
அழற்குட்டம் = மேடவிராசிபொருந்திய
கார்த்திகை நாளின் முதற்காலில்.
பங்குனித்திங்கள் பதினைந்தாம நாள்
பாதியிரவில் ஒருவிண்மீன் வடகீழ்த்
திசையில் விழுந்தது என்பதும், அதனை
நோக்கி எழுநாட்களுள் அரசனுக்கு அழிவுண்
டாம் என இவர் தெளிந்ததும், அவ்வாறே
அது நிகழ்ந்ததும் பிறவும் இதில்
விளங்கியுள்ளமை காண்க. ஒரு மீன்
விழுந்தது அது கண்டு பொருநன்
நோயிலனாயின் நன்று என யாமும் பிறரும்
அஞ்சினம்; எழுநாள் இன்று வந்தது
மாயோன் மேலோருலகம் எய்தினன் எனக்
கூட்டிக் காண்க. இவரது குறிப்பறிவின்
திறத்தையும் பிறவற்றையும் இதில்
கூர்ந்துணர்ந்து கொள்க.

கோடிபல தந்தேனுங் கோள்க
குறிப்பினால்

நாடி யுணர்வானை நன்கு.

குறிப்பறிவானைத் துணைக் கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

704 கூறாமற் கண்ணன் குறித்ததுகொண் டேவிமன்

கூறுசெய்தான் என்னே குமரேசா—தேறிக்

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை

யுறுப்போ ரனையரால் வேறு.

(ச) 71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1765

இ—ள்.

குமரேசா! கண்ணன்

உரையாமலே குறிப்பித்த அக்

குறிப்பைக்கண்டு வீமன் வென்றான்;
சாசந்தன் என் அதனை உணராதொழிந்தான்
எனின், குறித்தது கூறுமைக் கொள்வா
ரோடு எனை உறுப்பால் ஓர் அனையர்;
அறிவால் வேறு என்க.

அறிவு என்பது இதில்
வருவிக்கப்பட்டது.

கண்ணன் கூறுமல் குறித்தது என்றது
தான் கருதியதை வாய்திறந்து சொல்லாமல்
ஒருதுரும்பையெடுத்து இருபிளவாகக்
கிழித்து அடியும் நுனியும் மாறிவிழும்படி
செய்துகாட்டிய அவ் அடையாளத்தை என்க.
அக்குறிப்பறிவினுலே தன் பகைவனைத்
துணித்து வென்றான் ஆதலால் குறித்தது
கொண்டே கூறுசெய்தான் என்றும்.
தேற்றத்தைக் குறிப்போடு கொள்கைக்குங்
கூட்டிக்கொள்க.

இது, குறிப்பறிவாரது உயர்வும்
அஃதில்லாதது இழிவும் கூறுகின்றது.

குறித்தது என்றது ஒருவன்
நெஞ்சத்தில் நினைத்ததனை. இது
சாதியொருமை. கூறாமை = சொல்லாமலே.
எனை வேறு = எனையர் வேறுஆவர்;
அர்விகுதி கொடாமல் எனைஎன
அஃறிணைவாய்பாட்டால் கூறியது குறித்தது
கொள்ளாத அவரது இழிவினைக்
குறித்தென்க.
. ஒத்தபிறப்பினராயினும்
குறிப்பறியவல்லாரே உயர்ந்தவர்;
அஃதில்லாதவர் இழிந்தவரேயாவர் என்பார்
குறித்தது கொள்வாரோடு எனை
உறுப்போரனையரால் வேறு என்றார்.
மேல், கொடுத்தற்கரியதைக்
கொடுத்தேனும் குறிப்பறிவாரைத்
துணைக்கொள்க என்றார்; இதில், அங்ஙனம்
அறியாதாரை விலங்கென்று கருதிவிலக
வேண்டும் என்கின்றார்.
ஒருவன் மனத்தில் கருதியுள்ளதை

அவன் கூறுமலே உணர்ந்து கொள்வாரோடு
ஏனை உணராதவர் உடலுறுப்புக்களால் ஒரு தி
ன்மையாக ஒப்பாராயினும் உணர்வால்
வேறாவர் என்பதாம். 1766
திருக்குறட் குமரேச வெண்பா.

உறுப்பு ஒத்திருப்பினும் உணர்வாகிய
உள்ளீடு இன்மையால் வேறு என்று அவரை
இழித்துவிலக்கினர்.

குறித்ததைக் வாய்திறந்து கூறினும்
தெரிந்துகொள்ளாத சிறந்த குருடுகளும்
உறுப்பொத்து மக்களைப்போலவே அலைந்து
திரிகின்றன அவைகட்கும்
குறிப்பறியவல்லார்க்கும் வேற்றுமை என்ன ?
என்பாரை நோக்கி இது கூறியதாகக் காண்க.

உருவத்தால் மனிதனேயாயினும்
குறிப்பறியாதவனை மிருக மாகவே
கருதவேண்டு மென்பது கருத்து. குறிப்பறிய
மாட்டாத ·வன் நன் மரம் என்றார்
ஔவையார்.

சிறந்த பிறப்பினை எய்தியிருப்பினும் குறிப்பறி வில்லாதவன் இழிக்கப்படுவனாதலால் அவ் அறிவினை அடைந்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

குறிப்பறிவார் இவ்வுலகில் மிகச் சிறப்படைவார்; அஃதில்லாதவர் எவ்வளவு சிறப்புடையாராயினும் இழிந்தழிவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீமன் கண்ணும், சராசந்தனிடமும் உணரப்படும்.

## கதை.

வீமன் வன்மை மயிலுயர்ந்திருந்ததுபோலவே குறிப்பறியுந் தன்மையிலும் சிறந்திருந்தான். பிறாது உள இயல்புகளை யினிதறிந்தொழுகும் இவனை இளமையிலேயே கொல்லக் கருதித் துரியோதனன் பல

வஞ்சகங்கள் செய்தும் முடியாமல் ஒருநாள் நதியில் கூரிய மழுக்களை நாட்டிவைத்து அங்கு நீராட வருமாறு அழைத்துச் சென்று தான் கருதியுள்ள இடத்தில் பாய்ந்து விளையாடும்படி அவன் உறுதிசெய்து வைக்கினான். இவன் மேலிருந்து உற்று நோக்கி அவ்விடத்தில் ஓர் வண்டு நின்று வருவதைக் கண்டுணர்ந்து தேறி வேறிடம் பாய்ந்து கரையேறிவந்தான். இக்கதைக் குறிப்பை

வேறொரு பகற்கழு நிரைத்து வீமனை

டாறுபாய்ந் திருவரும் ஆடும் வேலையில்

தேறலான் வஞ்சகந் தேறி வண்டினால்

ஏறினான் கடந்தரி யேறு போன்றுளான். என வில்லி 71-ம் அதிகாரம் குறிப்பறிதல். 1767

யார் குறித்துள்ளார். இங்ஙனம் குறிப்பறியுந் திறத்தில் இவன் சிறப்புற்று நிற்றலைத் தருமன் முதலியோர் அறிந்து பெரு மகிழ்வு கொண்டார். தன் பகைவனாகிய சராசந்தனை இவனைக் கொண்டே தொலைத்துவிட வேண்டுமென்று கண்ணன் எண்ணி இவனுடன் அவனுடைய நகரை யணுகிப் போரை மூட்டிவிட்டான். அவனும் மூண்டெழுந்தான். யாவராலும் வெல்லு தற்கரிய அவ் வீரனோடு இவனெதிர்ந்து மல்லமர் புரிந்தான். ஒருவரை ஒருவர் அடுமாறு கருதி இருவரும் நெடும்பொழு தாகக் கடும்போர் செய்தார். முடிவில் வீரவெறிகொண்டு அவ னுடலை இருபிளவாக இவன் பிளந்தெறிந்தான். எறிந்த பிளவு கள் இணைந் தெழுந்துகொள்ள மீளவும் போர் செய்ய அவன் முனைந்துவந்தான். இவன் வியந்து திகைத்துப் பின்னும் சினந்து செய்தான்.

செய்புந்தோறும் அவன் சேர்ந்து வருதலால் இவன் சிந்தை தளர்ந்தான். அவ்வமயம் கண்ணன் ஒரு துரும்பை எடுத்து இருபிளவாக்கித் தலைமாறி விழும்படி கீழே எறிந்தான். கண்ணன் கூறாமல் காட்டிய அக்குறிப்பை இவன் குறித்து நோக்கி விரைந்து பாய்ந்து அவனை இருகூறாகப் பிளந்து தலைகால் மாறி வேறாக விழுமாறு வீசியெறிந்தான். அவன் அவ்வளவோடு விளிந்து தொலைந்தான். " உடல் பிளந்தாலும் இணைமுற விழு மாயின் எழுந்து வருமாறு சிறந்த தவமுடையவன்; ஆகலால் பிள வுகள் அடிமாறி விழும்படி அமைத்துவிடுக" எனக் கண்ணன் அகத்தில் குறித்ததை அவன் கூறாமலே குறிப்பாலறிந்துகொண்டு இவன் வென்று விளங்கிய திறத்தை அனைவரும் வியந்து புகழ்ந் தார். அறியாமையால் அவன்

அழிந்துபோனான். குறித்தது
கூருமைக் கொள் வாரோடு எனை
உறப்போரனையரால் வேறு என்
னும் உண்மைக்கு இவ்இருவரும்
முறையே உரியவராயினர்.
மீளவும் மிருகதுவசனுற் றெழுந்த விதலையின்
விழுந்தமேவலனைத்
தாளொடு தாள்கள் வலியுறத் தன்பொற் றடக்கை
கயான் முடக்கறப்பிடித்து
வாளுகிர் வாளாற் கனகனைப் பிளந்த வண்டுழாய்
மணங்கமழ் மௌலிக்
கோளரி யெனவே பிளந்தெறிந் தண்டகோளமும்
பிளக்கநின்றார்த்தான்.
பிளந்தெறி பிளவு மீளவும் பொருந்திப் பிளிறுமா
மதகரி கிகர்ப்பக்
கிளர்ந்து வெஞ்சமரந் தொடங்கலுந் தனது
கேதனக்கேசரியனையான்
1768 திருக்குறட் குமரேச
வெண்பா.

வளர்ந்ததிண் புயத்தின் வலியினுன் முன்னே
மல்லமொழுமடங்காக வுளோந்திடமலேந்து வீழுமா
றுதைத்தா னேரிரண்டானதாலுடலம். சிறியக்
குரிசில் கீண்டபே ருடலேச் சென்னிதாள்
செவ்வையினிடாமல் மாறியிட்டிடு
சென்றுயிர்த்துணையாய் வந்தமாமாகதவடிவோன்
கூறியிட்டிடாயப் தறிப்பினுலுரைப்பக்
குறிப்பை யக் குறிப்பினுற் குறிந்து வேறிடப் புவியின்
மிசையெறிந்தனுல் வீமன் வல்லபத்தை
யாருரைப்பார் மேற்குறித்த கதையை இவை
குறித்து நிற்றல் காண்க.

உரையா தொருவன் உளக்குறிப்பை
யோரான்

மரமே மனிதனே மற்று.

குறிப்பறியாதவன் விலங்கேயாவன்
என்பது இதனுல் கூறப் பட்டது.

---

705 உற்ற விசய ருணர்ந்தார்

சுயோதனனேன்
குற்றமுற்றான் கண்டும்
குமரேசா—பெற்ற
குறிப்பிற் குறிப்புணரா வாயி
னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.
(ரு)

இ—ள்.

குமரேசா! விசயரிருவரும் நோக்கியவுடனே குறிப்பினை நனித்தறிந்து கொண்டார்; துரியோதனன் கண்டிருந்தும் கண்ணன் கருத்தினை ஏன் அறிந்துகொள்ளவில்லை எனின், குறிப்பின் குறிப்பு உணராவாயின், உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ? என்க.

விசயர் இருவர் என்றது தடமித்தன் புதல்வனையும், தருமன் தம்பியையும் என்க. பார்த்திருந்தும் குறிப்புணராமையால், துரி யோதனன் இழிவுற்றான் ஆதலால் கண்டும்

குற்றமுற்ருன் என்

ரும். உம்மை அவனுணராமையின் புன்மை தோன்ற நின்றது.

பெற்ற = அமைந்த.

இது, குறிப்பறியவில்லையாயின்

னில்லை என்று கூறுகின்றது.

கண்ணுடைமைபாற் பய

குறிப்பின் = குறிப்பினுல்; என்றது

புறத்தில் நிகழும் இங்கி

தங்களால் என்றவாறு குறித்துக் காணும்

காட்சியால் எனினு

மாம். இன் உருபு ஏதுப் பொருளது.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1769

கண் என்ன பயத்த ஓ = கண்கள் என்ன பயனைச் செய்வனவோ? யாதொரு

பயனும் இல்லை யென்பதாம். ஓகாரம் எதிர் மறைப் பொருளது. இழிவோடு இரக்கமுந் தோன்ற நின்றது.

குறிப்பினால் பிறர் குறிப்பை ஒருவன் உணரானாயின் அவன் உணர்வினால் பயனில்லை என்னாது கண் மேலேற்றி இங்ஙனம் உரைத்தது என்னையெனின்? அவ்வுணர்விற்குச் சிறந்த கருவி இது என்பது தெளிந்து கோடற்கென்க.

மேல், குறிப்பறியாதவனை மாடென்றே மதிக்கவேண்டும் என்றார்; இதில், அவன் கண்ணுடையனாயினும் குருடனாகவே அவனைக் கருதவேண்டும் என்கின்றார்.

குறிப்பினால் பிறர் மனக் கருத்தினை உணரமாட்டாரவாயின் ஒருவன் உறுப்புக்களுள் கண்கள் வேறு என்ன பயனைச் செய்வனவோ? என்பதாம்.

உலகப்பொருள்களைக் கண்டு களித்தலே

கண்பெற்ற பயன் என்று கருதிக் கழிக்கும் மக்களை நோக்கி மானிடங்காள்! அதன் பயன் அன்னதன்று; குறிப்புணர்ச்சியேயாம் எனவுணர்வு வர அடிகளுணர்த்தியருளிய ஒண்மையை இதில் ஊன்றியுணர்க.

கண்டவுடனே பிறர் கருத்தை உணர்ந்துகொள்ள வல்லவனையே தயக்கு உறுதித்துணைவனாக அரசர் உவந்துகொள்ளவேண்டும் என இயலோடு பொருந்த இதனை இணைத்து நோக்கிக் கொள்க.

அகத்திடைக் குறித்த காரிய மதனை யையுறு தவரவர் விழியால்
முகத்தினு லறிய வல்லவனாகி முகம் விழி இரண்டினு மன்றி
அகத்திடைத் தனக்கு நிகழ்ந்திடுங் குறிப்பால் அவரவர் அகக்குறிப்பறிந்து
மிகத்தெளிபவனைக் கரிமுத லுறுப்புள் விழைவன கொடுத்துங் கொள்

மைந்தா. என்பதுங் காண்க.

உடம்பின்கட் கண்போல் குறிப்பறிய வல்லார் இவ்வுலகின் கட் சிறப்படைவர் என்பதும், அஃதில்லார் விழிகண் குருடாய் இழிவடைவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை விசயர்பாலும், துரியோதனனிடமும் உணரப்படும்.



வெண்பா.

கதை.

விசயன் என்பவன் மத்திம தேயத்திலே எமமாபுரியிலே யிருந்து அரசுபுரிந்த தடமித்தன் என்னும் மன்னனுடைய புதல்வன். இவனது காலம்

முன்னுரை. அழகிலும்

இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கு
அறிவிலும் இவன் மிகச் சிறந்தவன்.
கணிதத்திலும் குதிரையேற்றத்திலும் இவன் கொண்டிருந்த திற
மையைக் குறித்து அக்காலத்திருந்த அரசர் பலரும் கொண்டாடி
நின்றார். புறத்தில் நிகழும் உறுப்பின் தொழில்களால் மக்கள்
உளத்தின் இயல்களை புறதியாகவுணர்ந்து கொள்வதில் இவன்
உயர்ந்திருந்தான். நுழைபுலனோடு விழுமிய குணங்கள் பலவுமு
டையனாய் இவன் விளங்கி வருங்கால் ஒருநாள் தன் நகரினருகே
யிருந்த பூஞ்சோலையுட் புகுந்தலாவினான். அங்கு முன்னதாகவே
ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவகன் வந்து உருவங்கரந்து
தனியே தங்கியிருந்தான். அவனை இவன் கண்டான். வேற்று
வடிவங்கொண்டு அவன் வீற்றிருத்தலை நோக்கி " இவன்
வேந்தனுடைய மகன்; அரிய கலைகள் பலவும் பயின்றவன்;
ஒரு
தன்

உரிமையை யெய்துதற்குரிய பருவ வரவை நோக்கி
உருவந்திரிந்துள்ளான் " என அவனது உண்மை

இங்ஙனம்

யியல்களை
நுண்மையோடு நுனித்தறிந்து மாங்கனி ஒன்றை அவன் எய்தி
வீழ்த்துமாறு ஒரு செய்தியை யியற்றி வில்லாண்மையில் விளங்கி
நிற்றலையுந் தெளிந்து இராமனோ? என்று புகழ்ந்து அழைத்துக்
கொண்டுபோய்த் தன் தந்தையிடங் காட்டி அவன் வாயி
லாகச் சிலைத்தொழிலைக்

இவன் நிலவி நின்றான்.

கற்றுத்தேறி நிலைத்த அன்புடையனாய்

குறிப்பிற் குறிப்புணர்ந்து கொண்ட

இவனது சிறப்பினை வியந்து சீவகனும் மகிழ்ந்தான். தன்
காட்சியால் பிறர் கருத்தினைக் குறித்தறிந்துகொள்ளலே ஒருவன்
கண்பெற்றதற்குப் பயன் என்பதை உலகம்அறிய இவன் அன்று
உணர்த்தி நின்றான். உணர்வினுண்மையையும் அருளமைதி முத
லிய வுயர் குணங்களையுமதித்துத் திருத்தக்க தேவர் இவனைப்
புண்ணியநம்பி புகழ்மெய்யன் என்று புகழ்ந்திருக்கின்றார். இவ
னது சரிதம் சீவகசிந்தாமணியில் குறிக்கப்பட்டுள்ளது.

## 71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

விண்டார்த் தேய்க்கும் வெம்பரிமான்றேர் விசயன் என்று
உண்டா நின்றான் தன்புகழூழி யுலகேத்த
வண்டார் சோலை வார்மணம் நாறப்புகுகின்றான்
கண்டான் சேர்ந்தான் காளையைக் கல்விக்கடலானே. (1)

வன்சிலை கொண்டவாறும் வார்கணை தொடுத்தவாறும்
கண்கணை வைத்தவாறுங் கற்செய்தோ விருந்தவாறும்
திண்சரம் விட்டவாறும் சென்றகோல் போர்த்தவாறும்
கண்டெலாம் வியந்துநோக்கி வில்லுடைக் கடவுளென்றான். (2)

மாமரமேழும் எய்த வாங்குவிற் றடக்கை வல்வில்
இராமனை வல்லனென்ப திசையலாற்

கண்டதில்லை

உராமனம் இவன்கணின்றி யுவக்குமா

செய்வமென்று

குராமலர்க் காவினீங்கிக் கோயிலே

கொண்டுபுக்கான். (3)

சீவகனைக் கண்டு அவன் நிலைமையைக்

குறிப்பாலுணர்ந்து விசயன்

கைக்கொண்டுபோன வுண்மையை இதில்

கருதிக்காண்க.

## கதை 2.

துரியோதனன் கண்ணனைத் தனக்குப்

படைத்துணையாகக் கொள்ளக்கருதித்

துவாரகையை யடைந்தான். அவன் வரவினை

யறிந்து தடைசெய்யாமல் அவனைத்

தன்னிடம் விட்டுவிடும்படி காவலாளரிடம்

கட்டளை செய்துவிட்டு உறங்குபவன்போல்

கண்ணன் அணைமேல் அமர்ந்து கிடந்தான்.

அவன் அவ்வாறேவந்து அருகணைந்து

நோக்கினன். உறங்குகின்றார் என்று
நினைந்து கொண்டு தலைப்பக்கத்திலிருந்த ஒரு
தவிசில் தங்கியிருந்தான். அவ்வமயம்
அருச்சுனனும் அவனைத் துணைக்கொள்ள
விரும்பி அங்குவந்து சேர்ந்தான்.
முன்னதாகவே வந்து அங்கு மன்னி
யிருக்கும் மன்னனையும் கண்ணனையுங் கண்டு
கருத்தறிந்து கொண்டு காலருகே நின்றான்.
இவனது நிலையினையறிந்தவுடனே கள்ளம்
புரிந்திருந்த கண்ணன் மெள்ளவிழித்து '
வருக வருக' என்றான். இவன் மிக விநயமாக
' அண்ணா முன்னமேயே வந்திருக்கின்றார்கள்
' என்று வாய்மொழி தந்தான். ஆ!
என்னை உடனே எழுப்பக்கூடாதா? என்று
எழுந்து தழுவி அவனிடம் மிகுந்த
அன்புசெய்தான். குறிப்புணராமையால்
அதனை மெய்

என்று நினைத்து அவன் மிக மகிழ்ந்துகொண்டான். அதன் பின் நீவிர் இருவிரும் வந்தவாறு என்னை ? என்று அவன் விந்தை யோடு வினவினன். வந்ததை அவன் முந்தவுரைத்தான். ஐயோ! முதலில் வந்த நீங்கள் என்னை யெழுப்பியிருந்தால் நன்றாயிருந்திருக்கும்; விழித்தவுடனே முதலில் விசயனைக்கண்டேன் ஆதலால் அவனுக்கே யான் துணைவனாகவேண்டும். பலராமர் முதலாக என் மரபிலுள்ள அனைவரையும் உங்கட்குத் துணையாகத் தருகின்றேன் ; எனச்சொல்லிவிட்டு விசயனை நோக்கி யான் ஒரு ஆயுதமும் எடுத்து அமர் செய்யமாட்டேன் ; ஆதலால் நான் உனக்குத் துணையாக வந்ததனால் பயன் என்னையென்று இவன் உள மறிய அவன்

களவாக உரைத்தான். அதற்கு இவன்,

செருமலி யாழியங்கைச் செழுஞ்சுடர் நின்மெறன் தேரில்
பொருபரி தூண்டின் இந்தப் பூதலத் தாசமொன்றே
வெருவரும் இயக்கர் விண்ணோர் விஞ்சையர் எனினுமென்கை
வரிசிலை குழையவாங்கி மணித்தலை துமிப்பன் என்றான்.

இதனைக் கேட்டுக் கண்ணன் புன்னகை செய்துகொண்டு இருவரையும் நன்னயஞ்செய்து அனுப்பித் தான் நாடியதைச் செய்தான். கண்ணன் செயலையும் கருத்தையும் சிறிதும் தெரியாமல் துரியோதனன் வறிதேபோக, விசயன் கருதியதை யெய்திக் களித்துச் சென்றான். கண்ணிருந்தும் குறிப்பறியாமையால் தந்தைபோலவே கண்ணில்லாதவனாயினன் என்று அங்கு நண்ணி

யிருக்தவரெல்லாரும் அவனை நகைத்து நின்ரா. குறிப்பிற் குறிப்
புணர்வாரே உறுப்புக்களுள் கண்பெற்ற பயனையுற்றவராவர், அல்
லாதவர் பயனற்றவரே யென்பதை
மேற்குறித்தவர்பால் உலகம்
இருவகையினும் நன்கு உணர்ந்து நின்றது.

கூர்ந்து குறிப்பறிந்து கோள்ளான் குருடனென
ஓர்ந்துகோள நின்ருன் உவந்து.

குறிப்பறியாதவர் குருடரேயாவர் என்பது இதனுல் கூறப்
பட்டது.

---

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.
1773

706 வாசுகியார் கொங்கணரின் வன்மமவர்
தன்முகத்தால்

கூசாதேன் கண்டார்
குமரேசா—ஆசில்

அடுத்தது காட்டும் பளிங்குபோ
னெஞ்சங்

கடுத்தது காட்டு முகம்.
(க)

இ—ள்.

குமரேசா! கொங்கணரின்
மனக்கடுப்பை அவர் முகத் தால் என
வாசுகியார் கண்டுகொண்டார் எனின்,
அடுத்தது காட் டும் பளிங்குபோல், நெஞ்சம்
கடுத்தது முகம் காட்டும் என்க.

ஆர்விருத்தி
அவரது மேன்மை தோன்ற நின்றது.
வன்மம் = சினம், பகை. முனிவர் அகத்தில்
கொண்டதை ஐயப்படாமல் தெளிந்து
துணிந்துரைத்தாராதலால் கூசாது கண்டார்

என்றும். ஆசில் = விரைவில். இஃது
அடுத்ததுக்கு அடையாம்; ஆசு இல்
எனப்பிரித்துப் பெயரெச்சமாகக்
கொண்டால் பளிங்குக்கு அடை யாம் என்க.

இது, குறிப்பையறிதற்கு முகம்
கருவியாமென்று கூறுகின்றது. முகம்
பளிங்குபோல் காட்டும் எனக் கூட்டிக் காண்க.

அடுத்தது என்றது
அடுத்தபொருளினது நிறத்தையென்க. வினை
யாலணைந்த இஃது இங்கே
ஆகுபெயராயமைந்து நின்றது.

பளிங்கு என்பது வெண்மையும்
ஒளியுமுள்ள ஒருவகைக் கல். கடுத்தது
என்பது கடுகட்டு, கடுங்கால்
என்பனபோல இங்கே மிக்கது என்னும்
பொருளில் வந்தது. அஃதாவது மனத்தில்
மிகுந்ததனை; வெகுளி உவகை உறவு பகை
முதலியவற்றுள் எது நெஞ்சத்தில்
கிளர்ந்தெழுந்ததோ அது முகத்தில்

தோன்றி விடும் ஆதலால் நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும் என்றார்.

குறிப்பறிகலே ஒருவன் கண்பெற்றதற்குப் பயனும் என்று மேல் உணர்த்தினர்; அங்ஙனம் அறிதற்கு முகம் இனியதோர் கருவியாம் என இதில் அருளுகின்றார்.

தன்னையடுத்த பொருள்களின் வண்ணத்தைத் தானேகொண்டு காட்டும் பளிங்குபோல ஒருவன் மனத்தில் மிக்கதனை அவன் முகமேகொண்டு காட்டும் என்பதாம்.



காண்டற்குக் கருவியாய் நிற்கும் முகம், காட்டும் என்றது குறிப்புரையின் இயலமைதி கருதி யென்க. முகத்தை நோக்கி ஒருவன் அகத்தை அறியலாம் என்பது கருத்து.

ஒருவன் முக னுரைக்கும் உண்ணின்ற வேட்கை என்றது நான்மணிக்கடிகை.

பிறாது உள்ள நிகழ்ச்சிகளை யுய்த்துநோக்கி உணர்ந்து கோடலே கண்பெற்றதன் பயனும் என்று மேல் உணர்த்தியதைக் கேட்டவுடனே புறத்தில் புலப்படும் பொருள்களைத்தானே கண் காணும்; அகத்தில் நிகழ்வதைக் காண்டல் அதற்கு எவ்வாறு இயலும்? என ஒருவன் வினவ அவனை நோக்கி அங்ஙனம் காண்டற்குத்தகுதியாயதோர் கருவி இஃதுஎன இது காட்டியதென்க.

அகம் கொண்டுள்ளதை முகங்கொண்டு காட்டும் என்பதை யுணர்த்தற்குப் பளிங்கை யீண்டு உவமை காட்டியது என்னை யெனின்? தன்னையடுத்த பொருளின் நிறத்தைத் தான் கவர்ந்து காட்டும் அதன் தன்மை கருதி என்க.

" பளிங்குபுறத் தெறிந்த பவளப் பாவையின்,

இளங் கொடி தோன்றுமால் இளங்கோமுன்''
என மணிமேகலையினும், ' பளிக்கறைப்
பவளப்பாவை பரிசெனத் திகழுஞ் சாயல் '
எனச் சிந்தாமணியினும், ' பளிங்கெனச்
சேர்ந் துழிச் சேர்ந்துழி நிற த்தைச்
சேர்தலான்'' என இராமாயணத்தி னும்
தன்னை அடுத்தநின் வண்ணத்தைப்
பளிங்குகொண்டு காட் டும் என்னும் உண்மை
உரைக்கப்பட்டுள்ளமை காண்க.

புறத்திலுள்ள தன் நிறத்தைத்
தன்னுட்கொண்டு பளிங்கு
நிற்றல்போல் அகம் பொதிந்த இயல்பை
முகம் பொருந்தி நிற்கும் என்றதனால் இது
தொழிலுவமை என்க. காண்டற்குக் கருவி
யாய் நிற்கும் அதன் உறுதி தோன்றக்
காட்டும் என்றார்.

> நாற்ற முரைக்கு மலருண்மை கூறிய
> மாற்ற முரைக்கும் வினைநலந்

னாக்கின்

அகம்பொதிந்த தீமை மனமுரைக்கு

முன்னம்

முகம்போல முன்னுரைப்பதில்;

என்பதுங் காண்க.

குறிப்பறிதற்கு முகம் இனிய

கருவியாகுமாதலால் அதன்

வாயிலாக அதனை அறிந்துகொள்க என்பது

குறிப்பு.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1775

ஒருவன் அகத்தின்

இயல்பை அறிவுடையார் அவன் முகத்

தாலறிந்துகொள்வர் என்பது இதில்

உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை

வாசுகியார்பால் உணரப்படும்.

கதை.

வாசுகியார் என்பவர் நமது வள்ளுவப் பெருமானுடைய அருமைத் திருமனைவியார். இவருடைய தந்தையார் பெயர் மார்க்கசகாயன் என்பர். கற்பிலும் பொற்பிலும் இவர் ஒப்புயர் வற்றவர். பேரறிவோடு பேரருளுமுடையவர். எளிய வுணவுகளையும் அமிழ்தெனச் சுவைபெறச் செய்யும் எழில்மிகு தொழிலினர். குறித்ததைக் கூறுமுன்னரே குறிப்பறிந்துகொள்ளுந் திறத்தில் இவர் மிகச் சிறப்புற்று நின்றவர். அடிசிற் கினியாள்; அன்புடையாள்; படிசொற்கடவாத பாவை; எனத்தேவர் மன முருகிச் சொல்ல இவர் மதிப்புற்று நின்றவர்.

கொழுநன் உண்டபின் தானுகர் கொள்கையும்

விழிதுயின்றபின் துஞ்சலும் மென்றுயில்

எழுதன் முன்னம் எழுதலு

மேயன்றோ
பழுதில் கற்புடைப் பாவையர்
செய்கையே. (1)
இல்லறத்திற்கியைவன ஈட்டுவார்
. ,

அல்லசெய்தே வறிதின் அழித்திடார்
புல்லு காதலர் ஆயுள் பொலிபுற
மல்ல லோங்கணி மஞ்சள் அணிவ
ரால். (2)
மேவு காதலர் உள்ளம் விழைந்தன
ஏவு முன்னர்க் குறிப்பி னியற்றுவார்
தாவி லன்பர் தமையலர் தூற்றிடும்
பூவை யன்னவர் புன்முகம்
நோக்கிலார். (3)
தாதை தன்னினும் தன்னையர்
தம்மினும்
மாதர் மென்மொழி மைந்தர்கள்
தம்மினும்

கோதில் கற்புடை யார்தங்
கொழுநர்பாற்
காதல் கூர்ந்து களிமகிழ் வெய்துவார்.
(4)
கொழுநன் சொற்கடவாதுறை
கொள்கையே
வழுவி னல்லறம் வான்றவமாற்றுதல்
தொழுது தெய்வம் பராய் மலர்
தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக்
கென்பவே. (5) 1776
திருக்குறட் குமரேச வெண்பா.

எவரும் விழைபிய குணங் கட்கெல்லாம் இவரோர் அழகிய சான்றாய் அமைந்து நின்றார். யாவரும் போற்ற நம் தேவரோடமர்ந்து இவர் இல்லறம் புரிந்து வருங்கால் கொங்கணர் என்னும் சித்தர் ஒருநாள் அங்கு பிச்சைக்கு வந்தார்.

அவ்வமயம் தம் கணவர் பணியில் இவர் கருத்தூன்றி நின்றாராகலால் சிறிது காலந்தாழ்த்தப்பின்பு பணி கொண்டுவந்தார். விரைவில் வரவில்லையே என்று சித்தர் சித்தந்திரிந்து சினந்து விழித்தார். அவர் அகத்தின் இயல்பை அவர் முகத்தாலுணர்ந்துகொண்டு அம்மையார் நகைத்து நின்று கொக்கென்றே எண்ணிக்கொதிக்கின்றாய் இங்குனது பக்கம் பலியாது பார் ! என்றார். இவர் குறித்துக் கூறிய மொழிகள் குறட்பாவின் உருக்கொண்டு நிற்றலையும், தன் சித்தின் வலியால் முன்னர் ஒரு கொக்கை விழித்தெரித்திருந்தவுண்மை அதில் குறிப்பித்திருத்தலையும் அறிந்து அவர் குலை நடுக்கங்கொண்டு இவரது அறிவின் திறத்தை வியந்து அடிபணிந்து சென்றார். முனிவர் உள்ளங் கடுத்ததை அவர் முகத்தாலறிந்துகொண்ட இவர் தெள்ளிய

திறனை வியந்து அனைவரும் இவரைத் தெய்வமென்றே புகழ்ந் தார். அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம் என்று தம் கணவர் காட்டிய வுண்மையை இவரே நேரில் அன்று கண்டு காட்டினார்.

கொக்கென்றோ எண்ணிக்
கொதிக்கின்றாய் இங்குனது
பக்கம் பலியாது
பாவொன்றாள்—மிக்குயர்ந்த
மாதவனும் நாணி வணங்கினான்
நெஞ்சறிந்த
மாதவளென் றோர்ந்தான் மனம்.

மேற்குறித்த வுண்மையை இது குறித்து நிற்றல் காண்க:

உண்ணாடி யுண்மை யுணர வுறுமுகமே
கண்ணாடி யாய்நிற்குங் காண்.
அகத்தினியல்பை முகத்தாலறியலாம்

என்பது இதனுள் கூறப்பட்டது.

---

707

பண்டுளத்தின் பான்மை பதுமுகன்முன் மன்முகத்தாற்
கொண்டுணர்ந்தான் என்னே குமரேசா— கண்ட
முகத்தின் முதுக்குறைந்த துண்டோ
காயினுந் தான்முந் துறும்.

வுவப்பினுங்

(எ)

71-ம் அதிகாரம் குறிப்பறிதல். 177

7

இ—ள்.

குமரேசா! பிறர் கருதி நின்றதை முகம்நோக்கிப் பதுமுகன் என் முந்துற உணர்ந்துகொண்டான் எனின், 'முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ? உவப்பினும், காயினும் தான் முந்துறும்

என்க. ஓகாரம் எதிர்மறையாய் இல்லை என்பதை யுணர்த்தி நின்றது.

அரசர் கருதியதை உரைசெய்யுமுன்னரே அவர் முகநோக்கிக் குறிப்பால் அறிந்துகொண்டானாதலால் மன் முகத்தால் பதுமுகன் முன்உணர்ந்தான் என்றும். முதுக்குறைவுடையதாய் முந்துறுவதாயினும் காணுவழி முகம் காட்டாதாதலால் கண்ட என்றும்.

இது, குறிப்பறிதலில் முகத்தினது சிறப்புடைமை கூறுகின்றது.

முகத்தின் = முகம்போல. இன் உருபு ஒப்புப்பொருளது. எல்லைப்பொருள் கொள்ளின் மிக்கது இல்லையாயினும் ஒப்பது உண்டு எனப்பட்டு அதன் உயர்வு குன்றும் என்க.

முதுக்குறைந்தது = முதிர்ந்த அறிவினையுடையது. முதுக், குறைவு என்பது

ஒருமொழியாய் நின்று பேரறிவினை யுணர்த்தி வரும். சிறியபருவத்தே பெரிய அறிவினையுடையாள் என்புழிச் சிறுமுதுக்குறைவி எனக் கொங்குவேளார் கூறியுள்ளமை காண்க. முதுக்குறை முதுமொழி எடுத்துக்காட்டி என்றது மணிமேகலை.

முதுக்குறைந்தனளே
முதுக்குறைந்தனளே
மலையனொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந்தனளே

என்றது குறிஞ்சிப் பாட்டு. உவத்தல் = மகிழ்தல். காய்தல் = சினத்தல்.

தான் முந்துறும் என்றது அம்முகமே முற்பட்டு நின்று உணர்த்தும் என்றவாறு.

மேல், அகத்தின் இயல்பை முகம் உணர்த்திவிடும் என்றார்; இதில்,

உணர்வுடையதாக அதனை யுணர்ந்துகொள்க என்கின்றார். 1778 திருக்குறட் குமரேச வெண்பா.

உயிர் ஒருவனை உவந்தாலும் சினந்தாலும் முகம் முன்னதாக நின்று அவற்றின் உண்மையை உணர்த்திவிடும் ஆதலால் அம் முகம்போலச் சிறந்த அறிவினையுடையது வேறு இல்லை என்பதாம்.

உயிர்க்கும் உறையுளாயுள்ள உடலுறுப்புக்களுள் அஃதுற்ற தன்மையை உடனேகொண்டு புறத்தில் முந்தி உணர்த்தவல்லது முகமேயாகலான் குறிப்பறிய வல்லார் தமக்கு உற்றதுணையாக அதன் சிறப்பை உணர்ந்துகொள்ளவேண்டும் என்றவாறு.

மக்கள் உள்ளக் கருத்தை முகங்காட்டும் என்று மேலுரைத் ததை யுணர்ந்து அதற்கு உணர்வுண்டா ? என்பாரை நோக்கி

இஃதுரைத்ததாகக் காண்க. மூன்றாம் என்றது முதுக்குறைவு உண்டு என்பதற்கு ஏது வாசகமாக நின்றது.

தன் அகத்திலுள்ள நலந்தீங்குகள் ஒருவன் முகத்தின் மூலம் வெளிப்பட்டுவிடும் என்ற இதனால் தூயவன் அல்லது தீயவன் என்று ஒருவனைத் தெளிந்து கோடற்கு அவன் முகமே சிறந்த கருவி என்பதாயிற்று.

வண்டுளா றலங்கலாய் வஞ்சர் வாண்முகம்

கண்டபோர் பொழுதினிற் றெரியு ங் கைதவம்

உண்டெனி னஃதவர்க் கொளிக்க வொண்ணுமோ

விண்டவர் பலபகன் மருவி வீழ்வரோ. (1)

உள்ளத்தி னுள் ளதை யுரையின் முந்துற

மெள்ளத்தம் முகங்களே விளம்பு

மாகலால்

கள்ளத்தின் விளைவெலாம் கருத்திலா இருட்

பள்ளத்தி னன்றியே வெளியிற் பல்குமோ. (2). இவை இராமனிடம் அனுமான் கூறியன. மக்கள் நிலைமைகளைக் குறிப்பாலறிந்துகொள்ளற்கு அவர்தம் முகங்களே முந்துறு கருவியாம் என்பது இவற்றுள்ளு முடிந்து நிற்றல்காண்க.

உணர்வுடையார் பிறர் உளக்கருத்தை அவர் முகநோக்கி முந்துற வுணர்ந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது : இவ்வுண்மை பதுமுகன்பால் உணரப்படும்.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1779

கதை.

பதுமுகன் என்பவன் ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவக னுடைய அருமைத் தோழன். அவனுக்கு அன்பனாகவும் அமைச்சனாகவும் இவன் அமர்ந்திருந்தான். இவன் வணிகர் மரபினன். இவனுடைய தந்தைபெயர் தனபாலன். மரகதம் நீலம் தாள முதலிய மணிகளின் இயல்புகளை வழுவறத் தெளிவதில இவன் மிகவுஞ் சிறந்தவன். அரசன் குறித்ததை அவன் கூறுமுன்னமே குறிப்பறிந்து செய்து எவரும் விரும்பிப் போற்றுமாறு பேரறி வுடையனாயிவன் விள ங்கி யிருந் தான். கட்டியங்காரன் என்னுங் கொ டியவன் குறித்தாற்றிய கொடுமைகள் யாதும் தன் மன்ன னிடங் கூறு ாவண்ண ம இவன் குறிக்கொண்டு காத்துவந்தான். அ ங்ஙனம் வ ந ங்கால் காந் தருவதத்தை யென்னும் பே ரழகியை இசையில் வென்று சீவகன் தனக்கு உரிமையாக்கிக் கொண் டான். அதனல்

அவன் பொறுமைகொண்டு இவனதுரிமை மன்னனைப் பொருகழிக்கும்படி. கருதி அருகிலுள்ள மறுபுல மன்னர்களை நோக்கினன். அவன் கருத்தையும் அங்குக் குழுமியிருந்த மன்னர் நிலையையும் அவர் முகங்களால் குறித்துணர்ந்துகொண்டு சில குறிப்புரைகளை இவன் திறப்படக் கூறினன். அங்ஙனங் கூறுங்கால் சாமம் பேதம் தானம் தண்டம் என்னும் நால்வகை உபாயங்களுந் தோன்ற இவன் நாடியுரைத்த நயத்தைத் திருத் தக்கதேவர் மிக வியந்து பாடியுள்ளார். அப்பாடல்கள் அடியில் வருவன.

பண்ணியல் யானைமேலான் பதுமுகன்
பாவைத்தானை கண்ணிய துணர்ந்து கல்லாக்
கட்டியங் காரனெஞ்சில் எண்ணிய தெண்ணி
மன்னர் இகன்மலைந்தெழுந்தபோழ்தில்
நண்ணிய சிறிய வெய்ப தழற்சொலாற்
சாற்றுகின்றான். (I) இசையினில்

இவட்குத் தோற்றும் யானையால்
வேறுமென்னின் இசைவ கொன்றன்று
கண்டிரிதனையான் இரந்து சொன்னேன் ,
வசையுடைத் தாசர்க்கெல்லாம் வழிமுறை
வந்தவாறே இசைமுகம் படர்கவல்லே
தீத்தொட்டாற் சுடுவ தன்றே. (2)

223

1780 திருக்குறட் குமரேச

வெண்பா.

எழுந்துவிண் படருஞ் சிங்கம் பெட்டைமேல்
இவர்ந்து நின்றால்
மழுங்கமேற் சென்று பாய்த ல் மறப்புலி
தனக்கு மாமோ
கொழுங்கயற் கண்ணினாளைச் சீவகுமான்
சூழ்ந்தால்
அழுங்கச் சென்றணை தல் பேய்காள்
அநங்கற்குமாவதன்றோ.(3) எம்மைநீர்
வெல்லப்பெற்றீர் வென்றபின்
இருந்தவேந்தன்

நம்மையும் வேறுசெய்து நம்முளே பொருது
வீந்தால்
வெம்மைசெய் துலகமெல்லாம் ஆண்டிட
விளக்கு நீதி
அம்மமற் றதனையோரீர் அவன் கருத் தன்ன
தென்றான். (4) மாற்றலர் மனக்கருத்தை
அவர் முகக்குறிப்பானோர்ந்து முன்னுற இவன்
மொழிந்துணர்த்திய வுண்மையை இவற்றுள்
அழுந்தி யுணர்க. இன்னவாறே தன்
மன்னனுக்கு இன்னல் யாதும் உறுவகை
முன்னறிந்து காத்து இவன் நன்னயஞ் செ
சய்து வந் தான். குறிப்பறிந்து
சொல்லாடுதலில் இவன் வல்லனாதல்
போலவே வில்லாடலிலும் வல்லனாய்
விளங்கியிருந்தான். தன் உறவினரைப்
பகைவரென்று கருதி வகையறியாமல்
ஒருமுறை சீவகன் சினந்தபொழுது
அருகிருந்த இவன் அதனைக் குறிப்
பாலுணர்ந்து உண்மையை யுறுதிபெற

எவரும் அறியாவகை அவன் உணர வுணர்த்தினன். முகம்நோக்கி அக நிலைகளை நுண்ணுதியுணரும் இவனது ஒண்மையையும், திண்மையையும் வியந்து பெருவருவாயுடைய பலவூர்களை அம்மன்னன் இவனுக்கு உதவி யருளினன். கோவிந்தை என்னும் தனது இனிய மனைவியோ டமர்ந்து அரியபோகங்களை நுகர்ந்து குறிப்பறிந்து நின்று அரசுக்கு இனித்த காரியங்களைச் செய்து அமைச்சருள் இவன் சிறப்புற்று நின்றான். முகத்தின் முதுக் குறைந்ததுண்டோ உவப்பினுங் காயினுந் தான்முந்துறும் என்னும் உண்மையை யுணர்ந்துணர்த்தி உலகம் புகழ இவன் உயர்ந்திருந்தான்.

அகங்கொண்ட வெல்லாம் அறிவலகுக் கென்றும்

முகங்கொண்டு காட்டுமே முன்.

குறிப்பறிந்துகொள்ள முகம் சிறப்புறு

கருவியாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1781

708 ஒன்றிநின்றார் ஒனறும் உரையாமுன்
என் வழுதி
குன்று தளித்தான்
குமரேசா—சென்று
முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(அ)

இ—ள்.

குமரேசா! பெரும்பெயர் வழுதி யென்பவன் தன் முன் வந்து நின்றவர் யாதும் உரையாமலே அவர்தம் உளக் குறிப்பை யுணர்ந்து என் உதவினன் எனின், அகம் நோக்கி உற்றது உண்ர்வார்ப் பெறின், முகம் நோக்கி நிற்க அமையும் என்க.

ஒன்றிநின்றார் = தன்முன் வந்து பொருந்தி நின்றவர். வந்து நின்றவர் யாதுங் கூறாமலே அவர்தம் குறிப்பையறிந்து விருப்புறக் கொடுத்து வந்தானாதலால் நின்றார் ஒன்றும் உரையாமுன் அளித்தான் என்றும். சென்று என்றதை நிற்றலுக்கு அடையாக நோக்கிக் கொள்க.

இது, குறிப்பறிவார் முன் இரப்பவர் எய்துஞ் சிறப்புக் கூறுகின்றது.

பெறின் என்றது அருமை தோன்ற நின்றது. பெறின் அமையும் என்றதனால் பெறுவழி பல்லெல்லாம் தெரியக் காட்டிப் பருவால் முகத்திற் கூட்டிச் சொல்லெல்லாஞ் சொல்லி நாட்டித் தொலைக்கவே வேண்டும் என்பதாயிற்று.

உற்றது = பொருந்தியது; அஃதாவது நேர்ந்துள்ள குறைபயினை. உணர்வார் என்றது உணர்ந்து தீர்க்கும் ஒண்மையுடை

யாரை. தீர்த்தல் இல்வழி அவ் உணர்வாற் பபனில்லையாதலால் இங்ஙன முரைக்க நின்றது. காரியத்தைத் தன்னுள் அடக்கி நிற்கும் காரணமொழி என இதனைக் கருதிக் கொள்க.

தன் குறையைத் தான் உரையாமலே உணர்ந்துகொள்ள வல்லாரை ஒருவன் காணப் பெறுவனாயின் அவர் முன்போய்த் தன்னை அவர் காணுமாறு கண்ணெதிரே நின்றாற்போதும் என் பார் உற்றது உணர்வார்ப் பெறின் நிற்க அமையும் என்றார்.



வெண்பா.

மேல், குறிப்பறிதற்குச் சிறந்த கருவி முகமேயாம் என்றார்; இதில், அங்ஙனம் அறியவல்லாரிடம் யாதேனும் பெறவேண்டிச் சென்றால் ஒன்றும் உரையாட

வேண்டாமலே தாமே உணர்ந்து அவர் உதவுவர் என்கின்றார்.

தன் மனத்தை நோக்கி உற்றதனை உணர்ந்து கொள்வாரை ஒருவன் காணப் பெறின் அவர் முகத்துக்கு எதிரேபோய் அவர் காணுமாறு நிற்றலே அவனுக்குப் போதும் என்பதாம்.

குறையுறுவார்க்கு ஓர் அறிவு கூறுவார் போன்று குறிப்பறிவாரது கொடைச் சிறப்பினை இதில் உணர்த்தியுள்ள நயத்தை ஊன்றியுணர்க.

பிறாது குறையினை அவர் வாய் திறந்து கூறுவண்ணம் தாமாகவே உணர்ந்து தீர்த்தலே நல்ல குலமக்களின் தன்மையாம்: அத்தன்மை குறிப்பறிவார்க்கு உண்மையாக இங்குக் குறிக்கப் பட்டிருத்தலான் அவர் குடிப்பிறப்பின் சிறப்புக் குறிக்கொள்ள நின்றது. "இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல் குலனு 'டையான்

கண்ணேயுள" என்ற அருண்மொழியையும் ஈண்டுக் கருதிக் கொள்க.

குறிப்பறிய வல்லார் பிறர் மனத்தின் கண் நிகழும் நிகழ்ச்சிகளை அவர் முகத்தானே உணர்ந்துகொள்வர் என அருள, அங்ஙன மாயின் முறை வேண்டியும் குறைவேண்டியும் அவரிடம் சென்றார் ஒன்றும் உரையாட வேண்டாவோ ? என்பாரை நோக்கி இஃதுரைத்ததாகக் காண்க.

ஒன்றுங் கூறாது தன் முகம் நோக்கி நின்ற குசேலரது அகம் நோக்கி உற்றதை யுணர்ந்து கண்ணன் உதவியது போல் குறிப்பறியும் சிறப்புடையார், தம்மிடம் வந்தவர் வாய் திறவா வண்ணம் கருதிபெறத் தந்திடுவர் என்பது கருத்து.

பயிர்களுக்குப் பருவ மழைபோல் உயிர்களுக்கு குறிப்பறிவார் அமைந்துள்ளார் என்பது குறிப்பு.

ஆதரவாகக்

குறிப்பறிய வல்லவன் தன் முன் வந்தவர் வாய் திறந்து கேட்கு முன்னரே அவர் கருத்தைக் குறிப்பாலோர்ந்து கொடுத்து விடுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பெரும்பெயர் வழுதியால் உணரப்படும்.

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1783

## கதை.

பெரும்பெயர்வழுதி என்பவன் மதுரையிலிருந்து அரசு புரிந்த பாண்டிய மன்னருள் ஒருவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராகும். இவன் வேண்டியன வேண்டியாங்கெய்தி யீண்டிய நலங்களோடு இன்புற்றிருந்தவன். நுண்ணறிவாளன்.

பெரும் புலவர்களும் வியந்து நோக்கத் தக்க அருங்கலை விநோதன். வண்மையும் திண்மையும் உண்மையுமுடையவன். படைக்கலங்களில் வாட் பயிற்சியில் இவனுக்கு நிகரானவர் அக்காலத்தில் எவரும் இலர். யானையேற்றத்தில் இவன் ஆற்றல் மிக்கவன். இவனது பட்டத்து யானைக்கு மாருதவேகன் என்று பெயர். அழகிலும் பெருமிதத்திலும் ஆண்மையிலும் அது மிகச் சிறந்தது.

அடிக்கை கனத்து மதம்பொழி யாழியி னளவும்
புகரா லழகெய்தி
மடிக்கினும் மண்ணுறு கையது செக்கிற வாயது
தேயா மதிகவினே
ஒடித்திரு பக்கமும் வைத்தென மகரிகை
யொன்றியொன்றி யொன்றார்
மெய், இடிக்கு மருப்பது புன்னையி
னொண்மலரென வுஞ் சீர் திருகண்ணும்.
இலகுமு மோடையும் இலகுறு நெற்றிய தாலவட்டச்

செவியாலே
பலதிசை மாருத முய்பபது செம்புகர் பட்டின்
தொழிலில் பயில்கிற்ப
துலகினை மேல்கொளு மவனதெனக் களி யூறியதா
லங்குல மொத்துக்
குலவிய மத்தக மொத்த கழுத்தி லுயர்ந்ததம் பொற்
குவடென்ன . (2) ஊரத்தினின் மூச்சுழி
யுடையது தாள்வலி கற்று ளைப்பென் றுரை
செய்யும், தாத்தது வெண்ணெய் நிறத்த நகத்தது
தண்ணந் துளவணிலே
யொத்த, திரத்தின தாமை கிடந்தவெனும்
புறவடியதங்கள் திண்ணென்றே யாத்தது நல்லுதரத்த
திளங்கமு கொத்த தம்ம வாலதி. (3)
அனும் விலங்கு முறிப்பது பாகுபரிக்கோல் யாவுந்
தூரத்தே
காணினும் நின்று கொதிப்பது தன்னிழல்கண்டு
சீறுங் கருத்ரது
நீண்ட முதலிய தொழிலொரு நாலு நிரந்தது மேரு
நிகரென்னச்
சேனையர்

போதா எழுமுழ முடையது தெவ்வாஞ்சும் அவ்வேழம். (4)
என்று வில்லி சொல்லிய இவ்விலக்கணங்கட்கெல்லாம் அஃதோர் இலக்கியமாய் நின்றது. பல போர்முனைகளிலும் புகுந்து நன்கு பயின்றிருந்த அவ் யானையை யூர்ந்து தன் தடக்கையில் வாள் 1784
திருக்குறட் குமரேச வெண்பா.

பிடித்து இவன் அமர்க்களம் புகுவானாயின் மறலிபனைய பகைவரும் மறுகியோடுவர். இவனது வாளாண்மையையும் தோளாண்மையையுங்கண்டு அனைவரும் இவனுக்கு அடங்கி நடந்தனர். பாண்டியன் கருங்கையோள்வாட் பெரும்பெயர்வழுதி என்று எவரும் விரும்பியழைப்ப இருமபுகழோடு தன் ஆணையை எங்குஞ் செலுத்தினன். பகைவரைத் தேய்த்து

உலகை நலமுறப் பாது காக்து இசைதிசை பாவ இவன் இனிது வீற்றிருந்தான். பிறர் உளக்கருத்தை அவர் முகக் குறிப்பாலோர்ந்து எவர்க்கும் இவன் இதஞ் செய்துவந்தான். குறைவேண்டியும் முறை வேண்டியும் தன்னிடம் வருவோர் உரை வேண்டாமலே குறிப்பறிந்து இவன் உதவிவரும் ஒண்மையை உயர்ந்தோர் பலரும் வியந்தார். பல திசைகளிலுமிருந்து இரவலர் பலர் நாளும் வந்து இவன் முன் நெருங்கி நிற்றலையும் அவர் யாதும் உரையாவண்ணம் தகுதிபெற இவன் அருளி வருதலையும், உடனிருந்து கண்ட இரும்பிடர்த்தலை யார் என்னும் பெரும் புலவர் புகழ்ந்து பாடினார். தன் முகங் காண நின்றாது

அவைகண்டு உதவி ஆதரித்துவந்த இவனது மேதகவை அறிஞர் பலரும் புகழ்ந்து

போற்றியுள்ளார். முகம் நோக்கி இற்க அமையும் அகம் நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின் என்னும் உண்மையை உலகம் இவன்பாலுணர்ந்து தெளிந்தது.

உலவு மதி யுருவின் ஓங்கல் வெண்குடை

நிலவுக்கடல் வரைப்பின் மண்ணக நிழற்ற

ஏமமுரசம் இழுமென முழங்க
நேமி யுய்த்த நேஎ நெஞ்சிற்
றவிரா ஈகைக் கவுரியர் மருக!
செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ!
பொன்னோடைப் புகரணி நுதற்
றுன்னருந்திறற் கமழ்கடாஅத்
தெயிறுபடை யாக
வெயிற்கதவிடாஅக்

கயிறு பிணிக்கொண்ட கவிழ்மணி மருங்கிற்

பெருங்கை யானை யிரும்பிடர்த்
தலையிருந்து
மருந்தில் கூற்றத் தருந்தொழில்
சாயாக்

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1785

கருங்கை யொள்வாட் பெரும்பெயர்
வழுதி!
நிலம் பெயரினும் நின்சொற்
பெயரல்;
பொலங் கழற்காற் புலர்சாந்தின்
விலங் ககன்ற வியன் மார்ப!
ஊரில்ல வுய வரிய
நீரில்ல நீளிடைய
பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற்
செந்தொடை பிழையா வன்க
ணாடவர்
அம்புபட வீழ்ந்தோர் வம்பப்

பதுக்கைத்;

திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந்

துயவும் உன்னமரத்த துன்னருங்

கவலை

நின்னசை வேட்கையின் இரவலர்

வருவர்; அது,

முன்னம் முகத்தி னுணர்ந்து அவர்

இன்மை தீர்த்தல் வன்மை யானே.

(புறம்.)

இது, குறிப்பறிந்து உதவிவந்த

இளந்து இயல்பினைக்குறித்து

இரும்பிடர்த்தலையார் பாடியது. கவுரியர்

மருகன் பாண்டியர் மாபிளையும். மருக,

கனவு, வழுதி, மார்ப, என முன்னிலையாக

இவனை விளித்து உன்னமரங்களையுடையதும்,

அணுகுதற்கு அரியதுமாகிய

கொடுவழிகள்பல கடந்து நின்னைவிரும்பி

இரவலர் வருவர்; அதற்குக் காரணம்

அகக்குறிப்பை முகத்தானறிந்து

அவருடைய வறுமையைத் தீர்க்கவல்ல
உன்னுடைய பெருந்தன்
மையேயாம்என இதில் உரைத்துள்ளமை
காண்க. இதனால் இவனது வீரமும், ஈரமும்,
அகம் நோக்கி உற்றதை யுணர்ந்து உதவி
வந்த ஒண்மையும், மேற்குறித்த
வண்மையும் பிறவும் இனிது தெளிவாதல்
காண்க. அகம்போதிந்த தன்மை யறிய
ஒருவன் முகம் பொருந்தி நிற்குமே முன்
என்பதை நன்னயம்பெற வுணர்ந்த
மன்னவன் என்று அக்காலத்திருந்த
அனைவரும் இவனை மனமுறப் போற்றினர்.
முன்னம் = மனக்குறிப்பு.

உள்ளம் உணர்வார்முன் ஒருரையுங்
கொள்ளலாம் கொள்ளுங் குறி.

கொள்ளாதே

குறிப்பறிபவர் இரப்பவர்க்கு மிக
இனியராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

**709** மாறிப் பகைத்ததனை மாடலமன்னன் குட்டுவன்கண்
கூறுவுணர்ந்தான் குமரேசா — சீறும்
பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின். (௯)

இ—ள்

குமரேசா! குட்டுவன் உளங்கொண்ட வெகுளியை மாடலன் என் அவன் கண்ணால் உணர்ந்துகொண்டான் எனின், கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின், பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் என்க.

மாறிப் பகைக்கது என்றது சோழ பாண்டியர்கள் மேல் மாறுபட்டுக் குட்டுவன் சீறி நின்றதை. அந் நிலையினை அவன் கண்களாலறிந்து அருகிருந்த இவன் உறுதி கூறினான் ஆதலால் கண் கூறு உணர்ந் தான் என்றும். சீறும் என்றது சினக்குறிப்பை.

இது, கருத்தை யறிதற்குக் கண்ணும் கருவியாம் என்று கூறுகின்றது. உணர்வார்ப் பெறின் கண் உரைக்கும் என்றதனால் உணர்வில்லாரைக் காணின் அது யாதும் உரையாது என்பது தாயிற்று. பெறுதலின் அருமை தோன்றப் பெறின் என்றார்.

கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்

உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்

நன்னயப் பொருள் கோள் எண்ணருங் குரைத்தே. என் றது தொல்காப்பியம்.

குறிப்புணர்வார் இவ்வுலகத்தில் அரியர்

என்பதை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. பகைமை = பகையாந் தன்மை; அஃதாவது மாறுபாட்டிற்கேதுவாயது. கேண்மை = கேளாந் தன்மை; நட்பு என்க.

கண்ணின் வகைமை = காட்சியின் விதங்கள்; என்றது பார் வையில் நிகழும் பல்வகை நிகழ்ச்சிகளை. கருத்தில் சினந் தோன் றின் கண்கள் சிவந்து சுழலும்; அன்புதோன்றின் நீர் ததும்ப நெகிழ்ந்துகாணும்; ஐயந்தோன்றின் வானுந்திசையும் மயங்கி நோக்கும்; விருப்பந் தோன்றின் மலர்ந்து காணும்; இங்ஙனமே கருத்தின் விளைவெலாம் கண்களில் விளங்கித் தோன்றும் ஆக லால் கண்ணின் வகைமை என நின்றது.

71-ம் அதிகாரம்

குறிப்பறிதல்.

1787

மேல், குறிப்பறிய வல்லார் பிறர் யாதும் உரைக்காமலே அவர் கருத்தை உணர்ந்து கொள்வர் என்றார்; அவர் அங்ஙனம் உணர்தற்கு முகமேயன்றிக் கண்களும் கருவியாம் என்று இதில் உணர்த்து கின்றார்.

கண்ணினது வேறுபாட்டின் தன்மையை யறியவல்லாரைப் பெறின், மனத்துட் கிடந்த பகைமையையும் நட்பையும் அக் கண்கள் சொல்லிவிடும் என்பதாம். குறிப்பறிதற்குக் கண்களும் கருவியாகுமாதலால் குறிப்பறிதலில் சிறப்புற வேண்டுபவர் அதன் வேறுபாட்டியல்புகளை விளங்க அறிந்திருக்கவேண்டும்; அங்ஙனம் இருப்பின் பிறர் உளத்து நிகழும் இயல்புகளை அவருரையாமலே அதன் வாயிலாக உணர்ந்து கொள்ளலாம் என்பார்

" கண்ணின் வகைமை யுணர்வார்ப் பெறின்,
கண் உரைக்கும் " என்றார். உரைத்தற்குரிய
இயல்பில் லாத கண் உரைக்கும் என்றது
உபசா ர ம். கேளாததைக் கேட் பது
போலவும், சொல்லாததைச் சொல்வது
போலவும், இயங்கா ததை இயங்குவது
போலவும், இயற்றாததை இயற்றுவது போல
வும் இயைத்துக் கூறுதல் இலக்கணத்தில்
ஒருவகை மரபு என்க,

வாரா மரபின வரக் கூறுதலும்
என்னா மரபின எனக் கூறுதலும்
அன்னவை யெல்லாம் அவற்றவற்
றியல்பான்
இன்ன வென்னுங் குறிப்புரையாகும்.

என்றது தொல்காப்பியம். ஒருவன் மனத்து
நிகழும் நிகழ்ச்சியைப் புறத்தே தோன்றச்
செய்தற்கு அவன் உட ம்பும், முகமும்

கண்ணும் காட்சி யும் கருவிகளாம்; இவற்றுள் ஒன்றினும் ஒன்று சிறந்து நுழை புலனுற நுண்மையுற்று முறையே நிற்குமென்பதை நுனித்து நோக்கிக் கொள்க.

விருப்பு, வெறுப்பு, காதல், கவற்சி முதலியவற்றுள் ஏதே னும் ஒன்று உளத்தின்கட் கிளைப்பின் அது கண்வாயிலாகவே மிகக் கனிந்து தோன்றும்.

உடலினை நோக்கும் இன்னுயிரை ர

நோக்குமாள்

இடரினை நோக்குமற் றியாதும் நோக்கலன்

224

1788 திருக்குறட் குமரேச வெண்பா.

கடலினை நோக்கும் அக்கள்வன்

வைகுறும
இடரினை நோக்குந்தன் சிலையை நோக்குமால்.

இது, இராமன் இலங்கைக்கு ஏகுங்கால் இடையே கடற்கரையில் தங்கியிருந்த சமயம் சீதையின் பிரிவுத் துயரும், பகைவன் செய்த கொடுமையும் தன் நெஞ்சிற் காலூன்றியபொழுது அவன் கண்ணூன்றிய தன்மையைக்கருதியதென்க. கருத்தில் நிகழ்வதை வெளிப்படுத்துவதில் கண்ணுக்குரிய தனியுரிமை இதில் காணப்படுதல் காண்க.

பிறாது மன இயல்புகளை யாதும் உரையாதிருப்பினும் தம் கண் வாயிலாகவே உணர்ந்து கொள்ள வல்ல அமைச்சரையே தமக்குத் துணைவராக அரசர் அமைத்துக் கொள்ளவேண்டும் என இயலோடு பொருந்த இதனை இணைத்து நோக்கிக் கொள்க.

மக்கள் எண்ணங்களை யறிதற்கு அவர்

கண்களை நல்ல கருவி என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை குட்டுவன் பால் உணரப்படும்.

## கதை.

குட்டுவனென்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூற்றைம்ப தாண்டுகட்கு முன்னர் வஞ்சி நகரிலிருந்து அரசுபுரிந்த சேரமன்னன். இவனுடைய தந்தை பெயர் சேரலாதன் என்பர். 'சிலப்பதிகார நூலாசிரியராகிய இளங்கோவடிகள் இவனுடைய தம்பி யாவர். அறிவிலும் ஆற்றலிலும் இவன் மிகச் சிறந்தவன். பல போர்முனைகளிலும் புகுந்து பொருது வென்றவன். கண்ணகிக் குக்கோயிலமைத்து வழிபடவேண்டி இமயமலைவரையுஞ் சென்று மறுபுல மன்னர் பலரையும் வென்று உருவம் புனைதற்குக் கல் ஒன்று உவந்து கொண்டுவந்து தன் நகர்

எல்லையில் வைத்துச் சோழபாண்டியரிடம் அதனைச் சொல்லி வரும்படி நீலன் என்னும் ஒற்றனை ஏவினான். அவன் சென்று கூற, அவ்விருவரும் இவனியல்பினைச் சிறிது எள்ளி மொழிந்தார். நீலன் மீண்டுவந்து இவனிடம் அவர் மொழிந்ததை ஒளியாது மொழிந்து நின்றான். அதனைக் கேட்டவுடனே இவனது நாட்டஞ் சிவந்தது. அருகிலிருந்த மாடலன் என்பவன் அதனைக்
குறிப்பாலுணர்ந்துகொண்

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1789

டான். அவன் கோவலனுடைய உயிர்த் தோழன். புகார் நகரிலிருந்து அரசுபுரிந்த சோழ மன்னர்கட்கு வழிமுறையாக அமைச்சுரிமை பூண்டவன். குறிப்பறிதலில் மிகச் சிறந்தவனாதலால் மன்னன் மனங்கொதித்து அவ்விருவர்மேல் அமர்

குறித் ததைக் கண்களின் மாறுபாட்டால்
தெளிந்து உடனே எழுந்து " அரசே!
வெகுளாதருள்க; உறுதி தருவதாய
உண்மை நெறியில் இனி உன்
உளந்திரும்பவேண்டும்" என வியமாக
இன்னுரையாடினன். இவனும் அவ்வாறே
மனமிரங்கித் தவநெறியை மருவினன்.
கேண்மைகொண்டதைக் குறிப்பாலுணர்ந்து
மாடலன் மகிழ்ந்து நின்றான். கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின், பகைமையும்
கேண்மையும் கண் உரைக்கும் என்பதை
அன்று இவன்கண் உணர்த்தி நின்றது.

ஏனமன்னர் இருவருங் கூறிய
நீண்மொழி யெல்லாம நீலன் கூறத்
தாமரைச் செங்கண் தழல்நிறங்
கொள்ளக்.

கோமகன் நகுதலுங் குறையாக் கேள்வி
மாடலன் எழுந்து மன்னவர் மன்னே
வாழ்கநின் கொற்றம் வாழ்கவென்

றேத்தி:

அரச ரேறே அமைக நின் சீற்றம்
இகழா தென்சொற் கேட்டல் வேண்டும்
இளமை நில்லா தென்பதை யெடுத்தீங்
குணர்வுடை மாக்கள் உரைக்கல்

வேண்டா

திருவொழி யகலத்துச் செங்கோல்

வேந்தே

நரைமுதிர் யாக்கை நீயுங் கண்டனை
விண்ணோ ருருவின் எய்திய நல்லுயிர்
மண்ணோ ருருவின் மறிக்கினும்

மறிக்கும்:

மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
மிக்கோய் விலங்கி னெய்தினு மெய்தும்;
விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
கலங்கஞர் நரகரைக் காணினுங் காணும்;
ஆடுங் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
கூடிய கோலத் தொருங்குநின்

றியலாது;

வெண்பா.

செய்வினை வழித்தா யுயிர் செலு
மென்பது
பொய்யில் காட்சியோர் பொருளுரை;
யாதலின்,
எழுமுடி மார்ப! நீயேந்திய திகிரி
வழிவழிச் சிறக்க வயவாள் வேந்தே!
அரும்பொருட் பரிசிலேன் அல்லேன்
யானும்
பெரும்பே ரியாக்கை பெற்ற நல்லுயிர்
மலர்தலை யுலகத் துயிர்போகு
பொதுநெறி
புலவரை யிறந்தோய் போகுதல்
பொறேஎன்
வானவர் போற்றும் வழிநினக் களிக்கும்
நான் மறை மருங்கின் வேள்விப்
பார்ப்பான்
அருமறை மருங்கி னரசர்க் கோங்கிய

பெருநல் வேள்வி நீ செய்யல் வேண்டும்
நாளைச் செய்குவம் அறமெனில் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்
இதுவென வரைந்து வாழுநா
ளுணர்ந்தோர்
முதுநீ ருலகின் முழுவது மில்லை
வேள்விக் கிழத்தி இவளொடுங் கூடித்
தாழ்கழன் மன்னர் நின்னடி போற்ற
ஊழியோ டூழி யுலகங் காத்து
நீடுவாழியரோ நெடுந்தகை;

(சிலப்பதிகாரம்). இது, குட்டுவன் உளத்திற்
பகைத்ததை அவன் நோக்கின் குறிப்பினால்
றுனித்தறிந்து மாடலன் கூறியது. ஒருவன்
மனத்துட் கொத்த பகைமை கேண்மைகளை
அவன் கண் காட்டிவிடும் என்பதும்,
உணர்வோர் அதனை உணர்ந்துகொள்வர்
என்பதும், மேற் குறித்த வுண்மையும் இதில்
விளங்குதல் காண்க.

உள்ளக் கருத்தை யுணர்ந்துகொளக்
கண்ணேமுன் தெள்ளியது தாகுந் தெளி.

ஒருவன் உள்ளப் பான்மையை அவன் கண்ணால் உணர்ந்து கொள்ளலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1791

710 போதமிகு பொய்கையார் போர்வளவன் கண்ணறிந்தேன்
கோதறுசீர் கொண்டார்
குமரேசா—ஓதியிது
நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.
(ம)

இ—ள்.

குமரேசா! வெளவனது உளநிலையை

அவன் கண்களால் வறிந்து பொய்கையார் என்
தான் கருதியதை முடித்தார் எனின்,
துண்ணியம் என்பார் அளக்கும் கோல், காணுங்
ங்கால் கண் அல்லது பிற இல்லை என்க.

போதமிகு என்னும் அடை அவரது
சிறந்த அறிவின்றிறங் கருதி நின்றது.
போர்வளவன் என்றது உறுபகை ஒடுங்க
உடற்றிய அவனது அமர்நலங்கருதி என்க.
கண்ணால் அன்பின் உண்மையை உணர்ந்து
கருதியதை யடைந்தார் ஆதலால் கண்
அறிந்து சீர்கொண்டார் என்றும், உணர்வின்
துண்மைக்கு ஓதலே காரணமாதல் கருதி
ஓதியிகு என்றும்.

இது, குறிப்பறிதற்குக் கண்ணினுஞ்
சிறந்த கருவி வேறு இல்லை என்று
கூறுகின்றது.

நுண்ணியம் என்றது யாம்
நுண்ணிய அறிவினை யுடையேம் என்றவாறு.

உடைமையின் நுண்மை உடையாண்மே லேற்றப் பட்டது. ஒருவன் அகக்கருத்தைப் புறக்குறிப்பால் அறிந்து அறியுந் தன்மை நுண்ணறிவோர்க்கே கூடுமாதலால் நுண்ணியம் என்று குறித்தார்.

தெரிபுவேறு இளவாது குறிப்பினுந் தொழிலினும்

அரிதுணர் வினைத்திறம் நுட்பமாகும்.

என்று தண்டி கூறியதும் ஈண்டுக் கண்டுகொள்க.

கண்ணே என்னது அல்லது இல்லை என இரண்டு எதிர் மறைகளை இணைத்துக் கூறியது இல்லை உடம்பெற்றுறுதி பெற நற் கென்க.

கோல் = அளவுகோல். காணுங்கால் = ஆராயுமிடத்து.

1 792 திருக்குறட் குமரேச வெண்பா.

மேல், உள்ளத்தில் மறைந்து கிடக்கும் உண்மைகளைக் கண் உணர்த்திவிடும் என்றார்; குறிப்பறிதற்கு அதைவிடச் சிறந்த கருவி வேறு இல்லையென்று உறுதிபெற இதில் உணர்த்துகின்றார்.

யாம் நுண்ணறிவுடையேம் என்று எண்ணியிருப்பவர் பிறர் கருத்தினை அளக்குங்கால் ஆராயுங்கால் அவர் கண்ணே அல்லது வேறு இல்லை என்பதாம்.

குறிப்பறியவல்லான் இவ்வுலகிற் சிறந்தவன், அவனைத் தெய்வமாகவே கருதித் துணைக்கொள்ளவேண்டும், அங்ஙனம் அறியாதவர் மிக இழிந்தவரே யாவர், அவ்வறிவுக்கு முகமும் கண்களுமே கருவிகளாம் என இதுவரை உரைத்துவந்து இறுதியாகக்குறித்த கருவியின் சிறப்பை உறுதிபெற இதில் உணர்த்தியருளினார்.

ஓர் நிலக்கையளந்து

இத்துணையமைதன்று அதனை வரையறை செய்துணர்தற்கு அளவுகோல் உதவியாதல்போல், ஒருவன் உளத்தினை யளந்து உண்மையை உணர்ந்து கோடற்குக் கண் கருவியாகுமாதலால் அத்தன்மை கருதி அதனை அளக்குங் கோல் என உருவகஞ் செய்தார்.

மக்களது அக நிகழ்ச்சிகளைக் குறிப்பாலறிந்து கோடற்கு அவர்தம் முகங்களே கருவியாகுமாயினும் அவற்றுள் அமர்ந்தொளிரும் கண்கள் நுண்கருவியாம் என்க.

குறிப்பறிதற்கு நுண்கருவியாயுள்ள கண்களால் மக்கள் உள்ளத்தன்மையை உய்த்துணர்ந்து கொள்க என்பது கருத்து.

காட்ட மிரண்டும் அறிவுடம் படுத்தற்குக்

கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்.

என்றது தொல் காப்பியம். உள்ள நிகழ்ச்சியை உணர்ந்து கோடற்குக் கண்கள் கருவியாம் என்பதை இதுவுங் காட்டி நிற்றல் காண்க.

ஒருவனுடைய கண்ணைநோக்கி அவனது உண்மையியல்பை அறிவுடையார் உணர்ந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை பொய்கையார்பால் உணரப்படும்.

கதை.

பொய்கையார் என்பவர் மலைநாட்டிலே பொய்கையென்னும் நகரிலிருந்தவர். இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு



ஆண்டுகட்கு முன்னதாம். இவர் அருங் கலைகள் பலவுந்தெளிந்த பெரும் புலமையாளர். நுண்ணறிவோடு தண்ணளியுமுடையவர்.

எவ்வுயிரும் இன்புற்றெழுமாறே இவர்
அன்புற்றொழுகினார். அரசராயினும்
அடியவராயினும் நடுநிலை பிறழாமல் நின்று
உண்மையை உறுதிபெற வுரைக்கவல்லவர்.
அரசியற் றுறைகளிலும் இவர் மிகவுயர்வு
பெற்றிருந்தார். இவரது மதித்திறத்தையும்
மனப்பண்பையும் வியந்து தொண்டி என்னும்
நகரிலிருந்து அரசு புரிந்த கோக்கோதை
மார்பன் என்னும் சேர மன்னன் இவர்பால்
பேரன்பு கொண்டிருந்தான். இவரும்
அம்மன்னனை இன்னுயிர்த் தோழராயெண்ணி
மன்னிய அன்போடு மருவி நின்றார். அடிக்
கடி சென்று அவனைக் கண்டு இன்னுரையாடி
இன்புறுத்தி வந்தார். எதையும்
குறிப்பாலறிந்துகொள்ளும் இவரது ஒண்மை
யையும் திண்மையையும் உணர்ந்து அனைவரும்
இவரை உவந்து போற்றினர். ஒருநாள்
பூஞ்சோலை ஒன்றில் தனியே இவர் உலாவி
நிற்குங்கால் புலவனொருவன் பரிசில் கருதி

அவ்வழியே வந்தான். அவன் கருதிவந்ததைக் குறிப்பாலறிந்து தம் அரசனிடம் செல்லுமாறு இவர் அவனை அன்புசெய்து விடுத்தார். அங் ஙனம் விடுக்குங்கால் இவர் கூறிய பாடல் இது.

கோதை மார்பிற் கோதையானுங்
கோதையைப் புணர்ந்தோர்
கோதையானு
மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கள் நாறும்மே கானலந் தொண்டி
அஃதெம் மூரே அவன்எம் இறைவன்
அன்னோற் படர்தி யாயின் நீயும்
எம்மும் உள்ளுமோ? முதுவாய் இரவல,
அமர்மேம் படூஉங் காலை நின்
புகழ்மேம் படுநனைக் கண்டனம் எனவே.

மாக்கழி = கரிய காம்பு. கோதை நான்கனுள் இரண்டு அரசன் பெயர் குறித்து நின்றன.

எம் அரசனைப்போய்க் காணின் நீ கருதிய யாவும் பெறுவாயெனக் குறிப்போடு இவர் குறித்து விடுத்துள்ளமையை இதில் குறித்துக் காண்க. படர்தியாயின் 1794 திருக்குறட் குமரேச வெண்பா

கண்டனம் என எம்மையும் உள்ளுவாய் எனக் கூட்டி நோக்குக.
இவ்வனங்குறிப்பறிந்துகூறி எவர்க்கும் இனியராய் இவர் இருந்து
வருங்கால் அரசன் இறந்து போயினன். அதன் பின்னர்க்
கணைக்கால் இரும்பொறை என்னும் சேரமன்னன் தனக்கு
அமைச்சராகவும் புலவராகவும் இவரை அணைத்து ஆதரித்துக்
கொண்டான். அவன் நுண்ணிய புலமையும் வண்மையுமுடைய
வன். பருவத்தில் சிறியவனாயினும் போர்

வீரத்தில் சிறந்தவன்.
அவன் கழுமலம் என்னும் இடத்தில் சோழன் செங்கண்ணான்
என்பவனோடு ஒருமுறை பொருது தோற்றுத் தாழ்ந்து வீழ்ந்தான். அவ்
சமயம் அவனைப் பிடித்துக்கொண்டு போய் அவ்வளவன்
சிறைப்படுத்தி யிருந்தான். அதனையறிந்த இவர் மிகவும் வருந்தி
அவ்வளவனை யடைந்தார். தாம் கருதி வந்ததை உடனே வெளிப்
படுத்தாமல் அமயமறிந்து நின்று அவன் போர்த் திறத்தைப்
புகழ்ந்து சில பாடல்கள் பாடினார். இவரது நுணங்கிய கேள்வி
யையும் வணங்கிய வாய்மையையும் நோக்கி மகிழ்ந்து புலவரே!
யாது வேண்டும்? என்றான். இவர் புரவலா! யாம் வேண்டு

வதைத் தருவதாக முன் உறுதி கூறின் பின்னர் உரை செய்வல்
என்றார். அவன் அதற்கு இசைந்தான். "எம் அரசனைச் சிறை
யினின்றும் விடுக" என்று இவர் வேண்டினர். அவன் கொடும்
பகைமையை நினைந்து விடும்படி இசையாமல் சிந்தை யுளைந்து
விழித்தான்.

வெள்ளிவெண் ணாஞ்சிலால் ஞாலம் உழுவனபோல்
எல்லாக் களிறும் நிலஞ்சேர்ந்த—பல்வேற்
பணைமுழங்கு போர்த்தானைச் செங்கட் சினமால்
கணைமாரி பெய்த களத்து. என

இக்கவியைக் கூறினர்.

மழைபெய்தவழி உழவர் நிலமுழுதல்போல் நீ கணைபெய்த களத்

யில் கரிகளெல்லாம் பனைகளால் உழுவனபோல் வீழ்ந்துலந்தன. இனிப்பழம் பகைமையை எண்ணி நிற்றல் நின் தன்மைக்குத் தகுமா? என்று கருத்துற உரைத்தார். அவன் உடனே உவந்து சிறை விடுத்தான். சிறைவிடுகொண்ட இவர் தம் அரசரொடு நகரினை யடைந்தார். மறுபுல மன்னன் மனக்கிடக்கை

71-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

1795

யைக் கண்ணால் அளந்து அறிந்து தம் கருத்தை முடித்துச் சென்று இவரது சிறப்பினை மகிழ்ந்து அனைவருந் துதித்தார். இவர் அங்குப் பாடிய பாடல்கள் களவழி நாற்பது என்னும் பெயரால் இன்று நிலவி வருகின்றது. நுண்ணறிவுடையேம் என்பார் பிறர் கருத்தினை அளக்குங்கோல் அவர் கண்ணேயாம் என்பதை உலகம் இவர்பால் அன்று கண்டு நின்றது.

களவழிக் கவிதை பொய்கையுரை செய்யவுதியன்

காவழித் தளையை வெட்டியா சிட்ட
அவனும்; எனக்
கலிங்கத்துப்பாணியிலும்,
மேதக்க பொய்கை கவிகொண்டு
வில்லவனைப்
பாதத்தளைவிட்ட பார்த்திவனும்;
என விக்கிரமசோழ
னுலாவிலும்,

படுத்துப் பொறையனைப் பொய்கைக்குப் பண்டு
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்;
எனக் குலோத்துங்க
சோழனுலாவிலும்,
நல்லவன் பொய்கை களவழி
நாற்பதுக்கு
வில்லவன் காற்றளையை விட்டகோன்;
என இராசராச சோழனுலாவிலும,
மேற்குறித்த வுண்மை குறிக்கப்பட்டுள்ளது
.

கண்ணளவு கொண்டு கருத்தளந்து
காண்போரே

நுண்ணறிவோ ராவரேனு நூல்.

குறிப்பறிதற்கு நுண்ணிய கருவி கண்ணேயாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

குறிப்பறிபவன் இவ்வுலகத்திற்கு ஓர் அணியாயமைந்துள்ளான். அவனைத் தெய்வமாகவே மதித்துப் போற்றவேண்டும். உறுப்பினுள் ஒன்றைக் கொடுத்தேனும் அவனைத் துணைக்கொள்ளவேண்டும். சிறந்த பிறப்பினனாயினும் குறிப்பறியாதவன் இழிக்கப்படுவான். கண்ணுடையனாயினும் அவன் குருடனே யாவன். ஒருவன் அகத்திலுள்ளதை அவன் முகத்தால் காணலாம். குறிப்பறிதற்கு முகம் முதற்கருவியாகும். குறிப்பறிய

1796 திருக்குறட் குமரேச வெண்பா.

வல்லார் யாதும் உரைக்கா முன்னரே உணர்ந்துதவுவார். ஒருவனது பகைமையையும் கேண்மையையும் அவன் கண்களே உணர்த்திவிடும். குறிப்பறிதற்கு நுண்ணிய கருவி கண்ணேயாகும.

எக-வது குறிப்பறிதல் முற்றிற்று.

---

# 72-ம் அதிகாரம்

## அவையறிதல்.

அஃதாவது அவையிலுள்ளாரது இயல்பினையறிந்து அதற்கு இயையச் சொல்லுதல். புறத்தில் நிகழும் உறுப்பின் தொழிலால் மக்கள் உளக்கிடக்கையைக குறிப்பாலுணரவேண்டுமென மேல் பொ

தாவாக உணர்த்தினர் ; இதில் குழுவாக அவையின் கண் அமர்ந்திருப்பாரது நிலையினை அறிந்துகொள்ளவேண்டும் என்று சிறப்பாக உணர்த்துகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது. அஃது ஒரோ வழித் தனித்தறிவது எனவும், இஃது ஒரே இடத்தே ஒருங்குணர்வது எனவும் வேறுபாடு காண்க.

711 ஓர்ந்து வசிட்டர் உறுதியுற ஆராய்ந்து
கூர்ந்துசொன்னார் முன்னைன் குமரேசா—சார்ந்த
அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். (க)

இ—ள்.
குமரேசா ! வசிட்டர் அவையின் இயல்பினை அறிந்து அரசனுக்கு உறுதியை

ஆராய்ந்து என் முன் இனிதாகச் சொன்னார் எனின், சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர், அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக என்க.

தசரதன் விநயமாகச் சொல்லியவற்றை நுணுகி ஆராய்ந்து தெளிந்து பின்பு அணிவுதோன்ற இனிது கூறினார் ஆதலால் ஓர்ந்து ஆராய்ந்து உறுதிபுறக் கூர்ந்து சொன்னார் என்றாம்.

இஃது, அவையிலொன்று சொல்லுகின்றவன் முன்னதாக அறிந்துகொள்ள வேண்டியதைக் கூறுகின்றது.

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1797

அவை என்றது காரியங்கருதிப் பலர் வந்து ஒருங்குகூடி யிருக்கும் இடம். சபை எனவும் இது வழங்கப்படும். அதில்

அமர்ந்துள்ளார் அது இயல்பினை உணர்த்தி நிற்றலால் இஃது இருமடி ஆகுபெயர்.

சொல்லின் தொகை என்றது சொற்களின் தொகுதியை. அவை, பெயர் வினை இடைஉரியென நால்வகையாய் நடைபெற்று, வெளிப்படை இலக்கணை குறிப்பு எனனும் மூவகை நிலைகளில் நின்று பொருளுணர்த்தும் ஆதலால் அவற்றின் இயல்பினையும் சூழ்வினையும் வழுவற வுணர்ந்திருக்கவேண்டும் என்பார் சொல்லின் தொகையறிந்து என்றார். சொற்களின் நிலையறிந்திருந்தாலும் தூய்மையிலாராயின் நல்லோரால் அவர் சொல் நன்கு மதித்துக்கொள்ளப் படாதாதலால் சொல்லறிவோடு தூய்மையும் வேண்டும் என்பார் அறிந்த தூய்மையவர் என்றார்.

சொற்களின் தொகைத் திறங்களைத் தெளிந்த தூய்மையினை யுடையவர் அவையிலொன்று சொல்லுங்கால்

அதனியல்பினை முதலில் அறிந்து அதற்கியைய ஆராய்ந்து பின் சொல்ல வேண்டும் என்பதாம்.

சொல்லின் தொகையறிதல் அவையறிதலுக்கும்; தூய்மை ஆராய்தலுக்கும் ஏதுவாக இதில் எண்ணநின்றன.

தனியே யமர்ந்து தானாக ஆராய்ந்திருந்தாலும் அவையின் அளவினையறிந்து அதற்கியைய அது பொழுது ஆராய்ந்து கொள்ளவேண்டும்; இன்றேல் பழைய ஆராய்ச்சி பயனின்றாய் முடியும் என்பது தோன்ற அவை யறிந்து ஆராய்ந்து என்றார்.

அறிதல் பொதுவாக நோக்கி யறிதல்; ஆராய்தல் சிறப்பாக ஆன்றி உணர்தல். அவை அறிவும் ஆராய்வும் உள்வழியே ஒரு சொல்லுக்கு உயர்வுண்டாகு மாதலால் அவ்வுண்மை தோன்ற அவை யிரண்டும்

அதனை முறையே தழுவி முன்னர் நின்றன.

சொல்லின் தொகையறிவும் தூய்மையும் அவையறிவும் ஆராய்வும் என்னும் இந் நலங்களையுடையவனே அவையின் ஒன்று சொல்லவல்லவன் என்பதும், அல்லாதவன் அங்குச் செல்லலாகாதென்பதும், இதன் திரண்ட பொருளாம்.

1798 திருக்குறட் குமரேச வெண்பா.

அறிவும் ஆராய்ச்சியும் மிகவுடையவனாயினும் அவையின் இயல்பினை முதலில் அறிந்துகொண்டே ஒருவன் அங்குப்பேச வேண்டும் என்பது கருத்து.

பல் நூல்களையும் வழுவறக்கற்றுப் புனிதமும் தெளிவும் பொருந்தி நின்றவராயினும் அவையின் நிலையினை யறிந்தே உயர்ந்தோர் உரைசெய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசிட்டர்பால் உணரப்படும்.

கதை.

தசரதனுக்குக் குல குருவாகவும் அமைச்சராகவும் வசிட்டர் அமர்ந்திருக்குங்கால் அம்மன்னன் தன் அருமைத் திருமகனாகிய இராமனுக்கு முடி சூட்டக்கருதினன். அக் கருத்தை உறுதித் துணைவரோடு உசாவித் தெளிய விழைந்து ஓரவையைக் கூட்டினன். சுமந்திரன் முதலிய மந்திரிமார்களும் வேறுபல அறிஞர்களும் ஆக அறுபதினாயிரவர் அங்குவந்து கூடினர். அவரனைவரினும் இவர் முதல்வராயிருந்தார். அரசன் அரியணையிலமர்ந்து உரிமையோடு அவையினை உவந்து நோக்கித் தான் உள்ளியுள்ளதை உற்றவருளங்கொள்ள உரைத்தான். இராமன் அரசனுவதை எண்ணி மகிழ்ச்சியும், ஆட்சியை விட்டுத் தசரதன் பிரிவதை நோக்கி வாட்டமு முடையாராய் அனைவரும் மறுகி யிருந்தார். இரண்டு கன்றினுக்கு இரங்குமோ ராவென இருந்தார் என்று அன்று அவர்

மறுகின்றதைக் கம்பர் மிக அழகாக
உவமித்துள்ளார். இங்ஙனம் இருந்தவர்
பின்பு ஒருவாறுதேறி அரசனது கருத்தையும்
பருவத்தையுங்கருதி யிசைந்தாராயினும்
உரைசெய்ய நாணி ஒடுங்கியிருந்தார்.
அவ்வமயம் இவர் அவ் அவையின் நிலையினை
யறிந்து அரசனை யெதிர்நோக்கி மேலுறுவதை
ஆராய்ந்து அவன் கருதியவாறே உறுதிபெற
வுரைத்தார். இராமனது பெருமையையும்
அரசினை ஆளுதற்குரிய பருவமுடையனுய்
அவன் நிலவி நிற்றலையும் பிற நலங்களையும்
தெளிவுறக் கூறினர்.

பொன்னுயிர்த்தபூ மடந்தையும் புவியெனுந் திருவும்
இன்னுயிர்த்துணை யிவனென நினைக்கின்ற இராமன்
தன்னுயிர்க்கென்கை புல்லிது தற்பயந் தெடுத்த
உன்னுயிர்க்கென நல்லன் மன்னுயிர்க்
கெலாமுரவோய் (1) 72-ம் அதிகாரம்
அவையறிதல். 1799

ஷறத்து நாமொரு பொருளினிப ப

கல்கின்ற தெலமே
அறத்தின் மூர்த்திவன் அவதரித்தா
னென்ப தல்லால்
பிறத்தி யாவையுங் காத்தவை பின்னுறத்
துடைக்கும்
திறத்து மூவருந் திருத்திய திருத்தமத்
திறலோன். (2)
வாரமென்னினிப் பகர்வது வைகலு
மனையான்
பேரினல் வருமிடையுறு பெயர்கின்ற
பயத்தால்
வீரநின்குல மைந்தனை வேதியர்
முதலோர்
யாரும் யாஞ்செய்த நல்லறப்பயனென
இருப்பார். (3)
மனிதர் வானவர் மற்றுளார் அறங்கள்
காத்தளிப்பார்
இனியிம் மன்னுயிர்க் கிராமனிற்
சிறந்தவரில்லை
அனையதாதலின் அரசநிற் குறுபொருளா

ளறியற்

புனித மாதவ மல்லதொன றில்லெனப் புகன்றன். (4)

இங்ஙனம் இவர் புகன்றதைக் கேட்டுத் தசாதனும பிறரும் பெருமகிழ்ச்சி கொண்டார். அவையிலுள்ளாரிபல்பினை யறிந்து அன்று இவர் ஆராய்ந்து சொல்லியவாய்மையையும் தூய்மையையும் அனைவரும் வியந்து புகழ்ந் தார். அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக, சொல்லின் தொகையறிந்த தூய்மையவர் என்னும் உண்மைக்கு இவர் உரியவராய் நின்றார்.

நின்ற அவையின் நிலையறிந்து நீதிநிலை
ஒன்ற வுணர வுரை.

அவையறிந்து சொல்லுவோரே அறிவோராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

712 ஏனை

சுமந்திரனன் கெண்ணி யிடைதெரிந்து
கோனவைமுன் சொன்னான்
குமரேசா — ஆன

இடைதெரிந்து நன்குணர்ந்து
சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்.

(உ)

இ—ள்.

குமரேசா! சுமந்திரன் அமயமறிந்து உறவுறுகை யோர்ந்து அரசவை முன் என் இனிது சொல்லினான் எனின், சொல் 1800

திருக்குறட் குமரேச வெண்பா.

லின் நடை தெரிந்த நன்மையவர், இடைதெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக, என்க.

அவையின் நிலையினை எதிர்ந்து நின்று வசிட்டர் கூறி முடிக்கபின் அமயமறிந்தெழுந்து கூர்ந்து ஆராய்ந்து

மன்னனது மனநிலை தெளிந்து இனிது கூறினான் ஆதலால் நன்கு எண்ணி இடைதெரிந்து சொன்னான் என்றும். கோன் அவை என்றது தசரதன் உவந்து வீற்றிருந்த சபையினை. ஆனை என்றது தனக்கு இதமான என்றவாறு.

இஃது அவையின் செவ்வியறிந்து கூறுக என்கின்றது.

இடை என்பது ஈண்டுக் காலக்கூறுபாட்டை யுணர்த்தி நின்றது. இடைதெரிந்து =

அமயமறிந்து; அஃதாவது தன் சொல் இனிது செல்லுதற்குரிய சமயந்தெரிந்து என்றவாறு. படையுலாப் போக்கி இடைதேறி இருந்து எனப் பெருங்கதையிலும், அப்பே யிடைதந்து இது கேட்க எனச் சிந்தாமணியிலும், இடை யொழிவின்றி எனப் பரிபாடலிலும், உடைபோர போல இடை யின்று குறுகி எனப்புறத்திலும் நின்று இஃதுணர்த்தும்

பொருளை யுணர்க. சொல்லின் நடைதெரிந்த = சொற்கள் பொருள்களை புணர்த்திச் செல்லுந் திறங்களை யறிந்த.

மேல், சொல்லறிந்த தூய்மையவர் அவையறிந்து சொல்ல வேண்டும் என்றார்; இதில், தமக்கிதமான அமயமும் அவர் அறியவேண்டும் என்கின்றார்.

சொற்களின் நடையினை யறிந்த நன்மையினை புடையவர் அவையில் ஒன்று சொல்லுங்கால் இனிய சமயமறிந்து மிகவுந் தெளிந்து செவ்விதாகச் சொல்லவேண்டும் என்பதாம்.

சொல்லின் நடை தெரியாத புன்மையவர் இடை தெரி யாது சொல்லி அவையின் இழிவுறுவாதலால் அது தெரிந்த நன் மையவர் உணர்ந்து சொல்லுக என்றார்.

தாம் சொல்லுகின்ற பொருளை அவையிலுள்ளவர்கள் விருப் பத்தோடு கேட்டற்குரிய சமயத்தை யறிந்து

எதனையும் தெளிவுறச் சொல்ல வல்லவரே என்றும் வெல்லும் சீராய் அவையில் விளங்கி நிற்பர் என்க.

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1801

கேட்பாரை நாடிக் கிளத்தப் படும்பொருட்கண்
வேட்கை யறிந்துரைப்பர் வித்தகர்—வேட்கையால்
வண்டு வழிபடரும் வாட்கண்ணாய் தோற்பது
கொண்டு புகாஅர்வை. என்ற பழமொழி யீண்டுக் குறிக் கொள்ளத்தக்கது.

வித்தகர் = அறிஞர், சதுரர்.

அவையில் பிறரொருவன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது அவசரமதியால் இடையே ஒருவன் எழுந்து பேசுதலும், அவையிலுள்ளாரது

கருத்தையும் நிலையையும் குறித்தறியாமல் தன் குறிப்பையே முனைந்து கூறத்தொடங்குதல் கூடாதென்பார் இடை தெரிந்து என்றும், தான் கூறத்துணிந்த பொருளைக் கேட்பவர் விரைவில் இனிதுணர்ந்து உவந்து கொள்ளுமாறு முன்னதாகவே நன்றாகத் தெளிந்து கொள்ளவேண்டும் என்பார் நன்குணர்ந்து என்றும், இதில் நலமுறக்கூறினார்.

சொல்லின் நடைதெரிந்து நல்லவராயிருந்தாலும் அவையில் இடைதெரியாது சொல்லின் அவர் இழிவடைவர் என்பது குறிப்பு.

தமக்குரிய சமயமறிந்தே அறிவுடையார் அவையில் தெளிவுறச் சொல்லுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சமத்திரன்பால் உணரப்படும்.

கதை.

தசரதனுடைய மந்திரிகள் அறுபதினாயிரவருள் மதிவலத்தினும் மன நலத்தினுஞ் சிறந்த சுமந்திரன் முதல்வனாய் நின்று வருங்கால் இராமனுக்கு முடிசூட்டுவதை முன்னிட்டு அம்மன்னவன் ஓர்சபை கூட்டித்தன் கருத்தை அந்தக் குழுமியிருந்த அனைவருக்கும் அழகுறக்குறிப்பித்தான். அவன் உரைத்தமொழிகளால் வசிட்டர் அவன்உளத்தை யோர்ந்தார். அரசர்பெரும! நீ கருதியபடியே செய்தல் தகுதியுடையதாகும்; இராகவன் நெறிவழுவாமல் நின்று இவ்வுலகினைப் பேணுவான்; இனிப் பொருந்தவம் போக நீ அருந்தவஞ் செய்யலாம் என அவ் இருந்தவன் சொல்லினான். அதனால் உவந்தவுள்ளத்தனாய் அம் முனிவரைப் புகழ்ந்து கூறி 1 802 திருக்குறட் குமரேச வெண்பா.

அவன் அமர்ந்திருந்தான். அது பொழுது சுமந்திரன் எழுந்து அவையிலுள்ளவர்களுடைய நிலைகளை யுணர்ந்தான். இராமன் அரசனாக வருதலை நினைந்து மகிழ்ச்சியும், தசரதன் பிரிந்து போதலை எண்ணி வருத்தமும், அவர் வாய்ந்திருத்தலைத் தெளிந்தான். இடைதெரிந்து அரசனை உரிமையோடு எதிருற நோக்கினன். மன்னர் பெரும ! எங்கள் மன நிலைமையை என்னென்றுரைப் பேம்; இராமனைப் பெறுதற்கு விரும்புகின்ற எங்கள் நெஞ்சம் நின்னைப் பிரிதற்கு அஞ்சுகின்றது. ஆயினும் மரபு நிலைதிரியாமல் நீ உரைசெய்தபடியே முறைசெய்யவேண்டும். முடிபுனைதலை முன்னர் முடித்து மேல் நிகழ்வதைப் பின்னர் எண்ணுவாம் என நன்னயம் பெறவுரைத்தான். இவனது விநயமொழிகளை மன்னன் வியந்துகேட்டு நன்று நன்றென நயந்து

புகழ்ந்து அரண்மனைக்குப்போய் இராமனை அழைத்து வரும்படி பணித்தான். முனிவர் உரைசெய்யும் வரையும் அமைதியாயிருந்து அதன்பின் அவையின் இயல்பு நோக்கி அமைந்து எழுந்து அரசன் முதலாக அனைவரும் உவகையுற மொழிந்த இவனது புலமையினையும், அவையறிவின் நன்மையையும், வியந்து அனைவரும் புகழ்ந்தார். இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின் நடை தெரிந்த நன்மையவர் என்னும் உண்மைக்கு உரிமையாய் அன்று இவன் உணர்த்தி நின்றான்.

பழுதில் மாதவன் பின்னொன்றும் பணித்திலனிருந்தான்

முழுதுமெண்ணுறு மந்திரக் கிழவர்தம் முகத்தால்

எழுதி நீட்டிய இங்கிதம் இறைமகற் கேறத்

தொழுத கையினன் சுமந்திரன் முன்னின்று சொல்லும் (1)

உறத்தகும் ஆசிரமத்தெக்கன் றுவக்கின்ற மனத்தை
துறத்தி நீயென்னுஞ் சொற்சுடும் நின்குலத்தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்
றறத்தி னுடங்கினிக் கொடிதென லாவதொன்றியாதே. (2)

புரைசை மாக்கரி நிருபர்க்கும் புரத்துறை வோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர் க்கும் முனிவர்க்குமுள்ள
முறை ரச மார் ப்பதின் முதல் மணிப்புதல்வனை முறையால்
அரைசனுக்கிப் பின் அப்புறத் தடுத்தது புரிவாய். (3) 72-ம் அதிகாரம் அவையறிதல். 1803

என்ற வாசகஞ் சுமந்திரன் இயம்பலும் இறைவன்

நன்று சொல்லினை நம்பியை நளிர்முடி சூட்டி

நின்று நின்றது செய்வது விரைவினில் நீயே

சென்று கொண்டனை திருமகள் கொழுநனை யென்றான். இடைதெரிந்து நன்குணர்ந்து சுமந்திரன் அன்று அவையில் சொல்லிய உண்மைகளை இவை சுவையுற உணர்த்தி நிற்றல் காண்க. தன் பிரிவினை எல்லாரும் விரும்பியுள்ளார் போலும் என்று தசரதன் நினைந்து கொள்ளாவண்ணம் காலம்பார்த்து உறுதிபெற இவன் உணர்ந்துரைத்த ஒண்மையையும் தன்மை யையும் இவற்றுள் உய்த்துணர்ந்து கொள்க.

ஊரும் புனையான் உறுபுனலோர்ந்

துய்த்தல்போல்
சேரும் அவையறிந்து சேல்.
உரியகாலம் ஓர்ந்தே அவையில் உரை செய்யவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

713 அன்று விகர்னன் அவையறியா மற்சொல்லிக்
குன்றினன் என்னே குமரேசா—நன்று
அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில். (௩)

இ—ள்.
குமரேசா! சொல்லின் வகையறிந்திருந்தும் அவையறியாது சொல்லியதால் விகர்னன் என்

அவமதிப்புற்றான் எனின், அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர், சொல்லின் வகை அறியார் வல்லதூஉம் இல் என்க.

அன்று என்றது கண்ணனுக்கு இடர் செய்யத் துரியோதனன் முதலாயினோர் குழுமிச் சதியாலோசனை செய்த அக்காலத்தை. தான் அவை நிலையறியாது சொல்லியதால சிறியவன் இங்கேன் வந்தான் என்று கடுமொழி கூறி இவனை அவர் இழித்தாராதலால் குன்றினன் என்றாம்.

இஃது அவையறியா வழிவரும் இழிவு கூறுகின்றது.

226

1804 திருக்குறட் குமரேச வெண்பா.

அவை அறியார் = அவையினது இயல்பினை அறியாது. இதி லுள்ள அறியார் என்னும் எதிர்மறை முற்றை எச்சமாக்கிக் கொள்பவர் என்பதனோடு கூட்டி முடித்துக்

கொள்க.

சொல்லல் மேற்கொள்பவர் = சொல்லுதலைத் தம் மேற் கொள்பவர்; சொல்லத்தொடங்கினவர் என்றவாறு.

வல்லதூஉம் என்றது கற்று வல்ல கலையும் என்றவாறு. இதில் அளபெடை இன்னிசை நிறைத்து நின்றது. அறிவும் இல்லை என்பதை அவாவி நிற்றலால் உம்மை இறந்தது தழுவிய எச்சம் என்க. சொல்லின் வகை என்றது வெளிப்படை குறிப்பு இலக்கணை என மேற்குறித்தவாறு நின்று பொருளுணர்த்தும் அதன் விதங்களை.

மேல், அவையின் இயல்பறிந்து சொல்லுக என்றார்; இதில் அங்ஙனம் அறிந்து சொல்லாக்கால் இழிந்துபடுவாய் என்கின்றார்.

அவையினது நிலையினை அறியாமல் ஒன்று சொல்லுதலைத் தம்மேற் கொள்வார், நன்கு சொல்லுதலின் வகையும் அறியார்; அதுவுமன்றித் தாம் கற்று வல்ல கலையும்

அவர்க்கு இல்லையாம் என்பதாம்.

பல நூல்களையும் வழுவறக் கற்றுத் தெளிந்திருப்பினும் குழுமியுள்ளாரது இயல்பினை யறியாமல் அவையில் ஒன்று சொல் லின் அவன் சொல் அங்கு எலாது இழிவுபடும்; படவே சொல்லத்தெரியாதவன் எனவும் கல்வியில்லாதவன் எனவும் எல்லாரும் அவனை எள்ளி இகழ்வர் என்றவாறு.

சொல்லின் வகையறியும் கல்வி வன்மையும் உண்மையாக வுடையனாயினும் அவையறியானாயின் அவை யாதும் இலனாய் இழிக்கப்படுவான் என்பார் அவையறியார், சொல்லின் வகையறி யார் வல்லதூம் இல் என்றார். அவையறியானை வகையறியாத வன் என்றே வையம் வையும் என்பதாம்.

அவையறிந்து ஆராய்ந்து இடைதெரிந்தே சொல்லவேண்டு மென்

மேலநுளிபதை நினைந்து குறைந்த
கல்வியுடையாராயின் அங்ஙனம் அறிந்து
தெரிந்து சொல்லவேண்டும்; நிறைந்த கல்வி



யாளர் அதனை எதிர்பாராது சொல்லின்
அதனால் என்ன வந்து விடும் என்பாரை
நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

சிறந்த அறிவும் தெளிந்த கல்வியும்
அவையறியாவழி இழிந்துபடும் என்ற
இதனால் அவையறிதலின் உயர்வு
இனிதுணரலாகும். எவ்வளவு
கல்வியுடையராயினும் அவையின் அளவினை
அறியாமல் யாதும் சொல்லலாகாதென்பது
கருத்து.

ஒருவன் சிறந்த
கல்வியுடையனாயினும் அவையறியாமற் சொ
ல்லின் அங்கு அவன் இழிவுறுவான் என்பது
இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை

விகர்ணன்பால் உணரப்படும்.

## கதை.

விகர்ணன் என்பவன், துரியோதனன் துச்சாதனன் முத லாயினோர்க்கு வயதில் இளையவனாயினும் அறிவில் அவரெவரினும் பெரியவனாயிருந்தான். மிக்க மனவுறுதியுடையவன். உடன் பிறந்தாராய அவ் விடம் போன்றார் செயல்கட்கு என்றும் இவன் உடன்படாதவனாய் நின்றான். பாண்டவர்களைச் சூதாடித் தொலைத்துத் துரோபதைக்கு அவர் இடர் விளைத்தபொழுது நடுநிலை பிறழாமல் இடையே நின்று சில நீதிகளை இவன் எடுத்து மொழிந்தான். கொடிய காரியங்களைக் குறித்து அவர் கூடிப் பேசுங்கால் இவன் ஊடே புகுந்து அவை கூடாதென்பான். இரக்கமுள்ள நெஞ்சினன்; யாரும் இன்னலுற இவன் யாதும் இசையான்; ஆதலால் செல்லும் இடமாயினும் செல்லா

இடமாயினும் ,தான் உள்ளியதை அந்த இவன் சொல்லியே விடுவான். இத னல் பலர்க்கு இவன் நல்லவனுயினும் சகுனி முதலிய சிலர் இவனை இனந்தெரியாமற் பேசுபவன் என்று எள்ளி வந்தார். வருங்கால் பாண்டவர்க்கா கக் கண்ணன் தூதனுகி வந்து ஓதுவன வெல்லாம் ஓதிவிட்டு இரவில் தனித்த ஒரு மாளிகையில் தங்கி யிருந்தான். அவ்வமயம் அவனைக் கொன்றுவிட வேண்டும் என்று துரியோதனன் காவாக ஓர் அவை கூட்டினான். தன் எண்ணம் போலவே இசைந்தொழுகும் அமைச்சர் முகங்களை அம்மன்னன் நோக்கி, யாதவன் தனித்து வந்தான் என் செய்வது இயம்பு மென்ருன். இதனைக் கேட்டவுடனே மகிழ்ச்சி மீக்கூர்ந்து 1806 திருக்குறட் குமரேச வெண்பா.

அவனைச் சதிப்பதே தருமமென்று

ஒவ்வொருவரும் தத்தம் மதித் திறந்தோன்றக் கூறினர். சிலர் உறங்கும்போதே கொன்று விட வேண்டும் என்றார். வேறு சிலர் கதவை இழுத்து மூடி நெருப் பை வைத்துவிடலாம் என்றார். இங்ஙனமே வேறு வேறு வகையில் தம் புன்மையை விளக்கி விரிவுரை பகர்ந்தார். அங்கிருந்த முதியவனாகிய திருத ராட்டி ரனும் " இரும்புலி வலையிற்பட்டால் விடுவரோ எயினராணோர், வரம்பில் வெஞ் சேனையோடும் வளைந் தினி மாயன் தன்னைக், கரும்பொழு தகலுமுன்னே கொல்வதே கருமமென்றான். " இவற்றையெல்லாங் கேட்டுக் கொண்டிருந்த விகர்ணன் இறுதியில் எழுந்தான். அவரெல்லோரையும் நோக்கி ஞன். நீங்கள் சொல்வனவெல்லாம் நல்லனவல்ல ; மிகத்தீயவை; கொடிய நரகுக்கே இஃது அடிகோலி :படியாம்; படியில் யாரும் இப்படி யுரை பகரார் என்று பரிந்து

கூறினன். அங்கிருந்தவ செல்லோரும் இவனைச்சினந்து நோக்கி " உன்னை யார் அழைத்தது? என் இங்கு வந்தாய்? இந்த அரச சபையில் சின்னவனாகிய உனக்கு என்ன பேசத் தெரியும்? அறிவிலியே! வெளியே போ என்று வெருட்டினர்." இவன் வெருண்டு நொந்து வெளியே சென்றான். பல நூல்களை வழுவற அறிந்து, சொல்லுதலில் வல்லுநனாயிருந்தும் அவையின் இயல்பறியாது சொல்லியதால் அன்று இவன் நகையடைந்து நின்றான்.

அவையறியார் சொல் லல் மேற்கொள்பவர், சொல்லின் வகையறியார் வல்லதூஉம் இல் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து இரங்கியது. கண்ணிலான் உரைத்த மாற்றங் கேட்டலுங் காவலோரின்

மண்ணிலா ரிதற்கு முன்பு தூதரை வளைந்து கொன்றார்

எண்ணிலா இந்த எண்ணம் எவ் வுழிக் கற்றதென்று

வெண்ணிலா முறுவல் செய்து விகர்னனும் விளம்பலுற்றான்.

மூத்தவ ரிளையோர் வேதமுனிவரர் பிணியின் மிக்கோர்

தோத்திர மொழிவோர் மாதர்தூதரென் றிவரைக் கொல்லிற்

பார்த்திவர் தமக்கு வேறுபாவமற் றிதனி னில்லை

பூத்தெரி தொடையாய் பின்னும் நரகினும் புகுவரென்றான். இவை விகர்னன் சொல்லியன. இத்தகைய உயர்ந்த நீதிகளை

72-ம் அதிகாரம் அவையறிதல்.



யறிந்திருந்தும் அவையறியாத ஒன்றால் யாதும் அறியாதவனென அங்கிருந்தவர்களால்

இவன் அவமதிப்புற்றான். அவையறியா
வழி மற்ற அறிவெல்லாம்
நவைபுறுமென்பதை அதன் பின்பு இவன்
அறிந்து தெளிந்தான்.

ஆழ்ந்த அறிவ னெனினும்
அவையறியான்
தாழ்ந்து படுவான் தகை.

அவையறியாதவன் அவமதிப்படைவான்
என்பது இதனால் கூறப்பட்டது.

---

714 ஓதியுயர் வீடுமரேன் ஒன்றுமுரை
யாதிருந்தார்
கோதுடையார் முன்னே
குமரேசா—போத
ஒளியார்முன் ஒள்ளிய ராதல்
வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(ச)

இ—ள்.

குமரேசா! திருமறுதியர் முன் நீதிகளை யுரைத்த வீடுமர் என் துரியோதனர் முன் யாதுங் கூறாது ஒடுங்கி இருந்தார் எனின், ஒளியார் முன் ஒள்ளியாதல்; வெளியார் முன் வான் சுதை வண்ணம் கொளல் என்க.

நூ லெல்லாம் து ணித்து நாடி நுழைபுலனுடையாகி, மேலெல் லாம் விரும்பிப் போற்ற மேன்மை பெற்றிருந்தார் ஆதலால் ஓதி உயர் என்றும். கோதுடையார் என்றது துச்சாதனன் சகுனி முதலாயினோரை.

இஃது அறிவில்லார் முன் அறிவுடையார் யாதுங் கூறலாகா தென்று கூறுகின்றது.

ஆதல் = ஆகுக. கொளல் கொள்க.

இவை தல் லும் அல் லும் சாறுவந்த உடன்பாட்டு வியங்கோள்கள்.

ஒளியார் என்றது அறிவிற் சிறந்தாரை. ஒள்ளியார் எனற் பாலது ஒளியார் என நின்றது. இஃது ஒண்மை என்னும் பண்படியாய்ப் பிறந்த பலவின்பாற் பெயர். ஒண்மை = அறிவு.



வெண்பா.

வெளியார் என்றது அறிவில்லாரை. இது வெண்மை என்பதன் அடியாகப் பிறந்தது. வெண்மை = அறிவின்மை. வான்சுதை வண்ணம் = வாலிய சுண்ணத்தின் நிறம்; வால்சுதை என்பது வான்சுதை என நின்றது. வாலிய ஒளி என்புழி வான்கதிர் என்றது போல் வாலிய = சுத்தமான. இது சுதையின் இயல்பு தோன்ற நின்றது. சுதை என்றது வெண்மை சுண்ணச்சாந்து பூந்தேன்

முதலியவற்றைக் குறித்து வரும். மணிச்சுவைக் குன்றமும் மண்டபத்தச்சியும் என்றவிடத்து இது நின்றுணர்த் தும பொருளையுணர்க.

மேல், கல்வியில் வல்லுநராயினும் அவையறிபாதவன் கவை புறவன் என்றார்; இதில், அறிவில்லார் அவையில் அறிவுடையா ரொருவன் அமர்ந்திருக்கவேண்டிய விதம் அருளுகின்றார்.

சிறந்த அறிவுடையார் முன் தாமும் தெளிந்த அறிவுடையராய் விளங்கவேண்டும்; ஏனை அறிவில்லார் முன் யாதும அறி விலார் போல் அமைந்துகொண்டு அறிவுடையார் அமர்ந்திருக்க வேண்டும் என்பதாம்.

சொல்லின் வகைகளை யெல்லாம் நன்குணர்ந்து கல்வியில் வல்லுநராயினும் அவையறியாராயின் அவர் நவையுறுவர் என்ன அப்படியாயின் அறிவுடையான் ஒருவன் அறிவிலார் அவையில் எப்படி

அமர்ந்தி ருக்கவேண்டும் என்பாரை நோக்கி இஃது இயம் பியதாகக காண்க.

உணர்வுடையாரை ஒள்ளியார் எனவும் அஃதில்லாதாரை வெள்ளியார் எனவும் கூறியது உள்ளீட்டின் உண்மை இன் மைகளை முறையே நோக்கி என்க. வெள்ளைக் கோட்டியும் விர கினிலொழிமின்; எனச் சிலப்பதிகாரத்திலும், வெள்ளை மகன் போல் விலாவிற நக்கு; என மணிமேகலையிலும், வெண்மையுடை யார் விழுச் செல்வம எய்தியக்கால்; என நாலடியாரிலும், வெள் ளைமை அறிவின்மையை யுணர்த்தி நிற்றல் காண்க. விளையுமாற் றம் நின் திருவடியினுமிக வெள் ளையாயது எனச் சாத்தகி பல ாமரைச் சினந்துரைத்ததும், வெள்ளியை யாதல் [illegible]ம்பினை என மாவ[illegible]ரனை வெள்ளி மொழிந்ததும், அறிவு குன்றிய

ஒருவனைக் குறித்து ஐயோ பாவம் அவனுக்கு ஒன்றும் தெரி
யாது; சுத்த வெள்ளை என உலகர் வழங்குவதும் கண்டு உள்ளத்
தக்கன. கற்றாரைக் கற்றாரே காமுறுதல்போல் மூடர்களை மூட
ர்களே உவப்பாராதலால் அவர் உவந்து கொள்ளுமாறு அறிவிலார்
போல் மிக அமைந்துகொள்ள வேண்டும் என்பார் வெளியார்
முன் வான்சுதை வண்ணம் கோளல் என்றார். முன் வாக்கியத்
தில் ஒள்ளியார் என்றது போலவே பின்னதிலும் வெள்ளியார்
என்று நேரே விளம்பிவிடாமல் வான் சுதை வண்ணம் எனப்
பிறிதொரு வழியே தழுவி இலக்கணையால் பொருள் கொள்ளு
மாறு இணைத்து வைத்தது, அவ் அறிவிலிகள் முன்பு தமக்குரிய
ஒள்ளிய தன்மையை ஒளித்து வெள்ளிய தன்மையை மேவி
வேடங்கொண்டு நிற்கும் அவர் விரகு தோன்ற என்க.

தமக்கு உண்மையான அறிவினை மறைத்து அறிவிலார்
அவையுள் அறியாமையை அறிவுடையார் மேற்கொள்ளவேண்டும்
என்று அருளுகின்ற இவ்விடத்தில், தனக்கு உரிமையான வெண்
மை நிறத்தைவிட்டு அறிவின்மையை உணர்த்துமாறு வான் சுதை
வண்ணம் என்னும் சொற்றொடரை அணிபெற அடிகள் ஊன்றி
வைத்துள்ள நுண்மையை உய்த்துணர்ந்துகொள்க. சிறிதுகாலம்
வரையும் ஒருவரோடும் ஒன்றும் நீர் உரையாடலாகாதென்று தன்
தலைவனை நோக்கி உழையிருந்தானொருவன் கூறுங்கால்

அன்னால் நீ பேசாதைம ...
கண்ணைமூடிக்கொண்டிரு. என்றதுபோல் வழக்கு நவிற்ற
யோடு பிறிதினவிற்சியுந் தோன்ற இது பிறங்கி நிற்றல் காண்க.
கல்வியறிவுடையார் அவையிலாயின் தன் கல்வி வன்மை
தோன்றச் சொல்லாடவேண்டும்; அஃதில்லார் முற்படின் யாதும்
கல்லாதவன்போல் கலந்திருந்து நல்ல அறிவுடைய ஒருவன் செல்
லவேண்டும் என்றவாறு.
உணர்வுடையார் முன்னன்றி உணர்விலிகள் முன் உணர்ந்
தார் யாதும் உரையாடலாகாதென்பது கருத்து.
தாம் எவ்வளவு கல்வியாளராயிருப்பினும் புல்லரிடம் நல்



லோர் ஒன்றும் சொல்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீடுமர்பால் உணரப்படும்.

கதை.

பேரறிவாளராகிய வீடுமர் துரியோதனனது கொடுமைக்கு இரங்கி

அமையம் வாய்த்த போதெல்லாம் உறுதிகளை உளங்கொள உரைத்து வந்தார். வந்தும் இன்மைமிக்க அவன் உண்மை யாதும் உணராதாய்த் தீமையின் கண்ணேயே செழித்து நின்றான். குல முதல்வரும் தலைமை யமைச்சருமாய் நிலவி நின்ற இவர் அவன் நிலையை நினைந்து நெஞ்சம் கவன்றார். கண்ணன் தூது வந்தபொழுது அரச சபையில் வைத்து விதுரனை அம்மன்னன் வெறுத்து வைததால் அவன் வெகுண்டெழுந்து தன் வில்லை முறித்தெறிந்து விட்டு இனி எவ்வகையிலும் அமரில் துணைபுரியேன் என்று அகன்று போனான். இதுவரையும் பொறுத்து வந்த இவர் அன்று உளம் பொறாதவராய் வெறுத்தார்.

காரனைத்தும் விடு தாரை யன்னபல சரனைகளேவி யமர்கருதும் வில்

வீரனைப் பழுதுரைத்த நீ பகையை யெங்ஙனே

தனிகொல் வெல்லுவாய்

பாரனைத்துமினி யைவராளும் வகை பண்ணு வித்தனை யழிந்ததுன்

பேரனைத்துமென வுள்ளழிந்து சிலபேசினுனுயர் பிதாமகன்.

என்றபடி நாசமுறு போரை நோக்கி இங்ஙனம் இவர் வருந்தி யுரைத்தபொழுது அரசவையிலிருந்த சகுனி துச்சாதனன் முதலிய புல்லிய கூட்டத்தார் சிலர் இவருரையைப் பொருள் செய் யாது தமக்குள்ளேயே யெள்ளி மொழிந்தார். கன்னன் எழுந்தான்.

அம்பரத்தவ ருடன்றுசீறினும் ஓரம்பிலே யழிவர் திண்ணம்யான் வெம்பணிப் பகழி யேவி லாவியுடன் மீளுவான் அமரில்விசயனோ இம்பரிற் புகல இருதளத்தினும் எனக்குநே ரொருவரில்லை யென் றும்பர் கற்பகமுநாண வண்மையிலுயர்ந்த வீரனிவை யுரை செய்

தான், உண்மையில் நல்லவனுயிருந்தும் சேர்ந்த இனத்தின் தீமையால் அறிவு திரிந்து உறுதியையும் நிலையையும் ஓர்ந்து கொள்ளாமல் நேர்ந்துநின்று துடுக்காக மொழிந்த அவனை இவர் உறுத்து நோக்கினர்.

உணர்வுரை கூற விழைந்தார்

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1811

திசையனைத்தினும் விளங்கதானவரை
யிரவிவந்தொரு திசையின்வாய்
நிசியெனப்பொருது வானவர்க்கரசளித்துவந்த
விறனீர்மையான்
விசயனுக்குநிகர் நீகொலோ ? கடவுள் வெண்மதிக்கு
நிகர்வெள்ளியோ ?
வசையில் விற்றொழிலும் வல்லையோ ?
வெனவோரசைவிலாதவ னறைந்தனன்.

இங்ஙனம் உரியவுரைகள் பல எடுத்து

அறிவுதோன்ற அறைந்தும் அரசனது சிறிய இனத்தார் சிறிதும் அடங்காமல் திமிர்ந்துரையாடினர். இனிமேல் இவரிடம் யாதோர் உறுதியும் கூறலாகாதென்று தம்முளத்தில் குறித்துக் கொண்டார். அன்று முதல் யாதோர் அறிவுரையுங் கூறாமல் ஒன்றுமறியாதவர் போலவே அவரோடு இவர் உறைந்திருந்தார். அதன்பின் அவ் அறி வில்லாதாரும் இவரை மிக மதித்து வந்தார். போர் முகத்தில் கணைகள்பட்டு இவர் வீழ்ந்தபொழுது பாண்டவர் முதலாக அங்கு ஈண்டியிருந்த அறிஞர்களுக்கு வேண்டிய நீதிகளை இவர் விரித்து ரைத்தார். அவ்விரிவுரையைக் கேட்ட அனைவரும் இவரது அறி வுயர்வை வியந்து இத்தகைய ஒண்மையுடையவர் அப்புன்மை யாளரோ டு எப்படிப் பொருந்தியிருந்தார் ! என்று இரங்கி நின் றார். அறிவுடையார் முன் போறிவுடையாராகவும், அறிவிலிகள் பால்

யாதும் அறியாதவர் போலவும் இவர் அமைந்திருந்தமையை நினைந்து அவையறிதலில் அக்காலத்தில் சிறந்திருந்தவரெல்லாரும் இவரைப் புகழ்ந்து போற்றி வந்தார். ஒளியார்முன் ஒள்ளியராதல்; வெளியார்முன் வான்சுதை வண்ணங் கொளல் என்னும் உண்மை மொழிக்கு இவர் உரியராய் நின்றார்.

புல்லாப்புன் கோட்டிப் புலவ ரிடைப் புக்குக்
கல்லாத சொல்லுங் கடையெல்லாம் கற்ற
கடாஅயினுஞ் சான்றவர் சொல்லார் பொருண்மேற்
படாஅ விடுபாக்கறிந்து.

(நாலடியார்)

வெள்ளியர்முற் சொல்லாட மேவலினும் வெம்முட்சேர்
கள்ளிமேற் செல்லனலங் காண்.

அவையின் இயல்புக்குத் தக்கபடி

அறிவுடையார் இகழ்வர் என்பது இதனல் கூறப்பட்டது.

227

1812 திருக்குறட் குமரேச வெண்பா.

715 நாடி யுணர்ந்தும் நகுலன்முற் சொல்லாதேன்
கூடியிருந்தான் குமரேசா—தேடியுறும்
நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. (௫)

இ—ள்.

குமரேசா! நகுலன் முந்துற ஒன்றும் சொல்லாமல் அன்று என் முன்னவர் முன் அடங்கியிருந்தான் எனின், பு.து

வருள் முந்து இளவாச் செறிவு, நன்று
என்ற வற்றுள்ளும் நன்றே என்க.
நாடி உணர்ந்து என்றது பரியியல்
முதலிய கலைகள் பலவும்
பழுதற ஆராய்ந்து அழகுறத் தெளிந்த
அவன் அறிவு நிலை கருதி
என்க. உம்மை அவன்
சொல்லாடுதற்குரிய உயர்வு தோன்ற
நின்றது. தருமன் முதலாயினோர் உரை
யாடும் வரையும் ஒன்
றுங் கூறுமல் அவையில்
ஒடுங்கியிருந்தானுதலால் முன் சொல்
லாது கூடியிருந்தான் என்றும், தேடியுறும்
= கருதியடைகின்ற.

இது, உயர்ந்தோர் முன் ஒருவன்
உரையாடுந்திறங் கூறு
கின்றது.

செறிவு நன்றே எனச் சேர்த்துக்

காண்க. எகாரம் நன்மை
பின் தெளிவு தோன்ற நின்றது.
முதுவர் = முதிர்ந்தவர். என்றது கல்வி அறிவு தவம் பரு
வம் முதலியவற்றாற் பெரியாரினை. இது முதுமை என்
னும் பண்படியாப் பிறந்த பலர்பாற் பெயர்.
முந்து கிளவாச் செறிவு = முற்பட்டுச் சொல்லாத அடக்கம்.
கிளத்தல் = சொல்லல். முந்து கிளவா என்ற விதப்பால் பிந்திக்
கிளக்கலாம் என்பது பெறப்பட்டது. நன்று என்னும் முற்றுக்கு
எழுவாயாய் நிற்கும் செறிவினைக் கிளவா என்னும் எதிர்மறைப்
பெயரெச்சமும், அதனை முந்து என்னும் வினையெச்சமும், அதனை
முந்துவருள் என்பதும் முறையே தழுவி உயர்வுற அழகு செய்து

சிற்றலை யுய்த்துணர்ந்து கொள்க.

## 72-ம் அதிகாரம் அவையறிதல்.

## 1813

மேல், ஒத்தவர் இழிந்தவர் என்னும் இருதிறத்தார் மாட்டும் ஒருவன் அறிந்துகொள்ள வேண்டிய திறங் கூறினார்; இதில், உயர்ந்தார் முன் அவன் உணர்ந்தொழுகவேண்டிய விதங்கூறுகின்றார்.

தம்மினும் பெரியார் முன்பு அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம், நன்று என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட நலங்களெல்லாவற்றுள்ளும் மிகவும் ஒருவர்க்கு நன்றும் என்பதாம்.

பெரியாரவையில் எதனையும் முன்னதாக உரையாது ஒடுங்கி யிருக்கும் அடக்கத்தை ஒருவன் உடையனாயின் அது, அழகு கல்வி

அறிவு செல்வம் ஆண்மை அன்பு முதலிய நலங்களெல்லாம் ஒருங்குகூடி விளைதற்குரிய மேன்மையை அவனுக்கு விளைத்து விடும் என்பார் முதுவருள் முந்துகிளவாச் செறிவு, நன்று என்ற வற்றுள்ளும் நன்றே என்றார். இதில் உம்மையும் ஏகாரமும் உணர்த்திநிற்கும் பொருளை ஊன்றியுணர்க.

கல்வி அறிவு குலம் மேன்மை முதலிய எல்லா நலங்களையும் ஒருவன் ஒருங்கே உடையனாயினும் முதியோர் அவையில், என்ன வந்துவிடும் எனச் சிசுபாலன்போல் உந்தியெழுந்து துடுக்கோடு முந்துற மொழிவனாயின் அவன் எய்தியுள்ள நலங்கள் யாவும் இலனாய் எல்லாராலும் இழிக்கப்படுவனாதலால் அங்ஙனம் இழிந்துபடா வண்ணம் அறிவுடையொருவன் அவையறிந்து அடங்கி ஒழுகவேண்டும் என இஃதுணர்த்தியதென்க.

அவையின் நிலை தன்நிலை அதில்
முந்துகிளந்தால் உறும்
இழிவு அங்ஙனம் கிளவாக்கால் வரும்
உயர்வு முதலியவற்றை
இனிதறிந்து நாவடக்கத்தோடு ஒருவன்
நண்ணியிருப்பனாயின்
அவனது ஒண்மையை வியந்து உயர்ந்தோர்
அவனை உவந்து
போற்றிக்கொள்வர் என்க.

செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின். என்ற

அமிர்தகவளத்தை
ஆர்வமீக்கூர்ந்து ஈண்டு அருந்தி மகிழ்க.
பெரியார் முன் நாவட
ங்கி அமர்ந்திருக்க வேண்டும் என்பது கருத்து.



வெண்பா.

தொகைபடு செஞ்சொல் இலக்கணச் சொல்லே

சூழ்ந்திடுங் குறிப்புச் சொல் மூன்றின், வகை சுயறிந்
துயர்ந்தோர் ஒத்தவர் தாழ்ந்தோர் மருவுமூன் றவையு
மாராய்ந்து, தகையுறி வுயர்ந்தோ ரவையின்முந்
துரையார் சமத்திலெவ்
வாற்றினுங் கிளப்பார், நகைபடுதாழ்வி னொன்றையு
மொழியார் நவைபடாச் சொற்பொருளாய்ந் தோர்;
என்றபடி அவை அறிந்தமைந் திருப்பவரையே
அமைச்சராக அரசர் அமைத்துக்கொள்ள
வேண்டும் என இயலோடு பொருந்த இதனை
இணைத்து நோக்கிக்கொள்க.

பெரியார் அவையில்
அறிவுடையார் எதனையும் முந்துறவுரையார்
என்பது இதில் உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை நகுலன் பால் உணரப்படும்.

## கதை.

நகுலன் என்பவன் பாண்டுமன்னனுக்கு
மத்திராதேவியிடம் பிறந்தவன்.
சகதேவனுக்கு மூத்தவன். தருமர் முதலிய

மூவருக்கும் இளையவன். அழகிலும் அறிவிலும் ஆண்மையிலும் அருச்சுனனுக்கு அடுத்தபடியில்வைத்து எண்ணத்தக்கவன். திரௌபதையே யன்றி இரேணுமதி யென்னும் பேரழகியையும் மணந்து சதாநீகன், நிர்மித்திரன் என்னும் புதல்வரிருவரை முறையே பெற்றுப் பெருமகிழ்வுற்றான். பலகலைகளிலும் இவன் வல்லவன். குதிரையேற்றத்திலும் அதன் இயல்களை யுணர்தலிலும் இவனுக்கு நிகரானவர் எவரும் இலர். வனவாசத்தை முடித்து விராடநகரத்தில் உருவங்கரந்துறைய விரும்பித் தன் முன்னவர் முன்னியவடிவங்கொண்டு விராட மன்னனிடம்போய் மன்னியிருக்க பின்னர் அமயமறிந்து ஒரு நாள் அவனை அணுகி நூலணுடைய குதிரையாளர்கட்கு யான் தலைவனாயிருந்தேன் வாசிகளின் இயல்களை வழுவறத் தெளிந்துளேன் என்று

இவன் அழுதற மொழிந்தான்.

மற்றவன்றனது வாசிமர்திரைக்குத் தலைவராய்
வாழுமாக்களில்யான் உற்றவனொருவன் வாம்பரி
வடிவுமுறைதகு சுழிகளுமொளியும் பற்றிய திறனுங்
கர்தமுங் குரலும் பல்வகைக் கதிகளும் பிறந்த
சொற்றகு நிலனுமாயுவு முணர்வேன் துயருறு
பிணிகளுந் தவிர்ப்பேன்.

72-ம் அதிகாரம் அவைபற்தல்..

1815

மண்டலவீதி கோணமே முதலாம் வாசிக ளுர்
தொழில்வல்லேன்
திண்டிறற்றடந்தேர் பூண்பதற்குரிய செயலுடைப்
பரிகளுந்தேரிவேன்
வண்டிமிரலங்கன் மாலையாய் பாண்டுமைந்தர்போல்
வனம் புகுந்ததற்பின்
உண்டியுமிழந்தேன் உறுதியுமிழந்தேன்
உன்புகழ்கேட்டு வந்தற்றேன்.

என இவன் இதமாக உரைத்ததைக் கேட்டவுடனே அவன் வியந்து உவந்துகொள்ள அங்கிவன் உறை ந்திருந்தான். உறுதி கள் பல செய்தான். ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் சிறப்புற் றிருத்தலை விரித்துரைக்குங்கால் பரிக்கு நகுலன் என இவனைக் குறித்துரைப்பார். கல்வியே எல்லாப்பொருள்களினுஞ் சிறந் தது; அஃதொன்றே உயிர்க்கு உற்றதுணை என இவன் உள்ளங் கொண்டிருந்தான். கல்லாதவரைக் காணின் மிகவும் இழிவாகக் கருதி யகல்வான். உன் உளத்தில் உறுதியாகக் கருதியுள்ள உண்மை என்னை ? எனக்கண்ணன் ஒருமுறை இவனைக் கருதிக் கேட்டபொழுது கல்வியொன்றே சிறந்தது எனத்தான்கருதியுள் ளதாக இவன் கனிந்துசொல்லினன். இவன் சொல்லியதை வில்லி மிக அழகாகச் சொல்லியுள்ளார். இங்ஙனம் அருங்கலை விநோத னாய் அடக்கம் ஆண்மை முதலிய பெருங்

குணங்களெல்லாம் ஒருங்கேகொண்டு இவன் உயர்ந்திருந்தான். கண்ணனைத் தூது விட விரும்பித் தருமன் முதலிய அரசர் பலரும்கூடி ஆராய்ந்த பொழுது விளைவினைக் குறித்துத் தத்தமக்குத் தோன்றியதை ஒவ்வொருவரும் செவ்விதாக விரித்துரைத்தார். அப்பேரவையில் இவன் யாதும் எழுந்து கூறாது அடங்கியிருந்தான். மூத்தோர் உள்ளாரென்று கருதி மூந்துற வார்த்தையொன்றும் ஆடாது முன்னியிருக்கும் இவனை நோக்கிஇங்கு நிகழும் கரும நிகழ்ச்சியில் உன் கருத்தென்னை? யென்று கண்ணன் கேட்டான். அப்பொழுது தன் அண்ணன் முகத்தை இவன் அன்புடன் நோக்கினான். நீ உள்ளியதை உரை என முகமலர்ச்சியால் அவன் குறித்ததை இவன் உவந்தறிந்துகொண்டு பின்பு உரைக்கலானான் "நீங்கள் தூது போயினும் துரியோதனன் யாதும் கொடான்; எங்கள்

உரிமையை இரந்து பெறுதலை விட
இரந்துபடுதல் நலம் ; தோள்வலியால்
பகைவரை எதிர்த்தொலைத்து அதன்பின் பு
உறுவதைச் செய்தலே எமக்கு உரிமையாம்"
1816 திருக்குறட் குமரேச

வெண்பா.

என இவன் உறுதிதோன்ற உரைத்தான்.
முதுவர் என்று கருதி
முந்துறமொழியாதிருந்த இவன், அவர்
விழைந்து கேட்டவுடனே இங்ஙனம்
மொழிந்ததை வியந்து இவனது
அடக்கத்தையும் ஆண்மையையும் அனைவரும்
புகழ்ந்து போற்றினர். நன்றென்று
மற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்துகிளவாச் செறிவு என்னும் உண்மையை
உலகம் அறிய இவன் அன்று உணர்த்தி நின்
றான்.
கேவலந்தீர் வலியபகை கிடக்கமுதற் கிளர்மழைக்குக்

கிரியொன்றேந்து கோவலன்போ யுரைத்தாலும்
குருநாடும் அரசுமவன் கொடுக்கமாட்டான் நாவலம்
பூதலத்தரசர் நாடிரந்தோமென நம்மை
நகையாவண்ணம் காவலன்றன் படைவலியும்
எமதுதடம் புயவலியும் காணலாமே. அன்னநடை
அரம்பைதனை யவுணர் கவர்ந்திட
இமையோரரசுக்காக முன்னமவ ருடன்பொருது
சிறைமீட்டான் நங்குலத்து முதல்வனன்றோ
மன்னவையில் யாங்காண மடவரலைத் துகிலுரிந்த
வலியோன்றன்பால் இன்னமிரந் தவன்குடைக் கீழ்
இருந்தக்கால் நம்மையுலகென் சொலாதே.
கானகம்போய்க் கரந்துறைந்து கடவநாட்
கழித்ததற்பின் கானநீங்கி யீனமிலா வகைவந்தார்
நந்துணைவர் எனச்சிறிது மிரங்கானுகின் மாநகரும்
வளநாடுமுரிமையுந்தன் மொழிப்படியே
வழங்கானுகில் தானறியாதவன் பிறர்போய்க்
கற்பித்தாலறிவனோ தாணிவேந்தே. இவை
கண்ணனிடம் அவையில் நகுலன்

சொன்னவை. இவனது மனவுறுதியும் மானமும் கலையறிவும் செறிவும் தெளிவும் பிறவும் இவற்றுள் இனிது புலனாதல் காண்க.

நாவடங்கி மேலோர்முன் நண்ணின்
பூவடங்கப் பூண்பார் புகழ்.

கவையடங்கும்

பெரியோர் அவையில் முந்துறயாதும் பேசலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

716 தெள்ளியசீர்க் காயன் சிறிதிழுக்கி
யேன்பெரிதுங் கொள்ளநின்றான் அல்லல்
குமரேசா—உள்ளிநின்ற ஆற்றி னிலைதளர்க்
தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

இ—ள்.

குமரேசா ! சாலங்காயன் என்பவன் அவையில் சிறிது இழுக்கியதால் ஏன் பெரிதும் வருந்தினன் எனின், வியன்புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு, ஆற்றின் நிலை தளர்ந்தற்று என்க.

தெள்ளிய என்றது அவனது அறிவின் தெளிவுடைமையை நோக்கி. சொல்வழு சிறிதேயாயினும் எள்ளலை நினைந்து அல்லல் மீக்கூர்ந்து மிகவும உள்ளங் கலங்கினன் ஆகலால் சிறிது இழுக்கிப் பெரிதும் அல்லல் கொள்ள நின்றான் என்றாம். உள்ளி நின்ற = உயர்நிலைகருதி உற்று நின்ற.

இந்த அவையில் ஒன்று சொல்லுங்கால் தவறுறலாகா தென்று

கூறுகின்றது.

ஆற்றின் நிலைதளர்ந்தற்று ஒருவன் நெறியின்கண் நின்றான் நிலை குலைந்து வீழ்ந்தாற்போலும். நெறி என்றது ஈண்டு முத்தி நெறியை, ஏகாரம் தெளிவும் இரக்கமும் தெரிய நின்றது.

வியன்புலம் என்றது விரிந்த கல்வியை. அகலமாகிய குறிப்பையுணர்த்தும் வியல் என்னுஞ்சொல் ஈண்டு வியன் எனத் திரிந்து வந்தது. வியல் = அகலம், விரிவு. வியல் என் கிளவி அகலப் பொருட்டே என்னும் இயல்விதியையும் ஈண்டு எண்ணிக் கொள்க. பாந்துபட்ட வியன் பாசறை எனப் புறத்திலும், வெள்ளிமால்வரை வியன் பெருஞ்சேடி எனச் சிலப்பதிகாரத்திலும், விண்ணளி கொண்ட வியன்மதி எனப் பரிபாடலிலும், வெல்போர்க்குருசினீ வியன்சுர னிறப்பின்என

ஐந்துறு நூற் நிலும் இது
நின்றுணர்ந்தும் பொருளை யுணர்க.

மேல், உயர்ந்தார் முன் அடக்கமில்லாமல் முந்துற ஒருவன் ஒன்றும் உரைக்கலாகாதென்றார்; இதில் அங்ஙனம் இனந்தெரிக் துரைக்குங்கால் சிறந்து வழுவுறுமேல் அவனுக்குப் பேரிழிவாம் என்கின்றார்.

விரிந்தகன்ற நூற்பொருளை யுட்கொண்டு உண்மையை யுய்த்துணர வல்லார் முன்னர் ஒருவன் சொல்லிழுக்குப்படுதல் 1818

திருக்குறட் குமரேச வெண்பா.

நல்ல நெறியின்கண் நின்றான் நிலைதளர்ந்து வீழ்ந்ததுபோலாம்
என்பதாம். உணர்வார் முன்னர் என்றது தோன்ற நின்றது.

அவையின் உயர்வு

முத்தி எய்தும்பொருட்டுத்

தவநெறிக்கண் நின்ற ஒருவன்
காம நுகர்ச்சியை விரும்பி அந்நிலை குலைந்து கூடாவொழுக்கத்த னாய் இழிந்து படுவனாயின் உலகத்தாரால் அவன் எவ்வாறு பழிக் கப்படுவானோ அவ்வாறே வல்லுநர் குழுமிய நல்ல அவையில் கல்லிவல்ல ஒருவன் சொல்லாடுங்கால் தவறு படுவனாயின் இகழப் படுவான் என்பார் இழுக்கு ஆற்றின் நிலைதளர்ந்தற்றே என்றார். அவையின் நிலையை ஆற்றின நிலையோடு ஒப்ப வைத்தது அதன் ஏற்றங்கருதி என்க. அறன் வல்லராய் நின்று உயர் நெறி செல் லவல்லார்போல் கல்வி வல்லராய் அவையில்

நின்று சொல்லவல் லாரும் தம்மைத் தூய்மை

செய்து கொள்ளவேண்டும் என்றவாறு.

உயிர்க்கு உறுதி பயக்கும் நெறியில்

நின்றவன் நிலை தளா
ராது நிற்பின் இருமையினும் பெருமை எய்துதல்போல் உணர் வுக்கு உறுதி பயக்கும் அவையில் நின்றவன் உரைவழுவாது சொல்லின் புகழும் இன்பமும் பெறுவன்

என்றவாறு.

இனி, பலர் முன் நின்று ஒன்று சொல்லுகின்றவன் சொல் வழுக்குறுதல் வழியே செல்லுகின்ற ஒருவன் பலருங்காண வழுவி வீழ்ந்தது போலாம் எனவும் இது பொருள்கொள்ள நின்றது. கண்டவர் நகையாதிருப்பினும் தவறிகவே நாணி வருந்துதல்போல் உணர்வார்

விழுந்தவன் தானு
இகழாதிருப்பினும்
இழுக்குற்றவன் தனக்குள்ளேயே உணர்ந்து வருந்துவன் என்க.

அவையின் கண் சொல்லிழுக்குப்படுதல் பெரியோர் அவமதிப்பாகுமாதலால் அது யாதும் படாவண்ணம் அறிவுடையார் நன்கு ஆய்ந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து.

கல்வியில் வல்லுநராயினும் வல்லார் அவையில் வழுவுறச் சொல்லுவராயின் அவர் பின் மிக இழிவுறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை

சாலங்காயன் பால் உணரப் படும்.

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1819

## கதை.

சாலங்காயன் என்பவன் அவந்தி நாட்டிலே உச்சைனி நகரிலிருந்து அரசுபுரிந்த பிரச்சோதனன் என்னும் சக்கரவர்த்தியினுடைய முதல் மந்திரி. அறிவுநூல் பொருள்நூல் கருவிநூல் முதலிய பல கலைகளையும் இவன் கசடறக் கற்றவன். பரதகன் சிவேதகன் பார்க்கன் பயில்வன் மதிதரன் வசுதரன் புத்திசேனன் முதலிய அமைச்சர்கள் பதினொருபிரவர்க்கும் தலைவனாகி இவன் நிலவி நின்றான். உறுவது சூழ்வதிலும் சொல்வன்மையிலும் மிகச்

சிறந்தவன். இவன் மதிநுட்ப நூலோடுடையவனாகலால் அதிநுட்பமான காரியங்களையும் மிக எளிதில் தெளிந்து இனிது முடித்து ' வந்தான்.
பலநாடுகளையுந்தன்னடிப்படுத்தி வீரருள் வீரனாய் விளங்கின்ற அம்மன்னனுக்கு இன்னுயிர்த் துணைவனாய்நின்று பல வழிகளிலும் இவன் இதம்புரிந்தான். எவராலும் ஆற்றமுடியாத அவன் சீற்றம் இவனுடைய இன்சொல்லால் இனிது அடங்கி நின்றது. தன் சூழ்ச்சித்திறத்தால் ஆட்சியை மாட்சிபெற நடாத்தி வந்தனதயறிந்து மறுபுலமன்னரும் இவனது திறலை வியந்து கொண்டாடினர். இங்ஙனம் புகழ்ச்சிக்குரிய உயர்ச்சிகளையுற்றிருந்தும் இழிந்த செருக்கும் இவன் உள்ளத்தில் ஏறியிருந்தது.
அவ் இருப்பு சிலசமயங்களில் இவனை

வெறுப்புக்கும் ஆளாக்கி' நின்றது. தன் கல்விச் செருக்கால எவரையும் இவன் மதிப்ப இல்லையாயினும் வணங்கி யடுத்தவருக்கு மிக்க ஆதரவுடையனு யிண ங்கியிருந்தான். இருந்து வருங்கால் உதயணனுடைய தலை மையமைச்சனும் அருமைத்தோழனுமாகிய யூகி என்பவன் அங்கு வந்தான். அருங்குண ங்களோடு பெரும் புலமையும் வாய்ந்த அவனோடு வாதஞ்செய்ய விரும்பி ஓர் பேரவையைக் கூட்டினன். அதில் அரசனோடு அறிஞர் சிலரையுமுடிவுகாணும் மாறு நடு நிலையாளராக அமைத்துக்கொண்டு இருவரும் வாதந் தொடங்கினர். பல அரிய கேள்விகளை முதலில் இவன் அவனி டம் கேட்டான். அவற்றிற்கெல்லாம் தகுதியாக விடை கூறி விட்டு இவன் எழுப்பிய வினாக்களிலிருந்தே சில வழுக்களை

அவன் எடுத்துக்காட்டினான். அவ்வளவோடு அமையாமல் உணர்

228



வுடைமைக்கும் அறிவுடைமைக் கும் உரியதொரு வேற்றுமையை உருவகத்தோடு பொருத்திக்காட்டி விரித்துரைக்குமாறு அவன் உரைத்து நின்றான். அதில் இவன் திகைத்து விழித்தான். அதனை நோக்கி அனைவரும் நகைத்தார். வெற்றி பெற்ற யூகியை மிக வியந்து கொண்டாடினர். அவனுக்குச்சிறந்த பரிசில்கள் பல உவந்து தந்தான். தன் தோல்விக்கு அடையாளமாக இவன் தங்கை யாகிய ஆப்பியை என்பவளை அவனுக்கு மணஞ்செய்து தரும்படி அரசன் பணித்தான். அவ்வாறே இவன் தந்து தீர்த்தான். பின்பு பலரும் இகழ இவன்

பயனிழந்து னொந்தான். ஆற்றின் நிலை
களர்ந்கற்றே வியன்புலம் எற்றுணர்வார்
முன்னரிழுகது என்னும் உண்மையை உலகம்
இவன்பால் உணர்ந்து நின்றது.

பாற்பட் டெய்திய பதினாறாயிரம்
துப்பா லமைச்சர் மேற்பா லறிவிற்
றலைக்கை யாகிய நலத்தகு நாட்டத்து ஞாலம்
புகழுஞ் சாலங் காயன்
வற்ற சிறப்பின் யூகி தன்னொடு
மாற்றங் கொடுத்தல் வலித்தன னாகி
முதல்வன் செவ்வி முகமுதல் நோக்கிச்
சிதைபொரு ளின்றிச் செந்நெறி தழீஇ
புதையத் திவரும் ஒண்சுடர் போல
எல்லா மாந்தர்க்கும் இருளற விளங்கும்
செல்லா றிதுவெனச் சொல்லுதல் வேண்டிச்
சாலவை நாப்பட் சலத்திற் றீர்ந்த
கேள்வி யாளரை வேறு தெரிந் தமைத்து
வாதம் வேண்டிய சாலங் காயன்

மாற்றம் பகுத்தற் காற்றி ஞடி
மேற்கொண் டுரைக்கும் மெய்த்துறை
மருங்கின் றூற்பாற் றழீஇய குற்றம்
இவையெனக் கேட்டோர் மனமுணக்
கிளந்தவன் கடாவ மெய்த்தகு நூண்பொருள்
மெத்தப் பன்னி உத்தர வர்க்கியம் யூகியும்
நிறீஇக்

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1821

கழிபே ருவகையொடு காவல்
வேந்தன்
ஒழிக நாமிவற் காற்றே முறையெனச்
சாலங்காயனைத் தோல்வினையேற்றி
உரைத்த கிளவிக் கொன்றே போல
விரித்துப் பலகுற்றம் விளங்கக் காட்ட
எற்றமுகத்தின் இறைவனும் விரும்பி

நண்பின் மாட்சியுங் கல்விய ககலமும்
பண்பின் தொழிலும் படைத்தொழில்

மாண்பும்

காயு மாந்த ராயினும் யாதும்
தீயவை கூறப் படாத திண்மையும்
இவற்கல தில்லை யிவனூற் பெற்ற
அவற்கல தில்லை யரசியின்

மாட்சியென

சாலங்காயற் கிளையோ ளாகிய
நீல வுண்கண் நிலவுவிடு கதிர்நுதற்
பாக்கிய மமைந்த பார்ப்பியாப்

பிறையும்

ஆகிய அறிவி னரும்பொருட் கேள்வி
யூகிக் கீத்துப் பாகு படலின்றி
யாதே யாயினு மாகவினி யெனக்கென
மாதாங்கு நின்றோள்

மகிழ்ந்தனன். (பெருங்கதை) அறிஞர்
அவையில் யூகியோடு சாலங்காயன் வாதம்

புரிந்து தோல்வியுற்றதும, அரசன் அவனது குணநலங்களைப்புகழ்ந்து போற்றி இவனுடைய தங்கையை அவனுக்கு மணம்புரிந்து தந்ததும், ஆற்றின் நிலைதளர்ந்தார்போல் இவன் அழுங்கி நின்றதும், மேற்குறித்த பிறவும் இதில் விளங்குதல் காண்க.

வல்லுநர்முன் சொல்லுங்கால்
கொல்லுந் துயராங் குறி.

வல்லோன் வழுவுற்றிடினே

அவையில் வழுவுறுதல் மிகவும் இழிவாம் என்பது இதனல் கூறப்பட்டது.

---

717

தேறியசங் கத்தார் திருமுன் திருத்தக்கர்
கூறியுயர்ந் தாரேன் குமரேசா—வீறுடனே

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

(எ) 1822 திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா! திருத்தக்க தேவர் சங்கத்தாரிடம் சொல்லியபின் ஏன் கல்வியில் சிறந்து விளங்கினார் எனின், கசடு அறச் சொல் தெரிதல் வல்லார் அகத்து, கற்று அறிந்தார் கல்வி விளங்கும் என்க.

தேறிய என்றது பலநூல்களையும் வழுவறத் தெளிந்து நின்றமைகருதி என்க. திரு என்பது அவரது சமுகத்தின் சிறப்புத்தோன்ற நின்றது. அவர் முன் சொல்லிய பின்னரே இவர் பெருமை எங்குஞ் சிறந்து தோன்றியதாதலால் கூறியுபார்த்தார் என்றும். வீறு = பெருமிதம், சிறப்பு.

இது, வல்லார் முன் சொல்லுவதால் வரும் பயன் கூறுகின்றது. வல்லார் அகத்து விளங்கும் என்றதனுல் மாட்டா ரகத்து
யாதும் விளங்காதென்பதாயிற்று. ஆகவே அவர் முன் சொல்லு வதால் பயனில்லை என்பதாம்.

சொல் தெரிதல் வல்லார் = சொற்களை ஆராய்ந்து தெளிதலில் வல்லுநர்; என்றது இலக்கண நூல்களைத் தெளிவுறக்கற்ற புலவர்களை . பொருளுணர்த்தும் சொற்களை வழுவறத் தெளிந்தவ ராதலால் மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோர் என இவர் மொழியப்படுவர். அகத்து என்றது அறிஞர் கூடிய இடத்தினை. அஃதாவது அவை என்க.

மேல், அவையில் வழுவுறுதல் பெரியதோர் இழிவாவாம்
என்றார்; இதில், அங்ஙனம் வழுவு றாது

வல்லார்முன் ஒருவன்
சொல்லுவளுபின் எல்லாச்சிரும் அவன்
எய்துவன் என்கின்ருர்.
வழுவறச் சொற்களை ஆராயவல்லார்
முன்னர்ச்சொல்லின்,
பலநூல்களையுங்கற்று அவற்றின்பயனை
அறிந்தாாது கல்வித்
திறம் எவர்க்கும் விளங்கித்தோன்றும்
என்பதாம்.
தன் அருமை அறிவார் முன்னரே ஒரு
பொருள் பெருமை
பெறும், அல்லார்முன் அது யாதும்
பெருது; அதுபோல் கல்வி வல்லாரொருவன்
அவ்வன்மையை அறிய வல்லார் முன் வழுவ
றச் சொல்லுவளுயின் கேள்வியால்
உள்ளங்குளிர்ந்த அவர்
72-ம் அதிகாரம் அவையறிதல்.
1823

அவனை உவந்துகொண்டாடுவர்; அதன்பின் அவன் பெயர்பெற்று
உயர்புகழுடையனாய்ச் சிறந்துதோன்றுவன்
ஆதலால் கற்றறிந்
தார் கல்வி சொற்றெரிதல் வல்லாரகத்து
விளங்கும் என்றார்.

சொற்றெரிதல் வல்ல
இராமனிடத்துச்சொல்லி வேதக்கடல் என
அநுமான் விளங்கி நின்றதுபோல்
வல்லாரவையிற்சொல் வோன் எல்லாராலும்
போற்றப்பட்டுக்கல்வி வல்லனாய்ப்பின்பு
எங்கும் விளங்கித் தோன்றுவன் என்க.

கல்வியா ளர்
வல்ல ர ரவையின்கண்ணேயே
தம்வன்மைதோன் றச் சொல்லவேண்டும் என
அருள அங்ஙனம் சொல்லியதால் வரும்
பயன் என்னை என் பாரை நோக்கி இஃது
இயம்பியதாகக் காண்க.

புலமிக் கவரைப் புலமை தெரிதல்

புலமிக் கவர்க்கே புலனும்—நலமிக்க
பூம்புன லூர பொதுமக்கட் காகாதே
பாம்பறியும் பாம்பின கால், என்றபடி
அறிவுடைமையின் அருமையை அறிவுடையவரே அறிந்து புகழ்வாராதலால் அவரிடமே தன் அறிவு நலந்தோன்ற ஒருவன் உரைசெய்ய வேண்டும் என வரையறுத்து இது முறை செய்ததென்க.

அறிந்தாரகத்துச் சொல்லின் ஒருவன் கல்வி சிறந்து விளங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருத்தக்கதேவர்பால் உணரப்படும்.

## கதை.

திருத்தக்கதேவர் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர்த் தொண்டை நாட்டிலே தவளகிரி என்னும் நகரிலிருந்தவர். இவர் சோழர் மரபினர். அருக மதத்தினர்.

இளமையிலேயே பலநூல்களையும் பயின்று
புலமை நிரம்பி வடமொழியிலும் வல்லுநராய்
இவர் விளங்கியிருந்தார். அருள் அடக்கம்
பொறை நிறை முதலிய உயர்
குணங்களெல்லாம் இவரிடம்
இருங்கமைந்திருந்தன. நமை புலவோரும்
எவரும் வியந்து கொள்ளுமாறு தெளிந்து
சொல்லும் மொழிவலனும் 1824
திருத்தரட் குமரேச வெண்பா.

வாய்ந்து எவர்க்கும் இனிய சீராய் இவர்
அருள் செய்து வந்தார். இவருடைய
ஆசிரியர் பெயர் தருமகந்தனர் என்பர். அவ
ரும் இவரது அறிவின் திறத்தையும் நெறியின்
நலத்தையுங்கண்டு பெருமகிழ்வு கொண்டார்.
இவருக் துறவறம்பூண்டு அவரே ரகூ
உடனமர்ந்திருந்தார.

குலனுங் குணனுங் குரவரைப் பேணு

கலனு ங் கடவுளை நயத்தலுங்
கருணையும்

புலனவித் தொழு கலும் பொறையுந்
தோற்றமும்

உலகிய லறிந்துயிர்க் குறுதி
கோடலும்

கற்றவர் காமுற வாழ்தலுங் காந்தியும்
மதிநிகர் கல்வியும் கதிநிகர் வனவாம்
வாய்மையுந் தூய்மை யும் வழுவுத
லின்றாய்

வாடாக் கற்பக மணமலி பொற்பூ
கோடாச் செங்கோற் கொற்றவ
னிதயறை

வான்சுவை மருந்தா யீரவாய்ச்
சேடனிற்

கற்றன யாவுங் கழகத் துதவும்
பெற்றியன் மறந்தும் பிறன்பழி
கூறான்

சதுருடை யேனெனத் தற்புகழ்க்

தறியான்

முது மொழி இலக்கண இலக்கிய முறையே

புதுமொழி புணர்க்கும் புலமையோனே. என்றபடி நல்
லாசிரியனுக்குரிய எல்லா நலங்களுமமைந்து இவர் விளங்கி வருங்
கால் தம் ஆசிரியரோடு மதுரையை யடைந்து அங்குச் சிலகாலந் தங்கியிருந்தார்.
அங்ஙனம் இருந்து வருங்கால் அங்கிருந்த சங்
கப் புலவர்களிடஞ் சென்று உணர்வுரை பகர்ந்து புலமைச் சுவையை நாளும்
பொருந்தி இவர் நுகர்ந்து வந்தார். சொற்களை வழுவற ஆராயவல்ல அவர்
இவரது சொல்லின் திறத்தையும் கல்விப் பரப்பையும் கூர்ந்து நோக்கி உவகை
மீக்கூர்ந்தார். ஒரு
நாள் அவருட் சிலர் இவரை நோக்கி நும்

இனைத்தவாராகிய சமண

சமயத்தவர் நீதிநூல்கள்

பாடவல்லரேயன்றி அகப்பொருளைத்

தழுவிக் காமச்சுவை ததும்ப யாதும்

பாடவல்லாரல்லர் என்றார். அவர்

சொ ன் னதைக் கேட்டவுடனே இவர்

புன் னகை செய்து எம்மவர் நிலையாமையை

நினைத்து என்றும் துறவில் நிலைத்து நின் 72-ம்

அதிகாரம் அவையறிதல். 1825

றாராதலால் அன்னதை வெறுத்தொதுக்கி

யிருந்தாரேயன்றி பாடத்தெரியாமையான்

அன்று. வேண்டுமாயின் யான் பாடித்

தருகின்றேன் என்று பகர்ந்து சென்று

நடந்தன்தக் குருவினி

டம்கூறிச் சீவகன் சரிதையை ஒரு

காவியமாகப் பாடி அச்சங்கத்

தார் முன் கொண்டுவந்து காட்டி னா ர்.

அதன் சொற்சுவை

பொருட்சுவைகளை யுற்றுநோக்கி
அப்புலவர்களெல்லாரும் பெரு
மகிழ்வுடையராய் இவரைப் புகழ்ந்து
போற்றிச் சிந்தாமணி என
அந்நூலைச் சிறப்புடன் அழைத்தார். பின்பு
பாண்டிய மன்னன்
தலைவனாய் வீற்றிருப்பக் குறுநிலக் கிழவரும்,
மறுபுல மன்னரும்
புலவர் பலருங் கூடிய அவையில் அதனை
இவர் அழுதுபெற அரங்
கேற்றினர். தன் மனைவியாகிய
விசயையுடனமர்ந்து சச்சந்தன்
இன்பம் நுகர்ந்த இயல்பை இவர் எடுத்துச்
சொல்லியபொழுது அங்கிருந்தவரெல்லாரும்
இன்ப வெள்ளத்திலாழ்ந்தார்.
பொனங்கொடி அமிர்தன்னளும்
பொன்னெடுங் குன்றன்னனும்
அனங் கனுக்கிலக்கமாகி யம்புகொண் டழுத்த
வின்னார்
இனந்தமக் கெங்குமில்லார் இயைந்தனரென்ப

முக்கட்

சினந்திகழ் விடையினானுஞ் செல்வியுஞ் சேர்ந்தொத்தே. (1)

காதலாற் காமபூமி கதிரொளி யவரு மொத்தார்

மாதருங் களிறனானும் மாசுண மகிழ்ச்சி மன்ற

லாதரம் பெருகுகின்ற அன்பினா லன்னமொத்துந்

தீதிலார் திளைப்பினான் செல்வமே பெரிதுமொத்தார். (2)

தன்னமர் காதலானுந் தையலு மணர்த பொழ்திற்

பொன்னனன் அமிர்தமாகப் புகழ்வெய்யோன் பருகியிட்டான்

மின்னவிர் பூணினானே வேற்கணார்க் கியற்றப்பட்ட

மன்னிய மதுவின் வாங்கி மாதரும் பருகியிட்டாள். (3)

காட்சி,நிலை,முயக்கம் என்பவற்றை விள க்கி இன்பச்சுவைபொங்க இங்ஙனம் இவர்

இசைத்துள்ளதை யெண்ணியெண்ணி வியந்தார்.

அதன்பின்பு புலவர்திலகரென உலகம்போற்றப் பெரும்புகழோடு இவர் விளங்கியிருந்தார். இவரியற்றிய நூல் சீவக சிந்தாமணி யென்னும் பெயரால் சிறந்துவிளங்கி வருகின்றது. கசடறச் சொற்றெரிதல் வல்லா ரகத்துச் சொல்லின் கற்றறிந்தார் கல்வி விளங்கும் என்பதை உலகம்காண இவர் அன்று உணர்த்திநின்றார். 1



வெண்பா.

திருத்தக்க மாமுனிசிந்தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம்—உருத்தக்க
கொங்குவேண் மாக்கதையைக் கூறேங் குறளனுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு.

எல்லாவற்றையும் துறந்து நின்ற ஒருவர், மேற்குறித்த இந்நான்கு நூல்களிலும் பற்றொழிக்கமுடியாமல் அவற்றின்

சுவையில் ஆழ்ந்து கிடந்து இறுதியில் இவற்றையும் துறந்தபொழுது இஃது துரைத்தமை தன்க. இனிச்சூரியன் எங்கே உதித்தாலென்ன! எமக்கு யாதும் கவலை இல்லை என்றது உலக நிலையை ஒழித்தமை யான் என்க. அருவ நிலையடைந்து இறைவனையணுகிய பொழுது தான்குறளினை மறப்பேன் என்னும் உறுதிதோன்ற அதனை இறுதியில் வைத்துள்ளவண்மையை இதில் ஊன்றி நோக்கி அதன் ஒப்பற்ற பெருமையை உய்த்துணர்ந்து கொள்க. திருத்தக்க தேவரது சொல்வன்மையும் கல்விப் பெருமையும் இதில் இனிது புலனாதல் காண்க.

வண்டறியு மாமலரின் வாசம் மதிநலத்தைக்
கண்டறிவார் நுண்புலவோர் காண்.

கல்வி வல்லார் முன் சொல்லுதலே

என்பது இதனால் கூறப்பட்டது.

ஒருவனுக்கு நல்லதாம்

---

718 தேர்ந்துயர்ந்த சீயன் திருமுன் பவணந்தி
கூர்ந்து சொன்னார் என்னேகுமரேசா—ஓர்ந்தே
உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. (அ)

இ—ள்.

குமரேசா ! பவணந்தியார் உணர்வுடைய சீயகங்கன் முன் ஏன் உரைத்து உயர்ந்தார் எனின், உணர்வது உடையார் முன் சொல்லல், வளர்வதன்பாத்தியுள் நீர் சொரிந்தற்று என்க.

தேர்ந்து உயர்ந்த என்றது

பலகலைகளையுந் தெளிந்து அவன் உயர்ந்து நின்றமை கருதி. நுண்ணுணர்வுடைய அவனும் நனித்துணர்ந்து உவகைகொள்ளுமாறு நாணுகி ஆராய்ந்து சொல்லினர் ஆதலால் கூர்ந்து சொன்னார் என்றும், ஓர்தலை உணர்த லுக்கும் சொல்லலுக்கும் தனித்தனி ஒட்டிக்கொள்க.

72-ம் அதிகாரம் அன்வயநிதல்.

1827

இஃது உணர்வோர் முன் சொல்வதால் உறும் பயனை ஓர் உவமை கூறி புணர்த்துகின்றது.

உணர்வது என்றது எதையும் நுணுகி யுணரவல்ல அறிவினை. இஃது எதிர்காலவினையாலணையும் பெயர்.

வளர்வது என்றது விளைபயிரை. சிறந்தபயனை உதவவல்ல உயர்ந்த பயிர்களை பாத்தியள் வைத்துப் போற்றப்பெற்றுத்

தண்ணீர்த் தட்டின்றித் தழைத்து வளரும் ஆதலால் உணர்வுடையார்க்கு ஒப்பாக வளர்வதென நிகழ்வுதோன்ற வைத்தார். கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை, சுரும்புபசி களையும் பெரும் புனலூர என்பதனுள் பாத்தியின் பான்மையை புணர்க.

மேல், வல்லார் அவைபுட் சொல்லின் ஒருவன் கல்வி விளங்குமென்றார்; இதில், அதனால் பெரும் பயனும் விளையும் என்கின்றார்.

எதையும் நுணுகியுணரவல்ல அறிவுடையார்முன் ஒன்றனைச் சொல்லுதல் தானே வளர்வதொரு பயிர்நின்ற பாத்தியின் கண்ணே நீரினைச் சொரிந்தாற்போலும் என்பதாம்.

குறிப்பறிந்து கூர்ந்துகொள்ளும் குலமகளோடு கூடி வாழும் தலைமகன்போல் நுணுகியுணரும நுழைபுலனுடையாரிடை

உரை யாடும் ஒருவன் உளமகிழ்வடைவான் என்றவாறு.

பாத்தியை அவையாகவும், அதில் வளரும் பயிர்களை அவை யில் குழுமியுள்ளவர்களாகவும், நீர்ப்பாய்ச்சலைச் சொற்பொழிவா கவும், உழவனைப் புலவனாகவும் கருதுமாறு இதில் உருவகித்துள்ளதை உய்த்துணர்ந்து கொள்க. பயிர்களின் நிலைமையையறிந்து நீர்பாய்ச்சும் நிலமகன்போல் அவையிலுள்ளாரது இயல்பினை யறிந்து கலைமகன் பேசவேண்டும் என்பதாம்.

நல்ல உரங்கொண்ட நிலத்தில் விதைத்தவன் ஒன்று நூறாகப் பெறும் பயன் கோடல்போல் உணர்வுடையார் முன் சொல்பவன் பேருணர்வுடையனாய்ச் சிறடைவன் என்க.

வேகமுள் ள குதிரைமேலேறிச் செல்லின் மகிழ்ச்சியும் மன எழுச்சியும்

மாட்சியும் உளவாம்; அழுதைமேலாயின் அவை காணா



இயலா ஆதலால் இன்பமுறவேண்டின் உணர்வுடையார் முன்பே உரைக்கவேண்டும்; மந்தர்களாகிய இழுதைகளிடம் யாதும் ஓதலாகாதென்க,

உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரப் புணருமாம் இன்பம்—புணரின்
தெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய். எனவும்,
மாரிபோற் கொடுப்பினும்
மந்தனைவிட்டுக்
கூரிய னுடனே கொடுத்தும் பழகுக.

எனவும் வருவன ஈண்டு எண்ணற்குரியன.

தான் சொல்வதை எளிதில் உணரும் தெளிவினை யுடையார் முன் தன் கல்வியை ஒருவன் சொல்வானாயின் அவன் புகழும் பொருளும் பெற்றுப் பெருமைபடைவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பவணந்திபால் உணரப்படும்.

கதை.

பவணந்தியார் என்பவர் தொண்டைமண்டலத்திலே சனகாபுரம் என்னும் நகரிலே அந்தணர் குலத்திலே பிறந்தவர். இவருடைய தந்தையார் சன்மதி முனிவராவார். இவரைக் குரு எனவுங் கூறுவர். இவரது காலம் சற்றேறக்குறைய இற்றைக்கு எண்ணூறு வருடங்கட்கு முன்னராகும். இவர் சைந 'மதத்தைச் சார்ந்தவர். கருவி நூல்களையும் அறிவு

நூல்களை
யும் கசடறக் கற்றவர். வடமொழியிலும்
வல்லுநர். தம் சம யத்துக்குரிய
திரிலோகசாரம் மகாபுராணம்
கோமடசாரம்
இரத்தினகாண்டகம் மேருமந்தரம்
நீலகேசிவாதம் சாகடா யனம் அமரம்
நயாசக்கிரம் சத்தபங்கி தவளம் விசயதவளம்
மகாதவளம் சுபோதினி முதலிய வடமொழி
நூல்கள் பலவும்
பயின்று தமிழிலுள்ள எல்லா நூல்களையும்
நன்கு தெளிந்து
இலக்கணத்தில் எவரும் தமக்கு நிகரிலர் என
இவர் இசைபெற்றிருந்தார். நிறைந்த
கல்வியோடு அருள் அடக்கம் பொறை வாய்மை
முதலிய சிறந்த குணங்களுமுடையாராய் இவர்
விளங்கி நின்றார். 72-ம் அதிகாரம்

எவரும் விழைந்து கேட்குமாறு இனிது சொல்லுதலில் இவர் மிகவும் வல்லவர். இவரது கல்வியறிவையும் சொல்வன்மையையும் கண்டு அக்காலத்தில் கொங்கு மண்டலத்தின் ஒரு பாகத்தைத் தனக்கு உரிமையாக்கொண்டு அரசுபுரிந்து வந்த சியகங்கன் என்னும் குறுநிலமன்னன் இவரை உவந்தழைத்து உபசரித்து வைத்துத் தன்னுடனிருந்து வருமாறு மிகவும் வேண்டினன். கல்வி யறிவிலும் செல்வநிலையிலும் வண்மை திண்மை உண்மை முதலிய நலங்களிலும் அவன் சிறந்தவனாதலால் இவரும் உவந்து அவனுடனமர்ந்திருந்தார். இவரது விழுமிய அறிவுரைகளைக் கேட்டு அவன் பெருமகிழ்வுற்றான். தான் உற்றபோது

அமையாமல் தன் னாட்டி லுள்ள அறிஞர்
பலரையுந்தொகுத்து இவர் அமிழ்தமொழி
களையூட்டி உணர்வொளி பெருகச்செய்தான்.
தம்மொழிநலத்தால் விளைந்து வரும் பெரும்
பயனை நினைந்து மிக மகிழ்ந்து கொண்டு
மேலும் மேலும் நல்லவை விபப்ப இவர்
சொல்லாடி வந்தார் வருங்கால் ஒரு நாள்
அம்மன்னன் இவரை நோக்கி எளிதில்
அறிந்து கொள்ள முடியாதபடி பழைய
இலக்கண நூல்கள் விரிந் து பரந்து
கிடக்கின்றன ஆதலால்
அவற்றைத்தொகுத்து விளக்கி
உலகம் இன்புற ஓர் இயல் நூலை உதவ
வேண்டும் என உரைத்து வேண்டினான்.
அவ்வேண்டுகோட்கிணங்கி யாவரும்
எளிதிலுணருமாறு இனிய நடையில்
தெளிவாக ஓர் இலக்கண நூலை இயற்றி
அம்மன்னனிடங்காட்டினார். அவன்

உற்றுநோக்கி உவகை மீக் கூர்ந்து தன்
அவையில் அரங்கேற்றச்செய்து
இவர்க்குப்பெருஞ் சிறப்புச்செய்தான்.
அந்நூலே நன்னூல் என்னும் பெயரால்
நின்று நிலவி இன்றும் இசைபெருக எங்கும்
இயங்கி வருகின்றது.
துறவு நிலையை மேற்கொண்டு அருந்தவக்
கொள்கையில் திருந்
திய பண்புடையாராய் இவர்
சிறந்திருந்தாராதலால், பவணந்தி
முனிவர் என்று அனைவரும் இவரைப்புகழ்ந்து
போற்றி வந்தார்.
உணர்வுடையார் முன் சொல்லி உலகில்
உணர்வை வளர்த்துத்
தாமும் பேருணர்வுடையாராய் இவர்
உயர்ந்துவிளங்கினார்.உணர்
வுடையார் முற் சொல்லல், வளர்வதன்
பாத்தியுள் நீர் சொரிந்

கற்று என்னும் உண்மையை உலகம்
இவர் பால் உணர்ந்து
தெளிந்தது.

1880 திருக்குறட் குமரேச
வெண்பா.

குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலுள்
அரும்பொரு ளைந்தையும் யாவரும் உணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங் கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீயகங்கன்
அருங்கலை விநோதன் அமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்

பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே,
(நன்னூல்), தன்னூர்ச் சனகையிற் சன்மதி
மாமுனி தந்த மைந்தன் நன்னூ லுரைத்த
பவணந்தி மாமுனி நற்பதியும் பின்னூ லு
ரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னூ புரத்திரு வன்னமின்னே
தொண்டைமண்டலமே.

(தொண்டைமண்டல சதகம்)

சொல்காப் பியத்தின் குணதோடந்தேர்ந்து
சொலுவதற்குத் தொல்காப் பியங்கற்க
நீண்டதனைச் சுருக்கியிசை யொல்காப்
பெரும்பவ ணந்தியென்றோதி யுபகரித்த
வல்கா வலன்சிய கங்கனூர் தான்கொங்குமண்
டலமே.

(கொங்குமண்டலசதகம்)

முன்னோ ரொழியப் பின்னோர் பலரினுள்
நன்னூ லார்தமக் கெந்நூ லாரும்

இணையோ வென்னுந் துணிவே மன்னுக.

(இலக்கணக்கொத்து). மேற்குறித்த சரிதம் இவற்றுள்ளும் விளக்கிநிற்றல் காண்க.

72-ம் அதிகாரம் அவையறிதல்.

1831

பொருடேரியார் முன்போய்ப் புகலல் புரையாம்
குருடறியு மோமணியின் கோள்.

உணர்வுடையார் முன்னரே ஒருவன் உரையாடவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

719 அன்று விபீடணனேன் அல்லவையுட் சொல்லியுளங்
குன்றினன் பின் புகுமே

ரசா—என்றுமே

புல்லவையுட் பொச்சாந்துஞ்
சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.

(கூ)

இ—ள்.

குமரேசா ! நல்லவற்றைநாடி நன்கு சொல்லியும் விபீடணன் என் இராவணன் அவையில் அல்லல் உற்றான் எனின், நல்ல வையுள் நன்கு செலச்சொல்லுவார், புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க என்க.

\

அன்று என்றது இராவணன் மந்திராலோசனை செய்த காலத்தை. அவ் அவை என்றது அறன் அல்லவற்றையே நலனென்று கொண்டவர் குழுமியிருந்தமை கருதி. தான் சொல்லிய உறுதிகளை உவந்து கொள்ளாமல் இராவணன் இகழ்ந்து தள்ளியதை யெண்ணி யிரங்கி நொந்தான்

ஆதலால் பின்பு உளம் குன்றினன் என்றும். என்றுமே என்றது சொல்லற்க என்பதைத் தொடர்ந்து வரம்பு செய்து நின்றது.

இது, புல்லியர்முன் யாதும் சொல்லலாகாதென்கின்றது.

புல் அவை = புல்லிருந்த சபை. நல் அவை = நல்லார் கூடிய சபை. இருந்தாரது புன்மை நன்மைகள் அவை மேலேற்றப் பட்டன. பொச்சாந்தும் = மறந்தும். சொல்ல இபலாதார் சொல்லின் அதனல் அவர்க்கு வருவதோர் இழிவில்லையாதலால் சொல்லுவார் சொல்லற்க என்றார்.

நன்கு என்றது நல்லதனை என்றவாறு. இது சொல்லுத லுக்குச் செயப்படுபொருளாய் நின்றது. அதற்கு அடையாகக் கற்றின் தெளிவாக என்று கொள்க.

1832 திருக்குறட் குமரேச வெண்பா.

செலச்சொல்லல் = கேட்பவர் மனத்தில் பதியும்படி சொல்லுதல். தாம் குறித்த கருத்தை அவையிலுள்ளவர்கள் உளங் கொண்டுவக்கும்படி நலம்பெறச் சொல்லவேண்டும் என்பதும், அங்ஙனம் சொல்ல வல்லவர் புல்லர்முன் ஒன்றும் சொல்லலாகா தென்பதும் இது சொல்லியதென்க.

மேல், உணர்வுடையார்முன் நன்கு சொல்லுக என்றார்; இதில், உணர்விலிகள் முன் ஒன்றுஞ் சொல்லற்க என்கின்றார்.

நல்லாரிருந்த அவையின் கண் நல்ல பொருள்களை அவர் மனங்கொள்ளச் சொல்ல வல்லவர் புல்லரிருந்த அவையில் அவற்றை மறந்துஞ் சொல்லலாகாதென்பதாம்.

புல்லராவார் அறிவிலிகளாய் இழிந்த செயல்களையே புரிந்து திரிபவராதலால் அவரிருந்த இடத்திற் சென்று சிறந்த

அறிவு டையான் ஒன்று சொல்லின் அதனருமையை யறியாமல் இகழ்ந்துவிடுவர் ; அதுவுமன்றி ஐயகோ! அனைபறியாமற் சொல்லி இவ் இழிவடைந்தானே என்று அறிவுடையாரும் அவமதிப்பர் அஃதனல் அரும் பொருளை வறிதே யிழந்து பழியுறும் ஒருவன் போல் அவன் வருந்நேரும் ஆதலால் சொல்லுவார் புல்லவை யுட் போச்சாந்தும் சொல்லற்க என்றார். இதிலுள்ள உம்மை ஒரு காலத் தும் சொல்லாதே என உறுதிபெற உருமி நிற்றலை யன்றி யுணர்க.

•

அறிவு அடக்க முதலிய உயர் குணங்களையுடைய நல்லோர் குழுமியிருக்கும் இடமே நல்லவை என்று சொல்லப்படுமாதலா ல்
அதன் கண்ணேயே நல்லதனை அறிவுடையார்

சொல்லவேண்டும்

என்றவாறு.

புகழுந் தருமநெறி நின்றார் பொய்காமம்
இகழுஞ் சினஞ்செற்ற
மில்லோர்—நிகழ்கலைகள்
எல்லா முணர்ந்தோர் இருந்த
இடமன்றோ
நல்லா ரவைக்கு நலம்.

எனவும்,

நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை
நான்குங்
குலனென் றிவையுடையோர்
கோதில்—புலனில்லோர்

72-ம் அதிகாரம் அவைபற்றகஸ்.

1833

சென்று மொழிந்தவுங் கேட்டோர்
செறிந்த இடம்
அன்றோ நிறைந்த அவை.

எனவும் வருவனவற்றால் நல்லவையின் இயல்புணர்ந்து கொள்க. புல்லர்முன் எவ்வகையினும் யாதும் சொல்லலாகாதென்பது கருத்து.

மெய்ஞ்ஞானக் கோட்டி புறம்வழி விட்டாங்கோர்
அஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறந்துழாய்க்
கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன்
சொன்ஞானஞ் சோர விடல்.

என்ற இதில் புல்லர் இயல்பும், அவர்முன் ஒன்றுஞ் சொல்லலாகாதென்பதும், பொருந்தியுள்ளமை காண்க. நல்லதை நயந்துசொல்லினும் புல்லர் உணர்ந்து கொள்ளார்; அதுவுமன்றிச் சொன்னவரையும் இகழ்ந்து விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விபீடணன் பால் உணரப்படும்.

## கதை.

விபீடணன்

இராவணனுக்குத்தம்பியாயதோடு அமைச்சனுகவும் அமைந்திருந்தான். அரசியல் முறைகளை வழுவறத் தெளிந்திருந்த இவன் அமையம் வாய்த்தபோதெல்லாம அண்ணனுக்கு அறிவுரைகளை உரை செய்து வந்தான். இந்திர குரு வாகிய வியாழனும் இவனது மந்திர நெறிகளை மதித்துப்புகழ்ந்துள்ளான். இவனை, உம்பர் மந்திரிக்கு மேலா ஒருமுழம் உயர்ந்த ஞானத்தம்பி என்பர் கம்பர். அனுமான் வந்து இலங்கையை எரித்துப்போனதைக்குறித்தும், இராமனது படை எழுச்சியைப் பற்றியும் அமைச்சரோடு உசாவத் துணிந்து இராவணன் ஓர் ஆலோசனை மண்டபத்தை யடைந்து அரியணைமேலமர்ந்தான். மகோதரன் வச்சிரதந்தன் துன்முகன் பெரும்பக்கன்

தாமிராட் சன் முதலிய சூழ்ச்சியாளரனைவரும்
அங்குவந்து துன்னி நின்று மன்னன்
மனம்போலவே தம் புன்மைதோன்ற
உன்னியபடியே உரைத்தார்.
அப்பொல்லாதார் அவையில் இவனும்
பொருந்தி யிருந்தாளுதலால் வருந்தி
எழுந்தான்.

எந்தைநீ ஆயும்நீ எம்முனீ தவம்
வந்தனைத் தெய்வநீ மற்றுமுற்று நீ

1834 திருக்குறட் குமரேச வெண்பா.

இந்திரப் பெரும்பதம் இழக்கின்று
யெனை
நொந்திலென் ஆகலின்

நுவல்வதாயினேன். என அண்ணன்
திருமுகத்தை நோக்கி நுவன்றுகொண்டு

உறுதி மொழிகள் பல உளமுருகி யுரைத்தான். தீதினை யொழித்து நீதியின் கண்ணேயே நிலைத்து வாழவேண்டுமென ஏதுவோடு இதங்கள் யாவும் எடுத்துமொழிந்து இறுதியாக,

> இசையுஞ் செய்கையும் உயர்குலத் தியற்கையும் எஞ்ச
> வசையுங் கீழ்மையு மீக்கொளக் கிளையொடு மடியா
> தசையில் கற்பின் அவ் அணங்கைவிட் டருளுதி இதன்மேல்
> விசையமில்லெனச் சொல்லினன் அறிஞரின் மிக்கோன்.

நல்லனவாதி இவ்வணம் நயந்து சொல்லியும் அப் பொல்லாதவன் உணர்ந்து கொள்ளாமல் இகழ்ந்து சினந்து இனி என் கண்முன் நில்லாதே; புல்லியனே! போய்விடு என்று பொங்கிமொழிந்தான். அவையில் அவனுடனிருந்தவரும் இடைவகை தெரியாதவன் என்று இவனை எள்ளிநின்றார். அனலன் அனிலன் அரன் சம்பாதி என்னும் தன் தோழர் நால்வருடன் இவனும் அகன்று போய் இராமனை அடைந்துகொண்டான்.

நல்லவையெல்லாம் நயந்து போற்றவல்ல சொல்லாளனாயிருந்தும் புல்லர்முன் சொல்லியதாலன்றோ இவ் அல்லலுற்றான் என அனைவரும் அன்று சொல்லியிரங்கினர்.

நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார்,
புல்லவையுட் பொச்சாந்துஞ்
சொல்லலாகாதென்பதையும் சொல்லின் எல்லையையும் என்பதையும் உலகம் காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்
பொல்லாத தில்லை
யொருவர்க்கு—நல்லாய்
இழுக்கத்தின் மிக்க இழிவில்லை யில்லை
பொழுக்கத்தின் மிக்க வுயர்வு.

(பழமொழி)

பாவின் சுவையறியாப் பாவியர்முன்
நாவிற் கிழிவாம் நவை.

சொல்லவுயர்

புல்லியர் முன் ஒன்றுஞ்
சொல்லலாகாதென்பது இதனுல்

---

72-ம் அதிகாரம் அவையறிதல்.
1835

720

ஓர்ந்து ததிசி உரைத்தவெலாம் தக்கன்முன்
கூர்ந்திழிந்த வெண்ணே குமரேசா—சார்ந்திழிந்த
அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற்
றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(ம)

இ—ள்.

குமரேசா! ததிசி முனிவர் சொல்லிய உயர்ந்த பொருள்களெல்லாம் தக்கன் முன் ஏன் இழிந்துபோயின எனின், தம் கணத்தர் அல்லார் முன் கோட்டிகொளல், அங்கணத்துள் உக்க அமிழ்து அற்று என்க.

ஓர்ந்து உரைக்க என்றது தக்கன் உளங்கொள்ளுமாறு பாதகத்துவங்களையெல்லாம் பழுதற ஆராய்ந்துமொழிந்தமைகருதி. முனிவர் கூறிய உறுதிகளை இவையாவும் பேதையர் பிதற்றல் எனத்தக்கன் மிக இகழ்ந்து தள்ளினனாதலால் எல்லாம் கூர்ந்து இழிந்த என்றாம். இழிந்தன இரண்டு கழிந்து வழியுங்களனாதலால் சார்ந்திழிந்த என்னும் அடையை அங்கணம் சார்ந்து நின்றது..

இஃது இழிந்தாரிடம் சொல்வதால் வரும் இழிவு கூறுகின்றது. அங்கணம் =

சலதாரை, சேறு இழிந்தஇட முதலியவற்றை
• யுணர்த்திவரும். அங்கணஞ் சேறு முற்ற
மாஞ்சல தாரைக்கும் பேர் என்பது நிகண்டு.
ஊரங்கணநீர் எனவரும் நாலடியுங்காண்க. உக்க
= சொரிந்த, சிந்திய; இது
பாழாகப்போகுதலைக் குறித்து நின்றது.
கானலந் துறைவற்குச் சொல் உகுப்போயே
என்புழிப் போல.

தம் என்றது ஈண்டுக்கல்வி வல்ல
நல்லோரை. கணம் என்பது இனம்,
கூட்டங்களைக்குறித்து வரும். தம் கணத்தர்
அல்லார் = தம்முடைய இனத்தால்லாதவர்;
என்றது அறிவில்லாத புல்லர்களை.

கோட்டி என்றது சபையினை. நாவின்றிக்
கோட்டி கொளல் எனவும்,
மெய்ஞ்ஞானக்கோட்டி எனவும், புன் கோட்டி
எனவும், புல்லா எழுத்திற் பொருளில் வறுங்
கோட்டி எனவும்; வெள்ளைக் கோட்டி எனவும
வருவனவற்றுள் இது

நின்றுணர்த்தும் பெயரு ளோயுணர்க.



வெண்பா.

மேல், புல்லியர் அவையில் ஒன்றுஞ்சொல்லலாகாதென்றார்; அங்குச் சொல்லின் அதனால் வரும் இழிவு இன்னதாம் எனத் தெளிவுற இதில் உணர்த்துகின்றார்.

அறிவால் தம் இனத்தரல்லாதார் அவையில் ஒன்றனைச் சொல்லுதல், இழிந்த அங்கணத்துள் அமிழ்தத்தைச் சொரிந்தது போலாம் என்பதாம்.

சலதாரையில் சிந்தின அமிர்தம், ஒருவருக்கும் பயன் படாமல் ஒழிந்து போதல் போல், இழிந்தாரிடம் சொல்லுகின்ற உயர்ந்த நூற்பொருள் ஒரு பயனுமின்றி

வற்கே அழிந்து போம் என்பார் தம்
கணத்சால்லார் முற் கோட்டி கொளல்
அங்கணத்துள் அமிழ்து உக்க அற்று என்றார்.
இது தொழிலுவமம்.

அங்கணம், இழிந்த அவைக்கும்; அவ் அவையிலுள்ளவர் அதிலுள்ள இழிந்தவற்றிற்கும்; அமிழ்து, உயர்ந்த நூற்பொருளுக்கும்; கல்வியாளன் அவ் அமிழ்தையுடையவனுக்கும்; அவன் அவையறியாமல் அல்லார் முன்பேசல் உணர்வில்லாமல் அமிழ்தத்தை அங்கணத்தில் உகுத்தற்கும் உவமையாக அமைத்து இதனையுணர்த்தியுள்ள ஒண்மையை உய்த்துணர்ந்து கொள்க.

இனி, கொளல் என்பதை மேற்குறித்தபடி தொழிற் பெயராகக்கொள்ளாமல் எதிர் மறை வியங்கோளாகக் கொண்டு கோட்டி கொள்ளற்க; கொள்ளின் அது

அங்கணத்துள் உக்க அமிழ்தினை ஒக்கும் எனப்பரிமேலழகர் கொண்டபடியே கொண்டால் என்னையெனின், கொள்ளின் அது என்பன அதில் வருவித் தாலன்றிப்பொருள் கோடல் கூடாதாதலானும், அவையறிந்து சொல்லாட்லோ இவ் அதிகாரம் சொல்லி வருகின்றதாதலாலும, இழிந்தார் அவையிற் கோட்டி கொள்ளலை எடுத்து விளக்கி அதன் இழிவை இஃது உணர்த்துகின்றதாதலானும், கொள் என் னும் வினைப்பகுதிமேல் ஏறிவரும் அல் விகுதியங்கோள் எதிர் மறையில் அருகி வருமாதலானும், அங்கின்றி வட்டாடி யற்றே

விரும்பிய நூலின்றிக் கோட்டி கொளல் என்புழிப்போல கோட்டி கொளல் என்பதை உருத்தலுக்கு வினைமுதலாக்கலே இங்கு மிக அரிமையாமாதலானும் அங்ஙனங் கோடல் பொருந்துமா? என்

## 72-ம் அதிகாரம் அவையறிதல்.

படை உணர்ந்து கொள்க. உக்க என்பதை
உபமாணமாகக் கொள்
ளாமல் அமிழ்து என்பதையே
முடிபாகக்கொண்டால் அது கொளல்
என்னும் உபமேயத்தோடு இயைந்து
முடியாததா
லால் அங்ஙனம் வருங்கால் கொளல் என்பதை
எதிர்மறை வியங்
கோளாகவே கொள்ளவேண்டும் என்க.
உணர்வில்லார்க்கு உரைக்கும்
உறுதிப்பொருள் ஒரு பயனு மின்றி வீணே
கழிந்து ஒழிந்து போம் என்றவாறு.
பன்றிக்கூழ்ப் பத்த ரிற் றேமா
வடித்தற்றால்
நன்றறியா மாந்தர்க் கறத்தா
றுரைக்குங்கால்
குன்றின்மேற் கொட்டுந்

தறிபோல்தலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிகரு.
என்றதும் ஈண்டுச்
சிந்திக்கத்தக்கது.
கல்வியாளர் அவையில் ஒன்று சொல்லப்புகுங்கால் அதன் இயல் பினை அறிந்து ஆராய்ந்துசமயங்தெரிந்து சொல்ல வேண்டும்; சபையின் நிலைமையறியாமல் சொல்லின் தம் நிலைமை குன்றுவர்; அறிவில்லார் முன் யாதும் அறியார் போலவே அமர்ந்திருக்கவேண்டும்; முதியவர் முன் முந்துற ஒன்றும் மொழியலாகாது; அவையில் வழுவுறல் பெரியதோரிழிவாம் ஆதலால் அங்ஙனம் யாதும் வழுவுறாது உணர்வுடையார் முன் விளங்கச்சொல்ல வேண்டும்; உணர்விலிகள் அவையில் ஒன்றும் உரைக்கலாகாது
என இது வரை உரைத்து வந்து இறுதியாக இழிந்தார் முன் சொல்லின் அது

மிக இழிவாம் எனஉறுதி பெற
அறுதியிட்டு இதில் உணர்த்தி அவையறிந்து
சொல்லுதலின் பெருமையை
அழகுற அருளியுள்ள நயத்தை ஆய்ந்து கொள்க.

அரிய நூற் பொருள்களை
அறிவில்லார் முன் சொல்லல்
அறிவீனமாகுமாதலால் அறிவுடையொருவன்
அங்கு யாதும்
சொல்லலாகாதென்பது குறிப்பு.

அறிவிலி யொருவன் மனச்செருக்குடன்
தனக்கொரு கவி யுரைக்க வேண்டுமென்று
ஔவையாரிடம் உரைத்தபொழுது
பாட்டும் உரையும் பயிலாத
வுன்னுடைய
ஓட்டைச் செவியில் உதுப்பேனோ
என்று அவர் உரைத் 1838

தப்போனதும் இந்த உணர்த்தகது. தாம் சொல்லுகின்ற பொருள் இனிதாய்ப் பயன்படுதற்குரிய நல்லாரிடமே அறிவுடையார் நாடிச் சொல்லவேண்டும் என்பது கருத்து.

உயர்ந்த நூற் பொருள்களை இழிந்தாரிடம் சொல்லின் அவை ஒருபயனுமுறாது வறிதே அழிவுறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ததீசிபால் உணரப்படும்.

கதை.

பேரருளாளராய ததீசி முனிவர் தக்கனுடைய யாகசாலையில் புகுந்து அவன் செயல் இயல்களை நோக்கி வருந்தி இறைவனை இகழ்ந்து நீ இது செய்தல் தீதாம் என ஏதுக்கள் பல எடுத்துக் காட்டி இதமுறச் சொல்லினர். விதிமுறை நின்று

செய்கலை என்றும் மதியுடைமையாகும்;
மற்றவெல்லாம் பழியும் பாவமும் வருதற்கு
வழிதேடியபடியாம் என வற்புறுத்தினர்.

விதுவணி சடையானன்றி வேள்வியின்
இயற்றுஞ் செய்கை
மதுமலர் குழலிற் சூட்டி வனமுலை யாரம்
பூட்டிக்
கதிர்மணிக் கலாபஞ் சாத்திக் கன்னிகை
யொருத்திதன்னைப்
புதுமணக் கொழுந னின்றிப் புரிமணக்
கோலம் போலும்.

என இன்னவாறு பலவகையாக இவர்
உணர்வுற உரைத்தும் ஒன்றும்
உணராதவனாய் அவன் உளஞ் செருக்கி
நின்றான். அவ்வளவோடு அமையாமல் இவர்
உரைத்தவற்றையெல்லாம் இழித்துத் தள்ளி
இவரையும் மிகப்பழித்துக்கூறினான்.

பொழிந்தினிது நாறினும்
பூவிசைதல் செல்லா

இழிந்தவை காமுறாடம்

ஈப்போல்—இழிந்தவை

தாங்கலந்த நெஞ்சினார்க் கென்றுந் தக்கார் வாய்த்

தேன்கலந்த தேற்றச்சொற் றேர்வு.

என்னும் உண்மையை அன்று அவன் தேற்றி நின்றான். உறுதிதருவதாய உயர்ந்த உண்மைப்பொருளை உருகி மொழிந்தும் ஒரு பயனு மின்றி வறிதே யிழிந்ததே என்று இவர் வருந்தி யெழுந்து வெளியே போயினார். தம்மையொத்த அறிவுடையாரெல்லாரும் அக மகிழ்ந்து கேட்டு அநுபவிக்கத்தக்க அவரது பொருளுரை இனையில்லாத அவனிடத்தில் இழிந்து தொலைந்ததேயென அவ்வரும்

72-ம் அதிகாரம் அவையறிதல்.

எண்ணி இரங்கினர். தங்கணத்தர்
அல்லார் முற் கோட்டி
கொளல், அங்கணத்துள் அமிழ்தை
உகுத்தது போலாம் என்னும்
உண்மையை உலகம் அன்று அவனிடம் உணர்ந்து நின்றது.

அருளின் அறமுரைக்கும் அன்புடையார் வாய்ச்சொற்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
ஏழை யதனை யிகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவைபுணரா தாங்கு.
(நாலடியார்).

நல்லமிர்தை வெம்பிணத்தின்
நாவிலிடல் போலாமே
புல்லரிடஞ் சொல்லல் பொருள்.

இழிந்தார் முன் உயர்ந்தார் யாதுஞ்
இகனால் கூறப்பட்டது.
சொல்லலாகாதென்பது

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

சொற்களின் திறங்களை வழுவற அறிந்த தூய்மையினையுடையவர் அவையிலெ ரன்று சொல்லுங்கால் அதன் நிலையினை யறிந்து ஆராய்ந்து சொல்லவேண்டும். தனக்குரிய சமயமறிந்து இனிதுறச் சொல்லுவோனே அங்கு உயர்வினை யடைவான். எவ்வளவு கல்வியுடையனாயினும் அவையறியானாயின் அவன் நகைவுறுவான். சிறந்த அறிஞர் நம் விபந்து நோக்குமாறு அவர் முன் திகழ்ந்து நிற்கவேண்டும்; அறிவிலிகள் கூட்டத்தில் அறிவுடையொருவன் புகுவனாயின் யாதுந் தெரியாதவன் போலவே அங்கு அவன் அமர்ந்திருக்கவேண்டும். முதியோர் முன் எதனையும் முந்துற மொழிபலாகாது. அவையின்கண் வழுவுறுதல்

பெரியோர் அவமதிப்பாகும்.
வல்லா ரவையிற் சொல்லுதலே ஒருவன் கல்விக்கு விளக்கமாம். உணர்வுடையார் முன் உரை யாடலே ஒருவனுக்கு உயர்நலமாகும். நல்லவைபுட் சொல்ல வல்லவர் புல்லரவையிற் பொச்சாந்துஞ் சொல்லலாகாது.
உயர்ந்த நூற்பொருளை இழிந்தார் முன் சொல்லுதல் சிறந்த தெள்ளமிர்தைக் கழிந்த சேற்றில் சிந்தியதுபோலாம்; ஆதலால் அவையினை யறிந்தே யாண்டும் பேசவேண்டும்.

எஉ-வது அவையறிதல் முற்றிற்று.

---

1840 திருக்குறட் குமரேச வெண்பா.

# 73-ம் அதிகாரம்

## அவையஞ்சாமை.

அஃதாவது அவைக்கு அஞ்சாமல் நின்று உள்ளியதை உறுதிபெற வுரைத்தல். அவையறிதல், ஆராய்ந்த கல்வி முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே புடையாராயினும் ஒன்று சொல்லப் புகுங்கால் உள்ளத்தில் அச்சங் கொள்வாராயின் அவை யனைத்தும பேடிகை வாள்போ ல் பிழைபடும்; படவே பட்டபா டெல்லாம் பாழாய்விடும் ஆதலின் அங்ஙனம் பாழ்போகாதபடி அவையின் அஞ்சாமல் நின்று பேசவேண்டும் என்று இதில் அரு ளுகின்றார் ஆதலால் அவையறிதலின்பின் இது வைக்கப்பட்டது.

721 அன்றுமுதல் கண்ணார் அனுமார் அவையறிந்தேகன்

குன்றுமற் சொன்னர்

குமரேசா—நின்ற

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்

தொகையறிந்த தூய்மை யவர். (க)

இ—ள்.

குமரேசா! முதுகண்ணரும் அனுமாரும் அவையின் வகையினை யறிந்து யாதுஞ் சோர்வின்றித் தாமறிந்ததை என் துணிந்து சொன்னார் எனின், சொல்லின் தொகையறிந்த தூய்மையவர், வகை அறிந்து வல்லவை வாய்சோரார் என்க.

அன்று என்றது நலங்கிள் ளி அவையிருந்தபொழுதையும் விபீடணன் அடைக்கலம் புகவந்த காலத்தையும் என்க. அவை யிலிருந்தவர் முன் கிளர்ந்து கூறிய வகைகளையெல்லாம் வழுவற வுணர்ந்துகொண்டு தாம் கருதியதைச் சிறிதும் சோர்வின்றித் துணிவுறக் கூறினார்

ஆதலால் அவையறிந்து குன்றுமல் சொன்னூர் என்றும். நின்ற = எதிருற நின்ற.

இஃது அவைக்கு அஞ்சாமல் நின்று கருதியதைத் தெளி வுறச் சொல்லவேண்டுமென்று கூறுகின்றது.

அறிந்த தூய்மையவர் சோரார் என்றதனுல் சோர்வாரின் இழிந்த தன்மை விளங்கி நின்றது.

வகை அறிந்து = அவையின வகைகளையறிந்து; என்றது நல்லவை, புல்லவை என்னும் சபையின் விதங்களை அறிகென்ற 73-ம் அதிகாரம் அவையஞ்சாமை. 1841

வாறு. தாம் சொல்லப் போகின்ற பொருளின் கூறுபாடுகளை உணர்ந்து எனவுமாம். வாய்சோரார் = வாய்வழுவார்;

அஃதா வது அச்சத்தால் சோர்வுபடச் சொல்லார் என்றவாறு.

வல்லவை என்றது தாம் கற்றுத் தெளிந்த நூற்பொருள் களை. வன்மை பயிற்சியின் திண்மைதோன்ற நின்றது. இது பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். வகையறியார் வல்லதூஉம் இல் என்று மேல்வந்துள்ளதை இஃது எதிர்நோக் கி நிற்றல்காண்க. இனி, வல் அவை எனப் பிரித்து வல்ல அவை என்று கொண்டால் ஏழாம் வேற்றுமையுருபை இறுதியில் இணைத் துக்கொள்க.

முன் அதிகாரத்தின் முதற்குறளில் சொல்லின் தொகை யறிந்த தூய்மையவர் எனச் சொன்ன தொடரையே இவ் அதிகா ரத்தின் தொடக்கத்தில் தொடரவைத்தது அவையறிந்து சொல் லுதற்குரியாரே அஞ்சாதவராய் அமைதல்வேண்டும் அறிவில் லார் அங்ஙனம் அமைவதால் பயனில்லை

என்பது அறிவிக்கற் கென்க.

சொற்களின் தொகையினையறிந்த தூய்மையினையுடையவர் அவைகளின் வகையினையறிந்து தாம் தெளிந்த நூறபொருள்களை வல்ல அவைக்கண் சொல்லுங் கால் அச்சத்தால்வழுப்படச் சொல் லார் என்பதாம்.

எவ்வள வு கல்வியுடையனாயினும் அவைக்கு அஞ்சுவனாயின் அவன் அங்கு வழுப்பட்டு இழுக்கடைவனாகலால் அவ்இழுக் குடை அச்சத்தை எய்தாதொழித்து உறுதிபெற நின்று உரை யாட வேண்டும் என்றவாறு.

அவைக்கு அஞ்சாமல் நின்று சொல்லாடுதலே ஒருவனு டைய அறிவுடைமைக்குப்பயனும் என்பது கருத்து.

அவையிலெழுந்து அறிவுடையார் பேசுங்கா ல் அஞ்சாது நின்று தெளிவுறச்சொல்வர் என்பது இதில்

உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை முதுகண்ணன் சாத்தனார்பாலும், அநுமான் கண்ணும் உணரப்படும்.

1842 திருக்குறட் குமரேச

வெண்பா.

## கதை.

முதுகண்ணன் சாத்தனார் என்பவர் உறையூரிலிருந்து அரசு புரிந்த சோழன் நலங்கிள்ளி என்பவனுக்கு உசாத்துணைவராகவும் உயிர்த்தோழராகவும் அமைந்திருந்தார். இவர் நுண்ணறிவோடு தண்ணளியுமுடையவர். ஆலந்தூர்கிழார், கோவூர் கிழார் முதலிய பெரும் புலவர்களும் உவந்து போற்றும்படி குண நலங்களால் இவர் உயர்ந்திருந்தார். உள்ளியதைபுள்ளியாங்கு முடிக்கும் திண்மையும் உரைவன்மையுமுடையவர். செறி சிறிதும் வழுவாத நீராய இவர் உழையிருந்து அரசனுக்கு உறுதிகள் பல உரைத்து வந்தார். அம்மன்னனும் அருங்கலை விநோதனாதலால் பெரும்புலவர்கள் பலரையும் அழைத்து வைத்து அவை கூட்டி அறிவுரைகளைச்செவிமடுத்து வந்தான். அவ் வவ்வையில் இவர் யாதும் அஞ்சாமல் நின்று எல்லாரும்

மகிழ்ந்து கொள்ளுமாறு
சொல்லாடி நின்றார். கொடுமையும்
வஞ்சனையுமுடைய சிற்றினத்
தார் சிலர் அரசனையடுத்துத்தமது
புன்மையைப்புகுத்த முயன்
றார்; அதனைக்குறிப்பாலுணர்ந்துகொண்ட
இவர், "கொடியோர்த்
தெறுதலுஞ் செவ்வியோர்க் களித்தலும்,
ஒடியாமுறையின் மடி
விலையாகி, நல்லதன் நலனும் தீயதன்
தீமையும், இல்லையென் மோர்க்கு
இனனாகிலியர்;" என அம்மன்னனுக்கு
எடுத்துமொழிந்
தார். இங்ஙனமே அவைகளிலும்
தனியிடத்திலும் அமயமறிந்து
உணர்வுரைகளை உறுதி பெறவுணர்த்தி
அரசுக்கு உயிர்த்துணைவ
ராய் நின்றார். தாம் கருதியதை

வழுவுறாமல் தெளிவுபெறச் சொல்லுவதில் சிறந்தவரென்று அக்காலத்திருந்த அனைவரும் இவரை அன்புடன் போற்றினர். சொல்லின் தொகையறிந்த தூய்மையவர், வகையறிந்து வல்லவை வாய் சோரார் என்னும் உண்மைக்கு மிகவும் உரியவராகி இவர் உயர்ந்திருந்தார்.

> சேற்றுவளர் தாமரை பயந்த வொண் கேழ்
> நூற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன
> வேற்றுமை யில்லா விழுத்திணைப்

பிறந்து

> வீற்றிருந் தோரை யெண்ணுங்காலை
> உரையும் பாட்டும் உடையோர் சிலரே
> மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
> புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்.

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.

1848

வலவ னேவா வான வூர்தி
எய்துப என்பதஞ் செய்வினை
முடிந்தெனக்
கேட்ப லெந்தை சேட்சென்னி
நலங்கிள்ளி
தேய்த லுண்மையும் பெருகல்
லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த
லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகு மதி அருளிலர்
கொடாமை வல்ல ராகுக
கெடாத துப்பினின் பகையெதிர்ந்
தோரே. (புறம்)

இது நலங்கிள்ளியை நோக்கி நமது

முதுகண்ணர் உரைத்தது. எந்தை, சேட்சென்னி, நலங்கிள்ளி, என்று மன்னனைத் தம் முகம்நோக்க விளித்துச் சந்திரனது வளர்தல் குறைதல் முதலியவற்றை யெடுத்துக்காட்டி உலகின் நிலைமையை உணர்த்தி உள்ள பொழுதே அருளுடையனாய் நின்று எல்லார்க்கும் உதவவேண்டும்; அதுவே வெற்றி முதலிய எல்லா நலங்களையும் உனக்குக் கொடுக்குமென இதில் இவர் கூறியிருக்கும் சீரினைக்கூர்ந்து உணர்ந்துகொள்க. இவரது கலைத்தெளிவும் மனத்துணிவும் தூய்மையும் அவை அஞ்சாத நேர்மையும் வகையறிவும் வல்லவை வாய்சோரா மாண்பும் பிறவும் இதனால் இனிது புலனாம்.

## கதை 2.

இராமரிடம் அடைக்கலம் புகுந்து அமர்ந்துகொள்ள நினைத்து விபீடணன் வந்து

அடைந்தபொழுது அவனைச்சேர்த்
துக்கொள்வதைக் குறித்துத் தந்திரமாக அவர்
ஓர் மந்திராலோசனை செய்தார். சுக்கிரீவன்
சாம்பவன் நீலன் குமுதன் முதலிய
அமைச்சர்களனைவரும் ஏதுக்கள் பல
எடுத்துக்காட்டி அவனைச்
சேர்த்துக்கொள்ளலாகாதென உறுதிபெற
முடிவு செய்துரைத்தார்.
அவருரைகளையெல்லாம் கேட்டுணர்ந்தபின்
231

இறுதியக 1844 திருக்குறட் குமரே

ரச வெண்பா.
இராமர் அநுமானை நோக்கினர்.
அந்நோக்கின் அ நுபவை இதனடியில்
வருங்கம்பன் வாக்கில் நோக்கிக் கொள்க.

உறுபொருள் யாவரும் ஒன்றக் கூறினர்
செறி பெருங் கேள்வியாய் கருத்தென்?

செப்பென
நெறிதரு மாருதி என்னு நேரிலா
அறிவனை நோக்கினன் அறிவின் மேலுள்ளான்.

இங்ஙனம் நோக்கியவுடனே அனுமன் விநயத்தோடே மூத்து தன் அறிவின் பெருமை தோன்ற

எத்தனையுளர் தெரிந் தெண்ண வேய்ந்தவர்
அத்தனைவரு மொரு பொருளை யன்றென
உத்தமா துதெரிந் துணா வோதினோர்
வித்தக இனிச்சில விளம்ப வேண்டுமோ.

என அவையடக்கமாகச் சிலமொழிகள் அழகுறக்கூறிவிட்டுத்தான் கருதியுள்ளதை உறுதியுற உரைக்கத்துணிந்தான். பருவவுருவங்களில் தன்னினுஞ் சிறந்த சுக்கிரீவன் முதலியோர் துணிந்துரைத்துள்ள ஒரு காரி

யத்தைககுறித்துத் தான் மாறுபடவுரைக்குமாறு நேர்நதிருந்தும் சிறிதும் அஞ்சாமல் நின்று நீதிமுறைகள்பல எதுவோடு எடுத்துக் காட்டி விபீடணனைச் சேர்த்துக்கொள்ளவேவேண்டும் எனத்தெளிவுறக்கூறினான். உண்மையை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு இவன் அன்று உரைத்தவற்றை இராமர் உவந்துகேட்டு மிகவியந்து போற்றி விபீடணனை நயந்து தழுவி நட்புக்கொண்டார். வல்லு நர்பலர் குழுமிய அந்நல்லவையில் வாய்சோராதுநின்று அன்று இவன் சொல்லிய திறத்தை எல்லாரும் துதித்து மகிழ்ந்தார். வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின் தொகையறிந்த தூய்மையவர் என்னும் உண்மையை உலகம் அறிய அன்று இவ

னும் உணர்த்தி நின்றான். வழுவாது சொல்லிய இவனது தெளி வுரையின் அழகையும் அணிவையும் உணர்வையும் விபீடணன் அடைக்கலப்படலத்தில் காண்க.

கற்றுணர்ந்தார் என்றுங் கலங்கார்
சொற்றருங்கால் சோரார் துறை.

அவையினின்று

அவையஞ்சாது கூறவல்லவரே
இதனுள் கூறப்பட்டது.

அறிவோராவர் என்பது

---

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.
1845

722

தண்டா ருபர்காளி காசமேன் கற்றவருட்
கொண்டாட நின்றார் குமரேசா—மண்டிநின்று

கற்றருட் கற்ற ரெனப்படுவர்
கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்.
(உ)

இ—ள்.

குமரேசா! அவையஞ்சாத
காளிதாசர் என் எல்லாரி னும் நன்கு கற்றார்
என்று சொல்ல நின்றார் எனின், கற்றருள்
கற்றார் எனப்படுவர் கற்றார்முன் கற்ற
செலச்சொல்லுவார் என்க.

தண்தார் என் அடைகொடுத்தது
அவாது அரசபோக நிலையின் இயல்பு கருதி
என்க. தார் = மாலை. புலமையில் மிக உயர்ந்து
நின்றாராதலால் உயர் என்னும் அடை
அவர்பெயர்முன் உறைந்து நின்றது. பாணன்
பட்டி மாகன் முதலிய பெரும்புலவர்களெவரி
னும் இவர் பெரிதாக மதிக்கப்பட்டு

எல்லாரானும் போற்ற நின்றாராதலால்
கற்றவருட்கொண்டாட நின்றார் என்றும்.

இஃது அவையஞ்சாது சொல்வார்
அடையும் பயன் கூறுகின்றது.

கற்ற = தாம்கற்றவற்றை. என்றது
நூற்பொருள்களை. இது வினையாலணைந்த
பெயர்என்க. செலச்சொல்லுவார் என்றது
கேட்பவருளங்கொளச் சொல்ல வல்லவர்
என்றவாறு.

மேல், அவையஞ்சாது சொல்ல
வல்லவரே கல்வியாளர் என்றார்; இதில், அவரே
ர கற்றவரெவரினும் மிக்கவராகக்கருதப்படுவர்
என்கின்றார்.

கற்றார் குழுமிய அவையின்கண்
தாம்கற்றவற்றை அவர்

மனங்கொள்ளும் வகைஅஞ்சாது சொல்ல
வல்லவர கற்றார் எல்லா

ரினும் மிக்கவும் நன்கு கற்றவரென்று

உலகத்தாரால் சிறப்பித்துச்சொல்லப்படுவர் என்பதாம்.

அவையஞ்சாது நின்று அறிஞர் முன்
அழகுற ஒருவன்

சொல்லுவனாயின் வெளியே வந்த ஒளியோடு திகழும் முத்தைப் போல் அவன் உயர்ந்து விளங்குவன்; அங்ஙனம் விளங்கவே உலகமெல்லாம் கண்டு அவனை உவந்து கொண்டாடும் ஆதலால் செலச்சொல்லுவார் கற்றாருட் கற்றார் எனப்படுவர் என்றார்.

1846 திருக்குறட் குமரேச வெண்பா.

ஒள்ளிய முத்தேயாயினும் சிப்பிக்குள் ஒடுங்கி கிடக்குமாயின் அது ஒரு மதிப்புங்கொள்ளாததுபோல் தெள்ளிய கல்வியுடையாராயினும் அவையச்சம் என்னும் நவைபுட்பட்டு ஒன்றும் சொல்லமாட்டாது ஒழிந்துபோவாராயின் யாதொரு நலமுங் கொள்ளாமல் அவர் மிக இழிந்தவராவர்

என்க.

உளமறிந்தகை க் க ளஞ்சாது சொல்வோர் உடுக்கணத்துள் உவாமதிபோல் உலகம் போற்ற ஒளிபெற்று விளங்குவர் என்பது கருத்து.

அவையஞ்சாமல் சொல்ல வல்லவர் கல்வியாளரெல்லாருள் ளும் சிறந்தவராக உயர்ந்து திகழ்வர் என்பது இதில் உ ணர்த்தப் பட்டது. இவ்வுண்மை காளிதாசர்பால் உணரப்படும்.

## கதை.

காளிதாசர் என்பவர் போசராசனுடைய சபையில் தலைமைப் புலவராய் நிலவியிருந்தவர். காளிதேவியின் வரபலத்தால் கலைநலம் பெற்றவராதலால் காளிதாசர் என இவர் பெயர்பெற்றுநின்றார். இவர் மிக்க நுண்மதியாளர். வடமொழிவாணர்களுள் இவர் மிக வும் வல்லவர். எவரும்

வியந்துகொள்ளுமாறு சிறந்த கவிகளை விரைந்து பாடுவதில் இவருக்கு நிகரானவர் எங்கும் இலர் என இவர் நின்று நிலவினார். இவரது கவித்திறத்தையும் மதித்திறத்தை யுங்கண்டு போசன் பெருங்களிகொண்டு என்றும் இணைபிரியாது இவரோடு இன்புற்றிருந்தான். நுண்ணுணர்வினரோடு கூடி நுகர்வுடைமை, விண்ணுலகே யொக்கும் விழுமிற்றால் என்னும் உண்மையை அம்மன்னன் இவர் முன்னிலையில் உணர்ந்து மகிழ்ந்தான். அவன் உளத்தில் குறித்ததை வாய்திறந்து கூறுமலே குறிப்பாலோர்ந்து கவியில் இவர் உரைத்துவந்தார். அருங்கலை விநோதனுப அவன் இப்பெரும் புலவரோடு அமர்ந்து புலமை யின்பத்தை நுகர்ந்து வருங்கால் இடையிடையே இவரிடமிருந்து

எழுந்த கவிகள் பல. தான்செய்ததொரு காவியத்தை மாகன் என்னுங்கவி அரசசபையில் அரங்கேற்றிவருங்கால் ஒருதொடரில் ஒற்றெழுத்து மிகையாயிருத்தலைக்கேட்ட இவர் அது பொழுது

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.

1847

தமக்கு

வெற்றிமைடித்து க்கொடுத்துக்கொண்டிருந்தவனை நோக் கிச் சுன்னம் அதிகம் என்றார். அங்கிருந்த நுண்ணறிவாளராய அனைவரும் இவரது நுண்ணைபுலனை நோக்கி வியந்தார். அரசவையி லிருந்த தண்டி பாணன் பவபூதி பிலகணன் முதலிய பெரும் புலவர்களும் இவரது அரும்புலமையை வியந்து இவர்பால் அன்பு செய்துவந்தார். மறுபுலத்தினின்று

மாறுகொண்டு வந்தவரெவராயினும் அவர் தம்
வீறு அடங்கவென்று இவரொருவரே
விளங்கி நின்றார் ஆதலால் அவரெவரினும்
இவரையே திலகமாக உலகம் உணர்ந்து
புகழ்ந்தது. இவரது உயர்புகழ் எங்கும்
ஓங்கி நிலவப் பிறபுலவர்களெல்லாம்
ஒடுங்கியிருந்தார்.
கற்பவர்கள் பலகோடி காசினியில் இருந்திடினும்
காளிதாசன்
மெய்ப்பபெயர் யார்பெற்றர் பெருவானில்
உருமீன்கள் பெரிதாஓங்கி
உற்றிடினும் ஒளிர்மதிபோல் உயர்புகழை யுறு
க்கோல்ம் லாரி உ றதே யன்றே; என்று
அககாலத்திருந்தவரெல்லாரும் உவந்து
போற்ற இவர் உயர்ந்திருந்தார். குமாரசம்பவம்
இரகுவம்சம் நளோதயம் சாகுந்தல முதலிய
அ ரியநூல்கள்பல வடமொழியில்
அழகுறஇவர் ஆக்கியுள்ளார். எவர் வந்தாலும்
அவையஞ்சாமல் நின்று உணர்ந் துள்ளதை

உறுதிபெற உரைத்துவந்தாராதலால் கவிஞர்கள் எவரினும் இவர் புவிபுகழ நின்றார். கற்றாருட் கற்றாரெனப்படுவர் கற்றாருட் கற்ற செலச் சொல்லுவார் என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

விண்மதிபோல் ஓங்கி விளங்குவான் மேலோர்முன்
திண்மையுறச் சொல்லுவான் தேர்.

உணர்ந்தார்முன் சொல்லவல்லவரே உயர்ந்தவராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

723 அஞ்சுபோரப் பல்லோர்
அடர்த்தெழுந்தார் பட்டார்முன்
குன்றினரேன் சொல்லக்
குமரேசா—என்னும்
பகைபகத்துச் சாவா ரெளிய ரரியர்

அவையகத் தஞ்சா தவர்.

(கு.) 1848 திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா ! பட்டரோடு சொல்லாடுதற்கு அவையில் அஞ்சி நின்றவர் பின்பு என் போர்செய்யப்பொங்கி எழுந்தார் எனின், பகை அகத்துச்சாவார வர் அரியர் என்க.

எளியர்; அவை அகத்து அஞ்சாத

அன்று என்றது வீரசுந்தரன் விளங்கிநின்ற காலத்தை. மாதவசூரி முதலாக எவரும் இவர்முன் நின்று வாதம் புரிய அஞ்சி மறைந்து போனாராதலால் முன்சொல்லக் குன்றினர் என்றும். என்றும் என்றது எளியர் அரியர் என்னும்

உண்மையாதும் நிலைதிரியாது எக்காலத்தும் நிலைபெற்று நிற்கும் என்பதைநிலையுறுத்தி நின்றது.

இஃது அவையஞ்சாமையினது அருமை கூறுகின்றது.

பகைபகம் = பகைவர் போர்க்களத்தை.

மூண்டுபொருகின்ற இடம். என்றது

சாவார் = இறப்பவர்; இது உடன்பாட்டுவினையாலணைந்த பெயர். எளியர் என்றது எளிதாகக்கிடைப்பர் என்றபடி.

பகையகம் புகுந்து சாகத்துணிவார் பலரை எளிதாகக்காண லாம்; அவையகம்புகுந்து அஞ்சாது பேசத்துணிவார் சிலரைக் காண்டலும் பெரிதும் அரிதாம் என்பார் சாவார் எளியர்; அஞ்சாதவர் அரியர் என்றார்.

மேல், அவையஞ்சாதுசொல்ல

வல்லவரேகற்று செல்லாரினும் சிறந்தவராவர் என்றூர்; அச்சொல்லாண்மை எல்லார்க்கும் எளிதில் எய்தாதென்று இதில் அதன் அருமைதோன்ற அருளுகின்றூர்.

பகையிடத்து அஞ்சாதுபுகுந்து இறக்க வல்லவர் கிடைத்தற்கு எளியர்; அவையிடத்து அஞ்சாதுநின்று சொல்வல்லவர் பெறுதற்கு மிகஅரியர் என்பதாம்.

அவையஞ்சாமையை உணர்த்தற்குப் பகையஞ்சாமையை இணைத்துக்காட்டியதென்னை யெனின், அஃது ஆண்டன்மை மிக்கோர் அருஞ்செயல் என்பது தோன்ற எனக.

வீரர்களினும் வித்துவான்கள் தீரர்கள் எனஉயர்வுதோன்ற அடிகள் உணர்த்தியுள்ள உண்மையை இதில் ஊன்றியுணர்க.

அவையஞ்சாமை. 1849

இருபொருள்களை இங்ஙனம்
இணைத்தெடுத்துக் குறிப்பினால்
வேறுபாடு தோன்ற
ஒன்றைச்சிறப்பித்துக்கூறியதனால் இது
வேற்றுமையணியெனப்படும்.

கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை
யிருபொருள்
வேற்றுமைப் படவரின்
வேற்றுமையதுவே. என்பது இயல்விதி.
பகையகத்தில் உயிர்க்கு அழிவுண்டாம்;
அவையகத்தில் வழுவின் மானம் அழியும்;
அவ்வுயிரழிவின் துயர் பின்பு உணர்வுறுவகை
ஒருபடியே முடிவாக ஒழிந்துபோம்;
இஃது இறக்கும் வரையும் இழுக்கினை நினைந்து
நினைந்து வருந்தச்செய் யும்; ஆதலால்
அதனினும் இது, அஞ்சுதற்கு எதுவாயிற்று

என்க.

பொருகளம் புகுந்து போர்செய்ய வேண்டின் ஆயிரக்கணக் கான வீரர்கள் அஞ்சாதெழுவர்; அவைக்களம் புகுந்து வழுவற ஒன்று சொல்லவேண்டுமாயின் ஒருவர் இருவர்கூட உறுதிகொண் டெழாமல் நீங்கள் சொல்லுங்கள்; இல்லை; நீங்கள்தாம்; உம்; என்று தத்தமக்குள்ளேயே உரையாடிப்பதுங்கி ஒதுங்குதலை அறிவுடையுலகில் இன்றுங்கா ணலாம். சாகத்துணிந்தாலும் துணி வர்; சபையில் பேசத்துணியார் என்றவாறு.

அவையஞ்சாது மாத்தி ரம் ஒருவன் சொல்ல வல்லனாயின் கற்றுசெல்லாரினும் மிக்கவுங்கற்றவனாக அவன் மதிக்கப்படுவன் என்று மேலுரைத்ததைக்கேட்டு அப்படி யாயின் பன்னாளும் வருந்திக்கல்லாமலே சொல்லாடலொன்றால் அதனை எளிதில்

பெற்றுவிடலாங்கொல் என ஒருவன் இனந்தெரியாமல் எண்ண அவனை நோக்கி இஃதியம்பியதாகக்காண்க.

அவையஞ்சாமல் நின்று சொல்லவல்லவர் இவ்வுலகில் மிக அரியராவர் என்பது கருத்து.

ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம் புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர்.

என்றார் ஔவையார்.

நூற்றுவரிற் றோன்றுஞ் சுறுகண்ணா ராயிரவர்
ஆற்றலித் தொக்க அவையகத்து—மாற்றத்தான்
றுன்று கொடுக்கு மகன் தோன்றும்; என்றது தக்கூர் 1850

திருக்குறட் குமரேச வெண்பா.

யாத்திரை. இதில் சுறுகண் என்றது

பகையஞ்சாமையை: அவை யஞ்சா தவர் அரியர் என்பதை இவையும் அறிவித்து நிற்றல் காண்க. வக்தா சதஸஹஸ்ரேஷு என்பர் வடநூலாரும்.

சிலகேளோடு எதிர்நின்று அவையில் சொல்லாட அஞ்சிநின்றவர் பின்பு பெருஞ்சினங்கொண்டு பொர எழுந்ததுபோல் எவரும் அமைவாரதலால் போர்க்களத்திலும் அவைக்களம் புகுதற்கரிய தோர் பெருந்திறலுடையமை தெரிக.

அவையஞ்சாது சொல்லுதல் செயற்கருஞ்செயலாமாதலால் அதனையுடையவர் எல்லாராலும் பெரியாராகக்கருதப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பட்டர்பால் உணரப்படும்.

## கதை.

பட்டர் என்பவர்

தொண்டைமண்டலத்திலே கூரம்என்னும் ஊரிலே வேதியர்குலத்திலே பிறந்தவர். அவ்வூரில் அவதரித்தமையாலும் திருமாலுடைய குணங்களாகிய அமுத வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தமையாலும் கூரத்தாழ்வார் என்னும் பெயரோடு சீர்பெற்று நின்ற அவ்அந்தணாளரே இவர்க்குத்தந்தையாரவர் இவருடைய தாயார் பெயர் ஆண்டாள் என்பது. இவரதுகாலம் சற்றேறக்குறைய இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்னாகும். இளமையிலேயே பெரும்புலமையுடையராய் இவர் விளங்கி யிருந்தார் . பலநாளும் ஓதியோதியுணர்ந்தவர்களும் உணரமுடியாத வேதபாகங்களை எவரும் வியக்குமாறு இவர் எளிதில் விளக்கி நின்றார். உய்த்துணர்விலும் சொல்வன்மையிலும் இவ ருக்குஒப்பானவர் அக்காலத்தில்

ஒருவருமிலரென இவர் உயர்வுற்றிருந்தார்.
பலபுலவர்களையும் வாதில் வென்று
சர்வஞ்ஞபட் டன் என்னும் பெயருடன்
விருதுபெற்றுவந்த பண்டிதனொருவனை இவர்
கண்டபொழுது தெருவிலிருந்து
ஒருபிடிமண்ணைக் கையிலெடுத்து
மூடிக்கொண்டு கற்றது கைம்மண்ணளவு
என்னும் உண்மையை உள்ளி நீ கற்றதெல்லாம்
இதிலுள்ளது இஃது என்னை? என்றார்.
அவன்திகைத்து விழித்தான். உடனே இவர்
நகைத்து விரித்து இதுதெரியாத
உனக்குவிருதும்வேண்டுமோ? 73-ம்
அதிகாரம் அவையஞ்சாமை. 1851

சர்வ அஞ்ஞா! என அவன்
வெள்கிப்போனான். மாறுபட்டுவந்த
மதவாதிகள் பலரையும் வென்று

திருவரங்கத்தைவிட்டுப் பெரு
மாள் சந்நிதியிலிருந்து நாள்தோறும்
பிரசங்கஞ்செய்துவந்தார். அங்ஙனம்
செய்துவருங்கால் மாதவசூரி என்னும்
பெரும்புலவனொருவன் எல்லாரையும்
வாதில் வென்று சொற்போரிற் சிறந்து
நின்றான். வல்லவரெவரேனும் என்னுடன்
வாதாடவரலாமென்று வளவனுதவியால்
அவை கூட்டி அவன் அறைகூவினான்.
அவனோடு உரையாட அஞ்சி எல்லாரும் ஒடுங்கி
ஒளித்தபொழுது இவர்மாத்திரம்
துணிந்தெழுந்துபோய் அவ் அவைபுட்புகுந்து
சொல்லாடி அவனை அடக்கிவந்தார்.
அவனுக்குத் துணையாகநின்ற வீரர் பலரும்
யாதும் கூறமாட்டாமல் அடங்கினின்றார்.
உயிர்க்குறுதிபயக்க கற்கக்க அரிய பொருள்களை
யாவரும் உணருமாறு தெளிவுறச் சொல்லும
இவரது பெருமையையும், மாற்றலரைவென்று

மதிப் புற்ற அருமையைப் பர் வியந்து
எங்கள்குடிக்கரசு என வைணவ ரனைவரும்
மனங் குழைந்து இவரை
வாழ்த்திப்போற்றினர். பல் ல ாயிரவர்
கூடியபெருஞ்சபையில் அஞ்சாமல் நின்று
இவர் பேசியதை ஒருநாள் நஞ்சீயர் என்னும்
பெரியவரொருவர் கேட்டுப்
பெருமகிழ்ச்சியடைந்து பட்டர்போல்
அவையஞ்சாப்பருணிதரை
இனிப்பார்க்கப்படுமோ? என்று
பாடிநின்றார். போர்முகத்தில் அஞ்சாதவீரர்
பலரிருந்தும் அவையஞ்சிநிற்ப இவர் அங்கு
அஞ் சாது புக்கு வென்றமையைக்குறித்து
அனைவரும் வியந்து கொண் டாடி னர்.
பகையகத்துச்சாவார் எளியர் அவையகத்து
அஞ்சாத வர் அரியர் என்பதை உலகம்காண
அன்று இவர் உணர்த்தி நின் றார். விரிவைப்
பட்டர் வைபவம் என்னும் நூலில் காண்க.

வில்லெடுத்துப் போர்முனையின்

மேவலேளி காமரிதே
சூழ்.

அவையஞ்சாதவர் இவ்வுலகில் மிக அரியராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

724 திண்டோ ளிருதுபன்னன் தேர்நளன்பா லேன்கலையைக்
கொண்டான் கொடுத்துக் குமரேசா—அண்டிநின்று
கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருள் மிக்க கொளல். (௪)





இ—ள்.

குமரேசா! தான் கற்றிருந்ததை நளனுக்குச் சொல்லி அவனிடமிருந்து என் இருதுபன்னன் அசுவவித்தையை அறிந்து

கொண்டான் எனின், கற்றூர்முன் கற்ற
செலச்சொல்லித் தாம கற்ற மிக்காருள் மிக்க
கொளல் என்க.

இது, கற்றூர் ஆற்றவேண்டி யகடப்பாடு
கூறுகின்றது.

திண்தோள் என்றது
தன்தோள்வலியால் பகைவர் பலரை யும்
அவன் வென்றுநின்றமைகருதி. தேர்நளன்
என்றது தேர்த லிலும் தேரூர்தலிலும்
வல்லவன் என்றவாறு. தான் கற்றிருந்த
கணிதவித்தையை நளனுக்குச்சொல்லி
அசுவதியம் என்னும் வித்தையை
அவனிடமிருந்து அறிந்துகொண்டானுதலால்
கலை
யைக் கொடுத்துக்கொண்டான் என்றும்.
அண்டிநின்று — செருங்கி நின்று. ஆசிரியனை
அடுத்திருந்து என்க.

மிக்கார் என்றது தம்மினும்

கல்வியில்மிக்கவரை. தாம்கற்ற மிக்க கொளல் = தாம் கற்றவற்றினும் மிக்கபொருள்களை அம்மிக் காரிடத்திருந்து உணர்ந்துகொள்க தாம்என்றது சொல்லிக் கொளற்குவினைமுதலாய் நின்றாரை.

அவையஞ்சாது சொல்லவல்ல தன்மை ஒருவனுக்கு நன்கு அமைந்திருப்பினும் பிறரெழுந்து பேசுங்கால் அந்த அமைதியாயிருந்து அதனைச்செவிமடுத்துக்கல்வியாளர் பலரோடும் பயின்று தான் பயிலாதன உளவாயின், அவரிடத்து அவற்றைஉணர்ந்து கொள்ளவேண்டும்; ஏனெனின், சிலகற்றார்க் கண்ணும் உளவாம், பலகற்றார்க்கு அச்சாணியன்னதோர் சொல் என்றபடி கல்விப் பொருள் வரம்புபடாது புதைந்து கிடக்கும் என்க.

மேல், அவையஞ்சாது சொல்லுவோர்

இவ்வுலகில் மிகப் பெரியாரவர் என்றார் ; இதில், அவர்க்கு அறிவும் புகழும் பெருகும் என்கின்றார்.

பல நூல்களையும் வழுவறக்கற்றார் முன்பு தாம் கற்றனவற்றை அவருளக்கொளச்சொல்லி அவற்றினும் மிக்கபொருள்

78-ம் அதிகாரம்

அவையஞ்சாமை. 1853 கஙி

அங்ஙனம்
மிகக் கற்றாரிடத்திருந்து அறிந்துகொள்ள வேண்டும் என்பதாம்.

தான் பயின்றனைதைப்பிறர்க்குப்பயனுறச்சொல்ல வேண்டும் என்பார் கற்ற செலச்சொல்லி என்றும், தான்பயிலாதவற்றைப்பயின்றுள்ளவரிடம் பணிந்து உணர்ந்துகொள்ளவேண்டும் என்பார் மிக்க மிக்காருள் கொளல் என்றுங்கூறினார்.

எல்லாவற்றையும் ஒருங்கே கற்றல்

ஒருவர்க்குத்தனியே இயலாதாதலால் பூக்கள் தோறும் போந்து தேனைப்பருகிக்கொண்டு வரும் வண்டுபோல் கல்வியுடையார் பலரிடமும்சென்று கலையைக் கற்றுவரவேண்டும் என்றவாறு.

ஆசிரியனையடுத்து எவ்வளவுதான் ஒருவன் படித்தாலும் தான்கற்றதைப்பலரோடும் பயின்று அவையஞ்சாது சொல்ல வல்லவனுக்கே கல்வி வளருமென்க.

ஆசானுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றல னாகும்.

எனவும்,

அவ் வினை யாளரொடு பயில்வகை யொருகாற்

செவ்விதி னுரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத்தாகும்.

எனவும்,

பிறர்க்குரை யிடத்தே நூற்கலப்

பாகுர்

திறப்பட வுணரும் தெளிவி னோர்க்கே.

எனவும், வருவன ஈண்டு எண்ணற்குரியன.

தாம்கற்றதை அவையஞ்சாமல் நின்று சொல்லுவாராயின் பின்பு அவர் கல்வியில் மிக வல்லவராவர் என்பது கருத்து.

தமக்குத் தெரிந்ததைப் பிறர்க்குத் தெளியச் சொல்லித் தெரியாததைத்தெரிந்தவரிடம் அறிந்துகொள்வோர் அறிவிற் சிறந்தவராவர் என்பது இதிலுணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இருதுபன்னன்பால் உணரப்படும்.

## கதை.

இருதுபன்னன் என்பவன் திருவயோத்தியிலிருந்து அரசு புரிந்த சூரியகுலமன்னனாகிய அயுதாயுவினுடைய புதல்வன்.

வெண்பா:

அழகு ஆண்மை அமைதி முதலிய நலங்கள் யாவும் அமையப் பெற்றவன். கணிதவித்தையில் எவருந் தனக்கு நிகரில்லாதவன். எவ்வளவு தொகையினை யுடையதாயினும் நோக்கியவுடனே அதனை இவ்வளவினதென அறுதியிட்டு உறுதிபெற உரைக்கவல்லவன். மாலினி என்னுந்தனது இனிய மனைவியோடமர்ந்து அரியபோகங்களை நுகர்ந்து சர்வகாமன் என்னும் புதல்வனைப்பெற்று இசை திசை பரப்பி இவன் இனிது வாழ்ந்தான். இவன் இங்ஙனம் வாழ்ந்து வருங்கால் நளன் கலிவயத்தனாய் அரசிழந்து அடவியிலலைந்து, துணைவியைப்பிரிந்து இறுதியில்

இவனை வந்தடைந்தான். ஏதேனும் ஒருதொழில்முறை செய்ய விழைந்தான்.

இருது பன்னனைக் காண்டலும் எத்தொழில் வல்லை

மருவு நாமமென் கூறெனை வாகுவன் என்பேர்

உருவ வாம்பரித் தேரினி தூர்குவன் உப்பர்

அருமருங்கெனை அடுதொழில் புரிவனெனறறைந்தான். (1)

வேந்தன் அவ்வுரை கேட்டலும் வியன்மணி நெடுந்தேர்

கூந்தன் மாவுளம் அறிந்தனை குறிப்பின் ஊர்குதியேல்

ஆய்ந்த செம்பொனோ ராயிரம் வைகலும் அளிப்பல்

எய்ந்த என்னிரு பாகரோ டிருந்தியென் றிசைத்தான். (2) இங்ஙனம் இவன் இசைத்தபடியே அவன் இசைந்திருந்தான்.

ஆண்டுகள் மூன்று கழிந்தபின் அவன் இங்கிருந்தலைச் சில இங்கிதங்களால் அறிந்து தமயந்தி அவனை அடைய விரும்பி மறுபடியும் ஓர் சுயம்வரம் என்று சொல்லிவருமாறு சூழ்ச்சியோடு தன் தந்தையாகிய வீமன் அனுப்பியதுபோல் ஒரு தூதனையனுப்ப அவன் வந்து ஓதியதைக்கேட்டவுடனே இவன் மிக மகிழ்ந்து அவள் நகரமாகிய குண்டினபுரத்துக்குச்செலலத்துணிந்து தேர் கொண்டு வரும்படி நளனிடஞ் சொல்லினன். அவனும் அவ்வாறே கொண்டுவந்து நிறுத்த அத்தேரிமேலறினன். அசுவவித்தையில் சிறந்தவனாதலால் அவன் செலுத்திய தேர் அதிவேகமாகச் செல்லுதலை நோக்கி இவன் சிந்தைமகிழ்ந்து

கூந்தன் மாவளம் அறிதலிற்

சாலிகோத்திரனே.

வாய்ந்த கேள்வியின்

மாதலிபோர அன்றினனும்

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.
1855.

எந்தல் வேற்றுரு வெடுத்தனை
ஞெவெள வெண்ணலி
வேந்தர் வேந்தனு மணிமுடி
துளக்கினன் வியந்தான். மேலும் விரைந்து
சென்றபொழுது இவன் மேலாடை கீழே
விழுந் தது; அதனை எடுத்துத்தருக என்று
உரைக்குமுன்னரே பத்து யோசனை தூரம் வ
ந்துவிட்டதே இனி என் செய்வது என்று அவன்
பகர்ந்து சென்றான். அவனது கல்வித்திற
த்தையும் அற்புத ஆற்றலையும் கண்டு
அவனிடமிருந்து அதனை உணர்ந்து கொள்ள
விழைந்து தன் கணிதவித்தையை அவன்
கண்டு மகிழுமாறு வழியிடையே நின்ற
ஒரு தான்றிமரத்தினைக் குறித்துக்காட்டி

அதில் காய்கள் பதினாயிரங்கோடியுளஎன
போய்ப்பார் என்றான். அங்ஙனமே அவன்
போய் எண்ணிப்பார்த்து
உண்மையாயிருக்கலை யுணர்ந்து
விம்மிதமுற்றான்.

இனையவிஞ்சை மற்றெனக்கு நீ
யளிக்கென வென்னிற்

றனைவயப்பரி யுளமுணர் விஞ்சையா
ன் சொல்வன்

வனைபொலங் கழன் மணிமுடி
மன்னவென் றுரைப்ப

அனைய விஞ்சையை வாகுவற்
களித்தன னன்றே. தான் கற்றிருந்த கணக்கறி
வித்தையை அவனுக்கு உணர்த்தி,
அவனிடமிருந்து அசுவதீயம் என்னும்
அரியவித்தையை ஆர்வத்தோடு இவன்
உணர்ந்து கொண்டான். கற்றோர் முன்
கற்றசெலச் சொல்லித்தாம்கற்ற மிக்காருள்
மிக்க கொளல் என்னும் உண்மையை

உலகம்காண அனறு இவன் உணர்த்தி
நின்ருன். மூக்கை வினைகுறுக மூவா மயல்
கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்
தார்குன்ற மெல்லோதி தன்செயலைத்
தன்மனத்தே தேர்கின்ருன் ஊர்கின்ற தேர்.
(1) மேலாடை வீழ்ந்த தெடுவென்ருன்
அவ்வளவில்
நாலாறு காத கடந்ததே—சோலாமை
மேல்கொண்டான் ஊறவர வெம்மைக
கலிச்சூதின் மால்கொண்டான் கோல்கொண்ட
மா. (2) இத்தாழ் பணை யி
லிருந்தான்றிக் காய்எண்ணிற்
பத்தா யிலஞ்கோடி
பாதிரண்ணை—உய்த்ததன்பகம் : 1856
திருக்குறட் குமரேச வெண்பா.

தேர்திறத்தி யெண்ணினன் தேவர் சபைநடு
வ

தார்சிறந்தூக் தோன்வேந்தன் தான்.
(3) ஈரடிப்பார் கோலெடுப்ப இன்றேறன்
றொடைபிறிக் கொடுத்த சோலைக்
கடலுடன்—தோடுக்க
மாத்தொழிலும் இத்தொழிலும் மாற்றுதியோ
என்றுரைத்தான் தேர்த்தொழிலின்
மிக்கானைத் தேர்ந்து. (4)
இவை, புகழேந்திப்புலவர் பாடியன.
இருதுபன்னன் கற்ற சொல்லி, மிக்க
கொண்டதும் அவன் கருதிநின்றதும்
பிறவும் இவற்றுள்ளும் இனிதுபுலனாதல்
காண்க.
அரசர்போற்றப தாபுனை யளித்தனன்
அன்றேன் இருது பன்னனை
வழுவிலனைர்தொழ என்றுன்
உரைசெய் அன்னவ னும்புகழ்பெறுதி யோன்
றன் பாடுளான் நளன்றன்னொடு
கூட்டுவைகினனுல். (1) இருக்கு

நாணினில் கலிகடிந்திடுவதோர் விஞ்சை
மருக்கமழ்ந்த தார நளனெனு மன்னனுக்
குணர்த்திப் பொருக்கெனச் செலும் புரவியி
னுணமறி விஞ்சை உரைக்கு மன்னவ
னிசைப்பகன் குணர்ந்தனன்மாதோ. (2)
(பாகவதம்)

வீரன்கை வேல்போல் விளங்கும்

அவையஞ்சா
நீரன் கலையின் நிலை.

அவையஞ்சாது சொல்ல
வல்லவர்க்குக்கல்வி வளரும்என்பது இதனால்
கூறப்பட்டது.

---

725 வென்றிப் புகழேந்தி வேத்தவையில்
மாற்றமென்
குன்றாது தந்தான்
குமரேசா—நன்றாக
ஆற்றி னளவறிந்து கற்க
அவையஞ்சா

மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(ரு)

இ—ள்.

குமரேசா!

தகுந்த விடைதந்து

அரசவையில் நிகழ்ந்த வினாக்களுக்குக்
கல்வியிற் சிறந்தவனைப் புகழ்ந்து என்

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.

1857

உயர்ந்து விளங்கினான் எனின், அவையஞ்சா
மாற்றம் கொடுத் தற் பொருட்டு, ஆற்றின்
அளவறிந்து கற்க என்க.

இஃது அவையஞ்சாது சொல்லுதலே
ஒருவன் கல்விக்குப் பயனாம் என்கின்றது.

சொற்போரில் எப்பொழுதும்

தானே வெற்றிபெற்று விளங்கி நின்றனாதலால் வென்றி என்னும் அடை கொடுக்கப்பட்டது.
வேத்தவை = இராசசபை. இங்குக் குலோத்துங்க சோழனுடைய சபையை என்க. நன்றாக என்றது அறிந்து கற்றலுக்கு அடையாக நின்றது.

ஆற்றின் அளவு அறிந்து = நெறியின் எல்லையை யறிந்து; அஃதாவது சிறந்த அறிவும் தருக்க சொல்வன்மையும் பொருந்து தற்குரிய வழியின் அளவினை உணர்ந்து என்றவாறு. கல்வி கரையிலவாதலால் கருத்துறு நெறியைக் கடைப்பிடித்துக் கடை போகக் கற்க எனவுமாம்.

மாற்றம் கொடுத்தற் பொருட்டு = சொல்லுதற் பொருட்டு. கேட்ட கேள்விக்கு ஏற்றபடி மறுமொழி சொல்லுதற்காக என்றவாறு. மாற்றம் = சொல்.

மேல், தான் கற்றதை அவையஞ்சாமல் நின்று பிறர்க்குச் சொல்லவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் வழுவறச் சொல்லுதலே ஒருவன் பழுதறக் கற்றதற்குப் பயனும் என்கின்றார்.

வல்லுநர் அவையில் பிறர் சொல்லுஞ் சொல்லுக்கு அஞ்சாது நின்று மறுமொழி சொல்லுதற் பொருட்டு நெறியோடு அளவு கண்டு அறிவு நூல்களை வழுவறக் கற்கவேண்டும் என்பதாம்.

அவையஞ்சாது அழகுற ஒருவன் பேசவேண்டுமாயின் அவன் யாது செய்யவேண்டும் என்று கேட்ப அவரை நோக்கி இஃது ஓதியதாகக் காண்க.

அளவறிந்து கல்லானாயின் அவன் சொல் வசிபுற்று இழிவுறுமாதலால் அறிந்து கற்க என்றார். அவையஞ்சாது நின்று வாதிகள் வாயடங்க ஒருவன்

பேசவேண்டுமாயின் இலக்கண
1858 திருக்குறட் குமரேச
வெண்பா.

நூல்களையும் கருத்த நூல்களையும்
முறையோடு வழுவற அவன்
பயின்றுகொள்ளவேண்டும் என்றவாறு.

விழியில்லான் வழிநடைபோல்
அளவறிந்து கல்லான் மொழிநடை
பிழைபடுமாதலால் அவையஞ்சாது
சொல்லற்கு அளவறிந்து பயின்ற அளவிறந்த
கல்வி அமையவேண்டும் என்க.

நுணுகியுணர்ந்த கல்வியாளனே
அவையில் வழுவறச் சொல்ல வல்லவனவன்
என்பது கருத்து.

சிறந்த கல்விமான் எந்த அவையிலும்
அஞ்சாது துணிந்து பேசுவன் என்பது
இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
புகழேந்தியால் உணரப்படும்.

கதை.

புகழேந்திப் புலவர் பாண்டிய மன்னனிடமிருந்து குலோத்துங்க சோழனை அடைந்தபின்னர் அங்கிருந்த புலவனாகிய ஒட்டக்கூத்தன் இவரை அடக்கிவிட விரும்பி அமயம் வாய்ந்த போதெல்லாம் சொற்போர் விளைத்தான். அவன் கூறிவந்த கூற்றுக்கெல்லாம் ஏற்றபடி மாறு கூறி யாதும் அஞ்சாது இவர் வீறுகொண்டு நின்றார். ஒருநாள் இவ்விருவரும் அரசவையிலிருக்கும் பொழுது பட்டத்து யானை மிகு மதங்கொண்டு காலில் பூட்டியிருந்த தளையினைச் சிதைத்து வெளியேறிவிட்டதென்று வேகமுடன் பாகர்வந்து வேந்தனிடம் உரைத்தார். உடனே கூத்தன்

இன்னா ங்கலிங்கத்
திகல்வேந்தருண்டென்றோ

தென்னன் தமிழ்நாட்டைச்
சிற்போ—சென்னி
அகளங்கா வுன்றன் அயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு.
என்றான்.
அதில் தம் மன்னனாகிய பாண்டியனை இகழ்ந்திருத்தலை யறிந்து அஞ்சாதெழுந்து அரசவையை நோக்கி எங்கள் அரசயானையின் இயல்பு கேண்மின் என இவர் எதிர்மொழி தந்து
தென்னவன் தென்னர் பெருமான் திறன் மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாளிக்கும் வேந்தாம் அபயன் குலமகளிர்
தாலிக்கும் ஒன்றே தளை. என்றார். இவரது அன்புரிமை

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.

1859

ஆண்மை பான்மை அருங்கவிவன்மை

பெருந்தன்மைகளை நோக்கி அவ்வளவனும் மகிழ்ந்தான். பின்பொருநாள் தன் மன்னன் மாத்திரம் போரில் முதுகிடாதவனென்றும், பிறரெல்லாம் புறங்காட்டி ஓடுவரென்றும் பொருள்பட

வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்

என்றும் முதுகுக் கிடான் கவசம்.

என்றான். கூத்தனது இக் கூற்றுமொழியைக் கேட்ட அப்பொழுதே இவர்

துன்றும்

வெறியார் தொடைகமழும் மீனவர்கோன் கைவேல்

எறியான் புறங்கொடுக்கின் என்று.

என்று தம் அரசனது வெற்றியின் மேன்மையை விளக்கியுரைத்தார். எடுத்த கவியை அவன் தொடுக்கப் பாடுமுன்னரே தனிச்சீரைப் பிடித்துக் கொண்டு உடனே பொருத்தமுற அடுத்துப்பாடிய இவரது அறி

வின் திறத்தை வியந்து அன்று முதல் தன் வலப்பக்கத்தில் இவரையும், இடப்பக்கத்தில் கூத்தனையும் மன்னன் இருக்கச்செய்தான். இதனை நினைந்து நினைந்து அரசனும் இங்ஙனம் செய்தானே என்று அவன் உவகை குன்றியிருந்தான். அக்குறிப்பை ஓர்ந்து வந்த வளவன் இவ் இருவரையும் உடன் வரச்செய்து ஒருநாள் இரவு வெளியே உலாவ அதுபொழுது பணியாளன் ஒருவன் வழக்கம்போல் வந்து குடைபிடித்து நின்றான். இரவிலும் எனக்குக் குடைபிடிப்பது எதற்காக? இதற்கு ஏற்றகாரணத்தைச் சொல்லுக என முதலில் கூத்தனை நோக்கினன். அவன் ஒன்றுங்கூறமுடியாமல் நின்று விழித்தான். உடனே இவரை நோக்கினன். மன்னன் நோக்குமுன்னரே இவர் வாக்கெழுந்தது.

அண்டமீ தலவி வாழும் அருந்ததிக் கற்பா ளுன்னைக்

கண்டதா லுவகை யெய்திக் கற்பழிந்
திடுவள் என்றே
எண்டிசை புரக்கும் வேந்தா இரவினிற்
கவிகைநீழல்
கொண்டுமா நடாத்துமாறு
குலோத்துங்கா நீதிதானே. என்று இவர்
ஓதிநின்றார். இக்கவியின்
ஒண்பொருளையூன்றி யுணர்க. இவரது
மதிநுட்பத்தையும் கற்பனைச் சுவையையும்
மதித்து நோக்கி மன்னன் மகிழ்ச்சி
மீக்கூர்ந்தான். இவரதுகூர்த்த

233

1860 திருக்குறட் குமரேச
வெண்பா.

மதியையும் கூற்றைபுமுணர்ந்து
கூத்தனும் கூசினன். இங்ஙனமே அந்த அரச
சபையில் எதிர்த்துவந்த புலவர்கட்கெல்லாம்
ஏற்ற மாற்றங்கொடுத்து உலகம் போற்ற இவர்

வீற்றிருந்தார். அளவறிந்து பயின்ற
இவரது தெளிந்த கல்வியே அங்ஙனம்
அவையஞ்சாது கூறுதற்குச் சிறந்தகா
ரணமாய் அமைந்து நின்றதென அனைவரும்
வியந்து நின்றார். அவையஞ்சா மாற்றம்
கொடுத்தற்பொருட்டு, ஆற்றின் அளவறிந்து
கற்க என்னும் உண்மைக்கு
உரியராகி இவர் உயர்ந்து நின்றார்.
நிறைந்தகல்வியும் சிறந்த கவித் திறமும்
தெளிந்த சொல்வன்மையும் இவரிடம்
ஒருங்கே அமைந்திருந்தமையால் அழகிய
குலமகளோடமர்ந்து இனிய புதல்வரைப்
பெற்றுப் பெருஞ்செல்வத்தோடு
பொருந்திவாழும் ஒரு பெருந்
தகையாளன்போல் இவர் சிறந்து வாழ்ந்தார்.

கல்வியே கற்புடைப் பெண்டிர்
அப்பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே
யீர்ங்கவியாச்—சொல்வளம்

மல்லல் வெறுக்கையா மாணவை
மன்னுறுத் தஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.
என்றது இவர்க்கே முதலுரிமையாகச்சிறந்து நிறைந்து.

சிலையறியான் தெவ்வர்மேற் சேர்ந்தற்றவையுட்
கலையறியான் கூறலுறல் காண்.

தெளிந்த கல்வியே அவையஞ்சாது சொல்லற்குச்சிறந்த காரணம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

726 கற்றுமவை யஞ்சினார் காளமே
கம்மெழுந்தேன்
கொற்றமுற்று நின்றான்
குமரேசா—வெற்றியுறு
வாளொடென் வன்கண்ண
ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

இ—ள்.

குமரேசா ! மற்றவரெல்லாரும் அஞ்சி இழிந்தார்; காள மேகம் என் அவை அஞ்சாதெழுந்து உயர்வுற்றான் எனின்; வன் கண்ணர் அல்லார்க்கு வாளொடு என்? நூண் அவை அஞ்சுப 73-ம் அதிகாரம்

அவையஞ்சாமை. 1861

வர்க்கு நூலொடு என்? என்க.

இஃது அவைபஞ்சுபவன் கற்றற்குரியனல்லன் என்கின்றது. அஞ்சினோர் என்றது அதிமதுரகவிராயன் முதலாயினோரை. எல்லாரும் அஞ்சி அயர இவன் யாதுங்கலங்காமல் எழுந்து அவையில் துணிந்துகூறிச் சிறந்து நின்றான் ஆதலால் கொற்றமுற்று நின்றான் என்றும். வெற்றியுற்று என்றது வாளின்மேன்மையை

விளக்கின்றது.

வன்கண்ணர் அல்லார் என்றது மனவுறுதியில்லாரை. வன்கண்மை, தறுகண்மை என்பன வீரர்களுக்குரிய நெஞ்சுறுதியை உணர்த்தி வரும்.

வாளொடு என் = வாளோடு என்ன உரிமை உண்டு; ஒன்றும் இல்லை என்றவாறு. வேறுபடைக்கலங்களும் உளவாயிருப்ப வாளை மாத்திரம் ஈண்டு விதந்து கூறியது நெஞ்சுறுதியோடு நேர்முகமாக நெருங்கி நின்று பொருதற்குரிய அதன் அருமை கருதி என்க.

நுண் அவை என்றது நுண்ணறிவுடையாரது சபையை என்றவாறு. நூற்பயிற்சிக்குரியாரை உணர்த்த வந்த இதில் வாட் பயிற்சிக்குரியாரையும் உடனுணர வைத்தது எற்றுக்கெனின், புலவரோடு வீரர்க்குமுள்ள திறவின் மேன்மை தெளிதற்கென்க. பகையகத்துச் சாதலினும்

அவையகத்துப் போதல் மிக அருமை. என
மேல் உரைசெய்த இயைபையும் ஈண்டு
உய்த்துணர்ந்து கொள்க.

மேல், அவையஞ்சாமற் பேசுதலே
ஒருவன் கற்றதற்குப் பயன் என்றார்; இதில்,
அதனை அஞ்சுகின்றவன் கல்லாதொழிதல்
நல்லதென்கின்றார்.

மனவுறுதி யில்லாதார்க்கு வாளால்
பயனில்லை; அதுபோல் நுண்ணறிவுடையாரது
அவையை அஞ்சுபவர்க்கு நூலாற் பய
னில்லை என்பதாம்.

வாளால் பயன் கொள்ளுதற்கு
வன்கண்மை இன்றியமையாதவாறுபோல்
நூலாற் பயன்கோடற்கு அவையஞ்சாமை
இன்றியமையாது வேண்டும் என்றவாறு.
அமர்க்களம் புகுந்து ஆண்மையோடு
வெல்ல வல்லவனே வாளைப் பிடித்தற்குத்
தகுதி 1862 திருக்குறட் குமரேச
வெண்பா.

யாவன்; அதுபோல் அவைக்களம் புகுந்து அஞ்சாது சொல்ல வல்லவனே நூலைப் படித்தற்கு உரியனாவன் என்க.

அவையச்சமுடையவன் நூலைப்படித்தல் நகைப்பாதலோடு நகைக்கும் இடமாம் என்பது குறிப்பு.

அவையஞ்சாதவரே கல்விக்கு உரியராய் எவரினுஞ் சிறந்து இவ்வுலகில் உயர்ந்து விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காளமேகப் புலவர்பால் உணரப்படும்.

## கதை.

காளமேகப் புலவர் என்பவர் இற்றைக்கு நானூற்று நாற்பது ஆண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே திருவானைக்காவிலிருந்தவர். இவர் பிறந்த ஊர் கும்பகோணத்துக்கு அருகிலுள்ள நந்திபுரம் என்பர். இவர் வேதியர் மரபினர்.

இவரது இயற் பெயர் வரதராசன் என்பது. முதலில் இவர் கல்வியறிவில்லாம லிருந்து பின்பு தேவி அருளால் பெரும் புலமைபெற்று அருங் கவிகளை விரைந்து பாடி மாரிபோல் வாரி வீசினாராதலால் காள மேகம் எனப் பெயர்பெற்று ஞாலம் புகழ நின்றார். யாதும் அஞ்சாத நெஞ்சினர். எவரும் வியந்து நோக்கத்தக்க சிறந்த கவி களை விரைந்து பாடுதலில் இவர் மிகவும் வல்லவர். எந்த அரச சபைகளிலும் சிந்தை கலங்காது நின்று செஞ்சொற் பொழிவுகள் செய்து இவர் சிறந்து நின்றார். பல கற்றுள்ளேம் என்று உளஞ் செருக்கித் திரிந்த பகட்டுப் புலவரெல்லாம் புலியைக்கண்ட புல் வாய்போல் இவரைக் கண்டவுடன் பதுங்கிக் கிடந்தார். இவர் பாட்டால் வாழ்ந்தவர் பலர். தாழ்ந்தவரும் பலர். "வசைபாடக் காளமேகம்" என இசைபெற்றவர். நல்லவர்க்கு மிக நல்லவராய் நின்று

காடெக்குந் திரிந்து சொன்மழை பொழிந்து இவர் நன்மை செய்து வந்தார். ஒருநாள் திருவாரூரையடைந்து கோவிலுள் சுற்றிவருங்கால் அங்கே கார் மதிலில் நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம் என வெண்பாவின் ஓரடிமாத்திரம் விளங்கக் கண்டார். அது சிலகாலங்களுக்கு முன் அங்குவந்த இரட்டையரால் பாடப்பட்டது. அவ்விருவரும் ஒரு வெண்பாப்பாடத் 73-ம் அதிகாரம்

அவைபஞ்சாமை. 1863

தொடங்கி அவ் ஓரடிக்குமேல் ஒன்றும் வாராமையால் அதனையட்டும் அங்கு எழுதிவைத்துப் போயிருந்தார். இவர் அதனடியில்

பாணந்தான் மண்தின்ற

பாணமே—தாணுவே •

சீராரூர் வாழும் சிவனேரீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர். என்று

பாடிமுடித்தார். மூத
லடியின் இயல்பு நோக்கி இதில் இவர்
தொடுத்திருக்குந் திறத்
தையும் நயத்தையும் ஊன்றி நோக்குக.
திருமலைராயன் என்னும் குறுநில மன்னனைக்
காணவிரும்பி இவரடைந்தபொழுது அங்குப்
புலவர் தலைவனாய்ப் பெருமை பெற்றிருந்த
அதிமதுரகவி என்பவன் இவரை அவமதித்து
நீ யாவன் என்று கேட்டான். அப்பொழு
து

தூண்டைந்து நாழிகையி லாறுநா
ழிகைதனில்

சொற்சந்த மாலைசொல்லச்
சூழலா அந்தாதி யெழுநா ழிகையினில்
தொகைபெற விரித்துரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா

பூமிகாபினில்

பாணிமொரு நாண்முழுது நீள்
பாரகா வியமெலாம் ஈரிரு தினத்தினில்
பகரக் கொடிக்கட்டி னேன்
சீதஞ் செயுந்திங்கள் மரபினு னீடுபுகழ்
செய்பதிரு மலைராயன் முன்
சீறுமா றுகவே தாறுமாறுகள் சொல்
திருட்டுக் கவிப்புலவரைக்
காதங் கறுத்துச் செருப்பிட்டடித்துக்
கதுப்பிற் புடைத்து வெற்றிக்
கல்லணையி னொடு கொடிய கடிவாள
மிட்டேறு
கவிகாளமேகம் நானே.

என்று உடனே பாடி உணர்த்தினார். இதனைக் கேட்டு அவன் அஞ்சினனுயினும் அரசனுடைய உதவியை நினைந்து வாதந் தொடங்கி முடிவில் எமகண்டம் பாடுவதாக முடிவு செய்ய நின்றான். எமகண்டமாவது பதினாறடி

அகலமும் நீளமும் ஆழமுமுள்ள சதுரமான
ஒரு 1864 திருக்குறட் குமரேச
வெண்பா.

குழியில் இந்தனமடுக்கி நெருப்பு மூட்டி
நிரம்ப நெய் பெய்ததொரு பெரிய
கொப்பரையை அதன் மேலேற்றி
நெருப்பெழக் காய்ச்சி அதற்கு நேராக
உயர்ந்த நிலையிலிட்டதொரு பாண்மே
லிருந்துகொண்டு பக்கம் நின்று புலவர்கள்
கேட்கும் கேள்விகளுக்குத் தக்கவிடை
தாமதமின்றித் தரவேண்டும்; அதில் தடை
புகுவனேல் உடனே அடியில்
காய்ந்துகொண்டிருக்கும் கடாரத்தில்
தள்ளப்படுவான் என்பதே; இத்தகைய
கொடிய வாதத்தில் தலையிட அங்கிருந்த
புலவரெல்லாரும் அஞ்சினர்; இவர் அதில்
அஞ்சாது ஏறியிருந்துகொண்டு எவர்
எதுவேண்டுமாயினும் கேட்கலாம் என்றார்.

தம் மனம்போனவாறெல்லாம்
ஒவ்வொருவரும் கேட்டார்.
அவற்றிற்கெல்லாம் ஏற்ற விடையை
விரைந்துதந்து இவர் இருமாந்திருக்கார்.
திருமாலவதாரம் பத்தையும் ஒரு
வெண்பாவில் அடக்கிப் பாடும்படி
அதிமதுரகவி முதலில் கேட்டான். ஒன்று
எதற்கு; பாதியில் பாடுகின்றேன் என்று

மெச்சுபுகழ் வேங்கடவா
வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் செ சன்மம்
எடுக்கவா—மச்சாகூர்
மாகோலா சிங்காவா மாராமா ராமாரா
மாகோபா லாமாவா வாய்.

என்று பாடி முடித்தார். கோலா என்றது
வராக அவதாரத்தை. கோலம் = பன்றி.
ராமா ராமா ராமா என்றது பரசுராமன்
தசரதராமன் பலராமன் என்ற வாறு.
இறுதியில் மாவ ன்றது

குதிரைமுகத்தினையுடைய கல்கியை. மற்றொரு புலவன் பாம்புக்கும் வாழைப்பழத்திற்கும் சிலேடையாகப்பாடவேண்டும் என்று கேட்டான்.

நஞ்சிருக்குந் தோலுரிக்கும் நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது—விஞ்சுமலர்த்
தேன்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையிற்
பாம்பாகும் வாழைப்பழம்.

என்று உடனே பாடினார். இங்ஙனமே எடுத்தவற்றிற்கெல்லாம் ஏற்ற விடைகொடுத்து ஏறு போல் எதிர்ந்து நின்றார். இவரது அவையஞ்சாமையையும் அறிவின் பெருமையையுங்கண்டு அனைவரும் வியந்து கொண்டாடினார். கற்றவராய் நின்ற மற்றவரனைவரும் அஞ்சியிழிந்தார். அவையஞ்

சாத இவர் பெரும்புகழோடு சிறந்து
விளங்கினர். நுண் அவையை அஞ்சாதவரே
நூலுக்குரியராவர் என்னும் உண்மையை
உலகம் இவர்பால் அன்று உணர்ந்து நின்றது.

ஆசு கவியால் அகில வுலகெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழலாய்
வேகின்ற தையையோ
மண்தின்ற பாணமென்ற வாய்.

(இரட்டையர்.) இது, இவர் இறந்ததைக்கேள்
வியுற்று விரைந்துவந்து சிதையில்
வேகின்றதைக்கண்டபொழுது
இரட்டையர்கள் கதறி அழுது பாடியது.
பாணந்தான் மண்தின்ற பாணமே என்று
முன் இவர் பாடியிருந்ததை நினைந்து அவர்
பரிந்திரங்கியதும் இவரது பீடுடைமையும்

இதில் பிறங்குதல் காண்க.

எஞ்சாத வீரன்போல் என்றும்
அவையின்கண்
அஞ்சானே நூல்வல்லா னும்.

அவையஞ்சுகின்றவன் கல்விக்கு உரியனல்லன் என இதனுல் கூறப் பட்டது.

---

727 பண்டுபல கற்றும் பலிதன் பயந்தொழிவு
கொண்டொழிந்தான் என்னே குமரேசா—மண்டு
பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.
(எ)

இ—ள்.

குமரேசா! பல நூல்களை நன்கு

படித்திருந்தும் பலிதன் என்பவன்
அவையஞ்சி என் இழிந்துபோனன் எனின்,
அவை அகத்து அஞ்சுமவன் கற்ற நூல்,
பகையகத்துப்பேடிகை ஒள் வாள் என்க.

இஃது அவையச்சமுடையவன் கற்றகல்வி வீணாம் என்கின் றது. உம்மை அவன் இழிவுகொண்டு ஒழியாமைக்குரிய எதுவை உணர்த்தி நின்றது. மண்டு = நெருங்கிய. பகைக்கு நெருக்கம் யானை குதிரை முதலிய சேனைத்திரக்கம்.

1866 திருக்குறட் குமரேச வெண்பா.

பகையகத்து = பகைவர் நடுவில்; பொருகளத்தில் என்றவாறு.

மேலது.

ஒள்வாள் = ஒள்ளியவாள்; ஒண்மை ஈண்டுக் கூர்மை

அவையஞ்சுமவன்கல்வி பேடிகை
வாள்போல் பீடழிந்து போம் என்றதனல்
அங்ஙனம் அஞ்சாதவன் கல்வியிரன்கைவாள்
போல் மேன்மை யெய்தி விளங்கி நிற்கும்
என்பதாயிற்று.

போர்க்களம் அவைக்களத்துக்கும்,
போராடுதல் சொல்லாடு தலுக்கும், அஞ்சு
நிற்கும் பேடி அவையில் நிற்கும்
கோழைமக னுக்கும், அவள் கைவாள் இவன்
கற்ற நூலுக்கும் இதில் ஒப்புற
நிற்றலையுய்த்துணர்ந்து கொள்க.
அவைபச்சமுடையவனைப் பேடியோடு
ஒப்பவைத்தது அவனது
கழிபேரிழிவினைக்கருதி என்க.

மேல், அவையஞ்சபவன்
நூலைக்கற்கலாகாதென்ருர்; இதில், அவன்
கற்றநூல் வீணே குற்றமுறும் என்கின்ருர்.

சொல்லாடுதற்குரிய அவை நடுவே
நின்று அஞ்சுகின்றவன் கற்றநூல்,

மல்லாடுதற்குரிய பகைநடுவே நின்ற பேடி பிடித்த கூர் வாளையொக்கும் என்பதாம்.

தன் னையுடையானுக்கு வெற்றியைக்கொடுத்தற்குரிய ஒள் வாள் பேடிகைப்பட்டமையான் பீடு அழிந்ததுபோல் எல்லா மேன்மைகளையும் தன்னையுடையானுக்கு ஈயவல்ல கல்வி கோழை மகன் வாய்ப்பட்டுக்குற்றமுறும் என்பார் அஞ்சுமவன் கற்ற நூல் பேடிகை ஒள்வாள் என்றார். ஒண்மை வாளின் தன்மையையு ணர்த்தி நின்றது . வாளுக்கு ஒண்மை கொடுத்ததற்கேற்ப நூலுக்கு நுண்மை நோக்கிக்கொள்க.

ஆண்த ன்மைகு ன்றிப் பெண்ணியல்பு மிக்குள்ள வடிவினைப் பெண்பாலாகக்கூறுதல் பெருவழக்காதலால் பேடி என்றார். ஆண் பால் பெண்பால் என இருபாலாகி

நிலவிவரும் இம்மக்கட்பாப்
பில் இத்தகையஇழி வடிவங்கள் ஒரோவழி அருகிக்காணப்படு
கின்றனவாதலால் அவற்றின் மிகுதி நோக்கிஒன்றில்வகைசெய்து
கொள்ள வேண்டுமென்க.

பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையும் அஃறிணை யன்னவுமாகும். என்பதுங்காண்க. 73-ம் அதிகாரம் அவையஞ்சாமை. 1867

அவைபச்சமுடையவன் கற்றநூல் யாதும் பயன்படாது இழிவுறும் என்பதை உணர்த்தற்குப் பேடி கை வாளை எடுத்துக் காட்டிய அடிகள் உவமையை விரித்து முடித்துக் காட்டாமல் உய்த்துணர்வு தோன்ற

நூல்—வாள் என நோக்கிவிட்டே அழகை நுனித்து நோக்கிக் கொள்க. இது காட்சியணியாம்.

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை, வா ளாண்மை போலக்கெடும். என முன்னும் இவ்வாள் வந்திருத்தல் காண்க. வேளாண்மை வாளாண்மை நூலாண்மைஎன இவற்றை இனமுற வைத்ததனல் வள்ளல் வீரன் புலவன் என்னும் இவர்க்குள் மருவிநிற் குமாண்பு இனிது புலனும்.

அவையஞ் சுதல் என்பது மிகவும் பழியாயதோர் இழிகுண மாதலால் அதனையறவே ஒழித்துக் கல்விமான்கள் ஆண்மையோடு நின்று சொல்லவேண்டும் என்பது கருத்து.

அரிய நூல் கள்பல பயின்றிருப்பினும் அவையஞ்சுவானயின் அவன் யாதும்

பயன்படாது வறிதேயிழிவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பலிதன்பால் உணரப்படும்.

## கதை.

பலிதன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டு கட்கு முன்னர்ப் பாண்டி நாட்டிலே பிரான்மலை என்னும் நகரிலிருந்தவன். கருவி நூல்களோடு அரிய நூல்கள் பலவும் ஆய்ந்து கற்றவன். இவனது கல்வியின் பெருமையையறிந்து பலரும் இவனிடம் பயின்றுகொள்ள விழைந்து வந்தார். புலமைமிக்க இவனிடம் அவையச்சம் என்னும் இழிவும் பொருந்தியிருந்ததாகலால் தனியே நெருங்கி வந்தவர்கட்குமட்டும் சில மொழிந்து வந்தான். ஆயினும் கல்வியில் இவனைவெல்ல வல்லார் எங்குமில்லையென்று பிறர் சொல்லி நின்றார். தனக்கு நிகரான கல்வியாளர் வேறு எவரும் இலர் என இவனும் இறுமாந்திருந்தான். கல்வியிற்சிறந்தார் என யாரையேனும் பிறர் வியந்து கூறின் 'அவர்க்கு என்ன தெரியும்' என உடனே இவன் இகழ்ந்து விடுவான். கொழுத்த அறிவோடு இப்புழுத்த செருக்குங்கொண்டு இவன் பொங்கிவரும்

வெண்பா:

கால் பாணகுரி என்னும் பண்டிதனொருவன் பலஇடங்கட்குஞ் சென்று இறுதியில் மதுரையையடைந்து தன் அறிவு நலந்தோன்ற உரைசெய்து வந்தான். அவனது புலமைத்திறத்தைக் குறித்துச் சிலர் இவனிடஞ்சென்று உரைசெய்தபொழுது வழக்கம்போலவே குறும்புத்தனமாக இகழ்ந்துரைத்தான். அதனல் இருவருக்கும் வாதுமூட்டி இடையிலுள்ளவர் ஓரவையைக்கூட்டிக் கல்வியறிவுக்கும் கல்லாவுணர்வுக்கும் உள்ளதொரு வேற்றுமையை உவமை வாயிலாக விரித்து உரையாட வேண்டுமென முடிவு செய்துவிட்டார். குறித்தகாலத்தில் பலரும் வந்து குழுமியிருந்தார். புலவரிருவரும் புகுந்தார். முதலில் பாணகுரி எழுந்து பண்புடனின்று தன் புலமை நயந்தோன்றப்பேசினன். அதன்பின் இவன் எழுந்தான். இட்டிருந்த

மேடைமேல் ஏறி நின்றான்.
அவையைக்கண்டான். அச்சம்
இவனுள்ளத்தைக்கொண்டது. கால்களும்
கைகளும் கலந்து நடுங்கின. பாவம் !
ஒருசொல்லுங்கூட இவன் வாயிலிருந்து
நல்ல நிலைமையில் தோன்றவில்லை. இவன்
நிலையினைக்கண்டு சிலர் நெஞ்சம் இரங்கினர்.
சிலர் எள்ளி நகைத்தார். அரிய நூல்கள்பல
பயின்றிருந்தும் இவனச்சத்தால்
அவையாதும் பயனுறாது
அழிந்துபோயினவேயென அனைவரும்
அகன்றுபோயினர். அன்று முதல் இவன்
பழியெங்கும்பரவ இழிந்து போனான்.
பகையகத்துப்பேடிகை ஒள்வாள்
அவையகத்து அஞ்சுமவன் கற்ற நூல்
என்பதற்கு இவனையே
சான்றாகக்கொண்டு அனைவரும்
சாற்றிவந்தார்.

கண்டவையை அஞ்சுவான் கல்விநலங்

கைமையிடங்

கண்டவேழி லாகுமே காண்.

அவையச்சமுடை யவன் எல்லாராலும் எள்ளப்படுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

728 மாசில் சதானந்தர் மன்னவையில் நன்குசொன்னார் கூசினரேன் மற்றோர் குமரேசா—ஆசையொடு பல்லவை கற்றும் பயமிலரே நல்லவைபுள் நன்கு செலச்சொல்லா தார். (அ) 73-ம் அதிகாரம் அவையஞ்சாமை. 1869

இ—ள்.

குமரேசா ! சதானந்தர் அரசவையில் அழகுறச்சொல்லி உயர்புகழ் பெற்றார்; மற்றவர்கள் கற்றிருந்தும்

உஊாயாமை யால் என் பயனிலராயினர் எனின், நல் அவையுள் நன்கு செலச் சொல்லாதார், பல்லவை கற்றும் பயம் இலர் என்க.

இஃது அவைபஞ்சிச் சொல்லாதான் கல்வி பயனின்றும் என்கின்றது. மாசு இல் என்றது மனந் தூயராய அவர் மாட்சி கருதி. மன் அவை என்றது சனகனுடைய சபையை. கோசிக முனிவர் முதலாக அனைவரும் உவந்துகொள்ளுமாறு அழகாக உரைத்தார் ஆதலால் நன்கு சொன்னார் என்றும். ஆசையொடு என்றது பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி என்றபடி. இது கற்ற வுக்கு அடையாய் நின்றது

பல்லவை என்றது பல நூல்களை. கற்றல் என்னும் வினை யால் இங்ஙனங் காண நின்றது. இது பன்மை என்னும் பண் படி யாய் பிறந்த பலவின்பாற் பெயர்.

கற்றும் என்பதில் உம்மை சிறப்புணர்த்தி நின்றது. பயன் படுதற்குரிய தன்மையை உடைத்தாயிருந்தும் அது படாதொழிதற் கமைக்கு இது பரிந்ததென்க. பயம் இலர் = உலகிற்குப் பயன் படுதலிலர். கல்வியாலாய பயன் தமக்கு இல்லாதவர் எனினுமாம்.

மேல், அவையச்சமுடையவன் கல்வி யழிவுறும் என்றார்; இதில், உலகிற்கு ஒரு பயனுமிலனாய் வறிதே அவன் ஒழிவன் என்கின்றார்.

நல்லாரிருந்த அவையின்கண் நல்ல பொருள்களை நன்றாகச் சொல்ல மாட்டாதவர், பலநூல்களை கற்றிருப்பினும் பயனில்லாதவரே என்பதாம்.

அரிய நூல்கள் பலவற்றையும் ஒருவன் கற்றிருப்பினும் அவையஞ்சி அறிவுடையார்முன் சொல்லானாயின் அவன்

கல்வி யறிவை அறிவார் இல்லை ஆதலால்
தனக்கும் பிறர்க்கும் பயன் படுதலின்றி ஈயாத
உலோபியின் பொருள்போல் இருக்கும் இல்
லாதவனாகவே இழிந்து தொலைவன்என்பார்
சொல்லாதார் கற்றும் 1870
திருக்குறட் குமரேச வெண்பா.

பயம் இலரே என்றார். அவையஞ்சாது நன்கு
சொல்லவல்லவனை கல்வியின் பயனைக்
கைக்கொண்டவனவன் என்றவாறு.
நல்ல கல்விமானாயினும் அவையஞ்சிச்
சொல்லமாட்டானாயின் அவனை அறவே வை
கவிட்டு அவையஞ் சாதவனையே அமைச்
சனாக அரசன் அமைத்துக்கொள்ள
வேண்டும் என இயலோடு பொருந்த இதனை
இணைத்து நோக்கிக்கொள்க.
வல்லவ ரவையுட் கற்றதஞ் சாது வகுத்துரைத்
தவருண் மிக்கான

நல்லவை கேட்பார் கற்றவர்தம்முன் நன்குற
மகிழ்ந்திடப் படுவார்
சொல்லவை யஞ்சிக் கற்றன செலுத்தாச்
சோர்வினர் கற்றுங்கல்லாத
புல்லிய ரிருந்தும் பொன்றினாருற் போற்றுக
அவையஞ்சா தவரை.
என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.
நல்லவை வியப்ப நன்கு சொல்லுதலே
ஒருவன் கல்விக்குப் பயனும் என்பது
கருத்து.
தாம் கருதியதைப் பிறர்
உவந்து கொள்ளுமாறு உறுதிபெறச்
சொல்லுவோரே கல்விப் பயனையடைந்து
கல்லாராயினும் உயர்ந்தவராகக் கருதப்படுவர்
என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்
வுண்மை சதானந்தர்பால் உணரப்படும்.

கதை.

சதானந்தர் என்பவர் கௌதமருடைய
அருமைப் புதல்வர். வேத முதலாய கலைகள்

பலவும் ஓதியுணர்ந்து நெறிவழுவாது நின்று தருமசீலை என்னுந்தம் அருமை மனைவியோடமர்ந்து அறம் பல புரிந்து சத்தியாதன் என்னும் புத்திரனைப்பெற்று இவர் சதுரடன் வாழ்ந்தார். இவரது அறிவுயர்வையும் அருள் நலங்களை யும் அறிந்து மகிழ்ந்து மிதிலை மன்னனாகிய சனகன் தன்னுடனிருந்துவருமாறு வேண்ட அங்கு இவர் உறைந்து அமைச்சுரிமை யோடு அருமைப் புரோகிதராகவும் நின்று அரச சபையில் நாளும் இவர் ஞானபோதனைகளை நன்கு செய்துவந்தார். விசுவாமித்திரர் இராம இலக்குவர்களுடன் அங்கு வந்தார். மன்னன் அவரை மகிழ்ந்து உபசரித்து ஒரு மாளிகையில் இருக்கச் செய்தான். மறுநாள் அம்மூவரும் அரசவையையடையத் தன் அருமைத் திருமகளாகிய சீதைக்குத் தகுதியான மணமகன் என்று இராம 73-ம் அதிகாரம்

னைக் கருத்திற்கொண்டு காவலன் காதலிப்ப அங்ஙனமே க;
வந்த கௌசிகர் குறிப்பறிந்து இராமனது குலமுறையையும் குண நலங்களையும் அரசனிடம் தெளிவுறக் கூறினர். உடனே அத்திரு மணத்துக்கு உரிமையாயிருந்த வில்லைக்கொணரும்படி செய்தான்.
அதனைக்கண்டவுடனே, அங்கிருந்தவரெல்லாம் இந்தவில்லை வளைப்பவர் யாவர்கொல்! என்று எண்ணி ஏங்கினர். இருந்த மன்னன் குறிப்பையும், வந்த முனிவர் கருத்தையும், குறிப்பாலோர்ந்து அப்பேரவையில் யாதும் அஞ்சாமல் எழுந்து நின்று சீதையின் பெருமையைக்குறித்து இவர் மிகத் தெளிவாகப் பேசினர். இவர் அன்று பேசியதைக் கம்பன் அமிர்த மொழிகளால் இனிது காணலாம். சில எண்ணிக்கந்து

காட்டுதும்.

போதக மனையவன் பொலிவு நோக்கிபல்
வேதனை தருகின்ற வில்லைநோக்கித் தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறல் மேயினான். (1)

குணங்களை யென் கூறுவது கொம்பினைச்சேர்ந்
தவைபுப்பப் பிணங்குவன அழகிவளைத்
தவஞ்செய்து பெற்றதுகாண் கணங்குழையாள்
எழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறொருத்தார்

வேறுற்றார். (2) கலித்தானைக்
கடலோடுங் கைத்தானைக் களிற்றரசர்
ஒலித்தானை யெனவந்து மணமொழிந்தாக்
கெதிருடுக்க புலித்தானைக் களிற்றுரிவைப்
போர்வையான் போர் வில்லை வலித்தானை
மங்கைதிரு மணத்தானென் றியாம்
வலித்தோம். (3)

வல்வில்லுக்காற்றார்கள் மாரவேள் வளைகருப்பின்
மெல்வில்லுக்காற்றாராய்த் தாமெய்ம்மை விளிதற்றார்
கல்வில்லோ டுலகீந்த கணங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லா லுலகளிப்பாய் போர்செய்யத் தொடங்கினர்.

(4)

இம்மன்னர் பெருஞ்சேனை யீவதனை மேற்கொண்ட
செம்மன்னர் பொருளேபோற் புகழ்வாய்ப்பச் சிறந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனை தமதாசைபோ லாயிற்றால்.

(5) 1872 திருக்குறட்

குமரேச வெண்பா.

மற்காக்கு மணிப்புயத்து மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் வாளமருள் மெலிகின்றான்
எனஇரங்கி

செலச் சொல்லு வாரே
கல்விப்பயனையடைந்தவராவர் என்பதை
உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

நாறு மலர்போல் நவையாம்
அவையஞ்சிக்
கூறான் இழிந்தான் குறை.

அவையஞ்சாது சொல்லுதலே ஒருவன்
கல்விக்குப் பயனாம் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

729 திண்டோட் குசலவரேன்
சென்றவை யஞ்சாமையினால்
கொண்டார்
உயர்வைக் குமரேசா—கண்டொன்றும்
கல்லா தவரிற் கடையென்ப
கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

(கூ)

இ-ள்.

குமரேசா ! குசலவர் என் அவையஞ்சாது நின்று தாம் கற்றதை உரை செய்தார் எனின், கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார், கல்லாதவரின் கடை என்ப என்க.

இந்த அவைக்கு அஞ்சுமவன் கல்லாதொழிதலே நல்ல தென்கின்றது. திண்மை அவா ஆண்மை அஞ்சாமைகளைக்

75-ம் அதிகாரம்

அவையஞ்சாமை. 18, 3

குறித்து நின்றது. பருவத்தில் சிறியவராயிருந்தும் அவையஞ்சாது கூறிய அப்பெருமையை வியந்து எல்லாரும் புகழ்ந்து போற்றுவ ராதலால் அஞ்சாமையினால் உயர்வைக் கொண்டார் என்றும், கண்டு ஒன்றும் என்றது தன்னையுடையானுக்குப் பொருளின் பயங்களைப்பயந்து எல்லா நலங்களையும் கல்வி பொருந்த வைக்கு மென்பதை கேரில் அறிந்திருந்தும் யாதும் என்றவாறு. இது கல்லாது கழிக்கும் அவாது குருட்டுத்தன்மையைக் குறித்திரங்கிய தென்க. கண்டும் ஒன்றும் என்று கொண்டு காண்க.

அஞ்சுவார் கடை என்றது அஞ்சாதார் தலை என்பதா யிற்று. உயர்திணை விகுதிகொடாது கடை எனத்தள்ளிவிட்டது அவாது இழிவினை உள்ளி என்க. தம் கூற்றாக இல்லாமல் என்ப எனப்பொதுவாக உலகின்மேல் வைத்துச்சொல்லியது அவையச் சும் எல்லாராலும் என்றும் இழிக்கப்பட்டுள்ளமை தோன்றவென்க.

கல்லாதவரின் =

கல்வியறிவில்லாதவரினும். இன்உருபு எல்லைப்பொருளது. கடை என்றது = கடையர் என்றவாறு.

இழ்மையைக்குறித்து வரும் கடைஎன்னும் பண்புப்பெயர் அதனையுடையாரை உணர்த்தி நிற்றலால் இது பண்பாகுபெயர். கற்றறிந்தும் என்பதிலுள்ள உம்மை சிறப்போடு அஞ்சாமைக் குரிமையையுந்தெரித்து நின்றது. கற்றறிந்தார் தலையாயர் என்று போற்றத்தக்கவராயிருந்தும் அவரைக்கடையரெனக்கருத வைத்த இதனால் இவ் அவையச்சத்தின் பேரிழிவு இனிது தெளிவாம்.

மேல், அவையஞ்சுவனயின் அவன் கல்வியறிவால் யாதும் பயனில்லை என்றார்; இதில், கல்லாதவரினும் அவன் கடையனே

யதுவன் என்கின்றார்.

பலநூல்களைக்கற்று அவற்றின் பயனை நன்கு அறிந்திருந்தும்

நல்லாரிருந்த அவையினை யஞ்சி

ஆண்டுச்சொல்லாதவரைக்கல்லாதவரினும் கடையர் என்று உலகத்தார் சொல்லுவர் என்பதாம்.

மொழிவ துணராதார் முன்னிருந்து காய்வார்

படிறு பலவுரைப்பார் பல்கால் கருவார்

திரிதரு நெஞ்சத்தார் தீயவை யோர்ப்பார்

கடிபப்பட்டார் அவையின் கண்.

என்றபடி இத்தகைய 1874

திருக்குறட் குமரேச வெண்பா.

புல்லரிருந்த இடம் அவையென்று போற்றப்படாதாதலால் நல் லாரவை

என்றார். இதனான் அவையின் இயல்பும்
அதற்குரியாரும் அறியப்பட்டமை காண்க.

பலநூல்களையும்
பழுதறக்கற்றிருப்பினும் அவையஞ்சிச்
சொல்லாதவர், புகழ்பொருள் புண்ணிய
முதலிய யாவும் பெறாதாராய்க்கல்வியை
வருந்திக்கற்ற துன்பமொன்றையே பொருந்தி
நிற்பர்: கல்லாதவர்க்கு அத்துன்பம் யாதும்
இல்லையாதலால் அதனை நோக்கி அவரினும்
இவர் இழிந்தவரென்றார். கல்லாதவர் கடையர்
என்பது எல்லார்க்குந்தெரியுமாதலால்
அவரைத்தெரித்துக்காட்டி. இஃதுணர்த்திய
நயத்தைத்தெளிந்து காண்க. ஒன்றும்
இல்லாதார் செத்த பிணத்திற்கடை
என்பதுபோல் இது நின்றதென்க.

நல்லவன் வறியனாதலும், தீயவன்
செல்வனாதலும், கல்லாதவன் வல்வாய்
திறத்தலும், கற்றவன்
அவையஞ்சிச்சொல்லா தொழிதலும்

இவ்வுலகில் எல்லார்க்கும் துன்பமாமாதலால்
கற்றறிந்தும் சொல்லார் கடையமரணக்
கடுப்போடு ஈண்டுக் கருதுகின்றார்.

அவையஞ்சி மெய்விதிர்ப்பார்
கல்வியும் கல்லார்
அவையஞ்சா
ஆகுலச்சொல்லும்—நவையஞ்சி
யீத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார்
இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. இஃது
ஈண்டுச்சிந்திக்கத் தக்கது. கல்விமான்
அவையஞ்சாமல் சொல்ல வேண்டும்
அஃதில்லையாயின் அவன் கல்லாதொழிதலே
நல்லதென்பதும் கருத்து.

அவையச்சமில்லாமல் சொல்ல வல்லவரே தாம்கற்றதின்பயன்
பெற்று எல்லாராலுஞ் சிறந்தவராகக் கருதப்பெறுவர் என்பது
இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குசலவர்பால் உணரப்
படும்.

கதை.

குசலவரென்பவர் தசாதராமருடைய அருமைப்புதல்வர்.

இராவணவத முடித்துத் திருவயோத்தியையடைந்து சில்லாண்டு 73-ம் அதிகாரம் அவையஞ்சாமை. 1875

கள் கழிந்தபின் கருவுற்றிருந்தலேயுங் கருதி யிரங்காமல் ஓர் எதுவை முன் னிட்டுச் சீதையை வனம்புகச் செய்ய அந்த வான்மீகி முனிவர் ஆதரவில் தங்கி அம்மாது மக்களிருவரைப் பெற்றுன். அவ் இளைஞரிருவரையும் வளம்பெற வளர்த்துக் கலைகள் பலவும் கற்பித்து அவர் களிந்து பேற்றினர். அவ்விருவரும் இளமையிலேயே புலமை நிரம்பிச் சொல்வன்மை யுடையராய்ச் சிறந்து விளங்கினர். அவ்வமயம் இராமர் தான்வலியோடு அசுவமேதம் என்னும் ஓர் வேள்வியைச் செய்தார். அங்கு அரசாகள் முனிவர்கள் புலவர்கள் முதலாகப் பலரும் வந்து குழுமியிருந்தார். அப் பேரவைக்கு இவரையும் போய்வருமாறு முனிவர் கூறிவிட இவரும்

துணிர்செழுந்துபோய் ஆங்கு அடைந்தார். இவரைக் கண்டவரெல்லா ரும் இராமனது வடிவழகை யொத்துள்ளாரே ! இவர் யாவரோ ? என்று வியந்துகொண்டார். கைத்தலந் தூயபாதம் கண்ணிணை கமலமென்பார் சிலர். சிலர், இத்தலத்து இவரைப்போல எழிலுள்ளோர் இல்லையென் பார். பின்னுஞ் சிலர், உத்தமரிவர்போல் இராமன் ஒருவனே உள்ளா னென்பார். இங்ஙனமே கண்டவரெல்லாம் உவந்து கொண்டாட இவர் அமைந்துபோய் அவ் அரசவையுட் புகுந்தார். இராமர் முதலாக அங்கிருந் தவரனைவரும் கலைஞர்போல் வந்துள்ள இவ்விளைஞரை விழைந்து நோக்கி மகிழ்ந்தார். அமயமறிந்து இவ் இருவரும் எழுந்து முனிவர் கூறிய படியே இராம சரிததைக் தம் இனிய குரலால் பாடினர். இடை யிடையே கதையின் தொடர்பைத் தெளிவாக எடுத்துச் சொல்லினர். அவையஞ்சாது சொல்லும் இவரது அருமையை வியந்து இராமர் இனந் தெரியாமல் பன்னிரண்டுகோடி பசும்பொன் இவர்க்குக் கொடுக்கும்படி உழையிருந்தவர்க்கு உத்த ரவு

கொடுத்தார். அங்ஙனமே கொண்டுவந்து கொடுப்ப இவர் அதனைக் கொள்ளாது வெறுத்தார்.

மன்னவர் வலியின் வெளவா வளமனைக் கள்ளர் கொள்ளா

இன்னுயிர்க்கிறுதி செய்யா இழந்தபின் இரகைல் வேண்டா

துன்னிய துயிலேயோட்டா தோகையர் காதல் கூட்டா

உன்னிய பொருள ஈட்டாம் உடைமையின் இன்மை நன்றால்.

என்று உறுதிபெற வுரைத்து இவர் ஒதுங்கிச் சென்றார். பொருளின் அருமையை யறியாமலன்றோ இவ் இளம் புலவர் இவ்வாறு புகல்கின்றார் என்று அருகிருந்த அமைச்சரும் பிறரும் அதனை உவந்துகொள்ளுமாறு மிக நயந்து கூறினர்.

பூரியர் தமைவேந்தாக்கும் புவிபுரப்பிக்கும் தூய்க்கும்

சீரிய உண்டி சேர்க்கும் தேவர்தம் உலகம் போக்கும்

வெண்பா.

காரியம் அனைத்தும் கூட்டும் கருதலர் தம்மை வாட்டும்
கூரியதிதன் மேலில்லை கொழும்பொன் நீர் கொள்மின் என்றார். பொருளின் பெருங் குணங்களை யெல்லாம் புனைந்து புகழ்ந்து அதனைப் பெற்றுக்கொள்ளும்படி மேலும் மேலும் இவரைப் பேணி வேண்டினார். என்ன வேண்டியும் இவர் அதற்கு இசையவேயில்லை. கொடுத்துவந்த வனுக்குப் பிறந்தவர் கொள்ளத்துணிவாரா?
மூலமும் சாகந்தானும் பலங்களும் உவந்துகொள்ளும்
மாலைய முனிவரோடவ்வனத் துறைவோ மதானல்
காலைநீர் அருளுகின்ற காஞ்சனம் காஞ்சிரங்காய்
போலும தெங்கட்கென்று புகன்றனர் புதல்வர் தாமே. இவரது உணர்வின் திறத்தையும், உளவுறுதியையும் நோக்கி எல்லாரும் வியந்து

போற்றினர். பொருள் நசையோடு அங்கு வந்திருந்த பெரும்புலவர்களெல்லாம் இவரது அருங் குணங்களைக் கண்டு தமக்குள்ளேயே நாணிக் கொண்டார். பெரிதும் கற்றவராயிருந்தும் சிலர் பேச அஞ்சிப் பின்போய் நிற்ப இவர் சிறிதும் அஞ்சாது அப்பேரவையில் பேசிப் பேர்பெற்று வந்தார். கற்றறிந்தும் நல்லாரவையஞ்சுவார், கல்லாதவரின் கடையரே யாவர் என்பதும், அங்கு அஞ்சாமல் சொல்ல வல்லவர் உயர்ந்தவரென உலகம் போற்ற விளங்குவர் என்பதும் அன்று இவர் உணர்த்தி நின்றார்.

ஓதிநின்றும் அஞ்சி உரையானேல் அன்னவனே
பேதைபெரும் பேடிநெடும் பேய்.

அவையஞ்சிச் சொல்லாதவரை எல்லாரும் இகழ்வர் என்பது இதனால் கூறப்பட்டது

---

730 அன்றேம காதன் அவையஞ்சி எனிழிந்து

குன்றியொழிந்தான்
குமரேசா—நன்று
உளரெனினும் இல்லாரோ டொப்பர்
களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.
(ம)

இ—ள்.
குமரேசா! அவைக்கு அஞ்சியதால்
எமோர்தன் என் இருந்தும் இல்லாதவனாய்
இழிந்து ஒழிந்தான் எனின், களன் அஞ்சிக்
கற்ற செலச் சொல்லா தார், உளரெனினும்
இல்லாரொடு ஒப்பர் என்க.

73-ம் அதிகாரம்
அவையஞ்சாமை. 1877

இஃது அவையஞ்சுமவனை இறந்தவனாகவே
எண்ணவேண்டுமென்
கின்றது. அன்று என்றது வரகுணபாண்டியன்
அரசுபுரிந்த காலத்தை.. இழிந்து ஒழிந்தான்

என்றது ஒருவருக்குந் தெரியாமல் உள்ளஞ்சி இரவே
ஒளித்து ஓடிப்போனமை கருதி.
நன்று=சிறப்பாக.
உளர் எனினும்=உயிரோடு
வாழ்கின்றாரெனினும். உம்மை உண்மை யின்
சிறப்புணர நின்றது. இல்லாரொடு
ஒப்பர்=இறந்தாரோடு ஒப்பாவார். இறந்தவரோடும்
சேராமல், இருப்பவரோடும் எண்ணப்படாமல் உயிர்ப்
போடு செருக்கி உலாவுகின்றமை கருதி ஒப்பர்
என ஒதுக்கி வைத்தார்.
களம் என்பது இடம் போர்க்களம் சபை
என்பவற்றையுணர்த்திவரும். ஈண்டு ஈற்று மகரம்
னகரமாகி வந்தது. இங்ஙனம் வருவதை
ஈற்றுப்போலி என்பர். மகரவிறுதி அஃறிணைப்
பெயரின், னகரமோடுறழா நடப்பன
வுளவே என்னும் இலக்கண விதியையும் இங்கு
எண்ணிக்கொள்க.
களன் என்றது அவைக்களத்திலிருந்தாரை.

இஃது இடவாகுபெயர்.

மேல், அவையஞ்சுபவன் கல்லாதவனினும் கடையனே யென்றார்; இதில், உயிரோடு அவன் செத்த பிணம் என்கின்றார்.

அவைக்களத்தை அஞ்சித் தாம் கற்றவற்றை அழகுறச் சொல்ல மாட்டாதவர், உயிரோடிருப்பினும் இறந்தவராகவே உலகத்தாரால் அவர் எண்ணப்படுவர் என்பதாம்.

சபையைக்கண்டு பயந்து ஒன்றும் சொல்லமாட்டாது ஒருவன் ஒழிவனாயின் அவன் உயிரோடிருபபினும் பயனொன்றும் இன்மையால் இறந்து பட்டவனாகவே உலகம் எள்ளி இகழும் என்பார் சொல்லாதார் இல்லாரோ. டோப்பர் என்றார்.

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக் களரனையர் கல்லாத வர் என முன் அருளியதுபோல் இதுவும் அருளப்பட்டுள்ளமை காண்க. அதில் கல்லாதாரைக் களர் என்றார் ; இதில் அவையஞ்சிச சொல்லாதாரைப் பிணம் என்றார் ; பயன்படாமை கருதி. கல்லாதொழிதலினும்

கற்றும் சொல்லாதொழிதல் மிக்கவும் பரிதபிக்கத்தக்கதாகலான் அதனிலும் இது கடுமைதோன்ற நின்றது.

தாம் எடுத்த பிறப்பையும் படித்த படிப்பையும் பாழாக்கி அவையச்சம் பழிப்படுத்தி விடுமாதலால் அப்பொல்லாத இழிவினைக் கல்வியாளர் சிறிதும் பொருந்தலாகாதென்பது கருத்து.

அவையஞ்சாது சொல்லவல்லவரே நல்ல அறிவினையுடையராய்க் கல்வியாளர் எவரினும் சிறந்து அருந்திறலுடையராய்ப் பெரும்புகழ் வாய்ந்து 1878 திருக்குறட் குமரேச வெண்பா.

உயர்ந்து விளங்குவர்; அஞ்சினோர் எல்லாராலும் எள்ளப்பட்டு இழிந்து தொலைவர் என இருவகையிலும் வைத்து இதுவரை உறுதிபெற உணர்த்தி வந்து இறுதியாக அவ் அச்சத்தின் இழிவை ஒழிவுசெய்யும்படி இதில் முடிவுசெய்தருளினார் என்க.

அவையச்சமுடையவன் உயிருடையனாயினும்

அஃ தில்லாதவனுகவே இழிக்கப்படுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை எம காதன்பால் உணரப்படும்.

## கதை.

எமநாதன் என்பவன் சோழநாட்டின் வடபாலிருந்த ஓர் இசைநூல் வல்லவன். யாழ் இசைத்தலிலும் வாய்ப்பாடலிலும் இவனுக்கு நிகரான வர் எங்கும் இலரென அக்காலத்தில் இவன் இசைபெற்றிருந்தான். அரசர் பலரிடமுஞ்சென்று தன் இசைத்திறத்தைக் காட்டிப் பொருளும் புகழும் ஈட்டிப் பெருமைபெற்று நின்ற இவனிடம் இறுமாப்பும் உரிமையுற்றிருந் தது. தன்னைப்போல் பாடவல்லவரில்லையென்னுந் துணிவால் மறுமண்டலங்கட்குஞ் சென்று வரிசைபலகொண்டு இறுதியில் வந்து மதுரையை யடைந்தான். அதுபொழுது அங்கு அரசபுரிந்திருந்த வரகுண பாண்டியனைக்கண்டு தொழுது புகழ்ந்து ஏழிசை மழலை வீணை யிடந்தழீஇச் சுருதிகூட்டி, எழிலின் இசைத்தேன் மன்னன்அந் செவிவழியப் பெய் தான். மன்னன் மிகமகிழ்ந்து மணியணியும் பொன்னுடையும் பொருளும் புகழ்ந்து கொடுத்துச்

சிலகாள் அங்கு இருந்துபோதும்படி ஓர் உறையுளும் உதவினுன். பெருக்க வரிசைகள் பெற்றுக குறித்த மனையிலிருந்த இவன் செருக்குமிக்கிருததலை அரசன் குறிப்பாலறிந்து தனது உரிமைப் புலவரான பாணபத்திரரை யழைத்து இவனோடு வாதுசெய்து பாடுகின்றீரா ? என் ருன். " தென்னவர் பெரும யானுன் திருவுள்வலனுங்கூடல், முன்னவன் அருளுமூட்டு முயற்சியான் முயன் றுபாடி, அன்னவன்விருதுவாங்கி அவனை விறழிப்பன் " என் று, பத்திரர் பணிந்து கூறினுர். நானே அவனை நம் சபை க்கு வரும்படி செய்வல்; நீர் வந்து பாட வேண்டும் எனப் பாண்டியன் இசைப்ப, அப்பாணர் இசைந்து போயினுர். போனவர் வந்தவனை வெல்ல விரும்பி இறைவனை அன்போடு நின்று வேண்டியதால் அப்பரமன் விறகு விறபவன்போல்வேடந்தாங்கி அவ்இசைவல்லான் இல்லஞ்சென்று புறத்தே யிருந்த வேதிகை யொன்றில் மேவியிருந்துமெல்லப்பாடினுர். அப்பாடலின் பெருமையை என்னென் றுரைப்பது.

தருக்களுஞ் சலியா முந்நீர்ச் சலதியுஞ் சலியா நீண்ட

பொருப்பிழி யருவிக்காலும் நதிகளும் புரண்டு
துன்னா

73-ம் அதிகாரம் அவையஞ்சாமை.

1879

அருட்கடல் விளைத்தகீத இன்னிசை யமுத
யாதி
மருட்கெட அறிவன் தீட்டி வைத்தசித் திரமே
யொத்த. (1)
போதுளான் பரமன்யாதப் போதுளானுன்
வேலை
மீதுளான் பரமானந்த வேலைமீதுள்ளானுன்
தாதுளாங் கமலக் கண்போற் சதமக
னுடலமெல்லாங்
காதுளா னல்லனென்றான் கண்ணுளான்
கானங் கேட்டு. (2) இங்ஙனம் அவ்வவைசயகன்ற
இசை, கேட்டவர் உள்ளங்களையெல்லாந் தன்
வயப்படுத்தி இன்பங் கிளர்ந்து நின்றகாதலால் அவன்
வியந்து வெளியே வந்து நீர்யார்ஐயா ! என்று
நேர்நின்றுகேட்டான். யான் யாணபத்திரு

டையமானவன்;இப்பொழுது யான் மிகவுங்கிழவனாயடியால் இனிஇவன் பாடவுதவானென்று என்னை அவர் குழுவிலிருந்து தள்ளிவிட்டார் ஆதலால் இச்சன்னிவிற்றுப் பிழைக்கின்றேன் என்று அவர் சொல்லிவிட்டுப்போனார். இழுக்கிவிட்ட இக்கிழவன் பாட்டே யிப்படி இருந்தால் ! அப்யத்திரன் பாடல் எப்படி இருக்குமோ ? என்று அவ்வுத்தரன் உளத்தில் அச்சங்கொண்டான். அவ்மாலெய்தினன், அமய நோக்கி ஒன்று ஒருவரும் அறியாவகை உடன் வந்தவர்களுடன் இரவே ஓடிப்போனான்.

மடக்கு பல்கலைப் பேழையும் மணிக்கலம் பிறவும்

அடக்கு பேழையும் கருவியாழ்க் கோலுமாங்காங்கே

கிடக்க மானமும் அச்சமுங் கிளர்ந்து முன்னீர்த்து

நடக்க உத்தரதிசைக்கணே நாடினன் நடந்தான். (1)

சிவிகை யோர்வழி விறலிய ரோர்வழி செல்லக்

கவிகை யோர்வழி கற்பவ ரோர்வழி கடுகக்
குவிகை யேவலர் ஒருவழிகூட நா ணுள்ளத்
தவிகை யோவரு மொரு வழி யகன்றி—
அகன்றான். (2) என்றபடி ஒளிந்து
தொலைந்தான் . விடிந்தபின் அரசன் நட
ந்ததையறிந்து அவன் அஞ்சி ஒழிந்தான் என்று
நெஞ்சம் தெளிந்தான் . உயிரோடிருந் தானயினும்
இறந்தவனகவே எல்லாரும் அவனை இகழ்ந்து
கூறினர்

அதன்பின் எய்திய கலனெலாம் இழந்து அவன் இழிந்து விளிந்தான். அவை
கண்டு அஞ்சிக் கற்ற செலச் சொல்லாதார், உள்ளெனினும் இல்லாரொ
டொப்பர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.
விரிவைத் திருவிளையாடற் புராணத்திற் காண்க.

உற்றசபை யஞ்சி யுரையான் உயிருந்தும்
செத்தவனே மென்றே தேர்.
1880 திருக்குறட் குமரேச
வெண்பா.

அவையஞ்சுபவர் இருந்தவராயினும்
இறந்தவரே என்பது இதனுள்
கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

அவையஞ்சாமற் சொல்லவல்லவரே அறிவுடையராவர். கற்றவரெல் லாரினும் அவரே மிகக்கற்றவராகக் கருதப்படுவர். பகையகத்தில் சாதலினும் அவையகத்துட்போதலே மிக அருஞ்செயலாகும். தனக்குத்தெரிந் ததை அஞ்சாது சொல்லித் தெரியாததைத் தெரிந்தவரிடம் உணர்ந்து கொள்ளவேண்டும். அச்சமின்றிச் சொல்லலே ஒருவன் கற்ற கல்விக்குப் பயனும். அச்சமுடையவர் நூல்களைக் கற்கலாகாது. அவர் கற்றகல்வி பேடிகைவாள்போல் பீடழிந்தொழியும். பலநூல்களையும் பழுதறக்கற்றவராயினும் அவைக்கு அஞ்சினால் அவர் நவையேயடைவர். கல்லாதவரி னும் அவர் கடையரேயாவர். உயிரோடிருப்பினும் அவர் ஒழிந்தவரே யாவர்; ஆதலால் அவையஞ்சாது நின்று அறிந்தார் பேசவேண்டும்.

௭௩-வது அவையஞ்சாமை

முற்றிற்று.

அங்கவியலில், அமைச்சியல் முற்றிற்று.

---

# மூன்றாவது அரணியல்.

அரசியல் அமைச்சியல் அரணியல் பொருளியல் படையியல் நட்பியல் குடியியல்என ஏழு இயல்களாகப் பொருட்பால் வகுக்கப்பட்டுள்ளது.

படை குடி கூழ் அமைச்சு
நட்பு அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு

என மேற் கூறியபடி அரசனுக்கு இவை புறத்துறுப்புக்களாதலால் அரசியல் முதலாக இங்ஙனம் அணிபெற்று நின்றன. பின்வந்தவர்கள் அமைச்சு முதலிய ஐந்தையும் அங்கஇயல் என ஒன்றாகச் சேர்த்தும், இறுதியிலுள்ளதை ஒழிபியல் எனப் பேர்த்தும், சுருக்கங்கருதித் தொகுத்திருக்கின்றனர். ஆயி

ஞும் அறிபொருள் ஏழெனத் தொடித்தலே விழுத்தண்டினரும்,

அரசியல் ஐயைர் தமைச்சியல் ஈரைந்

துருவல் அரணிரண்டொன்

றெண்கூழ்—இருவியல்

திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்

மூன்

றென்ன பொருள் ஏழாம் இவை எனப் போக்கியாரும் இருவள் ஞவமாலையில் புகன்றுள்ளபடியே அரணியல் என இங்கு இது தெளிவுற அமைந்தன்றது. சிற்பிணும் அங்கஇயலுள் ஒன்றாகிய அரணியல் என்று கொள்க. மேல் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். இது நாடு அரண் என் இரண்டதிகாரங்களையுடையது.

1881

# 74ம்-அதிகாரம்

## நாடு.

அஃதாவது நாட்டின் தன்மை.

செங்கோலனாய் நின்று அரசன் ஆட்சி செலுத்தற்கும், அவனருகிருந்து உறுவது தெரிந்து உறுதிகூறி அமைச்சன்மாட்சி செய்தற்கும், மற்றை அங்கங்களின் நலங்கள்யாவும் மருவி வருதற்கும் ஆதாரமாயுள்ளது நாடேயாதலால் அமைச்சியலின் பின் இது வைக்கப்பட்டது.

**731** ஆர்ந்த பொருள்விளைவால்
ஆன்றோரால் கோசலஞ்சீர்
கூர்ந்துநின்ற தென்னே
குமரேசா—சார்ந்தென்றுந்
தள்ளா விளையுளுந் தக்காருந்
தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.
(க)

இ—ள்.

குமரேசா! நிறைந்த விளைவும் தகுந்த பெரியோர்களும் உடைமையால் கோசலநாடு என் சிறந்து விளங்கியதெனின், தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்வு இலாச் செல்வரும் சேர்வது நாடு என்க.

ஒரு நாட்டிற்கு முன்னதாக வேண்டிய நலங்கள் இன்னவென இது உணர்த்துகின்றது.

ஆர்ந்த பொருள்விளைவால் என்றது நிறைந்த பல்வகைப் பொருள் நிலைகளாலும், பயிர்விளைவாலும் என்றவாறு.

கதிர்படு வயலிலுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள

முதிர்பல மரத்திலுள்ள முதிரை நகள் புறவிலுள்ள

பதிபடு கொடியிலுள்ள படிவளர் குழியிலுள்ள

மதுவன மலரிற் கொள்ளும் வண்டெனமள்ளர் கொள்வார், என்ற படி, பல்வகை நலனுங்கொண்டு மல்கிகின்றதாதலால், விளைவால் ஆன்றோ ரால்

கோசலம்சீர்  கூர்ந்துநின்றதென்றும்.
சார்ந்தென்றும்  என்றது  நன்மைக்கு
அடையாய் அதன் தகுதி தோன்ற நின்றது.
உம்மை மூற்றுப்பொருளது.

நன்னா  விளையுளும்=தவறுபடாத
விளைவுகளும். என்றது என்று ம் குன்றுத பயிர்
விளைவுகளை. தன்றுதல் நிலைதலைதல் ; நன்னாத்
தவநெறி  என்பதும்  காண்க.  விழைகின்ற
நலங்களெல்லாவற்றிற்கும்  ஆதாரமாய்  நிற்றலால்
விளையுளை  முதலில்  வைத்தார்.  தக்கார்
=தகுதியுடையார்; அவராவார், தக்க இன்ன தகாதன
இன்ன என்று ஒக்கநின்றுணர்ந்து நெறி 1 882
திருக்குறட்  குமரேச  வெண்பா.
வழுவாதொழுகும்  அறவோர்  என்க.
விளையுளுக்கும்  செல்வருக்கும்  கொடுத்ததுபோல்
இவர்க்கு  அடைகொடாதது  கூட்டொன்றும்
வேண் டாத அவரது குணநிறைவின் உயர்வுகருதி
என்க.

தாழ்வு  இலாச்

செல்வர் = தேய்தலில்லாத பெருஞ் செல்வமுடையார். செல்வத்துக்குத் தாழ்வின்மை கொடுக்கக் குறையாமை என்க. இரப்பவர்க்கு இல்லையென்னாது ஈயுந்தன்மையும், எவ்வளவு கொடுத்தாலும் குன்றாத பொருள்வளனுமுடையாரே தாழ்வில்லாச் செல்வராவர் என்க. வந்தவனுக்குத் தந்ததால் இருந்தவன் பட்டினி என்றும்படி சிறிது கொடுத்த வுடனே வறிதுபடுவது தாழ்வுள்ள செல்வமாமாதலால் இது தாழ்வு இலா என கின்றது.

நிறைந்த விளைபொருள்களும், தகுந்த பெரியோர்களும், சிறந்த செல் வர்களும், பொருந்தியுள்ளதே நாடாகும் என்பதாம்.

சேர்வது நாடு என்றதனால் அங்ஙனம் சேரப்பெறாதது நாடாகாதென் பதாயிற்று. விளையுள் வீழாமைக்கும், செல்வம் தாழாமைக்கும் தகவுடை யார் ஒருதலையா உரியராதல் கருதி அவ் இரு தலைக்கும் இடையே அவரை இருத்திவைத்தார். விளையுளும் செல்வமும் மிக்கிருப்பினும் தக்கார் இல் லையாயின் மணமில்லாத மலர்போல் அந்நாடு

பொலிவிழந்திருக்குமாதலால் அவருண்மை அதற்கோர் ஒண்மையாம் என்க. சான்றோரில்லாத் தொல் பதி யிருத்தலின், தேன்தேர் குறவர் தேயம் நன்றே என்றதுங் காண்க.

வேறுபலவும் வேண்டுமாயினும் விளையுள் முதலிய மூன்றையும் தலைமைகருதி ஈண்டுவிதந்து வைத்தார்; இக்கலங்கள் சேரப்பெறுதது நல்ல நாடாகாதாதலால் அதனைத் தன் அரசுக்குரிமையாக அமைச்சர் நாடலாகாது என்பது கருத்து.

நிலவளனோடு அறிவுடையாரும் திருவுடை யாரும் தன்னிடம் அமையப்பெற்றிருப்பதே நாடாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கோசல நாட்டின்கண் உணரப்படும்.

## கதை.

கோசலம் என்பது இப் பரதகண்டத்திலுள்ள நாடுகளெல்லாவற்றுள் ளும் சிறந்து அதற்கோர் பீடுடைமையாகப் பிறங்கி நிற்பது. கங்கை சரயூ என்னும் புனிதமான இருபெரு நதிகளையும் முத்தி நகரமாகிய திருவயோத்தியையும் தனக்கு

உரிமையாகவுடையது. சிபி சகு திலீபன் இரகு முத லான சூரியகுல மன்னர்களெல்லா ரும் இன்னுயிர்போற் பேணித்தம் செங் கோலை எங்குஞ் செலுத்தி இன்புற்றிருப்ப இடமாய் நின்றது. மண்மழவளங்

74-ம் அதிகாரம் நாடு.

1883

குன்றினும் நிலவளங் குன்றாது மிகு வளர்ந்து புகழ்மீக்கொண்டது. நீர்நிலைகளாலும் பொழிலமைவுகளாலும் பிறகலங்களாலும் எழில்மிகப் பெற் றது. இந்நாட்டிலுள்ளவர்கள் குறிப்பறிதலிலும் சித்திரம் வரைதலிலும் மிகச் சீர்தபெற்றவர். அதனால் கோசலத்தியன்ற ஓவியத் தொழிலரும் என விதந்து ஓதப்பெற்றிருந்தார். அறிவிலும் விதிமுறை வழுவாதொழு கும் தகவிலும் இவர் மிகவும் மேன்மையு ற்றவர். மறுபுலத்தவரும் இந்நாட் டின்பெருவளத்தைநோக்கிப் பெருவிருப்பமுற்றார்.

செங்கெல் கரும்பு கமுகு தெங்கு முதலியன எங்கும் நிலவ நீர்நிலைகள் அவற்றின் கழுத்தளவு புடை பரந்து நேரோங்கி நின்றன ஆதலால் அங்கிருந்த வாளைமீன்கள் துள்ளிப் பாளைநீரையுண்டு மீஎரிமைகொண்டு களிப்போடு மீளலாயின. பாளைதந்த மதுப்பருகிப்பரு, வாளைநின்றுமதர்க்கும் மருங்கெலாம்; எனக்கம்பர் இந்நாட்டை க்குறித்துக் கூறுங்கால் இதனைக் காட்டியுள்ளமை காண்க.

ஆறுபா யரவ மள்ளர் ஆலைபா யமலை யாலைச்
சாறுபா யோதை வேலைச் சங்குவாய்
பொங்குமோதை எறுபாய் தமர நீரில் எருமைபாய்
துழனி யின்ன
மாறுமா றுகித் தம்மின் மயங்குமா மருதவேலி.
(1) வரம்பெலா முத்தந் தத்து மடையெலாம்
பணிலமாநீர்க் குரம்பெலாஞ் செம்பொன் மேதிக்
குழியெலாங் கழுநீர்க்கொள்ளை பரம்பெலாம் பவளஞ்
சாலிப் பரப்பெலாம் அன்னம் பாங்கர்க் கரம்பெலாஞ்
செந்தேன் சந்தக் காவெலாங் களிவண்டட்டம்.

(2) தண்டலே மயில்களாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவினேங்கக் குவளைகண் விழித்துநோக்கத் தெண்டிரை யெழினிகாட்டத் தேம்பிழி மகரயாழின் வண்டுகள் இனிதுபாட மருதம்வீற்றிருக்குமாதோ. (3) நீரிடை யுறங்குஞ் சங்கம் நிழலிடை யுறங்குமேதி தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ் செய்யாள் தூரிடை யுறங்குமாமை துறையிடை யுறங்கும் இப்பி
போரிடை யுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந் தோகை. (4)

படையுழ எழுந்த பொன்னும் பணிலங்கள் உயிர்த்த முத்தும் மிடைபசுங் கதிருமீனும் மென்றழைக் கரும்பும் வண்டும் கடையியர் முகமும் போதுங் கண்மலர்ந் தொளிருமாதோ.

(5)

வெண்பா.

ஆலைவாய்க் கரும்பின் தேனும் அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும் தொடையிழி இறாலின் தேனும்
மாலைவா யுகுத்ததேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்பவுண்டு மீனெலாங் களிப்ப மாதோ. (6) என்றபடி முன்னிய வளங்கள் பலவும் தன்னகங்கொண்டு இது செழித்திருந்தது. நாகிளங் கமுகின் வாளை தாவுறு கோசலை நாட்டுடை வள்ளால் என எல்லா நலங்களையுமுடைய இராமபிரானுக்கு இந்நாடுடைமையே பெருமையாகக் கருதநின்றதென்றால் இதன்பெருமையை எவ்வாறு உரை யிட்டளப்பது. இதில் வாழ்ந்திருந்த மக்களெல்லாரும் நெறி திறம்பாத

நீர்மையுடையராய் நீதியின் கண்ணேயே நிலைத்திருந்தனர். " ஆசலம்புரி ஐம்பொறி வாளியும், காசலம்பு முலையவர் கண்ணெனும் பூசலம்பும் நெறியின் புறஞ் செலாக் கோசலம்" எனவும், வீடுசேர நீர் வேலைகால் மடுத், தாறு பேரினும் உலை விலா நலம், கூடுகோசலம் என்னுங் கோதிலா நாடு; எனவும் இதுபாட நின்றது.

தாதுகு சோலைதோறும் சண்பகக் காடுதோறும்

போதவிழ் பொய்கைதோறும் புதுமணற் றடங்கடோறும்

மாதவி வேலிப் பூக வனத்தொறும் வயல்கடோறும்

ஓதிய வுடம்புதோறும் உயிரென வுலாயதன்றே.

என்றபடி சரயுநதி இதன்கண் எங்கும் பரவ வளங்கொண்டு இது பொங்கி யிருந்தது. இதன் அருமையை வியந்து புலவர் பலரும் தத்தம் நூலுரைகளில் போற்றியுள்ளார்கள்.

கடையோர் போலக் காமத்திற் கழுமா

இடையோர் இயல்பின தாகி இல்ல
துடையோர்க் குரிய உதவி நாடி
ஆனுச் சிறப்பின் யாவர்க்காயினும்
தானப் பெரும்பயங் தப்புதலின்றி
ஓசை யோடிய உலவாச் செல்வத்துக்
கோசலவள நாடு.
(பெருங்கதை.)

வடுவகிர் நெடுங்கண் நல்லாய்
மடங்கலாசனத்தின் வைகும் தொடுகட
லுயிர்த்த முத்தங் துயல் வரு தடக்தோள்வீரன்
கடிமுறுக் கவிழ்த்த செல்விக் கமலமென்
பொகுட்டிலேறிக்
குடவளை முத்தமீனுங் கோசலத்தாசு
ரறே. (நைடதம்)

74-ம் அதிகாரம் நாடு.

1885

அன்னம் மிதிப்ப அலர்வழியுந்
தேறல்போய்ச்

செந்நெல் விளையுந் திருநாடு;
கன்னி நறுந்தேறல் மாந்திக் கமலத்தில்
மன்னித் துயின்ற

வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற்கு அவாவும் நெடுநாடு; எனப்

புகழேந்தியாரும் இந்நாட்டின் வளங்களை வியந்து கூறியுள்ளார். இங்ஙனம் பலநலங்களுஞ் சிறந்து எவரும் புகழ்ந்து போற்றுமாறு விளங்கியிருந்ததாதலால் தள்ளா விளையுளும், தக்காரும், தாழ்விலாச் செல்வரும், சேர்வது மையாய் இங்கு இது நாடனின்றது.

நாடு என்பதற்கு உரி

மேலுந் திருவும் விளைவுமிலா அந்நாடு
தாலியிலா மாதாதந் தான்.

வளமும் நலமுமுடையதே நாடாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

732 நாடி எவரும் நயப்ப மகதஞ்சீர்
கூடி நின்ற தென்னே
குமரேசா—தேடும்
பெரும்பொருளாற் பெட்டக்கதாகி
யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.
(உ)

இ—ள்.

குமரேசா ! பிறநாட்டவரும் உறவிரும்பும்படி மகதநாடு என் மிகவளஞ் சிறந்திருந்தது எனின், பெரும்பொருளால் பெட்டக்கது ஆகி அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு என்க.

இஃது ஒருநாடு அமைந்திருக்கவேண்டிய விதங்கூறுகின்றது. எவரும் என்றது பிறநாட்டவரை; அவராவார், சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளு குடகம் கொங்கணம் கன்னடம்

கொல்லம் தெலுங்கம் கலிங் கம் வங்கம் கங்கம் கடாரம் கவுட முதலிய தேயத்திலுள்ளவர்கள் என்க. இவசெல்லாரும் விழைந்து புகழப் பொருள் வளங்களால் மகதம் சிறந்ததின் றதாதலால் நாடி நயப்பச் சீர்கூடி நின்றதென்றாம். தேடும்=எவரும் விரும் பித் தேடுகின்ற.

பெரும்பொருள் என்றது செல் மணி பொன் முதலிய பல்வகைப் பொருளின் திரள்களை.

பெள் தக்கது=விரும்பத்தக்கது. பெள் என்னும் வினைப்பகுதி இங்ஙனம் எச்சமுற வந்தது. பெள்=விருப்பம். இது தொழிற்பெயராக் 1886 திருக்குறட் குமரேச வெண்பா.

கால் பெட்டல் பெட்பு என வரும். பெட்டாங் கொழுகும் பெருமகன் எனப் பெருங்கதையிலும், பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி எனப் புறத்திலும், பிறன்பொருளாட் பெட்டு என்பதிலும் இதன்பொருளையுணர்க.

அருங்கேட்டால் விளைவது என்றது கேடின்றி

விளைவது என்றவாறு. அருமை ஈண்டு இன்மைமேலது. அருங்கேடன் என்பதறிக; என்புழிப் போல இதனை இங்கு அறிந்துகொள்க.

மேல், மிக்க விளைவும் தக்காரும் மேவப்பெற்றிருப்பதே நாடாம் என்றார்; இதில், யாரும் விரும்பும் வண்ணம் அது சிறந்திருக்கவேண்டும் என்கின்றார்.

அளவிறந்த பொருள்வளமுடைமையால் பிறநாட்டவரும் விரும்பத் தக்கதாகி கேடென்பதொன்றுமின்றி மிகவும் விளைவதே நாடாம் என்பதாம்.

விட்டில்தன் அரசு நால்வாய் மிகுமழை மிகு காற்றோடே

நட்டம்வேற் றரசுகின்னா நாடுறுங் கேடு எட்டாமே. என்றபடி விளைபொருள்களுக்கு இடையூறுகளாய கொடிய நிகழ்ச்சிகள் யாதொன்று மின்றி என்றும் " அளந்தறியாப் பலபண்டம், வரம்பறியாமை வந்தீண்டி " என்றவாறு வளஞ்சுரந்து ஒரு நாடு சிறந்திருக்குமாயின் அதில்

குடிபுகுந் திருக்க எல்லாவுயிர்களும் விழைந்திருக்கும் ஆதலால் பெட்டகத்தாகி விளைவது நாடு என்றார்.

தாராற் பொலிபொற் புயவீரர் தவாது செல்லும்
தே ரார்ப்பும் நால்வாய்க் கரியார்ப்பும் வெஞ்சேனை யார்ப்பும்
ஏரார்ப்பும் மிக்க பதிமானவரீண்டும் ஆர்ப்பும்
காரார்ப்பும் வேலைக் கடலார்ப்புக் கடுத்தவன்றே (1)

வானேக்கி நிற்கும் உலகென்னவும் மன்னவன் செங்
கோனேக்கி நிற்குங் குடியென்னவுங் கோதிலும்ப
ராஞேர்க்கும் நாகருலகோர்க்கும் அவனியோர்க்கும்
வஞேக்கும் நாடு நகராகி யிருந்ததவ்வூர். (2)

கோடுநெறியும் இகலும் மனக்கோட்ட மாய
கேடும் பிணியும் முதலாகிய கேதம் யாவும்
நீடும் பரிவோ டுறைவாரிடை நீங்க லாலே

வீடு அங்ககரோ யெனிலென்னின்
விளம்பவற்றே. இங்ஙனம் எங்கும் வளக்குலவி
யிலங்க ஒருநாடு விளங்கவேண்டும் என்பது கருத்து.
எவரும் விழைந்துவந்து தங்குமாறு
வளஞ்சார்ந்து சிறந்தநாடு உயர்ந்
திருக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது.
என உரைப்படும்,
இவ்வுண்மை மகதநாட்டின்

74-ம் அதிகாரம் நாடு.

1987

## கதை.

மகதம் என்பது வங்கநாட்டின்
வடபாலுள்ளதொரு நாடு. மாரதன் என்னும்
அரசனுக்கு முதலுரிமையாய் நின்று பின் அவன்
வழிவந்தவர்க ளெல்லாம் அளவிலின்பந் தந்து
புகழ்மிகப் பெற்றது. நிலவள முதலிய
பலவளங்களுக்கும் நிலையமாயது. சிறந்தபொன்
முதலிய அரும்பொருள்கள் தோன்றுங்
கனிகளுமுடையது. கனிகள் = நிலவறைகள்.

தானகம் என் னும பெரிய காடும், கானவனம் என்னும் இனியகாடும், இதன்மேல்பாலெல் லையாகப் புடைபரந்து பொலிந்துவிளங்க இது பொருந்தியுள்ளது. இற் றைக்கு எண்ணயிர ஆண்டுகட்கு முன்னரேயே எல்லா நலங்கட்கும் பிறப் பி - ம என்று எல்லாரும் புகழ்ந்துபோற்ற இது விளங்கி நின்றது. மறுக சுயம் மழையாறு ॥ கந நன்றுடு என்று புலவர் தலைவராகிய கூலவாணிகன் சாத்தனார் இந்நாட்டைக் குறித்துக் கூறியுள்ளமை யிவருக் குறிக்கொள்ளத் தககது. இதன்சிறந்த ளைனை ந்னைந்து புலவர்பலரும புகழ்ந்து கூறியுள் ளார். கருசகன் என்னும் அரசன் முறைசெய்துவருங்கால் இந்நாடிருந்த நிலைமையைக் குறித்துங் கொங்குவே ளார் என்னும் புலவர் திலகர் கூறியுள் ளது இசனடியில் வருகின்றது அதன் பொருள்வள ங்களை உரிமையே 1ல உய்த்துணர்ந் துகொள்க.

வயல்கொள் வினைஞர் கம்பலை வெரீஇக் கயமூழ்
கெருமை கழைவளர் கரும்பின் விண்ட இனமடல்
முருக்கித் தண்டாது தோகைச் செந்நெல் சவட்டிப்
பாசிலை யொண்கேழ்த் தாமரை யுழக்கி வண்டுகள்

ஆம்ப லகவிலை முருக்கிக் கூம்பற்
குவளைப் பன்மலர் குழைத்துத் தவளைத் தண்டுறை
கலங்கப் போகி வண்டினம் யாடலோவாப் பழனப்
படப்பைக்
கூடுகுலைக கமுகின் கொழுந்தழ லசைந்து மன்றயற்
பரக்கு மருதந் தழீஇக
குன்றயற் பரந்த குளிர்கொ ளருவி
மருவில் மானவர் மலிந்த மூதூர்
வெறித்து சேறல் விழுப்ப மன்றெனக்
[illegible] வாழைத் தேனூறு கனியும்
அள்ளியப் பலவின் முன்றுடை யமிர்தமும் 1888
திருக்குறட் குமரேச வெண்பா.

இரட்டாண் மாஅத்துத் தேம்படு கனியும்
வரைதாழ் தெங்கொடு காஅய் விரைசூழ்ந்து
மணியு முத்தும் அணிபெற வரன்றிப்
பணிவில் பாக்கம் பயன்கொண்டு கவரா
நிறைந்துவந் திழிதரு நீங்காச் செல்வமொடு
சிறந்த சீர்த்திக் குறிஞ்சி கோவிக்

கல்லென் சும்மையொடு கார்தலை மணந்த
முல்லை முதுதிணைச் செல்வ மெய்திப்
பாலையும் நெய்தலும் வேலியாகக்
கோல மெய்திக் குறையா வுணவொடு
துறக்கம் புரியுந் தொல்லையி னியன்றது
பிறப்பற முயலும் பெரியோர் பிறந்தது
சிறப்பிடை யருத தேசிக முடையது
மறப்பெருந் தகையது மாற்றோ ரில்லது
விறற் புகழுடையது வீரியம் அமைந்தது
உலகிற் கெல்லாம் திலகம் போல்வது
அலகை வேந்தன் ஆணை கேட்பது
அரம்பும் அல்லலும் காம்பும் இல்லது
செல்வப் பெருங்குடி சிறந்தணி பெற்றது
நல்குர வாளரை நாடினும் இல்லது
நன்பெரும் புலவர் பண்புளி பன்னிய
புகழ்ச்சி முற்று மகிழ்ச்சியின் மலிந்தது
இன்னவை பிறவும் எண்ணுவரம்பிகந்த
மன்பெருஞ் சிறப்பின் மகத நன்னாடு.

(பெருங்கதை)

இந்நாட்டின் பெரும் பொருட்டிறனும விரும்புறுநலனும் வியத்தகுவளனும் இதனுல் இனிது புலனுதல் காண்க. இங்ஙனம் புலவர்பாடும் புகழுடைய தாய் இது நிலவி நின்றதாதலால் இதன் தலைமையை யறிந்து பலரும் வந்து தங்கிப் பயன்பெற்று நின்ருர். பருவ மழையும், கருதிய விளைவும், பிறவளங்களும் முறைபுரி நலனும் என்றும் மருவிநின்றமையால் பிறதேயங் களிலுள்ளவர்களும் இதன் உரிமையைப்பெறப் பெரிதும் விழைந்தார். கேடென்பது யாதுமின்றிப் பெருநலங்களால் இது பீடுபெற்றிருந்தது. ஆதலால் பெரும் பொருளால் பெட்டக்கதாகி அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு என்னும் உண்மைக்கு இஃது உரிமையுற்று நின்றது. "மூடம் குவெண் டோட்டுக் கைதை முருகுயிர்த் திரங்குர் தெண்ணிர்த்தடங்கட் 74-ம் அதிகாரம் நாடு.

1889

புலவுமீபாக்குந் தண்டுறை மகத நாடன்" என இந்நாட்டு மன்னனை நைடத நூலார் காட்டியுள்ளமை காண்க.

அன்னமரைந்த தாய்போல்நின் றநுயிர்கட்

செந்நாள்ளும்
இன்பநன்னா தேநாடாம் என்.
யாரும் நாடிவருமாறு நலம்பொருந்தி நிற்பதே நாடாம் என்பது இக
கூல கூறப்பட்டது.

---

733 அண்டினார்க்கெல்லாம் அரணாய் விதேகஞ்சீர்
கொண்டிருந்த தென்னே குமரேசா—கொண்ட
பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. (௩)

இ—ள்.

குமரேசா! நாடிவந் தவர்க்கெல்லாம் நல்ல ஆதாரமாயமைந்து வளஞ்சுரந்து விதேகம் என் விளங்கியது எனின், பொறை ஒருங்கு மேல் வருங்கால் தாங்கி, இறைவற்கு இறை ஒருங்கு

நேர்வது நாடு என்க.

இது, தன்னையடைந்தவரெவர்க்கும் நாடு இதந்தரவேண்டும் என்கின்றது.

அண்டினர்=நெருங்கிவந்து ஒதுங்கினர்.
அரணாய்= ஆதரவாகி,
தன்னைநாடிவந்தடைந்தவர்கட்கெல்லாம் நலந்தந்து அரணாய் புகழ்மிகுந்து நின்றதாதலால் சீர்கொண்டிருந்ததென்றாம்.

கொண்ட=பிறநாடுகள் தாங்கிநின்ற. இது பொறைக்கு அடை. பொறை=பாரம். பொறுக்கப்படுவது பொறைஎன்க. பொறுத்தல்= தாங்கல். இறை இரண்டனுள் முன்னது அரசனை ; பின்னது இறைப் பொருளை என்க. இறைவனுக்கு இறுக்கவேண்டிய உரிமைப்பொருளாதலால் இறை என நின்றது.

இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னர் நிகழ்ந்த பஞ்சத்தில் வருந்தி வடநாடுகளிலிருந்து வந்தடைந்தவரெல்லாரையும் பாதுகாத்து அக்காலத்திருந்த வழுதிவேந்தனுக்கும் பழுதில்

மேன்மையைப் பயந்துவந்த நம் யாண்டினாடுபோல் ஈண்டியபொருளும் வேண்டிய போகமும் வேண்டி யாங்கெவர்க்கும் விளைந்து ஒருநாடு விளங்கியிருக்குமாயின் அது,பொறை வருங்கால் தாங்கி, இறை ஒருங்கு நேர்வது என எந்தப்படும் என்க.



வெண்பா.

மேல், எவரும் விரும்பும்வண்ணம் வளஞ்சுரந்திருப்பதே நாடாம் என்றார்; இதில், தன்னையடைந்தவர்க்கெல்லாம் ஆதரவாகி அது தழைத்திருக்கவேண்டும் என்கின்றார்.

பிறநாடுகள் தாங்கின்ற பாரங்களெல்லாம் ஒருங்கேவந்து தன் மேல் தங்கினும் அவற்றை நன்கு பாதுகாத்துத் தன் அரசனுக்குரிய இறைப் பொருள் முழுவதையும் வழுவாது தருவதே நாடாம் என்பதாம். இங்ஙனம் காத்துத் தராதது நாடாகாதென்பதாயிற்று.

பிறநாடுகளிலுள்ளவர்கள் அங்கு மழையின்மை முதலிய காரணங்களால் வருந்தி வெளியேறித் தன்பால் வந்தடைந்தால் அவர்களின்புற எல்லாநலங் களையுமுதவி ஆதரவாய் நின்று இனிது பேணவேண்டும் என்பார் பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி என்றார். அங்ஙனம் தாங்கியகால் அந் நாட்டிலுள்ள குடிகள் தம் அரசனுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பொருளைச் செலுத்த முடியாதபடி தயங்கலாகாதென்பார் இறைவற்கு இறை ஒருங்கு நேர்வது என்றார்.

வருந்திவந்தோர் வருத்தந்தீரப்,
பொருந்தியபோகம் பொருந்தப் போற்றி, இருந்த அரசுக் கென்றும் இன்பந் தருந்திருவுடையது சான்றோர் ஆர்ந்தது, என்று புகழ்ந்து போற்றும்படி ஒருநாடு பொருந்தியிருக்கவேண்டும் என்றவாறு.

நிறைந்த வளங்களைச் சார்ந்து எல்லாவுயிர்களையும் என்றும் இனிது பேணவல்லதே சிறந்த நாடாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை விதேக நாட்டின்கண் உணரப்படும்.

# கதை.

விதேகம் என்பது உத்தரகோசலத்தின் வடகீழ் எல்லையை இடமாகக் கொண்டு விரிந்துள்ளதொரு நாடு. நிமியின் புதல்வனாகிய விதேகன் என்பவன் சிறந்த புகழோடு விளங்கியிருந்து அழகுறத் திருத்தி அரசுபுரிந்தமை யால் இது விதேகம் என அம்மன்னன் பெயரால் விளங்கி நின்றது. இதன் தலைநகர் மிதிலை. இது மிதிலைநாடு எனவும் வழங்கப்படுகின்றது. இந் நாட்டிலுள்ளவர்கள் அறிவிலும் ஆற்றலிலும் அழகிலும் மிகச்சிறந்தவர்கள்.

நிலங்களைப்பண்படுத்தி வளங்களைப் பெருக்கி அறம்பலசெய்து வருந்திவந் தவரெவர்க்கும் அருந்துணையாய் நின்று விருந்துபுறந்தந்து அருந்தவரைப் பேணி என்றும் அருள்செய்யும் இயல்பினர். குணநலங்களோடு பொருள் வளங்களுமுடையராதலால் என்றும் இனியராய் நின்று இன்புற்றிருந்தனர். புகழுறங்களை மகவென நாளும் போற்றி வளர்த்தனர்.

74-ம் அதிகாரம் நாடு.

1891

முழங்குகடல் ஞாலம் முழுவதும் வரினும்
வழங்கத்தவா அ வளத்த தாகி
அரும்பொருடரூஉம் விருந்திற்றேஎம்
ஒருங்கு தொக்கன்ன வுடைப்பெரும்
பண்டம்
கலத்திலுங் காலினும் தருவன ரீட்டக்
குலத்திற்குன்றாக் கொழுங்குடிச் செல்வர்.

என இவர் விளங்கி யிருந்தார். இந்நாடு மிக்க நீர்வளமுடையதாதலால் குன்றாத விளைவுகளுடன் என்றுங் கூடியிருந்தது. இதனைப் போகபூமி எனவும், ஞானபூமி எனவும் அறிஞர்கள் புகழ்ந்து கூறுவர். அரசன் குடிகளுக்கு இன்னருள் செய்துவந்தான் ஆதலால் கண்ணெனக்கருதி அனைவரும் அவனைக்காதலித் திருந்தார். ஒருகாலத்தில் மழையில்லாமையால் பிறதேயத்திலுள்ளவர்கள் பெரிதும் வருந்தி இங்குவந்தடைந்தார். அந் நிலை குலைந்த காலத்தும்

இது வளமிகுந்திருந்ததால் எல்லாரும் யாதொரு கவலையுமின்றி இதில்தங்கி இன் புற்றிருந்தனர். இருந்த குடிகளும் அவரை அன்புடன்பேணி ஆதரித்து வந் தார். பல்வகை உயிர்தொகுதிகளும் வந்து மேவியிருந்தாலும் பழமை போலவேஇது நிலவியிருந் தது. அரசனுக்குரிய பகுதியை யாதொருதடையு மின்றிக் குடிகளன்புடன் செலுத்தினர். உற்றநதிகளுக்கெல்லாம் கடல் உறு துணையாய் நிற்றல்போல் தன்னை நாடியடைந்தவர்க்கெல்லாம் இந்நாடு நல்ல தாயகமாயிருந்தது. பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி, இறைவற்கு இறையொருங்கு நேர்வது நாடு என்னும் உண்மைக்கு முதலுரிமையாய் இந்நாடு உயர்ந்திருந்தது என உலகம் உவந்துரைத்தது. இந்நாட்டைக் குறித்துப் புலவர்கள் பலர் புகழ்ந்து கூறியுள்ளார்.

பள்ளிநீங்கிய பங்கயப் பழனநன் றுறை

வெள்ள வான்கனை கனைவுறு கடைசியர் மினிர்ந்த

கள்ள வாநெடுங் கண்ணிழல் கயலெனக்

கருதா

அள்ளி

நாணுறுமகன்பனை மிதிலைநாடடைந்தார்.

(1)

வரம்பில் வான்சிறை மதகுகள் முழவொலி

வழங்க

அரும்பு நாண்மலர் அசோகங்கள்

அலர்விளக்கெடுப்ப

நரம்பி னுன்றதேன் தாரைகொள் நறுமலர்

யாழின்

சுரும்பு பாண்செயத் தோகைநின்

றுடுவசோலை. (2)

தூவியன்னந் தம் இனமென்று நடைகண்டு தொடரக்
கூவுமென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடு ஒன்றொடொன் றாடி
பூவுறங்கினும் புள்ளுறங்காதன பொய்கை. (3)

237

1892 திருக்குறட் குமரேச

வெண்பா.

முறையினின் முத மேதியின் மூலவழி பாலும்
துறையினின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையுமென்கரும் பாடிய அமுதமுமழிதே
' நறையு மல்லது நளிர்புனல் பெருகலா நதிகள் (4)

படைநெடுங்கண்வா ளுறைபுகப் படர்புனல் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திருவெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடு மொலிப்ப மெல்லியலார்
குடைய வண்டினங் கடிமலர் குடைவன துனங்கள்.
(இராமாயணம்).(5)

அள்ளிலை வடிவேற் கண்ணுயீங்குறை யலங்கற் றேனான்
முன்னரை முளரி மேய்ந்து முழுநெறிக குவளை மென்று
வள்ளைவாய் குதட்டி மேதிவழை நறுநீழற்

றஞ்சும்

வெள்ளநீர்ப் பழனஞ் சூழ்ந்த மிதிலை நா
டாளும்வேந்தே. (நைடதம்) இந்நாட்டின்
தன்மையும் எல்லா வுயிர்களும் தன்பால் வந்து தங்கி
இன்புற நின்ற வுண்மையும்பிறவும் இவற்றால் இனிது
புலனாதல் காண்க.

என்று மேவர்க்கும் இனிதாய்ப்
பெருவளங்கள்
நன்றமைந்து நிற்பதே நாடு.

எவ்வுயிர்க்கும் என்றுமினிதா நிற்பதே
நாடாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

734 பண்டு பகைபசிநோய் பாண்டிநந்நாட்
டின்றியின்பங்
கொண்டிருந்த தென்னே
குமரேசா—மண்டி
உறுபசியும் ஓவாப் பிணியுஞ்
செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(௪)

இ—ள்.

குமரேசா! பகை பசி பிணி முதலிய சிறுமைகள் யாதும் இன்றி நம் பாண்டிநாடு என் புகழ்வளங்களோடு முன் பொருந்தியிருந்ததெனின், உறுபசியும், ஓவாப் பிணியும், செறுபகையும், சேராது இயல்வது நாடு என்க.

இது, பகை பிணி முதலிய துயரங்கள் யாதும் நாட்டில் தோன்ற லாகாதென்கின்றது.

## 74-ம் அதிகாரம் நாடு.

1893

பண்டு என்றது பாண்டிய அரசர் பாதுகாத்துவந்த காலத்தை. நம் நாடு என்றது உரிமைகருதி. " மழைதொழிலுதவ மாதிரங் கொழுக்கத், தொடுப்பின் ஆயிரம்வித்தியது விளைய, நிலனும் மரனும் பயனெதிர்பு நந்த, நோயிகந்து

நோக்கு விளங்க " என அறிஞரனைவரும் புகழ்ந்துபோற்ற இது. நின்றிருந்தமையை நோக்கி இன்பங் கொண்டிருந்ததென்றும்.

ஓவாப் பிணி=தீராத நோய். ஓவா வறுமையுழந்தாலும் எனவும், ஓ வா நோன்மை எனவும், தாயில் தூவாக் குழவிபோல ஓவாது கூஉம் எனவும் வருவனவற்றுள் இஃதுணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க. ஓவுதல்=தீர்தல், ஒழிதல். பொதுவாகப் பகைஎன்றது செறு என்று விசேடித்தது தெறல் கருதிநிற்கும் அதன் தீமை தெளிய என்க. பசி முதலிய இம்மூன்றும் உயிர்களைத் துயர்ப்படுத்துமாதலால் அவை நாட்டை விட்டுத் தொலையவேண்டும் என்று இது காட்டி நின்றதென்க.

பெருநில மன்னன் இருநிலமடங்கலும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி.

எனவரும் சிலப்பதிகாரமும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. வசி=மழை. அடிகள்

மொழிப்பொருளை இது மொண்டுநிற்றல் காண்க.

மேல், எல்லாவுயிர்கட்கும் தாயகமாய் நின்று இன்பந்தருவதே நாடாம் என்றார்; இதில், துன்பந்தருவன யாதும் அதனிடம் தோன்றலாகா தென்கின்றார்.

மிக்க பசியும், நீங்காத நோயும், அழிவுசெய்யும் பகையும், யாண்டும் பொருந்தாது நடப்பதே நாடாகும் என்பதாம்.

பசி பிணி பகை என்பன உயிர்கட்குத் துயர் விளைக்கும் இயல்பின ஆகலின் அவை இடையே சேர்ந்து இயலுமாயின் நாடு இனிதாக விளங்கா தாதலால் அவை சேராதியல்வது நாடு என்றார்.

இங்குக் குறித்த துன்பக் கூறுபாடுகள் அறவே இல்லாதொழிதல் யாண்டும் இல்லையாதலால் உறு ஓவா செறு என்னும் அடைகளால் அவற்றின் வேறுபாடு தெளிய விளக்கியருளினார்.

* அகத்தணுகி நிற்கும் இயற்கையதாதலால் பசியை முதலிலும், பிணியும் பகையும் ஒன்றற்கொன்று அதனினும் புறத்தகன்று நிற்றலால் அவற்றை அதன் பின்னரும் முறையுற வைத்தார்.

வெண்பா.

ஊறுசெய் படைவாய்தேய வுழுநரும் நீர்கால்
யாத்துச்
சேறுசெய்குநரும் தெய்வத் தொழுதிஞ்
செந்நெல்வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து
நடவுசெய்குநரும் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி
வளம்படுக்குநரும் ஆனூர். என்றபடி
நல்ல நாட்டிலுள்ள உழவர்கள் பல்வகைப்
பொருள்களையும் பெருகச் செய்
வராதலால் அங்குப் பசிநோய் இல்லை என்க. பிணி
இல்லாமைக்கு, மக்கள்
விதிமுறை வழாதொழுகும் இயல்பினராதலும்,
பருவமழை இனிய காற்று தகுதியான
குளிர்வெப்பங்கள் இயற்கை வளம் முதலிய
நலங்களும் ஏது வாகும். கொடையும் படையும்
குணமும் வீரமும் அரசன் உடையனுதல்

பகை சேராமைக்குக் காரணமாம் என்க.

பசிநோய் முதலியவற்றால் யாதும் வருந்தாமல் தன்னிடம் வாழ்வோர் மிக மகிழ்ந்திருக்கும் வண்ணம் ஒரு நாடு நன்கு அமைந்திருக்க வேண்டும் என்பது கருத்து.

நல்ல நாட்டிலுள்ளவர்கள் யாதொரு கவலையுமின்றி என்றும் இன்புற்றிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நம் பாண்டி நாட்டில் உணரப்படும்.

கதை.

பாண்டிநாடு என்பது சோழநாட்டிற்கும் சேரநாட்டிற்கும் இடையே உள்ளதொரு நிலமண்டலம். இது, சந்திரகுல வேந்தர்களாகிய பாண்டியர்கட்கு வழிவழியாக உரிமையாயது. அதனால் வழுதிநாடு எனவும் வழங்கப்படும். இப்பரதகண்டத்தின் தென்பால் எல்லையில் இது சேர்ந்திருத்தலால் தென்னாடு எனவும் இது பெயர்பெற்றுள்ளது. எந்நாடும் எந்நாளும் வியந்துபோற்றத்தக்க சிறந்த பெருமை வாய்ந்தது. சிவபெருமான் முருகக்கடவுள் உமாதேவியார்

என்னும் இம் மூவா முதல்வராய மூவரும் முறையே சோமசுந்தரபாண்டியன், உக்கிரகுமாரபாண்டியன், தடாதகைப் பிராட்டியார் எனப்பெயர்தாங்கி இதன் தலைநகரமாகிய மதுரையிலிருந்து அரசுபுரிந்தனர் என்றால் இதன்பெருமையை எவ்வாறு உரைசெய்தளப்பது.

உலகம் யாவையும் ஈன்றவ ளும்பருள் உயர்ந்த

இலக நாயகி பரஞ்சுடர் சேயென மூன்று
தலைவரான் முறைசெய்த நாடு
இஃதன்றிச்சலதி

சுலவுபாரி லுண்டாகுமோ
அறைகத்தமலதே. என்று புலவர்
புகழ்ந்துபோற்ற இது சிறந்து தோன்றியது.
எல்லாமுடைய இறைவன்

இந்நாட்டையே தமக்கு
உயருடைமையாகக்கொண்டு முறைபுரிந்துவந்த

74-ம் அதிகாரம் நாடு.

1895

மையால் தென்னாடுடைய சிவனே போற்றி என்று மூன்னுடை நின்றார். முற்றத்துறந்த முனிவராகிய மணிவாசகப் பெருந்தகையும் தாம்பிறந்த நாட்டின் பெற்றிதோன்ற இறைமேலேற்றி இதன்பெருமையை யிடை யிடையே பேசி மகிழ்ந்துள்ளார்.

கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி
ஐவாய்க் காப்புவிட் டணிபூண் அணிந்து
விரிசடை மறைத்து மணிமுடிகவித்து
விடைக்கொடி கிழித்துக் கயற்கொடி எடுத்து
வழுதியாகி முழுதுலக களிக்கும்
பொருள் நாயகன். என்று

கல்லாடரும் இவ்வுண்மையை விரித்துச் சொல்லியுள்ளார். இங்ஙனமே நல்லோரெல்லோராலும் புகழ்ந்து போற்றத்தக்க பெருமையை இந்நாடு பொருந்தியுள்ளது. தெற்கே கன்னியாகுமரியையும், வடக்கே வெள்ளாற்றையும், கிழக்கே கடலையும், மேற்கே மலைப்பெருவழியையும் எல்லையாகக்கொண்டு எழிலுற விளங்குகின்றது.

வெள்ளா றது வடக்காம் மேற்குப்
பெருவழியாம்

தெள்ளார் புனற்கன்னி
தெற்காகும்—உள்ளார

ஆண்ட கடல் கிழக்காம் ஐம்பத்தறு காதம்

பாண்டி நாட் டெல்லைப் பதி.

எனக்கம்பர் கூறியதும் ஈண்டுக்

காணத்தக்கது. சிறந்த வீரர்கள் பலர் இசை திசை
பரப்பி இந்நாட்டில்
இருந்து வாழ்ந்துள்ளார். கந்தஞ் செந்தமிழ்த் தெய்வத்திருமொழிக்கு
என்றும் இது சிறந்த நிலையமாயது. பண்டுதொட்டே விழுமிய வளங்கள்
பலவும் வாய்ந்து மேதகவோடு இது விளங்கியுள்ளது. இந்நாட்டைக் குறித்
து பரஞ்சோதிமுனிவர் கூறியுள்ள சிலபாடல்கள்
இதனடியில் வருவன.

கறைநிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்
உறைநிறுத்திய வாளினுற் பகையிரு ளொதுக்கி
மறைநிறுத்திய வழியினுல் வழுதியாய்ச் செங்கோல்
முறைநிறுத்திய பாண்டிநாட் டணியது மொழிவாம். (1)

வரைபடு மணியும் பொன்னும் வைரமும் குழையும்பூட்டி

யரைபடும் அகிலுஞ் சாந்தும் அப்பி யின்னமுதமூட்டிக்
கரைபடு மருதமென்னுங் கன்னியைப் பருவநோக்கித்
திரைபடு பொருணை தீத்தஞ் செவிலிபோல் வளர்க்குமாதோ. (2)

பொதியிலே விளைகின்றன சந்தனம் பொதியி
னதியிலே விளைகின்றன முத்தமந்நதிசூழ்



வெண்பா.

பதியிலே விளைகின்றன தருமம்
அப்பதியோர்
மதியிலே விளைகின்றன மறைமுதல் பத்தி.
(3)
விடையுகைத்தவன் பாணினிக் கிலக்கண
மேனாள்
வடமொழிக் குரைத்தாங்கியன்
மலயமாமுனிக்குத்
திடமுறுத்தியம் மொழிக் கெதிராக்கிய
தென்சொல்

மடமகட்கரங் கென்பது வழுதிநாடன்றே.
(4)

வெம்மையால் விளைவஃகினும்
வேந்தர்கோல் கோடிச்

செம்மை மாறினும் வறுமைநோய்
சிதைப்பினும் சிவன்பாற்

பொய்ம்மை மாறியபத்தியும் பொலிவுங்
குன்றுவாத்

தம்மைமாறியும் புரிவது தருமமந் நாடு.

(5) இன்னவாறே புலவர் பலரும் போற்றப்
பெருவளங்களோடு இது நிலவி நின்றது.
இந்நாட்டு மன்னர்களாகிய பாண்டியர்கள் கொடை
வீரம் நீதி களையுடையராதலால் குடிகள் எல்லா
நலங்களையுமெய்தி இதில் இன்புற்றிருந்தனர்.
இயற்கைவளனும் புலன்களுக்குரிய இனிய
நலன்களும் இயல்பாக அமைந்துள்ளன ஆகலின்
பிணி பகை முதலிய தீமைகள் யாதும்
அணுகாவண்ணம் இந்நாடு பீடுபெற்றுள்ளது.
உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும் சேராது
இயல்வது நாடு என்னும் உண்மைக்குரியதாய்
இஃது உயர்வுற்றிருத்தலை மறுபுலத்தவரும்

மதித்துப் புகழ்ந்துள்ளார்

ஆறெலாம் குதிக்கும் வாளை யலையெலாம் கொழிக்குஞ்செம்பொன்

சேறெலாம் முளைக்குமேதி செய்யெலாம் முகிழ்க்கு நீலம்' நாறெலாம் வளர்க்கும் பூந்தேன் காடெலாம் வளர்க்குஞ் செங்கோல்

சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் மணக்கு மன்றம் (1)

முன்னிவானெலாம் அசுரர்கோன் அழிக்குநாள் முழுதினுமழியாத

கன்னிநாடுசேர் தமிழ்வள நாடெனக் கருதி வானவர்கோமான்

சென்னிவான்றொடு முயர்திரிகூடத்துச் சேர்ந்தநாள் வளமேய

பொன்னி னூடுதென் னூரியநாடெனப் போந்தநா டிந்நாடு.

(குற்றாலத்தலபுராணம்.)

நீண்டகயி லைக்கிறை நிகழ்ந்த அருளாலே
பூண்டமுனி மெய்த்தமிழ் புகன்ற திருநாடு
மூண்ட பகை செற்றுலக முற்றுமர சாளும்
பாண்டியன் நலக்குலவு பாண்டி வளநாடு.

(வாதவூர்ப்புராணம்.)

புண்ணியக் குமரியென்றூ பொருனையென்
றூவாரோரு
நண்ணிய வைவை யென்றூ நயக்கும்
வெண்குடிலையென்றூ



நாடு.

வண்ணிய சாிரண்டும் அறமுத ஞன்குமாகப்
பண்ணிய தவத்த தன்றோ பண்புசால்
பாண்டிநாடு (1)
சம்பந்தங் காதுநீத்த காியமால் முதலோ
ரேதத,
வம்பந்தமாக்குங் கொங்கை யானையை
வயங்கோர் குன்றி
னம்பந்த மறுப்பான் வேட்ப நயந்தரு
தெய்வநாட்டுச்
சம்பந்தம் பெற்ற தன்றோ தரைபுகழ்
பாண்டிநாடு. (2)
எந்தநன்ஞூடுந் தன்னை நோக்குவா னியங்கு

மேகம்

அந்தகன் ஞட்டுமொறி னடிப்பிணிப்
புறுமென் றஞ்சி
மூர்கநன் கமைய நோக்கிப் பொழிதாமுற்று
மேன்மைச்
சந்தமா தவஞ்செய் தன்றுதவாப்
புகழ்ப்பாண்டிநாடு. (3)

மறையுணர் புலவர் பொன்செய்வணிகர்மன்
னவனே போல
நிறைபெரும் புகழ்வேளாளர்
நெருங்கப்பட்டொருகேடின்றி
முறைவிளை வுடைத்தா யம்பொன்முகக்குமா
காம்பல்கொண்டு
குறையறப் பொலிவதம்மா கொற்கையார்
பாண்டிநாடு. (4)

(பெருந் துறைப் புராண ).

கோள்வல் லுளியமும் கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையும் மான்கண மறலா
அரவுஞ் சூரும் இரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க்கு உறுகண் செய்யா

செங்கோற் றென்னவர் காக்குநாடு என
எங்கணும் போகிய இசையோ பெரிதே.
(சிலப்பதிகாரம்)

உளியம்=கரடி. கோள்வல் என்றது
எதிர்ப்பட்டாரைக் கைக்கொள் ளுதலில் வல்ல
என்றவாறு. இயற்கையாகவே பிறப்பிலேயே
பகைப் பிணிப்புள்ள கொடுவிலங்குகளும் தம்முட்
செற்றம் யாதுமின்றி இதில் சேர்ந்திருந்தன
என்பதை இது தெளித்து நிற்றல்காண்க.
இன்னவாறு பலநூல்களும் இந்நாட்டின்
இயல்நலங்களை வியந்து கூறியுள்ளன. பசி பிணி
பகை முதலிய துயர் நிலைகள்யாதும் இன்றி
எல்லாநலங்களுமுடைய தாய் இஃது
உயர்வுற்றிருந்த வுண்மையை இவற்றால்
கொள்க.

உய்த்துணர்ந்து உள்ளநல மெல்லா
முடைத்தாய்ப் பசிபகைநோய்
கோள்ளாத தேநாடாக் கோள்-
கேடொன்றுமின்றிப் பீடுபெற்று நிற்பதே

நாடாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1898 திருக்குறட் குமரேச
வெண்பா.

735 தீதுபகை யேதுமின்றிச் சோழனுயர்
நாடென்றுங்
கோதகன்ற தென்னே
குமரேசா—வாதுமிகு
பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும்
வேந்தலைக்குங்
கொல்குறும்பும் இல்லது நாடு.
(ரு)

இ—ள்.

குமரேசா! கொடுமை பகைமை
குறும்புமுதலிய சிறுமை கள்யாதுமின்றிச் சோழநாடு
என் சிறந்திருந்ததெனின், பல்குழுவும், பாழ்
செய்யும் உட்பகையும், வேந்து அலைக்குங்

கொல்குறும்பும், இல்லது நாடு என்க. எனவே உள்ளது காடாம் என்பதாயிற்று.

நாட்டுக்குத் தீமையாயுள்ளன இவையென்று இது கூறுகின்றது.

தீதும் பகையும் என்க. ஏதும் என்றது சிறிதும் என்றவாறு. உயர்நாடு என்றது "கருவி வானந் தண்டளி சொரிந்தெனப், பல்விதை யுழவிற் சில்லே ராளர், பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல், கழுவுறு கலிங்கம கடுப்பச் சூடி, இலங்குகதிர்த் திருமணி பெறூஉம், அகன் கண்வைப்பின் நாடு" எனப் புலவர் உவந்துபாட உயர்ந்திருந்தமை கருதி. வஞ்சம் களவு முதலிய தீமைகள் இன்றும் இன்றி நின்று நிலவுகின்றதாத லால் என்றும் கோதகன்றதென்றும். வாதுமிகு என்னும் அடையைக்குழு வுக்குக்கூட்டி அதன்பொருளைக் கூர்ந்துணர்ந்துகொள்க.

பல்குழு=பலவகைக்கூட்டம். அஃதாவது சாதிமத முதலிய வேறு வால் இணைந்து தம்மதே சிறந்ததென்று தனித்தனி மதங்கொண்டு முரணி வாதாடும் உணர்வில் குழுவினரை. இக்கூட்டத்தார்

மக்கள் மனநிலையைக் குலைத்து இடரிழைப்பாராதலால் இவரில்லாதொழிவதே நாட்டிற்கு நல்ல தாயிற்று என்க. உட்பகைஎன்றது, கோட்சொல்வோர் வஞ்சகர் கள்வர் வழிப்பறிசெய்வோர் முதலிய புல்லியர்களையும் பன்றி கரடி புலிமுதலிய கொடிய விலங்குகளையும் என்க. உடனிருந்துகொண்டே உயிர்களுக்கும் பயிர்களுக்கும் இடர் விளைத்தலால் இவற்றை உட்பகை என்றார். முன்னவரை ஓர்ந்து ஆராய்ந்து ஒழுத்தொழித்தும், பின்னவற்றை வேட்டை யாடித் தொலைத்தும் நாட்டைப் பாதுகாக்கவேண்டும் என்க.

குறும்பு என்பது சிறுமை, பொல்லாங்கு முதலியவற்றைக் குறித்து ல்லும் அச்செயலுடையாரை இங்கு அது உணர்த்திநின்றது. கொல் என் லும் அடை அவர் கொடிய இயல்பு தெளிய நின்றது. குறும்பைச் சொல்

74-ம் அதிகாரம் நாடு.

லியேயும் சிலர் உடையராயிருப்பராதலால் அவரினும் வேறுபாடு தெரிதற்கு இவரைக் கொல்குறும்பு என்றார்.

மேல், பிணி பசி முதலிய தீமைகள் அணுகாது அமைவதே நாடாம் என்றார்; இதில், கொடியரும் தீயரும் அங்குக் கூடலாகாதென்கின்றார். அவை அருவநிலையினின்று துயரிழைப்பன; இவர் உருவமாய்த் தோன்றி உடற்றிநிற்பர் ஆதலால் உடனுணர வைத்தார்.

பல்வகைத்தாய தீயகூட்டத்தாரும், அணுகியிருந்தே அழிவுசெய்யும் உட்பகைவரும், சமயம் வாய்த்தால் தன் அரசனை வருத்தும் கொல்வினைக் குறும்பரும் இல்லாததே நல்ல நாடாம் என்பதாம்.

குழுவும் பகையும் குறும்பும் இல்லது நாடு எனவே அவையுள்ளது நாடாகாதென்க. கேட்டிற்கு ஏதுவாகிய கோட்டத்தையுடைய கூட்டத் தவரையும் உடனிருந்துகொண்டே இடர்மிகச் செய்யும் கொடியர்களையும்

குற்றமீக்கூர்ந்து அற்றம் நோக்கி நிற்கும்
குறும்பர்களையும் நாட்டில் இருக்கவொட்டாதபடி
அரசன் ஒறுத்து நீக்கவேண்டும் என்றவாறு. பழுதசீர்
நாட்டுக் கமரர்கள் சாதிபற்றுசங் கேதத்தி னீண்டுங்
குழுவுமா றலைக்குங் கள்வர்பொய் குறளைகூறுவோர்
பன்றிமான் முதலாய்க் கெழுவுமுட்பகையும்
அளவுபார்த் தரசைக்கெடுக்குங் கொல்குறும்பரும்
மிக்க, மழை மழையின்மை எலி கிளி விட்டில்
மன்னராற் கோளுமாமைந்தா. என்றபடி நாட்டிற்குத்
தீதாயுள்ள இவை யாதும் இல்லாததுவே நாடாம்
என்பதை இது காட்டி நின்றது.

கள்ளர் பயம், விலங்கினங்களின் கலக்கம்
முதலிய அல்லல் யாதும் இன்றி அல்லும் பகலும்
மக்கள் இனிது செல்லும்படியாக ஒருநாடு செம்
மையிற் சிறந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

அத்தஞ் செல்வோர் அலறத் தாக்கிக்
கைப்பொருள் வெளவுங் களவேர்
வாழ்க்கைக்

கொடியோ ரின்றவன் கடியுடை
வியன்புலம்

உருமும் உரறாது; அரவுந் தப்பாது

காட்டு மாவும் உறுகண் செய்யா. என்று
தொண்டைமானாட்டைக் குறித்து
உருத்திரங்கண்ணனார் உரைத்துள்ளதும் ஈண்டு
உணரத்தக்கது.

மக்கள் அஞ்சி அயரும்படியான வஞ்சமக்களும் வல்விலங்குகளும் மருவியில்லாத நாடே பெருமையுள்ளதாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேரநாட்டின்கண் உணரப்படும்.

238



## கதை.

சேரநாடென்பது இப்பரதகண்டத்தின் தென்மேற் கோடியிலிருப்பது. பண்டுதொட்டு இன்றுகாறும் சேர மன்னரிருந்து ஆட்சிபுரிதற்கு இடமுள்ளதாதலால் இது சேரநாடு என நின்றது.

இது வடக்கே பழனி மலையையும், தெற்கே கடற்கரையையும், கிழக்கே தென்காசியையும், மேற்கே கோழிக்கோட்டையும் எல்லையாகக் கொண்டது.

வடக்குத் திசைபழனி வான்கீழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக்
கோடாம்—கடற்கரையின்
ஓரமே தெற்காகும் உள்ளெண் பதின்காதம்
சேர நாட் டெல்லையெனச் செப்பு. எனக்

கம்பர் செப்பியுள்ளதனாலும் இது தெளியலாகும். இதில் சிறந்த வளங்களையுடைய மலைகள் பல தொடர்ந்துள்ளன ஆகலால் மலையாளம் எனவும் இது வழங்கப்படும். நில வளத்தோடு நீர் வளத்திலும் மிகச்சிறந்தது. தெங்கு கமுகு முதலிய மருத நிலப்பொருள்கள் இதன்கண் எங்குங்காணலாம். செந்நெல் செவ்விளநீர் சிறுபயறு வாழை கரும்பு அரக்கு இறால் மயிற்பீலி யானைக்கோடு முதலிய பல்வகைப் பொருள்களும் இங்கு மலிந்துள்ளன . வேழமுடைத்து மலை நாடு என்று ஒளவையார் இதனை வியந்து கூறியுள்ளார். இந்நாட்டு மன்னர்

வழிவழியாய் நின்று விதிமுறை வழாது அரசுபுரிந்து வருகின்றனராதலால் குடிகளெல்லாம் பெருமகிழ்வுடையராய்ப் பெருகிவாழ்கின்றனர். பல நூற்றாண்டுகட்குமுன்னர்ச் சில கொடிய குழுவினர் இடையிடையே திரண்டு குடிகளுக்கு இடர் செய்துவர அக்காலத்து அரசுபுரிந்திருந்த மன்னன் அவரனைவரையும் ஒறுத்தொழித்துத் தீயவர்க்கெல்லாம் மிகத் தீயவனாய் நின்று குறும்பர் பலரையும் குறித்தறிந்து தொலைத்து இனி எக்காலத்தும் இக்குக் கொடியர்கள் புகலாகாதென முடிவு செய்து கூறி நாடு வளமுற நலஞ்செய்து வந்தான். " நீ புறந்தருதலின் நோயிகந் தொரீஇய, யாணர் நன்னாடு" எனப் புலவர் போற்ற அதன்பின் இது பொலிவுற்றிருந்தது. செம்மையானன்றித் தீநெறி யானெவரும் சேரலாகாதெனச் சீர்செய்து நின்ற அச்சேர மன்னனைக் குறித்து மாடலன் மதுரைக்குமரனார் என்னும் புலவர் பாடிய பாடல் ஒன்று இதனடியில் வருகின்றது. பொருளைக் கருத்தூன்றிக் கருதிக் காண்க.

எங்கோ னிருந்த கம்பலை மூதூர்

உடையோர் போல இடையின்று குறுகிச்
செம்மலுளைவை யன்னூர்ந்து புகுதல்

## 74-ம் அதிகாரம் காடு.

1901

எம்மண வாழ்க்கை இரவலர்க் கெளிதே
இரவலர்க் கெண்மை யல்லது புரவெதிர்ந்து
வான நாண வரையாது சென்றோர்க்கு
ஆனு தீயும் கவிகை வண்மைக்
கடுமான தோதை துப்பெதிர்ந் தெழுந்த
நெடுமொழி மன்னர் வினைக்குங் காலைப்
பாசிலைத் தொடுதத வுவலைக் கண்ணி
மாசு ணுடுக்கை மடிவாய் இடையன்
சிறுதலை யாயமொடு குறுகல் செல்லாப்
புலிதுஞ்சு வியன்புலத தற்றே
வலிதுஞ்சு தடக்கை யவனுடை நாடே.

அவனுடைநாடு இரவலர்க்கு எண்மையல்லது, நெடுமொழி மன்னர் இனைக் குங்காலே புலிதுஞ்சு வியன்புலத் தற்றே எனக் கூட்டிக் காண்க. சிறுதலை ஆயம் என்றது சிறிய தலையையுடைய ஆடுகளை. இதனால் மேற்குறித்த வண்மையும் இந்நாட்டின் தன்மையும் இனிது புலனாதல் காண்க. இடையன் ஆடுகளுடன் புலிதங்கும இடத்தையடைய அஞ்சுவதுபோல் குறும்பர்களுடன் எவனும் இங்குப் புகுதற்கஞ்சுவன் என இதில் உரைத்திருத்தலை உய்த்துணர்ந்துகொள்க. களவும் வஞ்சமும் பிறநாடுகளிலுள்ளவளவு இங்கு இல்லை என்பதை இன்றுங் காணலாம். அச்சம் யாதுமின்றிக் குடிகளிங்கு அமைதியோடு வாழ்ந்து வருகின்றனர். சுகிக்கச் சுகீந்தரம்; இருக்கப் பாறக்கை என வழங்கப்படுகின்றது. இங்குக் குறித்த இவ் இரண்டும் இந்நாட்டிலுள்ள வூர்களெனக. இதில் போறாறு என்று பெயர்பெற்ற நதியிருமங்கினும் பெருவளங்கள் சூழ்ந்து சிறந்து விளங்குகின்றது. .

கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகந் திலகம் நறுங்கா ழாரம்
முதிர்பூம் பரப்பி னொழுகு புனலொழித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் பாட—
நெடியோன் மார்பில் ஆரம் போன்று

பெருமலை விலங்கிய பேரியாற் றடைகரை. எனச் சோழுனிவரால் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. கொடுங்குழுவினரும் கொல்வினைக் குறும்பரும் கூடாதொழிந்ததால் கவலைவுடையதாய் இது நிலவுகின்றது. பல்குழுவும், பாழ்செய்யும் உட்பகையும், வேந்தலைக்கும் கொல்குறும்பும், இல்லதுநாடு என்னும்உண்மைக்கு உரிமையாய் இங்கிது இலைக்கின்றது.

வெண்பா.

தொறுத்தவயல் ஆரல் பிறழ்நவும்
ஏறுபொருதசெறு உழாது வித்துநவும்
கரும்பின் பாத்திப் பூத்த நெய்தல்
இருங்கண் எருமையி னிரை தடுக்குநவும்
கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதா ஆம்ப லார்நவும்
ஒலிதெங்கின் இமிழ் மருதிற்
புனல்வாயிற் பூம் பொய்கைப்
பாடல்சான்ற பயங்கெழு வைப்பி
னாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழிபாக்கம்
விரிபூங் கரும்பின் கழனிபுல் லெனத்
திரிகாய் விடத்தரொடு காருடைபோகிக்
கவைத்தலைப் பேய்மகள் கழுதூர்ந் தியங்க
ஊரிய நெருஞ்சி நீறாடு பறந்தலைத்

தாதெரு மறுத்த கலியழி மன்றத்
துன்ன மழிய வூக்குநர் மிடறபுத்
துன்னூர் பணிக்கும் பாழாயினவே
காடே கடவுள் மேன புறவே
ஒள்ளிழை மகளி ரொடு மள்ளர்மேன
ஆறே யவ்வனைத் தன்றியு ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடிபுறந் தராஅக்
குடிபுறந் தருநர் பாரமோம்பி
அழல்சென்ற மருங்கின் வெள்ளியோடாது
மழை வேண்டு புலத்து மாரி நிற்ப
நோயொடு பசியிகந்து ஒரீஇப்
பூத்தன்று பெரும நீகாத்த நாடே.
(பதிற்றுப்பத்து.) இஃது இமையவரம்பன்
நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் என்
பவர் பாடியது. குழுவும் பகையும் குறும்பும்
புகாமல் அம்மன்னன் கோமுறைபுரிந்ததும், மன்னிய
வனங்களோடு இச்சேரநாடு மருவியிருந்ததும் பிறவும்
இதனால் இனிது புலனாதல் காண்க.

புன்மை, தொன்மை பொருந்தாமல் என்மழயர்
தன்மை யமைந்ததே நாடு.

74-ம் அதிகாரம் நாடு.

**1908**

தீயகூட்டம் இல்லாத நாடே சிறந்து விளங்கும் என்பது இதனுள் கூறப்பட்டது.

---

**736** மாறா வளஞ்சேர் வளவனமர் நாடுயர்வு
கூறநின்ற தென்னே
குமரேசா—வேறொன்றும்
கேடறியாக் கெட்ட விடத்தும்
வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.
(கூ)

இ—ள்.

குமரேசா! சோழநாடு வளமிகுதியால் எல்லா நாட்டினும் என் தலை சிறந்து நின்றதெனின், கேடு அறியா கெட்டவிடத்தும் வளம் குன்றா நாடு, நாட்டில் தலை என்ப என்க.

இது, தலைமையான நாட்டின் தன்மை கூறுகின்றது.

மாறுவனம் சேர்என்றது வான்மாறினும் தான்மாறாது வளஞ்சுரந்து வந்த மைகருதி. வளவன் அமர்நாடு=சோழனமர்ந்திருந்தநாடு; சோழநாடெனக. அச்சேர்தல் அமர்தல்களால் சிறந்து எவரும்புகழ்ந்துசொல்ல விளங்கின்ற தாதலால் உயர்வு கூறுகின்றதென்றும். "அந்தண்காவிரி வந்துகவர்பூட்டத் தோடுகொள்வேலின் தோற்றம்போல, ஆடுகட்கரும்பின் வெண்பூநுடங் கும், நாடெனப்படுவது நினதே" என அறிஞர் உவந்துபாட இஃது உயர்ந் துள்ளமை காண்க. வேறு ஒன்றும்=நல்லதல்லது பிறிதியாதும்.

அறி குன்று என்னும் வினையடியாகப் பிறந்த எதிர்மறைப் பெயரெச் சங்கள் அறியாத குன்றாத என நிற்கவேண்டியன ஈறுகுன்றி அடுக்கி நின்று நாடு என்னும் பெயர்கொண்டு முடிந்தது. கேடு அறியாத நாடு, வளங்குன்றாத நாடு நாட்டின் தலை என்று காண்க. தலை=தலைபோல் சிறந்ததென்றவாறு. "உருபு பல அடுக்கினும் வினை வேறடுக்கினும், ஒரு தம் எச்சம் ஈறுற முடியும்" என்னும் இயல் விதியையும் கண்டு எண் ணிக்கொள்க.

கேடு அறியாமையே ஒரு நாட்டிற்குப் பீடுடைமையாதலால் அதனை முதலில் வைத்தார். எவ்வளவு நலமுடையதாயினும் பகை பிணி முத லிய கொடுமைகள்தோன்றின் நாடு நிலைகெடும் ஆதலால் அங்ஙனம் கெட்ட விடத்தும் தன் வளங்குன்றாதிருத்தலே தலைமையான நாட்டின் தன்மை யாம் என்றார். உம்மை இழிவு சிறப்பு.

வெண்பா,

மேல், கொடியவர்கள் இன்மையே நாட்டிற்கு
நன்மையாம் என்றார்; இதில், என்றும்
நிலைகெடாத தன்மையுடையதே
தலைமையானது என்கின்றார்.

என்றுங் கெடுதலறியாததாய், ஒரோவழி
ஒருகாரணத்தால் அரிதிற் கெட்டதாயினும் தன்வளங்
குன்றாததாயுள்ள நாடே எல்லா நாட்டினும்
சிறந்ததென்று தெளிந்தோர் சொல்லுவர் என்பதாம்.

சேர்வது நாடு, விளைவது நாடு, நேர்வது நாடு,
இயல்வது நாடு, இல்லது நாடு என இதுவரையும்
பொதுவாக நாட்டின் நல்லிலக்கணம் கூறி வந்து
இதில் தலைமையான நாட்டின் தன்மை
இன்னதாமென நிலைநாட்டியின்றார். அழிவுகள்
யாதும் உறாமல் என்றும்
பெருவளங்களோடு நிறைந்திருக்கும் நாடே உயர்வுடையதாம்
என்றவாறு.

சீரின்வந்த நிமிர்பரிப் புரவியும்

காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்
நீர்நாப் பண்ணு நிலத்தின் மேலும்
ஏமாப்ப இனிது துஞ்சிக்
கிளைகலித்துப் பகைபேணாது
கொலைகடிந்து களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
நல்லானொடு பகடோம்பியும்
நான்மறையோர் புகழ் பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசை யுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய் மொழிந்து

"தம்மவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது"

## 74-ம் அதிகாரம்

கொடுப்பதூஉங் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசுந்
தொல் கொண்டித் துவன்றிருக்கைப்
பல்லாயமொடு பதி பழகி
வேறு வேறுயர்ந்த முதுவாயொக்கற்
சாறயர் மூதூர் சென்று தொக்காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேயம்.

நாடு.

எனவழங்க நின்றதுபோல்

விளையுள் முதலிய வளங்கள் மிக்கு ஒருநாடு விளங்கி நிற்குமாயின் எல்லா நாட்டினும் ம தலைமையானதென்று புலவர் புகழ உயர்வோடு அது நிலைபெறும் என்க.

யாதொரு தீதுமின்றி என்றும் வளங்குன்றாமல் நின்று நிலவும் நாடே இவ்வுலகில் சிறக்கதாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை சோழநாட்டின்கண் உணரப்படும்.

கதை.

சோழநாடு என்பது தொண்டை நாட்டிற்கும் பாண்டி நாட்டிற்கும் இடையேயுள்ளதொரு நிலமண்டலம். இது பல்லாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தே எல்லா நலங்களுமுடைய தாய்ச் செல்வஞ் செழித்துச் சிறந்து விளங்கி வருகின்றது. ஆடசேசுரன், கனகசூடாமணி, ஆதித்தவர்மன், வீரகேசரி, விக்கிரமன், அரிஞ்சயன், சசிசேகரன், இராசராசேசுரன் முதலிய சோழமன்னர் பலரிருந்து அரசு புரிதற்கு நிலயமாயசாகலால் சோழநாடு என இது நிலவி நின்றது. கிழக்கே

வெண்பா.

ஊர்கள் அதன் மணலை உற்றுநோக்கி வெள்ளம் இன்று வந்துவிடும் என்று
தெளிந்துபோய் உழுதல் முதலிய தம்
தொழில்களைச் செய்குவர். இவ் வுண்மையை "இன்று வயலுழுவீர் புதுநீர் வரும் என்று வரிமணலேகுறி கூறிட, அன்றுவருகுட காவிரி நாடு" என்று வில்லியும் சொல்லியுள்ளமை காண்க. இங்ஙனம் பல்வகை வளங்களும் சுரந்து, வருந்தி வந்தவரெவர்க்கும் பெருந்துணையாய் நின்று பேணி வருகின்ற இந்நாட்டைக் காணியாகக் கொண்டிருந்த சோழமன்னர் அறிவும் வீரமுமுடையராய் முறைசெய்து வந்தனர். தெய்வத் திருக்கோயில்களும் அறநிலையங்களும் பல இசைந்து நிலை பெறச்செய்தார். அவர் ஆட்சித் திறத்தால் இது மிக மாட்சியுற்று நின்
றது. குடிகள் யாதொரு கலக்கமுமின்றிச்

செழித்துவர அவர் செங்கோல்
செலுத்தி வந்தார்; ஆகலால்
கொளக் கொளக் குறைபடாக் கூழுடை
வியனகர்
அடுதீ யல்லது சுடுதீ யறியாது
இருமருந்து விளைக்கும் நன்னாடு. எனவும்;
சோழவளநாடு சோறு
டைத்து எனவும் புலவர்கள் புகழ்ந்து பாட இது
விளங்கி நின்றது. புனல்
வளங்கொண்டு பொன் கொழிக்கும்படி
பொருந்தி நிற்றலால் இன்றும்
பொன்னிநாடு என்று இது
போற்றப்படுகின்றது. யாதொரு கேடும்
இன்றிக் குன்றா வளத்தோடு இது கூடியிருத்தலைக்
குறித்துப் புலவர் பல
ரும் பாடியுள்ளார். கேடு அறியாக்
கெட்டவிடத்தும வளங்குன்றா நாடெ
ன்ப நாட்டின் தலை என்னும் உண்மைக்கு இது,
உரிமையாய் நின்றது.
புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்

சாந்த காவிரி மரக்கோன் மலிநீர்
மன்பதை புரக்கு நன்றநாடு. எனக்
கோவூர்கிழாரும்,
பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்
தண்புனற் படப்பை. என ஆலூர்
மூலங்கிழாரும்,
கோடையாயினுங் கோடிவளர்தரும்
காவிரி புரக்கு நன்றநாடு. என
நல்லிறையனாரும்,
மண்ணுவதுஞ் சோழமண்டலமே.
என ஔவையாரும்,
கரியவன் புகையினும் புகைக்கொடி
தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் பழவிறலூர்களும்

74-ம் அதிகாரம் நாடு.

பொங்கழி யாலைப் புகையொடு பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்றும்
ஊரிடையிட்ட நாடு. என
இளங்கோவடிகளும்,

வைகல் யாணர் நன்னாடு. என மாடலன்
வான் பொய்ப்பினுந் தான்பொய்யா

மதுரைக்குமரனாரும்

மலைத்தலைய சடற்காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்
விளைவறா வியன் கழனிக்
காய்ச் செந்நெற் கதிரருந்து
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டு நிழற் றுயில் வதியும்
கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ் மஞ்சள்

இனமாவின் இணர்ப் பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
அகனகர் வியன் முற்றத்துச்
சுடர் நுதன் மட நோக்கின்
நேரிழை மகளிர் உணங்குணாக்கவரும்
கோழியெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின்றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல் லூர் நெடுஞ்சே
ரணாடு.எனஉருத்திரங்கண்ணனாரும்,

. .

தாமரை யொண்கிழங்கு விசவியோ ராங்குத்
தருமலங் குமிளிசக் கொழுமுகந் தியக்கிய
பழஞ் சேற்றுப் பாப்பிற் பருமுத லெடுத்து
நெடுங்கதி ரிணைஞ்ச வாங்கிக் கால்சாய்த்து
வாளிற் றுமித்த சூடே மாவின்
அிணைக்கைக்கு பிறக்கிய போர்பெய்

எருத்தின்
கலையடி வைத்த வுண்டுவே மருதின்
239
1908 திருக்குறட் குமரேச
வெண்பா.

கொழுங்கிழற் குவைஇய
குப்பையோ டனைத்தினும்
பலர்மகிழ் துங்க உலகு
புரந்தரூஉம்
மாவண் சோழ நாடுர் தோறும்
ஓரோர் அரசன் வழி வாழிய
நெடிதே. என ஆசிரிய மாலையாரும், வேறு
பிறரும் இந்நாட்டைக்குறித்துப் புகழ்ந்து
பாடியுள்ளார். இவற்றாலும் இதன் பழைய
நிலைமையும், கேடு அறியாத பீடுடைமையும்,
வளங்குன்றாது விளங்கிநின்ற தலைமையும்
பிறவும் இனிது தெளியலாம்.
தருநிதிபோல் நின்றின்பந் தந்தென்றுங்

கோடாப்

பெருமையதே நாடாகும் பேண்.

நிலையான வளமுடைய நாடே எவற்றினும தலையாம் என்பது இதனல் கூறப்பட்டது.

---

737 நீரானும் நீண் மலையும் நேர்ந்த நிடதஞ்சீர்

கூரநின்ற தென்னே குமரேசா—சாரும்

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்

வல்லரணும் நாட்டிற் குறுப்பு (எ)

இ—ள்.

குமரேசா! நீர்நிலே, அரண், மலே, என்னும் இவற்றைத் தனக்கு உரிமையாகக்

கொண்டிருந்த நிடதம் என் மிகப் பெரு மைபெற்று நின்றது எனின், இருபுனலும், வாய்ந்த மலையும், வரு புனலும், வல் அரணும் நாட்டிற்கு உறுப்பு என்க.

இது நாட்டிற்கு உறுதியாக அமைந்திருக்கவேண்டிய உறுப்புக்கள் இவையென உணர்த்துகின்றது.

நீர் அரண் என்றது, வான்மாறி நின்று வறந்தாலும் தன் னிடத்து—நீர் மாறாச் சீர்சேர் நிடதமே; என நின்று திகழ்ந் தமை கருதி. நிடதம் சீர்கூர நின்றதென்றது புனல்வள முதலிய வல்லுடைமைகளால் எங்கும் அது புகழ் மிகுந்திருந்தமை யான் என்க. சாரும் = இனிதாயுறுகின்ற.

74-ம் அதிகாரம் காடு.

1909.

இருபுனல் என்றது இருவகை நீர் நிலைகளை; அவை கிணறு கேணிகளும், ஏரியும் நதிகளுமாம். கீழ் நீர் மேல் நீர் என முறையே இவை கூறப்படுமாதலால் இரு புனல் என்றார். கீழ் நீர்— கீழிருந்து ஊறுதலாலாயது; மேல் நீர் = மேலிருந்து வீழுதலா லாயது என்க. பல்வகை வளங்களும் மல்கி ஒரு நாடு நிலவுதற்கு ஏரி முதலிய நீர்நிலைகள் மு கலில் சிறிய கா ரணமாகுமாதலால் இரு புனல் என முன்னதாக அஃது எண்ண நின்றது.

வாய்ந்த என்றது நலங்கள் பலவும் அமைந்த என்றவாறு. வரு புனல் = வருகின்ற நீர் ; அஃதாவது அருவி யாறுகள். இது வினைத்தொகை. வல் அரண் என்றது கோட்டை கொத்தளங் களையுடைய நகரங்களை.

மேல், சிறந்த நாட்டின் இயல்பைத் தெரித்துக்கூறினர் ; இதில் அதற் கு

அமைந்திருக்கவேண்டிய உறுப்பின் சிறப்புக் கூறுகின்றார்.

பொய்கை முதலிய நீர் நிலைகளும், வளம்பொருந்திய மலை களும், அருவி நதிகளும், வலிய மதிலமைந்த நகரங்களும், நாட்டிற்கு அவயவமாம் என்பதாம்.

கை கால் முதலிய உறுப்புக்கள் ஓர் உடலுக்கு ஆதாரமாய் நின்று எப்படி உயிரை வைத் தருகின்றனவோ அப்படியே மலை களும் நதிகளும் மலர்த் தடங்களும் நிலையமை நகர்களும் உறுப் பாய் நின்று ஒரு நாட்டிற்குச் சிறப்பைத் தரும் என்றவாறு.

மலைவள முதலிய நலங்களில்லையாயின் ஒரு நாடு உடல்போல் சிறப்பற்றிருக்கும் என்பது குறிப்பு.

உறுப்பற்ற

இருபுனல் வாய்ந்த மலைவரு புனலு மிடலிய நகர்களும் உடைத்தாய்ப்

பெருக எப் பொருளும் ஒழிவற விளக்கும் பெருங்குடிகளுங் கலங்களாற் பொருள் பல ஈட்டுஞ் செல்வரும் மறையோர் புரையறு தவத்தினர் துறவோர், மருளறு கலைஞராதியோர் பலரு மன்னிவாழ்ந்திருப்பது நாடு. என்றதும் ஈண்டு நாடத்தக்கது.

நிலவளமும் மலைவளமும் நீர் வளமும் எங்குந் தனக்கு உரிமை யாக வுடைய நாடே என்றும் பெருமை யெய்தி நிற்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உணரப்படும்.

நிடத நாட்டின்கண் 1910
திருக்குறட் குமரேச வெண்பா.

கதை.

நிடதம் என்பது இப் பரத கண்டத்திலே மேருமலையின் தென்பாலுள்ளதொரு தேயம். வேறு எங்கு ங் காணமுடியாத மலை வளங்களைத்

தன்க்குத் தனி உரிமையாக இஃது அமையப் பெற்றது. இமயம் மந்தரம் ஏமகூடம் நீலம் விந்தம் கைலை கந்தமா தனம் நிடதம் என்னும் குலமலைகளெட்டனுள் நிடதமலை இதன் கண் தலைமையாக நிலவி நிற்றலால் அதன் பெயரால் இது நிடத நாடு எனப் பெயர் பெற்றுநின்றது. இது நளனுடைய முன் னோர்களாகிய சதசித்து தர்மநேத்திரன் சுப்பிரீதன் சித்திர ரதன் சசிவிந்து பிருதுகன்மன் கவசன் விதர்ப்பன் விச்சுவசமன் சுமந்து முதலிய மன்னர் பலரும் மன்னி நின்று இன்னருளோடு பேண இசைவுற்றிருந்தது. இதன் தலை நகரம் மாவிந்தம். இதிலிருந்து தான் நளன் முதலிய அரசரனைவரும முறைசெய்து வந்தனர். கங்கைநதி இதிற் கலந்து பாய்கின்றதாதலால் செழுத்த வயல் விளைவுகளும் செழித்த மலர்ச் சோலைகளும் எங்கும் தழைத்துள் ளன. என்றும் குன்றாத நீர் நிலைகள்

இதன்கண் எங்குங் காணப் படுகின்றன. இந்
நாட்டவர் அழகிலும் திருவிலும் அறிவிலும்
அருளிலும் மிகச் சிறந்தவர்.

உருவில் மாக்களில் வேனில்

வேட்கு உடைகுநரில்லை

பொருளில்லார் களில் தனதனைப்
பொருவிலா ரில்லை

தெருளில் மாக்களில் சேடனிற்
றாழ்குந ரில்லை

யருளில்லார்களில் ஐந்தரு நிகர்க்கலார்
இல்லை.

என்று இது சொல்ல நின்றது. இந்
நாட்டில் தலைமை பெற்று நிற்கும் நிடதமலை
அளவிடலரிய பெருவளங்களை யுடையதாய்ப்
பொலிவுறுகின்றது. சிதாந்தம், சாருகுந்தம,
சுசிலோத்தமம்,மணி கணம், குரூடி,
சிலாத்திரி, விருக்கவாறு, உருக்குமவித்து
வாறு, மந்தாவேணுமாறு, மேககிரி,

தேவாகம், சசிதரம், என இசை பெற்ற பன்னிரண்டு மலைகள் அதன் துணைகளாக இதில் இணைந்து எண்ணப்பட்டுள்ளன. அம் மலைகளிலிருந்து அருவிகள் என்றும் பெருகியோடுகின்றன. சிறந்த நீர் நிலைகள் உயர்ந்த பொழில்கள்

விளைந்த மலைகள் முதலிய வளங்கள் பல பொருந்தியிருத்தலால் அழகிய அவயவங்களையுடைய விழுமிய உடல்போல் இது மிருக்க



பொலிவோடு விளங்கியுள்ளது. இரு புனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு என்னும் உண்மைக்கு உரிமையாய் இங்கு இஃது உயர்வுற்று நின்றது. இந்நாட்டைக் குறித்துப் புலவர் பலர் புகழ்ந்து கூறியுள்ளார். சில இங்கடியில் வருவன.

கங்கை யென்றுல கேத்திய
கடவுள்மா நதிவெண்
சங்குருளுநீர்த் தலறிய தடம்பணை
தவழ்ந்து
கொங்குயிர்த்தபூந் தடத்துலாய்க்
குளம்பல நிரப்பி
அங்கண்மா நிலத் தமிழ்தெனப்
பரந்ததை யன்றே. (1)
ஒழுகு தீம்புனல் சிறைசெயும்
ஓதையும் உழுநர்
குழுவின் சும்மையும் உழத்தியர்
குரவையொலிப்பும்
கழனிவாழ்தென வான்முளைவித்துநர்
கலிப்பும்
மழை முழக்கொடு மாறு
கொண்டொலித்தன மாதோ. (2)
விழுக்க அஞ்சிறை வண்டின மிதிப்ப
மெல்லரும்பு
கிழிந்து வார்தரு தேறலுங்

கிளர்கிளைப் பலவின்

பழங்கனிந்து வீழ் தேறலும்

பழனங்கடோறும்

வழிந்து பாய்தலின் வானுற

வளர்வன செந்நெல். (3)

பூமலி தடங்கடோறும் புனல்துறை

மகளி ரீட்டம்

காமரு கழனிதோறும் கடைசியர்

குரவை யீட்டம்

தேமலர்ச் சோலை தோறும்

செழுங்குயிற்றொழுதி யீட்டம்

கோமறு கிடங்கடோறுங்

குணில்பொரு முரசினீட்டம்.4

பொரியரைத் தேமா தெற்றிப்

பூங்கனி யிழிந்ததேனும்

விரிதலை யாம்பையீன்ற மென்பழ னு

குத்த தேனும்

முருகவிழ் சுளைவாய் விண்ட

முட்புறக்கனியின் தேனும்

குருகுபாய் தடமும் யாறுங்
குறைவறப் பெருகுமன்றே.5
கடல்படு மமுதும் மல்லற்கான்படும்
அமுதும் ஒவ்வுந்
தடவரை யமுதும் ஒன்றித்
தலைமயக்குற்ற வாற்றால்
உடைதிரை யமுதமொன்றே
யுடையவின்னுடுகொல்லோ
விடத்நாடதற்கு நேரா
கிகழ்த்தலாங் தகைமைத்தம்மா. 6. 1912
(அதிவீரராமபாண்டியன்)

திருக்குறட் குமரேச வெண்பா.

காமர் கயல்புரளக் காவி
முகைநெகிழத்
தாமரையின் செந்தேன்
தளையவிழ—பூமடந்தை

தன்னாட்டம் போலுந் தகைமைத்தே
சாகாஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.
(புகழேந்தி)

இவற்றால் மேற்குறித்த நிடத நாட்டின் இயல்பும் வலியும் உயர்வும் இனிது புலனாதல் காண்க.

பல்வகைய காப்பும் பதிந்து
பயின்றார்க்கு
நல்லரணாய் நிற்பதே நாடு.

நாட்டுக்குரிய அவயவங்கள் இவையென்பது இதனால் கூறப் பட்டது.

---

738 மண்டுபொருள் இன்பவளம்
வாய்ந்தன மாங்கதமேர்
கொண்டுயர்ந்ததென் னே
குமரேசா—மிண்டு
பிணியின்மை செல்வம் விளைவின்பம்
ஏமம்

அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.
(அ)

இ—ள்.

குமரேசா ! பொருளும் இன்பமும் வளமும் வாய்ந்த எமாங்கத நாடு என் அழகெய்தி உயர்ந்தது எனின், பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் எமம் இவ் ஐந்து நாட்டிற்கு அணி என்ப என்க.

இது, காட்டுக்கு அழகு இவை என நாட்டுகின்றது.

மண்டுபொருள் = மிக்கசெல்வம். எமாங்கதம், இன்பவளம் வாய்ந்து எர்கொண்டு உயர்ந்ததென்றது முழவுஞ் சங்கமும் மூன் றில் முழங்குவ, விழவும் வேள்வும் விடுத்தலொன்றின்மையாற்,

புகழலாப்படித்தன்றிது பொன்னகர்,
அகழ்தன் மாக்கடலன்ன தொர் சும்மைத்தே.

என எங்கும் பொருந்த இந்நாடு இருந்தமை

கருதி என்க. மிண்டு = துயர் மிகுிய; இது பிணிக்கு அடை.

பிணி இன்மை = நோய் இல்லாமை. எல்லாரும் தமக்கு உடைமையாக விரும்புகின்ற செல்வத்தினும் பிணியின்மையை நாட்டிற்கு அழகு என முதலில் காட்டிவைத்தது என்னையெனின்,

74-ம் அதிகாரம் நாடு.

1913

நோயற்றவாழ்வே குறைவற்ற செல்வம் என உரைபெற்று நிற்கும் அதன் உயர்வு கருதியென்க. பிணி இல்லா நிலையை ஓரோ வழி அணிபெறப் பெற்றிருப்பினும் செல்வ முதலியன இல்லை யாயின் அதனால் பயனில்லையாதலால் அவற்றின் உண்மையை உடனுணரவைத்தார்.

ஏமம் என்றது பாது காவலே. அது,

புதைய 'ல் இன்பம்
பொன் முதலியவற்றைப்புமுணர்த்திவரும்.
எமமே சேமங்காவல் இன்ப ம்பொன் இ
ரம்வமையல் என்பது நிகண்டு. எம முரசம்
இழு மென முழங்க; எல்லா வுயிர்க் கும்
ஏமமாகிய நீர் எனப் புறத் திலும், காமமறியா
எம வாழ்க்கை எனப் பதிற்றுப்பத்திலும,
இருகரை ஏமத்து வரைபுரையுருவின் எனப்
பரிபாடலிலும், இர வுதலெ பெயரும் எம
வைகறை என மதுரைக் காஞ்சியிலும், எம
இன்றுணை எனச் சிறுபாணாற்றிலும்,
சேவலங்கொடியோன் காப்ப, ஏமம்வைகல்
எய்தின்றாலுலகே எனக்குறுக்தொகையிலும்,
காவல் என்னும் பொருளில் இது
மேவியுள்ளமை காண்க.

மேல், காட்டிற்த அவயவம்
இவையென்று கூறினர்; இதில், அதற்கு
அழகு இன்ன என அருளுகின்றார்.

நோயில்லாமையும் செல்வமுடைமையும் விளைவும் இன்பமும் பாதுகாவலும் ஆகிய இவ் ஐந்தினையும் நாட்டிற்கு அழகென்று நல்லோர் சொல்லுவர் என்பதாம்.

இவ் ஐந்தும் அழகென்றதனால் இவைகொள்ளாத நாடு அழகு இல்லாததாய் இழிவுறும் என்பதாயிற்று.

ஐந்தும் என்று முற்றும்மை கொடுத்துக் கூறாதது மற்றுஞ் சிலவுள்ளனவும் கொள்ளவைத்தவாறும்.

செல்வம் விளையுள் பல்வளஞ் செங்கோல்
கொல்குறும் பின்மை
கொடும்பிணியின்மையென்
றிவ்வகையாறும் நன்னாட் டமைதி.

எனப் பிங்கலந்தையார் கூறியுள்ளதும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

வெண்பா.

பிணி முதலிய துயரின்மையும்,
பொருள் முதலிய நலனுண்
மையும் ஒரு நாட்டின் உயர்நிலைக்குக்
காரணமாகுமாதலால் அவ்
விரண்டையும் ஒருங்கு காண வைத்தார்.
பிணிஇன்மை நில
இயல்பாலும்,
செல்வவிளைவுகள் வினைநலத்தாலும், இன்பம்
பொறி
நுகர்வாலும் ஏமம் அரண்படைகளாலும்
அமையப்பெறும் என்க. விழுக்கலஞ்
சொரியச் சிந்தி வீழ்ந்தவை
யெடுத்துக்கொள்ளா.
ஒழுக்கினர் அவர்கள் செல்வம் உரைப்பரி
தொழிகவேண்டா
பழுக்குலைக் கமுகுந் தெங்கும் வாழையும்

பசும்பொன்னாலும்

எழிற்பொலி மணியினாலுங் கடைதொறும் இயற்றினாரோ.

எனச் செல்வத்திற்சிறந்து

காடெல்லாங் கழைக் கரும்பு காவெலாங் குழைக்கரும்பு

மாடெல்லாங் கருங்குவளை வயலெலாம் நெருங்குவளை

கோடெல்லா மடவன்னங் குளமெலாங் கடலன்ன

நாடெல்லா நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம். என விளைவுயர்ந்து, விழுமிய போகங்கள் மலிந்து அரசன் காவலுங்கொண்டு அமைந்திருக்குமாயின் அந்நாடு எவரும் விழையத் தக்கதாய் அழகுற்று விளங்கும் என்க.

துன்பநிலைகள் யாதுமின்றி இன்ப நலங்களெல்லாம் இனிதெய்தி ஒருநாடு உயர்ந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

தன்பாலுள்ளவர்கட்கு என்றுங்
குன்றுமல் விழுமிய நலங்களை அழகிய நாடு
விளைத்துவரும் என்பது இதில் உணர்த்தப்பட்
டது. இவ்வுண்மை ஏமாங்கத நாட்டில்
உணரப்படும்.

## கதை.

ஏமாங்கதம் என்பது
இப்பாதகண்டத்திலே குருநாட்டையும்
விதைய தேயத்தையும் தென்மேல்
எல்லையாகக்கொண்டு சிறந்துள்ளதொரு நாடு.
சந்திரகுல மன்னர்களுள் ஒருவனைப்
பிரிவினர்க்கு வழிவழியாக இஃது
உரிமையாயது. எல்லா நலங்களுக்கும்
இருப்பிடமாயது. உயிராதாரமான உயரிய
நதிகளும், விழுமிய நீர் நிலைகளும், அழகிய
பொழில்களும். எங்கணும் நிலவப்பெற்றது.
இந்நாட்டிலுள்ளவர்கள் அருள்மிக
வுடையவர். அல்லலருளாள்வார்க்கு இல்லை
என்னும் உண்மையையுணர்ந்து எவ்வுயிர்க்கும்

இனிய நீராய் ஒழுகும் இயல்பினர். இதன்
தலை 74-ம் அதிகாரம் நாடு.
1915

நகர் இராசமாபுரம் என்பது. சீவகனுடைய முன்னோராகிய மன்னர் பலர் இருந்து நெறிவழுவாமல் அரசுபுரிதற்கு இடனாய் நின்றது. அந்நகரின் பேரழகையும் பெருநலங்களையுங்கண்டு தேவரும் புகழ்ந்தார். தம் நகரமாகிய பொன்னுலகினும் இது புதுமைமிக்கதெனவும், இதன் இனிய அமைவுகளை நோக்கவே என்றும் இமையாக் கண்ணராய் அவர் மேல் நின்று விளங்குகின்றார் எனவும் கவிகள் கற்பித்துள்ளார்.

> முல்லையங்குழ லார்முலைச் செல்வமும்
> மல்லன்மாநகர்ச் செல்வமும் வார்கழற்
> செல்வர் செல்வமும் காணிய என்பார்

போல்

எல்லியும் இமையார் இமையாத தே.
(க)

தாமமே கம ழுந்துகிற் சேக்கைமேற்
காமமே நுகர்வார் தம காதலால்
யாமமும் பக லும்மறி யாமையாற்
பூமிமாநகர் பொன்னுல கொத்ததே.

(உ) இங்ஙனம் உயர் புகழுக்கு ஏதுவாய இடவளங்கள் பலகொண்டு எவ்வுயிர்க்கும் ஏமமாய் நின்றதால் இந் நாடு ஏமாங்கதம் என இசைக்கப்பெற்றது. ஏமம்—இன்பம். அங்கதம்—தோளணி. இன்பத்தைத் தோளிலேந்தியிருப்பது என்பதாம். அறம் பொரு ளின்பங்கட்குரிய சிறந்த தொழில்களையே எவரும் விழைந்து செய்து வந்தனராதலால் இழிந்த செயல்கள் யாதும் இதில் இல்லையாயது. பிணி வறுமை சாவு முதலிய சிறுமைகள் சிறிதுமின்றி இது சிறந்து நின்றது.

இதிலுள்ளவர்களெல்லாம் ஐம்புல
இன்பங்களையும் ஆராத்துய்த்து
இன்புற்றிருந்தனர். சிறந்த நாடுகளைக்
குறித்து யாரேனும் வியந்து பேசினால் அது
என்ன ஏமாங்கதமோ என எதிர்த்து பேசுவர்.
எல்லா நலங்களுமுடைமையால் பல
ரும்வந்துஇங்கு நிலவியிருந்தார்.
பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம்,
ஏமம், அணிஎன்ப நாட்டிற்கு இவ்வைந்து
என்னும்உண்மைக்கு உரிமையாய் இந்நா
உயர்வுற்றிருந்தது. இந் நாட்டைக் குறி
த்தும் சீவகசிந்தாமணி யென்னுங் காவியநூல்
மிகச் சிறப்பித்துக் கூறுகின்றது. அதிலிருந்து
சில கவிகள் இதனடியில் வருகின்றன.

240

1916 திருக்குறட் குமரேச
வெண்பா.

காய்மாண்ட தெங்கின் பழம் வீழக்
கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடை கீறி வருக்கை
போழ்ந்து
தேமாங் கனி சிதறி வாழைப் பழங்கள்
சிந்தும்
ஏமாங்கத மென் றிசையால் திசைபோய
துண்டே. (௧)
பொன்சொரி கதவு தாளிற் றிறந்து
பொன்யவனப் பேழை
மின்சொரி மணியு முத்தும் வயிரமும்
குவித்துப் பின்னும்
மன்பெரும் பஃழக் குப்பை வாலணி
கலஞ்செய் குப்பை
நன்பக லிரவுசெய்யு நன்கலங் கூப்பினரே
(௨)
தேன்றலைத் துவலைமாலை பைந்துகில்
செம்பொன் பூக்கு
ஞான்றன வயிரமாலை நகுகதிர் முத்தமாலை

கான்றமிர் தேர்தி நின்ற கற்பகச் சோலை
யார்க்கும்
ஈன்றருள் சுரந்த செல்வத் திராசமா
புரமதாமே. (௩)
கற்றவஞ்செய் வார்க்கிடம்
தவஞ்செய்வார்க்கும் அஃதிடம்
நற்பொருள்செய் வார்க்கிடம்
பொருள்செய்வார்க்கும் அஃதிடம்
வெற்றவின்பம் விழைவிப்பான்
விண்ணுவந்து வீழ்தென
மற்றநாடு வட்டமாக வைகுமற்ற நாடரோ.
(ச) இவற்றால் இந்நாட்டின் திருவும
பெருமையும் அழகும் இன்பமும் இனிது
புலனாம். பொருள்களை நுணுகி
யுணர்ந்துகொள்க.
துன்பமுறு தேன்றுந் துறக்கம்போல்
தன்பாலார்க்
கின்பமரு தீவதே நாடு.
விழுமிய நலங்களெல்லாம்
மேவப்பெற்றதே அழகிய நாடாம் என்பது

இதனால் கூறப்பட்டது.

---

739 நாடிவருந்தாமல் நல்லவந்தி நாட்டினர்சீர்
கூடிநின்றார் என்னே குமரே
சா—தேடியமர்
நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

இ—ள்.

(க)

குமரேசா! அவந்தி நாட்டவர்

பொருளைத்தேடி வருந் தாமல்
சிறந்தவளம்பெற்று என் விளங்கியிருந்தார்
எனின், நாடா வளத்தன நாடு என்ப; நாட
வளம்தரும் நாடு, நாடு அல்ல என்க.

74-ம் அதிகாரம் நாடு.

1917

இது, சிறந்த நாட்டின் தன்மை யின்னதாம் எனத் தெளித்துக் கூறுகின்றது.

நல் அவந்தி என்றது, எல்லா நலங்களுமுடையதாய் அது விளங்கியிரு ந்தமைகருதி. பொருள்களைவருந்திமுயன்று அலைந்து தேடாமல் இருந்தபடியே பொருந்துசெல்வமும் போகமும் பூத் துச்சிறந்துநின்றாராதலால் வருந்தாமல் சீர்கூடி நின்றார் என்றும். தேடி அமர் = தாம்இருந்துவாழ்தற்குத்தகுந்தது என்று மக்கள் விழைந்துபோய்த் தங்குதற்குரிய.

நாடாவளத்தன என்றது குடிகள்தேடிவருந்தாமல் தாமே வந்து சேருஞ் செல்வங்களை யுடையன என்றவாறு.

மெய்வருத்தம் பாராமல் பசி நோக்காமல் கண் துஞ்சாமல் கருமமே கண்ணாய் நின்று வருந்தி முயல்வோர்க்கே பொருள் பொருந்திநிற்கும்; அங்ஙனம் முயலாதார்க்கு

அஃது அயலாம் என்பது பொதுவாகத் தெளிந்தஉண்மையாதலால் வளங்கூடுதலு க்கு உரிமையாக நாடுதலும் உடன் நாடநின்றது.

மேல், நாட்டிற்கு அழகுதருவன இவையென அறிவுறுத்தி னார்; இதில், அதன் தலைமையான தன்மை கூறுகின்றார்.

தம்மிடமிருந்து வாழ்வார் எதனையும் தேடி வருந்தாவண் ணம செழித்த வளங்களை யுடையவற்றையே நாடுஎன்று நூலோர் சொல்லுவர் ; ஆதலால் தேடிவருந்தியபின் வளங்கொடுக்கும் நாடு கள் நாடுஅல்ல என்பதாம்.

நாடாவளத்தன நாடு என்றதனாலேயே நாடவளந்தருவன நாடு அல்ல என்பது தானே பெறப்படுமே வழிமொழியாகப்பின் னும் கூறிய துஎற்றுக்கெனின் , நல்ல நாட்டின்தன்மையை நன்கு வற்புறுத்துதற் கென்க. இதன்கணுள்ள

இரண்டுவாக்கியங்களுள் பின்னதற்கு முன்னது ஏதுவாக்கியமாய் இசைந்து நின்றது. இனி என்ப என்பதனைப் பின்னும் கூட்டி இருவாக்கியங்களையும் சமமாகக்கொண்டு நோக்குதல் அத்துணைச் சிறப்பின்றாம் என்பதை உய்த்துணர்ந்து கொள்க.

1918 திருக்குறட் குமரேச வெண்பா.

பகை நோய் முதலிய துயர் நிலைகள் யாதுமின்றித் தன்கண் வாழ்வார் இனிது வாழ்தற்குரிய எல்லா நலங்களையும் எளிதில் நல்கவல்லதே நல்லநாடாம் என்றவாறு.

ஆதலிற் குடிகளாகியோர் தொகவும் அழிவுசெய் தழுமுதலகன்று

போதவு ங் காவல் புரிபிணி யின்மை புகழ்திரு விளைவின்ப மனைத்தும்

கோதற நாளும் மிகவுளதாகும் குலைந்தயல்

நாடுக ளூறினும்

மேதகத் தாங்கும் வருந்துறதேவையுர்
வேண்டுழி யளித்திடு மைந்தா. என்றபடி ஒரு நாடு
நின்று நிகழவேண்டும் என்க.

முயன்ற அளவுக்குத் தக வளங்
கொடுப்பதாயினும் அதனை நாடு என்று நயந்து
கொள்ளலாகாதென்று இஃது இகழ்ந்து தள்
ளியதே ! செந்நீர் நிலத்தில்விழப் பகல்
முழுதும் படு வெயிலில் நின்று படாதபாடு
படினும் பசியடங்கும்படியான படியுங்கூடப்
பயன்கொடாத நிலங்களை என்னென்று
பகர்ந்துகொள்வதோ? என உளங்கலங்கி
இங்கு உணர்ந்துகொள்ள நின்றது.

குடிகள் வருந்தி யுழலாதபடி எண்ணிய
நலங்களை யெல்லாம் புண்ணிய வுலகம்போல்
எளிதிலுதவவல்லதாய் நாடு இனிதிருக்க
வேண்டும் என்பது கருத்து.

தன்கண் வாழ்வார் எல்லாச்
செல்வங்களையும் எளிதி லெய்தி என்றும்

இன்புற உயர்ந்த நாடு அமைந்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அவந்தியின்கண் உணரப்படும்.

## கதை.

அவந்தி என்பது இந்நாவலந்தீவுக்கு ஓர் மேகலைபோலமைந்து எல்லாநலங் களுமமேவியுள்ளதொரு நாடு. இது நிலவளங் களோடு மலைவளங்களும் நிரம்பப் பெற்றது. என்றும் நீர்வறந் தறியாத நதி கள்பல நாளும் புதிய போகங்களை விளைத்துவர அதிக மேன்மையோடு அமைந்து நின்றது. காணி நிலத்தில் கோடிவளத்தைக் காட்ட வல்லதெனப் பிற நாட்டவர் போற்ற இஃது உயர் நாட்டமுற்றது. குளிர்ந்த சோலைகளும் மலர்ந்த வாவிகளும் இதன்கண் எங்கணும் மிக்கு இஃது எழில் மிகப் பெற்றது. இதன் தலைநகர் உச்சைனி என்பது, போகபூமிபோல் தன்கண் வாழ்வார் எல்லா நலங்களையும் எளிதிலெய்தி இன்புற்றி

1919

றுப்ப இந்நாடு இசைபெற்றிருந்தது.
விலங்கினங்களும் பறவைகளுங்கூட மிகு
களிப்போடு இதில் விளங்கியிருந்தன.
மலைமருங் குறையும் மழகளிற்
றீட்டமும்
கலைமானேறுங் கவரியுங் களித்த
அருவித்தலையும் அணிமலை யிடமும்
குளிர்பொழிற் சோலையும்
குயிற்றொகைப் பரப்பும்
மயில் விளையாட்டு மான்கண மருட்சியும்
புயல் வளம் படுக்கும் பொருவில்
வளமை
அவந்தி நாடு. எனப் பெருங்கதை
நூலார் இதன் வளங்களை விபந்து
கூறியுள்ளார். இந்நாட்டிலுள்ளவர் பகை
நோய் முதலிய துயர் நிலைகள் யாதுமின்றி

எப்பொழுதும் இன்ப நிலையில் உ
யர்வுற்றிருந்தனர்.
பணைகனிந் தனையசொல்லார் நரப்பிசைப்
பாணிதேவர்
உண்கனி யமுதங் கைப்பச்
செவிதனைத் தூட்ட வுண்டும்
பெண்களின் அமுதமன்னார் பெருமித
நடனமுண்ணக்
கண்களை விடுத்துங் காலங் கழிப்பவ
ரளவிலாதார். (க)
கலவிநித் தாகவூடிக் கட்புனல் குளிக்கு
நல்லார்
புல்விதிர் செவ்வி நோக்கிப் புணர்முலைப்
போகந்துய்த்து
நிலைநிலை யாமைநோக்கி நெறிபடு
தருமதானங்
கிலைநூர்கைப் பெய்துங் காலங் கழிப்பவர்
எண்ணிலாதார்.(உ
கற்பவை கற்றுங்கேட்டுங் கேட்டவை

கருத்துள்ளுறச்

சொற்பொருள் நினைந்துங் கேட்போர்க்
குணர்த்தியுட்டுளக்

கந்தீர்த்தும், எற்பகலிரவு நீங்குமிடத்து
மெய்யறிவானந்த

அற்புதவெள்ளத் தாழா தாழ்ந்தும்
நாள்கழிப்பார் சில்லோர். என்ப பரஞ்சோதி
முனிவர் சொல்லியபடியே இதிலுள்ளவாக
ளெல்லாரும் செழித்திருந்தார். இந்நாட்டவர்
யாதொரு பொருளையுந்தேடி வருந்தாமல்
எல்லாச் செல்வங்களும் எளிதில் கூடப்
பெற்று இன்புற்றிருந்தாராதலால்
போகபூமி என்று புலவர் பலரும் இதனைப்
புகழ்ந்து பாடினர். பிறதேயத்தவரும்
இதன் பீடுடைமையை வியந்து பெரிதும்
பேணினர். நாடென்ப நாடா வளத்தன
என்னும் உண்மைக்கு இஃது
உரிமையாய் நின்றது. 1920

திருக்குறட் குமரேச வெண்பா.

எண்ணுவன வெல்லாம் எளிதெய்தி
யென்றுமின்பம்
நண்ணும் இயல்பினதே நாடு.
வேண்டியன வெல்லாம் எளிதில்
விளைந்து நிற்பதே நாடாம் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

7 40

சாலவளங் கொண்டிருந்துஞ் சண்டகமோர்
வேந்தனின்றிக்
கோலமற்ற தென்னே
குமரேசா—மேலறைந்த
ஆங்கமை வெய்தியக் கண்ணும்
பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.
(ம)

இ—ள்.

குமரேசா ! எல்லா வளங்களு மெய்தி யிருக்கும் தண்டக நாடு ஓர் அரசனில்லாமையால் யாதும் பயனின்றி என் இழிந்தழி க்தகெனின், வேந்து அமைவு இல்லாத நாடு, ஆந்த அமைவு எய் தியக் கண்ணும் பயம் இன்றே என்க.

சால = மிகுந்த. உரிச்சொல் அடியாகப்பிறந்த பெயரெச்சம். சால வளம் என்றது, மோடுகொண்டெழு மூரிக் கழைக்கரும், பூடு கொண்ட பொதும்பரொடுள்விராய்த், தோடு கொண்ட பைங் காய் துவள் செந்நெலின், காடு கொண்டுள கண்ணக னெடலாம் என்றபடி எங்கும் பெருவளங்கள் கண்ணியிருந்தமை கருதி. எல் லா நலங்களும் உடைத்தாயிருக்கும் அமைந்த அரசனில்லாமை யா ல் அந் நாடு அழகிழந்து அழிந்ததாதலால் இருக்கும் தண்ட கம் இன்றிக் கோலம் அற்றது என்றும்.

மேலறைந்த என்றது தள்ளா விளையுள் முதலாக மேலே சொல்லியுள்ள என்றவாறு.

இது, வேந்தனில்லா நாடு வீணும் என்கின்றது.

ஆங்கு = முன் கூறியபடி. அமைவு = நிறைவு. தள்ளாவிளை யுள், தக்கார், தாழ்வு இலாச் செல்வர், முதலாக முன்னாட்டிற்குச் சொல்லிய நல்லிலக்கணங்களெல்லாம் நன்கு அமையப்பெற்றதாயினும் அங்கு நல்ல அரசனில்லையாயின் அந்நாடு மக்களிருந்து வாழ்தற்குச் சிறிதும் உதவாதென்பார் ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும், வேந்து அமைவு இல்லாத நாடு பயம் இன்றே என்றார்.

74-ம் அதிகாரம் நாடு.

1921

உண்மை, எய்துதலின் அருமையோடு சிறப்பையும் உணர்த்தி நின்றது. ஏகாரம்

தேற்றமும் இரக்கமும் தோற்ற நின்றது. அமைவு இரண்டனுள் முன்னது நிறைவு; பின்னது பொருந்துகை. வேந்து இல்லாத நாடு என்று மாத்திரம் சொல்லிவிடாது அமைவினை இடையே அமைபவைத்தது என்னையெனின் அரசன் உண்டு எனப் பெருக்குமட்டுமிருந்து நரகாசுரன்போல் கொடியவனுயிராமல் அரசுக்குரிய அருள் முறையாவும் அவன் அமைந்திருக்க வேண்டும் என்பது விளங்க என்க.

மேல், பொருளைத்தேடி வருந்தாதபடி எல்லா வளங்களும் நிறைந்திருப்பதே நாடாம் என்றார்; இதில், அங்ஙனம் நிறைந்திருந்ததாயினும் அரசன் அந்த அமைந்திராயின் அவ்வளங்கள் யாதும் இலதாய் அஃது இழிக்கப்படும் என்கின்றார்.

அரசனொடு மேவி அமைந்திராத நாடு மேற்கூறிய எல்லா நலங்களாலும் நிறைந்திருந்ததாயினும் அவற்றால் பயனில்லை என்

யதாம்.

எல்லா வளங்களும் நிறைந்து ஒரு நாடு மிகச் சிறந்திருக்கதாயினும அங்கு நல்ல அரசனில்லையாயின் அது வேலியில்லாத பயிர் போலவும், கொழுநனை யிழந்த குலமகள் போலவும் பொலிவிழந்து இழிவுறும் ஆதலால் வேந்தமைவு அதற்கு இன்றியமை யாது வேண்டும் என இது விளக்கி நின்றது.

விளைவு செல்வமுதலிய நலங்களெவற்றிற்கும் ஆதாரவாய் நின்று அரசனமைதி ஒரு நாட்டிற்கு உறுதியை விளக்குமாதலால் அவ் இயல்பின் பெருமை தோன்ற இறுதியில் நின்றது.

மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்; என மோசிகீரனாரும் மன்னுயிர் ஞாலக் கின்னுயிரோக்கும் இறை; எனக் கொங்கு வேளாருமம, வைய மன்னுயிராக அம்மன்னுயிர், உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனன்; எனக் கம்பரும் , நாட்டிற்கும

வேந்தனுக் கும் உள்ள உரிமையை
காட்டியுள்ளமை யீண்டு நாடத்தக்கது.
தன்னையுடைய தலைவன்
இயல்பின்படியே ஒரு நாடு நிலை நிற்கும்
ஆதலா ல் அவன் அருள் நலமுடையனாய்
அமைந்திருக்க 1922 திருக்குறட்
குமரேச வெண்பா.

வேண்டும்; இன்றேல் அஃது இயல்பு குன்றி
இழிவுறு மென்க. சார்ந்தவேந்தன் வண்ணமே
நாடு தழைக்கும் என்பதாம்.

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா
கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்

அவ்வழி நல்லை வாழிய நிலனே.
எனப் புறத்தில் ஔவையார்
உரைத்திருத்தலும் காண்க. அவல் = பள்ளம்.

முறை திறம்பாத அரசன் ஒரு நாட்டுக்கு முதன்மையாக அமைந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

எவ்வளவு நல ங்களையுடையதாயினும் அமைவான அரச னில்லையாயின் அந் நாடு நலமுறாது என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை தண்டக நாட்டின்கண் உணரப்படும்.

கதை.

தண்டகம் என்பது விந்தமலைக்கும் சைவலத்துக்கும் இடை யேயுள்ளதொரு நிலமண்டலம். இப்பாதகண்டத்தின் சிறந்தி ருந்த நாடுகள் பலவற்றுள்ளும் அக்காலத்தில் இது முதன்மை பெற்று நின்றது. நிலமகளுக்கோர் தலைமகள் என்று புலவர் பல ரும் இதனைப் போற்றி நின்றார். பல்வகை வள ங்களுஞ் செறிந்த மலைகளும் மரங்களும் மணிக்கற்பாறையும் அலைபுனல் நதிகளும் அருவிச் சாரலும் இலைசெறி பழுவமும் இனிய

சூழலும் நிலைமிகு தடங்களும் இதன்கண் எங்கணும் நிறைந்திருந்தன. மறுபுலங் களிலிருந்த மக்கள் பலரும் இதனியல் நலங்களை விழைந்து இதில் வந்து குடியேறினர். இது விளைவும் இன்பமும் அழகும் மிக்கது.
மேகமும் களிறுமெங்கும் வேதமுங் கிடையும் எங்கும்
யாகமுஞ் சடங்குமெங்கும் இன்பமும் மகிழ்வு மெங்கும்
யோகமுந் தவமுமெங்கும் ஊசலு மறுகு மெங்கும்
போகமும் பொலிவுமெங்கும் புண்ணிய முனிவ ரெங்கும். (௬) சூதபா டலங்களெங்கும் சூழ்வழை ஞாழலெங்கும்
சாதிமா லதிக ளெங்கும் தண்டளிர் நறவமெங்கும்
மாதவி சாள மெங்கும் வகுள சண் பகங்களெங்கும்
போதவிழ் கைதைமெங்கும் பூகபுன் னாக

மெங்கும்.　　　(ஊ)

74-ம் அதிகாரம் நாடு.

1923

பண்டரு விபஞ்சியெங்கும் பாதசெம்பஞ்சி யெங்கும்
வண்டறை குழல்களெங்கும் வளரிசைக் குழல்களெங்கும்
தொண்டர்தம் இருக்கையெங்கும் சொல்லுவதிருக்கை யெங்கும்
தண்டலை பலவுமெங்கும் தாதகி பலவு மெங்கும்.　　　(௩)

மங்கல வினைகளெங்கும் மணஞ்செய்கம் பலைகளெங்கும்
பங்கய வதன மெங்கும் பண்களின் மழலையெங்கும்
பொங்கொளிக் கலன்களெங்கும் புதுமலர்ப் பந்தரெங்கும்

செங்கயற் பழனமெங்கும்
திருமகளுறைபுளெங்கும். (சு) என்று
ங்கு இதன்கண் எங்கும் தங்கியிருந்தன.
இன்னவாறே பலவளங்களும் மன்னியிருந்த
இந்நாடு இக்குவாகு மன்னனுக்கு
உரிமையாயிருந்தது. அவன் புதல்வனாகிய
தண்டகன் என்பவன் பின்பு இதனைத்
தன்வசம் கொண்டான். மேலும் பலவளங்
களை இன்புற இதன் தென்பால் மேவச்
செய்தான். ஆயினும் அவன் மிகக்
கொடியவன். காதல் மீக்கூர்ந்துநீதியிழந்து
மாதர் பலரை மருவிக்களித்தான். உயிர்கள்
மாட்டு யாதும் அருளில்லாதவன். தன்
இன்பநலமொன்றையே யெண்ணி
வன்புசெய்து திரிந்தானாதலால்
குடிகளெல்லோரும் அவன்பால் அன்பிலராயி
னர். அதனால் கொடுமைகள்பல இங்குக்
குடிபுகலாயின. வாழ்ந்திருந்தவர்பலரும்
அவனை வைதகன்றுபோனார்.

போகபூமிபோல் இனிய நலங்களெல்லாம் எய்தியிருந்தும் அரசன் அமைவிலனாகிக் கேடனாயதால் இந் நாடு பிணக்காடு போல் பீடிழந்து போயது. அவனுஞ் சின்னாளில் அழிந்து போயினான். பின்பு தண்டகவனம் என இது சாற்ற நின்றது. தள்ளா விளைவுகளையும் தாழ்விலாச் செல்வங்களையும் தன்கண் உள்ளவர்க்கெல்லாம் உதவிவந்த இது பின்பு நல்ல அரசனை எய்தப் பெறாமையால் தன் நலமிழந்து ஒழிந்ததே யென அனைவரும் அழுதிரங்கலானார். ஆஃது அமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே வேந்து அமைவு இல்லாத நாடு என்னும் உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்து நின்றது.

என்னவளம் எய்திடினும் ஏந்தலிலா அந்நாடோ
உன்னின் உயிரில் உடல்.

வெண்பா.

அரசனில்லாத நாடு அழிவுறும் என்பது இதனால் கூறப்
பட்டது.

---

இவ் அதிகாரத்தின்
தொகைப்பொருள்.

நிறைந்த பயிர்விளைவுகளும் தகுந்த பெரியோர்களும் சிறந்த செல்வர்களும் பொருந்தப்பெற்றதே நாடு எனத்தகும். யாரும் விரும்பும்படி பல வளங்களுமுடையதாய் அஃது அமைந்திருக்க வேண்டும். தன்னை யடைந்தவர்க்கெல்லாம் ஆதாரவாய் நின்று அரசுக்கு இதந்தரவேண்டும். பசி பிணி பகை முதலிய துயர்கள் யாதும் இன்றி மக்கள் இனிதமர்ந்திருத்தற்கு இடமாயிருப்பதே

உயர் நாடாகும். கொடியரும் வஞ்சரும் அங்கு அடியிடாதபடி அஃதமர்ந்திருக்கவேண்டும். யாதொரு கேடும் இலதாய என்றுங் குன்றாத வளமுடையதே நாட்டினுள் தலை சிறந்ததாகும் . நீர்வளம் நிலவளம் மலைவளம் குடிவள முதலிய நலங்கள் யாவும் நாட்டிற்கு அவயவமாக உறைந்திருக்கவேண்டும். விளைவும் இன்பமும் திருவும் காவலும் நாட்டிற்கு அழகு செய்வனவாம். தன்னிடமுள்ளார் செல்வத்தை வருந்தித் தேடாவண்ணம் வளம் பொருந்தி யிருப்பதே நாடென்று போற்றத்தக்கதாம். நாடு எவ்வளவு வளங்களை யுடையதாயினும் அங்கு நல்ல அரசனில்லையாயின் கொழுநனை இழந்த குலமகள்போல் அது பொலிவிழந்துபோம் ஆதலால் மேற்குறித்த நலங் களோடு அமைதியுடைய அரசும் நன்கு அமையப்பெற்றதே நல்ல நாடாம்

என்பதாம்.

எசஅவது நாடு முற்றிற்ற.

---

# 75ம்-அதிகாரம்

## அரண்.

அஃதாவது பாதுகாப்பிற்கேதுவாகிய அரணின் பெருமை, அரசனும் குடிகளும் அமைந்து வாழுதற்குரிய நாட்டின் இயல்பை மேலேகூறினார்; இதில், அவன் இருந்து அரசுபுரிதற்குரிய நகரின் அமைதி முதலிய வலியுயர்வுகளைக் கூறுகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

75-ம் அதிகாரம் அரண். 1925

741 வீரமிகு சூரனுமேன்

வீரமகேந்திரத்தைக்

கூா ரணுக்

கொண்டான் குமரேசா—நோாக
ஆற்று பவர்க்கும் அாண்பொரு
ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். (க)

இ—ள்.

குமரேசா ! வலி மிகுந்த சூாபன்மனும் வீர மகேந்திர த்தை என் தனக்கு அாணாகக் கொண்டிருந்தான் எனின், ஆற்று பவர்க்கும அா ண் பொருள்; அஞ்சித்தற் போற்றுபவர்க்கும் அது பொருள் என்க.

இஃது எத்தகையோர்க்கும் அாண் இன்றியமையாதென் கின்றது.

வீர மிகு என்றது வானவர் தானவர் மனிதராதிமுன், அனைவர்
தமையெலாம் அடங்கவென்ற அவனது அருந்திறலின் உயர்வு கருதி என்க. வீ

ரமகேந்திரம் என்பது சூரபன்மனிருந்து அரசு புரிந்த நகரம். யாண்டும் அஞ்சித் தன்னைப் போற்ற வேண்டாத படி ஆற்றல் மிக்கிருந்தும் அரணைப் பொருளாகப் போற்றி நின் றுணுதலால் சூ ரனும் கொண்டான் என்றும். உம்மை உயர்வு சிறப்பு. நேராக என்றது அஞ்சி யொதுங்காது போர் நிலையோடு நேர்முகமாக வந்து என்றவாறு.

ஆற்றுபவர்க்கும் = வலியுடையார்க்கும். உம்மை சிறப்புணர்த்தி நின்றது. வலியில்லாரை ஆற்றார் என்பர். ஆற்றுரும் ஆற்றி அடுப என றதுங் காண்க.

தன் என்றது அரணை. தன் போற்றுபவர் = தன்னையே தஞ்சமாகப் பேணி நிற்பவர். அஃதாவது பகைவர் வந்தபோது தம்மைப் பாதுகாத்துக் கோடற்கு அரணையே தஞ்சமாக ஆதரித்து நிற்பவர் என்க. இனி தன் என்றது போற்றுபவரைக் குறித்ததென்று கொண்டால் பன்மையோடு ஒருமை

மயங்கி வந்ததாகக் கொள்க. உம்மை இரண்டனுள் முன்னது உயர்வு சிறப்போடு எதிரது தழீஇயது. பின்னது இழிவு சிறப்போடு இறந்தது தழீ இயதென்க.

பிறர்மேற் சென்று வெல்ல
அங்ஙனமின்றித் தம்மேல் வரும்

வல்லவர்க்கும் அரண் சிறந்தது;
பகைவர்க்கு அஞ்சித் தன்னைத் 1926

திருக்குறட் குமரேச வெண்பா.
தஞ்சமாகக் கொண்டு பேணி நிற்பவர்க்கும்
அது சிறந்த துணை யாம் என்பதாம்.

வேறு துணைவேண்டி நிற்கும்
வலியில்லார்க்குத்தான் அரண் வேண்டும்;
அஃதுடையாரும் அதனைப் பொருளாகப்
போற்றிக் கொள்ளவேண்டுமோ என்ன

அவரை நோக்கி இஃதுரைத்ததாகக் காண்க.

வலியார் மெலியார் என்னும் இரு திறத்தார்க்கும் அரண் ஒரு தலையாக அமைந்திருக்கவேண்டும்என் பார் "ஆற்றுபவர்க்கும் அஞ்சிப் போற்றுபவர்க்கும் அரண் பொருள்" என்றார். பொருள் என்றது உயிராதாரமாயுள்ளதென்பதாம்.

அரண் என்பது கோட்டை மதில் காவல் என்னும் இவற்றையுணர்த்திவரும். புறத்தவரால் இடர் புகுந்தபொழுது அகத்தவரின் பாதுகாப்பிற்கு இஃது ஏதுவாய் நிற்கும். எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் எனப் பெருவழுதி போரெழுந்த பொழுது எளியரை நோக்கி அருளுடன் உரை செய்ததும் ஈண்டு உள்ளத்தக்கது. வேறொரு துணையும் வேண்டாமல் எவரையும் வெல்லவல்லவராயினும் போர்மேல் முனைந்து

வெளியே செல் லுங்கால் உள்ளிருக்கும் உரிமைப் பொருள்கள் யாதொரு தீது மின்றித் தாயடைந்த சேய்போல் இனிது தங்கியிருக்கவேண்டு மாதலால் அவர்க்கும் அரண் இன்றியமையாதென்க. அவரை முன்பு வைத்தது தம் ஆற்றலை நோக்கி அரணைப்போற்று தொழி யவும் கூடுமாதலால் அங்ஙனம் கூடாதென்பதை முதன்மையாக அவர் குறித்துக் கோடற் கென்க.
வலியுடையார் எறிப் பொருதற்கும், அஃதில்லாதார் இருந்து தம்மைக் காத்துக்கோடற்கும் அரண் எற்ற துணையாம் என்றஇதனால் தன்னையடைந்தவரைத் தாங்கி நிற்கும் அதன் தன்மை தெளிவாம்.

வல்லு நர் வல்லார் என்னும் எல்லார்க்கும் அ ரண் நல்ல துணையாம் ஆதலால் அதனைத் தமக்கு ஓர் உறுதிப் பொருளாக எவரும் கருதிக்கொள்ளவேண்டும் என்பது

கருத்து. எல்லாப் பொருள்களையும் இனிது பாது காத்தற்கு அரண் ஏதுவாய் நிற்றலால் தன் நகருக்கு முதன்மையாக அரசன் உறுதிபெற அதனை அமைத்துக்கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

75-ம் அதிகாரம் அரண்.

1927

எத்துணை உயர்ந்த ஆற்றலையுடையவர்கட்கும் அரண் சிறந்த அணையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீரமகேந்திரத்தின்கண் உணரப்படும்.

கதை.

வீரமகேந்திரம் என்பது சூரபன்மனிருந்து அரசுபுரிந்த திரு நகரம். இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு

முன்னர்த் தென் கடலிடையே திகழ்ந்திருந்த தீவின்கண் இது விளங்கியிருந்தது. அருந்தவ ம்பெற்றால் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் தனக்குரிமையாகச் சூரபன்மன் அடைந்தபொழுது அவன் இருந்தரசாளு தற்குத் தகுந்ததாக நாடி விசுவகன்மாவால் இது செய்யப்பட்டது. எண்ணுதற்கரிய சிறப்பினையுடையதாய்த் தேவர்முதல் யாவரும் வியந்து போற்றுமாறு இஃது அமைந்து நிறைந்த மணிமாடங்கள் நிலாமுற்றங்கள் செய் குன்றுகள் பொய்கைகள் பூம்பொழில்கள் முதலிய இன்பநலங்கள் இதன்கண் எங்கணும் தோன்றி எழில் ஊற்றிருந்தன.

ஆனைகள் பயிலிடம் அயங்கள்
சேரிடம்

சேனைக ளுறைவிடம் தேர்கள்
வைகிடம்

தானவர் தலைவர்கள் சாருந்
தொல்லிடம்

ஏனைய அரக்கர்கள் இனிது சேரிடம்.
(1)

நாடரும் விசும்புறை நாரி மாரெலாம்
ஆடலை யியற்றிடும் அரங்க மண்டபம்
பாடலின் முறைபயில் பைம்பொன்
மண்டபம்
மாடக யாழ்முரல் வயிர மண்டபம்.
(2)

மானனை யார்பலர் மருவு மண்டபம்
ஆனதோ ரூசலாட் டயரு மண்டபம்
பானிலா வுமிழ்தரு பளிங்கின்
மண்டபம்
வானுயர் சந்திர காந்த மண்டபம்.
(3)

மாமணி யொளிர்தரு வசந்த
மண்டபம்
காமரு பவளமார் கவின்கொள்
மண்டபம்
ஏமரு மாகதத் தியன்ற மண்டபம்

தாமரை யுயிர்த் திடு தாள மண்டபம்.
(4) 1928 திருக்குறட் குமரேச வெண்பா.

காவியுங் குமுதமுங் கமலமுஞ் செறி
வாவிக ளோடைகள் பொய்கை வான்றொடு
பூவியல் தண்டலை பொலன்செய் குன்றுடன்
யாவையு முறைபட நிறைவுற்று

இந்நகர் உயர்வுற்றிருந் தது. இதற்குப் பாதுகாவலாக எமபுரம் இமயபுரம் இலங்காபுரம் நீலபுரம் சுவேதபுரம் அவுணர்புரம் வாமபுரம் பதுமபுரம் என்னும் எண்வகை நகரங்கள் இசைந்திருந்தன. யாவரும் அணுகமுடியாதபடி புறக்காப்போடு இங்ஙனம் பொருந்தி நிற்பினும் அகக் காப்பிலும் இந்நகர் மிகச்சிறந்து நின்றது. இதன் அகழியும் மதிலும் யாவர்க்கும்

அச்சந்தோன்றுமாறு ஆழ்ந்து பரந்து உயர்ந்து நின்றனை. வீரவாகுதேவர் தூதுவந்தபோது இதன் அரண் வலிகளைக் கண்டு மிக வியந்து சென்றார். பொரு முரணில் எவருந் தனக்கு எதிரில்லாத சூரபன்மனும் தன்னைப் பாதுகாத்துக் கோடற்கு அரணைப் பற்றுக்கோடாகக் கொண்டு ஆதரித்து நின்றுனே என்று அனைவரும் வியந்து அவனது ஆட்சித் திறத்தையும் இந்நகரின் அமைப்பையும் போற்றிப் புகழ்ந்தார். ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்; அஞ்சித்தற் போற்றுபவர்க்கும் பொருள்; என்பதை உலகம் காண இஃது உணர்த்தி நின்றது.

போர்க்கடலை நீந்தும் புணையாம் அரணென்றும்
யார்க்கும் இனிய துணை.

அரண் யாவர்க்கும் சிறந்த துணையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

742 காடும் மலையுங் கடலும்
இலங்கையிடம்
கூடிநின்ற வென்னே
குமரேசா—நாடும்
மணிநீரும் மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.
(உ)

இ—ள்.

குமரேசா! கடல் மலை காடு முதலியவற்றைத் தனக்கு அரணாக இலங்கை என் கொண்டிருந்தது எனின், மணிநீரும், மண்ணும், மலையும், அணிநிழற் காடும், உடையது அரண் என்க.

75-ம் அதிகாரம் அரண்.

1929

இந்த அரணின் வகைகளை இனமுற

உணர்த்துகின்றது.

இயற்கையாக அமைந்திருந்த கடல் மலை வனம் என்பன அரணாக நேர்ந்து நின்றன ஆதலால் இலங்கையிடம் கூடி நின்ற என்றும். நாடும் = யாவரும் நயந்து நாடுகின்ற.

மணிநீர் = நீலமணிபோலும் நிறத்தினையுடைய நீர். தனியே யெடுத்துநோக்கின் வெள்ளிதாய்த் தோன்றுமாயினும் ஆழ்ந்து அகன்ற நீர் என்றும் கருமையாய்க் காணப்படுமாதலால் மணிநீர் என்றார். இனி, மணி என்பதை முத்து அல்லது பளிங்கு என்று கொண்டு அவைபோல் தெளிந்த நீர் எனினுமாம். என்றும் கலங்கலாகாதபடி மிகுந்து நிறைந்தநீர் என்பதை இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

மண் என்றது நிழல் முதலிய இனிய நிலைகள் யாதும் இல்லாத வெளியிடத்தை. இவ்வெட்டவெளிநிலம் மதிற்புறத்தே

கிட்டியிருக்குமாயின் முட்டவந்த பகைவர் நிலைபெறநின்று பொர முடியாமல் முரணழிந்துபோவாராதலால் இம்மண்ணும் ஓர் அரணாக எண்ணநின்றது.

அணிநிழல் = அழகிய நிழல்; நிழலுக்கு அழகாவது அடைந்தவர் இன்புறக் குளிர்ந்து பல்வளம், மிடைந்தினிதெழிலுற மேவி நிற்பது. நீருக்கும் நிழலுக்கும் மணியும் அணியும் அடையாகவைத்தது அவை ஆழமும் செறிவுமுடையனவாய் அமைந்திருக்க வேண்டும் என்பது கருதி என்க. "மலர்ந்த பொய்கைபுண் மணிநிறத்தேண்ணீர்" எனப் பெருங்கதையிலும், "அணிமலர் துறைதொறும் வரிக்கும் மணிநீர்ச் சேர்ப்பனை மறவா திமே" என ஐங்குறு நூற்றிலும் வந்தன காண்க.

மேல், தொகையாக அரணின் பெருமை கூறினர்; இதில் வகையாக அதன்

இன இயல்புகளைத் தெளிவுறக் கூறுகின்றார். தெள்ளிய நீரும், வெள்ளிடை நிலமும், சிறந்த மலையும், செறிந்த நிழலமைந்த காடும் ஆகிய இந்நான்குமுடையதே அரண் என்பதாம்.

1930 திருக்குறட் குமரேச வெண்பா.

நீர் அரண், நில அரண், மலையரண், காட்டரண் எனப்பெயர் பெற்று அரச நகருக்கு ஆதாரமாக முறையே இவை அமைந்திருக்கும். முன்னைய இரண்டும் பெரும்பாலும் முயன்று செய்யப் பெறும்; பின்னுள்ளன இயல்பாக எய்தப்பெறும். கோட்டை மதிலைச் சூழ ஆழமும் அகலமும் பொருந்தத் தோண்டி நீரை நிரப்பியிருப்பின் அகழி எனப் பேர்பெற்று அது செயற்கை நீராணும்;

இலங்கைக்கும் துவாரகைக்கும் அமைந்து நின்றதுபோல் இயல்பாகக் கடலையமைந்திருப்பின் அஃது இயற்கை நீரரண்.

ஆற்றுபவர்க்கும் ஆற்றாதவர்க்கும் அரண் ஏற்ற துணையாம் என முன் இசைத்ததைக் கேட்டு அஃது எத்தன்மையுடையது என ஒருவன் எதிர்ந்து நோக்க அவனை நோக்கி அதன் வகைகளை விளக்கியுணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க.

நீரரண் முதலிய அரண்களை ஒருநகரம் சேரப்பெற்றிருப்பின் அந்நாட்டு மன்னன் அவற்றால் ஏற்றமுடையனாய் மிக ஆக்கமுற்றிருப்பன் என்க.
கருணாகரத்தொண்டைமான் தன் நகர்மேற் படையெடுத்து வந்தபொழுது கலிங்கர்

வேந்தன் தனக்கு அமைத்திருந்த அரண்
வலிகளை நினைந்து
கானரணும் மலையரணும் கடலரணுஞ்
சூழ்கிடந்த கலிங்கர் பூமி தானரண
முடைத்தென்று கருதாது வருவதுமத்
தண்டுபோலும். என்று இனங்கொண்டு
மொழிந்ததும் ஈண்டுக் கண்டுகொள்க.

பகைவரை வென்றுகொள்ள
வருவோரும், நின்று காக்க நினைவோரும்,
தமக்குப் பற்றுக் கோடாக மலை முதலிய
அரண் களையே நிலையாகப் பற்றிநிற்பர்.
"கருவியு முரிமையுங் காப்புறத் தழீஇ, அருவி
மாமலை அரணென அடைதலின்"
எனவும் மலையரணல்லது நிலையரண் இல்
எனவும் வருவன காண்க.

நீரரண் முதலிய அரண்கள் ஓர்

இராசதானி நகருக்குச் சிறந்த ஆதாரமாயமைந்திருக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இலங்கையின்கண் உணரப்படும்.

கதை.

இலங்கை என்பது தென் கடலிடையே திரிகூட மலைச்சார லிலே சிறந்து நின்றதோர் திருநகர். அரக்கர் குல திலகனுகிய

75-ம் அதிகாரம் அரண்.

1931

இராவணனிருந்து அரசுபுரிந்த உயர் நலமுடையது. இது தெய்வத் தச்சனல் அழகுறச் செய்யப்பட்டு முதலில் மாலியவானுக்கும் பின்பு குபேரனுக்கும் அதன் பின் இராவணனுக்கும் உரிமை யாய் நின்று மிகு புகழ் பெற்றது. அமராவதி அளகை என்னும் அவ் விழுமிய தெய்வ நகரங்களிலுள்ளவர்களும் இதன் அழகினை

வியந்து புகழ இது நல மிருந்திருந்தது. ''விண்ணிடை உலக மென்னும் மெல்லியல் மேனி நோக்கக், கண்ணடிவைத்த தன்ன இலங்கை'' எனவும், யாவராலுங் கண்களினுல் எட்டிப்பார்க்க வொண்ணுத காவலிலங்கை எனவும், பாவலர் பாட இது மேவி நின்றது. மாடங்கள் மாளிகைகள் ஆடரங்குகள் அம்பலங்கள் தேவாலயங்கள் பாடல்வேதிகைகள் பட்டிமண்டபங்கள் முத லிய இவையாவும் இந்திர நீல ங்களாலும் சந்திரகாந்தக் கற்களா லும் அழகிய சுதைகளாலும் விழுமிய பளிங்குகளாலும் அரும் பெறற் பொன்களாலும் ஆக்கப்பட்டிருந்தன. இதன் செல்வச் செழிப்பையும் எழில்நலங்களையும் இன்பஇயல்களையும் பிறவுயர்வு களையும் எண்ணி நோக்கி இது புண்ணியத்தின் பயனைப் பொரு ந்தியுள்ளதென அமரரும் புலவரும் வியந்து போற்றியுள்ளார்.

தேவ ரென்பவர் யாரும் இத்திருநகரக் கிறைவற்கு
ஏவல் செய்கிலா ரேவரே யெண்வகை யுருவின்
மூவர் தம்மினும் அதிகனென்றால் அவன் முயலும்
தாவின் மாதவம் அல்லது பிறிதொன்று தருமோ. (1)

திருகுறுஞ்சினத் தாக்கருங் கருநிறம் தீர்ந்தார்
அருகுபோகின்ற திங்களும் மறுவற்ற தழகைப்
பருகுமிங்கர்த் துன்றொளி பாய்தலிற் பசும்பொன்
உருகுகின்றது போன்றுள துலகுசூழ் உவரி. (2)

முன்னம் யாவரும் இராவணன் முனியுமென் றெண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான்

கதிரொனப் புகல்வார்
கன்னி யாரையி னொளியினிற்
கண்வழுக்குறுதல்
உன்னி நாடொறும் விலங்கினன்

போதல் யுணரார். (3)
இழையு மாலையும் ஆடையுஞ் சாந்துமே
மேத்தி
உழைய ரென்ன நின்றுதவுவ்

நிதியங்க ளொருவர்
242
1932 திருக்குறட் குமரேச
வெண்பா.

விழையும் போகமே யிங்கிது வாய்கொடு
விளம்பின்
குழையு நெஞ்சினல் நினையினு
மாசென்று. கொள்ளும் (4)
மகாவினையின் மந்திர கீதத்தின்

மறைந்த

சகர வேலையி னூர் கலி திசைமுகன் தடவும்

சிகரமாளிகைத் தலந்தொறுந் தெரிவையர் நிவந்த

அகரு தூபத்தின் அழுந்தின முகிற் குலமனைத்தும். (5)

பளிக்குமாளிகைத் தலந்தொறும இடந்தொறும் பசுந்தேன்

துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ் சோலைகடோறும்

அளிக்குந் தேறலுண்ட றடுநர் பாடுநராகிக்

களிகின்றாலாற் கவல்கின்றொருவரைக்காணேன். (6) இன்னவாறு நலந்துன்னி நின்ற இந்நகரின் அயற்புறத்தே விரிந்துபரந்த வெளிநிலமும் அதன்பின் குளிர்ந்த நிழலையுடைய காடும் அதற்கப்பால்

பவளக்குன்று முதலிய மலைகளும், அதன்பின்பு கடலும் முறையே தொடர்ந்து இந்நகர்க்கு அரண்களாக அமைந்திருந்தன. இங்ஙனம் இயற்கையாயமைந்திருந்த இவ் அரண்களோடு செயற்கையாய மதிலரணும் இதனுள் சிறந்து நின்றது.

இம்மதிற்புறத்தே ஆழ்ந்தகன்ற அகழி எவரும் அஞ்சுமாறு சூழ்ந்திருந்தது.

அனுமான் இலங்கை புகுந்தபொழுது இவ் அகழியையும் மதிலையும் கண்டு "ஆழிவெஞ்சின அரக்கனை அஞ்சி ஆழ் கடல்கள், ஏழும் இந்நகர் சுலாயது கொலோ"! என முதலில் அஞ்சினான்.

இனிக்கடப்பரிதென்று மேல் எண்ணி யேங்கினான். பின்பு உறுதிகொண்டு இந்நகர்க்கு அமைந்துள்ள அரணின் திறங்களை உவந்து கொண்டாடினான். அன்று அவன் கொண்டாடிய நிலையையும் இதன் அரணியல்புகளையும் கம்பர் காவிய வுலகில்

இன்புறக் காணலாம்

ஆழி யகழாக அரிதா யமரர் வாழும்
எழுலகின் மேலேவெளி காறுமுக டேறிக்
கேழரிய பொன்கொடு சமைத்தகிளர் வெள்ளத்
தாழிகிரி நாளும் உலேயா மதிலே யுற்றான். (1)

கலங்கலில் கடுங்கதிர்கள் மீதுகடி தேகா
அலங்கலயில் வஞ்சகனே யஞ்சியெளி னன்றூல்

75-ம் அதிகாரம் அரண்.

1933

இல ங்கைமதில் இங்கிதனே யேறலரிதென்றே
விலங்கியகல் கின்றனன் விரைக்தென வியர்தான். (2)

தெவ்வளவி லாதவிறை சேறலுள

தென்றால்
அவ்வளவ தன்றாணம் அண்டமிடை-
யாக
எவ்வளவி லுண்டுவெளி யீறுமது
வென்று
வெவ்வள வாக்கனை மனக்கொள
வியந்தான். (3)

இது, புறநகர் இடைநகர் அகநகர் என மூவகையாயமைந்து ஒவ்வொன்றுந் தனித்தனியே வியக்கத்தக்க மதிலகழிகளை மேவி வெளியே பல பாதுகாவல்களையுங்கொண்டு நீது தீர்ந்திருந்தது. என்ஞான்றும் மாறாத நீராகிய கடலும் மலையும் காடும் நிலமும் புற அரண்களாக நிரலே புடைபரந்து நிற்ப, அகழும் மதிலும் அக அரண்களாக்கொண்டு அழகிலும் திறலிலும் இந்நகர் மிக விளங்கி நின்றது. மணிநீரும், மண்ணும், மலையும், அணி நிழற் காடும், உடையது அரண்

என்னும் உண்மையை உலகம் இதன் கண் உணர்ந்து நின்றது.

மலைநீர் பொழிலரணு மன்னுவேல் மன்னன்
தலைநகரம் தாழ்வடையுந் தான்.

மலையரண் முதலியன ஓர் நகருக்கு நிலைபெறு துணையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

743 அண்டரிய திண்மை அகலம் அயோத்தியரண்
கொண்டிருந்த தென்னே குமரேசா—தண்டா
உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவரணென் றுரைக்கு நூல் (௩)

இ—ள்.

குமரேசா! அகலம் திண்மை உயர்வு என்பவற்றால் அயோத்தி நகரின் அரண் என் மிகப் பெருமையெய்தி நின்றது எனின், உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின் அமைவு அரண் என்று நூல் உரைக்கும் என்க.

இது மதிலரணின் வடிவமைதி கூறுகின்றது. 1934 திருக்குறட் குமரேச வெண்பா.

அண்டு அரிய = நெருங்குதற்கரிய. திண்மை கொண்டிருந்தது என்றது கல்லினும் திண்ணிதாய் வில் முதலியன கொண்டு அகத்தும் புறத்தும் ஆர்ந்தவலியோடு அமைந்திருந்தமை கருதி. தண்டா = எவரும் தாவிக் கடக்கமுடியாத.

அருமை = அணுகுதற்கு அரியதன்மை.

அஃதாவது பகைவர் கிட்ட
நெருங்கவொட்டாதபடி அச்சத்தையும்
அழி
வையும் விளைத்தற்குரிய பொறிகளும்
கருவிகளும் பொருந்தி
நிற்பது.

அமைவு என்றது மதிலே.
அமைவினையுடையதை அமைவு என்றதனால்
இஃது ஆகுபெயர். நூலோரை நூல் என்றதும்
அது.

அகலம், அடி
மேல் என்னும் ஈரிடத்துங் கொள்க. வெளியி
லிருந்து பகைவர் முதலாயினோர் அகழ்ந்து
புகாதபடி அடியகல முடம்,
உள்ளிருப்பவர்கவண் கல் வில் முதலியன
கொண்டு விரைந் தேறி அமைவாக அமர்ந்து
நின்று அமராற்றுதற்கு மேலகலமும் மதிலில்
உறுதியாக அமைந்திருக்க வேண்டுமென்க.

மேல், நீராண் முதலாக நால்வகை அ

ரணின் மேன்மை கூறினார்; இதில், மதிலரணின் பான்மை கூறுகின்றார். அவை புற அரண்கள்; இஃது அக அரண் என்க.

உயர்ச்சியும் அகலமும் திண்மையும் அருமையும் ஆகிய இந் நான்கின் அமைதியையுடைய மதிலை அரண் என்று நூலோர் சொல்லுவர் என்பதாம்.

பார்த்தவுடனேயே ஆ ! இது புகுதற்கரியதென்று பகைவருள்ளத்தில் அச்சத்தை விளைக்க வல்லதாகலின் அக்கருத்து கருதி உயர்வை முதலில் வைத்தார்.

எவ்வளவு உயர்வுடையதாயினும் அகலமில்லையாயின் கருவி முதலியவற்றால் அகழ்ந்து பகைவர் எளிதிற் புக இயலுமாதலால் அங்ஙனம் இயலாதபடி அகலமும், கருங்கல் செங்கற்களால் திட்ப முறக் கட்டப்பட்டிருந்தாலன்றி அவ்வகலம் பயன்படாதாதலால் அதனின் திண்மையும்,

மேற்குறித்த மூன்றும் ஒருங்கே அமைந்திருப்பினும் நெருங்குதற்கரிய பொறிகள் இல்லையாயின் பல்லும்

75-ம் அதிகாரம் அரண்.

1935

நகமும் இல்லாத புலிபோல் கருதி யாரும் பயமின்றி அணுகுவ ராதலால் இறுதியில் அருமையும், முறையே உறுதிபெறவைத்தார்.

மலையரண் நீரரண் நில அரண் முதலிய எவற்றினும் மன்னர் குல நகருக்கு மன்னிய துணையாய் இம் மதிலரணே முதலில் மருவி நிற்கும் ஆதலால் பகைமேற்கொ ண்டு வருகின்ற வேற்று வேந்தர் முன்னதாக இதனையே வளைத்து வெல்ல விழைவர்; இந்த வேந்தரும் எவற்றினும் முதன்மையாக இதனைக் கைக் கொண்டு காக்கத் துணிவர்; இத்தகைய நிலைமையும் தலைமையு முடைய

இஞ்சி லாண் எணி முதலியவற்றிற்கு
எட்டாதபடி மிக உயர்ந்திருப்பதோடு எதிரிகளை
விரைந்து கொல்லவல்ல பல்வகைய போக
கருவிகளும், வஞ்சனை பலவும் வாய்ந்த மாயப்
பொறிக ளும், உருக்கி அருகிருக்கும் ஈயம்
செம்பு முதலிய தீ நீர்களை வாரி வீசத்தக்க
எந்திரங்களும், வீரர்கள் மேலிருந்து பகழ்
முத லியன
சொரிதற்கு ஏற்ற பதணப்பரப்பும், ஒரே
வீழ்ச்சியில் நூறு பேரை ஒருங்கே
கொல்லவல்ல சதக்கினி, தள்ளிவெட்டி,
கழுகுப் பொறி குடப்பாம்பு, சகடப்பொறி,
தகர்ப்பொறி, முதலிய பிறவும் பொருந்தி,
முதலைகள் மிக்குள்ள ஆழ்ந்த அகழியும்
சூழ்ந்து அமைந்திருக்கவேண்டும் என்க.
முழுமுதலரணம் என ஆசிரியர்
தொல்காப்பியனார் இதனை முதன்மைபெறக்
குறித்துள்ளமை

ஈ ண்டுக்குறி க்கொள் ளத்த க் கது .
வழுதிமன் ன ர் தலை ந கராகிய
மதுரையம்பதியில் பண்டிருந்த மதில ரணின்
தன்மையை இத னடியில் வருவனவற்றால்
இனிதுணரலாகும்.

இளையும் இடங்கும் வளைவிற் பொறியும்
கருவிர லூகமும் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும பாகடு குழிசியும்
கா ய் பொன் னுலையுங் கல்லிடு
கூடையும்

தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை
யடுப்பும்

கவையுங் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாவும் கைபெய ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்

எழுவும் சீப்பும் முழுவிறற் கணையமும்
கோலுங் குந்தமும் வேலும் பிறவும்

நஞ்சுபில்கு கொலை வாளெயிற்றரவு நாகமிர்த்தெறியு
மலையரா வெஞ்சினக் கொண்முழை வாய்திறந்து
பொருவாளை விக்கிடவிழுங்குமாற் குஞ்சரக்கொடிய
முசலம்வீசி யெதிர்குறுகுவார்தலைகள் சிதறுமால்
அஞ்சவெம்பொறி விசைப்பினுக் கடுகி யடுபுலிப்
பொறி யமுக்குமால். (௬)

எள்ளி யெறுழை இவுளி மார்பிற எறிந்து
குண்டகழி யிடைவிழத் தள்ளி மீளுமுருள்
கல்லிருப்புமுளை தந்து வீசியுடல் சிந்துமால்
கொள்ளிவாயலகை வாய்திறந்து கனல் கொப்பளிப்ப
வுடல் குப்புறத் துள்ளியாடுவன கைகள் கொட்டுவன
தோன்புடைபப சில கூளியே. (௭)

துவக்கு சங்கிலி யெறிந்திழுக்குமரி
தொடர்பிடித்தகை யறுக்கவிட் டுவக்கும் ஒன்னவர்கள்
தலைகளைத் திருகி யுடனெருக்குமர நிலைகளாற் கலைக்
கொழுந்தழல் கொழுத்தி வீசமெதிர் கல்லுருட்டி
யடுமொல்லெனக் குவைக்கடுங்கன் மழைபெய்யும்
அட்டமணல் கொட்டு மேவலர்கள் கிட்டவே

உருக்கி மீயமழை பெய்யுமா லயவுருக்கு வட்டுருகு
செம்பீலீர் பெருக்கி வீசம் விடுபடையெலாம்
எதிர்பிடித்து விட்டவர் தமைத்தெறச் செருக்கிவீசம்
சடைசற்ற மாடமொடு சென்று சென்று ஓடி
முரசொடும் பெருக்கி மீனுசடை வையமேனடவி
யெய்யும் வாளிமழை பெய்யுமால்.(கூ) வெறிகொள்
ஐம்பொறியை வெல்லினும் பொருத
வெல்லுதற்கரிய காலனை மூறியவெல்லினும்
வெலற்கருங் கொடிய முரணவாயமரர் அரணெலாம்
அறிவிலு னிறுவு கம்மியன் செயவு மரியவா யவனர்
புரியுமிப் பொறிகள் செய்யும்வினை யின்ன
பொன்னணி புரத்து வீதிகளுரைத்துமால் எனப்
பாஞ்சோதி முனிவரும் பாண்டியர், அரணின்
அருமையை உடைசெய்துணர்த்தியுள்ளார்.
உண்மையை யூன்றி யுணர்க.

75-ம் அதிகாரம் அரண்.

உற்றவலி யெல்லா முடைத்தாய்
உயர்வமைந்த கோற்றமதில் மன்னரணு கும்.
கோட்டை மதிலின் மாட்சி இதனால்
கூறப்பட்டது.

---

ஊற்ற அரண்கண் டுறுபகைவ ரஞ்சவான்
கொற்றமுற்றான் என்னே
குமரேசா—பெற்ற
சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.
(ச)

இ—ள்.

குமரேசா! சிறிய தனது
அரண்வலியால் விசபவரான் ஈவர் செருக்கை
என் அடக்கி வென்றான் எனின், சிறுகாப்
பேரிடத்தது ஆகி உறுபகை ஊக்கம
அழிப்பது அரண்

து கோட்டையின் இயலமைதி
கூறுகின்றது
ன என்றது விசையவானை.
அரண் கண்டு உறபகைவர்
ன்று ற கொடுவிடமனைய
அடுபடையுடையதாய் அடல்
வந்த நெடுமுடி மன்னரும் நேர்ந்து
நோக்கியவுடனே
ங்கலங்கி மீள அது நிலைத்திருந்தமை
கருதி. அவ் அரண்
யால் என்றும் வென்றியுடையனாய்
விசையவான் நின்று
ங்கிளைதலால் வான் கொற்றமுற்றான்
என்றும். பெற்ற=ரிதாக எய்திய.
கரப்பு என்றது எளிதான பாதுகாவலே.
அஃதாவது காவ
பலர்கூடி வருந்திக் காக்கலாகாதபடி காப்பிடம் சிறிதாகப்
தியிருப்பதென்க. ஆகி அழிப்பது அரண் என்றது தன்

றுக்கோடாகப் பற்றிநிற்பவர்க்கு உறுதியை உதவி,பகை
ம். ன்னைப் பற்றிக்கொள்ள வருபவர்க்கு இறுதியை விளை
லதாய் அரண் இருக்கவேண்டும் என்றவாறு.

குள் பகை = உற்ற பகைவர்; வென்றுகொள்ளக்கருதித் தன்
ந்த பகைவர் என்க. ஊக்கம் = உள்ளக்கிளர்ச்சி; அஃதா



வது அரசைக் கைப்பற்றிக்கொள்ளலாம் என்று கருதிக்கிளர் துணிவு. பகை உடையராயினும் உறுவழி ஊக்கம் அழிபடா தலால், அழிப்பதற்கு உறுதல் ஏதுவாய் நின்றது.

மேல், மதிலரணின் மாட்சி கூறினார்; இதில், அதன் உட்டத்தின் தன்மை வன்மைகளை உணர்த்துகின்றார்.

அடக்கமான சிறிய பாதுகாவலில் பெரிய இடத்தையுடைதாய்த் தன்னைவந்து தாக்கிய பகைவரது உள்ளக்கிளர்ச்சி.

ஒழித்து நிற்பதே அரணும் என்பதாம்.

மலையரண் முதலிய நிலையரண்கள்
புடைசூழ்ந்திருப்ப இடையே
எளிதிற்காக்கும்படி வழியும் வாயிலும்
அமைந்து, வீரர் ப திரண்டுநின்று
புறத்தாரோடு முனைந்து பொருதற்கு
எற்றவா விரிந்து பாந்த இடம் உளளே
பொருந்தி, எவரும் அஞ்சி அசயாறு
விஞ்சிய மதிலுறுப்புக்கள் மிடைந்து,
ஒருகோட்டை விளங்கியிருக்கவேண்டும்
என்பதை இது விளக்கி நின்றது.

சிறுகாப்பு, பேரிடம்,
உறுபகைஅழிக்குந்திண்மை, என் இவற்றை
அரணின் தன்மைகளாக உணரவைத்துள்ள
ஒன்மையை இதில் உய்த்துணர்ந்து கொள்க.

புன்புலத் தழீஇய புகற்சித் தாகி
வன்றொழில் வயவர் வலிகெட
வருத்த

படைப்புறக் கிடங்கும்
தொடைப்பெரு வாயினும்
வாயிற் கமைந்த ஞாயிற் புரிசையும்
இட்டமைத் தியற்றிய கட்டளைக்
காப்பின்; என அரணியலினைக் காட்டி
வருவதும் ஈண்டுக் காணத்தக்கது.

வந்தபகைவர் அஞ்சியொழியுமாறு
மிஞ்சிய வலியுடைய அரண் விளங்கியிருக்க
வேண்டும் என்பது இதில் உணர்பட்டது.
இவ்வுண்மை சண்பை நகரின்கண்
உணரப்பெற

## கதை.

சண்பைநகர் என்பது அங்கநாட்டிலுள்ளது. உக்கிர
தாசர்கட்கு வழிவழியாக வுரிமையாயது. அம்மாபினில்
விசையவான் என்பவன் இதனை மிகவும் அழகுசெய்திருந்

75-ம் அதிகாரம் அரண். 1943

பண்டுகொட்டே இராசதானியாயிருந்தது

அந்த இந்நகர் அழகினும் திருவினும் சிறந்து

எவரும் புகழ உயர்வு கொண்டிருந்தது. இன்பநலங்கள் இதன்கண் எங்கும் பொங்கி விளங்கின. வளம் பொருந்திய மனைகளும் இனிய நீர் நிலைகளும் இதனைப் புடை சூழ்ந்து பொலிந்திருந்தன. இதன் நடுவேயிருந்த அரசமாளிகை உயர்ந்த மதிலாலும், விரிந்த அகழியாலும், அரண் செய்யப்பெற்று யாவரும் வியந்து நோக்குமாறு அழகுற்றிருந்தது. இதிலிருந்து அரசுபுரிந்த விசையவரன் என்னும் அரசனோடு மறுபுலமன்னர் சிலர் பகைமை கொண்டிருந்தார். இருந்தும் இதன் அரண்வலி கண்டஞ்சி அடங்கியமர்ந்தார். அரணமைதி முதலிய இதன் எழில்நலங்களை வியந்து புலவர் பலரும் புகழ்ந்து கூறியுள்ளார்.

பெரும் புனற்கங்கை பெருவளங் கொடுக்கப்
அங்கநன்னாட் டணிபெற இருந்தது

எங்கு நிகரில்லது எழிற்கிடங் கணிந்தது
பொங்குமலர் நறுந்தார்ப் புனைமுடிப் பொற்
கழல் விச்சா தாருந் தேவ குமாரரும்
அச்சங் கொள்ள ஆடுகொடி நுடங்கிச் சந்திக்
குடக்கொடு தத்துற லோய்பி விளங்குபு
துளங்கும் வென்றித் தாகி யளந்தவாம் பறியா
அரும்படை யடங்கும் வாயிலும் வனப்பும் மே
வி யிற்றிருந்து
மதிலணி தெருவிற் றுக ற்றோர்க்கு
எதிரில் போகம் இயல்பமை மாபொடு
குதிரையுங் களிறும் கொடுஞ்சித் தேரும்
அடுதிறல் மள்ளரும் வடுவின்று காப்ப
நெடுமுடி மன்னருள் மன்ன னோரார் கடுமுர
ணழித்த காய்சின நெடுவேற் படுமணி யானைப்
பைந்தார் வெண்குடை
[illegible] உக்கிர குலத்து ளரசருள் அரசன்
வா[illegible]விற்றிறற் றனை விசைய வரனென்னும்
பெ[illegible]திறன் மன்னன் நாளுங் காக்கும்

சண்பைப் பெருநகர். எனக் கொங்குவேளார் என்னும் புலவர்பெருமானார் இதன் நலனை நயந்து கூறியுள்ளார். இதனால் இந்நகர் நிலையின் பெருமையும் அரண்வலியின் அருமையும் இனிது உணரலாகும். இதனை வென்றுகொள்ள விழைந்து பகைவர் சிலர் முனைந்து வந்தும் யாதுமுடியாமல் மும்முறை முரணழிந்து தொலைந்தார். வீரர்பலர் இனிது நின்று பொருதற்கு ஏற்றவாறு உள்ளே பெரிய இடத்தையுடையதாய், வெளிவாயிலும் சுருங்கை வழியும் சிறிய பாதுகாவலில் இசைமுற அமைந்து, பெரிய மதிலோடு அரிய அகழியுங்கொண்டு இது நிலவி நிற்றலால் பகைவரெவரும் அஞ்சி

என் றும் அணுகாது அகன்று போயினர்.
சிறுகாப்பிற் பேரிடத்ததாகி உறுபகை
யூக்கம் அழிப்பது அரண் என்னும்
உண்மைக்கு இஃது உரிமையாய் நின்றது.
அரண்வலியால் சண்பைநகர் அடுபகைவர்
அடலழித்தே யாரும்போற்ற
முரண்மிகுந்து திருவெழில்கள் முழுதமைந்து
நிலமகளின் முகம்போ
லென்றும, கருணைவொளி தழைத்தோங்கித்
தருநலங்கள் கிளைத்தோங்கிச்
சார்ந்தார்க்கெல்லாம், கருணையுறதாயென்னக்
கருதியதை யினிதுதவிக்
களித்ததன்றே.என்றதும் ஈண்டு
எண்ணத்தக்கது. உறுபகையின் ஊக்கம்
அழித்து,உள்ளியனவெல்லாம் தன்னிடம்
உள்ளவர்க்களித்து அரண்வலியால் இந்நகர்
உயர்வுற்றிருந்த வுண்மையை இ
வும் உணர்த்தி நிற்றல் காண்க.

தாக்க வருவார்தம் ஊக்கந் தனையழித்
தாக்கம் பயப்ப தரண்.

பகைவிரவரும் அணுகுதற்கரியதாய் அரண் அமைவுற்றிருக்கவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

745 கண்டான் துவாரகையைக் கண்ணன் பகைக்காணுக்

கொண்டான்பின் என்னே குமரேசா—பிண்டிக்

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகியகத்தார்

நிலைக்கெளிதா நீர தரண்.

75-ம் அதிகாரம் அரண்.

1945

இ—ள்.

குமரேசா ! நீர் சூழ்ந்திருந்த
துவாரகையைத் தனக்
குப் புகலிடமாகக் கண்ணன் ஏன்
போற்றிக்கொண்டான் எனின்,
கொளற்கு அரிதாய், கொண்ட கூழ்த்து ஆகி,
அகத்தார் நிலைக்கு
எளிதாம் நீரது, அரண் என்க.
இஃது அகத்தவர்க்கு இனிதாய்
அரண் அமைந்திருக்க
வேண்டும் என்கின்றது.
கண்டான் என்றது பல்லாண்டுகளாக
வடமதுரையில் வருந்
தியிருந்து பின்பு புதிதாகத்
துவாரகையைத் தெரிந்துகொண்
டமை கருதி. அங்ஙனம் கண்டவுடனே
பாதுகாப்பிற்குச் சிறந்த
இடம் என்று
அதனை உவந்துகொண்டானாகலால்
ஆறுக்கொண்

டான் என்றும். பகை என்றது சாசந்தன், காலயவனன் முத

வாயினரை. மிண்டி = நெருங்கி; மதத்தால் நெருங்கிவந்து என்க,

ார்

அருமை புறத்தார் கொள்ளமுடியாமைக்கும், வெல்லமுடிதற்கும் ஏதுவாமென்க.

எளிமை அகத்

கூழ்த்து = கூழையுடையது; உணவைக் குறித்துவரும் கூழ்

என்னும் சொல்

இங்கு உணர்ச்சி

நுகர்தற்குரிய பொருள்களெல்லாவற்றையும் கின்றது. கொண்ட கூழ்த்து ஆகி = அமைந்த பலவகை வுணவுகளையுடையதாகி. ஆய்

ஆகி என்ற எச்சங்கள்

ஆம் என்பதனோடிணைந்து நீரது என்னும் குறிப்பு முற்றைக் கொண்டு முடிந்தன.

நீரது = நீர்மையையுடையது.

நீர்மை = தன்மை.

மேல், அரணின் இயலமைதி கூறினார்; இதில், அதனுள் ளமைந்திருக்கவேண்டிய பொருளமைதி கூறுகின்றார்.

பிறர்வந்து வென்றுகொள்வதற்கு அரியதாய், அமைந்த பல வகை உணவுப்பொருள்களை யுடையதாய், உள்ளேயிருப்பாரது போர்நிலைக்கெளிதாகும் நீர்மையையுடையதே அரணாம் என்பதாம்.

இ... ப்கை பலர் திரண்டுவந்து அமர் தொடங்கினும் தம் வயப் ...த்த முடியாதபடி. அகழி முதலிய அருமையான வலிய நிலைக ...மைந்தும், விரைந்து வென்றுகொள்ளமுடியாமையால் புறத்தே ...று அமயநோக்கி நெடுநாளாக அவர் முற்றுகை செய்திருப்

வெண்பா.

பிறவும் உள்ளிருப்பவர் உணவு முதலியவற்றைக் குறித்து ஒருசிறிதும் கவலைகொள்ளாதவாறு பொருள்கள் மலிந்தும், வெளியில் நிற்பவரை அம்பு சக்கரம் கண்டு பிண்டி பாலம் முதலியன கொண்டு எளிதில் வீசி வெல்லுதற்கு ஏற்றவண்ணம் மதில்மேல் இடமுதலியன இனிது பொருந்தியும், அரண் இருக்கவேண்டும் என்பார் அரிதாய்க், கூழ்த்தாகி, எளிதாம் நீரது என்றார்.

மருங்குசேர்க் கிடங்கு வெள்ளிடை கான
மலையுறவகன் றுயர்ந்தரங்கொண்
டொருங்குபல் பொறியும் அணிந்த பேரிடத்தா
யுறுசிறுகாப்பினல் வீரர்
நெருங்குபல் பொருளுந் தழுவி யெத்திறத்தும்
நேரலர் கொளப்படா ததாகிச் சருங்கையாதிகளும்
பொதிந்தகத் துறைவோர் தொழிலினி தாற்றுவது
அரணே. என்பதும் கண்டு அறியத்தக்கது.

எவராலும் வெல்லுதற்கரியதாய், உள்ளேயிருப்பவர்க்கு எல்லா நலங்களையும் இனிதுதவ வல்லதாய் அரண் அமைந்திருக்க வேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துவாரகையின்கண் உணரப்படும்.

## கதை.

துவாரகை என்பது மேல்கடலின் கீழருகில் நாற்புறமும் நீர மைந்திருப்பச் சீரமை ந்திருக்குந் திருநகர். அழகிய சோலைகள் புடைசூழக் கடலிடை ஓர் விழுமிய தீவகம்போல் இது விளங்குகின்றது. கூர்ச்சர தேசத்தின் வடமேலெல்லையில் இது மருவியுள்ளது. சராசந்தன் சாளுவன் காலயவனன் முதலாகப் பகைவர் பலர் திரண்டு இடையிடையே வந்து இடர் விளைத்ததைக் கண்டு கண்ணன் இதனைத் தனக்குக் காப்பிடமாக் கொண்டான். அமரரும்

வியக்கத்தக்க பெருநலங்களெல்லாம் இதில் அமருமாறு அமைத்துக்கொண்டு அருந்திறலோடு அதன்பின் இருந்தசெ செய்தான். இது புறநகர் புடைநகர் இடைநகர் அகநகர் என நால்வகையாய் நிலவித் தனித்தனியே தக்க பாதுகாவலுடைய தாய் மிக்க செழிப்போடு மேவியிருந்தது. அழகிய செய்குன்றுகளும் விழுமிய பொய்கைகளும் நறுவிய மலர்ச்சோலைகளும் காட்சிக்கினியனவாய் எங்கணும் இதில் மாட்சியுற்றிருந்தன. வடமதுரை யிலும் பிற இடங்களிலுமிருந்த குடிபடைகளையெல்

75-ம் அதிகாரம் அரண்.



லாம் இதில் குடிபுகும்படிசெய்து பகைகடிந்து கண்ணன் மிகமகி ழ்ந்திருந்தா ன். வடமதுரையிலிருக்கும்பொழுது படையோடு

மிக நெருங்கி வந்த பகைவரெல்லாரும் இதன் அரண்வலி கண்டபின் முரணழிந்து சென்றார். அரசமைதியோடு பாதுகாவல் முதலிய பல நலங்களுங்கொண்டு இது மிக விளங்கி நின்றது.

தருமந் தன்னகந் தங்கிப் பொலிவுறத்
தெருமந் தன்னது பாவஞ் சிதைதர
அருமந் தன்னவன் வைகலின் ஆரணுங்
கருமந் தன்னமும் இன்றக் கடிநகர்.
(க)

கொடிய விஞ்சி வட்காரைக் குனித்தடுங்
கொடிய விஞ்சிவட் காரைக் குனித்தடுங்
கடிய கற்சிக் கிடங்காக் காலுறும்
கடியகற்சிக் கிடங்காக் காலுறும்.
(உ) என இதன் காவலருமைகளைக் கவிகள் பாவிலமைத்துப் பாடி மகிழ்ந்துள்ளார். புறத்திலிருந்துவரும் பகைவரெவருக்கும் புகுதற்கரியதாய் எத்துணை ஆண்டுகளாயினும் உள்ளிருப்பவர்க்கு உணவு முதலிய எல்லா இன்பங்களையும் எளிதிலுதவ வல்லதாய்

இஃது இசைபெற்றிருந்தது. கொளற்கு அரிதாய்க் கொண்ட கூழ்த்தாகி, அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண் என்னும் உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்து நின்றது.

குசேலர் கண்ணனைக் காணவிரும்பி இந்நகரை அடை ந்த பொழுது இதன் வளங்களையும் அரண்வலிகளையும் கண்டு வியந்து கொண்டமை இதனடியில் வருவனவற்றால் விளங்கக்காணலாம்.

சீதளப் பனிக்கு மாடமேல் மடவார் செறிதரு புலவியில் வெறுத்த
தீதரு மணிபொன் தரளமாலிகைகள் செல்பவர் காலுறப்பின்னி
மாதர்மேல் மைந்தர் மைந்தர்மேல் மாதர் மாறிவீழ்தர அடிக்கடிசெய்
ஏதமி லரசவீதியிற் புகுந்தான் இருந்தவக் குசேலமா முனிவன். (1) போதரு மிடங்க டொறுமொருக் குறலாற் பொன்வரையனைய தோள்மைந்தர் மேதகு மார்பத் திலங்குமா லைகளும் விரைகெழு கலவையு

மிஷமை
மாதர்மெய்ப் பூசல் குங்குமச்சேறு மான்மத மனாவி
ஐர்னூற்றுக்
காதநாறிடுசெஞ் சந்தமுங் குசேலன்கர்தையும் காறின
மாதோ. (2)

244

1948 திருக்குறட் குமரேச
வெண்பா.

செப்பரு மருநூல் மடந்தபு தோர்ச்சிச் செந்தமிழ்ப்
புலவர்தம் னூக்கிற் றிப்பிய அணியும் பல்பொருள்
வாய்ப்புக் தெளிதருசீர்மையுஞ் சீரும் தப்பிலா முழு
ங்கொண் டலர்மணமுடைத்தாய்ச்
சாற்றுசோறகலமுற் றெவ ரும், ஒப்பருங்
குரைத்தென் றுரைத்திடப்பொலியும
உள்நகாரகழியைக் கடந்தான்
(3) படங்கிளர் அரவப் பாயுடைப் பகவன் பாரளந்
திட்ட நான்வளர்ந்தாங்கு இடங்கொள் விண்ணுலகம்
போழ்ந்துமேல் வளரா எதிர் தரியலருயிர்மடங்க
முடங்குளை மடங்கல் அடங்கரு முழுவை

முதற்கொடும் பொறிபல வுடைத்தாய்த்,
தடங்கொளீஇ நின்ற மதிற்பெருவாயிற் றடையையுந்
தடையறக் கடந்தான்.
(4)

கொளற்கரிய தன்மை சூழுடைமை
முதலிய நன்மைகள் யாவும் இது
கொண்டிருந்த வுண்மையை இவற்றள் கூ
ர்ந் துணர்ந்து கொள்க.

" சண்டமுகி லுருமனைய சாரசங்கள்
தனக்கஞ்சி
வண்டுவரை அரணாக வடமதுரை
கைவிட்ட
திண்டிறல் மாதவன் " என்று சாத்தகி
கொண்டுமொழிந்த இதன் கண்ணும்
மேற்குறித்த வுண்மை குறித்திருத்தல்
காண்க.

உற்றவருக் கின்பம் உதவி
உறுபகைவர்க்
கற்றம் விளைப்ப தரண்.
தன்னகத்துள்ளவர்க்கு என்பம்

இனிய நீரதாய் அரண்
இசைந்திருக்கவேண்டும் என்பது இதனல்
கூறப்பட்டது.

---

746 உற்றபொருள் நல்லா
ளுடைமையால் உஞ்சையரண்
கொற்றமுற்ற தென்னே குமரே
சா—முற்றவே
எல்லாப் பொருளு முடைத்தா
யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.
(௬)

இ—ள்.

குமரேசா! பொருளும் படையும்
மிகவுடைமையால் உஞ்சையரண் என்
புகழ்பெற்றிருந்தது எனின், எல்லாப்பொரு
ளும் உடைத்தாய் இடத்து உதவும் நல்லாள்
உடையது அரண் என்க. எனவே இல்லது
அரணகா தென்பதாயிற்று.

75-ம் அதிகாரம் அரண்.

இது பொருள் படைகளால் அரண் உயர்வடையும் என்கின்றது.

உற்றபொருள் என்றது போகம் புணர்ந்த பொன்னகர் போல வேண்டிய பொருள்கள் யாவும் ஈண்டியிருந்தமை கருதி. நல்லாள் என்றது வேலுந் தண்டுங் கோலுங்குந்தமும், வாளும் வளையும் நாளும் பயின்று, ஆளிமொய்ம்பின் மீளிமைகொண்டு, ஊனமிகந்து மானமிகுந்து, உண்மையும அன்பும் உரிமையுமுடை யராய் அவர் நின்றிருந்தமை கருதி.

எல்லாப்பொருளும் என்றது நுகர்தற்கு வேண்டிய பொருள் கள் எல்லாவற்றையும் என்றவாறு. அஃதாவது அரணகத்துள்ள மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய உணவு உடை படை முதலிய பொருள்கள் யாவும் என்க. மூன்றும்

பின்னுமுள்ள பெயரும் உம்மையும் பொருளின் குறைவின்மையைக் குறித்து நின்றன.

இடத்து உதவும் = சமயத்தில் உதவுகின்ற. நல்லாள் என்றது வீரர்களை. நன்மை ஆளின் தன்மை தோன்றநின்றது. ஆள்சாதி யொருமை. அஞ்சாமை தூங்காமை அறிவு ஊக்கம் மானம வீர முதலிய நற்குணங்களையுடையவர் என்பார் நல்லாள் என்றார்.

மேல், புறத்தவர் வந்து கொள்ளுதற்கு அரியதாய் அரண் பொருந்தியிருக்கவேண்டும என்றார்; இதில், எவரையும் வெல்ல வல்ல வீரர்களை அஃது எய்தியிருக்கவேண்டும் என்கின்றார்.

உள்ளே இருப்பவர்க்கு வேண்டிய எல்லாப் பொருள்களையு முடையதாய், இடையூறு நேர்ந்தபொழுது எதிர்ந்து உதவுதற்கு ரிய நல்ல வீரர்களையுமுடையதே

அரணும் என்பதாம்.

பொருளுடையதாயினும் ஆள் இல்லையாயின் பற்றுடையராய்ப் பகைவர் பற்றவந்தபோது களிறிழந்த கயமுனிபோலவும், கோடிழந்த குளநீர் போலவும், அரண் பீடழிந்துபோம் ஆதலால் அங்ஙனம் ஆகாதபடி தனக்கு ஆதரவாய் நின்று எவரையும் வெல்லவல்ல நல்ல வீரர்களை என்றும் அது மேவியிருக்கவேண்டும் என்பார் நல்லாளுடையது அரண் என்றார்.

1950 திருக்குறட் குமரேச வெண்பா.

அரணின் பொருளுடைமை இனிது நின்று பயன்படுதற்கு வினையாண்மை மிக்க வீரருடைமை இன்றியமையாது என்பதை அது நின்றிருக்கும் நிலையால் நன்குணர்த்தி நின்றது.

அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே என்று திருமாலை நோக்கி இளவெயினனார் கூறியபடி அரணின் பொருளுக்கு இவ் வீரர் அரணமாக அமைந்துள்ளார் என்பதாம். அரணம் = காவல்.

மிக்க பொருள்களையும் தக்க வீரர்களையும் தன்னகத்தே கொண்டு அரண் தங்கியிருக்கவேண்டும் என்பது கருத்து.

ஆளும் பொருளும் இல்லையாயின் அவ் அரண் வாளும் வலியும் இல்லாத ஒருவன் படைத்துணைமைபோல் வறிதுபடும் என்பது குறிப்பு.

நிறைந்த பொருள்களையும் சிறந்த வீரர்களையும் உயர்ந்த அரண் பொருந்தியிருக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உச்சைனியின்கண் உணரப்படும்.

கதை.

உச்சைனி என்பது அவந்தி நாட்டி லுள்ளதொரு சிறந்த நகரம். உஞ்சை உச்சைனி அவந்தி எனவும் இஃது அழைக்கப்படும். பல்லாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தே பல கலங்கட்கும் இடனாய் நின்று இசைபெற்றுள்ளது. பழைய நூல்கள் பலவற்றுள்ளும் இதன் புகழ்மணம் கமழ்கின்றது. குலமன்னர்கள் பலர் இதிலிருந்து கோமுறை புரிந்துள்ளார். முதலில் சூரியகுல வேந்தர்கட்கும், பின்பு சந்திரகுல மன்னர்கட்கும், இறுதியில் விக்கிரமார்க்கனுக்கும் உரிமையாயமைந்து இஃது உயர்வுற்றுள்ளது. உயரிய மணிமாடங்கள், அழகிய பொய்கைகள், விழுமிய பொழில்கள், முதலிய எழில் நலங்கள் யாவும் இதன்கண் சுழுமி யுள்ளன. இதிலுள்ளவர்கள் அறிவிலும் திருவிலுஞ் சிறந்து விதி முறை வழாதொழுகி அரிய போகங்களை நுகர்ந்து அமரர்கள் போல்

உயர்வுற்றுள்ளார். நாளும் நாளும் பெரிய விழாவோடு கூடிய காளிகோவில் ஒன்று இதில் கவினுற்றுள்ளது. அத் தேவியை இந்நகருக்கு அதிதேவதையாக அனைவருங்கருதி அடி பணிந்து வருவார். உச்சினிமாகாளியென எப்பக்கங்களிலும்

75-ம் அதிகாரம் அரண்.

1951

எண்ணித் தொழுதலை இப்பொழுதுங் காணலாம். இந்நகர மாந்தர் வருடத்துக்கு ஒருமுறை இதனருகிருக்கும் பெரிய பொய்கையில் அழகுற நீர் விளையாட்டயர்வார். அங்ஙனம் ஆடுங்கால் பல்வகைத் தானங்களைப் பண்புடன் செய்வர். அச்செயல் இதன் செல்வநிலையைத் தெளிவுறக் காட்டுகின்றது. பிரச்சோதனன் என்னும் மன்னன் இதிலிருந்து அரசுபுரிந்து வருங்கால் நெறிமுறையே நீர்விழாக்கொண்டாடினன். அதுபொழுது குடிகள் செய்த ஞான நிலைகளையும், தானமுறைகளையும் இதனையயில் வருவனவற்றால் இனிதுணராகும்.

புண்ணியப் பெருந்துறை மன்னவன் படித்தபின்

இறைகொண் டெண்டிய எனை பாத்தரும்
தாறுதுறை கோறும் உறைவிடம

பெயர்வு

தண்புன லாட்டின் தக்கனை எற்றும்
அந்தணர் அடைக விரைந்தெனப்
பயிலாளரைப் பயிர்வனர் கூஉய்க்
கவர்வனர் போலக் காதலி னுய்த்து
நன்கலமேற்றி நாளணி யணிந்து
மங்கல வேள்வியுள் மகளி ரோரும்
செம்பொற் புரிசை வெண்சுதை மாடத்து
உழைக்கலம் பாய்பி புருவிய மகளிரோ
டிழைக்கல நீஇ இல்லீ ரோரும்
ஆலைக் கரும்பும் அரியுறு செந்நெலும்
யாளைக் கமுகின் படுவுஞ் சூட்டிப்
புயல்சே ணீங்கினும் பூவளங் குன்றா
வயலுந் தோட்டமும் வழங்கு வோரும்
காகுளல் நீங்கிய சேதாத் தொடுத்துக்

குளம்பும் கோடும் விளங்குபொன் னுறீஇத்
தளையும் தாம்பும் அளைகடை மத்தும்
கழுவும் கலனும் வழுவில பிறவும்
பைம்பொனி னியன்றவை பாற்பட வகுத்துக்
குன்றுக் கோடி கொடுத்தவப் போரும்
இன்னவை பிறவும் என்னோர்க் காயினும்

1952 திருக்குறட் குமரேச

வெண்பா.

உடையவை தவாஅக் கொடைபுரி படி
வமோ
டிலமென் மாக்களை இரவொழிப்பவர்
போல்
கலங்கொடை பூண்ட கையராகி
வெண்டுகில் பூட்டிய வேழக்குழவியும்
ஒண்படை யணிந்த வண்பரிப் புரவியும்
உண்டியும் உடையுங் கொண்டகன்று

செறித்த
பண்டியும் ஊர்தியும் கொண்டன ருழிதந்
தந்தணர் சாலையும் அருந்தவர் பள்ளியும்
தந்தற மருங்கிற் றலைவைப் போரும்
சிலமபெய் வோரும் நிதிபெய் வோரும்
களிறுபெய் வோரும் பரிபெய்
வோரும்
பெய்வோர் பெய்வோர் பெயர்வறக்
குழீஇக்
கொள்வோ ரறியாக் குவையாகி
மணற்கெழு பெருந்துறை மயங்குபு
கழீஇ
வனப்பொடு புணர்ந்த வகையிற்றாகிப்
புனற்பாற் பட்டன்று பூநகர்.
(உஞ்சைக்காண்டம்) இதனால் இந்நகர்
எல்லாப் பொருளும் உடைத்தாயிருந்தமை
இனிது தெளியலாம். இது புறநகர்
அகநகர் என அமைந்து தனித்தனியே

தருந்த அரண்வலிகொண்டு சிறந்திருக்கது.
இதன் அரண்வலியை நினைந்து பகைவெ
ரவரும் அணுகுதற்கு அஞ்சியடங்கி நின்றார்.
அகத்தவர் இன்புற அமைந்து புறத்தவர் அச்
சம் பொருந்த இது பொலிந்து நின்றது.
பிணி பகை அச்சம் முதலிய துயர்நிலைகள்
யாதுமின்றி எல்லா இன்பங்களையும் நுகர்
ந்துயர்ந்தமையால் இதிலிருந்தவர்கள்
இறந்துபோயினும் இதன் கண்ணேயே
மீண்டும் பிறந்துகொள்ளவேண்டும் என்று
தம்முட் பேணி நின்றார். "எழுமைப்
பிறப்பும் எய்துகம் யாம் எனக் கழுமிய
காதலோடு கைதொழுதேத்தி, நகரமாந்தர்
பகர்வர்"
என்று இது பகா நின்றது. பொருள்வளங்களோடு அறிவும்
மானமுமுடைய வீரர்கள் பலர் அமைந்து நின்றமையால் இது
பெருவலியுடையதாய் என்றும் நிலைகுலையாது நிலவி நின்றது.
எல்லாப் பொருளும்
யது அரண் என்னும்

உடைத்தாய் இடத்ததவும் நல்லாளுடை
உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்து
நின்றது. ஓங்காண் அமைந்த உயர்நிலை
உஞ்சை எனவும்,

75-ம் அதிகாரம் அரண்.

1953

விறலுஞ் சேனையும் நீண்ட விஞ்சியும்
உயர்மதி லணிந்த உஞ்சையம் பெருநகர்.
எனவும் இதன் அரண்வலிமையக்குறித்து
உரைசெய்தன்ளன இங்கு உள்ளத்தக்கன.

ஒண்பொருளும் திண்படையு
முள்ளவரண் எஞ்ஞான்றும்
பண்புயர்ந்து நிற்கும் பயன்.

காவல் வீரரை அரண் மேவி
யிருக்கவேண்டும் என்பது இங்கு
கூறப்பட்டது.

---

சென்றதை இது முன்னி நின்றது. எ: = அழு. ஒன்றாக என்றது முற்றுதல் முதலிய மூன்றுக்கும் அடையாக முறையே கருத நின்றது.

முற்று தல் = நெருங்கிச் சூழுதல். நகரைப் பற்றவந்த பகைவர் அகத்தவர் வெளியே வாராமலும் புறத்தவர் உள்ளே புகாதபடியும் முதலில் மதிலை வளைந்து நிற்பாராதலால் அதனை முற்றி என்றார். " முற்றிக், குரிசில் அடையாரைக் கொண்டகூட் டெல்லாம், பரிசில் முகந்தனபாண் " என்புழி இது நின்றுணர்த்தும் பொருளையுணர்க. எறிந்து என்றது வேல் முதலியன கொண்டு வீசிப் பொருதலை. எறிந்து களம்படுத்த என்றது புறம்.

1954 திருக்குறட் குமரேச வெண்பா.

அறைப்படுக்கும் = வஞ்சித் துப்

போக்கியும். அஃதாவது வேறுபாடு இல்லாதவர்போல் மாறுபாட்டுடன் உள்ளே புகுந்து தம் அரசனுக்கு இனியராய் நடித்து அந்தக் காவல்செய்து நிற்கும் வீரரை வஞ்சித்து வெளிப்படுத்தி நிலைகெடும்படி செய்து உடனே தாம் நினைந்ததைச் செய்தல் என்க. இது கீழறுத்தல் எனப்படும். இச்செயலுடையாரை அறைத்தொழிலார் என்பர். அறைத் தொழிலார்க்கும் செல்லா அருமிளை புகுமின் என்றான் என்பதுங்காண்க. மிளை = காவற்காடு.

மேல், மிக்க பொருள்களையும் தக்க வீரர்களையும் அரண் மேவியிருக்கவேண்டும் என்றார்; இதில், எவ்வாற்றானும் பகைவர் கைக்கொள்ளுதற்கரியதாய் அது மெய்க்கொண்டிருக்கவேண்டும் என்கின்றார்.

பகைவர் வந்து நெருங்கிச் சூழ்ந்தும், அங்ஙனம் சூழாது நிலை நோக்கி நேர்ந்து

பொருதும், வஞ்சனையால் பேதித்தும் கொள்ளுதற்கு அரியதாய்க் குலவி நிற்பதே அரணாம் என்பதாம்.

முற்றுதல் எறிதல் அறைப்படுத்தல் என்னும் இவை ஓர் கோட்டையைப் பிடித்தற்குப் பகைவர் கைக்கொள்ளும் உபாயங்களாமாதலால் அவற்றை எடுத்துக்காட்டி அரணின் அமைதிப்பெருமைகளை விளக்கியருளினர். முற்றுதலை முதலில் வைத்தது புறத்திலிருந்து வந்தவர் முந்துறச் செய்வது அதுவேயாகலான் என்க.

எவ்வாற்றானும் பகைவர் வென்றுகொள்ள முடியாதபடி அரண் நின்று திகழவேண்டும் என்பது கருத்து.

எவரானும் எவ்வகையானும் நிலை குலையாதபடி சிறந்த அரண் நிலைத்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசகிரியின்கண் உணரப்படும்.

கதை.

இராசகிரி என்பது மகதநாட்டிலுள்ளதொரு பெரிய நகரம். அந்நாட்டு மன்னரிருந்து அரசுபுரிந்துவந்த தகுதியுடையது. வழி முறையாகப் பெருமை வாய்ந்தது. அரிய போகங்களையுடையது. அக்காலத்தில் விளங்கிநின்ற இராசதானிகளுள் இது மிகச் சிறந்

75-ம் அதிகாரம் அரண்.

1955

திருந்தது. அழகிலும் திருவிலும் எந்நகரும் தனக்கு இணையில்லது என இசைதிசை போயது. தனக்குப் பாதுகாவலாக விழுமிய நகரங்கள் பல புடைசூழ்ந்திருப்ப இடையே இது நிலவி நின்றது. அதனால் தாரகை நடுவே தயங்குவெண் மதிபோல் இவ் வூரிருந்ததெனக் கவிகள் உரைத்து நின்றனர்.

விண்ணுற நிவந்த பண்ணமை

படைமதில்

வாயிலும் மருங்கிலுங் காவல்கண்ணி
வேர்துபிழைத் தொழுகினுங் காய்ந்து

கலக்கரு

முழுப்பரி சார முதற்க ணைப்தி
விழுப்பெருஞ் செல்வமொடு

வென்றிதாங்கிய

ஐம்பதி னிரட்டி யவனச் சேரியும்
எண்பதி னிரட்டி யெறிபடைப் பாடியும்
அளப்பருஞ் சிறப்பி னாயிர மாகிய
தலைபெருஞ் சேனைத் தமிழச் சேரியும்
மிலேச்சச் சேரியும் கலைக்கலை சிறந்து
வித்தக வினைஞர் பத்தியிற் குயிற்றிய
சித்திரச் சாலையு மொத்தியைந் தோங்கிய
ஓட்டுவினை மாடமும் கொட்டுவினைக்

கொட்டிலும்

தண்ணீர்ப் பந்தரும் தகையமை

சாலையும்

அறத்தியல் கொட்டிலும் அம்பலக்

கூடமும்

தேவ குலனுந் தேசிகப் பாடியும்
மாவுந் தேரும் மயங்கிய மறுகும்
காவுந் தெற்றியும் கடவுட் பள்ளியும்
தடவளர் செந்தீ முதல்வர் சாலையும்
வேண்டிடந் தோறுங் காண்டக நெரு
ங்கி

ஈண்டியிருப்ப இஃது இனிதிருந்தது. அ
ரணாக இதிலமைந்துள்ள மதிலும் அகழியும்
யாருக்கும் அச்சத்தை விளைவிக்குமாறு உச்ச
முற்றிருந்தன. தருசகன் என்னும் அரசன்
இதிலிருந்து முறை செய்து வருங்கால்
பகைவர் பலர் அவன்மீது மிகைசெய்து நின்
றூர். அவருள் குறுநில மன்னரெழுவர் தம்
படைவலிகொண்டு பலமுறை பொர
வெழுந்துவந்தார். மூண்டுநின்று
முற்றுகை யிட்டார். வெகுண்டு
பொருதார். வேண்டிய உபாயங்களை

வெண்பா.

விளைத்துப் பார்த்தார். ஆணவரையும்
பார்த்தும் அரண்வலியைக்
கடக்கமாட்டாமல் மூரண் அழிந்து
மாண்டார். பலர் அஞ்சி
மீண்டார். தம்மன்னனிடம் மாறு அன்பும்
மானமும்மிக்க வீரர்
பலர் காத்துநிற்ப இதன் அரண்
வீறுகொண்டு நின்றது. அமய
மறிந்து அம்மன்னன் எழுந்து அனைவரையும்
அடங்க வென்று
நகரினையடைந்து அரண்வலியால்
உயர்வுகொண்டிருந்தான். முற்
றியும், முற்றாது எறிந்தும், அறைப்படுத்தும்
பற்றற்கு அரியது அரண் என்னும்
உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்து
நின்
றது. இந்நகரின் காவலருமையை வியந்து

தாமரை மலராகவும்
இதன் மதிலைக் கன்னிகையாகவும்
உருவகஞ்செய்து கொங்கு
வேளிர் என்னும் புலவர் திலகர்
கூறியுள்ள இன்பமொழிகள்
இங்கு எண்ணத்தக்கன. சில இதனடியில்
வருகின்றன. தொடர்
ந்து படித்தற்கு முதலிற் சிறந்து மலைவு
தோன்றினும் பொறுமை
யோடு துருவி நோக்கின் பின்பு
இன்பம்பெருகித்தோன்றும் ஆக
லால் அன்புசெய்து கருதிக்காண்க.

நகரின் அமைதி.

வண்டிமிர் பொய்கையும் வாவியுங்
கயமுங்
கேணியுங் கிணறும் நீணிலைப் படுவும்
நறுமலர் கஞலி யுறநிமிர்ந் தொழுகிச்
சாலி கவினிய கோலச் செருவிற்
செல்வங் கொடுத்து நல்குத வறாஅ

இன்பங் கெழீஇய மன்பெருஞ்
சிறப்பிற்
பல்குடிக் தொல்லூர் புல்லுபு சூழ
உயர்மிசை புலவின் உருகெழு பன்மீன்
அகலயிற் பொலிந்து தன் அலங்குகதிர்
பரப்பி
நிலப்புடை நிவத்தரு நிறைமதி போலக்
காட்சி யியைந்த மாட்சித் தாகிக்
மதிலின் மாட்சி.
கண்டவர் நடுங்குங் குண்டகழ்ப்
பைந்துகில்
தண்டாச் செல்வமொடு தனக்கணி
யாக
வுடுத்துவீற் றிருந்த வடுத்தீ ரல்குன்
75-ம் அதிகாரம் அரண்.
1957
மாற்றோர் நுகாப் படாஅ தேற்ற
பன்மணி பயின்ற ஒண்முகட் டுச்சி

நலத்தகு வாயில் இலக்கண இளமுலைப்
பொறிநிலை யமைந்த போர்ப்பெருங்
கதவிற் செறிநிலை யமைந்த சித்திரப்
புதவின் யாப்புற அமைத்த வாய்ப்புடைப்
பணிவல்லோர் வகுத்த செல்வக் கூடத்
தாய்நலக் கம்மக் கழகொடு புணர்ந்து
தீயழற் செல்வன் செலவுமிசை தவிர்க்கும்
வாயின் மாடக் காய்நல வணிமுகத்
தொண்பொற் சத்தித் திண்கொடி சேர்ந்து
விண்ணிற் செல்லும் விளங்கொளி
யவர்களை மண்ணிற் செல்வங் காணிய
வல்விரைந் தடைதர்மின் என்னும்
அவாவினபோல வடிபட வியங்கும்
வண்ணக் கதலிகைக் கூந்தலணிந்த
எந்துநுதற் சென்னிக் கடியெயில்
முதுமகள் காவலாக

வீரரிருக்கை.

அரும்படைச் செல்வ ரமர்ந்தினி துறையும்
பெரும்படைச் சேரி திருந்தணி யெய்திக்

கைபுனை வனப்பினோர் பொய்கை யாக
வேளாளர் வீதி.

சால்பெனக் கிடந்த கோலப் பெருநகம்
பொறைக்கழி கோத்துப் பூண்டனராகி
யுயர்பெருங் கொற்றவ னுவப்பினுங்
காயினும் தவிர்க்கவும் பேர்க்கவும் படாத
தன்மையர் நன்புலக் தழீஇய மன்பெருஞ்
செய்கைக் காரணக் கிளவி பூாண நோக்கிற்
பெருங்கடி யாளர் அருங்கடிச் சேரி
புறவிதழ் மருங்கிற் புல்லிதழாக
·1958 திருக்குறட் குமரேச
வெண்பா.

வணிகர் மறுகு.

மதிபுறம் சங்கின் வாய்வயிற் போந்த
நிதியம் பெற்ற நீர்மையர் போல
அதிரா வியற்கை யங்கண் ஞாலத்துக்
குதிரை மருப்புங் கொளற் கரிதாகிய
அழலுமிழ் நாக நிழலுமிழ் மணியுஞ்

சிங்கப் பல்லுக் கெண்டிரைப்
பௌவத்து மூவா வமரர் முயன்றுடன்
கொண்ட வீயா அமுதமும் வேண்டிற்
போய்த்தரும் அரும்பெறற் பண்டம்
ஒருங்ககத் தடக்கி விட்டனரிருவா
முட்டில் செல்வத்துப் பல்விலை வாணிகர்
நல்விலைச் சேரி
புல்லிதழ் பொருந்திய நல்லித ழாக;

அந்தணர் தெரு.

மேன்முறை இயன்ற நான்மறைப்
பெருங்கடல் வண்டுறை யெல்லை
கண்டுகரை போகிப் புறப்பொரு ளல்லா
அறப்பொரு ஞாவி னொளிகண் கூடிய
நளிமதி போலத்
தந்தொழில் திரியா தரும நெஞ்சின்
அந்தண சேரி அகவித ழாக;

அமைச்சர் மன்றம்.

இருநில வரைப்பி னெதிர்ப் போரின்றி
பருநிலை யுலகி னாட்சி விருப்பினும்

பெரும்படைக் கொற்றம் பீடழிந்து
சுருங்கா வரும்படை மன்னர்
ஆற்றலின் நெருங்கத் தலைமையின் வழீ
இ ல்லைமை யெய்தினும் உற்றது
முடிக்கும் உறுதி நாட்டத்துக் கற்றுப்
பொருடெரிந்த கண்போல் காட்சி
அருமதி யமைச்சர் திருமதிற் சேரி
மாசில் பைந்தாது சுமந்த மத்தகத்
தாசில் பன்மலர் அல்லி யாக;

௫௦-ம் அதிகாரம் அரண்.

1939

அரண்மனை.

சுடுகதி ரணிந்த சூழ்கதிர்ச் செல்வன்
விடுசுடர்ப் பேரொளி விமானம் போலச்
சேணொளி திகழும் மாண்வினை மாடம்
வேண்டிய மருங்கிற் காண்டக நெருங்கிச்
செஞ்சுடர் மணிமுடி திகழுஞ் சென்னிப்
பைந்தலை நாகர் பவனங் கடுப்பக்

காட்டின் ருசிலும் கண்டோ ருட்கும்
யாப்புடைப் புரிசை யணிபெற வளைஇ
யருமணிப் பைம்பூண் அரசகக்
கடைந்து
வாயிலணிந்த வான்கெழு முற்றத்துக்
கோயில் கொட்டையாகத் தாமரைப்
பூவொடு பொலியும் பொலிவிற்றாகி
அமையாச் செய்தொழில் அவுணர்க்
கடந்த
இமையாச் செங்கண் இந்திர னுறையும்
அமராபதியும் நிகர்தனக் கின்றித்
தன்பதிக்குத் தொழிலிற் றாகி
இன்பங் கலந்த இராசகிரியம் என்
றெண்டிசை மருங்கினும் தன்பெயர்
பொறித்த
மன்பெருஞ் சிறப்பின் மல்லன் மாநகர்.
(மகதகாண்டம்.) நட்சத்திரங்கள் பல
புடைசூழ இடையே விளங்கும் முழுமதி
போல் அழகிய வூர்கள்பல

அருகமைந்திருப்ப நடுவே இந்நகர்
இனிதமர்ந்துள்ளது என்பதும், படைகளும
குடிகளும் புறத்தே இதழ்களாகப் பொருந்தி
நிற்ப விழுமிய தாமரை மலர்போல இது
விளங்குகின்றதென்பதும், வான்முகடு
தடவும் கொடியாடைகளுடன் இதன்
மதிலரண் யாவர்க்கும் அச்சத்தை விளை
வித்துக் கொண்டு அமைந்து
நிற்கின்றதென்பதும், கலம்பல பொருந்தி
யெங்கும் இன்பம் துலங்க
இலங்குகின்றதென்பதும், இதில்
புலன்கொள நிற்றலைப் பொருந்தியுணர்க.
எவர்க்கும் பற்றற்கரிய தாய்
ஆண்வலிகொண்டு இது வெற்றியுற்று
நின்றமையை மது

புல மன்னரும் வியந்து போற்றியுள்ளார். விசிலைப் கதையில் காண்க. ஆதிக்கலந்த இராசகிரியம் என்க.
பெருவ்

1960 திருக்குறட் குமரேச

வெண்பா.

வானளந்த கைபோல வன்பகைவர்
நோந்தயரத்
தானமைந்து நிற்ப தரண்.

யாரும் பற்றுதற்கரியதாய் அரண் கொற்றமுற்றிருக்க வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

748 முற்றவந்த வேந்தர் முறிந்தார் பறம்பாலைற்
கொற்றமுற்றான் கோனென் குமரேசா—சுற்றமே
முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(அ)

இ—ள்.

குமரேசா! சூழ்ந்து வெல்லவந்த மன்னர் தாழ்ந்து போக பறம்பாலுல் பாரி வென் வெற்றிபெற்று நின்றான் எனின், முற்று ஆற்றி முற்றியவரையும், பற்று ஆற்றிப் பற்றியார் வெல்வது அரண் என்க.

இது, தன்னைப்பற்றி நிற்பவர்க்கு வெற்றியைத் தரவல்ல தாய் அரண் விளங்கியிருக்கவேண்டும் என்று கூறுகின்றது.

முற்றவந்த வேந்தர் என்றது வென்றுகொள்ள விரைந்து வந்து வளைந்துநின்ற சேர சோழ பாண்டியர்களை. முறிந்தார் என்றது கருதிய பயனிழந்து உறுதி குன்றி ஒழிந்தமை கருதி. சிறுபடை யுடையனாயிருந்தும் அரண்வலியால் பாரி வெற்றி பெற்று நின்றான் ஆதலால் அரணுல் கோண் கொற்றமுற்றான் என்றும். சுற்றுமே என்றது முற்றுகையின் அளவியல்புதோன்ற

நின்றது.

முற்றுஆற்றி =
முற்றுதலைச்செய்து;முற்றுதல் = வளைத்தல்.
முற்றியவர் என்றது அரசைக்
கைக்கொள்ளக்கருதி அரணைவந்து வளைந்து
நிற்பவரை.

அன்பு, ஆசை, தொடர்ச்சி,
முதலியவற்றை உணர்த்திவரும் பற்று
என்னுஞ் சொல் இங்கு இடத்தை
உணர்த்தி நின்றது. "பற்றுகின்று நின்
காரணமாக" என்புழிப்போல. பற்று
ஆற்றி = தாம் பற்றிநின்ற இடத்தே
பெயராது நின்று. பற்றியார் = தமக்கு
நிலையாக அரணைப் பற்றி நின்றவர்.

75-ம் அதிகாரம் அரண்.

1961

மேல், பகைவர்வந் து பற்றற்கு
அரியதாய் அரண் இருக்க வேண்டும்

என்றார்; இதில், அவ்வணம் வந்தவரை
வெல்லவல்ல தாயும் அது
விளங்கியிருக்கவேண்டும் என்கின்றார்.

முற்றுகை செய்து அரசைக்
கைக்கொள்ளக் கருதிவந்து சூழ்ந்தவரையும்
தன்னை நிலைபெறப் பற்றிநின்றவர்
நிலைபெறாது நின்று வெல்லுமாறு விளங்கி
நிற்பதே அரணமை என்பதாம்.

முன்வைத்த காலைப் பின்வையாமல்
தாம நின்ற இடத்திலேயே நிலைபெற்று
நின்று வந்த பகைவரை நிலைகுலைத்து வென்
றுவிடத்தக்க வீரர்களை அரண் என்றும்
மேவியிருக்கவேண்டும் என்பார்
முற்றியவரையும் பற்றியார் பற்று ஆற்றி
வெல்வது என்றார். உம்மை உயர்வு சிறப்பு.
முற்றியும், எறிந்தும், அறைப்படுத்தும என
முனைவந்துள்ளவற்றை எதிர்த்து
நோக்கிப் பகைவனின இஃது இறந்தது
தழீஇயதாம். வெல்லுதல் என்னும் வீரர்

தொழிலை அரண்மேலேற்றியது உபசாரம் என்க. வெல்லும் இயல்பினையுடையது என்பதாம். வெல்வது அரண் அன்றாகலால் அங்ஙனம் இல்லது அரணுக்கென்பதாயிற்று.

வளைந்து நின்று தன்னைப் பிடிக்க வந்தவர்கள் ஒழிந்துபோகும்படி புகுந்து போர் உடற்றவல்ல வீரர்களை அரண் உடைத்தாயிருக்கவேண்டும் என்பது கருத்து.

வெல்லவல்ல நல்ல வீரர்களை அரண் கொள்ளவில்லையாயின் அது கொண்டிருக்கும் நலமெல்லாம் குலைந்துபோம் என்பது குறிப்பு.

தன்னுள் அடைந்திருப்பவர் திடம்பெற நின்று எவரையும் வென்றுகொள்ளுதற்கு ஏதுவாய் அரண் நின்றிருக்கவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பறம்பின்கண் உணரப்படும்.

கதை.

பறம்பு என்பது பாரிமன்னனிருந்து

அரசபுரிந்த சிறிணைபு டையது. பல்வகை
வளங்களும் நிரம்பிப் பறம்பு என்னும் பெய
ரால் சிறந்து விளங்கிய அழகிய மலைச்சாரலில்
இஃது இனிதமை
திருந்தது ஆதலால் அம்மலையின் பெயரையே
இக்காமும் மருவிற் 1962
திருக்குறட் குமரேச வெண்பா.

நின்றது. அந்நாடும் இதன் பெயரானே
பேறுபெற்றிருந்தது. முந்நூறு ஊர்களையுடைய
அப்பறம்பு நாட்டிற்கு இது தலைநகரமாகி
நிலவியிருந்தது. தருமதானம் எனவும்
அருமையாக இஃது அழைக்க நின்றது.
இதிலிருந்த குடிகள் பொருளை வருந்தித்
தேடி வாடாமல இருந்தபடியே ப
லவளங்களையும் எளிதிலெய்தி
யின்புற்றிருந்தனர். அக்காலத்தில்
நிலவியிருந்த குலநகரங்களெவற்றினும்
ஆண்வலியில் இது மிகவுயர்ந்திருந்தது.

மதிலரணோடு மலையரணும் இதில் வலிபெற்று
நின்றது. இம்மலையில் அழகிய நீர்நிலைகள்
பல அமைந்திருந்தன. அச்சுனைகள் தெளிந்து
குளிர்ந்து நறுமணங் கமழ்ந்து பருகினார்க்குப்
பெருமகிழ்வு தரத்தக்க இனிய தண்ணீரை
யேந்தியிருந்தன. “பாரி பறம்பிற் பனிச்
சுனைத்தெண்ணீர்” என அதன்
அருமையை வியந்து புறத்திணை
நன்னாகனார், மிளைக்கந்தனார் என்னும் புலவர்
பெருமான்கள் புகழ்ந்து கூறியுள்ளார். இது
பகைவரெவரும் அணுகுதற்கரிய தென
உயர்புகழ் கொண்டது. இதனால்
படைகளும் குடிகளும் மிகு வலியுடையராய்
உயர்வடைந்திருந்தார். குறுநில மன்னனா
யிருந்தும் தன் கொடைநலத்தால்
உலகமுழுவதும் புகழொளி பரப்பிப் பாரி
நிலவுதலைக் கண்டு முடியுடை மன்னராகிய
சேர சோழ பாண்டியர்கள் மூவரும்
அவன்மேற் பொறாமை கொண்டார்.

பொருதுவெல்லக் கருதித் தனித்தனியே
பலமுறை படையெடுத்து வந்தார்; வந்தும்
ஒரு பயனுமடையாது உளமுடைந்து
மீண்டார். அயயநோக்கி நின்ற பின்பு
மூவரும் ஒன்றுசேர்ந்து பெரும் படையோடு
வந்து இப்பறம்பினை வளைத்தார். அகத்
திலிருந்தவர்கள் கொதித்து எதிர்த்தார்.
போமர் மூண்டது. நாள்பல கழிந்தும்
வந்தவர் வென்றுகொள்ள முடியாமல்
நின்று தியங்கினர். அவர்கள் ஏவும்
படைகள் யாவும் உள்ளே ஏறு
தொழிந்தன. ஒழிந்தும், அவர் ஒழியாது
பின்னும் முற்றுகை செய்து
வளைத்திருந்தனர். உள்ளிருந்த வீரர்கள்
உறுதியோடு நின்று இறுதியில் வென்று
விளங்கினர். சிறுபடையுடையனு யிருந்தும்
பெரும் படையுடன் பொரும்படி வந்த
வேந்தர் மூவரையும் பாரி
வென்றுகொண்டான் என எங்கும் அவன்

புகழ் நின்றுகொண்டது.

75-ம் அதிகாரம் அரண்.

1963

முற்று ஆற்றி முற்றியவரையும் பற்று ஆற்றிப் பற்றியார் வெல்வது அரண் என்னும் உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்து நின்றது.

முரசு கடிப்பு இகுப்பவும் வால்வளை
துவைப்பவும்
அரசுடன் பொருத அண்ணல்
நெடுவரைக்
கறங்குவெள் ளருவி கல்லலைத்
தொழுகும்
பறம்பிற் கோமான் பாரி.
(பெருஞ்சித்திரனார்).
கடந்தடு தானை மூவிருங் கூடி

உடன்றனி ராயினும் பறம்பு

கொளற்கரிதே. (புறம்).

பேரிசை யுருமொடு மாரிமுற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப்பாரி
பலவுறு குன்றம் போலப்
பெருங்கலி னெய்திய அருங்காப்பு.

(நற்றிணை). இவை, மேற்குறித்த
வுண்மையைக் குறித்து நிற்றல் காண்க.

உற்று வளைந்தார் ஒழிந்தோட
வுள்ளிருப்போர்
வெற்றிபெற நிற்ப தரண்.

புறத்தே வந்து வளைந்தவரை அகத்தவர்
எளிதில் வென்று கொள்ளுமாறு அரண்
இயைந்திருக்கவேண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

749 மாடமலி மாபுரமுன் மாற்றலர்கள்
மாயவரண்
கூடிநின்ற தென்னே
குமரேசா—கோடும்
முனைமுகத்து மாற்றலர் சாய

விளைமுகத்து
விறெய்தி மாண்ட தரண்.
(௬)

இ—ள்.

குமரேசா! மாற்றலர்களை மாய்க்கவல்ல அரண்வலியோடு இராசமாபுரம் என் அமைந்திருக்கதுஎனின், முனைமுகத்து மாற்றலர் சாய விளைமுகத்து வீறெய்தி மாண்டது அரண் என்க.

இது, பகைத்துவந்தவர் பயனிழந்து பயந்தோடும்வண்ணம் அரண் நிலையமைந்திருக்கவேண்டும் என்கின்றது.

246

1964 திருக்குறட் குமரேச வெண்பா.

மாடமலி என்றது மணியிற் செம்பொனின் மாகதக்கியன்றன மதிதோய், அணிநெடுங்கொடி அமைந்த நன்மாடங்கள்

அணி யணியாக நிறைந்திருந்தமை கருதி. மாபுரம் என்றது இராசமா புரம் என்க. முனைந்துவந்த பகைவர் புகுந்தபொழுதே முறிந்து மீளும்படி மதில் அமைந்திருந்ததாதலால் மாற்றலர்கள் மாய அரண் கூடிநின்றதென்றும். கோடும் = மாறுபடுகின்ற.

முனை என்பது போர், பகை, மாறுபாடு, முதன்மை, முத லியவற்றை யுணர்த்திவரும். மாற்றலர் = பகைவர்; மனம் மாறு படுதலையுடையவர் என்பதாம். முனைமுகத்துச்சாய என்றது போர்தொடங்கிய பொழுதே பகைவர் தொலைந்துபோக என்ற வாறு. முகம் இரண்டனுள் முன்னது தொடக்கத்தையும் பின் னது இடத்திறத்தையும் உணர்த்தி நின்றது. "இனிய செய்தி நின் ஆர்வலர் முகத்தே" என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க.

பொருதொழிலில் மிகச் சதுரரான வீரர்களையும் பொறிகளையும் பொருந்தி அரண் பொலிவு பெற்றிருக்கவேண்டும் என்பார் வினைமுகத்து வீறு எய்தி மாண்டது என்றார். வீறெய்துதல் மாட்சிக்கு ஏதுவாதல் தோன்ற முதலில் ஏறி நின்றது. மாண்டது = மாட்சியையுடையது. அஃதாவது வெற்றித்திருவோடு மேன்மையுற்றதென்க.

வீறு = பொலிவு, வெற்றி, மேன்மை. வீறுயர் கலசம் எனச் சிந்தாமணியிலும், ஏறுதலெளிதோ வீறுபெறு துறக்கம் எனப் பரிபாடலிலும், தோள்முறையான் வீறு முற்றவும் என மதுரைக் காஞ்சியிலும், தாறடுகளிற்றின் வீறுபெற ஓச்சி எனக் குறிஞ்சிப் பாட்டிலும், சாறயர்களத்து வீறுபெறத் தோன்றி எனத்திருமுரு காற்றுப் படையிலும், இது நின்றுணர்த்தும்

பொருளையுணர்க.

மேல், தன்னைப் பற்றி நிற்பவர் வெற்றியுறுமாறு அரண் உற்றிருக்கவேண்டும் என்றார்; இதில் அவ்வெற்றித் திறனோடு எல்லா மேன்மைகளையும் அது மேவியிருக்கவேண்டும்என்கின்றார்.

முனைந்துவந்து போர் தொடங்கியபொழுதே பகைவர் அழிந்தோடும்படி தொழில் செய்யவல்ல உயர் திறங்களால் வெற்றியெய்தி மற்றும் வேண்டும் மாட்சிமையுடையதே அரணும் என்பதாம்.

75-ம் அதிகாரம் அரண்.

1965

பகைவர் முனைந்துவந்து போர் தொடங்கியவுடனே வாள், மழு, தண்டு, சக்கரம், தோமர முதலிய கொடும் படைகளையும் அடுந்திறங்களையும் மாயப்

பொறிகளால் வாரி வீசி, தன்னகத் துள்ள வீரர்கள் எளிதாக மேவிநின்று பொருதற்கு வேண்டிய இதம்புரிந்து, அரண் அமைந்திருக்கவேண்டும் என்றவாறு. முனை முகத்திற் புகுந்தவர் பின் முகங்கொடா தொழிந்தோட, வினை முகத்திற் சிறந்தோங்கி விளங்கிநின்ற திம்மதிலே. என்னும்படி ஓர் அரண் அமைந்து நிற்கவேண்டும் என்க.

ஒருவன் எதிர்ந்து நோக்கியவுடனே முகத்தில் விரைந்து அறைந்துவிடின் மேல் கிளர்ந்தெழத்தக்க உரங்குன்றி அவன் ஒழிந்து போதல்போல் முனைமுகம் புகுந்து பகைவர் காலூன்று முன்னமே உள்ளிருப்பவர் மேலூன்றி வெகுண்டு பொருதுவிடின் திரண்டுவந்த அவர் வெருண்டு தொலைவர் ஆதலால் முனைமுகத் துச்சாய வினைமுகத்துவீறு என்றார்; அத்தகைய வினைவீரர்களைத் தன்னகத்தேகொண்டு அரண் விளங்கவேண்டும் என்பது குறிப்பு.

தம்மைத் தாக்கவந்த பகைவர் தாம் ஆக்கிய வினையால் ஊக்கமழிந்து ஓடின் அதனை நோக்கியவுடனே உள்ளத்தில் உவகை மீக்கூர்ந்து வெற்றிப் பொலிவோடு வினையாளர் நிமிர்ந்து விளங்கு வாராதலால் அவ்விளக்கத்தை மதில்மேலேற்றி மாற்றலர் சாய வீறெய்தி மாண்டது என்றார்.

தன்னைப்பற்றவந்த பகைவர் பயங்கொழிந்துபோக அ ரண் வெற்றியுற்றிருககவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசமாபுரத்தின்கண் உணரப்படும்.

## கதை.

இராசமாபுரம் என்பது ஏமாங்கத நாட்டின் தலைநகராயுள்ளது. அந்நாட்டு மன்னர் வழிவழியாக மன்னியிருந்து அரசு புரிந்துவந்த மாண்பினையுடையது. இது தெய்வத்தச்சன் கை வைத்துச் செய்தனவோ என்று கருதி வியக்கும்படியான அழகிய

மணிமாடங்கள் மிக அமையப்பெற்றது. அரச மாளிகையை இடையே யேந்தி அமைச்சர் முதலிய உயர்நிலையாளர்கள் திரு மனைகளை யருகேகொண்டு அகநகர் புறநகர்களை முறையே விரப்பி 1966 திருக்குறட் குமரேச வெண்பா.

இடையிடையே மதிலகழிகளை யெழிலுறத் தாங்கி இஃது இனிதமர்ந்துள்ளது. இதன் மதில் நீர் சுமந்திளைத்த மேகங்களைத் தழுவி நிற்றலால் எப்பொழுதும் உச்சியில் அசும்பாறுதாயமைந்திருந்தது. " தாய்முலை தழுவிய குழவிபோலவும், மாமலை தழுவிய மஞ்சுபோலவும், ஆய்முகில் தழீஇ அசும்பாறுத நெற்றிய, சேயுயர் மதில் " என இது செப்ப நின்றது. இவ் அரண் யாவரும் அணுதற் கரியதாய் அழிவுசெய்யும் பொறிகள் பலகொண்டு நெரியமைந்து நின்றது. பகைவரறியாமல் மாறுகருதி

அருகே வருவாராயின் உடனே எறிபடைகள் பல எதிர்ந்து பாய்ந்து அவரை எரித்தழித்துவிடும். இதன் செயல் இயல்களைக் குறித்துத் திருத்தக்கதேவர் மிகத்தெளிவுறக் கூறியுள்ளார். சில இதனடியில் வருவன. பொருளை நுணுகி யுணர்க.

மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கி எறிபொறியும்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்பும்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா. (1)

விற்பொறிகள் வெய்யவிடு குதிரை தொடர்
அயில்வாள் கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக

கொற்புனை செய் கொள்ளிபெருங்
கொக்கெழில்செய் கூகை நற்றங்கள்
திருக்கும்வலி நெருக்குமா நிலையே.
(2) செம்புருகு வெங்களிகள் உமிழ்வதிரிந்
தெங்கும் வெம்பு ந குவட்டுமிழ்வ
வெங்நெய்முகந் துமிழ்வ அம்புமிழ்வ
வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்களால் யவனர் தாட்படுத்த
பொறியே. (3)

கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ
நுண்ணூல் பரந்தபசும் பொற்கொடி
பதாகையொடு கொழிக்கும் திருந்துமதில்
தெவ்வர்தலை பனிப்பத் திருந்தின்றே. (4)

வயிரவரை கண்விழிப்ப போன்று மழையுகளும்
வயிரமணித் தாழ்க்கதவு வாயில் முகமாக

வயிரமணி ஞாயில்முலை வான்பொற்கொடிக் கூந்தல்
வயிரக்கிடங் காடை மதிற்கன்னியது கவினே.
(5)

## 75-ம் அதிகாரம் அரண்.

1967

கொள்ளிகள், கூளிகள், வீரமொடு கேசர
தோன்றும் பேய்கள், இரும்பாற்செய்த
பன்றிகள், கொடும் புலிகள்,
அடுங்களிறுகள், கச்சநாகங்கள்,
அரிகயிறுகள், விடாது
விரைந்துபாயுங் குதிரைகள், தொடாது
தொடர்ந்து கொல்லும் வாள்கள், முதலிய
மாயப் பொறிகள் பல மருவி; அகழியை
ஆடையாகவும், கொடியைக் கூந்தலாகவும்,
கோபுரங்களையுடைய வாயில்களை முகங்கள
ாகவும், இடையிடையே மேல் திரண்டு தோ
ன்றும் சிகரங்களை முலைகளாகவும், கொண்டு

ஓர் வீரக்கன்னிபோல் இம்மதிலரண் விளங்கி நின்றது தன் பகை இ கவிகள் விளக்கி நிற்றல் காண்க இத்தகைய அரிய நிலைகளோடு போர்த் தொழிலில் மிகத் தேர்ச்சிபெற்ற வீரர் திரள்களையும் இது மேவியிருந்தது. இதன் இயல்பினையறியாது பொருது கொள்ளவந்த மறுபுல மன்னர் மூவர் முழுதழிந்து போனார். அதனபின் பகைவர் யாருமின்றி இவ் அரணுடைய மன்னர் உயர்வடைந்திருந்தார். முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறெய்தி மாண்டது அரண் என்னும் உண்மையை உலகம் அறிய இஃது உணர்த்தி நின்றது.

மாமடங்கல் கண்ட மதகரிபோல் மாற்றலர்கள்
தாமடங்க நிற்ப தரண்.

பகைவர் பொன்றியோடும் வண்ணம்

அரண் பொருந்தியிருக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

750 கேடில் கிரவுஞ்சம் கெட்டதுஎன் மாட்சியிலார்
கூடிநின்ற தாலேன்
குமரேசா—நாடும்
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்கண் இல்ல தரண். (ய)

இ—ள்.

குமரேசா! மிக்க அரண்வலியுடைய கிரவுஞ்சம் தக்கவரின்மையால் ஏன் தாழ்ந்து அழிந்தது எனின், அரண் எனை மாட்சித்து ஆகியக் கண்ணும், வினைமாட்சி இல்லார்கண் இல்லது என்க.

வெண்பா.

இது, நல்ல வினையாளர்களில்லாத அரண் நலமுறுதென் கின்றது.

கேடுஇல் கிரவுஞ்சம் என்றது தொலையா வலியோடு நெடு நாள் அது நிலைபெற்றிருந்தமை கருதி. நன்மாட்சி இலார் என்றது அங்குள்ளவர் வஞ்சமும் களவுமுடையாராய் மருவிநின்றமை யான் என்க. நாடும் = தனக்குரிமையாக விரும்புகின்ற.

எனை மாட்சித்து ஆகியக்கண்ணும் = எவ்வளவு மாட்சிகளை யெய்தியிருப்பினும். உம்மை அருமைதோன்ற நின்றது. ஆங்கமை வெய்தியக்கண்ணும் என்று முன் அதிகாரத்தின் இறுதியிற் கூறியபடியை இஃது அடியொற்றியுள்ளது. இதனுல் நாட்டிற்கு வேந்தன் எப்படி உயிராதாரமாய்

அமைத்துள்ளாரோ அப் படியே அரணுக்கு
வினைவீரர்கள் விளங்கியுள்ளார் என்பதாயிற்று.

வினைமாட்சி = தொழில்நிலைகளை
யறிந்துசெய்யுந் திறம்;
அஃதாவது கருவி காலம் இடம் பொருள்
முதலியவற்றை இனி
தறிந்து, முடிவும் இடையூறும் முற்றியாங்கு
எய்தும் படுபயனும்
பார்த்து, வினைகளை முடிவுபெறச்
செய்யுமேன்மை. இம்மாண்பு
இல்லாதாரை அரண் மருவியிருப்பின் அது
எவ்வளவு மாண்
புடையதாயினும் மதிப்படையாதென்பார்
வினைமாட்சி இல்லார் கண் அரண் இல்லை
என்றார். இல்லை என்றது அதன் இருப்பின்
இழிவுதோன்ற நின்றது.

மேல், மேவலர் மேவலாகாதபடி காவல்
வீரர்களோடு அரண் மேவியிருக்கவேண்டும்

என்றார்; இதில், அத்தகைய வினைவீரர்க ளில்லையாயின் எத்தகைய நலங்களையுடையதாயினும் அது பயன் படாதென்கின்றார்.

மேலே சொல்லப்பட்ட மாட் சிகள் யாவும் அரண் உடைத் தாயிருப்பினும் வினைகளை ச் செய்தற்கண் மா ட்சியில்லார் மாட்டு அது மாண்புறாது என்பதாம்.

அகலம் திண்மை முதலிய அருமைகள் யாவும் ஒருங்கே யுடைத்தாய், மருவலர் அஞ்சியோடும்படியான மிஞ்சிய வலிக

75-ம் அதிகாரம் அரண்.

1969

ளொடு மற்றும் வேண்டிய மாட்சிகளெல்லாம் அரண் மேவியிருப் பினும், வினை ஆண்மைகளிற் சதுரான நல்ல

வீரர்கள் நகரில் இல்லையாயின்
உள்ளமில்லான் கைப்பட்ட
ஒள்ளியவாள்போல் பகைவர் புகும்பொழுது
அது பயனிழந்து போம் ஆதலால் “
ஆகியக்கண்ணும் வினைமாட்சி இல்லார்கண்
அரண் இல்லது ” என நின்றது.
வினைமாட்சியுள்ளாரோடு அரணுக்குள்ள
உரிமையை இதில் உய்த்துணர்ந்துகொள்க.

வினை எனப் பொதுப்படக்
கூறியிருத்தலால் நல்வினையில் மாட்சியில்லார்
கண்ணும், தீவினையில் ஆட்சியுள்ளார்
இடத்தும் அரண் பயன்படாதெனவும் இது
பொருள்பட நின்றது.

கறங்கு கால்புகா; கதிரவ னொளிபுகா;
மறலி

மறம் புகாதினி வானவர் புகார்
என்கைவடமே

திறம்புகாலத்துள் யாவையுஞ்
சிதையினுஞ் சிதையா

அறம் பு காதிந்த அணிமதிட்
கிடக்கையின் நகத்தின்,
இது, இலங்கை மதிலரணைக் குறித்து
அனுமான் கண்டபொழுது கருதிக்கொண்டது.
காற்றும், கதிரவனொளியும், கூற்றும், புகாத படி
அரண் ஏற்றமுற்றுளது; எனினும், நல்ல
வினைகளை நயந்து நிற்கும் அறவினையாளர்கள்
இங்கு இல்லையாதலால் இனி இது விரைவில்
அழிவுறும் என்று தெளிவுறும்படி கவி
அருளியுள்ள அழகை இதில் ஆய்ந்துணர்ந்து
கொள்க. எனை மாட்சித்தாயினும் நல்ல
வினைமாட்சியுடையாரை அரண்
மேவியிருக்கவேண்டும்; இல்லையாயின்
இருந்தும் அஃது இலதாய் முடியும் என்பதை
இது முடிவுசெய்துள்ளமையை இங்கு நுணுகி
நின்று காண்க.

ஒரு நகருக்குச் சிறந்த
பாதுகாவலாக அமைந்துள்ள நிலையாணுக்கு
சூழ்ச்சித் திறத்தோடு நின்று நல்ல வினைகளை

நாடி ஆற்றவல்லவர்கள் ஆதரவாக அமைந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

போர்த்திறத்திலும் விளையாட்டிலும் மிகச் சீர்த்திபெற்றவர்களைத் தன் அரணுக்கு உறுதுணையாக அரசன் அமைத்து வைத்திருக்கவேண்டும் என இயலோடு பொருந்த இதனை இணைத்து நோக்கிக் கொள்க.

1970 திருக்குறட் குமரேச வெண்பா.

எல்லா நலங்களுமுடையதாய் அரணமைந்திருப்பினும் அங்குள்ளவர் நல்ல வினையாளராயில்லையாயின் அது ஒரு சிறிதும் பயன்படாது ஒழிந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கிரவுஞ்சத்தின்கண் உணரப்படும்.

கதை.

கிரவுஞ்சம் என்பது தாரகாசுரன்

அமர்ந்து அரசுபுரிந்திருந்த மாயமாபுரிக்கு ஓர்
பேரரணாக மருவியிருந்தது. காண்டற்கரிய
காட்சியோடு நீண்ட மதிலுருவாய் நிமிர்ந்து
அம்மன்னனுக்கு வேண்டிய வலிபுபர்வுகளை
இது விளைத்து நின்றது. யாரும்
உணர்ந்துகொள்ளமுடியாத பிணங்கியபல
மாய வழிகளும் வலிய முறை நிலைகளும்
இதன்கண் மருவியிருந்தன. இதன் வஞ்ச
வினைகளிற்பட்டு அமரரும் பல முறை
அஞ்சியயர்ந்துளார். பெரும் படையோடு
வந்து பகைவர் புறத்தே சூழ்ந்து
வளைந்துகொள்ளினும் உள்ளிருப்பவர் ஒரு
வினையுஞ் செய்யவேண்டாமல் தானே நின்று
அத்தானை முழுவதையும் இது
பொருதழிக்க வல்லது. இதன் துணைவலியை
நினைந்து அசுரரனைவரும் பெருமகிழ்வு
கொள்ளப் பகைவரெவரும் பயமடைந்து
நின்றார். இராசதானியாகிய அம்

மாயமாநகருக்குப் போதாவாய் நின்றிருந்த இது சிரான வினையாளரைச் சோதிருந்தது. உறுதுணையாய் உள்ளிருந்த அசுர வீரர்கள் அறிவமைதி இலராய் வெறிமிகுந்திருந் தார். இருந்தால் மடியாயிருப்பர்; எழுந்தால் எவரும் குலைநடுக் கம் கொள்ளும்படி கொடுந்தொழில் புரிவார். அறவோராகிய முனிவர் பலரை இதனிடம் புகுத்தி அழிவுறச் செய்தார். அளவறியாது எவரோடும் பகைமையை விளைத்தார். நல்வினையில ராய்ப் புல்வினை மிகுந்து இவர் இங்ஙனம் புரிந்துவருங்கால் அறு முகப்பரமன் அமரரோடெழுந்து தென்திசை வந்தார். உடன் வந்த வீரவாகு தேவர் முதலாயினோரை வஞ்சித்துக்கொண்டு போய் இவ் அரணிடைப்படுத்தித் துயர்மிகச் செய்தார். அவ் வெய்யவர் செய்கையை யறிந்த எம் ஐயன் கையிலிருந்த வடிவேலைக் கடுக விடுத்தார். அது சென்று அவ்

அசுரரையெல்லாங் கொன்று இவ்
அரணைப்பொடிபட நூறிவிட்டு
அவரனைவரையும்
· 75-ம் அதிகாரம் அரண்.
1971

இகழுறக்கொண்டு இனிது மீண்டது.
அதன்பின் அவ்வரசும் நகரமும் அழிந்து
தொலைந்தன. இருந்த வீரர்கள் இனந்தெரி
யாமல் வினை தொடங்கியதாலல்லவா
அரியமாட்சிகளோடு சிறந்து நின்ற
இவ் அரணும் இருந்த இடந்தெரியாமல்
அழிந்து தொலைந்தன அனைவரும்
வியந்துமகிழ்ந்தார். எனைமாட்சித்தாகியக்
கண்ணும் வினைமாட்சி இல்லார்கண்
இல்லது அரண் என்னும் உண்மையை
உலகம் இதன்கண் உணர்ந்து நின்றது.

தாவி லுயர்வீரர் சாரா அரணென்றும்
மேவுந் துயர்கள் மிக.

கண்ணுக் கிமைபோல்நற் காப்பாம் உலகாளும்
அண்ணல் நகருக் கரண்.

*நல்ல வினையாளர்களையுடைய அரணை என்றும் நலமுற்றிருக்கும் என்பது இதனல் கூறப்பட்டது.*

---

இவ் அதிகாரத்தின் தோகைப்போருள்.

*அரண் யாவர்க்கும் சிறந்த துணையாம். நீரரண், நில அரண், மலையாண், காட்டரண், என்னும் இவ் அரண்கள் அரசநகரைச் சூழ்ந்தமைந்திருக்க வேண்டும். அகலமும் திண்மையும் அருமை யுமுடையதாய் மதிலரண் உயர்ந்திருக்க வேண்டும். சிறியபாது காப்பிற் பெரிய இட,த்தையுடையதாயருந்திறலமைந்ததே அரண மாகும். வெளியிலிருந்து வெல்லவருபவர்க்கு அரியதாய் உள்ளி ருப்பவர்க்கு எல்லா நலங்களையும் உதவ*

வல்லதாய இயல்பினை யுடையதே எழில் அரணாகும். எல்லாப்பொருள்களோடு நல்ல வீரர்களையும் அஃது உடைத்தாயிருத்தல் வேண்டும். எவ்வாற்றானும் பகைவர் பற்றமுடியாதபடி அரண் முற்றியிருத்தல் வேண்டும். தன்னைப்பற்றவந்தவரைப்பற்றற அழிப்பதே அரண் உற்ற பயனாகும். மிஞ்சிவந்த பகைவர் அஞ்சி ஓடும்படி அரண் நின்று நிகழவேண்டும். வேண்டிய நலங்களெல்லாம்மேவியிருந்த தாயி

னும் பாதுகாக்கவல்ல ஆண்டகையாளர்களில்லையாயின் யாதொரு பயனுமின்றி அரண் அழிந்தழிந்துபோம் ஆதலால் அவரை அஃதுடைத்திருக்கவேண்டும்.

எரு-வது அரண் முற்றிற்று.

மூன்றாவது அரணியல் முற்றிற்று.

247

---

1972 திருக்குறட் குமரேச வெண்பா.

# நான்காவது

கூழியல்.

ஒன்று ஒன்பகூழ் என முன் உரைத்துவைத்தபடியே முறை யே இங்கிது உரைக்க நின்றது. கூழ் என்றது உணவு முதலிய எவற்றிற்கும் மூலமான பொருளாதாரங்களை.

---

## 76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.

அஃதாவது செல்வத்தைத் தேடிக்கொள்ளுதலின் திறம். நாடு அரண்களின் இயல் அமைதிகளை முன்னர்க்கூறினார் இதில் பொருளைச் செய்தலின் வகை கூறுகின்றார். எல்லாச்சிறப்புகளையும் நல்கவல்ல இதனை ஆக்கவும் காக் கவும் முறையே அவை காரணமாய் நிற்றலால் அவற்றின்பின் இது வைக்கப்பட்டது.

751 ஒதுபொரு ளொன்றே யுயர்ந்ததெனை

மாயையேன்
 கோதறமுன் கொண்டாள் குமரேசா—எதும்
 பொருளல் லவரைப் பொருளா கச்செய்யும்
 பொருளல்ல தில்லை பொருள். (க)

இ—ள்.

குமரேசா! எல்லாவற்றினும் பொருள் ஒன்றே சிறந்தது என்று மாயை என் முன் உறுதி செய்து இருந்தாள் எனின், பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருள் அல்லது பொருள் இல்லை என்க.

இது பொருளின் பெருமை கூறுகின்றது.

ஓது என்றது குலந்தரும் கல்வி கொணர்ந்து முடிக்கும் என்பதாதியாக நூலோர் புகழ்ந்து கூறுகின்ற என்றவாறு. மாயை என்றது சாசையை. கோது =

குற்றம்; இங்கு ஐயம் என்க. ஏதம் = ஒரு சிறிதும். பொருளுக்கு அடையாக வந்துள்ள இதன் பொருள் நிலையை ஊன்றி யுணர்ந்து கொள்க.

இதில் வந்துள்ள பொருள்மொழி நான்கனுள் முன்னைய இரண்டும் மதிக்கப்படுதலையும், பின்னுள் ஏன செல்வத்தையும் உணர்த்தி நின்றன. "பொருளல்லாற் பொருளும் உண்டோ" என்ற கலியடியும் ஈண்டு கருதத் தக்கது.

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.

1973

பொருளே நமக்குப்பொருள் என்றது அல்லது இல்லை என அன்மை இன்மைகளை இணைத்துரைத்தது அதன் உண்மைப் பெருமையை உறுதிபெற வுணர்த்துதற் கென்க.

பொருள் அல்லவரை = ஒரு

பொருளாக மதிக்கப்படா தாரை; மனித வகுப்பில் தோன்றியிருந்தும் வா போ என்று கூடச் சொல்லத்தகாதபடி சுழன்றுதிரியும் தோற்சுமைகளையும் என்றவாறு. இழிவைச்சிறப்பித்து நிற்கவேண்டிய உம்மை இதில் தொக்குநின்றது.

ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் மதிக்கச்செய்வதாகிய பொருளை அல்லது இவ்வுலகில் ஒருவனுக்கு வேறு பொருள் இல்லை என்பதாம்.

ஊக்கிமுயன்று பொருளை ஆக்கிக்கொள் என்று அடிகள் உரைத்ததைக் கேட்டவுடனே அங்ஙனம் ஆக்கப்படுவதாகிய அது, என்ன பயனைச்செய்யும் என ஒருவன் எதிர்ந்து வினவ தன்னையுடையானை உன்னத நிலையில்

அஃது உயர்த்திவைக்கும் என்று அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க. பொருள்செயல்வகையில் நமதுள்ளஞ் செல்லுமாறு அடிகள் இதில் அருளியுள்ள அழகை ஆய்ந்து காண்க.

ஒரு துரும்பாகக்கூடக் கருதத்தகாதவனும் பொருள்நிரம்பப்பெறுவனாயின் பின்பு அவன் பெருமதிப்புடையனாய் எவரும் வணங்கிப்போற்ற விளங்கிவிடுகின்றான் ; அவனுக்கு இவ்விளக்கத்தைச் செய்தது பொருளே யாதலால் " பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் ' ' என்றார். கடையானைக்கூட முதலாளி யாக்கும் இக் கைப்பொருளே. என்பதுங்காண்க.

எற்றஅறி வொன்றுமின்றி யிழிகுலத்தோ னேனும்

தோற்று பொரு ளுடையானைத்

தொழுகுலனும் தொழுகின்றான்

சாற்றுமிந்தப் பொருள்போலத் தடங்கடல்சூழ் ஞாலமதில்

ஊற்றமிகச் செய்யவல்ல தொன்றுமிலை யென்றுணர்மின். எனவும்,

வென்றி யாக்கலும் மேதக வாக்கலும்
குன்றினார்களைக் குன்றென ஆக்கலும்

1974 திருக்குறட் குமரேச வெண்பா.

அன்றியும் கல்வி யோடழ காக்கலும்

பொன்றுஞ் சாதத்தி னய் பொருள் செய்யுமே. எனவும், வருவன ஈண்டு எண்ணற்குரியன.

நன்கு மதிப்பிற்கு ஏதுவாகிய அறிவு அழகு ஆண்மை குலம் முதலிய நலன்கள் யாதும் இலனாயினும் அவன் பொருளுடைய னாயின் எவரினும்

சிறந்தவனாக அவன் போற்றப்படுகின்றானாக லால் அத்தகைய ஏற்றமிக்க பொருளை மக்கள் முயன்று சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம். பொருளில்லாதவனை இவ்வுலகம் ஒரு பொருளாக மதியாதென்பதும், அவன் எவ்வளவு நலமுடையனாயினும் வெளியே விளங்கித் தோன்றான் என்பதும் இதில் தோன்றுதல் காண்க.

பொருள் எல்லாச் சிறப்புக்களையும் நல்கவல்லதாதலால் அதனை நெறியே முயன்று நிரம்ப ஈட்டிக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

பொருளில் குலனும் பொறைமையில் நோன்பும்
அருளில் அறனும் அமைச்சில் அரசும்
இருளினுள் இட்ட இருண்மயி ரென்றே
மருளில் புலவர் மனங்கொண் டுரைப்ப.

என்னும் இதனை உளங்கொண்டுணர்க.

பொருளில்லாதவன் தோற்றம் இருள டைந்த இடத்தில் கிடக்கும் கரிய மயிர்போல் இருக்கும் என்றதனால் அதனையுடையவனே வெளியாய் ஒளிபெற்று விளங்குவான் என்பதாயிற்று. செல்வப்பொருளே இவ்வுலகிற் சிறந்ததென்று அறிந்தோர் துணிந்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுரசையின்கண் உணரப்படும்.

## கதை.

சுரசை என்பவள் அசுரேந்திரனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் மங்கலகேசி. அழகிலும் அறிவிலும் இவள் மிகச் சிறந்தவள். தன் குலகுருவாகிய சுக்கிரமூர்த்தியிடம் கலைகள் பலவுங் கற்றுத் தலைமையோடு இவள் நிலவிநின்றாள். இவ்வுலக நிலைக்கு இவளோர் நிலையமாமென அசுரரனைவரும் இவளது நிலை 76-ம் அதிகாரம்

மையை நினைந்து அகமகிழ்ந்திருந்தார்.
பருவமெய்தியபின் தாதை யேவலால்
காசிபரையடைந்து காதலுறும்படிசெய்து
அவரோடு கலந்து மகிழ்ந்து சூரபன்மன்
முதலிய வீரமக்களைப் பெற்று
விளங்கியிருந்தாள். தன் மரபினரோடு
பகைமையுற்றிருக்கும் அமரரனைவரினும் தன்
புதல்வர்கள் மேன்மையுடையராய் விளங்க
வேண்டுமென்று விழைந்து சூழ்ந்து
நெடிதுநேரம் ஆராய்ந்து தெளிந்து
இறுதியில் மக்களை நோக்கி உறுதிகூறத்
துணிந்தாள். "இவ்வுலகில் மக்கள் விரும்பி
யீட்டுதற்குரிய பொருள்கள் இரண்டுள.
ஒன்று கல்வி ; மற்றொன்று செல்வம்.
இவ்விரண்டனுள்ளும் செல்வமே சிறந்தது.
இது வெளிப்படையாக விரைவில் எவரை
யும் சிறப்புறச்செய்யும்.

கல்வியுடையனாயினும் பொருள் இலனாயின் அவன் பொலிந்து தோன்றான். பொருள் தன்னைக்கொண்டவனெவனாயினும் அவனை ஒரு சிறந்த பொருளாகச் செய்துவைக்கும் ஆதலால் உயிரின்பொருளென உலகம் அதனை உவந்து கொண்டுள்ளது. மண்ணையும் பொன்னென மாற்றும் வேதிபோல், பண்ணும் பொருளதைப் பண்ணினோர்க் கென்றும், சீரும் சிறப்பும் சேரச்செய்யும், அறம்பொருள் இன்ப மென்றறைதரு மூன்றில், இடையதை யடைந்தான் இருமையும்' அடைந்தான், ஆதலால் அதனையே நீவிர் அடைதல் வேண்டும் ' என இவள் அருளினின்றாள். அவர் உறுதியென உடனே உணர்ந்து கொள்ளாததை யறிந்து மீண்டும்,

பிறந்தநல் லுயிர்க்கெலாம் பெருமை நல்கிய

விறந்தோர் பொருண்மைய திரண்டின்

வன்மையும்

அறந்தவர் தெரிவரேல் அரிய கல்வியிற்
சிறந்தது திருவெனச் செப்பலாகுமால்.
(க)

நூலுறு கல்வியை நுனித்து நாடியே
வாலறி வெய்திய வாத்தி னோர்களும்
மேலுறு திருவொடு மேவுறு ரெனின்
ஞாலமங் கவர்தமை நவையுள் வைக்குமால். (உ)

அள்ப்பருங் கல்வியும் ஆக்கம் யாவையும்
கொளப்படு தன் மையிற் குறைவு றுதவை
வளர்த்தலின் மேதக வழைப் புச் செய்தலிற்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே.
(ந) 1976 திருக்குறட் குமரேச வெண்பா.

என்று அவர்கள் நாடிக்கொள்ளுமாறு நன்கு

கூறினாள். இவள் உரைவழியே முயன்று பெரும்பொருளீட்டி அருந்திறலோடு அவர் சிறந்து விளங்கினார். இருளிற் கிடந்த பொருள்போல் ஒரு தோற்றமுமின்றி ஒடுங்கிக்கிடந்த அவர் பொருளடைந்தபின் பெருமதிப்புடையராய் அமரரும் போற்ற உயர்வடைந்திருந்தார். பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்ல தில்லை பொருள் என்னும் உண்மையை உலகம் அவர்பால் உணர்ந்து தெளிய இவள் அன்று உணர்த்தி நின்றாள்.

நீசனே யானாலும் நீள்பொருள்கை யுற்றக்கால்

ஈசனெனச் செய்யுமதை யெண்.

பொருளைப்போல் பெருமை தரவல்லது வேறியாதும் இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

752 ஏனை துரோணரையும் எள்ளினன் பாஞ்சாலன்
கோனென்ன நின்றான் குமரேசா—ஆனபொருள்
இல்லாரை யெல்லாரும் எள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. (௨)

இ—ள்.

குமரேசா ! பாஞ்சாலன் துரோணரையும் இகழ்ந்தான் அவனை என் அனைவரும் புகழ்ந்து நின்றார் எனின், இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர் என்க.

இது, பொருளின் உண்மை இன்மைகளாலுளவாம் தன்மை கூறுகின்றது.

பாஞ்சாலன் என்றது பாஞ்சால தேசத்து மன்னனாகிய துருபதனை.

துரோணரையும் எள்ளினன் என்றது. தன்னொடு இளமைதொட்டே பழகியிருந்தும் அவனைச் சிறிதும் எண்ணுமல் இகழ்ந்தமை கருதி. உம்மை அவரின் உயர்வுதோன்ற நின்
றது. கோன் என்ன = அரசேயென்று
ஆன = உயர்ச்சிக்கு ஏதுவான.

யாரும் புகழ்ந்துபோற்ற

76-ம் அதிகாரம்

பொருள் செயல்வகை. 1877

இல்லார் என்றதற்கேற்ப உள்ளார் என்றது செல்வர் என்றது அதன் எடுப்புயர்வு கருதி. எதிர்மறை உடன்பாடு என்னும் இருவகை நிலையிலும் வைத்துப் பொருளின் தன்மையை யுணர்த்தும் இதன் பொருளினுண்மையை நுணுகியுணர்க. ஒரு

பொருளையே கருதிவரும் எல்லாரும் என்னும் சொல்லை இருமுறைகூறியது எள்ளற் கண்ணும் சிறப்புச் செய்தற்கண்ணும் சமமான பேர்களை அஃது அமைய வைத்துள்ளமையை அறிவித்தற் கென்க. உம்மைகள் எஞ்சாமையை உணர்த்தி நின்றன.

மேல், பொருளின் தன்மைகூறினார்; இதில், அதன் உண்மை இன்மைகளால் உளவாம் உயர்விழிகளை ஒருங்கே உணர்த்து கின்றார்.

பொருளில்லாரை எல்லாரும் இகழ்வர்; அஃதுடையாரை யாவரும் புகழ்ந்து போற்றுவர் என்பதாம்.

சிறப்புச் செய்தற் குரிய தகுதிகள் பல வுடையாராயினும் பொருள் ஒன்று இலாராயின் அவர் அது செய்யப் பெறாது எள்ளப்படுகின்றார்; இகழுதற் கேதுவாகிய இழிகுணங்கள் பல எய்தியிருப்பினும்

பொருளுடையாரயின் அவர் எள்ளப்படாது எத் தப்படுகின்றார்; இப்பாடு நாளும் கண்கூடாய் நடந்துவருவதை நாம் உணர்ந்து வருகின்றோம்; ஆயினும் அவ்வுண்மையை இஃது எவ்வளவு எடுப்பாக எடுத்துக் காட்டுகின்றதென்பதை இருந்து காண்க. பொருள் தன்னையுடையானைச் சிறப்புறச் செய்யும் ஆதலின் அதனை மக்கள் செய்து கொள்ளவேண்டும் என்ன? அங்ஙனம் கொள்ளவில்லையாயின் அதனால் என்ன வந்துவிடும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

குண நலங்களால் சிறந்திருந்த புலவனொருவன் பொருளின்மையால் வருந்தி செல்வனொருவனை நாடிச் சென்று அவன் மீது நூறு பாடல்கள் பாடித் தன் பாடு கூறினான்; கேட்ட அவன் பொருளுடையனாயினும அறிவில்லாத புல்லியனாதலால் இல்லை போங்கள் என்று இதமாகக்கூடச் சொல்லத் தெரியாமல் " அக்

கடபோ " என்று தன் வல்வாய் திறந்து அதட்டிக் கூறினன்; அக்கட = அங்கே. இது தெலுங்குமொழி. புலவர் என் செய்வார் ? பாவம் ! நாணி நொந்து நகைத்து மீண்டார்.

1978 திருக்குறட் குமரேச வெண்பா.

பக்குவமாகக் கவிநூறு பாடிப் பரிசில்பெற
முக்காணம்மெதிர் பல்காலும் போட்டு முயன்றிடினும்
அக்கடபோ எனும் மூடனைப்பாடி அலுத்தவந்தேன்

என்று பின்பு ஆண்டவனை நோக்கி அவர் அழுதுபாடினர். நல்ல வறுபினும் இல்லான் எள்ளப்படுவன் என்பதும், புல்லியனாயினும் உள்ளவன் போற்றப் படுவன் என்பதும் மேற்குறித்த இருவரும் அன்று பொருந்தக் காட்டினர்.

இல்லாமை என்ற பாட்டினை விளைவிக்குமாதலால் அது தன்கண் இல்லாதபடி பொருளினை உறுதியாக ஒவ்வொருவனும் ஈட்டிக்கொள்ள வேண்டுமென்றவாறு.

இவ் அருமைத் திருக்குறளைச் சேரமான் பெருமான் நாயனார் தமது ஞான வுலாவில் "எந்நாளும்

இல்லாரை யெல்லாரும் என்னுவர் செல்வரை

யெல்லாருஞ் செய்வர் சிறப்பென்னுஞ்—சொல்லாலே

அல்குற்று மேகலையைச் சூழ்ந்தாள் அணிமுலைமேல்

மல்கிய சாந்தொடு பூண்புனைந்து—நல்கூர்

இடையிடையே புள்ளுருகக் கண்டாள் " என்று எடுத்துக் காட்டி வளமுள்ள உறுப்புக்கள் சிறப்புச் செய்யப்பட்டன; இவ்

லாக இடை ஒரு சிறப்பும் கொள்ளாமல்
எள்ளப்பட்டிருந்தது என இக்கருத்தை
உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றி நோக்குக.
எள்ளுதல் சிறப்புச் செய்தல் என்னும்
இவற்றில் கற்றார்
கல்லார், நட்டார், பகைவர் என்னும்
யாவரும் ஒருபடியாகவே
ஒத்திருப்பரென்பார் எல்லாரும் என்றார்.
முழுமூடனாயினும் பொருளுடையானை
அறிவுடையாரும்
புகழ்ந்து போற்றுவர்; அஃதில்லாதானை
இல்லாளும் எள்ளுவள்;
ஈன்றாளுங்கூட இகழ்ந்து கூறுவள் என்க.
கல்லானே யானாலும்
கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங்
கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற்
றீன்றெடுத்த தாய்வேண்டாள்

செல்லா தவன்வாயிற் சொல்.

(நல்வழி) 76-ம் அதிகாரம்

பொருள்செயல்வகை. 1979

அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்
ஒத்த குடிப்பிறந்தக் கண்ணும் ஒன்றில்லாதார்
செத்த பிணத்திற் கடை.

(நாலடியார்)

இன்சொல்லன் றாழ்நடைய னாயினும் ஒன்றில்லானேல்
வன் சொலவி னல்லது வாய்திறவா—என்சொலினும்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடல்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

(நீதி நெறிவிளக்கம்)

தொழுமகள் ஞாயினுந் தூற்றுடையானைப்
பழுமரஞ் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமியோ னும் வெறுக்கை யுலந்தாற்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப.

(வளையாபதி)

இவை, அடிகள் கருத்தை அடியொற்றி வந்திருத்தல்காண்க.

கூலிக்கு அறுக்கப்போயினும் குருணிக்கு அறுத்திருப்பனே உனக்கு அறுக்கவந்தேனே என்று தன்னைக்கொண்ட கணவனை இல்லாமைகருதிப் பண்டொருத்தி இழித்துக்கூறியதை இன்றும் சில இல்லாட்டிகள் தமக்குரிமையாக எடுத்துக்கொண்டு இப் பாட்டின் முதலடிக்கு எடுத்துக்காட்டாக நிற்றலை எங்கும் எளிதிற் காணலாம்.

பொருளுடையவர் புகழ்ச்சியையும் அஃதில்லாதவர் இகழ்ச் சியையும் எய்துவர்

என்பது கருத்து.

பொல்லாதவனாயினும் செல்வமுடையானை எல்லாரும் புகழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துருபதன் பால் உணரப்படும்.

கதை.

துருபதன் என்பவன் பாஞ்சால தேசத்து மன்னனாகிய பிரசதனுடைய புதல்வன். இவன் அறிவும் திருவும் உடையவனாயினும் அமைதியும் தகவும் அமையப்பெறாதவன். இவன் இளைஞனாயிருக்கும் பொழுது துரோணரோடு மிகவுறவு கொண்டு இனை





பிரியாதிருந்து அங்கிவேசர் என்னும் முனிவரிடம் கல்வி பயின்று பின்பு படைக்கலப்பயிற்சியிலும் உயர்ச்சியுற்று

விளங்கினான். பள்ளித்தோழராய துரோணர் அந்தணராயிருந்தும் அரசமரபினனாகிய தன்னினும் பொருதிறத்தில் மிக உயர்வுற்றிருத்தலை உணர்ந்து வியந்து ஒருநாள் அவரை உவந்து நோக்கி " ஆருயிர் நண்ப! என் தந்தையாரிடமிருந்து அரசைப்பெற்று முடிபுனைந்து யான் ஆட்சி புரியுங்கால் என்நாட்டிற் பாதியை உனக்கு உரிமையாக நாட்டித்தருவேன் என்று உள்ளக்களிப்போடு உறுதிகூறி உரைத்து நின்றான். அதன்பின் பிரிந்து சென்று உரிய பருவத்தில் முறையே அரசினையடைந்து தருமகாமினி என்னும் அழகிய கன்னியை மணந்து அரியபோகங்களை நுகர்ந்து சுமித்திரன், சித்திரகேது, சுகேது, துவசசேநன், பிரியதரிசனன் முதலிய புதல்வர்களைப்பெற்று ஆட்சியை மாட்சிபெற நடாத்திவருகையில் துரோணர், கிருபி என்பவளை மணந்து ஒரு புதல்வனைப்பெற்று வறுமையால் வாடி

அவ்விருவரையும் பேணமுடியாமல் மறுகி நின்று பழமையை நினைந்து இவனிடம் வந்து பிள்ளைப்பாலுக்குப் பசு ஒன்று தரும்படி பரிந்து வேண்டினர். இவன் இல்லை போ என்றான். எனக்குப் பாதிநாட்டைப் பகுத்து தருவதாக முன் சொல்லியிருக்கிறீரே! யான் உமது நண்பனல்லவா? கூறியுள்ளபடி கோலுள்ள நாடு வேண்டாம் பாலுள்ள ஒரு பசுமாடு மாத்திரம் கொடுத்தருள்க என்று கூடுமான வரையும் அவர் கூறிவேண்டினர். இவன் சீறியிகழ்ந்து ஏழைப்பார்ப்பானே என்ன சொன்னாய்! பிச்சை யெடுக்கும் உனக்கும், முடிமன்னனாகிய எனக்கும் என்னவகையில் உறவாம்? இன்னவாறு சின்னமொழிகளை இனி எங்கும் சொல்லாதே; இங்கு நில்லாதே போ போ என்று இவன் பொங்கி மொழிந்தான். அவர் வருந்தி நொந்து அத்தினபுரத்தை யடைந்து அங்கு

அரசகுமாரர்களுக்கு வில்வித்தையைக் கற்பித்து அவர்களுள் விசயனைக்கொண்டு வந்து அமர்தொடங்கிவென்று இவன் செருக்கை யடக்கிச்சென்றார். பார்ப்பான் எப்படியும் நம்மை ஒருகை பார்த்து விட்டானே என்று உள்ளம் வேர்த்து நின்று இவன் ஒரு வேள்வி செய்ய அதிலிருந்து ஒரு வீரமகனும் ஓர் விழுமிய மகளும் வெளியேறிவந்தார்.
அவ்விருவரையும் தழு

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 1981

விக்கொண்டு போய்த் திட்டத்துய்மன்எனவும் திரௌபதை எனவும் முறையே பெயரிட்டு வளர்த்தான். வலியவந்து தன்னைப் பொருதிருந்தும செல்வமகன் என்றுகருதித் தன் திருமகளை விசய னுக்குக்கொடுத்து உறவு கொள்ளவிழைந்தான். அறிவுடையாயி

ருந்தும் பொருளில்லாமையால் துரோணரை இவன் இகழ்ந்து கொண்டேயிருந்தான். பொருளுடைமை கருதி அவர் முதலாக அனைவரும் இவனைப் போற்றிசெய்து நின்றார். இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு என்பதை இவன்பால் உலகம் அன்று இனிதுணர்ந்து நின்றது.

மாவின்பாலே யன்றி மரபுக்குரிய மைந்தன்
ஆவின்பா ல் கண் டறியான் அதனுல்வருந்தியந்தக்
கோவின்பா லெய்தகலும் கோமான்யார்நீ என்ன
நாவின்பாலா னடுங்கி நானுன் னண்ப னென்றேன் (க)
மன்னன்யானீ முனிவன் மாபா லெனக்கு முனக்கும்
என்னநண்பு ண்டென்ன எகிநகைசெய் திகழ்ந்தான்

அன்ன துருபன் றன்னை யவையிலரசர் கேட்பச்

சொன்னவாய்மை நீயே சோர்ந்தாய் யானுஞ்சோரேன் (உ)

இவை, வீடுமரிடம் வந்த துரோணர் சொல்லியன. இல்லாமை யால் அவர் எள்ளப்பட்டதும் மேற்குறித்த வுண்மையும் இவற் றுள்ளும் விளங்குதல் காண்க.

செல்வர்க்கே சிறப்புச் செய்யுந் திருந்துநீர் மாந்தர்போல

அல்குற்கு முலைக்கு மீந்தார் அணிகல மாயவெல்லாம்

நல்கூர்ந்தார்க் கில்லை சுற்ற மென்று நுண் ணுசுப்புநைய

ஒல்கிப்போய்

மாடஞ்சேர்ந்தாரொருதடங்குடங்கைக் கண்ணார்.

இல்லாரை எள்ளுவர்; செல்வரைச் சிறப்புச் செய்வர் என்னும் இவ்வுண்மையை உறுப்புக்கள்மேல் ஏற்றி வியப்புறத்

திருத்தக்க தேவரும் உரைத்திருத்தல் காண்க.
செல்வர்களை யெல்லாம் சிறப்புச்செய்து புகழ்ந்து அனுப் பிக்கொண்டிருந்த துவாரகையின் காவலாளர்கள் ஏழைக் குசேல ரைக்கண்டவுடனே இகழ்ந்து நிறுத்தி,
1982 திருக்குறட் குமரேச வெண்பா.

வகுத்தபல் லுலகும் போற்ற மாற்றலர் கூற்றார் மேவச்
செகுத்தர சாளுங் கண்ணச் செம்மலெங்கே நீயெங்கே
இகுத்தபல் துவாரக் கந்தை யேழைப்பார்ப் பானேசற்றும்
பகுத்தறிக் கிடலற் றாய்கொல் பயனின்மூப் படைந்தாய்போலும் (1)
மின்மைசெய் பகைஞர்மோலி மிதித்திடு கழற்கால் கண்ணன்

றன்மையு மேழையாகின் றன்மையுந்
தெரிந்துநோக்கில்
வன்மைசெய் புழைக்கைமாவும் மசகமும்
போலும்வாரிக்
கொன்மைசெய் நீருமாவின் குளப்படி
நீரும்போலும். (2)
கனகமால் வரையும் மண்ணங் கட்டியும்
போலுஞ் செங்கேழ்த்
தினகர ஒளியு மோர்கத் தியோதத்தின்
ஒளியும்போலும்
அனகமார் தருவும் புன்சிழ் கம்புலும் போலுஞ்
சேடப்
பனகமுஞ் சிறுநாங் கூழும்போலும்பாழ்
மிடிப்பார்ப்பானே. (3) என்று இடித்து
வைத்ததும் ஈண்டு எண்ணத்தக்கது. இல்
லாரை இவ்வுலகம் எவ்வளவு எளிதாக
எள்ளமுந்துகின்றதென் பதை
இனிதுணர்த்தற்கு ஏற்ற சான்றாயிந்து
இசைந்து நிற்றல் காண்க.

உடற்குயிர்போற் செல்வம் உயிர்க்குயிராம்
நடைப்பிணமே யாவர் நவை.

இன்றேல்

பொருளில்லாதவரை எவரும் இகழ்வர் என்பது இதனால் கூறபபடடது.

---

753 சென்றவிட மெல்லாஞ் சிறக்கேதனை செல்வனாய்
குன்றாது வென்றான் குமரேசா—நின்ற
பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று.

(௩)

இ—ள்.

குமரேசா! சிறந்த

செல்வமுடையனாய் சென்ற இட மெல்லாம்
என் வென்றி யெய்தி நின்றான் எனின்,
பொருள் என்னும் பொய்யா விளக்கம்
எண்ணிய தேயத்துச்சென்று இருள்
அறுக்கும் என்க.

இது, கருதிய இடமெங்கும் பொருள்
உறுதிதரும் என்கின்றது. சென்ற
இடமெல்லாம் சிறந்து என்றது அவன் போன
76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.
1983

இடமெங்கும் புகழும் வென்றியும்
பொருந்தி நின்றமை கருதி. அந்நிலைக்கு
அவன் வள்ளன்மையே காரணமாயினும்
அதனை வழுவற வளர்த்து வந்தது
பொருளேயாதலால் செல்வனாய் என
நின்றான். குன்றுது வென்றான் என்றது
பகைவருறை நிலம்புகுந் தும்தளர்வு சிறிது
மின்றி அவரனைவரையும் பொருது

வென்றமை கருதி. நின்ற = உறுதியாய்ப் புகழ்பயந்து நின்ற. நின்றபொருள் சென்று அறுக்கும் என்று கொண்டு அதன் பயங்காண்க.

இருள் என்றது இங்குப்பகையை. அறுக்கும் என்ற குறிப்பால் இஃது அறிய நின்றது. பொருளை விளக்கம் என்று உருவகஞ் செய்ததற்கேற்ப வெளிப்படையாகப் பகையை விளக்காமையால் இஃது ஏகதேசவுருவகம்.

பொருளை விளக்கம் என்றது தன்னையுடையானை அது விளங்கச் செய்வது கருதி. அல்லலையும் அச்சத்தையும் விளைவித்தலால் பகை இருள் என நின்றது.

இருள் அறுக்கும் = பகையாய இருளை மாய்க்கும்.

மேல், பொருளுடையான் புகழுடைவான் என்றார்; இதில் அவன் சென்ற இடமெங்கும் இன்பமுறுவான்

என்கின்றார்.

பொருள் என்று புகழ்ந்து சொல்லப்படும் மெய்விளக்கு தன்னை க்கைக்கொண்டவர் கருதியதேயங்களிலெல்லாம் சென்று பகையிருளைப்போக்கும் என்பதாம்.

நின்ற இடத்திலுள்ள இருளை மாத்திரம் நீக்கி தென்றல் முதலிய சிறிய காற்று வந்தடித்தாலும் அவிந்து போகும் உலக விளக்கிலும், சென்ற இடமெங்கும் குன்றாது நின்று பகையிருளை நீக்கிப் பொருள் விளக்கம் ஒளிமிகு மாதலால் அது பொய்யா என்னும் அடையைப்பொருந்தி நின்றது.

பொருளுடையான் உணவு உடை முதலியன இனிது உதவவல்லனாதலின் அவனிடம் பெரும் படைகள் சேரும்; அவை அவன் கருதிய இடமெங்கும் சென்று உறுதியோடு நின்று பகை வரை வென்று

இறைகொண்டு மீண்டு அவனுக்கு இசையுண்டா 1984 திருக்குறட் குமரேச வெண்பா.

க்குமாதலால், பொருள் எண்ணிய தேயத்துச்சென்று இருளறுக்கும் என்றார். ' "பொன்னினுகும் பொருபடையப்படை, தன்னினுகும் காணி" என்பதுங்காண்க. எட்டி யெட்டு மட்டும் பாயும், பணம் பாதாளம் வரையும் செல்லும் என்னும் உலகவழக்கும் ஈண்டு உள்ளத்தக்கது.

இனி, " செய்கபொருளைச் செறுநர் செருக்கறுக்கும் எஃகு" என்று வெளிப்படையாகப் பொருள், பகையறுத்தலை அடுத்து உரைத்திருத்தலால் இந்த இருள் என்றதைப் பகை என்று கொள்ளாமல், பொதுவாக அல்லல் என்றேகொண்டு பொருள் எண்ணிய

இடமெங்கும் சென்று முன்நின்று இடர்களைந்து தன்னையுடையானுக்கு இன்பங்கொடுக்கும் என்று கொள்ளினுமாம். கண்டு இடா ா வது அறிமுகமில்லாமையால் உளவாம் முட்டுப்பாடு. அறியாத இடத்திற் சென்றால் பொருளில்லாதவன் இருளடைந் ததுபோல் இடருறுதலையும், உடையவன் ஒரு துயரமுமின்றி இருந்த இடம்போலவே எல்லா இடங்களையும் அடைந்து இனிது மகிழ்தலையும் அனுபவத்தில் கா ணும் அறிந்துகொடலாம். இவ் அனுபவமும், "தம்கைத் துடையார்க்கும் எவ்வூரும் ஊர்" என் னும் மணிமொழியும் இப்பொருளை வலியுறுத்துகின்றன.

போய்க்கொடிய கானம் புகுந்தாலும் அவ்வனத்தில்

வாய்க்கினிய சோறூட்டும் மாதாவே!

ஓது கலைஞானம் உள்ளவெலாம் கற்றுநன்றுச்

சாதிக்க வைக்குந் தகப்பனே!
தம்தாரத்துக்கொவ்வாத தாழ்ந்தகுல மானாலும்
வங்கெடுத்துப் பெண்கொடுக்கும் மாமனே!
வெட்டிவெல்லக் கூடா வினையை அரைநாழிகைக்குள்
கட்டிவெல்லக் கச்சைகட்டுங் காவலா!
என்று பொருளைத் தாயாகவும் தகப்பனாகவும் மாமனாகவும்
வீரனாகவும் அமைத்து இதில் அமைத்திருக்கும் அழகைநோக்குக.
எண்ணிய யாவும் பொருளால் இனிது முடியும் ஆதலால் அதனை நன்கு
ஈட்டிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.
76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.
1985

சென்ற இடமெல்லாம்

செல்வமுடையானுக்கு வென்றி யுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆய்பால் உணரப்படும்.

கதை.

நம் பாண்டி மண்டலத்திலே ஆய் குடி என்னும் நகரிலிருந்த குறுநில மன்னனாகிய ஆய் என்பவன் அறிவும் திருவும் அருளு முடையனாய் எல்லாவுயிர்கட்கும் இனியனவே செய்து இசைநிசைபரப்பி இன்புற்று வாழ்ந்தான். கைமாறு கருதாது பெய்துய் விக்கும் மழைஎன இவனை உலகம் மதித்திருந்தது. பிறர் புகழ வேண்டுமே யென்று கருதியும், புண்ணியம் வருமே என்று எண்ணியும் கொடாமல் இயல்பாகவே தண்ணளியோடு இவன் ஈந்து வந்தான்.

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வாணிகன் ஆய் அலன் பிறருஞ்
சான்றோர் சென்ற நெறியென
வாங்குப் பட்டன் றவன்கை

வண்மையே. என்று புலவர் போற்ற இவன் நிலவி நின்றான். மறுமை நோக்கிக் கொடாது வறுமைநோக்கியே கொடுக்கும பெருமையாளன் என்று அனைவரும் உவந்து புகழ இவன் விளங்கிவருங்கால் கொங்கு மண்டலத்திலுள்ள குறுநிலக்கிழவர் சிலர் இவன்மேற் பொறாமையால் பகைமைகொண்டு இடர் விளைத்துவந்தார். அளிமிருந்த இவன் அமைதியுற்றிருப்பினும் உடனிருந்த வீரர் அவர்களைப் பொருது வென்றுவிடக் கருதி வேண்டினார். இவனும் இசைந்து உறுதி கூறிப் பொருளும் படையும் பொருந்த வுய்த்தான். இப்படை புகுந்தவுடன் அப்பகைவரும் வந்தெதிர்த்தார். உணவும் உடையும் பிறவும் தந்து தம்மைப்பேணிவந்த இவனது உதவியை நினைந்து ஊக்கிநின்று இவர் உடன்று பொருதார். அவர் உடைந்து போயினார். வேல் வாள் முதலிய படைக்கலங்களைச் சிதறிவிட்டுப்

பகற்போடியவுடன் 'கொங்கர் ஓடினர் வெற்றி எங்கள் பாலதே' என்று இவர் வீர முழக்கஞ்செய்து மீண்டுவந்து இவனைக் கண்டு மிகமகிழ்ந்துநின்றார்.
இவனது அருமைபெருமைகளையும் செல்வாக்
1988 திருக்குறட் குமரேச
வெண்பா.

பயன் படா தாகலால் திறனறிவோடு தீது இன்றிப்பொருளைச் செய்து கொள்ளவேண்டும் என்றவாறு.

இனியன நுகர்ந் தெய்தும் இன்பமும், ஈதல் முதலியவற்றா லாகும் அறமும் பொருளாலே உண்டாம் ஆகலால் அவற்றை அஃது ஈனும் என்றார். அறத்தை முன்னிறுத்தியது மறுமை யின்பத்திற்குரிய அதன் அருமைகருதி.

அருள்கொண் டியற்றும் அறமும்
அறநெறியாய்க்க மென்பூச்

சுருள்கொண்ட கோதையர் தோள்புணரின்பமும் சூழ்சுரும்பும்
மருள்கொண்டு பாடுமதுமலர்ச் சோலையயிலனையாய்
பொருள்கொண் டொழிய முற்றுமென்று ஞாலம்புகலுமன்றே.

என்றபடி பொருள் இருந்தாலன்றி இன்பமும் அறமும் பொருந்த இயலாதாதலால் நெறியே முயன்று அதனை நிரம்ப யீட்டிக் கொள்ளவேண்டும் என்பதாம்.

பொருளுடைமையால் எல்லா நலங்களையும் அடையலாம் என்று கருதித் தீயவழியில் சேர்ப்பின் நஞ்சு கலந்தபால் போல் அது நலங்கொடாது போமாதலால் தீதற்ற வழியில் திறந்தெரிந்து அதனைச் செய்துகொள்ளவேண்டும் என்க. "திறஞ்சேர்ந்தா ஞுக்கமேபோல் திருத்தகும்" என்றது கவி.

பிறர்க்கு அல்லலில்லாதபடி நல்லவழியில் வந்த செல்வமே எல்லா நலங்

களையும் நல்கவல்லது என்பது கருத்து.

தீதில்லாதபடி நீதியோடு நின்று பொருளை யீட்டினவன் இன்பமும் அறமுமெய்தி இருமையிலும் பெருமையெய்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாயலன்கண் உணரப்படும்.

கதை.

சாயலன் என்பவன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த ஒரு வணிகர்குல மகன். அமைதியும் பண்பும் அமையப்பெற்றவன். தன் மரபுத்தொழிலாகிய வாணிக முறையில் இவன் மிகவும் சிறந்தவன். கடல்வழியாகவும் கரைவழியாகவும் வந்த பல்வகைப் பண்டங்களையும் பண்புறத் தொகுத்து நல்வழியிற் பொருளீட்டி அல்வழியாளர் கட்கெல்லாம் இவன் அறிவூட்டி வந்தான். வாணி 76-ம் அதிகாரம் பொருள்செயல்வகை. 1989

கத்தைத் தன் காணியாகக்கொண்டு நீணிதியோடு நீதியுமுடையனாய் ஆ நயிரே ராம்பி அருந்தவம் பேணிச் சிறுற நிலவிச் சிறந்த சான்றாண்மைக்கு இவன் உயர்ந்த சான்றாய் அமைந்திருந்தான். இவனது அமைதி, செல்வம், தகுதி முதலியவற்றை யறிந்து மகிழ் ந்து அந்நாட்டு மன்னன் இவனுக்கு எட்டி என்னும் பட்டந்தந்து இசைபெறச்செய் தான். எட்டி என்பது தகுதிகுன்றாது நின்று பெ ரும் பொருளீட்டிய செட்டிகளுக்கு அக்காலத்தில் அரசர் உவந்து கொடுக்கும் பட்டம் என்க. அத்தகைய எட்டிப்பட்டத் தை யெய்தி இசைமிகப் பெற்றுத் தீது சிறிதுமில்லாதபடி நல்ல வழியிற் செல்வம் தொகுத்து இல்லறத்திலிருந்து எல்லாருக்கும் இதம் பு ரி ந்து வ ந் த ான். இவனு டைய மனைவி பெயர் புனிதவதி என்பர். அவ் இனிய மனைவியோடமர்ந்து

நெறிமுறையே நின்று அரியபோகங்களை நுகர்ந்து அறம்பல புரிந்து நிரம்பிய புகழோடு இவன் விளங்கியிருந்தான். இவனது அழகிய மனையில் முனிவரொருவர் வந்து உணவருந்தியபொழுது அங்கோர் சிறுகுரங்கு வந்து அவர் அருகே நின்றது. அவர் இரங்கி நோக்கிச் சிறிது உணவும் நீரும் உதவி அதனைப் பாதுகாத்துவரும்படி இவன் மனைவியிடம் கூறிவிட்டு மகிழ்ந்து போயினர். அவள்பேணி வருங்கால் அது முதிர்வடைந்து உயிர்துறந்தது. அஃது உயர்ந்த நிலையை அடையவேண்டுமென்று கருதி மிகுந்த பொருளைத் தானஞ் செய்தாள். அதனால் அது மத்திமதேசத்திலே வாரணவாசி என்னும் நகரிலே அரசகுமாரனாய்ப் பிறந்து அரசுபுரிந்திருந்து பின்பு தேவகுமாரனாய் நின்று இவனது சிறந்த மனைவாழ்க்கையின் திறங்களையும் அறங்களையும் உலகறிய

வுணர்த்தி யுயர்ந்து சென்றது. தீநிலனாய் நின்று நீதிவழியே நிதியம் ஈட்டி அதனால் அறங்கள்பல செய்து ஐம்புல இன்பங்களையும் ஆரத்துய்த்து மக்களும் ஒக்கலும் பக்கம் நின்று ஓங்க முடிவிலின்பத்தை இவன் முடிவில் அடைந்தான். இவ்வடைவிற்கெல்லாம் நல்வழியேவந்த இவன் செல்வமே காரணமாய்நின்றதாதலால் திறனறிந்து தீதின்றி வந்த பொருள், அறனும் இன்பமும் ஈனும் என்பதை உலகம் இவன் பால் இனிதுணர்ந்தது. எட்டிசாயல னிருந்தோன் எனச் சிலப்பதிகாரத்தும் இவன் சரிதம விரித்துக்கூறப்பட்டுள்ளது.

1990 திருக்குறட் குமரேச வெண்பா.

வஞ்சனையால் சேர்த்தமைத்த
வன்பொருளோ இன்பருளா
நஞ்சங் கலந்தபால் நாடு.

நல்வழியிலீட்டிய பொருளே நலம்பயக்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

755 உள்ளன்போ டன்றி யுறுபொருளை வான்பதியேன்
கொள்ளான் வெறுத்தான் குமரேசா—கொள்ளும்
அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். (ரு)

இ—ள்.

குமரேசா! குடிகள் அன்போடு தரும் பகுதியை மாத்திரம் அருளோடுகொண்டு வேறு பொருள்களை

என் பயாபதி விரும்பாது விட்டான் எனின்,
அருளொடும் அன்பொடும் வாராப்
பொருளாக்கம் புல்லார் புரள விடல் என்க.
இது, கொடுநெறியால் வரும்
பொருளைக் கொள்ளலாகாதென்கின்றது.
அன்போடு அன்றி உறுபொருளை, பதி
வெறுத்தான் என்றது ஆர்வத்தோடு நின்று
குடிகள் உவந்துதவிய பகுதிப்பொருளை யன்றி
வேறொன்றையும் பயாபதி பற்றாது
விட்டமை கருதி. கொள்ளான் =
கைக்கொள்ளாதவனாகி. இது முற்றெச்சம்.
தீது இன்றி வந்தபொருளே
இன்பநலங்களை ஈனும் என முன்
இசைத்ததை நோக்கி அத்தீதாவது யாது?
என்று ஒருவன் ஆராய்ந்து நிற்ப, அவனை
நோக்கி ஐயந்தெளிய உணர்த்தியதாக இதனை
உணர்ந்துகொள்க.
புல்லார் = பொருந்தாதவராய். இதில்

எதிர்மறை முற்று எச்சமாகி, இணைந்து, விடல் என்பதனோடு மேவி முடிந்தது. புல்லுவர் என்பது இதன் நேர்மொழியாம். புல்லல் = பொருந்தல். புல் லலோம்பன்மின் புலைமகனிவன் என்பது மணிமேகலை. புரளவிடல் = ஒழியவிடுக. புல்லலன்பொருளை யன்றே போகெனப் புரட்டிவிட்டான் என்பதுங் காண்க.

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 1991

மேல், நல்லவழியில் ஈட்டிய பொருளே நலந்தரும் என்றார்; இதில். அருளொடு நமல் அல்லல்வழியில் வருமாயின் அதனைக் கொள்ள லாகாதென்கின்றார்.

அருளொடும் அன்போடும் பொருந்திவாராத பொருட் பெருக்கத்தைப் பொருந்தாது போகவிடுக என்பதாம்.

ஒருவன் பொருளீட்டுங்கால்

பிறவுயிர்கட்குத் துயர் வினை யாமலும், சுற்றத்தார் முதலிய மற்றவர்கட்கு இடர் இழையாமலும் அருளுமன்புமுடையனாய் நின்றே ஈட்டவேண்டும்; அங்ஙன மின்றி ஆக்கின் அவ்வாக்கம் அவனுக்கு அல்லலையே விளைத்து அகன்றுபோம் ஆதலால் அவ்வாக்கத்தைச் சிறிதும் நோக்காது போக்கிவிடவேண்டும் என்பார் புல்லார் புரளவிடல் என்றார் புல்லார என்று மாத்திரம் நின்றுவிடாமல் புரளவிடல் என மீண்டும் கூறியது விட்டொழிக்கவே வற்புறுத்தற்கென்க. பொதுவாகக் கூறியிருப்பினும் இயலமைதி நோக்கி இதனை அரசர் மேலே ற்றி, அரசன் அருளுடையனாய்நின்று குடிகளைக் காத்தலும், அவர் கள் அவன்பால் அன்புடையராய் மகிழ்ந்து இறைசெலுத்தலுமாகிய இவ்வகையில் இயைந்துவரும் பொருளே அவனுக்கு இனிய பொருளாம்;

அங்ஙனமின்றி வன்கண்ணனாய் நின்று குடிகளை வருத்திக் கொள்ளின் அப்பொருள் விருத்தியாகாது விளிவையே கொடுக்குமாதலால் அதனைக் கைக்கொள்ளாமல் அவன் கடிந்து தள்ளிவிடவேண்டும் என்று கருத்தமைத்துக்கொள்க

இனி, புல்லார் என்றதை முற்றாகக்கொண்டு எழுவாயை வருவித்து அருளொடும் அன்பொடும்வாராப் பொருளாக்கத்தை உயர்ந்தோர் பொருந்தார்; ஆதலால் அதனை நீ புளவிடுக என்று பொருள்கொள்ளவும் இது பொருந்தியுள்ளது.

கொன்றும் ஊன்விற்றுங் கொடுவினை புரிந்தும்

மன்று பறித்தும் வன்கரி பொய்த்தும்

வட்டியீக் கொடுத்தும் இட்டதை மறைத்தும்

வஞ்சனை செய்தும் சஞ்சலம் விளைத்தும்

வருபொருளெல்லாம் அருளொடும் அன்பொடும் வாராதன ஆதலால் அத்தீய வாவைத் தீ என நினைந்து யாண்டும் தீண்டா தொழித்துவிடவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

1992 திருக்குறட் குமரேச வெண்பா.

இரக்கமில்லாமல் நின்று பிறவுயிர்களை வருந்தச்செய்து பொருளை யீட்டலாகாதென்பது கருத்து.

அருள்கெடும்படி வரும் பொருளை அறிவுடையார் கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பயாபதியின்கண் உணரப்படும்.

கதை.

பயாபதி என்பவன் சுரமை நாட்டு மன்னன். போதனம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். வாகுவலி மாயினன். நன்றியறிவிற் சிறந்தவன். என்றும் விதிமுறை வழுவாத மதிநல முடையவன். பொறுமை மிக்கவன். தனக்கு இன்னா செய்தார்க்கும் இனியனவே செய்யும் இயல்பினை யுடையவன். உயிர்களை இனிது பேணி

உயர்வுற்றிருந்தமையால் பிரசாபதி யென்று பெயர் பெற்று நின்றான். மிருகாபதி, சசி என்னும் அழகிய கன்னியரிருவரை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து இவ்வுலகை இனிது பேணிவந்தான். யாதொரு அல்லலுமின்றி எல்லா உயிர்களும் இவன் ஆட்சியில் இன்புற்றிருந்தன. தான் கல்லாத கலை வேறில்லை யென்னும்படி கற்றுத்தெளிந்த இவனது மாட்சியை

வியந்து மரு புலத்தவரும் போற்றிப் புகழ்ந்தார். அக்காலத்
திருந்த பாவலர் பாவிலும், நாவலர் நாவிலும் இவன் புகழ் மேவி
யிருந்தது. மருசி என்னும் ஓர் மதிமான் வந்து இவன் குண நலங்களை நேரிற்கண்டு ஓர் விஞ்சையர் வேந்த னிடம்போய் வியந்து கூறியுள்ளான்.

எரியும் ஆணையான் குளிரும் ஈகையான்
பெரியன் பெற்றியால் சிறியன் நண்பினால்
அரியன் வேந்தர்கட் கெளியனண்டையர்க்
குரிய னேந்துதற் கோடையானையான். (க)

எல்லை நீருல கினிது கண்பட
வெல்லும் வேலவன் விளங்கு தண்ணளி

இல்லை யேனும் இல்லை யாமென
நல்லனே யவ னாமை வேலினாய்.
(உ) 76-ம் அதிகாரம் பொருள்
செயல்வகை. 1993

இலங்குநீர் வேலி வாழ்பவர்க்
காவி யாபவர் அரச ராதலால்
காவ லோவு ங்கொல் என்று
கண்படான்
மாவ றானையம் மன்னர் மன்னனே.
(௧)

வையம் இன்புறின் மன்னனின்புறும்
வெய்ய தொன்றுறிற் றானும்
வெய்துறும்
செய்ய கோலினாய் செப்ப லாவதன்
றைய காரிநான் அருளின்
வண்ணமே. (௩)

இங்ஙனம் எவரும் புகழ்ந்து போற்ற
அருளோடு நின்று குடிகளை இவன் ஆதரித்து

வந்தமையால் அவர்களெல்லாம் அன்போடு நின்று இவனுக்கு இன்புசெய்துவந்தார். மறுபுல மன்னரும் குறுநிலக் கிழவரும் இவனது அருமையை விரும்பி தாமே வந்து உரிமை தந்து சென்றார். உரிமையில்லாமல் குடிகள் வருந்துமபடி வலிந்து வாங்கும்பொருள் ஒரு நலனும் பயவாமல் முடிவில் அழிவே தந்து ஒழிந்துபோம் ஆதலால் அதனை ஒரு சிறிதும் கொள்ளலாகாது என்று உற்றவர்க்கெல்லாம் இவன் உணர்த்தி நின்றான். ஒருமுறை மழை பெய்யாது பொய்த்தது. அதில் குடிகள் வருந்துமேயென்று கருதித் தனக்கு வரவேண்டிய இறைப்பொருளைத் தரவேண்டாம் என்று அருளி வேண்டும் உதவிகளை மீண்டும் அவர்க்கு விளைத்துவந்தான். குடிகள் தன்பால் அன்போடு நின்றுவரத் தான் அருளோடு நின்று பொருளை வளர்த்து இவன் ஆட்சி செய்துவந்த மாட்சியை அனைவரும் போற்றி நின்றார்.

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்
கம் புல்லார் புரளவிடல் என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய்
நின்றான். விரிவைச் சூளாமணியில் காண்க.
இவனைக் குறித்துத் தோலாமொழித் தேவர் கூறியுள்ள சில குறிப்புக்கள் இதனடியில் வருவன.

எண்ணின ரெண்ணகப் படாத செய்கையான்
அண்ணிய ரகன்றவர் திறத்து மாணையான்
கண்ணுதர் பகைவரென் றிவர்க்கு நாளினும்
தண்ணியன் வெய்யனத் தானை மன்னனே. (க)

1934 திருக்குறட் குமரேச வெண்பா.

அடிநிழ லாசனை யளிக்கும் ஆய்கதிர்
முடிநிழல் முனிவர் சரண மூழ்குமே
வடிநிழல் வேலகதி செங்கின்
மன்னவன்
குடைநிழ லுலகெலாங் குளிர
நின்றதே. (உ)

ஆறிலொன் றறமென அருளி
னல்லதான்
றாறுசெய் துலகினி லுவப்ப
தில்லையே
மாறிநின் றவரையும் வணக்கி னல்லது
சீறிநின் றெவரையுஞ்
செகுப்பதில்லையே. (௩)

இவற்றால் இவன் நெறியோடு நின்று
முறைசெய்த திறனும், ஆறிலொருபகுதியை
யன்றிக் குடிகளிடம் வேறு கருதாத இயல்
பும், அருளோடு நின்றே பொருள்செய்த
நலனும்பிறவும் இனிது தெளியலாம்.

ஆருயிர்கள் நோவ அருளின்றிச்
செய்தபொருள்
பேரிருள்நோய் பேணல் பிழை.
பிறர் அல்லலுறச் செல்வம்
சேர்க்கலாகாதென்பது இதனால்
கூறப்பட்டது.

---

756 திண்டோட் டருசகனென் தெவ்வ
ருறுபொருளைக்
கொண்டான் உரித்தாக்
குமரேசா—கண்ட
உறுபொருளும் உல்கு பொருளுந்தன்
னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.
(௬)

இ—ள்.

குமரேசா! பகைவர் பொருளையும்
புதையற்பொருளையும் தருசகன் என் தனக்கு

உரிமையாக்கிக்கொண்டான் எனின்,
உறுபொருளும் உல்குபொருளும் தன்
ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன்
பொருள் என்க.

இஃது இன்ன பொருளெல்லாம்
மன்னனுக்குரியன என்கின்றது.

திண்டோள் என்னும் அடை அவன்
திறல் கருதி நின்றது. தெவ்வர்பொருளை;
உறுபொருளை என்க. தெவ்வர் = பகைவர்.

76-ம் அதிகாரம் பொருள்
செயல்வகை. 1995

உறுபொருள் = உற்றபொருள்.
அஃதாவது உடையவரின்மையால் தானே
வந்து சேர்ந்தபொருள். இதனை தாதியற்ற
பொருள் என்பர். நெடுநாளாக நிலத்திற்
புதைந்துகிடந்து பின்பு பிறர்கண்டெடுத்த
பொருளும் உறுபொருளாய் என்க.

உல்குபொருள் = சுங்கப்பொருள். என்றது வெளிநாடுகளி லிருந்து வரும் பண்டங்களுக்கு விதிக்கப்பட்ட தீர்வைப்பொருள். அப்பண்டங்களின் தகுதிநோக்கி வரிவாங்குமிடம் சுங்கச்சாவடி எனவும், ஆயத்துறை எனவும் கூறப்படும்

ஒன்னார் = பகைவர். தெறுதல் = அடர்த்து வெல்லல்.

உறு, உல்கு, தெறு என்ற வைப்புமுறையால் அருளொடும் அன்பொடும் அவை அமைந்துள்ள அளவுநிலை புலனும். தெறு பொருளை இறுதியில்வைத்தது அருள் சிறிதும் உறுவகைவருதலால் என்க. வேந்தன் பொருள் என்றதனால் வேறெவர்க்கும் ஆகா தென்பதாயிற்று.

உடையவரின்மையால் தானே வந்து பொருந்திய பொரு ளும், சுங்கப்பொருளும், தன் பகைவரை வென்றுகொண்ட பொருளும், அரசனுக்கு

உரியபொருளாம் என்பதாம்.

உலகநாயகனுகிய வேந்தனுக்கு அதிலுள்ள பொருளெல்லாம் உரியதேயாயினும் பகுதி, குடிவாரம், ஒப்படிமுதலிய சிலபிரிவினை களும் உள; அவற்றுள்ளும் அடங்காதனவாய் அவனுக்குரிய வற்றை இதில் உணர்த்தினென்றார்.

மேல், அருளு டையனாய் நின்று பொருள் ஈட்டவேண்டும் என்றார்; அங்ஙனமின்றியும் ஈட்டுதற்குரிய இடம் அரசனுக்கு மட்டும் இன்னதாம் என இதில் தெளிவுபெற அருளுகின்றார்.

அரசன் அருளுடையனுயினும் பகைவரை வென்றுகோடல் அவனுக்கு அறமாகுமாதலால் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள் என உரிமை தோன்றவைத்தார்.

புதையற்பொருளும்,

பொதுப்பொருளும், வெளிநாடுகளி லிருந்து வரும் பண்டங்களைப் பார்வையிட்டு வாங்கும் தீர்வைப்

250

1996 திருக்குறட் குமரேச வெண்பா.

பொருளும், மாறுபட்ட பகைவரை யிறழித்து வென்று கொள்ளும் வீரப் பொருளும், வேந்தனுக்கு உரிமைப்பொருளாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருசகன்பால் உணரப்படும்.

## கதை.

தருசகன் என்பவன் மகதநாட்டு மன்னன். இராச கிரியம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். பல கலைகளிலும் வல்லவன். மாற்றலர்க்குக்

கூற்றமென்ன ஆற்றல் மிக்கவனாயினும் அருளும் தகவும் அமையப்பெற்றவன். எதனையும் நுணுகித் தெளிந்து வழுவறச் செய்யும் வினை நலமுடையவன். நெறிவழுவாமல் மறுபுலத்தவரும் திறைகொண்டு தர இவன் முறை செய்து வந்தான். நன்றியறிவோடு வென்றியுமுடையனாய்த் தன் ஆணையை எங்கும் செலுத்தி உலகம் இன்புற இவன் உயர்ந்து விளங்கினான். இவனது குணநலங்களை யறிந்து புலவர் பலரும் புகழ்ந்து போற்றினர். தன்னோடு மாறுபட்டு நின்ற பகைவரெழுவரை வென்று மிகுபொருளோடு உயர்புகழ் கொண்டான்.

அமரா மன்னர் அருஞ்சம முருக்கிப்
பைங்கழ லமைந்த பாடமை நோன்றாள்
வெண்கதிர் மதியின் வீறொளி திகழ்ந்து
தாண்மீக் கூரிய வேம வெண்குடை
மணிமுடிச் சென்னி மகத மன்னவன்

தணியா வேகத்துத் தருசகன்.
என்பதாதியாகக் கொங்கு வேளிரால் இவன்
கூறப்பெற்றுள்ளான். இங்ஙனம் சிறந்த புக
ழோடு இவன் விளங்கி வருங்கால்
உதயணன் வந்து இவனைக் கண்டான்.
உவந்துபசரித்து அவனுடன் உறவுகொண்டு
ஒருநாள் இவன் உரையாடி உலாவி நிற்கையில்
நெடுநாளாக மண்ணிடைப்பட்டு
மறைந்துகிடந்த பெரும்பொருளை அவன்
கண்டான். அப்புதையற் பொருள்
இவனுக்கே உரியதென்று போற்றிக்
கொடுத்தான். அவனுக்கு நன்றிபலகூறி
அப்பொருளை இவன் நயந்துகொண்டான்.
பிற நாடுகளிலிருந்து தன்னாட்டுள் வரும்
பண்டங்களுக்கு வரிகொண்டும், பகைவரை
வென்று திறைகொண் 76-ம் அதிகாரம்
பொருள்செயல்வகை. 1997

டும் , முறை தன்றூதபடி நின்று
இவன் முதநிலம் புரந்தான். புதையற்
பொரு ளும் சு ங்கப் பொருளும்
வெற்றிப்பொருளும் தனக்கு
உற்றபொருளென்று கொண்டு இவன்
உயர்ந்திருந்தானுதலால் உறுபொருளும் உல்கு
பொருளும ஒன்னார்த் தெறுபொருளும்
வேந்த ன் பொருள் என்பதை இவன்
விளக்கினின்றுன். விரிவைப் பெ ருங் கதையில்
காண்க.

என்று முரிய இரும்பொருளுள்
மன்னற்கு
வென்று வரும்பொருளே மேல்.

புதையற் பொருள் முதலியன
அரசர்க்குரியவாம் என்பது இதனல்
கூறப்பட்டது.

---

757 உற்ற அருள் கோவலன்கை
யுள்ளபொரு ளான்முன்னங்
கொற்றமுற்ற தென்னே
குமரேசா—பெற்ற
அருளென்னும் அன்பீன் குழவி
பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. (எ)

இ—ள்.

குமரேசா! கோவலனது அருள் அவன் பொருளால் என் பொலிந்து விளங்கியது எனின், அருள் என்னும் அன்பு ஈன் குழவி பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு என்க.

இது, பொருளால் அருள்வளரும் என்கின்றது.

உற்ற அருள் = தன் உள்ளத்தில் பொருந்திய இரக்கம். கை உள்ள பொருள் என்றது தேடித்திரியாவண்ணம் திரளாகப்

பொற் காசுகள் எப்பொழுதும் பேழைகளில் நிரம்பியிருந்தமை கருதி. பார்ப்பனி வருந்தி அலைந்ததைக் கண்டவுடனே கோவலன் கொண்ட இரக்கம் அவன் பொருளால் நிறைவேறிப் பெருமை பெற்றதாதலால் அருள் பொருளால் கொற்றமுற்ற தென்றும். அறங்கள் யாவும் அருளிடந்தோன்றும் ஆகலின்பெற்ற என்னும் அடையை அது பெற்று நின்றது.

அன்பைத் தாயாகவும், அருளைக் குழந்தையாகவும், பொருளைச் செவிலியாகவும் இதில் உருவகஞ்செய்துள்ள அழகை உய் 1998 திருக்குறட் குமரேச வெண்பா.

த்து நோக்குக. இஃது இயைபுருவகம். செவிலி = வளர்ப்புத் தாய். அன்பு தாய் என்பது ஈன் என்னும் வினைக் குறிப்பால், விளங்கி நின்றது. ஈன்றதாய்,

வளர்ப்புத்தாய், குழவி என இங்குத் தோன்றி நிற்கும் மூன்றற்குமுள்ள உரிமையை ஊன்றி யுணர்க.

மிக்க இளமையை உணர்த்திவரும் குழவென்னும் உரிச்சொல் உடைமைப் பொருளதாகிய இகர விகுதிபெற்று குழவி என நின்றது. குழவி = குழந்தை. இளமையின் இனிய இயல்பு தோன்றக் குழவி என்றார். "மூலைப்பாற் காலத்து முடிமுறை யெய்திக், குடை வீற்றிருந்த குழவி" எனவும், "ஈன்றோள் நீத்த குழவி" எனவும் வருவன காண்க. மழவும் குழவும் இளமைப் பொருள என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

அன்பினால் பெறப்பட்ட அருள் என்னும் குழந்தை பொருள் என்று புகழ்ந்து சொல்லப்படும் செல்வச் செவிலியால் வளர்ந்து நிலைபெறும் என்பதாம்.

அவ்வுலக நலங்கள் யாவும் ஒருங்கே அருளவல்ல அருளும் பொருளால் உண்டு

என்ற இதனுல் பொருளின் பெருமையும் நெறிமுறையே நின்று நிரம்ப இதனை விரைந்து ஈட்டிக்கொள்ள வேண்டும் என்னும் உரிமையும் இனிது புலனும்.

தொடர்புபற்றி நிகழும் அன்பினும் தொடர்பில்லாமலே எல்லா உயிர்களிடத்தும் பரந்து செல்லும் அருள் சிறந்ததன்றோ? இதனை அதன்
பிள்ளையாகக் கொள்ளவைத்தது பொருந்துமோ ? எனின், சிறிய வித்தினிடத்தில் பெரியமரந் தோன்றுதல்போல் இப்பேரிரக்கம் அச் சிற்றிரக்கத்தினடியாகவே வளர்ந்துதோன்று மாதலால் அது பொருந்துமென்க.

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம் அன்புசெறி

கடலுமா மெனவும் பொங்கும்

பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண்

ணிரண்டெனவும் புவன முய்ய
இருட்கடுவுண்டவாருளும் அகிலமெல்லாம்
ஈன்றுடன்
றிருவருளும் எனவுங் கூடி
தெருட்கலை

ஞானக் கன்றும் அரசுஞ் சென்று செஞ்சடை
வானவர் கோயில் சேர்ந்தாரன்றே. இது

## 76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.

1999

திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் சந்தித்தபொழுது அவ் விருவர் இயைபையும் குறித்துக்கூறியது. கன்றும், தாயும் போல் அவ் இருவரையும் கருதவைத்து அதற்கு ஏற்ப அருளும் அன்பும் என அருளியுள்ள நயத்தைக இதில் ஆய்ந்து கொள்க. பிள்ளையார்

எனவும், அப்பர் எனவும் அவ்விருவருக்கு முறையே அமைந்துள்ள பெயரொற்றுமையையும், அன்பின் குழவி அருள் என்ற நம் அடிகள் அடியையும் நினைந்து அருண்மொழித் தேவர் இங்கு இதனை அமைத்துள்ளமை அறியலாகும்.

அருட் செல்வம் செல்வத்துட் செல்வம்; பொருட் செல்வம், பூரியார் கண்ணும் உள. என முன்பு அருளோடு இணையாகாதென்று இழித்துவிட்ட பொருளை, இப்பொழுது அதற்கு வளர்ப்புத் தாயாக எடுத்துப் பாராட்டுதல் அடுக்குமோ? எனின், அங்கு அருளுக்கும் பொருளுக்குமுள்ள ஏற்றத் தாழ்வுகளை ஏதுவோடு எடுத்துக் காட்டினார்; இங்கு அதனோடு இப்பொருளுக்கு அமைந்துள்ள இயைபினை புணர்த்துகின்றாராதலால் அடுக்கும் என்க.

பொருள் மிகச் சிறந்தது, தன்னையுடையானுக்கு எல்லா நலங்களையும் அடைவிக்கும், சென்றவிடமெங்கும் சிறப்புறச் செய்விக்கும் ஆதலால் மன்னர் முதல் அனைவரும் இன்னுயிர்போற் பேணி அதனை யீட்டிக்கொள்ளவேண்டும் என இதுவரை உரைத்துவந்ததை நோக்கி இப்பொருளை எவ்வளவுதான் ஈட்டிக்கொள்ளினும் இம்மைக்குமாத்திரந்தானே பயன்படும்; மறுமையில் மிகப் பெருமைதரவல்ல அருளையன்றோ உண்டு பண்ணிக்கொள்ளவேண்டும் என்று ஒருவன் வினவ அதன் உண்மைக்கும் இவ்வுடைமையே காரணமாமென அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்துகொள்க.

முல்லைக்கொடிமேலும், மயில்மீதும் சென்ற பாரி பேகர்களுடைய அருள், தேரும்

போர்வையுமாகிய அவர்தம் பொருளால் நிலத்தன்மை யீண்டு நினைக்கத்தக்கது.

பொருளுண்டானால் அருளுண்டாகும் கும் ஈண்டுள்ளத்தக்கது.

என்னும் உலக வழக் 2000

திருக்குறட் குமரேச வெண்பா.

எவ்வுயிரையும் தன்னுயிர்போல் எண்ணி யிரங்குதலாகிய அருளை வளர்த்தற்குப் பொருள் எற்றுக்கெனின், தன் மனமொழி மெய்களால் பிறவுயிர்கட்குச் சிறிதும் இடர்செய்யாமையும், பசி நோய் முதலியவற்றால் அவை இடருறின் உடனே உணவு முதலியன கொடுத்து இடர் நீக்கி இதஞ் செய்தலும் ஆகிய இவ்விரு வகை நிலையின் கண்ணே ய

அருள் நிலை பெற்றுள்ளது; பொருள்
இல்லையாயின் இடர்களைந்து உதவிசெய்ய
இயலாது; ஆகவே அருள் இல்லாகி அமை
நேரும் ஆதலால் அருளென்னும் குழவி
பொருள் என்னும செவிலியால் உண்டு
என்றார். செவிலி என்றது அதனை இனிது
வளர்க்கும் இயைபு கருதி. யாதொரு
நலிவு முறாது எல்லா நலங்களையும் தானே
உதவிச் சீராட்டவல்லவள் என்பது தோன்றச்
செல்வ அடைசேர்த்து நின்றது.

தாயிழந்து தவிக்கின்ற கன்றை ஒரு
மலட்டுப்பசு கண்டு
கனிந்து இரங்குமாயின் அவ் இரக்கம
பயன்படாது எப்படி இழிவுறுமோ
அப்படியே பொருளில்லாதான் கொள்ளும்
அருளும
வீணே அழிவுறும் என்க.

பொருளால் அருளுண்டாம்

என்ற இவ் அருமைப் பாட்டை
ஆழ்ந்து நோக்கியவுடனே பொருள் மிகப்
பெற்றும் அருளற்
றிருக்கும் சில செல்வர்களைச்
சிந்தித்துக்கொண்டு அவர் மாட்
டுள்ள பொருள் அருளைப் பேணாமல்
இவ் விதிக்கு வேறாகி
யுள்ளதே என ஆராயச் செய்யும். ஆயின்
அது கலந்தீமையால்
பால் திரிந்ததுபோல் இனந் தீமையால்
திரிந்து கிடக்கின்றதே
யன்றி அருளை வளர்த்தற்குரிய அதன் தனி
இயல்புக்கு யாதும்
தவறில்லை என்க. அவரைப் பொருளும்
அருளும் நகும் என்பர்.

பொருளைப் பொருளாப்
பொதிந்தோம்பல் செல்லாது
அருளைப் பொருளா அறஞ்செய்தல்

வேண்டும்

அருளைப் பொருளா அறஞ்செய்து வான்கண்

இருளில் இயல்பெய்தாத தென்னே நமர்காள். (வளையாபதி)

பொருளைப் பெற்றவர் அருளை வளர்த்து அதனால் அழிவில் வீட்டைந்தையடைதல் வேண்டும்; இல்லையாயின் இருந்தும் இல்

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 2001

ஈதவராய்த் தம க்கே ஏதஞ்செய்து இழிந்துபோவர் என இஃது இரங்கி உணர்த்துதலை யுணர்ந்து கொள் க. எல்லா அறங்கட்குந் தாயாயுள்ள அருளுக்கும் பொருள் தாயாம் என்ற இதனால் இதன் தனி நலமும் உயிர்கட்கு இனிது

பயன்படும் இயல்பும் எளிதுணரலாகும்.

பொருளில்லா இடத்துள்ள அருள் தாயில்லாத பிள்ளை போல் தளர்ந்துபடும் என்பது கருத்து.

பொருளைச் செய்து கொண்டவர் அருளைச் செய்துகொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

அல்லலை நீக்கி என்றும் இன்பம் அருளவல்ல அருளையும் பொருளால் அடைந்து கொள்ளலாம் ஆகலால் அத்தகைய சிறப்புடைய இதனை நிரம்பச் செய்துகொள்ளவேண்டும் என்பது இதன் திரண்டபொருளாம்.

அருளை வளர்த்தற்குப் பொருளுடைமை சிறந்த காரணமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோவலன் கண் உணரப்படும்.

## கதை.

கோவலன் பெருந் திருவோடமர்ந்து

காமச்சுவையை நனி விரும்பி யிருந்தாலும் அருளிலும் ஆண்மையிலும் மிகச் சிறந்திருந்தான். இவன் முன்னோரெல்லாரும் பெரும் பொருளுடையராய் வழி வழியாகச் சிறந்திருந்தாராகலால் பெருங்குடி வணிகர் எனப் பெயர்பெற்று நின்றார். அக்காலத்தில் நிதிமிகப் படைத்த வணிக மக்கள் இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என வகைசெய்து கொண்டு தம் இனமுந் தனமுந் தெரிய இசைபெற்றிருந்தார். இவர், மிதியடி, எருது, யானை என்னும் இவற்றின் மீது முறையே யேறிக் குடைபிடித்துக்கொண்டு தம் எதிரே நிற்பவர் தெரிய வெண்ணுகபடி தாம்படைத்துள்ள பொன்னின் திரளை இடையே குவிக்கும் இயல்பினராவர்.

இப்பர் கவிப்பர் பெருங்குடி வாணிகெ
ரன்

செருப்புடைய மூவர்
உரைக்குங்கால்—தப்பில்

வெண்பா.

விதிபடியே முன்னிசை வேட்கினர்கள் காணு
நிதியுடைய ராவர் நினைந்து.
(சிவசம்போதனை.)

இத்தகைய செல்வ வரிசையில் சிறந்து நின்ற இவன் முன்னே ஒருவன் சோமன்னனோடு சிறந்த நண்பினையமர்ந்து இரு நிதிக்கிழவன் என இசை பெற்றுக் கோவலன் என்னும் பெயரோடே விளங்கியிருந்தான். மாபுநிலை திரியாமல் என்றும் பெரும் பொருளோடமைந்திருந்த இவன் யாவரிடமும் அருளோடமர்ந்து வந்தான். எவரேனும் அல்லலடையக்கண்டால் தன் உயிரையும் பொருட்படுத்தாமல் விரைந்து புகுந்து உதவிசெய்து அவரை விலக்கிவிடுவான்.

ஒருநாள் முதிய வேதியனொருவனை மதத்த யானை பொன்று கையகப்படுத்தியது; அதனைக் கண்டவுடனே இவன் விரைந்து பாய்ந்து அவனை விலக்கிவிட்டு அதன் கைக்குள் அடங்கிக் கொல்ல நின்ற கொம்பையே பற்றுக்கோடாகப் பற்றி ஒல்லையிவெறிப் பிடர்மேலிருந்து கொண்டு தன் மதிவலியால் அதன் மதத்தை யடக்கினான்.

"ஓய்யெனத் தெழித்தாங் குயர்பிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்
பொய்பொரு முடங்குகை வெண்கோட்டடங்கி
மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்பப்
பிடர்த்தலை யிருந்து பெருஞ்சினம்

பிறழாக்

கடக்களி றடக்கிய கருணை மறவ'
என்று அறிஞர்கள் புகழ்ந்துகூற அருளொடு
இவன் பொருந்தியிருந்தான். இங்ஙனம்
இருந்துவருங்கால் தன் நகரமாகிய
காவிரிப்பூம் பட்டினத்தில் பார்ப்பனி ஒருத்தி
தான் வளர்த்த கீரியை ஆராயாது கொன்று
விட்டாள்; அதனால் அவளைக்
கொலைகாரியென்று வெறுத்து விட்டுவிட்டுப்
பார்ப்பான் வெளியேறிப்போனான்.
பாவத்தைக் கழிக்கும்படி அவன்
எழுதிக்கொடுத்த ஏட்டைக்கையில் வைத்துக்
கொண்டு தெருக்கடோறும் அவள்
இயங்கித்திரிந்தாள். யாரும் உதவாது
இகழ்ந்து போயினர் . இவன் கண்டிரங்கி
இக்கடுந்துய்

ருறுதற்குக்காரணம் யாதென்றுகனிந்து கேட்டான். அவள் நடந்
ததைக்கூறி கைக்குவித்து நின்றாள். அவன்கொன்ற கீரியைப்போல்
பொன்னுல் உருச்செய்து சுக்கிராட்டி எக்கீரும் இன்புறும் வண்.

செயல்வகை. 2003 ணம்பெரும் பொருளைத்தானஞ்செய்யின் அவள் அருந்துயர்தீரும் என்று இருந்தவர் மொழிந்ததைக் கேட்டு அவ்வாறே அளவிறந்த தன் அரும் பொருளை அள்ளிக்கொடுத்துத் தானஞ் செய்வித்துப் போன கணவனையுமீட்டி மேல் வாழ்க்கைக்கு வேண்டிய யாவையும் வழங்கி அவர் இன்புற்று மருவி யிருந்து வாழச் செய்தான். பின்னொருநாள் பத்தினி ஒருத்திமீது அடாப்பழிகூறிய பாதக னொருவனை நீதிசெலுத்தும் பூதம்பற்றிப் புடைக்கும்போது இவன் போந்து இரங்கி அவனை விடுத்துவிட்டுத் தன்னை யுண்ணும்படி தாழ்ந்துவேண்ட அது தகாதென்று கூறி அவனையே தண்டித் துக்கொண்டது; அதன்பின் அவன்

பெற்றோர்க்கும் சுற்றத்தார்க் கும் பெரும்பொருளுதவி அத்துயர் மறந்துபோக உயர் நலங்கள் செய்தான். அருளி நத்தும் வறியராயுள்ளவர் யாதும் செய்ய மாட்டாமல் அலமந்து நிற்ப பொருள்மிக்க இவன் அருளை வளர்த்துப் பேரருளாளன் என்று பெயர்பெற்று நின்றான். அருள் என்னும் அன்பீன் குழவி பொருள் என்னும் செல்வச் செவிலி யால் உண்டு என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இவனது அருளுடைமை இதனடியில்வரும் இளங்கோவடிகளது பொருள் மொழியில் பொலிந்து தோன்றுகின்றது.

பிள்ளை நகுலம் பெரும் பிறிதாக
வெள்ளிய மனையோ ளினைந்துபின் செல்ல
வடதிசைப் பெயருமாமறை யாளன்
கடவதன்று நின் கைத்தூண் வாழ்க்கை
வடமொழி வாசகம் செய்தநல் லேடு

கடனறி மாந்தர் கைந்நீ கொடுக்கெனப்
பீடிகைத் தெருவிற் பெருங்குடி வாணிகர்
மாடமறுகின் மனைதொறு மறுகிக்
கருமக் கழிபலங் கொண்மினோ வெனும்
அருமறை யாட்டியை யணுகக் கூஉய்
யாதுநீ யுற்ற இடர்ஈ தென்னென
மாதர்தா னுற்ற வான்துயர் செப்பி
இப்பொரு ளெழுதிய இதழிது வாங்கிக்
கைப்பொருள் தந்தென் கடுந்துயர் களைகென
251
2004 திருக்குறட் குமரேச வெண்பா.

அஞ்சல் உன்றன் அருந்துயர் களைகேன்
நெஞ்சுறு துயரம் நீங்குக என்றாங்

கோத்துடை யந்தணர் உரைநூற்
கிடக்கையிற் றீத்திறம் புரிந்தோள் செய்துயர்
நீங்கத்
தானஞ் செய்தவள் தன்துயர் நீக்கிக்
கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ!
பத்தினி யொருத்தி படிற்றுரை யெய்த
மற்றவள் கணவற்கு வறியா னொருவன்
அறியாக் கரிபொய்த் தறைந்துணும் பூதத்துக்
கறைகெழு பாசத்துக் கையகப் படலும்
பட்டோன் தவ்வை படுதுயர் கண்டு
கட்டிய பாசத்துக் கடிதுசென் றெய்தி
என்னுயிர் கொண்டீங் கிவனுயிர் தாவென
நன்னெடும் பூதம் நல்கா தாகி
நரக னுயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி யிழக்கும் பண்பீங் கில்லை
ஒழிகநின் கருத்தென வுயிர்முன் புடைப்ப
அழிதரு முள்ளத் தவளொடும் போந்தவன்

சுற்றத்தோர்க்கும் தொடர்புறு கிளைகட்கும்
பற்றிய கிளைஞரிற் பசிப்பிணி யறுத்துப்
பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்!
(சிலப்பதிகாரம்) கருணைமறவ, செல்லாச்
செல்வ, இல்லோர் செம்மல், என இவன்
துதிக்கப் பட்டிருத்தலும், இவன் பொருளால்
அருளுண் டாய் வந்த உண்மையும், பிறவும்
இதில் புலனாதல்காண்க. இருள்படு நெஞ்சத்
திடும்பை தீர்க்கும்
அருள்நன் குடைய ராயினும் ஈதல்
பொருளில்லோர்க்கஃ தியையா தாகுதல்
யானும் அறிவென்.
(அகநானூறு.) இது மதுரைத்
தத்தங்கண்ணனார் கூறியது. அருளுண்
மைக்குப் பொருள் இன்றியமையாதென நம்
அடிகள் அருளி 76-ம் அதிகாரம்
பொருள்செயல்வகை. 2005

யுள்ளதற்கு அமைந்தசான்றாய் நின்று உறுதி

பெறநெஞ்சு தட்டி இவர் உணர்த்தி நிற்கும் அழகையூன்றி நோககுக.

கல்லிற் பிறக்கும் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கும்
உயர்மதம்—மெல்லென்
அருளிற் பிறக்கும் அறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும்.
(நான்மணிக்கடிகை.)

ஒண்பொருள்கை யில்லான்கோள்
உள்ளிரக்கம் வன்மலடி
வெண்பொருள்வாய் வேய்முலைபோல்
வீண்.

மறுமைக்குரிய அருளையும் பொருளால் அடையலாம் என்பது இதனல் கூறப்பட்டது.

---

758 சோர்ந்து வருந்தாமல்
தொண்டைமான் என்வினையைக்
கூர்ந்தினிது செய்தான்

குமரேசா—சார்ந்து நின்ற

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்

றுண்டாகச் செய்வான் வினை.

(அ)

இ—ள்.

குமரேசா! தான் கொண்ட அரிய வினைகளையும் தொண்டைமான் எளிதாகச் செய்து வந் இனிதிருந்தான் எனின், தன் கைத்து ஒன்று உண்டாகச் செய்வான் வினை குன்று ஏறி யானைப் போர் கண்டற்று என்க.

இது பொருளுடையார்க்கு வினை இனிது முடியும் என்கின்றது. "அடங்காத் தானையோடு உடன்றுமேல் வந்த, ஒன்னாத் தெவ்வர்" உலைந்தோடும்படி தன்வீரர்களை உறுதிசெய்து ஏவிவிட்டு ஒரு சோர்வு மின்றித் தொண்டைமான் உவந்து வீற்றிருந்தான் ஆதலால் வருந்தாமல் வினையை இனிது செய்தான் என்றும். சார்ந்து நின்ற = அருகே

அமைந்து நின்றன.

தன்கைத்து = தன் கையிலுள்ளது; என்றது பொருளை. வயல் வீடு முதலிய நிலவரமான பொருள்களை மிகவுடையாராயி னும் சமயத்தில் ஒரு சிறு தொகையைக் கையில் காணாடல் அரி தாய்விடும் ஆதலால் அங்ஙனமின்றி என்றும் பொன் பொருள்



களை இருப்பாக வைத்திருப்பார் என்பார் தன்கைத்து ஒன்று உண்டாக என்றார். இதனைக் கையிருப்பு என்பர். 'கைத்துண் டாம் போழ்து' எனவும், 'கைப்பொருளொன்றுண்டாயின்' என வும் வருவன காண்க.

மேல், பொருளுடையானுக்கு அருளுண்டாம் என்றார்; இதில், அரிய வினையும் அவனுக்கு எளிதில் முடியும்

என்கின்றார்.

தன் கைபகத்துப் பொருளுண்டாக ஒரு வினையைச் செய்கின்றவன் செயல் மலைமேல் ஏறியிருந்துகொண்டு யானைச் சண்டையைக்கண்டாற்போலும் என்பதாம்.

பொருளுடைமையாலாகும் தொழில் முடிவை விளக்குதற்குப் போர்த் தொழிலை எடுத்துக் காட்டியது அரசகாரியமாதலால் அவர்க்கு எளிதாக இனிது தெளிவுறும் என்பது கருத்து. ஒன்றோடு ஒன்று மூண்டு யானைகள் சண்டையிடுவதை மலைமேலேறி யிருந்து கொண்டு ஒருவன் காண்பானாயின் இடரும் அச்சமுமின்றி இனிதே கண்டு மகிழ்வான்; அதுபோல் கையிற் பொருளுடையவன், நல்ல வினையாளர்களை ஏவி விட்டு ஒரு கவலையுமின்றித் தான் இனிதிருந்துகொண்டு தன் காரியம் அழகுற முடிதலை நோக்கி அகமகிழ்வான் ஆதலால் தன்கைத்து உண்டாகச் செய்வான் வினை

யானைப்போர் கண்டற்று என்றார். வேறு போர் கூறாது யானைப் போர் என்றது பொருளுடையான் கருதித் தொடங்கும் வினையின் பெருமை தோன்ற என்க.

பொருள்மேல் நின்று வினைநடத்துவானுக்கு மலைமேல் நின்று காண்பானை உவமைகாட்டிப் பொருளுயர்வை உணர்த்தி நிற்கும் அழகை இதில் ஊன்றி யுணர்க.

பொருளுடையானுக்குத் தொழில் எளிதில் முடியும் என்றதனால் அஃதில்லானுக்கு அஃது இனிது முடியாதென்பதாயிற்று.

ஒல்லாத வொன்றி யுடையா
கருமங்கள்
நல்லவா நாடி நடக்குமாம்—இல்லார்
க்கு
இடரா வியலும் இலங்குநீர்ச்
சேர்ப்ப

கடலுள்ளுங் காண்பவே நன்கு.
(பழமொழி)

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 2007

கைப்பொருளில்லாதார் கருதித் தொடங்கும் கருமம் இனிது முடியாது பழுதுபடும் எனவும், கைத்து ஒன்று உண்டாகச் செய்வான் வினை யாண்டும் நன்றாகவே முடியும் என்பதும் இதன் கண்ணும் விளங்கி நிற்றல் காண்க.

அரியவினைகளும் பொருளு டையானுக்கு எளிதில் முடியும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை தொண்டைமானிடம் உணரப்படும்.

கதை.

தொண்டைமான் என்பவன் காஞ்சி

நகரிலிருந்து அரசு புரிந்தவன். இவனது காலம் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னராகும். இவன் பீலிவளை என்னும் ஓர் நாக கன்னியிடம் சோழமன்னனுக்குப் பிறந்தவன். அறிவினும் உருவினும் இவன் மிகச் சிறந்தவன். அவள் அம்மன்னனோடு கூடுங் கால் உறுதி செய்து கொண்டபடியே தன் அரசுரிமையில் ஒரு பாகத்தை அவன் இவனுக்கு உரிமைசெய்து தந்தான். அச் சிறிய நிலமண்டலத்தை மிகவும் வளமுறச் செய்து அழகுற இவன் ஆணை செலுத்தினன். கடல்வழியாக வந்தமையால் திரையன் எனவும் இவனுக்கோர் பெயருண்டு.

" மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்

முரசுமுழங்கு தானை மூவருள்ளும்

இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்

வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோற்

பல் வேற் றிரையன்" என இவன்
நல்லிசை பெற்று நின் றான், பலநூல்களிலும்
இவன்நல்லபுலமையுள்ளவன். பாடுதலிலும்
வல்லவன். முடிமன்னரும் வியந்து
நோக்குமாறு வினை யாண்மை களில் இவன்
விள ங்கிநின்றான். புதிய முறையில்வந்த
குறுநில மன் னன் என்று கருதி
உறுபகைகொண்டு வந்த மறு புலமன்னரை
வரையும் இவன் மதித்திறத்தால் வென்றான்.
மதி நலத்தோடு மன நலமும் வாய்ந்த
வினையாளர் பலரை இவன்
இனமாக்கிக்கொண்டு தன் அரசை இனிது
நடாத்தினான். திருவேங்கடம் திருமுல்லை

2008 திருக்குறட் குமரேச
வெண்பா.

வாயில் முதலிய திருத்தலங்களில் அறநிலையங்கள் பல அமையச் செய்தான். குன்றுவிளைவுகள் தன் நாட்டில் எங்கும் கொழித்து வரும்படி நீர் நிலைகள் பல சேர்வாச் செய்தான். தெவ்வரை யடக்கித் திறைகொண்டும், குடிகளிடம் முறைகொண்டும் இவன் கோமுறை புரிந்தான். முடித்தற்கரிய பெ. ரியகாரியங்களையும் தன் திருவுடைமையால் எளிதில் முடித்து வந்தான். அறிவாண் மைகளிற் சிறந்த உரிமையாளர்களை ஏவிவிட்டு ஒரு கவலையுமின்றி வினைகளின் மேன்மையான முடிவினை நோக்கி இவன் உவகை யுற்றிருந்தான். அங்ஙனம் இருந்தற்கு இவன் கையிலிருந்த பொருளே காரணமாயிருந்ததாதலால் குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன் கைத்தொன்று உண்டாகச் செய்வான் வினை என்னும்

உண்மையை உலகம் இவன்பால் கண்டது.

கச்சியோனே கைவண் தோன்றல்
கச்சிச் சென்றோர்க் கேமமாகிய
அளியுந் தெறலும் எளிய வாகலின்
புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினும்
ஒன்றல்ல செல்லா உரவுவாட்
டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர்
மருக
மள்ளர் மள்ள! மறவர் மறவ!
செல்வர் செல்வ! சேருமேம் படுந!

என்று இவனைக் குறித்துக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்னும் புலவர் பெருமானார் கூறியுள்ளார். இதனால் இவனது குண நலங்களும் திருவுடையனாய் நின்று வினைசெய்த திறனும் பிறவும்

உணரலாகும். இவன் ஆட்சிசெய்துவருங் காலத்தில் போரசர் பலர் கூடியிருந்த ஓர் பேரவையில் இவன் உரைசெய்த பாடல் ஒன்று இதனடியில் வருகின்றது.

கால்பார் கோத்து ஞாலத் தியங்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின்றாகி யாறினிது படுமே·

76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை.

2009

உய்த்தல் தேற்றானாயின் வைகலும்
பகைக்கூழ் அள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத்
தருமே.(தொண்டைமான்).

இதில், இவன் அறிவின் திறமும், அரசமுறையின் தெளிவும், என்றும் கண்விழிப்புடையராய் நின்று மன்னர் உலகங்காக்க வேண்டுமென்று உணர்ந்திருக்கும் ஒண்மையும், உள்ளப்

யாண்மையும் ஒளிர்தல் காண்க.

கைப்பொருளொன் றில்லான் கருமம் கடனடுவே

பொய்ப்பு ஊைபோல் புன்மையுறும் போய்.

அரிய தொழிலும் பொருளால் எளிதில் முடிபு மென்பது இதனுல் கூறப்பட்டது.

---

759 தேடிப் பொருள்சென்று சேர்த்தான் பகைவென்று

கூடினனே தக்கன் குமரேசா—ஓடியே

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்

எஃகதனிற் கூரிய தில்.

(கூ)

இ—ள்.

குமரேசா! கடல்கடந்து மிகவருந்திப் பொருளை யீட்டிக்

கொண்ட தத்தன் பின்பு என் பகையற நின்று உயர்புகழ் கொண் டான் எனின், பொருளைச் செய்க; செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு அதனிற் கூரியது இல் என்க.

இது, பகைவர் செருக்கைப்பொருளால் அடக்கலாம் என்கின் றது. தேடி என்றது பெரும் பொருள் நாடிக் கருங்கடல் கடந்து போனமை கருதி. பகைவென்று தத்தன் சீர்கூடினன் என்றது பொருளைச் செய்துகொள்ளுமுன் பகை முகங் கொண்டிருந்த அனைவரும் அதனைப் பெற்றுக்கொண்டபின் இனிய நீராய் அவன்பால் அடங்கி நின்றமையான் என்க.

செறுநர் = பகைவர். செருக்கு = பெருமிதம்.

எஃகு என்பது உருக்கு, கூர்மை, படைக்கலங்களை உணர் த்திவரும். ஆயுதங்களுக்கெல்லாம் பொதுப் பெயராய் நிற்பினும் சிறப்பாக இது வேலையே

குறித்துவரும். அயில் சத்தி எஃக் 2010
திருக்குறட் குமரேச வெண்பா.

ஞாங்கர் உடம்பிடியைத்தும் வேலாம் என்பது
நிகண்டு. ஒளிறிலை எஃகு எந்தி
எனப்புறத்திலும், நோன் காழ் எஃகமொடு
என நெடு நல்வாடையிலும், எஃகெறி பிணை
எனச் சிந்தாமணியிலும், சீர் எஃகு
உளங்குளிப்பஎன மணிமேகலையிலும், எஃகு
ஒழிகளிற்றின் எனப் பெருங் கதையிலும்,
ஒளிறிலங்கு எஃகொடு வாள்மாறுழக்கி
எனப் பரிபாடலிலும், காழ் எஃகம்
பிடித்தெறிந்த எனப்
பதிற்றுப்பத்திலும், வினைகதிர் எஃகு
எனச் சூளாமணியிலும் இது நின்றுணர்த்தும்
பொருளை யுணர்க.

மேல், அரிய காரியங்களும் பொருளால்
எளிதில் முடியும் என்றார்; இதில், பகைவரும்
அதனால் அடங்கி நிற்பர் என்கின்றார்.

பொருளை யுண்டாக்கிக்கொள்க; நம்பகைவாது தருக்கினை யறுக்கும் படைக்கலம் அதுபோலக் கூரியது வேறு இல்லை என்பதாம்.

தம்முடன் மாறுபட்டவரை விறழித்து வென்றுகோடலை மக்கள் மிக விழைந் திருப்பாராதலான் அவ்வெற்றி யின்பத்தையும் பொருள் விளக்குமென்று எடுத்துக்காட்டி அதனை விரைந்து ஈட்டிக்கொள்ளுமாறு இதில் உணர்த்தியிருக்கும் அருமையை யூன்றி யுணர்க.

முன்பு பொருளைப் பொய்யா விளக்கம் என்றார்; இங்குப் போர்க் கருவியாகக் கூறினர்: தன்னையுடையானுக்கு விளக்கத்தையும் வெற்றியையும் அது விளக்குமென்பது கருதி.

பொருளை நிரம்பச் செய்து கொண்டால் "உண்டாய போழ் தின் உடைத்துழிக் காகம்போல் தொண்டாயிரவர் தொகுபவே',

என்றபடி படையும் நட்பும் அவனுக்கு மிகும்; மிகவே முன்பு அடல் கருதி நின்ற பகைவர் தம் தருக்கு ஒழிந்து தாமே அடங்கி நிற்பர் ஆதலால் அது செறுநர் செருக்கறுக்கும் எஃகு என நின்றது.

அறிவு சீல முதலிய நலங்களெல்லாவற்றினும் செல்வம் பெரும்படி யாய் நின்று மும்முறைப் பயன் தருகின்றமையான் அதனையே பெரி தாக மதித்து இவ்வுலகம் பெரும்பான்மையும் விரும்புகின்றது; 76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 2011

அதனால் தெளிவுடைமையினும் திருவுடைமைக்குச் செல்வாக்கு உண்டாகின்றது ஆதலால் பகையை வெல்லவேண்டியவர்கள் முதலில் பொருளை யுண்டாக்கிக்கொள்ளவேண்டும் என்க.

குடிப்பிறப்பு குணச்சிறப்பு மானம்

வீரம் முதலிய நலங்க ளெல்லாம் ஒருங்கேயுடைய ஓர் அரசமாபினன் காலவசத்தால் பொருள் இலனாயினன்; அக்காலத்தில் சீலமும் அறிவும் சிறிது மில்லாத புல்லியர் சிலர் முன்னை வினையால் தமக்குக் கிடைத்துள்ள சின்னப்பொருளை யெண்ணி அவனினும் சிறந்தவராகச் செருக்கித் திரிந்தார்; அவர்கள் செயலையும், பொருளின் இயல்பையும் நோக்கி வியந்து அவன் அடியில்வரும்பாக்களை நினைந்தான்;

சாதிபாதலம்புகச்; சற்குணம் அதற்கும்
கீழ்ப்புகுக; சாம்பலாகத்
தீதில்குல நன்னடத்தை சிலம்பினின்றுங்
கீழ்வீழ்க; சோரர் தம்மைக்
காதிய சௌரியத் தலையிலிடிவிழுக; பொருளே
யெங்கட்கு மேன்மை
யோதியவக் குணங்களெல்லா மொரு
பொருளின்றேல் துரும்புக்
கொக்குந்தானே..

எவனிடத்தி லதிக திரவியங்க ளிருப்பிருக்குமோ
அவனே சற்குணன் குலமா னதிரூபி மகா வாக்கி
யுவமையிலாப் பலகேள்வி யுடையோ னல்லறிவுடையோன்
புவனமதி லெக்குணமும் பொருளே யே பொருந்திடுமே. எனத் தன் குறிப்பிலேற்றி உலக நிலையைக்குறித்து வெறுத்துக் கூறினான். இக் குறிப்பு எவனாயினும் பொருளுடையனாயின் அவன் பகை கடிந்து எல்லா உயர்வுகளையும் அடைவான் என்பதைக் குறித்து நிற்றல் காண்க.
பகைவரையடக்க வல்லது கூரிய படைக்கலமே என்பது வெளிப்படையாகத் தெரிந்த வுண்மையாதலால் அதனை இணைத்துக்காட்டி அதனிலும் கூரியது பொருள் என இஃதுணர்த்திய தென்க. உருவமாய உடம்பினை அறுக்கும் படையினும் அருவ

மாய செருக்கினை அறுக்கும் பொருள் சிறந்தது ஆதலால் அதனிற் கூரியது இல் என்றார். இன் உருபு ஒப்புப் பொருளது. "காரியம் அனைத்தும் கூட்டும்; கருதலர் தம்மை வாட்டும்; கூரியது இதன்மேல் இல்லை" எனப் பொருளைக் குறித்துக் கூத்தர் கூறி யுள்ளதைக் காண்க, அரும்பொருள் செய்வினை என்றார் பிறரும்.





வெண்பா.

"செறுவோர் செம்மல் வாட்டலும் சேர்ந்தோர்க், குறுமிடக் கலக்கும் உதவியாண்மையும், இல்லிருக் தமைவோர்க்கில்லென் றெண்ணி, நல்லிசை வலித்த நாணுடை மனத்தர்" பொருள் செய்யச் செல்வர் என்றது அகம். செம்மல் = செருக்கு.

நச்சியார்க் கீதலும் நண்ணார்த்
தெறுதலும்

தற்செய்வான் சென்றூர்த் தரூஉம்.

எனக் கண்ணங் கூத்தனாரும் இப் பொருளின் சிறப்பையும் திறத்தையும் உணர்த்தி யிருத்தல் காண்க. நண்ணார் = பகைவர்.

பொருள் பகைவரை யடக்கித் தன்னையுடை யானுக்குப் புகழும் வெற்றியும கொடுக்குமாதலால் அதனைப் பேணி யீட்டிக் கொள்ளவேண்டும் என்பது கருத்து.

பொருளில்லாதபொழுது ஒருவன்பால் மிகைசெய்து நின்ற பகைவர் அதனை அவன் ஆக்கிக்கொண்டபின்னர் அடங்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீதத்தன்கண் உணரப்படும்.

## கதை.

சீதத்தன் என்பவன் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரியிலே யிருந்தவன். வணிகர்

மாபினன். இவன் முன்னோரெல்லாம்
மன்னரும் விரும்ப மாண்புற்றிருந்தனர்.
இவனுடைய மனைவி பெயர் பதுமை. அவள்
அழகும் குணமும் அமையப் பெற்றவள்.
அவளோடமர்ந்து இனிய போகங்களை நு
கர்ந்து வாணிக முறையிற் பெரும்
பொருளீட்டி வாழ்ந்துவருங்கால் இவனுடைய
கலங்கள் நூறும் கடலில் ஆழ்ந்தன. அதனால்
வளமுழுதுங் குன்றியது; ஆயினும் இவன்
உளங்குன்று திருந்தான். முன்பு
இவன்மீது பொறாமை கொண்டிருந்த செல்வர்
சிலர் மேசர்ந்திகழ்ந்து செருக் கித் திரிந்தார்.
தன்னை அவமதித்து அவர் இடர்செய்து
திரிதலை இவன் அறிந்து
கொதித்தானெயினும் காலம் நோக்கி படங்கி
நின்று பின்பு அவர் செருக்கையடக்க
முயன்றான். இல்
லாமையால் நிகழ்ந்த இழிவை
நினைந்து செல்வத்தேடத் துணிந்து

சிறுகலமொன்றிலேறித் திரைகடல் கடந்து மறுபுலத்தை யடைந்து சிலகாலம் தங்கியிருந்து தன் மதிகலத்தால் பெரும் பொரு 76-ம் அதிகாரம் பொருள் செயல்வகை. 2013

வீட்டி அங்குள்ள மன்னவனோடு உறவு கொண்டு நன்றொன்றில் தன் நகர் நோக்கி மீண்டான். மீண்டுவருங்கால் இவனது ஆண்மையையும் அறிவையும் யறிந்து இவனோடு கேண்மை கொள்ள விழைந்து கலுழவேகன் என்னும் விஞ்சையர் வேந்தன் இவனைத் தன்னிடம் அழைத்துவரும்படி தான் என்பவனை விடுத்தான். அவன், கடலிடையே வந்து கலங்கவிழ்வதுபோல் ஓர் மாயங்காட்டினன். உடனே மாக்கலம் உடைந்துபோயிற்றே! என்று உடனிருந்தவர் உளங்கலங்கி உளைந்து

மறுகினார். அது பொழுது இவன்,
ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய
அலங்கற் றெண்ணீர்
கூடகங் கொண்ட வாழ்நாள் உலந்தனே தற்
கொல்லும் பவ்வத்
தூடகம் புக்கு முங்கீரழுந்தினும் உய்வர்
நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த பழிவினைப் பயத்தி
னென்றான். (க) வினையது விளைவின் வந்த

வீவருந் துன்ப முன்னீர்க்
கனைகடலழுவ நீந்திக் கண்களிந் திரங்கல்
வேண்டா
நனைமலர்ப் பிண்டி நாதன் நலங்கிளர்பாத மூல
நினையுமின் நீவி ரெல்லா நீங்குமின்
அச்சமென்றான். (உ)

இங்ஙனம் உறுதிகூறி நின்ற இவனை
அத்தான் ஓர் உபாயத் தால் கொண்டுபோய்த்

தன் அரசனிடம் விடுத்தான். அம் மன்னன் மிக மகிழ்ந்து உபசரித்து உறவுகொண்டு அரிய பொருள்கள் பல உரிமையோடு கொடுத்து விடுத்தான். இவன் மீண்டுவந்து தன் கலத்தினை யடைந்து நலத்தோடிருக்குந் துணைவரைக் கண்டு மகிழ்ந்துகொண்டு தன் நகரினை யடைந்தான். பெரும் பொருளுடையனாய் இவன் சிறந்து வந்திருந்ததனை அனைவரும் அறிந்து புகழ்ந்தார். அங்கநாட்டு மன்னனும் நட்புடையனாய் இவன்பால் பெட்புற்றிருந்தான். இவனது திருவையும் உலகக்கொண்டிருக்கும் உற
வையும் கண்டு முன்பு
பகைத்திருந்தவரெல்லாம் செருக்கடங்கித் தாமாகவே பணிந்திருந்தனர். கூரிய படைக்கலங்களுக்கும் அஞ் சாமல் குறும்புசெய்துவந்த அக்குறும்பர் இவனது சிறிய செல் வத்தை நோக்கிச்

செருக்கடங்கினூரே! என்று எல்லாரும் சிரித்து நின்றார். செறுநர் செருக்கறுக்க வல்லது பொருளேயாம்; அத 2014
திருக்குறட் குமரேச வெண்பா.

னிற் கூரியது வேறில்லை; ஆகலான் அதனைச் செய்துகொள்ள வேண்டும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சிந்தாமணியில் காண்க.

இம்மியன நுண்பொருள்கள் ஈட்டி நிதியாக்கிக்
கம்பியரு மூர்வர்களி றோடை நுதல் சூட்டி
அம்மிமிதந் தாழ்ந்துசுரை வீழ்ந்தகறஞ் சால்லுகென்
றும்மைவினை நொந்துபுலந் தாடலுணர் வன்றே. (க)

செய்கபொருள் யாருஞ்செறு

வாரைச்செறு விற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரு மொன்றும்
ஐயமிலை யின்பமற வேடைவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருள்மற் றல்லபிற பொருளே. (உ)
மோதுபடு பண்டமுனி யாதுபெரி தேற்றி
மாதுபடு நோக்கினவர் வாட்கண் வடுவுற்ற
தாதுபடு தார்செழிய தங்குவரை மார்பன்
கோதுபட
வில்லதுறிக் கொண்டெழுந்து போந்தான். (௩)
இவை சீதத்தன் கூறியன.
பொருளின்மை கருதித் தன்னை யிகழ்ந்து
நோக்கிப் பகைவர் செருக்கிநின்றதை யறிந்து

அஃதனைச் செய்துகொள்ள விழைந்து
எழுந்தபொழுது தன்னுள்ளே இவன்
உளைந்துரைத்த இவற்றால், இவன்
பொருளினியல்பினை யறிந் திருந்த தன்மையும்,
செய்கபொருளை; என்று நமது தேவாருளி
யுள்ள பொருள்மொழியைப் போற்றிநின்ற
வுண்மையும், அஃதனை ஆற்றிவந்த அருமையும்
அறியலாகும்.

குலந்தரும் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைகள் அழிபசி தீர்க்கும்
நிலம்பக வெம்பிய நீள் சுரம் போகிப்
புலம்பில் பொருள்தரப்
புன்கண்மையுண்டோ. (வளையாபதி)

வேலுக்கு மாயாத வெம்பகையை
மாய்த்து நலம்
பாலிக்கும் ஒண்பொருள்முன் யார்.
பொருள் பகைவரையடக்கி
உயர்வினையளிக்குமென்பது இத
னுல் கூறப்பட்டது.

## அதிகாரம் பொருள் செயல்வகை.

2015

760 அன்றுபொரு ளாற்றிநின்ற அந்திமான் இன்பநலங்
குன்றாதே கொண்டான் குமரேசா—என்றுமே
ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு. (ம)

இ—ள்.

குமரேசா! பொருளை மிகச் செய்துகொண்ட அந்திமான்பால் பின்பு அறமும் இன்பமும் என் எளிதில் அடைந்தன எனின், ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு, ஏனை இரண்டும் ஒருங்கு எண்பொருள் என்க.

இது, பொருளால் யாவும் எளிதிற் பொருந்தலாமென் கின்றது. ஆற்றி = செய்து. நலம் என்றது அறம் புகழ் முதலிய உயர்நலங்களை. குன்றாது = குறையாது. நின்ற அந்திமான் குன்றாது கொண்டான்

என்றது, ஈத்தும் துய்த்தும் இசைதிசை பரப்பி, ஆய்க்க நலங்கள் யாவுமடைந்து தேவன் என அவன் பேசி நின்றமை கருதி.

தன்னையுடையானுக்கு ஒண்மையை விளைத்து நிற்குமாதலான் ஒண்பொருள் என நின்றது. ஒண்மை = ஒள்ளியதன்மை. அருளுடையனாய் நின்று நல்லவழியிலீட்டப்படுவதே ஒண்பொருளாம் என்க. தீயவழியில் வருவது வெம்பொருளாமாதலால் அதனை விலக்குதற்கு ஒண்பொருள் என்றார். "அறத்தினீட்டிய ஒண்பொருள்" என்றார் பிறரும்.

காழ்ப்ப = மிகுதியாக. காழ் என்னும் வினைப்பகுதி முடிவான முதிர்ச்சியை புணர்த்திவரும். "நிறையுமுண்டோ காமங் காழ் கொளின்." என்றது மணிமேகலை. இயற்றியார் = உண்டாக்கிக் கொண்டவர்.

எனை இரண்டும் என்றது மற்றை

அறமும் இன்பமுமாகிய இரண்டு பொருளும் என்றவாறு. பொருளை முதலில் குறித்து விட்டதால் அதனோடு எங்கும் உடனெண்ணப் படுகின்ற அவை ஏனையிரண்டும் என நின்றன.

மேல், பொருளுடைமையால் பகைவரை வென்று உயர்நலம் அடையலாம் என்றார்; இதில், இருமைக்கு முரிய எல்லா நலங் களையும் எளிதாக அதனால் எய்தலாம் என்கின்றார்.

2016 திருக்குறட் குமரேச வெண்பா.

ஒள்ளியபொருளை மிகுதியாக ஈட்டிக்கொண்டார்க்கு மற்றை அறமும் இன்பமும் ஒருங்கே எளியபொருள்களா வர்செய்துமை

என்பதாம்.

பொருள் உயர்ச்சியைத்தரும்; அதனைச் செய்துகொண்டால் எல்லாரும் சிறப்புச் செய்வர்; போனபோன இடங்களிலெல்லாம் மேன்மையுறலாம்; அருளுண்டாகும்; ஆற்றல்விளையும்; எண்ணிய காரியங்களெல்லாம் எளிதில் முடியும்; பகைவரை வென்று உயர் வினையடையலாம்; என்று இதுவரை பொருளின் பெருமைகூறி வந்து இறுதியாக இம்மை மறுமைகட்குரிய எல்லா நலங்களையும் அதனால் ஒருங்கே பெறலாம் என உறுதிபெற அறுதியிட்டு இதில் உணர்த்துகின்றார்.

பொருள், அறமும் இன்பமும் ஈனும் என்று முன்னர்க்கூறி யிருப்பவும் ஈண்டு ஏனையிரண்டும் ஒண்பொருள் என அதனை மீண்டும் கூறலாமோ? எனின், ஆண்டுத் தீயவழியில் பொருளீட்டலாகாதென்று உணர்த்துதற்காக அதன் பயன்களை

பிணைத்து அருளினர்; ஈண்டு அதன் நிலைபேறான நல ங்களிலவையெனை நிலை பெற வுணர்த்துகின்றாராதலால் ஆம் என்க.

பொருளை மிகவும் அதிகமாக ஒருவன் ஈட்டிக்கொண்டால் பொருளுடையான் கண்ணதே போகம் " என்றபடி ஐம்புல இன் பங்களையும் அவன் ஆர நுகர்ந்து, பலவகையான தானங்களையும் இதங்களையும் பண்புறப்புரிந்து, புண்ணியவான் எனப் புகழ்மிகப் பெற்று இருமையிலும் பெருமையடையலாம் ஆதலால் " ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எனையிரண்டும ஒருங்கு எண் பொருள் " என்றார். காழ்ப்ப என்றதனுல் சிறுகேட்டாளர் களுக்கு ஒருசேர அவைஎளிதாக அமைதல் அரிதென்பதாயிற்று.

வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவண தெய்த இருதலையும் எய்தும்

கடுவனை தெய்தாதான் எய்து
முலைப்பெய்
தடுவது போலும் துயர்.
(நாலடியார்.)
பொருளால் அறமும் இன்பமும்
எளிதில் பொருந்தும் என்
பதை இதுவும் உணர்த்தி நிற்றல் காண்க.
76-ம் அதிகாரம் பொருள்செயல்வகை.
2017

இடையில்லை யாம்பொரு ளுண்டேல் முதனிலை
யெய்தற்றும் கடையில்லை யாயின்மமுமேவும்
என்றனர் காதலர். எனவும், ஆராயிற் றுனே
அறம்பொரு ளின்பமென்
றூஉ ரிவற்றி னிடையதனை யெய்துவார்
சீரர் இருதலையும் எய்துவர். எனவும்,
பொருளான் அறமுறும் இன்பம் புணரும்
தெருள்வரு நூல் கற்பினது முட்டின்றிச்
செல்லும் அரிதுமுறும ஒன்னார்த் தெறலும்

அரசும்

உரனும அதனுறு றம். எனவும் வருவன குறியன.

ஈண்டு எண்ணற்

ஒண் பொருள் காழ்ப்ப வுடையாருக்கெனின் தனையமை யோடு மோனை நயமுமுடையதே! அதனைவிடுத்து இயற்றியார்க் கென்று இசைத்துவைத்தது என்னையெனின்? இதனால் உறுதியா யதோர் உண்மையை உய்த்துணர்தற்கென்க. என்னே உண்மை யெனின்? தான் முயன்று இயற்றிக்கொண்டாலன்றித் தன் முன்னோர் ஈட்டி வைத்துள்ளதாகிய தாயப் பொருள், தனக்கு அறஞ் செய்ய ஆகாது; செய்யின் அஃது அப் பொருளியற்றியோர்க்கே உரிமையாகும்; ஆகவே தனக்கு அறம் இல்லையாம்; அதனால் இன்பமும் இன்றாம்; ஆதலால் அவ் இரண்டும் ஒருங்கே அடைய

வேண்டுமாயின் தனது முயற்சியால் பொருளைப் படைத்துக் கொள்ளவேண்டும் என்னும் உணர்வு தோன்ற இயற்றியார்க்கு என்றார் என்க.

தம் முன்னோர் ஈட்டிய பொருள் திரளாக நிரம்பி யிருந்தாலும் அதனை இருந்து தின்போமென்று குலமக்கள் விரும்பியிரார்; அங்ஙனம் இருத்தலைப் பேடித்தனமெனவெறுத்துத் தம் ஆண்மை நலந்தோன்றத் தாமே முயன்று பொருளை இயற்றத் துணிவர் ; அத்துணிவே பொருள்வயிற் பிரிதலென்னும் துறையாய் நூல்களில் பொலிந்து தோன்றுகின்றது.

அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும் பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும் 2018

திருக்குறட் குமரேச வெண்பா.

புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தரும்எனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்ற
நங்காதலர் (கலி)

வறியார் இருமை யறியாரென
மன்னுமாநிதிக்கு நெறியார் அருஞ்சுரஞ்
செல்லலுற்றார் நமர். (திருக்கோவை)

நாளும் நாளும் ஆள்வினை யழுங்க
இல்லிருந்து வாழ்வோர்க் கில்லையாற்
புகழெனா
ஒண்பொருட்கு அகல்வர் நங்காதலர்
கண்பனி துடை யினித் தோழி நீயே.
(சிற்றடக்கம்)

இல்லார் இருமையும் நன்மை யெய்தாரென்
றிரு நிதிக்குக் கல்லார் சுரஞ்செல்வ
தேநினைந்தார் நமர். ( இறை யுஙரா )

இசையும் இன்பமும் ஈதலும் மூன்று
மசைபுட னிருந்தோர்க் கரும்புணர் வின்மென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை
அரும்பவிழ் அலரிச் சுரும்புண் பல்போ
தணிய வருதுநின் மணியிருங் கதுப்பென
எஞ்சா வஞ்சின நெஞ்சுணக் கூறி
மைசூழ் வெற்பின் மலைபல விறந்து
செய்பொருட்கு அகன்ற செயிர்தீர் காதலர்.
(நற்றிணை)

உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி. (
குறுந்தொகை.)

அறனும் ஈகையும் அன்பும் கிளையும்
புகழும் இன்பும் தருதலிற்புறம்
பெயர்ந்து
தருவது தணிந்தமை பெரிதே

விரிபூங் கோதை விளங்கிழை பொருளே.
(இளம்-கோள்)

*உயிரினுஞ் சிறந்த ஒண்பொருள் தருமார்*
*நன்றுபுரி காட்சியர் சென்றனர்.* (மருதனிளநாகனார்)

பொருளினது பெருமையும், அதனால் உளவாம் நலங்களும், மக்கள் அதனை முயன்று ஈட்டிக்கொள்ளவேண்டிய உரிமையும், ஈட்டியார்க்கு எய்தும் உயர்வும், இவற்றான்ளும் விளங்குதல் காண்க.

76-ம் அதிகாரம் பொருள்செயல்வகை.

2019

துறவிகள் கருதுவதாகிய மறுமையின்பத்தையும், அரசர்கள் அவாவுவதாகிய இம்மையின்பத்தையும், ஒண்பொருள் எளிதாகக் கொணர்ந்து கொடுக்கும் என்பதை "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுன் முடியும்" என்பதனானும் அறிக.

இருமைக்குமுரிய எல்லா இன்பங்களையும் பொருள் எளிதில் அடைவிக்கும் ஆகலால் தக்க வழியில்

நின்று அதனை மக்கள் நன்கு ஈட்டிக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

மிகுந்த பொருளை உணர்வுடையொருவன் அடைவனாயின் அறமும் இன்பமும் அவன்பால் எளிதில்வந்து அடையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அந்திமான்பால் உணரப்படும்.

## கதை.

அந்திமான் என்பவன் சிந்து நாட்டின் தென்பாலிருந்த ஒரு பெரிய நிலப் பகுதியைத் தனக்கு உரிமையாகக் கொண்டு அரசு புரிந்தவன். அறிவிலும் அருளிலும் சிறந்தவன். விரத ஒழுக்கங்களில் உயர்ந்தவன். இவனது காலம் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னராகும். தான் ஒரு குறுநில மன்னனாயிருந்தும் முடிமன்னரும் வியந்து நோக்கும்படி தன் மதிநலத்தால் முயன்று நிதிமிகப் படைத்து உயிர்களுக்கு உதவிச் சிறந்த புகழோடு இவன் உயர்ந்துவிளங்கினான். இவனுடைய

அருமை மனைவி பெயர் சுதர்மி என்ப. அவள் அழகும் அன்பும் அமைதியும் தகவும், விழுமிய பண்பும் வியத்தகு கற்பும் உடையவள். அவ் இனிய மனைவியோ டமர்ந்து அரியபோகங்களை நுகர்ந்து எவ்வுயி ரையும் தன்னுயிர்போற் பேணி இதம் புரிந்து வந்தான். தன் பால் வந்து இரந்தவர்கட்கு யாதும் இல்லை யென்னுமல் என்றும் இன்புற ஈந்தானுதலால் அருள் வள்ளல் என எங்கும் இசைபெற்று நின்றான். இவனோடு அக்குரன் முதலிய அறுவரைச் சேர்த்து இடைவள்ளல்கள் எழுவராக அக்காலத்து அறிஞர்கள் வகை செய்து வைத்துள்ளார். "அக்குரன் சந்திமானோடு அந்திமான் சிசு பாலன்னே, வக்கிரன் கன்னன் சந்தன் இடைவள்ளல் வகுத்த வாறே" என்பது நிகண்டு. இங்ஙனம் அவ் வள்ளல் வரிசையில்

வெண்பா.

சிறந்து நின்ற இவனது நீதியையும் பிற நலங்களையும் அறிந்து மறுபுலத்தவரும் மிக வியந்தார். ஈதலுந் துய்த்தலும் இன் பொருட்பயன் என்பதை உணர்ந்துகொள்ளாத உலோபர்கட்கெல்லாம் உணர்வுவர இவன் ஒத்து ஒழுகினான். நல்லவழியில் செல்வத்தை நிரம்பத் திரட்டி அறங்கள் பல செய்து எண்ணிய போகங்கள் யாவும் இனிது நுகர்ந்து புண்ணியவான்எனப் பெரும்பெயர் பெற்று இவன் விளங்கி நின்றான்.

உந்துநீர்க் கட லுலகினில் ஒண்பொரு ளியற்றி

அந்திமான்கொண்ட அரும்புகழ் யாவரோ கொண்டார். என்று

அக்காலத்திருந்தவரெல்லாரும் இவனை உவந்துகொண்டாடினர். ஒண் பொருள்

காழ்ப்ப இயற்றியோர்க்கு எனை யிரண்டும்
ஒருங்கு எண் பொருள் என்பதை உலகம்
இவன்பால் உணர்ந்து நின்றது.

ஈங்கொரு மன்னன் வேடன் இருவரும்
நோற்று வன்மை

தாங்கிய அந்திமானே சந்திமான் என்று
போாய்

வீங்குநீ ருடுத்தபாரை மேலைநாட்
புரந்தா ரென்ப

ஆங்கவர்பின்னாள் முத்தியடைவது
திண்ண மம்மா. என்று கந்தபுராணத்தில்
இவன் சரிதம் காட்டப்பட்டுள்ளது. தன்
திரு வுடைமையால் இருமை யின்பங்களையும்
ஒருமையிலெய்தி இவன் உயர்ந்திருந்த
உண்மையை இதன்கண்ணும்
உணர்த்தியிருத்தல் காண்க.

குலம்பெரிய குணமறிவு வடிவுகுடிப் பிறப்புப்
பொலங்கையுடை யவர்க்கல்து புகழ்ச்சியினை
யடையா இலங்குமனை யாளும்பொருள்

இல்லவிடத் திகழும் அலங்கல்வரை மார்ப
பொருளாதலினி யழியல் (மேருமந்தரபுராணம்)
எல்லா நலனும் இனிதுதவும்
இன்பருளும்
வல்லா னெனவுலகம்
வாழ்த்தவைக்கும்—கல்லானே
யானாலும் மேன்மை யடைவிக்கும்
செல்வமது
தானே தற்கொண்டான் தனக்கு.

இன்பறங்க ளெல்லாம் எளிதாக
வந்தெய்தும்
நன்பொருள்கை வந்தார்க்கு நன்கு.

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2021

பொருளுடையார்க்கு அறமுதலிய
எல்லா நலங்களும் ஒருங்கே உ
ளவாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

பொருள் எவரையும் மதிப்புறச் செய்யுமாதலால் எவற்றி னுஞ் சிறந்ததாகக் கருதி அதனை மக்கள் ஈட்டிக்கொள்ளவேண் டும். பொருளில்லாரை எல்லாரும் இகழ்வர். அஃதுடையார்க் குச் சென்ற இடமெங்கும் வென்றியு ண்டாம். தீதில்லாத வழியில் வந்தபொருளே சிறந்து நின்று இன்பந்தரும். பிறவுயிர்கள் வருந் தும்படி அருளும் அன்புமின்றிப் பொருளைத் தேடலாகாது. புதை யற் பொருளும், பகை வரை வென்றுகொண்ட பொருளும், அரசர் க்கு உரிமைப் பொருளாம். உயிர்கட்கு இதஞ்செய்து அருளை வளர்த்தற் கும் பொருளே காரணமாகும். அரிய வினையும் பொரு

ளுடையானுக்கு இனிது முடியும். பொருள், பகைவர் செருக்கை அறுக்குமாதலால் அதனை எவரும் பெருக்கிக்கொள்ளவேண்டும். பொருளை அதிகமாக ஒருவன்

செய்துகொண்டால் அறனும் இன்பமும் அவனுக்கு எளிதிலுளவாம்.

எசு-வது பொருள் செயல்வகை முற்றிற்று.

ச-வது கூழியல் முற்றிற்று.

---

# ஐந் தாவது படையியல்.

அரசு அமைச்சு அரண் கூழ் என மேல் நான்கு இயல்கள் அமைந்துள்ளன ஆதலால் இஃது ஐந்தாவதென நின்றது. இரு வியல் திண்படை என்றபடி இஃது இரண்டதிகாரங்களையுடையதென்க. திண்மை படையின் தன்மைதோன்ற நின்றது.

# 77-ம் அதிகாரம் படை மாட்சி.

அஃதாவது சேனையின் சிறப்பு. யானை தேர் குதிரை காலாள் என்னும் நால்வகைத் தொகுதியும் சேனை எனப்படும். ஆட்சிக்கு உயிர்த்துணையாய் நின்று குன்றுத மாட்சியை என்றும் செய்ய வல்லதாகலின் அரசனுக்கோர் திண்ணிய உறுப்பாக இஃது எண்ண நின்றது. அரணும் பொருளும்போல் நிலையாய் நின்று 2022 திருக்குறட் குமரேச வெண்பா.

பாதுகாத்துப் பகை யிருளறுத்துச் சென்ற இடமெல்லாம் சிறப் பெய்துவிக்குமாயினும் பொருளால் போற்றப்பட்டு நிலைபெறு மாதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

பத்திமை சான்ற படையும்

பலர்தொகினும்

எத்துணையும் அஞ்சா
எயிலரணும்—வைத்தமைந்த
வெண்ணிலவா விழுதிதியும்
இம்மூன்றும்
மண்ணாளும் வேந்தர்க் குறுப்பு.

என்று நல்லாதனார் இதனை அரண் பொருள்களோடு இணைத்து அமைத்து அரசனுக்கு உறுப்பென உணர்த்தி வைத்துள்ளமை காண்க.

---

**761** வென்றிமிகு சோதனனேன்
வெல்படையைப் பேணியென்றுங்
குன்றாது நின்றான் குமரேசா—நன்று
உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை
வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.
(க)

இ—ள்.

குமரேசா! தன் உடைமைகள்

வெற்றினுஞ் சிறந்த தாகக் கருதிப்படையினை என் பிரச் சோதனன் பேணிவந்தான் எனின், உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல்படை வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை என்க.

இது, சேனையே அரசனுக்குச் சிறந்த செல்வம் என்கின்றது. வென்றிமிகு என்றது எதிர்தரு பகைவர் எங்கணும் இன்றி யாண்டுமே வென்றிமீக் கூர்ந்து அவன் நின்றமை கருதி. தான் வெற் றித் திறத்தில் மிக்கிருந்தும் சேனைத் தொகுதியைச் சிறந்த செல்வ மாகக் கருதிப் போற்றிக் குன்று வென்றியுடையனாய் நின்றிருந்தா னதலால் வெல்படையைப் பேணி நின்றான் என்றும். நன்று என்றது உறுப்பமைவின் சிறப்புணர நின்றது.

உறுப்பு என்றது யானை தேர் கருவி முதலிய படையின்
அங்கங்களை. உடம்புக்குக் கைகால் முதலியனபோலப் படைக்கு

இவை அவயவங்களாகுமாதலால் உறுப்பு என நின்றன.

ஊறு = போரில் நேரும் இடையூறு. வெறுக்கை = செல்வம்! அரசனுக்குப் படை தலைமையானது என்று உரைக்கும் இதில் 77-ம் அதிகாரம் படை மாட்சி. 2023

வெறுக்கையைக் கூட்டிவைத்து விலக்கியது என்னையெனின்? உயர்ந்த நிலையினை அருளவல்லதாதலான் எல்லாருக்கும் பொதுவாகப் பொருள் சிறந்ததாயினும் அதனினும் தனியாக அரசனுக்குப் படை சிறந்தது என மேலையதிகாரத்தின் தொடர்போடு இது தொடர்ந்துவந்ததாதலின் அதனை ஒட்டி உணர்த்தினார் என்க.

அஞ்சாமையும், வெற்றித்திறனும் போர்வீரர்களுக்கு என்றும் எஞ்சாமல் வேண்டும் என்பது தோன்ற "அஞ்சா

வெல்படை" என்றார்.

அஞ்சாமை உடையதாயினும் வெல்லும் இயல்பு இல்லையாயின் அடித்தவற்றையெல்லாம் தாங்கிக்கொண்டு அசையாது நிற்கும் எருமைகள்போல அப்படை போர் முனையில் பயன்படாதாதலால் வெல் என்னும் அடை படையை விசேடித்து நின்றது. இங்ஙனம் உறுப்பமைந்த சேனையே அரசனுக்குச் சிறப்புடைமையாகும் ஆதலால் அதனையே அவனுக்கு அடையாகவைத்துக் கவிகள் பாடுவர். "கசரதுரகமாக் கடல்கொள் காவலன், தசரதன்" என்பதாதியாக வருவன காண்க.

யானை தேர் குதிரை முதலிய உறுப்புக்களால் நிறைந்து போர்களத்தில் உறுதுயர்க்கு அஞ்சாது நின்று வெல்வதாய சேனை அரசன் செல்வங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்ததாம் என்பதாம்.

சூழ் குடி அரண் முதலிய நன்
உடைமைகளெவற்றிற்கும் ஆதாரமாய் நின்று
தீது நேராதபடி என்றும் தன்னைப் பாதுகாக்க
வல்லதாகலின் இப் படையினை உயிரினுஞ்
சிறந்த ஒண் பொருளாக அரசன்
உணர்ந்துகொள்ளவேண்டும் என்பார்
அதனை “வேந்தன் வெறுக்கையுள் எல்லாம்
தலை” என்றார். அரசருள் ஏறுக ஒரு
வேந்தன் அமைந்திருக்கவேண்டுமாயின்
தனக்குரிய அங்கங்கள் ஆறையும் அவன்
அடைந்திருக்கவேண்டும் என முன் உரைத்த
இடத்தும் இப் படையையே தலைமையாக
வைத்து உணர்த்தியிருத்தலும் காண்க.

நல்லபடை யில்லையாயின் தலையற்ற
உடல் போல் அரசன் பொலிவற்றிருப்பான்
என்பது குறிப்பு.

2024 திருக்குறட் குமரேச
வெண்பா.

வீரர்கள் முதலிய நாலவகைச் சேனைகளையும் தனக்குச் சிறந்த செல்வமாக அரசன் சேர்த்துவைத்துக் கொள்ளவேண்டும் என்பது கருத்து.

திறலமைந்த சேனையே அரசனுக்குச் சிறந்த செல்வம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரச்சோதனன் பால் உணரப்படும்.

## கதை.

பிரச்சோதனன் என்பவன் அவந்திநாட்டு வேந்தன். உஞ்சை நகரிலிருந்து அரசு புரிந்தவன். சிறந்த போர்வீரன். அரசாட்சியிலும் குணமாட்சியிலும் இவனுக்கு நிகரானவர் அக்காலத்தில் ஒருவருமிலர். இவனுடைய பட்டத்துத் தேவிக்குப் பதுமகாரிகை யென்று பெயர். அப்பேரழகியோடு இனிய மனைவியர் பலரையு மணந்து இந்திரன்போல் இவன்

இன் புற்றிருந்தான். மிக்க மதி நுட்பமுடையவன். பதினாறாயிரம் மதிமந்திரிகள் புடைசூழ்ந்து நில்லவ முந்து நிலம்புரந்து உயர்பதியாளனாய் மறுபுலமன்னர் பலரும் திறைகொண்டுதர இவன் முறைகொண்டு நின்றான். அதனால் சக்கிரவர்த்தி என எத்திசையிலும் இவன் இசைபரந்து நின்றது. "நாகத் தன்ன நன்னகர் வரைப்பின் —ஏகத்திகிரி இருநிலத்திறை வன்" என்று புலவர் புகழ இவன் நிலவலாயினான். என்றும அழிவில் தலைவனாகிய ஈசனையல்லது இவன் தலை வேறு எவரையும் வணங்கியதில்லை.

இருநில மடந்தைக் கிறைவ னாகிப்
பெருஞ்சின மன்னர் அருஞ்சமம் வாட்டித்
தம்மொழிக் கொழீஇ வெம்முரண் வென்றியொடு
வழுவில் கொள்கை வானவ ரேத்தும்
கழிபெருங் கடவுளை வழிபடி னல்லது

வணக்க மில்லா அணித்தகு சென்னித்
திருச்சோகலத்துப் பிரச்சோதனன்.
எனக் கொங்குவெளி
ரால் இவன் வியந்து புகழப்பட்டுள்ளான்.
இத்தகைய வெற்றியும் திருவும் பெற்று
விளங்கும் இவன் கொற்றமிக்க படையை
உற்றதுணையென்று கருதிப் பெரிதும்
பேணிவைத்திருந்தான்.
77-ம் அதிகாரம் படை மாட்சி.

2025

தேர் யானை குதிரை காலாள் என்னும்
நால்வகைச் சேனையும் வன்கமைந்திருந்தது.
இவனது படையின் அளவு பதினாறயிரம்
வாகினி என்பர். வாகினி என்பது
எண்பத்தொரு யானைகளும், எண்பத்தொரு
இரதங்களும், இருநூற்று நாற்பத்து
மூன்று குதிரைகளும், நானூற்றைந்து
வீரர்களும் கொண்டதோர் சேனைக்

தொகுதியாம். இப்படிப் பதினாறாயிரம் அளவுகொண்ட படை இவனுக்கு உரிமையாக இருந்தது. குடி கூழ் முதலிய தன் உடைமைகளெல்லாவற்றிற்கும் படையே ஆதாரமென்று இவன் முடிவுசெய்திருந்தானாதலால் எவற்றினும் சிறந்ததாக அதனை எண்ணி ஆதரித்தான். இவனுடைய படைவீரர்கள் யாதும் அஞ்சாதவராய்ப் பொருதிறத்தில் மிகச் சிறந்து எங்கும் வென்றியோடு விளங்கினாராதலால் வெல்படை என எவரும் வியந்து சொல்லினர். இவனது படைவலியைக் குறித்துப் புலவர் பலரும் புகழ்ந்து பாடியுள்ளார். அடியில் வருவனவற்றுள் சிறிது காணலாம்.

ஆற்றலும் வென்றியும் அறிவு மூன்றன்
கூற்றுத்திறை கொடுக்கும்
கொற்றத்தானை

அவந்தியர் பெருமகன்;
தானைச்செல்வப் பெருமகன்;

வெல்போர்ப் பெரும்படை வேந்தன்;

பெருப்படைத் தானைப்
பிரச்சோதனன்;

ஒலிகடற்றானை யுஞ்சையர் பெருமகன்.
எனப் பெருங்கதையில் இடங்கடோறும் படையுடைமையால் இவன் ஏத்தப்பட்டுள்ளான். நிறைந்த சேனையே தனக்குச் சிறந்த செல்வமாக உவந்து பேணி இவன் உயர்ந்திருந்தானுதலால் உறப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன் வெறுக்கையுள் எல்லாந் தலை என்னும் உண்மைக்கு உரியனாய் இங்கு நிலை பெற்று நின்றான்.

தேர்ந்தமைந்த வீரச் செழும்படையே தேர்வேந்தற்
கார்ந்த வுயிர்த்துணை யாம்.

நிலையமைந்த படையே அரசனுக்குத் தலைமையான செல்வம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

762 மூலபலம் அஞ்சாதேன் முன்வந்து நின்றதுகோன்
கோல முலைந்தும் குமரேசா—சால
உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. (உ)

இ—ள்.

குமரேசா! இராவணன் தோல்வியுற்றுத் தளர்ந்து நின்றபொழுதும் அவனுடைய மூலப்படை தளராது வந்து பகைவரோடு வென் அமர்புரிந்தது எனின், தொலைவு இடத்து உலைவு இடத்து ஊறு அஞ்சா வன்கண், தொல்படைக்கு அல்லால் அரிது என்க.

இது, மூலப் படையின் பான்மை கூறுகின்றது.

கும்பகன்னன் இந்திரசித்து அதிகாயன் முதலிய பெரு வீரர்களை யெல்லாம் இழந்து போரை நினைந்து இராவணன் உள முடைந்திருந்தபொழுதும், தான் தளர்வு சிறிதுமின்றிப் பொரு களம் புகுந்து உறுதிகொண்டு நின்றது ஆதலால் "கோன் கோலம் உலைந்தும் மூலபலம் அஞ்சாது முன்வந்து நின்றது" என்றும். கோலம் = விழுமிய நிலை. சால = மிகவும். உலைவு = நிலைகுலைவு; கேடு. தொலைவு = தேய்வு அழிவு ஊறு துன்பம்; ஈண்டுப் போர்க்களத்தில் பகைவர் ஏவும் படைக்கலங்களால் உண்டாம் புண்பாடுகள் என்க. "புறங்கொடுத்தலின் ஊறு அறியா மெய்யாக்கை" என்றது புறம். உலைவு இடத்து = தன் அரசன் நிலைகுலைந்து தளர்ந்த காலத்து. கன்னுடன்வந்த யானை

தேர் முதலியன உலைந்து ஒழிந்தவிடத்து எனினுமாம். "ஒன்னாத் தெவ்வர் உலைவிடத் தார்த்து" என்பது பெரும்பாண்.

தொல்படை = தொன்மையாகிய படை. அஃதாவது தொன்றுதொட்டே வீரன் மகன் வீரனாய் வழிவழியா யமைந்து வந்த சேனையை. இதனை மூலபலம் என்பர். மற்றைப் படைகள் எவற்றினும் அரசன்மாட்டு மிகவுரிமை யுடையதாய்த் தன் உயிர்க்கு இறுதிவரினும் உறுதி குன்றாமல் இப்படை பொருது நிற்கும் என்க. மேல், வெல்படையே அரசனுக்கு உயர்ந்த செல்வம் என்றார்; இதில், அதனுள்ளும் தொல்படை சிறந்ததென்கின்றார். 77-ம் அதிகாரம் படை மாட்சி.

2027

தன் அரசன் தளர்ந்த இடத்துத் தான் நிலைகுலைந்து சுருங்கிய காலத்தும் போரின்கண் உறுவதற் கஞ்சாது பொருது

நிற் குந் தறுகண்மை மூலப் படைக்கே உண்டாம் என்பதாம்.

அரசர்க்குரிய படைகள் பலவற்றுள்ளும் இறுதிவரையும் உறுதி குன்றாமல் நின்று பொரவல்ல படை எது? என ஒருவன் எதிர்ந்து நோக்க அவனை நோக்கி இஃது உரைத்ததாகக் காண்க.

அஞ்சாத வன்கண்மையின் உண்மையை உணர்தற்கு உலைவும் தொலைவும் நல்ல உரைகல்லாம் ஆதலால் அதனை யிடையே வைத்து இவற்றை உடனுணரவைத்தார்.

அரசர்க்குச் சிறந்த செல்வமாக மதிக்கப்பட்ட சேனைகள் அறுவகைப்படும். மாபுநிலை திரியாமல் தொன்றுதொட்டு அமைந்து வருவதும், அமயநேர்ந்தபொழுது அமரின் பொருட்டுப் பொருள் கொடுத்துத் தொகுப்பதும், தன் நாட்டிலுள்ள வீரர்களைத் தேர்ந் தெடுப்பதும, காட்டிலுள்ளவர்களுள் திறலுடையாரைத் திரட்டிக் கொள்வதும், தனக்குத் துணையாயுள்ளவர்கள் உதவ

வந்ததும், பகைவரை வென்று திறையாகக் கொணர்ந்ததும் ஆகிய ஆறுவகை யிலும் அரசனுக்குச் சேனைவந்து சேரும். இவை முறையே மூலப் படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை எனப்படும். இவ் எல்லாவற்றுள்ளும் தொன்மையா யுள்ளதும், உண்மையாய் நின்று தன் அரசனுக்கு உறுதியாக உழைக்க வல்லதும், மூலப்படையே ஆதலால் தொல்படை என்று வேறுபிரித்து அதன் பான்மையை நன்கு விளக்கியருளினர்.

"சுத்தமூலம் கான் கூலி துணை பகை நாடென்றாறே" என்றது நிகண்டு. இதில் மூலப்படைக்குக் கொடுத்திருக்கும் அடையால் அதன் நிலைமையும் தலைமையும் அறியலாகும்.

உறவின் மிக்கவர் பகையின் எய்த்தவர் உதவுமப்படை; குடைகிழற்

செறிதலத்தினில் வளர்நகர்ப்படை ; திரள்வனப்படை; பொருள்விலைத்

தறுகண் மெய்ப்படை; யுறுதியிற்
பொருதமதகப்படை; யெனவிராய்
அறுவகைப் படைகளு ம் வகுத்தன
அணிகளுட்கின பணிகளே.

என வில்லிபுத்தூராரும் இப் படைவகையை விளக்கியிருத்தல் காண்க. பிறபடைகளாலும்



வேறு எவ்விதத்தாலும் பகைவெல்ல 2028
திருக்குறட் குமரேச வெண்பா.

வெல்லமுடியாத காலத்தேதான் இத் தொல்படை வாய்ப்பெயும் என்க. "உறுதியிற் பொரு தமதகப்படை" என மேலைக் கவியில் இம் மூலப் படையை இறுதியில் நிறுத்தி உரிமைதோன்ற அடை கொடுத்து வைத்திருக்கும் நயத்தை உய்த்துணர் ந்து கொள்க.

மிக்கவுரிமையோடு யாண்டும் அஞ்சாமல் உறுதியாய் நின்று பொருது வெல்லவல்லது மூலப்படையே ஆகலால் நாடும பதமும

கயத்தகு செல்வமும், பீடும் பிறவும் பெட்புடனல்கி என்றும் அரசன் அதனைப் பேணிவரவேண்டும் என்பது கருத்து.

தொல்படையையுடைய அரசனே எங்கும் வெல்புகழுடைய னாய் விளங்குவான் என்பது குறிப்பு.

தன் அரசன் தளர்ந்த இடத்தும், உடன்வந்த கரிதேர் முதலிய பிற படைகள் உலைந்து கான் சுருங்கிய காலத்தும் அஞ்சாமல் நின்று அமராற்றுந் தன்மை தொன்மையான வீரப் படைக்கே உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மூலபலத்தின்கண் உணரப்படும்.

## கதை.

மூலபலம் என்பது இராவணனுக்கு உரிமையானதோர் பெரிய படை. மூன்றுறு வெள்ளம் என்னும் அளவினையுடையது. நூறுகோடி சேனைபதிகளைத்

தனக்குத்தலைமையாகக்கொண்டது. அம்
மன்னனுடைய முன்னோர்களாகிய மாலி சுமாலி
முதலாயினோர் காலந் தொடங்கித் தொடர்புற்று
வந்தது. எங்குந் தன் ஆணை செல்ல
இலங்கையிலிருந்து அவன் சிறந்து
விளங்குங்கால, பிரிந்திருந்த இப் படை வீ
ரனைவரையும் ஒருங்கே தொகுத்து உவந்
துபசரித்து உயர்ந்த பதவிகளை உரிமையாகக்
கொடுத்து அமயம் வாய்த்தபொழுது வம்மின்
என்று ஆணை தந்து பல இடங்களிலும்
போய்த் தலைமையோடு அமர்ந்திருக்கச்
செய்தான். அவ் வாறே இவ் வீரனைவரும்
சென்று இலவம், சாகம், பவளம் முதலிய
தீவுகளிலும் வேறு பல நிலையங்களிலும்
மேவியிருந்தார். இங் ஙனம் இருப்பத் தன்
தானையோடு இராமன் இலங்கையுட் புகுந்து
அமர் இழைத்ததால் கும்ப கன்னன் ,
இந்திரசித்து முதலிய தன் தமர்களையும்,

போர்வீரர்கள் பலரையும் போரில் இழந்து இரா 77-ம் அதிகாரம் படை மாட்சி.
2029

வணன் நிலை குலைந்தபொழுது இத் தொல்படையை அழைத்து வரும்படி தூதரை விடுத்தான். அவர் ஓடி உரைத்தவுடன் இப் படைவீரர் திரண்டு ஒருங்கே வந்து இலங்கையை யடைந்து நிகழ்ந்ததை யறிந்து

"கும்பகன்னனோ டிந் திரசித்தையும் குலத்தின்
வெம்புவெஞ் சினத்தரக்கர்தங் குழுவையும் வென்றார்
அம்பினாற் சிறு மனிதரோ நன்று நம்மாற்றல்" என்று கன்றி நகைத்துக் குன்றி நின்ற மன்னன்முன் நின்று பணிந்து அந்தோ! " காதல் இந்திரசித்தை யாம் யாண்டு இனிக் காண்டும் " என உருகிமொழிந்து

உறுதிகூறிவிட்டுப் போருகளம் புகுந்து பெரும் போர் புரிந்தார். வெற்றி வீரனாகிய இராகவன் தன் கொற்ற வில்லை வளைத்துக் காளமேகம்போல் கணைமழை சிந்தினான்.

"விழித்த கண்கள் கைகள் விற்கள் வேல்கள் வாள்கள் விண்ணினுள், தெழித்த வாய்கள் செல்லலுற்ற தாள்கள் தோள்கள் செல்வினைப், பழித்த வாளி சிந்த் நின்றுபட்ட" தென்றபடி பல கோடி வீரர்கள் பட்டு மாய்ந்தும் நின்றவர் பயந்துவிடாமல் மேலும் மேலும் தொடர்ந்து போர் செய்தார். அன்று இவர் அஞ்சாது செய்த திறனும், அவ் ஐயன் எஞ்சாது எய்த விதமும் கம்பர் செய்த மொழியில் இன்றும் இனிது காணலாம். இங்குச் சிறிது காட்டுதும் போரில் மூலபலம் செய்த தீரச்செயல்.

தெய்வநெடும் படைக்கலங்கள் விடுவர்சிலர்
சுடுகணைகள் சிலையிற் கோலி

எய்வர்சிலர் எறிவர்சிலர் எற்றுவர் சுற்றுவர் மலைகள் பலவுமேந்திப்
பெய்வர்சிலர் பிடித்துமெனக் கடுத்துறுவர் படைக்கலங்கள் பெருதுவாயால் வைவர்சிலர்
தெழிப்பர்சிலர் வருவர்சிலர் திரிவர்சிலர் வயவர் மன்னே. (க) ஆர்ப்பர்பலர் அடர்ப்பர்பலர்
அடுத்தடுத்தே படைக்கலங்கள் அள்ளியள்ளித்
தூர்ப்பர்பலர் மூவிலைவேல் ஈர்ப்பர்பலர் காப்பர்பலர் சுடுதீத் தோன்றப்
பார்ப்பர்பலர் நெடுவரையைப் பறிப்பர் பலர் பகலோனைப் பற்றிச்சுற்றும்
கார்ப்பருவ மேகமென வேகநெடும் படையரக்கர் கணிப்பிலாதார். (உ)

## நேரில் இராமன் செய்த வீரச்செயல்.

எறிந்தனவும் எய்தனவும் எடுத்தனவும் பிடித்தனவும் படைகளெல்லாம்
முறிந்தனவெங் கணைகள்பட முற்றின சுற்றில தேரு மூரிமாவும்



நெறிந்தன குஞ்சிகளோடு நெடுந்தலைக

ஆருண்டனபே ரிருஃரினீங்கிப்
பிறிந்தன வெய்யவனென்னப் பெயர்ந்தனன்மீ
துயர்ந்ததடம் பெரிய

தோளான்.

சொல்லறுக்கும் வலியரக்கர் தொடுகவசந் துகள்
படுக்குந் துணிக்கும் யாக்கை வில்லறுக்கும்
தலையறுக்கும் மிடலறுக்கும் அடலறுக்கும்
மேன்மேல் வீசும் கல்லறுக்கு மரமறுக்கும்
கையறுக்கும் செய்யமள்ளர் கமலத்தோடு
நெல்லறுக்குந் திருநாடன் நெடுஞ்சரமென்றால்
எவர்க்கு நிற்கலாமே. (உ)

பக்கம் நின்று பார்க்கவுங் கூடாதபடி கோதண்ட வீரன் பகழிகளை மாரியெனப் பெய்து மாய்க்க போதிலும் இவர் மனங் கலங்காமல் இறுதிவரையும் உறுதியோடு பொருது நின்று ஒருவரும் மீளாமல் முழுவதும் முடிந்தார். தன் அரசன் உலைந்து தான் தொலைவுற்றபோதும் போரில் அஞ்சாமல் நேரில் நின்று தறுகண்மையோடு

பொருது பொன்றி என்றும் பொன்றாப் புகழைப் பொருந்துகின்ற இப் படையின் ஆண்மைத் திறத்தையும் கேண்மைப் பெருக்கையும் அமரரும வியந்து போற்றினர். உலை விடத்து ஊறஞ்சாவன்கண் தொலைவிடத்துத் தொல்படைக்கே உண்டு என்பதை உலகம் இதன்கட் கண்டு நின்றது.

உள்ளம் அழியா துயிரழிவுக் கஞ்சாது
கள்ளமிலா மூலபலங் காண்.

மூலப்படையே அரசனுக்கு மிகவுரிமையாய் நின்று பொருதுதவும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

763 அன்றுகடல் போலசுரர் ஆர்த்துவந்தார் எனெளிதாக் கொன்றுவந்து நின்றாய் குமரேசா—மன்ற ஒலித்தக்கா லென்னு முவரி எலிப்பகை

நாக முயிர்ப்பக் கெடும்.

(ரு)

இ—ள்.

குமரேசா ! கடல்போல் ஆர்த்துவந்த அசுரரெல்லாம் நீ எதிர்ந்தபொழுது என் உடனே இழிந்தொழிந்தார் எனின், உவரி ஒலித்தக்கால் என்னும் எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும் என்க.

இது; வீரனுடைய மேன்மை கூறுகின்றது.

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2031

அன்று என்றது சூரபன்மன் போர் புரியவந்த அக் காலத் தில் என்றவாறு. அசுரப்படை கடல்போல் கலித்துவந்து கருவிகளை வீசிக் கறுத்து நின்றபோதும் எம்பெருமான் புன்னகை யோடு நின்று

எளிதாகப் பொருது கொன்றார் ஆகலால் எளிதாக் கொன்று உவந்துநின்றாய் என்றும்.
மன்ற = மிகுதியாக.

என் ஆம் = என்ன தீமை உண்டாம்; யாதொரு தீதும் ஆகா தென்பதை விள உணர்த்தி நின்றது.

ஒலித்தக்கால் என்னும் உயிர்ப்பக் கெடும் என்றது எளிதில் ஒழிவதாய அப்பகையின் இழிவுதோன்ற நின்றது.

• உவரி = கடல்.
உவர் நீரையுடையதென்பதாம். உவர் = உப்பு
நாகம் = நல்ல பாம்பு. உயிர்ப்ப = மூச்சுவிட.

உவரி ஒலித்தக்கால் = கடல்போல ஒலித்தால். போல என்னும் உவம வுருபு உவரி என்பதில் ஒளிந்து நின்றது.

மேல், படைகளுள் மூலபலம் சிறந்ததென்றார்; இதில், அதனுள்ளும் வீரமுள்ளவனை உயர்ந்தவன் என்கின்றார்.

எலிகளாய பகை திரண்டு கடல்போல்

ஒலித்தால் பாம்புக்கு என்ன தீங்கு உண்டாம் அது செயிர்த்து உயிர்த்தவுடனே அவை யனைத்தும் ஒருங்கே ஒழிந்துபோம் என்பதாம்.

வீரமில்லார் பலர்திரண்டு ஆரவாரஞ் செய்யினும் வீரமுடைய ஒருவன் நேரேவந்து சீறி நின்றால் அவரனைவரும் வேறு வேறாய்த் தொலைந்து ஒழிந்துபோவர் என்பதை உணர்த்துதற்கு எலிகளையும் நாகத்தையும் எடுத்துக் காட்டினார். இஃது ஒட்டணி. பிறிது மொழிதல் எனவும் கூறப்படும்.

உள்ளே வீரமில்லையாயினும் கும்பலாய்த் திரண்டவுடன் களிப்பு மீக் கூர்ந்து எய்மின்; எறிமின்; அடிமின்; பிடிமின்; குத்துமின்; வெட்டுமின்; கொல்லுமின்; என்று போர்க் கருவிகளை நீட்டிக் காட்டிப் புன்பகைவர் குதித்து முழங்குவர் ஆதலால் அவ்வீணர் ஆரவாரம் உவரி யொலியோடு

நோ நின்றது. ஆண்மை யில்லாதார் வாய்திறந்து கத்தி வறிதே யிழிவர்; அஃதுடையார் அடக்கமாய் நின்று அருவினை முடித்து உயர்விளையுடைவர் என்பது ஒலித்தல் உயிர்த்தல் என்னும் உட் குறிப்பால் உணரலாகும். 2032 திருக்குறட் குமரேச வெண்பா.

வீர னுக்கு நாகத்தை உவமையாகவைத்தது உயர்வு, வேகம், தகவு, தறுகண் முதலிய நலனுடைமையான் என்க.

பாதனோடு உடன்வந்த படைகளைக் கண்டபொழுது

எலியெலாம் இப்படை; அரவம் யான் எனக்; குகன் கூற்றில் வைத்துக் கம்பரும்,

" மத்துறு கடலிற் றுக்குறு நெஞ்சினர்
பைவிரி நாகத் தைவாய்ப் பிறந்த
ஒலிப்புயிர் பெற்ற எலிக்கணம் போல ",
னைக் கொங்கு வேளிரும், " நச்சுநாகத்தின்

ஆழற் சிற்றத்தான்" எனத்திருத் தக்க தேவரும்,

"இருபுடை யினும்போர் வேந்தர் எலிகள் போல்வங்கியம்பாற்

பொருபடை யுருண்டுபோகப் பொருவில் வெஃபூசல்செய்தான்."

என வில்லிபுத்தூராரும் இங்குக் காட்டியுள்ளதனைக் கருதிக் கூறியிருத்தல் காணலாகும்.

காகமானது கோடி கூடிநின்றாலும் ஒரு கல்லின் முன் எதிர் நிற்குமோ என்றபடி நல்லவீரன் முன் புல்லியபடை எவ்வளவு பொங்கி வரினும் பொன்றிப்போம் என்றவாறு.

திண்மையில்லாத பலரைச் சேர்த்துவைத்தலினும் உண்மை யுள்ள வீரனொருவனை அரசன் உவந்துகொள்ளுதல் சிறந்ததாம் என்பது குறிப்பு. "வீரன் கேண்மை கூர்ம்பாகும்" என்றதும் காண்க.

வீரனொருவன் வெகுண்டு போர்முகம் புகுங்கால் அங்குத் திரண்டுநின்ற படை உடைந்துபோம் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை அசுரப் படையின்பால் உணரப்படும்.

கதை.

சூரபன்மன் தம்பியாகிய சிங்கமுகன் போருக்கு எழுந்த பொழுது அவனைப் புடை சூழ்ந்து அசுரப்படை கடல் போல் திரண்டெழுந்தது. அன்று உடன் றெழுந்த அதன் தொகை ஆயிரம்வெள்ளம் என்பர். வெள்ளம் என்பது பண்டைக்காலத் தீப் படையின்பெசொல்லையைக் குறித்துவரும் ஓர் எண். அஃதா 77-ம் அதிகாரம் படை மாட்சி.

2033

வது பல அக்குரோணிகளையுடையது. இருபத்தோராயிரத்து எண்ணூற்றெழுபது

தேர்களும்; அவ்வளவினையுடைய யானை
களும்; அறுபத்தையாயிரத்து அறுநூற்றுப்
பத்துக் குதிரை களும்; ஒரு இலட்சத்
தொன்பதினாயி ரத்து முந்நூற்றைம்பது
காலாட்களுமுடையது ஓர்
அக்குரோணியாகும். இஃது எட்டுப்
பங்குகொண்டது ஏகம்; ஏகம்
எட்டுக்கொண்டது கோடி ; கோடி
எட்டுக்கொண்டது சங்கம்; சங்கம்
எட்டுக்கொண்டது விந்தம்; விந்தம் எட்டுக்
கொண்டது குமுதம்; குமுதம் எட்டுக்
கொண்டது பதுமம்; பதுமம்
எட்டுக்கொண்டது நாடு; நாடு எட்டுக்கொண்
டது சமுத்திரம்; அந்தச் சமுத்திரம் எட்டுப்
பங்கு கொண்டது வெள்ளம் என்க.
இத்தகைய வெள்ளம் ஆயிரம் அமைந்த இக்
கொடும்படை பொங்கி யெழுந்து
பொருகளம் புகுந்து எங்கே பகைவன் !
எங்கே பகைவன் ! எங்கே ! எங்கே ! என்று

இசைந்து தெளிந்து பெருமுழக்கஞ் செய்தது. செய்யவே

செய்ய தாமரை வனங்களும் செங்கதிர்த் தொகையும்

ஐயசேயொளி யீன்றிருக்கென்ன ஆறிரண்டு

கையு மீரிரு முகங்களு முடையவன் காலோன்

வையமுக்கிட அடு தொழிலியற்றுவான் வந்தான்.

அழகொழுக இங்ஙனம் வந்த எம்ஐயன் திருவுருவத்தைக் கண்டும் அன்அழிபடை அறிந்து தேறாமல்

ஈங்கிவன் ஒருமகன் எமையெலாஞ் சிலை

தாங்கிய நாணினல் தொலைக்குங் கொல்லெனாத்

தாங்கிய படையுடைத் தருவர் தானைகள்

தீங்கனல் பாய்ந்தெனச்

சினங்கொண்டார்த்தவே. (க)

ஆழிமால் கடல்புரை யவுண மாப்படை
காழுலாம் பலபடைக் கலமுஞ் சிந்தியே
யூழிநா ளெல்லையி னுலகெலாம் அடுங்
கேழிலான் மதலையைக் கிளர்ந்து
சூழ்ந்தவே. (உ)

அங்ஙனம் சூழ்ந்து நின்று இப்படைவீரர் செய்த ஆரவாரத்தை அவ் அண்ணல் நோக்கிப் புன்னகை செய்து தன் வீரவேலை ஏவ அதனால் அனைவரும் வெந்துமாண்டு வெருண்டு தொலைந்தார்.



கடல்போல் கலித்துவந்த படைமுழுதும் வேல் வீரன் வெகுண் டெழுந்த பொழுதே உடைந்தொழிந்ததே யென்று எம்பெருமானை அனைவரும் வியந்து போற்றி உவந்து கொண்டாடினர். ஒலித்தக்கால் என்னும் உவரி,

எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும் என்னும் உண்மையை உலகம்காண இப்படை அன்று உணர்த்தி நின்றது.

வெள்ளமெனை வந்தாலும் வீர னொருவனோர்
கொள்ள வொழியுமே கோள்.

மிகுந்த படையும் வீரனொருவனால் உடைந்துபோம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

764 வென்றி அனாரண்யன் மெய்ப்படைபோர் வன்கண்மை
குன்றவில்லை என்னே குமரேசா—என்றும்
அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை .
(௪)

இ—ள்.

குமரேசா ! அனாரண்யன் படை

நிலகுலைந்த பொழுதும் புறங்கொடாதபடி தறுகண்மையோடு நின்று என் பொருதுமாய்ந்தது எனின், அழிவு இன்று அறை போகாதாகி வழிவந்த வன்கணதுவே படை என்க.

இது, நல்ல சாதியான படையின்தன்மை கூறுகின்றது.

வென்றி என்றது அவனது இயற்கையான வெற்றித்திறங் குறித்து நின்றது. மெய்ப்படை என்றது அறைபோகாமை கருதி. இராவணன் விரைந்துவந்து வளைந்துகொண்டு பெரும் படையோடு நின்று கெடும்போர்செய்த பொழுது இடையே முறிவுபடாமல் முடிவுவரையும் ஆண்மையோடு அப் போரில் மூண்டு நின்றமையான் போர் வன்கண்மை குன்றவில்லை என்றும்.

அழிவு இன்று = கேடு இல்லாது.

அஃதாவது போரின்கட்
புறங்கொடாமல் என்க. இன்றி என்னும் எச்சம் உகரமாய்த் திரிந்து இன்று என வந்தது.

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2035

இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி
நின்ற இகரம் உகரமாதல்
தொன்றியல் மருங்கிற் செய்யுளுள்
உரித்தே. என்றது இயல்.

அறைபோகாது = பேதிககப்பட்டுச் சோரம் போகாமல். தன் அரசனுக்கு உதவிசெய்யாமல் ஒளிந்துபோ தம்படி பல்வகை உபாயங்களைச்செய்து பகைவர் வேறுபடுத்தினும் மாறுபடாமல் படை நிற்கவேண்டும் என்பார் "அறைபோகாதாகி" என்றார்.

போரில் புறங்கொடாத பகைவர்

செய்யும் வஞ்சனைக்கு வசப்படாததாய் மரபுநிலை திரியாமல்வந்த தறுகண்மையுடையதே படையாம் என்பதாம்.

அழிவின்மையும், அறைபோகாமையும், வழிவருதலையும், வன்கண்மையும் படைக்கு உறுதியாக அமைந்திருக்கவேண்டும் என்றவாறு.

வன்கணது = வன்கண்மையையுடையது. எகாரம் பிரிநிலை. வருமொழி முதலில் உயிர்வந்தால் கெட்டு முடியவேண்டிய குற்றியலுகரம் இங்குக்கெடாமல் நின்று வகரவுடம்படுமெய் பெற்றுவந்தது. ஆற்றலதுவே படை என அடுத்து வருவதுமது. வழிவந்த = தொன்றுதொட்டே வீரன்மகன் வீரனாய் அடிப்பட்டு வந்த. மரபுநிலை திரியாமல் இங்ஙனம் வந்த படையே மனநிலை குன்றாமல் பொர வல்லதாம் என்க.

வழிவாராதார் மாட்டும் ஒரோவழி வன்கண்மை காணப்படுமாயினும் அது

கடுவாய் ஓநாய்களிடத்துப்போலக் கொடுமை
மேலதாய்த் தோன்றி விரைந்தொழிந்து போம்; வழிவந்த ஆண்மை
மடங்கலேற்றினிடம்போல் யாண்டும் பெருந்தன்மையோடமைந்து சிறந்து நிற்கும் என்க. இவ் வழிவந்த வீரனை நல்ல சாதி வீரன்; சுத்த வீரன்; பரம்பரை வீரன் என வழங்குவர். இமமரபில் வந்த ஆண்மக்களையன்றிப் பெண்மக்களும வீரத்திறத்தில் சிறந்து விளங்குவர். இவ்வகையில தோன்றிய ஒரு வீரமகள் தன்னுயர் தந்தையும், இன்னுயிர்க் கணவனும் முன்னும பின்னு மாகப் போர்க்களம் புகுந்து போமர் செய்து முறைமய முதனாள் இறந்துபட்டிருப்பவும் சிறிதும் கலங்காமலிருந்து மறுநாள்வந்து

வெண்பா.

பகைவர் செய்த பறைமுழக்கத்தைக் கேட்டு மிகவுமகிழ்ந்து தனக்கிருந்த அருமையான ஒரு மகனையும் அழைத்து வெள்ளிய ஆடையையுடுத்து, வேலைக்கையிற் கொடுத்து, என் கண்ணினும் சிறந்த புண்ணியப் புதல்வ! நம் அரசனுக்கு உறுதுணையாகச் சென்று பொருது வென்றுவா என்று உறுதிகூறிச் செருமுகம நோக்கிச் செல்க என்று ஏவினாள். அவனும் அகமகிழ்ந்து சென்றான். இதனை

கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனா ளுற்ற செருவிற் கிவள் தன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற் கிவள் கொழுநன்
பெருநிரை விலங்கியாண்டுப

பட்டனனே

இன்றும், செருப்பறை கேட்டு

விருப்புற்று மயங்கி
வேல்கைக கொடுத்து வெளிது
விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி பெண்ணை நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.
என ஒக்கூர்மாசாத்தியார் என்னும்
புலவர்பெருமானர் வியந்து பாடியுள்ளார்.
செரு = போர். பறை = முரசு.
இதில், இம் மூதுமகளது பெருமையும்,
போர்த்திறத்திலும், வீரத்திலும் பண்டு
இந்நாடிருந்த நிலைமையும் புலனாதல் காண்க.
மற்றொருத்தி, தன் பிள்ளைக்குப் பால்
கொடுத்துக்கொண்டிருக்கும் பொழுது
பகைவர் வந்ததைக் கேட்டு
வெடுக்கென்றெழுந்து
வேலை யெடுத்து அப்பிள்ளை கையில்வைத்துப்
போருக்குச் செல்க
என்று சொல்லினள். பருவமில்லை

யென்பதையும் அறியாமல் வீர வெறியால் இது செய்தாள் எனக.

வந்தபடை நோனை வாயில்
முனைபறித்து
வெந்திறல் எஃகம்
இறைக்கொளீஇ—மூக்கை
முதல்வர்கல் தான்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு.

(புறப்பொருள்) 77-ம் அதிகாரம் படை மாட்சி. 2037

இதனால் மேற்குறித்த வுண்மை தெளிவாம். என்னே! இவ் அன்னையர்களின் ஆண்மை. வீதியில் விளையாட்டொலி கேட்டாலும் அப்பா! வெளியே போகாதே அமலை அதிகமாயிருக்கிறது! என்று கையைப்பற்றி இழுத்துத் தம் மக்களைக் கழுத்தைக்

கட்டிக்கொள்ளும் கோழைத்தாய்கட்கும், இவ் வீரத்தாய் மார்க்கும உள்ள வேற்றுமையைச் சிறிது இங்குச் சிந்திக்க வேண்டும். இத்தகைய தாய்களின் தங்ககட்டி வயிற்றிலிருந்து தோன்றிய சிங்கக்குட்டிகள் அக்காலத்தில் போர்முகத்தில் சென்று செய்துள்ள வீரச் செயல்களைச் சிந்தித்தால் சிந்தையும் மெய்யும் சிலிர்த்து வீரச் சோரி வெதும்புதல் காணலாம்.

இவ்வகை வழிவந்த வீரர்களே அழிவில்லாமலும் அறை போகாமலும் ஆண்மையோடு நின்று யாண்டும் அமராற்றவல்லவராவராதலால் அத்தகைய படையையே அரசன் மிக ஆதரித்துப் போற்றிக்கொள்ள வேண்டும் என்பார் வழிவந்த வன்கணதுவே படை என்றார்.

பழமையோடு நிலைபெற்றுவந்த சிறந்த படையினையே வேந்தன் தெரிந்து

புரந்துகொள்ளவேண்டும் என்பதும், போரில் என்றும் அது புறங்கொடாது தன்னையுடையவனைப் போற்றி நிற்கும் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை அனரண்ணியன்பால் உணரப்படும்.

## கதை.

அனரண்ணியன் என்பவன் சூரியகுலத்து வேந்தருள் ஒருவன். வசுதனுடைய புதல்வன். இவன் விரத ஒழுக்கங்களிற் சிறந்தவன். இசை நூலில் மிகவும் வல்லவன். மதனசேனை என்பவளை மணந்து அரியசுவன் என்னும் குமாரனைப்பெற்று நெறி முறை வழுவாமல் இவன் இருநிலம் புரந்தான். இவனது ஆட்சியில் குடிகள் மிக மகிழ்ந்திருந்தனர். யானை தேர் முதலிய நால் வகைச் சேனைகளுள் வீரர்களே சிறந்தவர்களென்று தெளிந்திரு

ந்தானதலால் வேல்களையுடைய அக் காலாட் படையைத் தன் அரசுக்கு உயிர்த்துணையாக இவன் ஆதரித்திருந்தான். அமைதி யும் நீதியுமுடையவனதலால் பகைவரொருவருமின்றி உவகையுற்றுத் 2038 திருக்குறட் குமரேச வெண்பா.

திருவயோத்தியிலிருந்து இவன் அரசுபுரிந்து வந்தான். வருங்கால் இராவணன் தானையோடு எழுந்து போன இடங்களிலெல் லாம் பொருதுவென்று இறுதியில் வந்து இவன் நகரினை யடைந்தான். அவ் வமயம் திருமாலை நினைந்து பெருநோன்பு கொண்டு ஒரு மூன்று நாளாக உணவொன்றுமின்றி இவன் உளமடங்கி யிருந்தானதலால் பொர விரும்பாமல் அவன் உறவு கொண்டு போகும்படி உடனிருந்த மந்திரிகளிடம் உறு பொருள் நல்கி உரைசெய்து விடுத்தான். அக் கொடு வீரன் அதற்கு இசையாமல்

"அஞ்சினேன் என்று சொல்: அல்லது அயாடவா" என்று வெஞ்சினந் தோன்ற உரைத்தான். உடனே வில்லோடு இவன் வெகுண்டெழுந்து நேரே வந்து "படைகள் வரவேண்டாம் நாம் இருவரும் பொருவோம்" என்று உறுதிசெய்து நின்றான். அவ்வாறே அமர் மூண்டது. மூளவே மருவி நின்ற இம் மன்னன் படைவீரர் மனங் கேளாமல் கொதித்தெழுந்தார். உடனே கடலென வந்த அவன படையும் கலித்தெழுந்தது. கடும்போர் நடந்தது. அளவிற் சிறியதாதலால் இவன் படை அதில் நில்லாது குலைந்தழிந்தது. அங்ஙனம் அழிவு நேர்ந்தவிடத்தும யாதும பின்னிடாமலும் மனம மாறுபடாமலும் நின்று இறுதிவரையும் உறுதி குன்றாமல் பொருது முடிவில் அனைவரும் முடிந்து மாய்ந்தார். அழிவின்று அறைபோகாதாகி வழிவந்த வன்கணதுவே படை என்னும் உண்மையை உலகம காண இவன்படை

அன்று உணர்த்தி நின்றது. அப்போரில் தான் ஆற்றமுடியாமல் அயர்ந்து நின்றபொழுது இரக்கமின்றித் தன்னை இகழ்ந்து நின்ற அவ் அரக்கர் வேந்தனை நோக்கி வயிறெரிந்து "இனி என்குலத்தில் வருகின்ற ஒருவனால் உன் குலத்தோடு நீ அழிவாய்" என இவன் கோபித்துச் சபித்தான். இவன் பொருத இயல்பும், படையின் நிலையும் இதனடியில் வரும் பாடல்களால் இனிதுணரலாகும்.

திருவோங்கிய இம்மாநகர் அரசாண்டவர் தீயோய் ஒருவோங்களும் கேளாதசொல் உரைத்தாயென யினிநாம் இருவோம் பொர இருவோம்படை இடைவந்துதவாமல் பொருவோம் செருவென வேவலும் புறப்பட்டது படையே. (க)

77-ம் அதிகாரம் படை யாட்சி.

2039

பாழிப்புயத் தாக்கன் பரிவொடு கம்பியுக் காணும்
ஆழிப்பெருந் தோரணயிடை அனாரண்ணியன் படையும்
ஊழிக் கனலென வொன்றிட வுறுசேனையை
யாக்கன் தாழிப்பெருஞ் சோசிக்கடை
நூறாயிரஞ் சமைத்தான். (௨)

பானைப்பெருந் தோரணயிடை யளவற்றன
பெரும்போர்த் தானைகடல் பாழாகிடத்
தரியாதவன் சலிபா
மானத்தினன் அனாரண்ணியன்
வலைவாளெயிற்றினன்மேல் சேனைப்பெரு
மாரிக்கணை சொரிந்தான் மனமெரிந்தான்.
(௩)

பீரச்சிலை அனாரண்ணியன் விடுவாளிகள் வெய்யோன்
பார்பத்திடை புறந்தைக்கவும் மதியாதவன் தடாத்துப்
பாரப்பிணை காத்தாலவன் பசைப்பப்புடைத் தாவி
சோரத்தய ருறுவான்றனை முகநோக்கினன் சொல்லும். (௪)

பொடிபட்டது நின்னின்படை பொரவந்தமராற்று
தடிபட்டு விழுந்தாயெனக கமரஞ்சினை
யென்றும் பிடிகெட்டா சாளாதற விமைத்தா
யெனமிகையால் இடிபட்டிட கைசெய்தலும்
அனாரண்ணிய னிபம்பும். (௫)

துன்னிட்ட தலைத்துன்மதி தோற்றுமென
அறப்போர் நன்னிட்டை யிலாதாய்
எமைநகைசெய்தனை நாங்கள்
வெந்நிட்டிலமுனக்குன்னொடு வெம்போர்
செயவென்கால் முன்னிட்டது
பின்னிட்டிலெனெனப் பின்னையுமொழிவான்.
(௬)

காலத்தினை ஞாலத்தவர் எவரே
கடப்பவர்தாம்
ஆலகலொடு மனத்தோய் அவமதித்தா யெனை
யதனால் கோலத்தசரதராமனென் குலத்தோன்
கொடுங்கணையால் காலக்துலைபோல்
நின்றலைதரை வீழ்கெனச் சபித்தான்.
(௭)

(உத்தரராமாயணம்.)

வழிவந்த படையை இவன் வைத்திருந்ததும்,
யாண்டும் அறைபோகாமல் அழிவின்றி அது
பொருது நின்றதும், இதன்கண் ணுடம்
புலனுதல் காண்க.

திண்மை உரிமை தெளிவு திரிபின்மை
உண்மையதே ஒண்படையா ஓர்.

வீரமரபில் வந்த படையே என்றும் நேர்மையோடு நிற்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

2040 திருக்குறட் குமரேச வெண்பா.

765 திண்டோள் முசுகுந்தன் திண்படைமுன் சண்டனொடும்
கொண்டெ திர்த்த தென்னை குமரேசா—கண்டிடனை
கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. (ரு)

இ—ள்.

குமரேசா ! முசுகுந்தனுடைய படை முன்பு எமன் கோதித்து வந்தபொழுதும் என் எதிர்த்து நின்றது எனின், கூற்று உடன்று மேல் வரினும் கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை என்க.

இது, படையின் பொருதிறங் கூறுகின்றது.

தன் தோள்வலியால் அசுரப் படையினை அறவென்று அமரர்கோனுக்கும் அரசுரிமையைத் தந்தாகலால் திண்டோள் அவனைச் சிறப்பித்து நின்றது. திண்படை என்றது யாதும் அஞ்சாது நின்று யாண்டும் வென்றுவருந்தமையான் என்க. எவரும் நடுங்குதற்குரிய கொடுந் திறலுடைய மறலியோடும் உறுதியோடு நின்று பொருதமை கருதிச் சண்டனொடும் எதிர்த்தது என்றும். சண்டன் = யமன். உம்மை உயர்வு தோன்ற நின்றது.

கூற்று = யமன். உடன்று = சினந்து. இது, வருகையின் கொடுமையை விளக்கி நின்றது வரினும் என்றதனால் அவன் அங்ஙனம் வருதல் அருமையாம் என்பது புலனாய் நின்றது. உம்மை உயர்வு சிறப்பு. அவன் வரவு எவரையும் நிலைகுலையச் செய்யுமாதலால் அவன் முன் உலையாமல் எதிர் நிற்றலையே தலைமையாகக் குறித்துப் படையின் நிலைமையை யுணர்த்தினார்.

மேல், உண்மையும் திண்மையும் உரிமையுமுடையதே படையாம் என்றார்; இதில், அமரில் அமர்ந்துநின்று ஆற்றவேண்டிய அதன் ஆற்றல் கூறுகின்றார்.

கூற்றுவன் கொதித்து மேல்வந்தாலும் நேரே எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையதே படையாம் என்பதாம்.

ஆற்றலதுவே என்று சிறப்பித்துச்

படை என்றதனால் அஃதல்லதைப் படை சொல்லலாகாதென்பதாயிற்று.

## 77-ம் அதிகாரம் படை மாட்சி.

2041

கூடி எதிர்வெல்லும் என்னை நிற்கும் என்றது எவராலும் வென்றுகொள்ள முடியாத வெவ்வலியுள்ளவன் ஆகலால் அவன் முன் நெஞ்சொத்து நின்று தாங்கலே படைக்கு நிலைத்த வென்றி யாம் என்பது தோன்ற என்க.

வேறெவரையும் கூறாமல் கூற்றுவனை மாத்திரம் இங்குக் குறித்துக் காட்டியதென்னையெனின்,

மலைக்கிடு வன்மையும்

மாற்றாநந்திறலும்

கொலைத்தொழில் ஆகைக் கொற்றமும்

உடையனுய் அவன் நிற்றல் கருதி என்க. மாற்றருங் கூற்றம் என ஆசிரியர் தொல்காப்பியனாரும், மருந்தில் கூற்றம் என இரும்பிடர்த்தலையாரும், இவனைக்குறித்துக் கூறியிருத்தல் காண்க.

எவராலும் தடுத்தற்கரிய பேராற்றலுடைய யமனோடும் எதிர்நின்று போராற்றவல்லதே படையாம் என்ற இதனால் உயிர் நீங்க நேர்ந்தாலும் அஞ்சாது ஊக்கி நின்று உறுதியோடு பகைவரைப் பொருதுவெல்லவல்ல வீரர்களே படைக்கு உரியராவ ரென்பது உணரலாகும்.

போர் வரும்வரையும் வந்தது வரவு என்று உண்டு கொழுத்திருந்து அது வந்தவுடனே எதாவது ஒரு தலை முன்னிட்டுப் பின்னிடுவாரைப் படையாட்களாகச் சேர்த்து வைத்திருந்தால் பெருங்

கேடாகுமாதலால் அத்தகைய அச்சமுள்ள கொச்சை மக்களைக் கூடாதொழித்து யாண்டும் அஞ்சாத நெஞ்சுறுதியுடையாரையே படைவீரர்களாக அரசன் அமைத்து ஆதரித்துக்
கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

நல்ல போர்வீரர் யாண்டும் தன் ஆண்டன்மை குன்றார்
என்பதும், கூற்றுவன் எதிர்த்துவந்தாலும் ஏற்றமர் புரிவர் என்
பதும் இதில் உணர்த்தப்பட்டன.
இவ்வுண்மை முசுகுந்தன்
படைவீரர் பால் உணரப்படும்.

## கதை.

அரசருள் ஏறாய் நின்று திகிரியுருட்டி அரசு புரிந்துவந்த முசுகுந்தன் படையுடைமையில் மிக உயர்ந்திருந்தான். இவனது 2042 திருக்குறட் குமரேச

வெண்பா.

சேனை வலிமையக்கண்டு வானவரேயன்றித்
கானவரும் அஞ்சினர் இவன் படை வீரர்கள்
அறிவிலும் ஆண்மையிலும் மிகுந்து சென்ற
விடமெங்கும் வென்றியுடையராய்ச்
சிறந்திருந்தனர். போரில் எவரும் நேரில்லாத
வீரவாகு தேவரோ ஓர் ஏதுவால் சயவாகு
என்னும் பெயரோடு இவன் படைக்குத்
தலைவராயிருந்தார். ஏற்றமிக்க இவ் வீரரின்
ஆற்றலையறிந்து மாற்றலரெல்லோரும்
மனமடங்கிவந்து இவன்பால்
மகிழ்ந்துறவாயினர். இவனும் எண்ணிய
நலங்கள் யாவும் இன்புறவுதவி
இப்படையை இனிதுபேணி வந்தான்.
எய்யெனா ஏழுபகை யெங்குமின்றி |

இங்ஙனம் இவன் இருந்துவருங்கால்
இவனுடைய அருமைத் திருமனைவியாகிய
சித்திரவல்லி என்பவளிடம் சிறந்திருந்த கிளி
" ஒன்றை யமன் தேவி விரும்பியகால் அவன்

தூதுவர் விரைந்து வந்து அதனைக் கவர்ந்து போயினர். இவன் அறிந்து சினந்து அதனைக் கொண்டுவரும்படி தன் படையினை ஏவினான். சேனை திரண்டு சென்றது. யாரும் அணுகற்கரிய பயங்கரத்தைப் படைத்தது. மிடைந்து வளைத்தது. இதனை யறிந்து கூற்றுவனெழுந்து கொலைத்தண்டோடு கொதித்துவந்தான். கொடும்போர் மூண்டது. யாதும் அஞ்சாமல் நெஞ்சொத்து நேர்நின்று இவ் வீரர்கள் பெரும்போர் செய்தனர். மண்டிமேல்வந்த அம் மறலியும் இப் படையின் ஆற்றலைக் கண்டு நாணினான். கருதிவந்ததை உரிமையோடு தந்து உறவு கொண்டாடினான். மிகு புகழோடு இப் படை மீண்டுவந்தது. மன்னன் மிக மகிழ்ந்து வேண்டிய யாவுஞ் செய்து விழைந்து போற்றினான். இயமனோடும் எதிர்த்து வென்றதே யென்று இச் சேனையின் சீர்த்தி எங்குஞ் சிறந்து நின்றது.

றலதுவே

கூற்று உடன்று மேல்வரினும் கூடி
படை என்பதை உலகம் இதன்கண்

எதிர் நிற்கும் ஆற்
உணர்த்து.

சித்திர வல்லி யென்னும் சீருடைச் செல்வி
யங்கோர்
தத்தையை வளர்தத லோடும தண்டகத்
தருமன் தேவி
அத்தனிக் கிளியை வெஃக வாங்கவன் தூதர்
போந்து
கைத்தலத் ததனைப் பற்றிக் கடிதினிற்
கொடுபோ யீந்தார். (க)
அவ்வழி கிள்ளை காணுள் ஆயிழை
யயர்தலோடும்
எவ்வழிபோயிற் ரேவென் றிறையவ
னுலகில்நாடி

மைவழிநின்ற மேனி மறலிதன்
துணைவியானுள்
கைவழி யமருந்தன்மை கருமென
வுணர்ந்தானன்றே. (உ) 77-ம் அதிகாரம்
படை மாட்சி. 2043

பூதலம் புரந்த செங்கோற் புரவலன் வீரமொய்ம்ப
ஞெதியர் தம்மைக் கூவி யங்ஙனர் ஞண்ட அன்னோர்
ஏசமில் கரிதேர் வாசி யெல்லையின் மறவர் சுற்ற
மேதியங் கடவுள் மூதூர் விரைந்துபோய்
வளைந்துகொண்டார். (க) தன்னகர் வளைதலோடுந்
தருமன்வந் தேற்ற காலை
அன்னவ னெடுபோர் செய்தே யடுமுரண்
டொலைச்சியம்பொன் வன்னமென் கிள்ளை தன்னை
வாங்கினர் மீண்டு தங்கள் மின்னுள் மகிழ நல்கி
வேந்தற்கு விசயஞ் செய்தார். (கந்தபுராணம்).
மேற்குறித்த படைத்திறத்தின் உண்மை
இதன்கண்ணும் விளங்கிநிற்றல் காண்க.
•பொன்ற வரினும் புறங்கொடாப்
போர்ப்படையே என்றும் இனிய துணை.
யாண்டும் அஞ்சாது நின்று
அமராடவல்லதே படையாம் என்பது

இதனால் கூறப்பட்டது.

---

766 தேர்ந்த இவிட்டன்றன் சேனையயர் மானநலங்

கூர்ந்து நின்ற தென்னே குமரேசா—சார்ந்த

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற

மெனநான்கே யேமம் படைக்கு. (அ)

இ—ள்.

குமரேசா! இவிட்டனுடைய சேனை மானம் வீரமுதலிய நலங்கள் யாவுமருவி என் என்றும் சிறந்திருந்த தெனின், மறம், மானம், மாண்டவழிச் செலவு, தேற்றம் என நான்கே படைக்கு ஏமம் என்க.

இது, படைவீரர்க்கு
அமைந்திருக்கவேண்டிய பண்பு கூறுகின்றது.
தேர்ந்த என்றது தெளிந்த அறிஞரும்
வியந்துபோற்றுமாறு மதிநலத்தில் அவன்
சிறந்திருந்தமை கருதி.

மறம் = தறுகண்மை; அஃதாவது
யாதும் அஞ்சாது போரி லாற்றும்
போராண்மை. மானம் என்பது ஈனமுறாமை;
என்றது தாழ்வு நேர்ந்தவழி வாழ்வு நோமை
என்க.

256

2044 திருக்குறட் குமரேச
வெண்பா.

வழிச்செலவு என்றது
தொல்வழுவாதொழுகுதலை. ஈண்டுச் சிறந்த
வீரராயினோர் முன்சென்ற நெறிக்கண்ணே
திரம்பாது செல்லுதல் என்க.

தேற்றம் = தெளிவுடைமை.

அஃதாவது இன்னவாறு சென்றால் இன்னவகையில் பகைவரை வென்று வாகை சூடலாம் என்னும் போர்த்தெளிவு. இனி, இதற்கு அரசனால் தேறப்படுதற்குரிய தன்மை என்று கொள்ளினுமாம்.

மேல், உயிர் நீங்க நேர்ந்தாலும் போர்முகத்தில் ஊக்கம் நீங்காது நிற்பதே படையாம் என்றார்; இதில், அதற்குறுதியான உயர் குணங்களிவையென உணர்த்துகின்றார்.

வீரமும், மானமும், மாட்சிமைப்பட்ட தொல்லோர்சென்ற நல்வழியின் கண்ணே செல்லுதலும், தெளிவும் என இந்நான்குமே சேனைக்குச் சிறந்த பாதுகாப்பாம் என்பதாம்.

ஓர் அரசுக்கு அரணுள்ள படைக்கு மறமுதலிய இக்குணங்கள் நான்கும் அரணாம் என்றார் அதற்குத் தீது நேராதபடி இவை பாதுகாக்கும் என்பது கருதி.

பொருபடை தேர்தல்; போர்முறை

யறிதல்;

வருபடை தாங்கல்; வஞ்சினம் பேணல்;

உறுமிடங்காலம் ஓர்ந்துமேற் சேறல்;
முதலிய படை ஐமங்கள் பிறவுமுள வேனும் அவையெல்லாம் இவற்றுள் அடங்கும் என்பார் நான்கே என்றார்.

இந் நான்கு குணங்களையும் படைவீரர் நன்கு உடையரா யிருப்பின் அச்சமும் அன்புங்கொண்டு எவரும் அடங்கி நிற்பாரத லால் அவர் என்றும் வெற்றியாள ராய் விளங்கி நிற்பர் என்க.

மறத்தையும், மானத்தையும் முன்னிறுத்தியது படைக்கு உயிர்க்குணமாய் முதலில் அவை உறுதியாக அமைந்திருக் க வேண்டும் என்பது தோன்ற என்க. இயற்கையில் இக்குணங் கள் உள்ளுற அதற்கு இல்லையாயின, மூலபலம் முனைந்து வந்த பொழுது

என்னப்பா மற்றிவ் வெழுபது வெள்ளமும் ஒருவன்

இன்னப்போதுமோ தேவரின் வலியமோ சிறியேம்

முன்னிப் பாரெல்லாம் படைத்தவனுளெலா முறைமின்
றுன்னிப் பார்த்து நின் றுரையிடக் குறையுமிவ்வியூகம்.

(க) 77ம் அதிகாரம் படை மாட்சி.

2045

அனுமன் ஆற்றலும், அரசனது ஆற்றலும், இருவர்

தனுவினுறறலும் தம்முயிர் தாங்கவுஞ் சாலா
கனியுங் காய்களும் உணவுள; முறையுளகாக்க
மனிதர் ஆளினென்! இராக்கதர்

ஆளினென்வையம் ! (உ) என்று சொல்லித் தம்மை நம்பிவந்த ஐயனையும் போரில் தனியே விட்டுவிட்டு வானரங்கள் ஓடிப்போனதுபோல் ஓடநேருமாதலால் அங்ஙனம்நேராதபடி மறமும் மானமும் படைக்கு மாண்புறவேண் டும் என்க. மானமும், வீரமும், மாண்புமுடையசேனை ஒருவனுக்கு அமையுமாயின் அதுயாதுந் தீ

துறுது என்றும்வென்றியோடு விளங்கி நிற்கும் என்பது இதில் உண ர்த்தப்பட்டது. இவ்வுண் மை திவிட்டன் சேனையிலுணரப்படும்.

## கதை.

திவிட்டன் என்பவன் சுரமை நாட்டு மன்னனாகிய பயாபதி யினுடைய புதல்வன். பேரறிவாளன். வீரருள் வீரன். வண்மையுமு தகவும் வனப்பும் கல்வியும் உண்மையும் மானமும் உறுதியு முடையவன். குடிகள் இன்புறக் கோல் கைக்கொண்டவன். ஒரு வன் அரசாட்சிக்கு அவன் படைமாட்சியே உ றுதியாம் எனக் கருதி நின்றவன். அதனால் சார்ந்தவ ரவரினும் போர்வீரர் களிடத்தில் ஆர்ந்த அன்புடையனாய் இவன் அமைந்திருந்தான். இவனது படைவீரர்களெல்லாரும் இவனைத் தம் உயிரெனக் கருதி உவகைகொண்டிருந்தார். இவ்வீரர் போராற்றலிற் போர ற்றலுடையவர். அமைதியும் தகவும

அமையப்பெற்றவர். தம் மன்னனோடு மாறுகொண்டு அச்சுவக்கிரீவன் என்னும் மறுபுல மன்னன் பெரும்படையோடு வந்து வளைந்தபொழுது இவர் கடிதிற் சென்று அதனைமுடிய வென்றார். பொருகளத்தில் முனைந்து இவர் அமர்புரியுங் காலும் மரபு நிலைதிரியாமல் நேர்மையோடு நின்றே ஆண்மை செய்துவந்தார். அஞ்சினவர்கள் மீதும், புறங் காட்டினவர்கள் மீதும் இவர் வெஞ்சினங்கொள்ளார். விலகிப் போமின் என அருள்செய்து விலக்கிவிடுவார். மீறிவந்த வீரர்களையன்றி இவர் சீறி நின்று போரில் நேரார்.

அச்சமுடையார் அகல்க; ஆற்றுபவர் ஏற்க;

எச்சமில் குடித்தலைவர் போக; வென எங்கும்

கச்சையர் கருங்கழலர் காலனையும் நோனர்
வெச்சென விழித்து விறல் வீரர்திரிகின்றார். (க)
ஏற்றவ ரிமைப்பினும் இகழ்ந்தெறிதல் செய்யார்;
தோற்றவர் புறக்கிடை தொலைந்தவரை நோக்கார்;
வேற்றவரை வீரநெறி காண்மினிது வென்று
தேற்றுவனர் போல வுணர் சென்றுதிரிகின்றார். (உ)

என்றபடி வீர நிலை திரியாமல் நின்று அப்படையினை இவர் வென்று வந்தார். இவரது வெற்றித்திறத்தையும், மானநலத்தையும், மாண்பையும் அக்காலத்து மன்னர் பலரும் மதித்துப்புகழ்ந்தார். நேர்மையோடு நின்று மேன்மையான வழியில் இப்படையாண்மை செலுத்தி வந்ததனால் யாரும்

மாறுபடாமல் இதன்பால் அன்பு செலுத்தி வந்தார். அதனால் யாதொரு இடையூறுமின்றி அமர்ந்து சிறந்து தன் குணநலங்களால் என்றும் இனியதாய் இப்படை நின்று திகழ்ந்தது. இதனையுடைய அரசனும் எமமீக் கூர்ந்து இன்புற்றிருந்தான். மறம் மானம் மாண்டவழிச் செலவு தேற்றமென நான்கே எமம்படைக்கு; என்னும் உண்மையை உலகம் இதன்கண் உணர்ந்தது. விரிவைச் சூளாமணியில் காணக.

மானந் தறுகண்மை மாறாத மாட்சியுறு
தானையே வென்றி தரும்.

வீரமுதலிய உயர் குணங்களை யுடையதே படையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

767 தோர்ந்து திறனறிந்து சென்றதைவர் சேனைநிலை

கூர்ந்துமுன் என்னே
குமரேசா—நேர்ந்துநின்ற
தார்தாங்கிச் செல்வது தானை
தலைவந்த
போர்தாங்குக் தன்மை யறிந்து.
(எ)

இ—ள்.

குமரேசா ! பஞ்சவர் சேனை
போர்முகத்தில் பகைவர் வந்த
வகையினையறிந்து என் அவர்மேல்
முந்துறச் சென்றது எனின், தலைவந்த
போர்தாங்குக் தன்மையறிந்து, தார்தாங்கிச்
செல்வது தானை என்க.

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2047

இது, படை எழுந்துசெல்லும் பான்மை
கூறுகின்றது.

திறனறிந்து நிலைகூர்ந்து நேர்ந்து

சேனை முன்சென்ற தென்றது

அரவின் விடமொத்த வெரிசினமு நிலைபெற்

றுடையவசல நிகரொத்த மன
மும், புரவியுடனொத்தகதி விரைவுமுரு மொத்தவதிர் குரலுமெழு வொத்த
புயமும், உரவனிலமொத்த வலியுரமு மதனொத்த வொளியுருவமு மனைத்து
மருவிப், பரவைமணலொத்த பல அணிபடவகுத்த பலபடையுடனடக்கு

நடையார். என்றபடி யிடைந்துவந்த படையின்
நிலையறிந்து அணி
ந்து முந்துறச் சென்று ஐவர் சேனை
அதனை நிலைகுலைத்தமை கருதி. தலைவந்த
என்றது தன்மேல்வந்த என்றவாறு.

தார் என்றது சேனையின் முன்
அணியை. இது தூசிப் படை எனவும்,
முற்படை எனவும், கொடிப்படை எனவும்
கூறப் படும். “வருதார் தாங்கி அமர் மிகல்”
எனவும், தார்தாங்கி நிற்றல் எனவும்
வருவனவற்றுள் தார் உணர்த்திநிற்கும்
பொருளை புணர்க. முந்துற்றுப்
பொருபடையாகிய இது போர்த்துறை
யில் தார்நிலை எனப்படும்.

மேல், இயற்கையில் படைக்கு அமைந்திருக்கவேண்டிய குணநலங்களைக் கூறினர்; இதில், பொருகளத்தில் அது தெரிந்து செல்லவேண்டிய திறங்கூறுகின்றார்.

தன்மேல் ஏறிவந்த படையின் போரினை விலக்கும் இயல் பினையறிந்த தான் அணிபெற அமைந்து முந்துறச் செல்வதே படையாவது என்பதாம்.

தன்மையறிந்து தாங்கிச்செல்வது தானை என்றதனால் அவ் அறிவும் செல்லுகையும் யிற்று.

இல்லையாயின் அதற்கு ஈனமாம் என்பதா

வெல்லுதல் கருதித் தம்மேல்வ ந்த மாற்றனது படையின் நிலையினையறிந்து அதற்குத் தக்கவாறு அணிவகுத்து க்கொண்டு படைவீரர் முன்னேறி மூண்டுசென்று எதிரில் நிற்பதாகிய தூசிப் படையைத் தாக்கி விலக்கி மேல்வைக்கி

உடற்ற வேண்டும் என்ற வாறு. இங்ஙனம் முந்துறச் சென்று தூசிப்படையைத்தடுத்துப் போர்க்களத்தில் ஒருவன் இறந்துபடுவனாயின் அவன் நிலை மிகச் சிறந்ததாக வியந்து போற்றப்படும்.

2048 திருக்குறட் குமரேச வெண்பா.

*விட்டிடினென்! வேந்தன்*
*விலைபிடின்என்! இவ்வுலகின்*
*இட்டுரையின் எய்துவ*
*எய்திற்றால்—ஒட்டாதார்*
*போர்தாங்கி மின்னும் புலவா*
*ளுறைகழியாத்*
*தார்தாங்கி வீழ்ந்தான் தலை.*
*(வெண்பாமாலை).*

*மேற்குறித்தவுண்மையை*
*இது ணர்த்தி நிற்றல் காண்க.*
*வெய்யோன் எழாமுன்னம்*

வீங்கிருள் கைபகலச்
செய்யோன் ஒளிதிகழுஞ்
செம்மற்றே—கைபின்று
போர்தாங்கு மன்னவன்முன் புக்குப்
புகழ்வெய்யோன்
தார்தாங்கி நின்ற தகை. (பெ
ருந்தொருள்விளக்கம்).

இது, தன்மன்னனை மாற்றான்
படைவந்து வளைந்துகொண்டபொழுது ஒரு
சேனைத்தலைவன் விரைந்து முந்துற்று விலக்கி
வென்றமையை விளக்கி நின்றது.
அடிகளது கருத்தை சொல்லும்
இதன்கண்ணும் கலந்திருத்தல் காணலாகும்.

படைகள் ஒன்றோடு ஒன்று முனைந்து
பொரஎழுந்தபொழுது விரைவுற வெல்லுமாறு
தனித்தனி விரகுடன் அணிவகுத்துச்
செல்லும். இது, படைவகுப்பு எனப்படும்;
வடநூலார் இதனை
வியூகம் என்பர். தண்டவியூகம்,

அசலவியூகம், ஞுசிகாவியூகம்,
காருடவியூகம், சகடவியூகம, சக்கரவியூகம்,
மகரவியூகம் முதலாக
இது பலவகைப்படும். இப்படைவகுப்பு,
போரின் இடைவகை யறிந்து
அவ்வப்படைத்தலைவர்களால் அவ்வப்போது
செவ்விதாக
அமைத்து நடத்தப்பெறும்.
அக்கரம் யாவும் உணர்ந்த சிலைக்குரு ஆசு
ரசேனை நடுச் சுக்கிர ஞர்நிகரென்ன வகைப்படு
தூசியின் மாமுறையே எக்கரமும்படை
கொண்டெழுசேனையை எயில்கள் வளைப்பன
போற், சக்காயூகம் வகுத்திரதத்திடை
சயமுற நின்றனனே.
என்றபடி துரியோதனனுடைய படை
-த்தலைவராகிய துரோணர் வகுத்து
நின்றபொழுது
· ஈரிரு தேரினர் மூவகையானையர் எண்ணறு

மாமிசையோர் ஒரிருகாலுடை
யையிருபூமியிலுள்ள பதாதியுடன் பாரிருகாலு
திசாமுக மும்படையோடு பரந்துவரும்
ஸ்ரீபெரிருமான வரூதினி யின்றிரள்
பேசுறலாமுளவோ. 77-ம்

அதிகாரம் படை மாட்சி. 2049

வருபடைகள் சேனை நிறுத்தி விதப்பட
மகாவியூகம் வகுத்
தொருபகல் யூகமும் இப்பகலுக்கினி
யொப்பல வென்றிடவே
குருபதியுந் திருமாலுமதிக்க அணிந்தடு
கோளரிபோல்
துருபதன் மைந்தனு நின்றனன் அந்தர
துந்துபிமீதெழவே.

என ப் பாண்டவர்
படைத்தலைவனாகிய திட்டத்துய்மன் சேனை
வகுத்து நின்றமை தெளியலாகும்.
இங்ஙனம் எதிரிக ளால் வகுக்கப்பட்டுத்

தம்மேல் வந்த படையின் போரினைத் தடுக்கும் வகையினை யறிந்து அணி வகுத்துக்கொண்டு அதன்மேல் மூந்துறச் செல்லவேண்டும் என்பார். "தலைவந்த போர் தாங்கும் தன்மையறிந்து தார தாங்கிச் செல்வது" என்றார். தான்நொந்து படாமல் மூந்துறச்சென்று தன்மேல்வந்த படையைச் சிந்தச் செய்வதே சிறந்த சேனையாம என்பது கருத்து.

தார்தாங்கிச் செல்லாததானை, கூர்தாங்காத வாள்போல் போரில் சீர்தாங்காது போம் என்பது குறிப்பு.

எதிர்ந்து நிற்கும படையின் இயல்பினை யறிந்து சிறந்த படை வீரன் தன் சேனையைச் செலுத்தி வெல்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவேதன்பால் உணரப்படும்.

## கதை.

சிவேதன் என்பவன் விராட மன்னனுடைய மூத்த மகன். விற்போரில் மிகச் சிறந்தவன். ஆண்மையும் நேர்மையும் அமையப் பெற்றவன். இளையவனாயினும் முதியரும் வியந்து போற்றும் மதிநலமுடையவன். பாரதப் போரில் பாண்டவர் படைக்குத் தலைவனாயிருத்தற்கு இவனே தக்கவன் என்று கண்ணன் முதலிய அனைவரும் கருதித் தெளிந்து உரிமை செய்தார். இவனும் அவ்வாறே அதிபனாயினன். தனக்கு எதிரியாய் வந்துள்ள துரியோதனனது படையின் இயல்பினை நோக்கித் தன் சேனையை அணிபெற வகுத்து அதனுள் சிறந்த தலைவர்களைத் தெளிந்தெடுத்து முதலில் இவன் முறைசெய்து நிறுத்தினான். அன்று இவன் வகைசெய்து நின்ற நிலையைக் கண்டு அனைவரும் உவகைமீக் கொண்டார்.

அதிரதாதிபர் தானும் வீமனும் விசயனுந்திறல் அபிமனும்
சிதைவிலாத சிகண்டி சாத்தகி திட்டத்துய்மன் விராடர்கோன்
மதுரமாமொழி தருமனேடிவர் மாரதாதியர் சமாதப்
பதிகளானவர் யாகசேன யுதாமன் உத்தம பானுவே.
நண்ணும அர்த்த ரதர்க்கு நாயகர் நகுலனுஞ் சகதேவனும்
எண்ணும் வெற்றி பெறுங்கடோற் கசனென்னும் வீரனுமாகவே மண்ணகத்தணி யணிகளாக மகிபர்தம்மை வகுத்துளான்
விண்ணகத்தனி வியுகர் சேனையில் வேளொடொத்தனன் வீரனே.

என விளங்கி நின்று பின்பு

நிலையறிந்து பொருகளத்தில் தன் படையினை நடத்தினன். தன்மேல் எதிர்த்துவந்த படை வீரர்கள் வில் வேல் வாள் சககாம் தண்டு பிண்டி பால முதலிய கூரிய கருவிகளைக் கொண்டு கணைகளை மாரிபோல் வீசிக் கடும் போர் விளைத்தார். இங்ஙனம் அப்படைசெய்த போரினைத் தன் நிலைவகையால் தடுத்து முற்று இச் சேனை முனைந்து சென்று முன் அணியைச் சிந்தி அதன்மேல் மூண்டு நின்று முழுவதும் பின்பு முறிய வென்றது. அங்ஙனம் அப்படை முறியுங்கால் சல்லி யன்வந்து தடுத்தான். அதுபொழுது சிவேதன்,

சங்கினங்கள் முழங்கவும் பணை முரசினங்கள் தழங்கவும்
துங்கவெ ங்களி றிவுளி தேரொடு தானை மன்னவர் சூழவும்
எந்த நின்றனன் எங்கு நின்றனன் மத்திரத்தர சென்று போய் அங்குநின்ற

மகீபர் வென்னிட அவனைமுந்துற அனுகினன்.

இங்ஙனம் இவன் அனுகி அமராற்ற அவனும் உடைந்தான். அதன்மேல் நின்ற படைகளை வென்று இத்தானை வென்றிபெற்று வந்தது. பகைநிலையறிந்து தலைமையோடு சென்றதால் இச்சேனை உயர்நிலையடைந்தது. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த போர்தாங்கும் தன்மையறிந்து என்னும் உண்மையை உலகம் இதன்பாலுணர்ந்தது.

செங்கண் மாலுயிர்; தருமன் மார்பு; சிவேதனானனம்; இருபுயம் வெங்கண்வீமனும் விசயனும்; திறல் வின்மருத்துவர் மைந்தர்தாள்; அங்கண் மாமுடியரசர்மற்றுள அவயவாதிகளாகவே

தங்கள் பூமியி லானபோதொரு
வடிவமொத்தது தானேயே.
77-ம் அதிகாரம் படை மாட்சி.
2051

இது, வில்லி சொல்லியது. தலைவந்த
போர்தாங்கும் தன் மையறிந்து இக்காலை
நின்ற தன்மையும், மேற்குறித்த வுண்மையும்
இதனால் உணரலாகும்.

நேர்ந்து வருவோர் நிலையறிந்து
நேரலர்முன்
சேர்ந்துபோரின் வென்றியாந் தேர்.

பகைநிலைபுணர்ந்து அணிசெய்து படை
செல்லவேண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

768 பண்டு கான்றுலை பாடுபெற்று
நின்றதணி

கொண்டதனால் என்னை

குமரேசா—மண்டி

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந்

தானை

படைத்தகையாற் பாடு பெறும்.

(அ)

இ-ள்.

குமரேசா!

தானுடைய படை பெரிய திறலிலதாயினும்
அதன் தோற்றப் பொலிவால் வென்
எற்றமுற்றிருந்தது எனின், அடல் தகையும
ஆற்றலும் இல் எனினும்,
படைத்தகையால் தானை பாடுபெறும் என்க.

இது, படையழகின் இயல்பு
கூறுகின்றது.

அணிகொண்டதனால் பாடுபெற்று
நின்றதென்றது தன் தோற்றப் பொலிவால்
அமரரும் அஞ்சியோட அச்சேனை அமைந்

திருந்தமை கருதி.

அடல் = அடுதல். அடற்றகை என்றது கண்டோரை பொருது வெல்லும் தன்மை. பாடு = பெருமை.

இல் எனினும் என்றதனால் அடலும், ஆற்றலும் ஆகிய அவ் இரு நலங்களையும் உறுதியாகத் தானை உடைத்தாயிருக்கவேண்டும் என்பதாயிற்று. முன்னின்ற உம்மைகளிரண்டும் எண்ணும் பொருளன. பின்னது இழிவு சிறப்புமமை என்க.

படைத்தகை = படையின் தகுதி. அமைதாவது கண்டவ செவ்வும் வியப்ப



நோக்கத்தக்க உயர்ந்த காட்சி என்க. 2052

திருக்குறட் குமரேச வெண்பா.

மேல், பகையை வெல்லும் வகையறிந்து படை செல்ல வேண்டும் என்றார்; இதில்

பார்த்தவுடனே எவரும் வியந்துகொள்ளும்படி சிறந்த தோற்றப் பொலிவோடு அது விளங்கிநிற்கவேண்டும் என்கின்றார்.

பகைவரைக் கொல்லுந் தன்மையும், அவர் திரண்டு மேல்வந்தால் விலக்கும் வன்மையும், இல்லையாயினும் தன் தோற்றப் பொலிவால் படை பெருமை எய்தும் என்பதாம்.

யானை தேர் குதிரைகள் அணி அணியாக அமைந்து நிலவு, வில் வேல் வாள் முதலிய கருவிகளைக் கைகொண்டு பொருதிறனுடை வீரர்கள் பொலிந்திருக்க, கொடி துடைப தாகைகள் இடை இடையே புடை பரந்தோங்க, சல்லரி பேரிகை முதலிய பல்லியங்கள் செல்லென முழங்க, ஒரு சேனை சிறந்தெழுமாயின் அதன் எழுச்சியை நோக்கி எவரும் அஞ்சி அடங்குவர்; அதனால் மிஞ்சிய புகழோடு அது மேன்மை எய்தும் ஆதலால் " படைத் தகையால் தானை பாடு பெறும்" என்றார்.

யானைமிசை தேரின்மிசை இவுளிமிசை போய்வயவர் எ
திசிலே வேல்வயவரில் தானைகள் ஒராறும்
மூகிலேழுமென வன்பனை சயங்தக்கை சூழ வரவும்
வனோரா பாலர்அணிதோறும் வெயில் வாளிரவி
என்ன இருபாலும் வரவும் சேனைமுதல் நாதனொடு
மெய்த்துணைவர் தங்களொடு சென்றனன் இராச
திலகன்.
குடைநில வெறிக்க;இருபுறமுமசைபொற்கவரிகுளிர்
நிலவெறிக்க; எறிகைப் படைவெயிலெறிக்க;
அணிமுடியுடன் மணிப்பணிகள் பல வெயிலெறிக்க;
வுடனே, இடையிடை எடுதத கொடி
நிரையிருளெறிக்க; எழுதுகளிரு
ளெறிக்க, எழுபார், அடையவொர்இனத்தில் வலம்
வருதிகிரி ஒத்தனர்கள் அவனிபரெனைப் பலருமே.
எனவரும் இவற்றால் படைத் தகையின் பாடு
காணலாம்.

உள்ளேமிகுந்த ஆற்றலில்லாத சேனையும்
புறத்தே சிறந்த தோற்றப்
பொலிவுள்ளதாயின் ஏற்றம் பெறும் என்பது
இதில்' உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
கான் படையில் உணரப்படும்.

கதை.

கால் என்பவன் இராவணனுக்குச் சிற்றன்னையாகிய கும்பீநசியின் புதல்வன். அவனுக்குத் தம்பியென நின்று, எங்கும்

77ம அதிகாரம் படை

மாட்சி. 2053

வெம்பி விளை செய்தவன். எதிர்வதையெண்ணி நோக்காமல் எதையும் துணிந்து புரிந்தவன். தன் பெயரியல்புக்கேற்ப உயிர்களுக்கு இவன் இடரிழைத்து வந்தான். பின்பு தண்டக வனத்தில் சிறந்த நகரொன்றை யமைத்துக்கொண்டு பெரும்படையோடு இராவணனுக்கு உறுதுணையாக இவன் அமர்ந்திருந்தான். படைகளை அழகுசெய்வதிலும் அணிவகுப்பதிலும் இவன் மிகச் சிறந்தவன். அறுபது லட்சம் வீரர்கள் அமைந்து நிலவிய தன் சேனைக்குப் பதினைல்வரைத் தலைவராக

அமைத்துத் தானோர் முதல்வனாய் நின்று வானவர்களெல்லாரும் மறுகியோட வென்றான். இவனது சேனையின் எழுச்சியைக் கண்டால் எவரும் சித் தங்கலங்குவர். நால்வகைப் படைகளையும் சால்புற வகுத்து, வெண்கலத்தால் செய்யப்பட்ட சிறந்த இரதங்களில் சேனாதிபதிகளை நிறுத்தி, குடை கொடி பதாகைகள் இடைமிடைந்து விள ங்கவிளங்கி. பேரிகை படகம் இடக்கை உடுக்கை சல்லரி திமிலை குடமுழா முதலிய பல்வகை இயங்களும் செல்வகை முழக்கித் தன் சேனையை ஒருமுறை இவன் செலுத்திவந்ததை நோக்கி இந்திரனும் அஞ்சி இன்னுரையாடிப் பொன்னிறை யுதவி இவனைப்போகச்செய்தான். இவ்வாறு தன் படையின் புறக்காட்சி யால் பெருமாட்சிபெற்றுப் போரில் எவரும் நேரிலரென இவன் சீருடனிருந்து வந்தான். இங்ஙனமிருந்துவருங்கால் மூக்கிழந்த

சூர்ப்பநகை இராமனை நோக்கி " காற்றினிலும் கனலினிலும கடியானைக் கொடியானைக் கா னை உங்கள், கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன் " என்று கூறிவிட்டு ஓடிவந்து உற்றதை யுரைத்து இவன்முன் ஓங்கியழுதாள். இவன் சீறியெழுந்தான். தன் படையைச் செல்க என்று ஏவினன். எவவே

தேரினக் துவன்றின; சிறுகட் செம்முகக்

காரினம் நெருங்கின; காலிற் கால்வரு
தாரினங் குழுமின; கடையில் கூற்றன்ன
பேரினங் கடலெனப் பெயருங் காலையே.

(க)

மழுக்களும
எழுக்களும்

அயில்களும் வயிரவாள் களும்
தோமரத் தொகையும் ஈட்டியும்

புழுக்களும் முசண்டியுந் தண்டும் முத்தலைக்
கழுக்களும் உலக்கையும் கால பாசமும்

(உ) 2054 திருக்குறட் குமரேச வெண்பா.

குந்தமும் குலிசமும் கோலும் பாசமும்
அந்தமில் சாபமும் சாமும் ஆழியும்
வெந்தொழில் வலயமும் விளங்கு சங்கனு
பந்தமும் கப்பணப்படையும் பாசமும்.
(ரு) கொண்டு கொடி குடைகள் நிமிர்ந்துவிளங்க, காகளங்கள் ஒலிக்க, குடமுழா முதலிய வாத்தியங்கள் கடலென முழங்க, கண்டவரெவ ரும் கண்புதைத் தஞ்சும்படி படை மண்டி வந்தது. இதன் காட்சி யின்மாட்சியைக்கண்டு இராமனும்வியந்தான். முடிவில் அவ்வீரன் முடித்துத் தொலைத்தாலுயினுந் தன் கோற்றப் பொலிவ

ால் யாவருக்கும் அச்சம் விளைத்து முன்பு இப்படை ஏற்றம் பெற்றிருந்ததை எல்லாரும் போற்றிப் புகழ்ந்தார். அடற்ற கையும் ஆற்றலும் இல்லெனினும் தானை படைத்தகைபால் பாடுபெறும் என்பதை உலகம் இதன்கண் உணர்ந்து நின்றது.

யானை குடைகொடிதே ராதிநலங் கொண்டெழுந்த
சேனை பெறுமே சிறப்பு.

சிறந்த தோற்றப் பொலிவுடன் சேனை யமைந்து நிற்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

769 வீர உதயணன்றன்
மெய்ப்படைபோய் எங்குஞ்சீர்
கூரவென்ற தென்னே
குமரேசா—நேருஞ்
சிறுமையுஞ் செல்லாத் துனியும்

வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை.
(கூ)

இ—ள்.

குமரேசா! உதயணனுடைய படை எங்கும் உறுதியோடு நின்று என் பொருது வென்றது எனின், சிறுமையும், செல்லாத் துனியும், வறுமையும் இல்லாயின் படை வெல்லும் என்க.

இது, சிறந்த முறையில் வைத்துச் சேனையைப் பேணி வர வேண்டும் என்கின்றது. வீரஎன்றது வென்றியும் விறலும் ஒன்றுமுடையனாயிருந்தமை கருதி. தன் மன்னன்பால் என்றும் 77-ம் அதிகாரம்

படை மாட்சி. 2055

உண்மையோடு நின்றுஉழைத்து
வந்தமையான் மெய்ப்படைஎன நின்றது.

சென்ற இடமெல்லாம் வெற்றியே கொண்டு விளங்கி நின்றதாதலால் எங்கும் சீர்கூர ஸென்றதென்றும்.

சிறுமை = சுருக்கம். துனி = வெறுப்பு. “ துனியில் காட்சி முனிவர்” எனத் திருமுருகாற்றுப் படையிலும், “ துனிதீர் கொள்கை ” என ஐங்குறு நூற்றிலும், “ துனித்து நீ துளங்கல் வேண்டா ” எனச் சிந்தா மணியிலும் இது நின்றுணர்த்தும் பொருளை யுணர்க.

மேல், நோக்கியவுடனே வியக்கத்தக்க தோற்றப் பொலிவினைப் படை உடைத்தாயி ருக்கவேண்டும் என்றார்: இதில், கவலை யாதும் உறாவண்ணம் அதனைக்காத்து வரவேண்டும் என்கின்றார்.

சிறுமையும் வெறுப்பும் வறுமையும் இல்லையாயின் படை, பகையினை வெல்லும் என்பதாம்.

அழிவின்மை,அறைபோகாமை,வழிவ

ரவு, பொருதிறம், மறம், மானம், மாண்பு, தெளிவு முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே ஒருபடை உடைத்தாயிருப்பினும் சிறுமை துனிவறுமைகள் சேரப்பெறுமாயின் அது சிறந்து நின்று துணிந்து பொராது ஆதலால் இவை "இல்லாயின் படை வெல்லும்" என்றார்.

ஒருவன் படை எங்கும் வென்றுவர வேண்டுமாயின் அவன் அதற்கு என்ன செய்யவேண்டும் என்பாரை நோக்கி இஃது இயம்பியதாகக் காண்க.

உரிமையோடு நின்று படையினை அரசன் உவந்து பேணானாயின் அது சிறிது சிறிதாய்த் தேய்ந்து சுருங்கிப்போம்; தனக்கு அடங்கினவர்கள் தானே என்று படைவீரர்கட்குரிய மகளிர் முதலிய நுகர்வு நலங்களை விரும்புவனாயின் அவர் வெறுத்து விடுவர்; சிறந்த பதங்களையும் நிறைந்த செல்வங்களையும் அருமையுறி ந்து

உதவாமையின் அவர் இன்மை யாளராய் வன்மைகுன்றுவர் என்க. எனவே பேணாமை, பெண்விழைவு, உதவாமை என்னும் இவற்றால் சிறுமையும் துனியும் வறுமையும் படைக்கு உளவாம் என்பதாயிற்று. ஆகவே தனக்கே அன்று அழிவுபயக்குமாதலால் அத்தீது யாதும் இல்லாவண்ணம் செல்வ கலங்களையுதவி



வெண்பா.

அரசன் அதனை ஆதரித்து வரவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

பகைவர் அஞ்சிக் கலங்கி நடுங்கவேண்டுமாயின் செல்வ முதலிய கலங்களை புகவித் தன் சேனையைச் சிறந்த நிலையில் அரசன் வைத்திருக்கவேண்டும் என்பது கருத்து

வெல்போரும் நாடும் விழுப்பொருளும்

தண்ணடையும்

தொல்களிறும் மாவும்

கொடுத்தளித்தான்—பல்புரவி

நன்மணித் திண்டேர் நயவார்

தலைபனிப்பப்

பன்மணிப் பூணான் படைக்கு.

(வெண்பாமாலை.)

இறைமை அளி வறுமையுறுவண்ணம் தன் சேனையை ஓர் அரசன் உவந்து ஆதரித்து வந்தமை, அது பகைவரை வென்று அவனுக்கு உயர் நலந்தந்ததும் இதில் உணராலாகும்.

சிறப்பும் செல்வமும் தந்து தன்படையை ஒருவன் பேணி வருவனாயின் அவனுக்கு என்றும் வெற்றியை அது விளைத்து வரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உதாரணன்பால் உணரப்படும்.

# கதை.

உதயணன் என்பவன் குருகுலத் தலைவனாகிய சதானிகனுடைய புதல்வன். தாய் பெயர் மிருகாவதி. இவன் வத்தவ தேயத்து மன்னன். சூரியன் உதயமாகும்பொழுது இவன் பிறந்தானாதலால் உதயணன் எனப் பெரியோர் இவனை உரைசெய்தழைத்தார். அழகிலும் அறிவிலும் இவன் மிகவுயர்ந்தவன். ஆண்மையிற் சிறந்தவன். எத்தகைய நுண்ணிய குறியையும் ஒரே தொடையில் துளைத்துருவும்படி எய்யவல்லவன். போரில் இவனை நேரில் வந்து வெல்லவல்லவர் யாரும் இலர் என வீரர் புகழ விளங்கி நின்றவன். இசை பாடுதலிலும் வீணை வாசித்தலிலும் இவன் நிகரற்ற புலமையுடையவன். எத்தகைய மதத்த யானையையும் தன் இன்னிசையால் வணக்கிவிடுவன்.

" வென்றியும் விறலும் விழுத்தகு
விஞ்சையும்
ஒன்றிய நண்பும் ஊக்கமும் முயற்சியும்
ஒழுக்கந் தனித்த வுயர்வும் இழுக்கா
அமைச்சின் அமைதியும் அளியும் அறனும்

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2057

சிறப்புழிச் சிறத்தலும் சிறந்த
ஆற்றலும்
வெங்கோல் வெறுப்புஞ் செங்கோற்
செல்வமும்
வளமையும் வனப்பும் வண்மையும்
திறலும்
இளமையும் விச்சையும் என்றிவை
பிறவும்
இன்பக் கிழமையும் மன்பே ருலகினுள்
யாவர்க் காயினும் அடையுட
அடையினும்

வாரகவுள் யானை வணக்குதற் கியைந்த
வீணை விச்சையொடு விழுக்குடிப்
பிறவரிது:
விழுக்குடிப் பிறந்து, இவ் வீறொடு
விளங்கிய
வழுக்கா மரபின் வத்தவர் பெருமகன்
உதயணகுமரன்." என அறிஞர்
பலரால் போற்றப் பெற்றவன்.
போற்றலுடைய இம் மன்னன்
போர்வீரர்களைத் தன் னுயிர் போற்
பேணிவந்தான். இவனுடைய
படைவீரர்கள் சீறும்செல்வமும் பெற்றுப்
போரெனில் வீங்கும் எரிகுதோளொடு
மாரன் அனையராய் மருவியிருந்தார்.
இவன்பால் போன்புடையவர். ஒரு முறை
இவன் மீது பகைப்படை மிக்கதிரண்டு
கொதித்து வந்தது. அது பொழுது
ஐந்நூற்றுப்பத்தைந்து வீரர்கள் மாத்திரம்
அங்கு ஆயத்தமாயிருந்தனர். இச்சிறு படை

வெகுண்டெழுந்து, கடல்போல் வந்த அப்
பெரும் படையைப் பொருது கொன்று.
விரைவில் வென்றது. இதன் தலைமையும்
அன்று பொருது வென்ற நிலைமையும்
இதனடியில் வரும் அடிகளால
இனிதுணரலாகும்.

"ஐந்நூற் றைம்பத் தைவ ராடவர்
செந்நூற் பத்திச் சேடகக் கையர்;
மன்னிய மாநிர மறுவின்று மயங்கி
மின்னுமிழ்ந் தனபோல் வீசிய

வாளினர்;

காண நுனித்த வாணக் காப்பினர்;
பின்சென் மாந்தரை முன்சென்று

விலக்கி

ஆதன நாகரிற் சொரிதரு வெகுளியர்;
எற்றோர்த் தாக்கிக் கூற்றுறை

புலகினுள்

உறைகுவிராயிற் குறுகுமின்

விரைந்தெனச்

சிறைபழி புனலிற் சென்றுமேல்
நெருங்கி



வெண்பா.

வேலும் கணையமும் வீழினும் இமையார்;
வீரியத் தறுகணர்; விக்கிய கச்சையர்;
ஆர்வ லாளர்; ஆர்த்தன ரெறிய,
ஒன்றுமடற் பெண்ணைத் தீங்குலைத் தொடுத்த
விளைவுறு தீங்கனி வீழ்ச்சி யேய்ப்பத்
தலையிற் சாமரமொடு தலைபல புரளவும்;
வேகப் புள்ளின் வெவ்விசைக்கு உலந்த
நாகப் பிறழ்ச்சியிற் றேண்முதல் துணியவும்;
மடித்த செவ்வாய் அழுந்தக் கவ்விப்
பிடித்த வாளொடும் பிறழ்ந்தனர் கவிழவும்;
செயிர்த்த நோக்கினர் செங்கணுடைவர்
வியர்த்த நுதலினர் வீழ்ந்தனர் அவியவும்;
தலையுந் தடக்கையுந் தாளும் உடம்பும்
கொலையமை வில்லும் கூர்வாய்ச் சுரிகையும்

வேலும் ஈட்டியும் கோலும் குந்தமும்
சேடக வட்டமும் செந்நூற் பாரமும்
தண்டும் வாளும் தளையிடு பாசமும்
பொங்குமயிர்க் கிடுகும் புளகத் தண்டையும்
அரக்குவினைப் பலகையும் நிரைத்த
வெண்குடையும் கூந்தற பிச்சமும் கோணு
வட்டமும்
வாங்குகைத் சுறுகண் வாரணப் பிணவும்
பாலைச் செந்நிரை விரைவுபு முடுகி
அன்ன பிறவு முன்முன் உருட்டிக்
கைந்நவி லாளர் காடெறிந்து உழுத
செந்நில மருங்கிற் செஞ்சால் சிதைய
மாஞ்சுமர் இழிதரும் கடும்புனல் கடுப்பக்
குருதிச் செம்புனல் போர்க்களம் புதைப்ப"
எனவரும் இதில் மேற்குறித்த வீரர்
இயல்பையும், வெற்றித் திறனையும்
உய்த்துணர்ந்துகொள்க. இங்ஙனம்
வியத்தகுதிறலோடு என்றும் தன்
அரசனுக்கு உற்றதுணையாய் நின்று வெற்

நிலை விளைத்து இது விளங்கிவருங்கால் தன்னோடு மாறுகொண்டிருந்த பாஞ்சாலதேயத்து மன்னனாகிய ஆருணியென்பவனையும்



படையோடடங்க வென்று அரசர்க்கு உயர் நலந்தந்தது. இவ் வெற்றிக் கெல்லாம் சிறுமையும் துனியும் உறாமல் இதனை அரசன் பேணிவந்ததும், அவன்பால் இப்படைசெய்து வந்த அன்புமே காரணமாயிருந்தது ஆதலால் சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின் வெல்லும்படை என்னும் உண்மையை உலகம் அறிய இஃதுணர்த்தி நின்றது. விரிவைப் பெருங்கதையில் காண்க.

வெல்லும் படையும் வேலாதோழியும் வெங்கவலை
புல்லப் புரிந்து வரின்.

• கவலையு றாவண ணம் தன்படையை அரசன் காத்துவரவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

770 பண்டு திரிசிரா பட்டவுடன் தானையெலாங்
கொண்டொழி வென்னே குமரேசா—மண்டி
நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். (ம)

இ—ள்.

குமரேசா!
திரிசிரா ஒழிந்து போனவுடன் அங்கு நின்ற படைமுழுதும் என் உடைந்துபோயது எனின், நிலைமக்கள் சால உடைத்து எனினும், தலைமக்கள் இல்வழி தானை இல்லை என்க.

இது, படைத்தலைவரின் மேன்மை கூறுகின்றது.

தமக்குத் தலைவனாய் வந்த திரிசிரா இல்லை யென்றவுடனே பொருகளத்தை விட்டு,

மண்டியோடினர் சிலர்நெடுங் கடகரி வயிற்றில்

புண்டிறந்தமா முழையிடை வாளொடும் புகுவார்

தொண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவரீ யெம்மைக்

கண்டிலே னெனப்புகலெனக் கைதலைக் கொள்வார். என்றபடி அங்கு நிலையுடையாய் நின்ற படைமக்களனைவரும் நிலை குலைந்து போயினர் ஆதலால் தானையெலாம் ஒழிவுகொண்டது என்றும்.

பட்டவுடன் = இறந்தொழிந்த பொழுதே.

258

2060 திருக்குறட் குமரேச வெண்பா.

நிலைமக்கள் என்றது படைவீரர்களை;
பொருகளத்தில் நிலையுடையராய் நின்று பொ
ரவல்லவர் என்றவாறு.

தலைமக்கள் = படைத்தலைவர்கள்.
தலைமையுடையராய் நின்று இடைதெரிந்து
படையை ஏவுவோர் என்றவாறு. தானை
, உடைமை இன்மைகளுக்கு உரிமையாக
இதில் இடைபின்னின்றது. உம்மை
உடைமையின் உயர்வு தோன்ற நின்றது.

மேல், சிறுமையும் வறுமையும் உறாமல்
படையைப் பாதுகாக்க வேண்டும் என்றார்;
இதில், அதற்கு உறுதியாகத் தலைவரைத்
தந்துவைக்கவேண்டும் என்கின்றார்.

போர்க்களத்தில் நிலைத்துநின்று
பொரவல்ல வீரர்களை மிக வுடையதாயினும்
தனக்குத் தலைவர்கள் இல்லையாயின் தானை
நில்லாதென்பதாம்.

காலமும் இடமும் கருதியறிந்து
உறுதிபெறச் செலுத்திப் படைகளை

ஊக்கிநிற்றலும், பொருநிறத்தின் தரு
ப்பெறந்து உவந் துபசரித்தலும், உயர்நிலை
தருதலும், தலைவர்கள் இயல்பாம்; இவ்
வியல்பினையுடைய அவர் இலாரயின் தம்
போர்த்திறத்தைக கண்டு புகழ்ந்து
போற்றுவார் இல்லையென்றெண்ணிப்
போர்வீரர்கள் ஊக்கம் குன்றி ஒழிந்து
போவர்; போகவே அப்படை இருந்தும்
இலதாய் இழிந்துபடும் ஆகலால் "
தலைமகககள் இல்வழித் தானை இல்" என்றார்.

பாரதப்போரில் படைத்தலைவராய்
நின்ற வீடுமர் பின்பு இல்லையாயபோது
அத்தானையைக் குறித்து வில்லி சொல்லிய
கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

மதியிலா விசும்பும்; செவ்வி மணமிலா
மலரும்; தெண்ணீர்

நதியிலா நாடும்; தக்க நரம்பிலா நாத
யாழும்;

நிதியிலா வாழ்வும்; மிக்க நினைவிலா

நெஞ்சும்; வேத

விதியிலா மகமும்; போன்ற வீடுமன் இலாதசேனை.

தலைவன் இல்லாதவிடத்து ஒருதானை நில்லாது என்பதை இஃதுணர்த்தி நிற்கும் அழகையும், உவமையின் இயல்களையும் உய்த்துணர்ந்து கொள்க. மகம் = வேள்வி.

77-ம் அதிகாரம் படை மாட்சி.

2061

சக்கவீரர்களைத் தன்படைக்குத் தலைவராக அரசன் அமைத்து வைத்திருக்கவேண்டும் என்பது கருத்து.

படைவீரர்கள் பலர் திரண்டு நின்றாலும் தமக்குத் தலைவனில்லையாயின் போரில் அவர் நிலை பெற்று நில்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திரிசிராவின்கண் உணரப்படும்.

## கதை.

திரிசிரா என்பவன் ஓர் அரக்கர் குலத்தலைவன். யாதும் அஞ்சாத நெஞ்சினன்; சிறந்த போர்வீரன்; இவனது ஆண்மையையும் ஆற்றலையும் வியந்து இராவணன் தம்பியாகிய கான் தன் படைக்குத் தலைவனாக இவனை அமைத்துக்கொண்டான். இவனுடனிருந்த தூடணன் முதலிய சேனாதிபதிகள் பலரினும் விற்போரில் இவன் மிகச்சிறந்திருந்தான். நால்வகைச் சேனைகளையும் நடத்திப் பல போர் முனைகளிலும் வெற்றிபெற்று இவன் விளங்கி நின்றான். இவனைக் கண்டால் மதிகண்ட கடலெனப் படைகள் மகிழ்ந்தெழும்.

அக் கலைக் காளையன்; அளவி லாற்றலன்;

முத் தலைக் குரிசில்; பொன்முடியன்;

முக்கணுன்

கைக்கலைச் சூலமே யனைய காட்சியான்;

வைக்கலைப் பகழியான் மழைசெய் வில்லினன். எனக்கம்பர் இவனை மனங்களிர்ந்து சொல்லியுள்ளார். செல்லும் இடமெல்லாம் வெல்லும் வீரனாய் இவன் விளங்கிவருங்கால் சூர்ப்பணகை மூக்கிழந்து கரனை நோக்கிவந்து உற்றதை உரைத்த உடனே அவன் உருத்து எவத் தன் திரண்டசேனையைச் செலுத்தி வந்து இராமனேடு இவன் பெரும்போர் தொடங்கி எதிர்வந்த தேரும் வில்லும் சோஇழந்தான்.

வில்லிழந்தனன் என்னினும்
விழித்தவாண் முகத்தின்

எல்லிழந்திலன்; இழந்திலன் வெங்கதம்; இடிக்குஞ்

சொல்லிழந்திலன் ; தோள்வலி யிழந்திலன்; சொரியும்

கல்விழுந்திலன்; இழந்திலன் கறங்கெனத் திரிதல்.



என்றபடி திரிந்து முடிவில் முடிந்து போனான். இவன் போனவுடனே அங்கு நின்ற தானை முழுதும் சிறிதும் நில்லாமல் சிதறிப்போனது. தலைவனாகிய இவன் ஒழிந்துபோனதால் நிலையுடைய அப்படைவீரர்களெல்லாரும் நிலைகுலைந்து தொலைந்து போயினர் எனத் துடணன் விரைந்து வந்து வெதண்டு விளித்தான். விளித்தும் மீளாமல் அவர் விளிந்தே போயினர். நிலை மக்கள் சாலவுடைத்தெனினும் தானை தலைமக்கள் இல் வழி இல்லை என்பதை உலகம்காண இத்தானை அன்று உணர்த்தி நின்றது.

அச்சையா மெனும் பயமனத்

துண்டென வாழும்
    கொச்சை மாந்தரைக் கொல்வளை
மகளிருங் கூசார்
    நிச்சயம் எனுங் கவசந்தான் நிலைநிற்ப
தன்றி
    அச்சமென்னும் ஈதாருயிர்க் கருந்துணை
யாமோ. (க)
    செம்புகாட்டிய கண்ணிணை பாலெனத்
தெளிந்தீர்
    வெம்பு காட்டிடை நுழைதொறும்
வெரிநுறப்பாய்ந்த
    கொம்பு காட்டுதிரோ தடமார்பிடைக்
குளித்த
    அம்பு காட்டுதிரோ குலமங்கையர்க்
கம்மா. (உ)
    எக்கமிங்கிதன் மேலுமுண்டோ இகன்
மனிதன்
    ஆக்கும் வெஞ்சமத் தாண்மைபவ்

வமரார்க்கும் அரிதாத்
தாக்கரும் புயத் துங் குலத்தலைமகன்
றங்கை
மூக்கொடன்றியும் முதுகொடும்
போம்பழி முயன்றீர். (ங)
ஆரவாழ்க்கையின் வணிகரா
யமைதிரோ? அயில்வேல்
வீரவாட்கொடு வேன்மடுத் துழுதிரோ!
வெற்போர்த்
தீரவாழ்க்கையிற் றெவ்வரைச்
செருவிடைப் பறித்த
வீரவாட்கையிர்! எங்ஙனம் வாழ்திரோ
விளம்பீர். (ச)
இவை, திரிசிரா இல்லாதபொழுது
நில்லாதோடிய படையினைப்பார்த்துத்
தூடணன் சொன்னவை. வீரர்களது
உயர்வும்,
போரிற் புறங்காட்டும் கோழைகளிழிவும்,
தலை மகன் இல்லையாயின் நிலைமக்கள் நில்லார்

என்பதும், மேற்குறித்த வுண்மையும் இவற்றான் விளங்குதல் காண்க.

தலைவனிலாத் தானை தலையி
லுடல்போல்
நிலைபெறு தென்றுமே நேர்.

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2063

தனக்குச் சிறந்த தலைவனில்லையாயின் நிறைந்த படையும் நிலைத்து நில்லாதென் பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

சிறந்தமைந்த சேனையே அரசனுக்கு உயர்ந்த செல்வம். மூலப்படையே படைகள் எவற்றினும் முதன்மையாகும். வீரமில்லார் பலர் திரண்டு நின்றாலும் வீரமுள்ளா னொருவனுக்கு நிகராகார். வீரமாயில் வந்த

படையே என்றும் நேர்மையோடு நின்று வெல்லும்.
கூற்றுவன் கொதித்து வந்தாலும அவனோடும் எதிர்த்துப்போராடுதலே படைக்கழகாகும்.
ஆண்மையும மானமும் அமைதியுமுடைய படையே என்றும் மேன்மையடையும்.
எதிர்த்து வரும் படையின் இயல்பினை யறிந்து முன்னேறிச் செல்லும் படையே வெற்றியெய்தும். கருவிகளோடு குடைகொடி முதலிய எடுபிடிகளுமுடைய படையே பெருமையடையும். வறுமையும் சிறுமையும உறாதபடி படையினை வளர்த்துவர வேண்டும்.
உயர்ந்த படையாயினும் சிறந்த தலைவனொருவன் அதற்கு அமைந்து நிற்கவேண்டும்; இல்லையாயின் அஃது இழிந்துபடும்.

௭௭-வது படை மாட்சி முற்றிற்று.

---

# 78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

அஃதாவது சேனையினது வீரத்திறன். முன்பு படையின் நன்மை கூறினார்; நண்டு அதன் தன்மைகூறுகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

771 ஓடி யொழியினென ஒன்னலர்முன் வன்விபுலன்
கூடி மொழிந்தான் குமரேசா—பீடுடைய
என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

இ—ள்,

குமரேசா! இம் மண்ணுலகில் நிற்கவிரும்பினோர் என் முன் நில்லன்மின் என்று விபுலன் என் பகைவர்முன்

குமரேச வெண்பா.

கூறினான் எனின், தெவ்விர், என் ஐமுன்
நின்று கல் நின்றவர் பலர்; என்ஐ முன்
நில்லன்மின் என்க.

இது, போரிலெதிர்ந்த பகைவர்முன் ஒரு வீரனுரைத்து நின்ற ஆண்மையை உணர்த்துகின்றது.

ஒன்னலர்முன் விபுலன் கூடி மொழிந்தான் என்றது எதிர்த்துவந்த பகைவர்களை உடனே கொதித்துக்கொல்லாமல் உயிர் வாழ்க்கையில் விருப்பமுள்ளவர்கள் ஓடிப்போங்கள் எனத் தன் அருளும் ஆண்மையும் தோன்ற அவன் உரைத்து நின்றமை கருதி. ஒன்னலர் = பகைவர். பீடு = பெருமை.

என் ஐ = எனது தலைவன்; என்றது

அரசனை. அழகு 'முதலியவற்றை
புணர்த்திவரும் ஐ என்னும் சொல் ஈண்டு
அரசனைக் குறித்து நின்றது. ஐ அழகு
இடைச்சொல் கோழை அரசனொடு இருமல்
சாமி என்பது நிகண்டு. ஓரெழுத்தே ஒரு
சொல்லாய் நின்று பொருளுணர்த்தியதால்
இதனை ஓரெழுத் தொருமொழி என்பர்.

"ஒன்னார் முன் னிலை முருக்கிப்
பின்னின்று

நிரையொடு வரூஉம் என்ஐ ' '
என்பதிலும் இதனுண்மை காண்க.

நில்லன்மின் = நில்லாதொழியுங்கள்.
இஃது ஏவல்கண்ணி வந்த
எதிர்மறைப்பன்மை. மின்னீறு பலர்பால்
வினையொடுமுடிமே என்றது இயல்.
பகைவரை உணர்த்திவரும் தெவ்வர் என்பது
ஈற்றயல் திரிந்து விளியேற்று வந்தது.

கல் என்றது நடுகல்லினை. அஃதாவது
போரில் இறந்து பட்டவீரர்களுடைய பெயர்

நாட்டி நட்டியகல் என்க. கல் நின் றவர் பலர் என்றது தன் முன்னே நில்லாதொழியுமாறு தெவ் வர்க்குத் தெளிவுறுத்தும் என்பது கருதி.

பகைவீர் ! என் தலைவனெதிர்வந்து போர்புரிந்து நின்று பின்பு கல்லின் கண்ணே நின்றவர் பலர்; நீவிர் உயிரோடு வாழ வேண்டின் அவனெதிர் முனைந்து நிற்றலை ஒழிமின் என்பதாம்.

என்முன் நில்லன்மின் என்றது 'என் ஐ' முன் என்றது என்னை யெனின் ? தன் வினைத்திறத்தால் எய்தும் வெற்றி தன்

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.
2065

னையுடைய மன்னனுக்கே உரிமையாகுமாதலால் அவன்மேலேற் றிக் கூறினான் என்க.

ஒரு வீரன் போர்க்களத்துப்

புகுந்தவுடனே பகைவர் வந்து மூண்டு
மொய்ப்ப அவரை நோக்கி அந்தோ!
நம்போல் மூர்த்து வந்த பலர்
இறந்தொழிந்தார்; நீவிரும் ஒழிந்து
போவீர்; ஆதலால் உயிரோடு ஓடிப்போமின்
எனத்தன் ஆண்மை நலந்தோன்ற
உரைத்ததென இதனை உணர்ந்து கொள்க.
இங்ஙனம் வருவது புறப்பொருட்டுறையில்
நெடுமொழி வஞ்சி எனப்படும்.

ஒன்னார் படைகெழுமித்
தன்னாண்மை யெடுத்துரைத்தன்று.

என்றது இயல்.

மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டற்
குறுக லோம்புமின் தெவ்விர்! அவனே
நசைவர்க்கு மென்மை யல்லது பகைவர்
க்கு
இரும்பு பயன்படுக்கும் கருங்கைக்
கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொருஉம்

உலைக்கல் லன்ன வல்லாளன்னே.
எனவரும் புறப் பாட்டும் இங்கு
அறியத்தக்கது. தெவ்வர் தேயே நில்லா
தொழியும் வண்ணம் பிட்டனது ஆண்மையை
உரைத்து இதில் உணர்த்தி யிருத்தல்
காண்க.
ஆழியங் கழனி தன்னுள் அம்பொடு கணையம்
வித்திச் சூழ்சுடர்ப் பிணங்கள் மல்க
விளைத்தபின் றெழுதிப் பல்பேய்க்
கூழ்படுகுருதி நெய்யினிறைச்சிச்
சோறூட்டிவென்றி வீழ்தா வேட்டுநின்றார்
எய்துப வெகுளல் வேண்டா என்று பது
முகன் உரைத்ததுபோல் நல்ல வீரர்கள்
தம்மேல் எதிர்த்துவந்த பகைவர்மேல் உடனே
படைக்கலங்களைச் செலுத் தாமல் அவர்
உணர்ந்து விலகும் வண்ணம் தம்
அருந்திறலை உணர்த்தி யருள்வர் என்க.
படைச் செருக்கு இன்னதாம் என்பது
இதனால் உணரலாகும்.

பகைவரோடு எதிர்த்துப் போராடிப்
புறங்காட்டாமல் போர்க்களத்தே இறந்து
படுவாராயின் அவ் வீரர் பெயரை ஓர்
விழுமிய கல்லில் எழுதி நல்ல இடத்தில்

நிறுத்திப் பின்வரும்

2066 திருக்குறட் குமரேச

வெண்பா.

மக்கள் எல்லாரும்

வழிபடும்வண்ணம் வனப்புறவைப்பர். இதனால்
வீரக் குணத்தை வளர்த்து உலகம
உயருமாகலான் அரசன் முதல் அனைவரும்
தெய்வமாகப் பாவித்துச் செய்வன செய்து
இதனை

ஆதரித்து வருவர்.
காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
என ஆசிரியர் தொல்
காப்பியனாரும் புறத்திணைத் துறையாக

இதனை உரைத்துவைத்

துள்ளார்.

சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச்

சிறப்பெய்த

நீர்ப்படுத்தற்கு நிலை

குறித்துப்—போர்க்களத்து

மன்னட்ட வென்றி மறவோன் பெயர்

பொறித்துக்

கல்நட்டார் கல்சூழ் கடத்து.

(தொல்....கோள்.)

கல்லா இளையர் நீங்க நீங்கான்

வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்

கொல்புனற் சிறையின் விலங்கியோன்

கல்லே;

அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்

பொறித்து

இனி நட்டனரே கல்லும். (புறம்)

கல்லமர்க் கடந்த நாளுடை மறவர்

பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்

பிணி கூட்டிய பிறங்குநிலை நடுகல். (அகம்)

போரில் இறந்த வீரர்களை ஆர்வமொடு வழிபடுதலை இவை காட்டி நிற்றல் காண்க.

நினைந்து கல் நட்டி.

கல்லில் நிற்கவேண்டுமாயின் என்முன் நில்லுங்கள்; அல்லது உலகிலிருக்க வேண்டுமாயின் ஓடிப்போங்கள் என்று ஒரு வீரன் உரைக்குகின்ற ஆண்மையை இதில் உய்த்து நோக்குக.

போர்முகத்தில் பகைவர்வந்து மூண்டபொழுது நல்ல வீரன் தன் ஆண்மை நலந்தோன்ற நேர்நின்று வீரவாதங் கூறி அதன் மேல் அமர்செய்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை விபுலன்பால் உணரப்படும்;

கதை.

விபுலன் என்பவன் ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவக னுடைய தம்பி. அவனுடன் பிறந்தவன் அல்லன். அவனுடைய 78-ம் அதிகாரம் படைச் செருக்கு.
2067

தந்தையாகிய சச்சந்தனுக்குத் தனிந்த ஓர் காதலியிடத்துப் பிற ந்தவன். நல்ல போர் வீரன். வேல் வாள் முதலிய படைக்கலம் பயிற்சியில் இவன் மிகச் சிறந்தவன். குதிரை பேற்றத்தில் எவருந் தனக்கு எதிரில்லாதவன். எக்கைப மதக்க யானையையும் தன்வசமாக்கி நடத்துவதில் மிகக இசைபெற்றவன். வஞ்ச மற்றவன். தஞ்சமென்றவர்க்கு அஞ்சல் என்ற நன் செய்யும் நெஞ் சாக்கமுள்ளவன். தனக்கு அண்ணனாகிய சீவகனைக் கண்ணெனக் கருதிக் காத்துவந்தவன். போர் முகத்தில என்றும் நேர்முக மாய் நின்று பொருது

வென்றவர். இவனது ஆண்மை மேன்மை நேர்மை முதலிய குணங் களை யறிந்து மறுபுலத்தவரும் மகிழ்ந்து புகழ்ந்தார். இங்ஙனம சிறந்த திறலோடு இவன் விளங்கிவருங் கால் கட்டியங்காரனுக்கும் சீவகனு க்கும் போர் மூண்டது. இரு திறப்படைகளும் பொருகளம் புகுந் தன. போர் நிகழ்ந்தது. கந்தட்டன் நபுலன் பதுமுகன் மு தலிய தலைவரெல்லாரும் தத் தமக்குரிய படைகளைச் செலுத்தி முற்படையை யுடைத்து முனைந் தமர் புரிந்தார். மாற்றலர் படை எற்றெதிர் வருதலையறிந்து சீற்றமீக் கூர்ந்து ஓர் மதயானை மேலேறி இவனும் எதிர்சென் றான். வேல் வீரர் பலர் வெகுண்டுவந்து இவனை வளைத்தார். உடனே இவன் உடன்றுபொராமல் அவரை உறுத்து நோக்கினான். பகைவீர்! நீவிர் அனைவிரும ஒரு சேர அழிந்து கொலைவீர். என் முன் வந்து போரில் நேர்ந்தவர் பின்பு போய்த் தம்

ஊரிலிருந்தவர் இது வரையும் ஒருவரும் இலர். ஆதலால் ஓடி ஒழிமின் என உரைத்து நின்றான். மேல் வந்தவரோடு பின் முனைந்து பொருது இறந்தாரைக் கூறிச் சிறந்த வென்றியுடையனைப் உயர்த்து நின்றான். ஆண்மையே ஈடு இவன் சென்றாரைக் கதையும், வென்று மீண்டதையும் சீவகன் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டான். நல்ல வீரன் பகைவர் மூண்டபோதே முனைந்து கொல்லாமல் தன் ஆண்மை தோன்றச் சொல்லிப் பருளி அஞ்சினரை அகலச் செய்வன் என்பதற்கு அன்றிவன் உணர்த்தி நின்றானாதலால் "தெவ்விர் என் ஐமுன் நில் லன்மின்" என்னும் பொய்யாமொழியோடு இங்கு உணர நின்றான். இவனது வீரத்தையும், போர்த் திறத்தையும், நேர்மையையும் குறித்துத் தம் நூலில் திருத்தக்கதேவர் மிக வியந்து கூறியுள்ளார்.

வெண்பா.

மண்காவலை மகிழாதிவன் உடனே புகழொழிய
விண்காவலை மகிழ்வீர் நணிபுனிரோ வென விபுலன்
வண்காரிருள் மின்னேயுமிழ் நெய்வாயதோ
ரயில்வரள் கண்காவல கழுகோம்புவ தூபாரநனி
வினவும். (க) வீறின்மையின்
விலங்காமென மதவேழமும் எறியான்
எறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென்
றெறியான் மாறன்மையின் மறம்வாடுமென்
றிளையாரையும் எறியான் ஆறன்மையின்
முதியாரையும் எறியான் அயிலுழவன். (உ
ஒன்றாயினும் பலவாயினும் ஓரோச்சினுள்
எறிய வென்றுயின மதவேழமும
உளவோவென வினவிப்
பொன்றாழ்வரைப்புலிப்போத்தெனப் புனைதார் மிஞிறார்ப்பச்
சென்றுனிகல் களிறாயிரமிரியச் சினவேலோன். (ந)

இவனது இயல்பும், திறலும்,
பகைவர்முன் உரைசெய்து பொருத உயர்வும்

இவற்றுள் உணரலாகும்.

வந்த பகைவர் வகையறிந்து
மீளவலி
முந்துரைத்தல் வீர முறை.
நல்ல வீரரியல்பு இதனால் கூறப்பட்டது.

---

**772** புல்லியரை எள்ளிவிட்டேன் போர்மகதன்
மேற்போர்தான்
கொல்வேல் நபுலன்
குமரேசா—கல்லடர்ந்த
கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.
(உ)

இ—ள்.

குமரேசா! எதிர்த்தவரை
மெலியரென்றிகழ்ந்துவிட்டு மகதன் மீது என்
நபுலன் போனான் எனின், கானமுயல் எய்த
அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல்

இனிது என்க.

இது, வீரமில்லாதார்பலரை வெல்வதினும் வீரமுடைய ஒருவனோடு போரெதிர்தல் மேலாம் என்கின்றது.

கானம் = காடு. இது முயல் முதலிய விலங்கினங்கள் உறைதற்குரிய இடமாகுமாதலால் அதற்கு அடையாக வந்தது.

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2069

முயல் எய்த அம்பு = முயலை எய்துகொன்ற அம்பு. யானை பிழைத்த வேல் = யானையை எறிந்து தப்பிய வேல். யானை தப்பிப்போகும்படி தவறாக எறிந்த வேல் எனினுமாம். அல்லதாவது எறிந்து குறி தவறி விழுந்த வேல் என்க.

மேல், தன் ஆண்மை நலந்தோன்ற முன்சொல்லிப் பொருதல் வீரனுக்கு மேன்மையாம் என்றார்; இதில், அவன்

தகுதி யோடு அமராடுதற்குரிய அமைதி கூறுகின்றார்.

வனத்தகத்து முயலை வழுவாமல் எய்த அம்பை எந்தலினும், வெளிநின்ற யானையை எறிந்து வழுவிய வேலை ஏந்துதல் இனிதாம் என்பதாம்.

வலியும் வீரமும் இல்லாத பலரைப் பொருது வெல்லுதலி
னும், வலியுடைய ஒருவனோடு எதிர்ந்து
நிற்றல் சிறந்ததென்பார்
“முயல் எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது” என்றார். கருதியதைப் பிறிதொரு வகையில்வைத்து அணிநலந் தோன்ற அருளியிருக்கும் அழகை இதில் ஆய்ந்துகொள்க. இல்லுருபு குணவெல்லையைக் குறித்து நின்றது.

பல முயல்களைக் கொன்று நின்ற அம்பினை ஒருவனும், ஒரு யானைமேல் எறிந்து அதனைக் கொல்லமாட்டாமல் கூர் மழுங்கி

வீழ்ந்த வேலினை மற்றொருவனும் ஏந்தி நின்றுகொண்டு அவ்விருவருள்ளும் எதுசிறந்தது? என்று ஊருடைய ஒருவனிடம் வினவ அவன் நடுநின்று ஓர்ந்து உரைத்ததுபோல் இதன் நிலை உணர நின்றது; ஆயினும் ஒரு வீரன் போர்க்களம் புகுந்தவுடன் அங்கு எதிர்ந்து நின்றவர் விரைந்து உடைந்துபோக அவரை இகழ்ந்து விட்டுச் சிறந்த தலைவனொருவன்மேல் அவன் சிந்தித்துச் சென்றதாக இதனைச் சிந்தித்துக்கொள்க.

தமக்குச் சிறுமையுறுவதை அரிய காரியங்களையே பெரியோர் கருதி மேற்கொள்வர் என்றவாறு.

இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினிற் றீதோ
அரிமாப் பிழைப்பெய்த கோல். எனவரும் இதில்,

அடிகளது கருத்தும் சொல்லும் கலந்திருத்தல் காண்க.

வெண்பா.

அரிகளோடு கரிகள் அருவித்திரிவேன் என்றபடி நல்ல போர்வீரர்கள் புல்லியார்மேற் செல்லாது சிறந்த தலைவரையே போரில் தெரிந்து செல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நபுலன்பால் உணரப்படும்.

## கதை.

நபுலன் என்பவன் எமாங்கத நாட்டு மன்னனாகிய சச்சந்தனுடைய உரிமைக்கிழத்தியின் அருமைப் புதல்வன். விபுலனுக்கு முத்தவன். போராற்றலிற் பேர் பெற்றவன். பல்வகைப் படைக் கலங்களிலும் நல்ல பயிற்சியுள்ளவன். எதனையும் நுணுகி நோக்கும் நுண்மதியாளன். இவனது

அறிவு ஆண்மைகளை யறிந்து சிவகன் இவன்பால் பேரன்பு செய்தான். அம மன்னனுக்கு இன்னுயிர்த்துணைவனாய் நின்று பலவகையிலும் இதஞ்செய்து வந்தான். வருங்கால் பழம் பகைவனாகிய கட்டியங்காரன் பெரும் படையோடு வந்து போர் தொடங்கினான். அதில் இவன் புகுந்து பொருதான். இவன் பொருவலி கண்டஞ்சி எதிர்நின்ற பகைவர் பலர் புறங்காட்டி ஓடினார். அவர் போக்கை நோக்கி இப்புல்லியரோடும் பொரும்படி நேர்ந்ததே என்று உள்ளம் நாணி, தான் ஊர்ந்துவந்த ஒள்ளிய புரவியைப் பிறிதொரு திசையில் செலுத்தி அங்கு ஓர் மதக்கயானைமேல் கொதித்துநின்ற மகத மன்னனைக் கண்டு மகிழ்ச்சிமீக் கொண்டு தன் கூரிய வேலைச் சுழற்றி நேருறத் தோன்றிப் போரினை மூட்டினான். இவனது விழுமிய ஆடலை நோக்கி அவனுந் திகைத்துத் தன் விழிகளை யிமைத்தான். விழித்த கண்ணை

பழித்திமைத்தமைபால் அவனை வெல்லுதலும் தன் வீரத்திற்கு இழுக்காம் என்று தள்ளிவிட்டுத் தாவிப்போய் வேறொரு சேனை நல்லவனை வளைத்துத் தன் வேலை உயர்த்தினான். அவனும் படையிழந்து நின்றதால் மிக இகழ்ந்து சிறிய வீரனொருவனைத் தேடிச் சென்றான். உறுதியில்லார் பலரை வெல்வதினும் உறுதியுடைய ஒருவனோடு பொருதல் நல்லதென்று கருதி நின்று அன்று இவன் களத்தில் வென்றான். கானமுயல் எய்த அம்பினில் யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான். இவன் வீரப் பெருமை 78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2071

யும், அன்று போர்செய்த அருமையும் இ கனடியில் வரும் சீவக சிந்தாமணிப் பாக்களிலும் சிறிது பார்க்கலாம்,

பொன்னிறக் கோங்கம் பொற்பூக்
குன்றெனப் பொலிந்தமேனி நன்னிற
மாவின்மேலான் நலங்கொள்தார் நபுலன்
என்பான் . மின்னிற வெஃகம்ஏந்தி வீங்குநீர்
மகதையார்கோன்                    கொன்னிறக்
களிற்றின்நெற்றிக் கூந்தன்மாய்
பாய்வித்தானே.(1

எக்கல்குன் கங்கள் வெய்ப இமைத்திட
எறிதலோம்பி காக்கக வழுவன்காணி நக்குநீ
அஞ்சல் கண்டாய்
காய்ந்திலன் என்றுவல்லே கவினமாக்
குன்றிற் பொங்கிப் பாய்ந்ததோர்
புலியின்மற்றோர் பகட்டின்மேற்
பாய்வித்தானே.(2 கைப்படை
யொன்றுமின்றிக் கைகொட்டிக் குமரன்
ஆர்ப்ப வெய்ப்படை வீழ்ந்தகாணி வேழமும்
எறிதல் செல்லான்
மைப்படை நெடுங்கண்மாலை மகளிர்தம் வனப்பிற் சூழ்ந்து
கைப்படு பொருளிலாதான் காமம்போற் கானை மீண்டான்.

(3)

*மாவின் மேலாகிய நபுலன், எறிதல்*
*ஓய்பி நாணி மீண்டான் எனக் கூட்டி நோக்குக.*
*இவன், மெலியரை யெல்லாம் போக விட்டுப்*
*போரில் ஓர் வலியன்மேற் சென்றதும்,*
*அவன்விழி இமைக்கமையால் இவன்*
*வேலெறியாமல் வேறொருவன்மேற் பாய்ந்த*
*தும், அங்கும் தன் ஆண்மை*
*தோன்றச்செய்து அப்பாற் சென்றதும்,*
*மூபலை யெய்யாமல் ஒருவன் யானையை*
*எறிதல்போல் போரில் நின்ற இவன் வீர*
*மேன்மையை விளைத்ததும் பிறவும் இவற்றுள்*
*விளங்குதல் காண்க.*

வீரமிலார் பல்லோரை
வெல்லலினும் வீரனோர்
போரேதிர்ந்து போதல் புகழ்.

*நல்லவீரர் புல்லியர்மேற் செல்லார்*
*என்பது இதனால் கூறப் பட்டது.*

---

773 நின்டோன் இராவணன்போர்
தேய்ந்ததுகண் டேனிரக்கம்
கொண்டான் இராமன்
குமரேசா—கொண்டுநின்ற
போராண்மை யென்ப தறுகணொன்
றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.
(௩.) 2072 திருக்குறட் குமரேச
வெண்பா.

இ—ள்.

குமரேசா ! இராவணன் படையழிந்து நிலைதளர்ந்த வுடனே இராமன் அவன் பொருதலை விட்டு அருள் செய்து நின்றான் எனின், தறுகண் போராண்மை என்ப; ஒன்று உற்றக்கால் ஊராண்மை மற்று அதன் எஃகு என்க.

இது, வீரனுக்கு உரியதோர் நீர்மை கூறுகின்றது.

தறுகண் என்றது இங்கு வீரத்தன்மையை. அஃதாவது இரக்கமுறாமல் போரில் பகைவரை இறந்துபட நூறும் வன்மை என்க. என்ப என்பது பின்னும் இயைந்து நின்றது.

ஊராண்மை = உபகாரியாம் இயல்பு. அஃதாவது அடுத்தவர் வருந்தக்கண்டால் உடனே ஆதரித்துதவுந் தன்மை. "உட்கும் நாணும் ஊராண் ஒழுக்கும்" எனவும், "உட்குடையாள் ஊராண் இயல்பினள்" எனவும், வருவனவற்றுள் இஃது உணர்த்திநிற்கும பொருளையுணர்க. எஃகு = கூர்மை, ஈண்டு ஆண் மையின் மேன்மைமேல் நின்றது.

மேல், தகுந்த வீரரோடு பொருதலே ஒருவனுக்குச் சிறந்ததாம் என்றார்; அங்ஙனம் பொருங்கால் அவன் உணர்ந்துகொள்ளவேண்டிய ஓர் உண்மையை

இதில் உணர்த்துகின்றார்.

பகைவர்மேல் போரில் இரக்கமின்றிச் செய்யும் தறுகண்மையைப் பெரிய ஆண்தன்மை என்பர்; அவர்க்கு ஏதேனும் தாழ்வு வந்ததாயின் உடனே இரங்கி உபகரித்தலை அதற்குக் கூர்மை என்று மேலோர் சொல்லுவர் என்பதாம்.

போர்முகத்தில் சிறிதும் கண்ணோடாமல் பகைவரைக் கொன்று தொலைத்தல் வீரர்க்குத் தகுதியே ஆயினும் எதிரி யாதேனும் ஓரிடையூறெய்தித் தளர்ந்துவிடின் உடனே கண்ணோட்டஞ் செய்து அவனுக்கு வேண்டிய இதங்களை அவர் உதவவேண்டும் என்றவாறு. இவ்வூராண்மை அவரது ஆண்மைத்திறத்தை மிக விளக்கி மேன்மைப்படுத்தும் ஆதலால் இதனை அதற்கு எஃகு என்றார். போரில் படை முதலியன இழந்து நிலைகுலைந்தவர்க்கு இங்ஙனம் உபகரித்தலைப் புறத்துறையுள் தழிஞ்சி என்பர். ..78-ம் அதிகாரம்

அழியுகர் புறக்கொடை அயில்வாள் ஓச்சாக்
கழிதறு கண்மைக் தழிஞ்சி. என்றது இலக்கணவிளக்கம்.
தம்மோடு செயிர்த்து அமராடுவார் தளர்ந்துவிடுவாராயின் சிறந்த போர்வீரர் உடனே போரை நிறுத்தி இன்றுபோய் உன் உடம்பைத் தேற்றிக்கொண்டு உறுதியோடு நாளை வருக என்று உதவிவிடுவர் என்க.
அன்று போர்புரி சேனையின்பதி யான வீரனை நீ
இன்று போயினி நாளைவா என இனிதியம்பினனால்
வென்றி கூர்வரி வின்மையான் அடல் வெவ்வரக்கரை முன்
கொன்ற காளையை யொத்தபேரிசை

கொண்ட ஆண்மையினன்.

கன்னன் போரில் தளர்ந்தபொழுது அருச்சுனன் கண்ணோடி இன்றுபோய் நாளைவாவாமஎன்று ஊராண்மைசெய்துய்த்த வுண்மையை யிஃதுணர்த்தி நிற்றல் காண்க.

தன்னோடு எதிர்ந்து போர்செய்யும் பகைவன் தளர்ந்துவிடுவனாயின் அதுபொழுது அவனுக்கு இரங்கி நல்ல குலவீரன் இதம்புரிந்து விடுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

## கதை.

இராமன் இலங்கையை முற்றுகைசெய்து வீரநிலையோடு நிற்றலையறிந்து இராவணன் பெரும்படையுடன் விரைந்தெழுந்து வந்து வெம்போர் தொடங்கினன். சுக்கிரீவன் அங்கதன் அனுமான் முதலிய சிறந்த வீரர்கள் பலரும் சேனையோடு திரண்டு சென்று

செறுத்தமாடினர். நேர்ந்தவரெல்லாரும் நிலைகுலைந்து போக நெருக்கி வென்று இறுதியில்வந்து இராமனை யெதிர்ந்தான். அவனது நால்வகைச் சேனைகளும் கடல்போல் உடன் வளைந்து இவன்மேல் அடலமர் செய்தன. அவற்றையெல்லாம் தன் வில் வலியால் விண்ணுலகேற்றினன். மேலும் சிறந்த வீரர் பலர் சினந்தெதிர்த்தனர்.

தேர் இழந்து; வெஞ்சிலைகளும் இழந்து; செந்தறுகட்
கார் இழந்து; வெங்கலினமாக் கால்களும் இழந்து
சூர் இழந்து; வன்கவசமும் இழந்து; துப்பிழந்து;
தார் இழந்து; பின் இழந்தனர் நிருதர் தந்தலைகள்.

என்றபடி இலையிழுந்த கொலைகளானபின்
இராவணன் கொதிக்க வில்வளைத்து
இவன்மேல் கொடுஞ்சமர் விளைத்தான்.
அவன் எய்தவற்றையெல்லாம் நொய்தினில்
விலக்கி வெய்துயிர்க்கயா இவன் வில்வலி
காட்டினன்.

ஆர்ப்படங்கின வாயெலாம்;
அழற்கொழுந் தொழுகப்
பார்ப்படங்கின கண்ணெலாம்;
பலவகைப் படைகள்
தூர்ப்படங்கின கையெலாம்;
தூளியின் படலை
போர்ப்படங்கின உலகெலாம்;
முரசெலாம் போன.

இங்ஙனம் உரனெலாம் போயும் அவன்
ஊக்கம் போகாமல் மேலும் உடன்று
பொருதான். அவன் எரிவந்த கேரை உ

ஓட த்து, எடுத்து நின்றவில்லைத் துணித்து,
அடுத்து நின்ற அனைத்தையும் இவன்
அழித்தான். அதனால் அவன் உடல்
தளர்ந்தான்; உள்ளம் நாணினான். ஒன்றும்
ஆற்றாமல் ஒடுங்கி நின்றான். அந்நிலையைக்
கண்டு இவன் நெஞ்சம் இரங்கினான்.
உறுதிபல கூறி அவனை உபசரித்துவிட்டான்.
பகைவன் நிலைகுலைந்த போது
கொலைபுரிந்துவிடாமல் இத்தலையளி
செய்தானே என்று இவ் வில்லியின் வீ
ரமேன்மையை எல்லாரும் அன்று எத்திப்
புகழ்ந்தார். போராண்மை என்பது இரண்டு;
ஒன்று உற்றபோது ஊராண்மை மற்றது
எஃது என்னும் உண்மையை உலகம் காண
இவன் உணர்த்தினின்றான். போரில் தன்
பகைவன் தளர்வுற்றபொழுது இவன்
ஊராண்மை செய்துய்த்த அருமையைக்
கம்பர் மிக அழகுபெற அருளியுள்ளார்.

ரம்.

சிறிது இதனடியில் காட்டு

போரில் இராவணனுற்று நின்ற நிலை.

அறங்கடந்தவர் செயலிதென்று உலகெலாம் ஆர்ப்ப
நிறங்கரிந்திட நிலம்விரல் கிளைத்திட நின்றான்

இறங்கு கண்ணினன் எல்லழி முகத்தினன் தலையன்
வெறுங்கை நாற்றினன் விழுதுடை ஆலன்ன மெய்யன்.

(க)

இராமனது ஊராண்மை.

நின்றவன் நிலைநோக்கிய நெடுந்தகை இவனைக்
கொன்றல் உன்னிலன்; வெறுங்கைநின்றான் எனக்கொள்ளா

இன்றவித்ததுபோலும் உன்நிமை என்று இசையோடு
ஒன்றவந்தன வாசகம் இனையன உரைத்தான்.
(உ)

78-ம் அதிகாரம் படைச்

செருக்கு. 2075

அறத்தினாலன்றி அமரர்க்கும்
அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிதென்பது மனத்திடை
வலித்தி
பறத்தி நின்னெடும் பதிபுகக்
கிளையொடும் பாவி
இறத்தி யானது நினைக்கிலென்
தனிமைகண் டிரங்கி. (ந)
ஆளையா உனக்கமைந்தன மாருதம்
அறைந்த
பூளையாயின கண்டனை இன்றுபோய்ப்
போர்க்கு
நாளைவா என நல்கினன் நாகிளங்

கமுகின்

வாளை தாவுறு கோசலை நாடுடை

வள்ளல். (௪)

இராவணன் நிலைகுலைந்து

நின்றதன்மையும், போரில்

பேராண்மை செய்துவந்த இராமன் அவன்

தளர்ந்ததைக் கண்ட

வுடனே ஊராண்மையாளனாய் உறுதி

கூறி அவனை உவந்து விட்ட வுண்மையும்

இவற்றுள் ஒளிர் தலை உய்த்து நோக்குக.

நேர்போருத வீரன் நிலைதளர்ந்தால்

அக்கணமே

போர்தணிவார் பூண்பர் புகழ்.

பகைவன் தளர்ந்தபொழுது எதிர்ந்த

வீரன் இரங்கியருள வேண்டும் என்பது

இதனால் கூறப்பட்டது.

---

774 பண்டேன் இராவணிமெய் பட்டகணை

தொட்டெடுத்துக்

கொண்டோடிவந்தான்
குமரேசா—கொண்டுவந்த
கைவேல் களிற்றொடு போக்கி
வருபவன்
மெய்வேல் பறியா நகும்.
(ச)

இ—ள்.

குமரேசா! கையிலிருந்த படைக்கலங்களெல்லாம் இழந்துபோன பொழுதும் தன் உடம்பில் செறிந்த பகழிகளைப் பறித்து இந்திரசித்து என் உவந்து பொருதான் எனின், கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும் என்க.

இது, போரில் ஆடல் செய்யும் வீரன் திறங்கூறுகின்றது.

களிறு என்றது மதயானையை. போர்முகத்தில் ஆண்மையோடு நின்று பொரவல்லதாதலால் வீரன் வேலுக்கு அதனை

இல க்காக வைத்தார். போக்கி = உயிர் போகுமாறு எறிந்து.

260



வெண்பா.

மெய்வேல் = உடம்பில் அழுந்தி நின்ற வேல். தலைமைபற்றி வேல் என்றாராயினும் அம்பு முதலியனவும் அமைத்துக்கொள்க.

பறியா நகும் = பறித்து மகிழும். பறியா என்பது செய்யா என்னும் வாய்ப்பாட்டு இறந்தகால வினையெச்சம்.

மேல், போராண்மையோடு ஊராண்மையும் வீரனுக்கு அமைந்திருக்கவேண்டும் என்றார்; இதில், போரில் நேரும ஊறினுக்கு அஞ்சாமல் ஊக்கிவெல்லு தல் அவனுக்கு உரிமையாம் என்கின்றார்.

தன் கையிலிருந்த வேலை எதிர்த்துவந்த யானைமேல் எறிந்து விட்டு மேலும் போர்நாடி

வருகின்றவன் தன் மார்பில் பட்டுநின்ற வேலைக்கண்டு பறித்து மகிழ்ந்து கொள்வன் என்பதாம்.

ஒரு வீரன் தன் கையிலிருந்த வேலை ஓர் மதயானைமேல் எறிந்து அதனைக்கொன்று வீழ்த்தினன்; உடனே பகைவீரர்பலர் வந்து அவன்மேல் படைகளை வீசினர்; அங்ஙனம் வீசுங்கால் கையில் ஒன்றுமில்லாமல் வீரவெறியோடு மேலேறிவருகின்ற அவன் தன் உடம்பிற் பாய்ந்து நின்ற வேலைக்கண்டு பறித்து உவகை மீக்கொண்டு அவரை உருத்து வென்றதுகலால் "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் மெய்வேல் பறியா நகும்" என்றார். இங்ஙனம் வீரர் ஆற்றும் போராற்றலைப் போர்த்துறையுள் நூழிலாட்டு என்பர்.

நோலர் பணிப்ப நெஞ்சிடைக் குளித்த

கூரயில் பறித்துக் கொண்ட

நூழிலும். என்றது இயல்.

களங்கழுமிய படையிரிய
உளங் கழிக்கவேல்
பறித்தோச்சின்று. எனவும்,

மொய்யகத்து மன்னர் முரணினி
என்னுங்கொல்
கையகத்துக் கொண்டான்
கழல்விடலை—வெய்ய
விடுசுடர் சிந்தி விளையகலம்
போழ்ந்த
படுசுடர் எஃகம் பறித்து. எனவும்
வருவன காண்க.

தம் உடலழிய நேர்ந்தாலும் நல்ல படைவீரர்கள் தம் உள்ளம் கலங்காமல் நின்று போர்முகத்தில் பகைவரைப் பொருது வெல்லவேண்டும் என்பதை உறுதி பெற இஃது உணர்த்திய தென்க. இதனால் வீரர் நிலை விளங்கலாகும்.

78-ம் அதிகாரம் படைச்செருக்கு. 2077

போரில் நேரும் ஊறினுக்கஞ்சாது பகைவரை உருத்து வெல்வோரே படைச்சிறப்பிற்கு உரியாராவர் என்பது கருத்து.

பூபர் தங்கள் புயங்களும் மார்பமும்
சாபவெங்கணை தைத்தது சோரியால்
தீபமென்னவும் செம்மலர்க் கோடுடை
நீபமென்னவும் நின்றனர் ஆண்மையால். (க)

பற்றி நின்றொருவன் படைவாள் எதிர்
உற்றவன் தலை சிந்திட ஓச்சினான்
அற்ற தன்தலை கொண்டவனுந் தனைச்
செற்றவன்தலை சிந்திட வீசினான். (உ)

கையில்வாளி தொலைந்தபின் காய்ந்து தம்
மெய்யில் வாளிகள் வாங்கிவில்

வாங்கினார்

பொய்யிலா மொழிப் பூபதி சேனையின்

மையில் ஆண்மையினார் சிலர் மன்னரே.

(ரு.) ஊறஞ்சாது நின்று பாரத வீரர் செய்த போர்நிலையை இவை உணர்த்தி நிற்றல் காண்க.

உற்றதுணை ஒழிந்துபோயினும் நல்ல வீரர்கள் உள்ளங் கலங் கார் என்பதும், தம் உடம்பில் பட்டு நின்ற படைக்கலங்களைப் பறித்துக்கொண்டு ப கைமேற் செயிர்த்துச் செல்வர் என்பதும், இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை இந்திரசித்தன்பால் உணரப்படும்.

கதை.

இந்திரசித்து பொருகளம் புகுந்து இலக்குவன் முதலிய போர்வீரர் எவர்க்கும் பேரிடர் விளைத்துப்போய் இறுதியில்வந்து உறுதியோடு நின்று உடன்று பொருதான். இவனது போர் வலியைப்

பொறுக்கமாட்டாமல் வானர வீரர்களெல்லாரும் மறுகி நின்றனர். அது பொழுது இலக்குவன் வந்து எதிர்ந்து அமராடினன். ஒருவரை ஒருவர் அடுதல் கருதி இருவரும் தறுகண்மை யோடு நின்று நெடுநேரம் கொடுஞ்சமர் விளைத்தார். செய்தவத்தர் லெய்திய தெய்வப் படைகளனைத்தையும் எய்திளைத்தார். முடி

2078 திருக்குறட் குமரேச வெண்பா.

வில் அற்றம் நோக்கி இவனது மார்பின் கவசத்தையும், தேரின் சாரதியையும் சேர அழித்துப் பல்லாயிரம் பகழிகளை இலக்குவன் இவன்மேல் செல்லலைச் சிந்தினன். வடிக்கணைகள் ஊடுருவிச் சென்ற புழைகளிலிருந்து குருதிநீர் சோர உடல் முழுவதும் வெளியிடமின்றி

நிலைகுலைந்திருந்தும் இவன் உள்ளங் கலங்காமல் நின்று சாரதியற்ற தன் தேரினைக் காலே தூண்டிக்கொண்டு கையில கப்பட்ட கருவிகளையெல்லாம் மெய்யிலிருந்து பறித்து வீரவெறியோடு மேவலர் மேல் வீசி யெறிந்தான். இவன் அன்று செய்த அருஞ்சமரையும், ஆற்றலையும் கம்பர் கவிகளில் நன்கு காணலாம். இங்குச் சிறிது காட்டுதும்.

துள்ளுபாய் புரவித் தேரும் முறைமுறை
காலே தூண்டி அள்ளினன் பறிக்கும்
தன்மேர் ஆகமே ஆவமாக வன்னல்மேல் அனுமன்
றன்மேல் மற்றையோர் மற்றிண்டோள்மேல்
உள்ளுறப் பகழி தூவி ஆர்த்தனன் எவரும்
உட்க. (க) வீரமென்
பார்கட்கெல்லாம் முன்னிற்கும் வீரர் வீரன்
பேரமென்பார்களாகும் பெற்றியிப்
பெற்றித்தாமே ஆமென் றுரைக்கற்பாலார்

துஞ்சும்போது ணர்விற் சோரார் தீரரென்
றமார்செப்பிச் சிறந்தினர் தெய்வப் பொற்பூ.
(உ) எய்த வன் பகழி எல்லாம் பறித்தவன்
என்மேல் எய்யும் கைதடுமாறாது; உள்ளம்
உயிர் இனங்கலங்காது; யாக்கை மொய்கணை
கோடி கோடி மொய்க்கவும்
இளைப்பொன்றில்லான் ஐயனும் இவனோடு
எஞ்சும் ஆண்தொழில் ஆற்றலென்றான்.

இலனது வீரநிலையும், மெய்யிலுள்ளன பறித்து மேற்செய்த தீரமும், இவன் போராண்மையை வியந்து இலக்குவன் புகழ்ந்து போற்றி உவந்ததும், பிறவும் இவற்றுள் ஒளிர்தல் காண்க. படை யிழந்து உடல்முழுதும் கணைகள் பாய்ந்து நிலைகுலைந்தபோதும் நல்ல வீரர்கள் நிலைத்து நின்று பொருவர் என்பதை இவன் உணர்த்தி நின்றான். கைவேல் போக்கிவருபவன் மெய்வேல் பறித்து ஏதும் என்னும்

உண்மையை உலகம் இவன்பால் உணர்க்கின்றன. இவன் போர்நிலை எவரும் போற்றத் தக்கது.

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2079

கைப்படைதீர்ந் தாலும் கலங்கார் உயர்வீரர்
மெய்ப்படையீர்த் தார்ப்பர் விரைந்து.

இறுதிவரினும் வீரர் உறுதி குன்றாதவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

775 வேல்வீச வாளாக்கன் மேலோடி யேனிலையோன்
கோலமுற எற்றான் குமரேசா—மேலே
விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி

ஞோட்டன்றோ வன்க ணவர்க்கு.
(ந)

இ—ள்.

குமரேசா ! இராவணன் வேலை வீசியபொழுது அதற்கு அஞ்சி இமையாமல் இலக்குவன் வன் அதன்மேல் ஆர்த்துச் சென்றான் எனின், விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்து இமைப்பின் வன்கணவர்க்கு ஓட்டு அன்றோ என்க.

இது, போரில் வீரர் யாதும் புறங்கொடார் என்கின்றது.

வன்கணவர் என்றது வீரர்களை. யாரும் அஞ்சுமாறு போரில் கண்ணோடாது நின்று கொல்லவல்லவராதலால் இங்ஙனம் சொல்ல நின்றனர். ஓட்டு அன்றோ = தோல்வியல்லவோ. ஆம் என்றபடி. மாசற்ற மேலோர் ஒரு சிறு மாசுறினும் அதைப் பெரிதாக எண்ணிப் பேதுறுதல் போல், வீரர் போரில் விழித்த கண் இமைத்தாலும் வெருவி

மீண்டதாகக் கருதிப் பெரிதும் நாணுவர் எ
ன்றவாறு.

மேல், உடல்முழுதும் வேல்கள் பாய்ந்தாலும் நல்ல வீரன் உள்ளங் கலங்கான் என்றார்; இதில், எதிர்த்து நோக்கிய கண் இமைத்தாலும இழுக்கமென்று அவன் எண்ணுவன் என்கின்றார்.

பகைவரைச் செயிர்த்து நோக்கிய கண் அவர் வேல்கொண் டெறிய அதுகண்டு அழித்து இமைக்குமாயின் அதுவும் வீரர்க் குத் தோல்வியாம் என்பதாம்.

இமைப்பின் என்றது அஃது அங்ஙனம் இமையாது என்பது படநின்றது. வீரர்களுடைய உடலுறுப்புக்கள் கூடப் போர்முகத்



தில் யாதும் அஞ்சா என்னும் உண்மையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

ஆகள் முதலியன கண்ணில்
விழாவண்ணம் செய்யும் இயற்கை
இமைப்பினை விலக்குதற்கு "வேல் எறிய
இமைப்பின்" என்றார். பகைவரை வெகுண்டு
நோக்கிய ஒரு வீரனது கண், அவர்
வேலெறிந்தவுடன் இமைக்குமாயின்
அச்சத்தால் அது செய்ததாகக் கருதப்படும்.
படவே தான் அஞ்சிப் புறங்கொடுத்ததாக
நாணி ஓர் மயிர் நீப்பினும் உயிர் வாழாத
கவரிமான்போல் அவன் உயிர் நீப்பன் என்க.

எனக்குப் பயப்படுவாயா?
பயப்படமாட்டாயா? என்று விளையாட்டுச்
சிறுவர்கள் ஒருவரை ஒருவர் வினவி அதில்
ஒருவன் பயப்படேன் என்றால் உடனே அவன்
கண் எதிரே தன் கையை வீசி அவன்
இமைத்தானாயின் அதோ பயந்தாய்! என்று
அவனை இகழ்ந்து சிரித்தலை
இன்றுங்காணலாம். விளையாட்டிலுள்ள
இதனை வெற்றித் திறத்தில் வைத்து

வீரர்களது அஞ்சா நிலையினை உறுதிபெற
அறுதியிட்டு அடிகள் விளக்கியிருக்கும்
அழகை யிதில் ஆய்ந்துணர்ந்துகொள்க.
வெல்வது விதியின் ஆகும் வெல்வரின்
இமைப்பேனுயிற் சொல்லிநீ நகவும்பெற்றாய்
தோன்றல் மற்றென்னையென்றான்.
என ஒருவன் போரிற் புறங்கொடாமையை
புலப்படுத்தற்கு இவ்
விழியிமையாமையை யெடுத்துககாட்டித்
தன் உளவுறுதியை
யுணர்த்தியிருத்தல் காண்க.

ஆரமருள் ஆண்டகையும்
அன்னவகை வீழும்
வீரர் எறி வெம்படைகள் வீழ
இமையானாய்ப்
போரமருள் அன்றுபெருந்
தானைகயொடும் போரப்
போரமருள் நின்ற இளையோனிற்
பொலிவுற்றான்.

சச்சந்தன் விழித்தகண்
அழித்திமையாமல் நின்று அரிமன்
னனைப்போல் அமராடினுன் என்பதை இதில்
அறியலாகும்.

போரில் நேரும் ஊறினுக்கு அஞ்சிப்
பின்னிடுவாரை வீரர்
என்று எண்ணலாகாதென்பது குறிப்பு.

78-ம் அதிகாரம் படைச்
செருக்கு. 2081

பகைவன் குறித்து வீசிய கூர்வேல
ஓடிவரினும் நல்ல வீரர் விழித்தகண்
இமையாமல் அதன்மேலோடி வெல்வர்
என்பது இதில் உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை இலக்குவன்பால் உணரப்படும்.

கதை.

மூலபலத்தை இராமன்மே

லேவிவிட்டு இராவணன் வேறொருவழியாக வந்து வானரங்களை யழிக்கத் தொடங்கினன். அதுபொழுது இலக்குவன் போந்து எற்றமாடினன். தம் கர வேக் சாவேகங்களை இருவரும் முறை முறை காட்டிப் பொருமுரணுற்றனர். அரக்கர்கோன் விட்ட படைக்கலங்களை யெல்லாம் கடுத்துத் தடைத்து இறுதியில் இலக்குவன் கொடுங்கணைகள் பலதூவி அவன் தடம்புயங்களையும உடம்பையும் இடம்படத் துளைத்தான். அதனல் மிகக் கொதித்து அவன் ஓர் மாயப் படையை யேவ அடுத்துநின்ற வீடணன் சூழ்ச்சியால அதனையும் இவன் அழித்தொழித்தான். முதிர் சினங்கொண்டு எதிரெதிர் நின்று இருவரும் அதிரப் பொருங்கால் இடை தெரிந்து அவன் ஓர் எரிவேல் எடுத்தான். அது மிக்க தெய்வத்தன்மையுடையது; அயன்

ஆய்ந்து படைத்தது: மண்டோதரியை மணம்புரிந்த பொழுது மயனால் இவனுக்குக் கொடுக்கப்பட்டது. குறித்தவாறு சென்று கொலைபுரிந்து மீளவல்ல அக்கூர் வேலைஎடுத்து வீடணன் மேல் அவன் கொதித்து வீசினான். எதிர்த்து விழித்து நின்ற இவன் அதனை எய்து வீழ்த்துமாறு பல கணைகளை ஏவிவிட்டான். விட்டவற்றையெல்லாம் விளிய நூறி அது மேல் விரைந்துவந்தது. வீடணனைக் கொன்றுவிடுமென்று கருதி விழித்த கண் இமையால் அதன்மேல் இவன் கொதித்துப் பாய்ந்தான். இவ் வீரவள்ளல் உவகையுடன் அவ் வீடணன் ஓடினான். அவனை விலக்கிவிட்டு முன் அங்கதன் பாய்ந்தான். அவனுக்கு முன்னதாகச் சுக்கிரீவன் பாய அவனையுந் தள்ளிவிட்டு முன் அனுமான் துள்ளினான். அவ் எல்லாரும் பின்னுற இவ் இளையவன் முன்சென்று தன் அழகிய

மார்பில் அதனை ஏற்று அயர்ந்து
வீழ்ந்தான். உறுதி குன்றாமல் சிறிதும்
பின்றாமல் வெகுளி நோக்கோடு எறிந்த வேல்
2082 திருக்குறட் குமரேச
வெண்பா.

மேற் பாய்ந்து இறுதியுற்றானே என்று அமரர்
முதல் அனைவரும் அழுதொங்கினர்.
அதன்பின் அனுமன் மருந்து கொணர
இவன் எழுந்து சென்று இராமனை படைந்து
நின்றான். முடிவுற வந்தும் சிறிதும்
இமையாமல் மூண்டு பாய்ந்து வென்றியை
ஆண்டுவந் தமையை நினைந்து இவனை அவ்
அண்ணல் அகமகிழ்ந்து தழுவினன்.
விழித்த கண் வேல் கொண்டெறியினும் வீரர்
அழித்து இமையார்; அதன்மேல் ஆர்த்துச்
செல்வர் என்பதை உலகம் காண இவன்
அன்று உணர்த்தி நின்றான். வென்றி திகழ

அன்று இவன் செய்த வீர ஆடலைக் கம்பர்
அழகுறப் பாடியுள்ளார். சில இதனடியில் வ
ருவன

விட்டபோதினில் ஒருவனை வீட்டியே மீளும்
பட்டபோது அவன் நான்முகன் ஆயினும்
படுக்கும் வட்டவேலது வலங்கொண்டு
வாங்கினன் வணங்கி எட்ட நிற்கலாத்
தம்பிமேல் வல்விசைத்து எறிந்தான். (க)

எறிந்த காலையில் வீடணன் அகனிலை
யெல்லாம்
அறிந்த சிந்தையன் அனைய ஈது என்னுயிர்
அழிக்கும் பிறிது செய்யலாம் பொருளில்லை
என்றலும்; பெரியோன் அறிந்து போக்குவல்
அஞ்சலை என்று இடை அணைந்தான் (உ)

எய்த வாளியும் ஏயின படைக்கலம் யாவும்
செய்த மாதவத்து ஒருவனைச் சிறுதொழிற்
தீயோன் வைத வைவினில் ஒழிந்தன
வீடணன் மாண்டான் உய்தல் இல்லையென்று

உம்பரும் பெருமனம் உளைந்தார். (ந)
தோற்பன் என்னினும் புகழ்சிறந்தும் தருமமும்
தொடரும் ஆர்ப்ப நல்லவர் அடைக்கலம்
புகுந்தவன் அழியப் பார்ப்பதென்
நெடும்பழிவந்து தொடர்வதன் முன்னம்
ஏற்பென் என்தனி மார்பின் என்று
இலக்குவன் எதிர்ந்தான் (ச)
இலக்குவற்குமுன் வீடணன்புகும்;
இருவரையும் விலக்கி அங்கதன் மேற்செலும்;
அவனையும் விலக்கிக் கலக்கும் வானரக்
காவலன்; அநுமன்முன் கடுக
அலக்கண் அன்னதை இன்னதென்
றுரைசெயலாமே! (ரு) 78-ம் அதிகாரம்
படைச் செருக்கு. 2088

முன்னின்றெலாம் பின்னுறக் காலினில்
முடுகி
நின்பின்யான் இது விலக்குவன் என்று உரை

நோா மின்னும் வேலினை விண்ணவர்
கண்புடைத்து இரங்கப் பொன்னின் மார்பிடை
வற்றனன் முதுகிடைப் போன. (சு)

பகைவன், வேல்கொண்டெறிந்ததும்,
யாதும் அஞ்சாமல் இலக்குவன் அதன்மேல்
முந்திப் பாய்ந்ததும், விழித்தகண்
அழித்திமையாமல் போரின்மே
லேறிச்சென்று வீர விளக்காய் இவன் விளங்கி
நின்றதும், வென்று வந்ததும் இவற்றுள்
விளங் குதல் காண்க.

முன்னிட் டமர்முகத்தில் மூண்டபின்பு
மாண்டிடினும்
பின்னிடார் வீரர் பிரிந்து.

போரில் வீரர் யாதும் அஞ்சார்
என்பது இதனல் கூறப் பட்டது.

---

776 போரெதிர்ந்த நாளே புனிதமெனக்
கிள்ளியேன்
கூரமைந்து நின்றான் குமே

ரசா—கோா

விழுப்புண் படாதநா ளெல்லாம்
வழுக்கினுள்

வைக்குந்தன் னாளை யெடுத்து.
(சு)

இ—ள்.

குமரேசா! கிள்ளி என்பவன் போரிலுறும் புண்ணையே நாளும பெரிதாக என் நயந்திருந்தான் எனின், தன் நாளை எடுத்து விழுப்புண்படாத நாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும் என்க.

இது, வீரது உள்ளக்கிடை கூறுகின்றது.

விழுப்புண் = விழுமிய புண். அஃதாவது போரிற் சென்று மார்பிலும் முகத்திலும் பட்ட புண். புறங்காட்டி ஓடுங்கால் கோழைகளது முதுகிற்பட்டதும் புண் என்று எண்ணப்படுமாதலால் அதனை

விலக்குதற்கு விழுப்புண் என்று விளக்கிக் கூறினர்.

தன் நாள் = ஆயுளாகத் தனக்கு அமைந்து கழிந்த நாள்.

மேல், விழித்த கண் இமைத்தலும் புறங்கொடுத்ததாகக் கருதி நல்ல வீரர்

261

நாணுவர் என்றார்; இதில், போரில் புகுந்து

புண் 2084 திருக்குறட் குமரேச வெண்பா.

படாத நாளெல்லாம் புல்லிய நாள் என்று அவர் எள்ளி இரங்குவர் என்கிறார்.

தனக்கு அமைந்துகழிந்நாள்களை எடுத்தெண்ணி அவற்றுள் போரிற் சென்று புண்படாத நாள்களையெல்லாம் வீணே தொலைந்து போன நாள்களுள்வைத்து வீரன்

வருந்துவன என்பதாம்.

வினைக்கிடாகத் தனக்குக் கிடைத்துள்ள ஆயுள் நாள்களை யெல்லாந் தொகுத்தெண்ணி அவற்றுள் போர் பெற்ற நாளே பயன் பெற்றதாக மகிழ்ந்து அது பெறாத நாள் எல்லாம் வீண் நாளாகக் கருதிச் சிறந்த வீரன் வருந்தி நிற்பன் என்பார் "படாத நாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும்" என்றார்.

போர்படாத நாள் என்னாது புண்படாத என்றது என்னை யெனின், போர் பெறினும் தான் புகுந்தவுடனே எதிர்ந்தவர் புறங்கொடுத்துவிடின் அது பெற்றும் பயனில்லையாதலால் திறல் மிகுந்த பகைவர் சினந்துவிடும் படைகளை யெல்லாம் இடை தெரிந்து தடுத்துத் தன் நினைவு அடங்கப் பொருது அவரை இனமடங்க வென்று வரும்படி அவர் விரும்பி யிருப்பர் என்பது விளங்க

எனக.

தம் வாழ்நாளில் தமக்குப் போர்கிடைக்க நாளையே புனித மென்றெண்ணி வீரர் பெரிதும் மகிழ்வர் எனபது கருத்து.

போரிலுறும் புண்களையே தனக்கு அணிகலனுகச் சிறந்த வீரன் நாளும் உவந்திருப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கிள்ளியால் உணரப்படும்.

கதை.

கிள்ளி என்பவன் சோழநாட்டிலிருந்தவன். ஆண்மையிற் சிறந்தவன். எவர்க்கும் இனியனுய் ஈந்து வந்தவன். இவனது கொடைவீரங்களைக் குறித்து அக்காலத்திருந்த படைமன்னரனை வரும் பாராட்டியுள்ளார். இவன் சோழ மன்னனுக்கு இன்னுயிர்த்துணைவன். அவன் படைக்குத் தலைவனுய் நின்று பலபோர்

முனைகளிலும் சென்று பொருது வென்றுவந்தவன். இவனது வெற்றித் திறத்தை வியந்து வேண்டிய நலங்களைத் தந்து தன் 78-ம் அதிகாரம் படைச் செருக்கு. 2085

பெயரெழுதிய மோதிரத்தையுமிட்டு ஏனாதி என்னும் பட்டத்தை யும் உதவி அருமைத் துணையாக அரசன் இவனை உரிமைசெய்து வந்தான். அதனால் ஏனாதி திருக்கிள்ளி என்று இசைப் பெயரோடு

இவன் இசைக்கப் பெற்றான்.

போர்க்கடல் ஆற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்

கார்க்கடல் பெற்ற கரையன்றே—போர்க்கெல்லாம்

தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர்

ஏனாதிப் பட்டத் திவன்.

என்றபடி வீரச் சிறப்போடு யாரும் போற்ற அமைந்து பின்பு தான் ஒரு குறு நிலத்தலைவனாய் விளங்கி நின்றான். போரில் பகைவரை வெல்ல முடியாத இடத்து இவனது உறவினன் என்று இவன் பேரைச் சொல்லிவிடின் சொன்னவர்க்கு அவர் இன்னுறவாளராய் இசைந்து செல்வர். இவனது அமர்வலியைக் கண்டு மறுபுல மன்னரும் தமராய் நின்றனர். இவன் பொரு களம் புகுந்தால் முன் எதிர்ந்து நின்றவர் புறங்கொடுத்தோடுவர். காளையர் காம நலத்தைக் காதலித்திருப்பதுபோல் வீர நலத்தை நாளும் இவன் விழைந்திருந்தான். போர்முகத்திற் சென்று படைக்கலங்களால் ஊறுபடுவதே தனக்கோர் உயாணியாக இவன் உவகைகொண்டு நின்றான். "தன் நாளை எடுத்து விழுப் புண்படாத நாளெல்லாம் வழுக்கினுள்வைக்கும்" என்னும் உண்மைக்கு இவன் மிக உரியனாய் விளங்கினான். ஒரு

போரில் பெரும் பகைவர் பலருடன் இவன் எதிர்த்து பொருத அவர் உடைந்துபோக இவன் உற்றபுண்களோடு உயர்ந்த வென்றியாள ஞய் விளங்கி நின்றான். அந்நிலையைக் கண்ட மாடலன்மதுரைக் குமாரனர் என்னும் புலவர் இவன் வீரத்தை மிக வியந்து பாடியுள் ளார். அதனை இதனடியில் காண்க.

நீயே, அமர்காணின் அமர்கடந்தவர்
படை விலக்கி எதிர் நிற்றலின்,
வா அுள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக்கு இனியை; கட்கு இன்னுயே!
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்தலின்

2086 திருக்குறட் குமரேச வெண்பா.

ஊறு அறியா மெய்யாக்கை யொடு
கண் ணுகரு இனியர்; செவிக்கு

இன்னூரே!

அதனால், நீயும் ஒன்று இனியை;
அவ நம் ஒன்று இனியர்;

ஒவ்வா யாவுள ? மற்றே, வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்கும் இவ்வுலகம்; அஃது
என்னோ பெரும உரைத்திசின் எமக்கே.

(புறம்.)

போரில் படைக்கலங்களால் எறிபுண்டு செந்நீர்சோர உடல் முழுதும் புண்பட்டமையால் பார்வைக்கு இனியனாயில்லை யாயினும், வெற்றி வீரன் என்று கேட்டற்கு இனியனாய் நீ விளங்கு கின்றாய்! புண்படாதபடி போரில் நின்று ஓடிப்போன உன் பகைவர் உடம்பில் வடுவின்மையால் கண்ணுக்கு அழகாயிருந்தா லும் கோழைகள் என்று கேள்விக்கு இழிவாயிருக்கின்றார் என அழகுபெற மிக வியமாகக் கவி அருளியிருக்கும்

அருமையையும், விழுப்புண்கொண்டு வீரத்திறத்தில் விளங்கிநின்ற இவனது பெரு மையையும் இதில் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க.

போரமையா நாளேல்லாம் புல்லிதேன எள்ளியென்றும்
வீரன் விழைவான் விறல்.

போரொன்றனையே வீரர் பெரும்பேறாகப் பேணி நிற்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

777 திண்டோள் அபிமனுபர் தீரனென என் கழன்முன்
கொண்டேத்த நின்றான் குமரேசா—மண்டிச்
சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(எ)

இ—ள்.

குமரேசா !

போர்ப் புகழை விரும்பி உயிரை வெறுத்து நின்ற அபிமன்னன் கழல்அழகன் என வீரசெல்வருந் துதிக்க ஏன் விளங்கினான் எனின், சுழலும் இசைவேண்டி வேண்டா உயி ரார்கழல் யாப்புக் காரிகை நீர்த்து என்க.

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2087

இது, வீரர் தம் உயிரை ஒரு பொருளாக எண்ணாரென் கின்றது. சுழலும் இசை = சுழலுகின்ற புகழ். உலகமெங்கும் பரவி உலாவும் கீர்த்தி என்க. வேண்டா உயிரார் = உயிர் வாழ்க்கையை விரும்பாதார். என்றது வீரரை.

கழல் = ஓர் காலணி. வீரர்களும் வள் ளல்களும் தம் ஆண் மை வண்மைகளுக்கு

அறிகுறியாக அணிந்து கொள்வதாய அரு மைப் பொற்பூண். ஆடவர் கொடை வீரத்தால் அணிவது கழ லென்றாகும். என்பது நிகண்டு. ஆடவா கொடையால் வீரத்தா லணி—பாதத்து அணியே கழலணி என்ப என்றது பிங்கலந்தை. யாப்பு = கட்டுதல். காரிகை = அழகு.

பரவுகின்ற புகழை விரும்பி உயிரை விரும்பாத வீரர், காலில் கழல் கட்டுதல் அழகு உடைத்தாம் என்பதாம்.

வீரர் கழல் கட்டுதல் அழகுடைத்தாம் என்ற தனால் வேறு எவரும் அதனைக் கட்டலாகாதென்பதூஉம், கட்டின் நெற்றியில் இடும் திலகத்தை ஓர் நிலைக்கு இட்டதுபோல் நகைக்கு இடமாகும் என்பதூஉம் பெறப்பட்டன.

இசைவேண்டுதலும், உயிர்வேண்டாமையும் வீரர்க்கு என்றும் இயல்பாம் எனக. “நல்லிசை

வேட்டமவேண்டி வெல் போர்ப்,
பாசறையல்லது நீ ஒல்லாயே " என நல
ங்கிள்ளி யிருந் ததுங் காண்க.
வென்றிலேன் என்றபோதும்
வேதமுள்ளளவும் யாலும்
நின்றுளேன் அன்றோ? மற்று அவ்
இராமன்பேர் நிற்குமாயிற்
பொன்றுதல் ஒருகாலத்தும் தவிருமோ
புதுமைத் தன்றோ
இன்றுளார் நாளை மாள்வார் புகழுக்கும்
இறுதியுண்டோ?
என்று இராவணன் கருதி நின்றதுபோல்
இசையினை விரும்பி உயிரை வெறுத்துச் சுத்த
வீரர்கள் உறுதிபூண்டிருப்பர் என்க.
கல்வி கொடைகளான் ஆவதுபோலன்றி
வீரஇசை பெரும் பாலும் உயிரிறுதியின்
உறுதியில் நிற்குமாதலால் அவ்வேண்டுதல்
இவ்வேண்டாமையை வேண்டி நின்றது.
நல்ல குலவீரன் தன் உயிரை ஒரு

பொருளாக மதியாது பொருதலென்றுவரும்
புகழையே பெரிதாகக் கருதியிருப்பன் 2088
திருக்குறட் குமரேச வெண்பா.

என்பது இதில் உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை அபிமன்னன் பால் உணரப்படும்.

## கதை.

அபிமன்னன் என்பவன் அருச்சுனனுடைய அருமைப் புதல்வன். தாய் பெயர் சுபத்திரை. கண்ணனுக்கு மருமகன். விராடன் புத்திரியாகிய உத்தரையை மணந்து வீரத்திறத்தில் சிறந்தவனென்று எத்திசையும் போற்ற இவன் இசைபெற்றிருந்தான். அழகும் இளமையும் அறிவும் ஆண்மையும் விழுமிய நீர்மையும் மேவப் பெற்றவன். தன் தந்தையாகிய விசயனும் வியந்து நோக்கும்படி வில்வலியிற் சிறந்தவன். தனக்கு நேர்தனையல்லது

இல்லென வெல்லவல்லதோர் வில்விஞன் என வில்வீர ர் பலரும் சொல்ல நின்றவன். அஞ்சு வயது நிரம்பு முன்னரே அஞ்சாத வீரன் என்று ஐவரும் கண்டு மகிழ ஓர் ஆடல் செய்தவன். போரைக் குறித்துத் தந்தையர் பேசுங்கால் அவ் இளமைப் பருவத்தே உளம்பூரித்து உவந்துகேட்கும் இயல்பினன். பாரதப் போரில் இவன் போமர் செய்துவந்து பதின்மூன்றும்நாட் போ ரில் பன்னீராயிரம் தேர் வீரர்கள் புடைசூழ வந்த துரியோதனன் மகனுகிய இலக்கணகுமாரனைத் தன் சிலைத்தொழிலால் கொன் ருன். அதனுல் துரியோதனன் கொதித்துத் துரோ ணர், அசுவத் தாமன், கன்னன், கிருபன், கிருதவன்மன் முதலிய பெரு வீரர்க ளோடு பெருஞ் சேனையையும் ஏவி இவனைக்கொன்று வரும்படி கூறிநின்ருன். சக்கர யூகம் வகுத்துப் பகைவர் உக்கிரமாகப் பொருதார்.

வந்தவரனைவரும் சிந்தியோடும்படி சிலைவளைத்தெய்து இவன் நிலைபெற்று நின்றான். யாரையும் நேர்பொரவொட்டாமல் இவன் நிலைத்து நின்று செய்யும் திறத்தினை நோக்கி இடை தெரிந்துவந்து கன்னன் இவனது சிலையினையறுத்தான். உடனே தன் உடைவாளையுருவித் தேரில் நின்று தரைமேற் பாய்ந்து சாரி கை திரிந்து அடலாடல் செய்து

அடுத்துவந்தவரெல்லாரையும் கடுத்துத் துடைத்தான். கன்னனும் பின்னிட்டான். பாரில் நிற்கும் இவனுடன் தேரும் வில்லும் கொண்டு முறை கடந்து துரோணரும் வந்து மூண்டமர் புரிந்தார். அவரைப் பலமுறையும்

நில 78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2089

குலைத்து "உம்மைக் குருவாகக் கொண்டா எம்தந்தை சிலைத்தொழில் பயின்றார்" என்று

இவன் சிலைத்துச் சிரித்தான்.

சொரியுங்கணை மழையேவு துரோணாசிரியன்
வில்லும்
பரியுங்கட விரதத்தொடு பாகும் பலபலவாய்
முரியும்படி வடிவாள்கொடு மோதா
அமர்காதா
விரியும் சுடர் என நின்றனன் விசயன்
திருமகனே. (1)

ஒருக்கால்அழி தோன்றியும் உருளாழிகொள் தேர்மேல்
இருக்கால்வா முக்கால்வா எக்காலும அழித்தே
பெருக்காறு அணைசெய் தொத்து
அவிர்பிள்ளைப் பிறையணையான்
செருக்கால் நகை செய்தான் வரி சிலை
ஆசிரியனையே. (2) இங்ஙனம்
எவரையும் எதிர் நிலைக்கவொட்டாமல்
அதிரப்பொருது அடலேறுபோல் அமர்க்களம்
முழுதும் ஆடல் செய்துவந்தான். இறுதியில்
அவ்வில்லாசிரியன் முதலாக எல்லாரும்
வளைந்துகொள்ள இடைதெரிந்து வந்து

கொடுமையோடுநின்று சயத்திரன் இவனைக் கொன்று முடித்தான். தான் முடிவுற நேர்ந்தபோதும் சிறிதும் அஞ்சாமல் உயிரை ஒரு பொருளாக விரும்பாமல் உறுதி யோடு நின்று பொருதுபொன்றி உயர் புகழை இவ்வுலகில் நிலை பெற நிறுத்தி உயர்பதம அடைந்தான். வீர நிலையை விளக்கி இவன் காலில் அணிந்திருந்த கழலை வீரரெல்லாரும் கைகுவித்துக் கண்ணில் ஒத்திக் கசிந்துருகி அவ் அருமை அணிக்குரிய அழகன் இவனே என்று எத்தித்துதித்தார். சூழும் இசைவேண்டி வேண்டா உயிரார் கழல்பாப்புக் காரிகை நீர்த்து என்னும உண் மையை உலகம இவன்கண் உணர்ந்தது.

போர்க்களத்தில் இவன் இறந்துபட்டபொழுது இருதிறப்படைகளும் இரங்கி அழுதன. தருமன் முதலியோர் உருகிச் சோர்ந்தார்.

அபிமனை நினைந்து தருமன் புலம்பியது.

பிறந்த தினமுதலாகப் பெற்றெடுத்த விடலையினும் பீடுந் தேசும்
சிறந்தனையென்று உனைக்கொண்டே
தெவ்வரையென் றுலகாளச் சிந்தித் தேன்யான்,
மறந்தனையோ எங்களையும் மாலையினுல் வளைப்புண்டு
மருவார் போரில், இறந்தனையோ என்கண்ணே
என்னுயிரே அபிமாஇன்று என் செய்தாயே.
( 1 ) தேனிருக்கும் நறுமலர்த்தார்ச் சிலைவிசயன்
இருக்க; வரைத்திண்டோன் வீமன், தான் இருக்க;
மாநகுல சாதேவர் தாமிருக்கத்; தமராய்வந்து
2090 திருக்குறட் குமரேச
வெண்பா.

வான் இருக்கின் முடிவான மாகதமா மலைபிருக்க;
வாழ்வான் எண்ணி யான் இருக்க; வினையறியா
இளஞ்சிங்கம் இறப்பதே என்னே! என்னே! (2)
நின்றனையே எனைக்காத்து நீ எகென்று யானுரைப்ப
நெடுந்தேரூர்ந்து சென்றனையே இமைப் பொழுதிற்
றிகிரியையும் உடைத்தனையே தெவ்வர் ஓட,
வென்றனையே சுயோதனன்றன் மகவுடனே

மகவினைத்தும் விடங்காலம்பிற், கொன்றனையே
நின் ஆண்மை மீண்டுரைக்கக் கூசினையோ குமரரேறே.
(3) உனகருதவி யொருவரற ஒருதனி நின்றமருடற்றி
யொழிந்த மாற்றம் தனக்குநிகர் தானான
தனஞ்செயனுங் கேட்கின் உயிர்தருக்குமோதான்
எனக்கு அவனி தரஇருந்தது இத்தனையோ மகனே
என்றெண்ணுமாழ்கி மனக்கவலையுடனழிந்து
மணித்தேரின் மிசைவீழ்ந்தான் மன்னர்கோவே(4)

வீமன் கரைந்தது.

மின்னுமல் இடித்ததென வீழ்த்தபொலந்
தொடையாலும் விடையோனீந்த பொன்னார் வெங்
கதையாலும் அல்லது அபிமனே அமரிற்
பொரவல்லார்யார் தன் ஆண்மை நிலைநிறுத்திச்
சங்கமுழக்கிய வீரசிங்க சாப
என்னானை இறந்துபட இன்னமும்நான் இவ்வுயிர்
கொண்டிருக்கின்றேனே. எடுத்தபடை
யனைத்தினுக்கும் எதிரில்லை எனக்கலைகள்
எல்லாமுன்னை அடுத்ததுகண் டையாநின் ஆருயிர்க்குக்
கரைந்துகரைந் தையுற்றேன் யான் விடுத்தபெருந்
தாதைஇரு விழிகளிப்பப் பகைவென்று
மீளாதென்னைக் கெடுத்தனையே

பிழைத்தனையென்றினி ஒருவர் வந்துரைக்கக் கேளேன் கொல்லோ.
(6)

விசயன் கலுழ்ந்தது.

கதிரவன் உதிக்குமுன்னே கண்துயில் உணர்த்தி என்னை
அதிர் அமர்க் கோலங்கொள்வான் அறிவுறுத் துரைக்க வல்லாய்
முதிரமா முருக்கி மீண்டேன் இத்தனைப் போதுமுன்போல்
எதிர்வரக் காண்கிலேன் இங் கில்லையோ? என்செய்தாயே. (7)

தேர் அழிந்து எடுத்தவில்லும் செங்கதிர் வாளும் இன்றி
ஒருதவியும் பெறாமல் ஒழிந்துயி ரழிந்த மைந்தா
போரமர் உடற்றி நீஅப் பொன்னகர் புகுந்தபோதன்
பேரமர் ஆண்மைகேட்டுப் பிதாமகன் என் சொன்னானே. (8)

'வளைத்தவில் திமிராவண்ணம் வாளியால் மாவுந்தேரும்

துளைத்துமுன் காலாளாகத்து ரோணனைத்
தாக்தவீரா
இளைத்த வெஞ் சமரில்நொந்து தனஞ்சயன்
சிறுவன் மேனி
இளைத்த தென்று இந்திராணி இன்னமு
மட்டினளோ. (பு) 78-ம் அதிகாரம்
படைச் செருக்கு. 2091

அபிமனது பெருவீரமும், உயிரை
விரும்பாது அவன் புகழ் வேண்டி நின்றதும்,
பொருகளம்புகுந்து பொருதயர்ந்ததும், பிற
நலங்களும் இவற்றுள் உணரலாகும்.

தன்னுயிரை எண்ணான் சமர்முகத்திற்
மன்னுயிர்கள் எண்ணும் மணி.

புக்கிறந்தான்

பொருது வெல்லும் புகழையே வீரர்
உயிரினும் பெரிதாக விரும்பியிருப்பர் என்பது
இதனால் கூறப்பட்டது.

---

778 அன்றபஞ்ச சேனை யதிபர்
இறைதடுத்தும்
குன்றவில்லை என்னே
குமரேசா—கன்றி
உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.
(அ)

இ—ள்.

குமரேசா! தம் அரசனாகிய இராவணன் தடுத்தும் பஞ்ச சேனாபதிகள் குன்றாமல் என் அமர்மேற் சென்றார் எனின், உறின் உயிர் அஞ்சா மறவர் இறைவன் செறினும் சீர்குன்றல் இலர் என்க.

இறைதடுத்தும் அதிபர் குன்றவில்லை என்றது வேறொருவரையும் போகவிடாமல் தானே செல்ல விழைந்த இராவணன் தடுத்து எழுந்தபொழுது அடுத்துநின்ற இவர்,

"அன்றியும் உனக்கு ஆளின்மை
தோன்றுமால் அரச
வென்றியில்லவர் மெல்லியோர்தமைச்
செலவிட்டாய்
நன்றியின்று ஒன்று காண்டியேல்
எமைச்செல நயத்தி
என்று கைதொழுது இறைஞ்சின"
மை கருதி.

உறின் = போர்வந்துற்றால். மறவர் = வீரர். மறம் உடையவர் என்க. மறம் = வீரம். இறைவன் = இறைமையை யுடையவன். இறைமை = தலைமை. செறுதல் = கோபித்தல், வெறுத்தல். அஞ்சா என்றது மறவர் இயல்பு தோன்ற நின்றது.

மேல், உயிரினும் போரில் எய்தும் புகழையே சிறந்த வீரர் மிகவும் விரும்பியிருப்பர் என்றார்; இதில், போர் கிடைத்தால் பின்பு யார் தடுத்தாலும் அவர் நில்லார் என்கின்றார்.

போருற்றால் தம் உயிர்ப்பொருட்டு அஞ்சாத வீரர் அரசன் நெருங்கித் தடுத்தாலும் தமது வீரத்திறம் குன்றார் என்பதாம்.

தன் படைவீரர் பகைவர்மேல் திரண்டெழுந்தபொழுது நில்லுமின் இது பொழுது செல்லவேண்டாம் என்று அரசன் முனிந்து தடுப்பினும் அவர் அடங்கி நில்லாது போர்மேல் முனைந்து செல்வர் என்பார் இறைவன் செறினும் மறவர் சீர் குன்றல் இலர் என்றார். உம்மை சிறப்புணர் நின்றது.

இனி, அரசன் தம்மைப் பேணாது வெறுத்து இருப்பினும் அவனுக்குப் போர்வந்ததாயின் அது கருதி நில்லாது தம் வீரச் சீர்தோன்ற நல்ல வீரர் அதன்மேற்

செல்லுவர் எனவும் இது கொள்ளநின்றது.

உட்பகை ஒருதிறம் பட்டெனப் புட்பகைக்கு

எவான் ஆகலிற் சாவேம் யாம் என

நீங்காமறவர் வீங்குதோள் புடைப்ப.

எனவரும் இதில், சோழன் நலங்கிள்ளியின் படைவீரர் தம்மை அரசன் போரில் ஏவாமையால் தமமிற் பொருது சாவோம் என்று கருதிநின்றமை காண்க. மண்டமர் நசையோடு கண்படை பெறுஅது என்றபடி சிறந்த வீரர் என்றும் போர் வேட்கையோடு பொருந்தி யிருப்பர் என்பது கருத்து.

போர் கிடைத்ததாயின் அரசன் ஏவானுயினும் சிறந்த வீரர் அதில் மிக உவந்து செல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பஞ்ச சேனுதிபதிகள்பால் உணரப்படும்.

கதை.

பஞ்ச சேனாதிபதிகள் என்பவர் இராவணனுடைய பெரிய சேனைத் தலைவர். அரிய ஆற்றலுடையவர். ஒத்த இயல்பின ராய் ஒருவரை ஒருவர் பிரியாமல் என்றும் உடனுறைந்திருந்தவர். யாதும் அஞ்சா நெஞ்சினர். மனதான் வச்சிரன் மாலி சிங்கன் வதாந்தகன் என்னும் பெயரினை யுடையவர். பஞ்ச பூதங்கள் போல் மிஞ்சிய வலியுடன் இவ் ஐவரும் ஒருங்கே மேவியிருந்தா

ராதலால் பஞ்ச சேனாதிபதிகள் எனத் தொகைப் பெயருடன் 78-ம் அதிகாரம் படைச் செருக்கு. 2098

தோன்றி நின்றனர் . வாளும் வில்லும் மற்றுள படைகளும் நாளும் பயின்று வென்றியை நயந்திருந்தவர். போரென்று யாரேனும் புகலக் கேட்டால் எங்கே! என்று

உள்ளம் பொங்கும்
இயல்பினர். அமரைப் பலமுறையும் அமரில் வென்றவர். ஒரு முறை இந்திரன் ஊர்ந்துவந்த தெய்வயானையாகிய ஐராவதத்தின் வாலைப் பிடித்துக்கொண்டு "நீ வல்லவனாயின் இனி இதனை நடத்திச் செல்லுக" என்று அவனை நோக்கிச் சொல்லி நின்றவர்.

இந்திரன் இசையிழந் தேகுவான்
இகல்
தந்திமுன் கடாவினன் முடுகத் தாம்
அதன்
மந்தர வாலடி பிடித்து வல்லையேல்
உந்துதி நீ என வலிந்த ஊற்றத்தார்.
(க)

மலைகளை நகுந் தடமார்பர்; மால்கடல்
அலைகளை நகு நெடுந்தோளர்;
அந்தகன்
கொலைகளை நகு நெடுங்கொலையர்;
கொல்லனூது

உலகனை நகும் அனலுமிழுங் கண்ணினர். (உ)

என நண்ணியிருந்த இவர் இராம தூதனாகிய அனுமான் இலங்கைபுகுந்து கிங்கரர் சம்புமாலி முதலிய அரக்கர் வீரர் பலரையும், படைகள் பலவற்றையும் கொன்று வெற்றியோடு நின்ற போது தானேபோய் அவனைத் தொலைத்துவிடுவதாக இராவணன் கொதித்தெழுந்தான். அது பொழுது அருகில்நின்ற இவர், அப் போர்க்குத் தம்மை யனுப்பும்படி அவனடி பணிந்து வேண்டினார். அவன் முனிந்து வேண்டாமென்று முனைந்தெழுந்தான். அவன் இணங்கிவிடும்படி மேலும் வணங்கி வேண்டி அவனை இசையச் செய்து அதன்மேல் நசைகொண்டு சென்றார். அரசன் வேண்டாமென்று வெறுத்துநின்ற பொழுதும் போர்மேல் இவர் விரைந்து சென்றமையைக் கண்டு அனைவரும்

இவாது வீரச் சீர்மையை வியந்து கொண்டாடினர். உயிரஞ்சா மறவர் இறைவன் செறினும், போர்வறின் தம் சீர் குன்றலர் என்னும் உண்மையை உலகம் காண இவர் அன்று உணர்த்தி நின்றார்.

போரேனின் மெய்வீரர் பூரித் துளம்பொங்கிச்
சேர்வர் விரைந்து செரு.

2094 திருக்குறட் குமரேச வெண்பா.

என்ன நேர்ந்திருந்தாலும் போரெதிர்ந்தால் வீரர் விரைந்து செல்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

779 வென்றி அதிகாயன் வீர மொழிபிழைத்தும்
குன்றிலன் சீர் என்னே

குமரேசா—கன்றி

இழைத்த திகவாமைச் சாவாரை
யாரே

பிழைத்த தொறுக்கிற் பவர்.
(கூ)

இ—ள்.

குமரேசா! அதிகாயன் கூறிய வீரமொழி வழுவியும் அவனை என் எவரும் இகழவில்லை எனின், இழைத்தது இகவாமைச் சாவாரை, பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார்? என்க. ஒருவரும் இலர் என்பதாம்.

•

போரில் வென்றுவருவதாக முன் கூறிய வஞ்சினம் முடியாது தவறியும் அவன் இகழப்படவில்லை யாதலால் வீரமொழி பிழைத்தும் சீர் குன்றிலன் என்றும். உம்மை இழிவு சிறப்பு.

மேல், வீரர்கள் உயிர்ப்பொருட்டு

அஞ்சார் என்றார்; இதில், உயிரைவிட்டேனும் தம் உறுதியை அவர் முடிப்பர் என்கின்றார்.

இழைத்தது = செய்தது; அஃதாவது இன்னது செய்யேனாயின் இன்னவனாவேன் என்று போரில் ஏறும் முன்னமே சூளுரையாக வீரர் மொழிந்து கொண்டது. இது வஞ்சினம் எனப்படும். வடநூலார் இதனைச் சபதம் என்பர்.

இகவாமை = தவறாவாறு. இகவாமல் எனவும் பாடம். இகத்தல் = கடத்தல், கைவிடல்.

தாம்சொன்ன உறுதிமொழிகள் வழுவுறாவண்ணம் போர் முகத்திற்போய் இறக்கவல்ல வீரரை அது வழுவியதைச் சொல்லி இகழ்வார் யாரும் இலர் என்பதாம்.

முன்கூறி நின்ற வஞ்சினத்தை போரில் சென்று முடித்து விடவேண்டும்; அது முடியாதாயின் தான் முடிந்துபோக வேண்டும்; இவ் விரண்டனுள் ஏதேனும் ஒன்றைச்

மல் இருப்பானாயின் வீரனுக்கு அது
பேரிழுக்காம் என்பது இதன் திரண்ட
பொருள்.

ஒரு வீரன் குறித்ததை முடிக்கச்
சென்று அது முடியாமல் போரில் இறந்து
போவனாயின் அவன் சொன்னபடி
செய்யவில்லையே என்று யாரும் அவனை
இகழார் என்க.

இனி, குறித்த சபதம் போரில்
நிறைவேறாமைக்காக ஒரு வீரன் உயிரைத்
துறந்துவிடுவனாயின் அவனை யாரும்
இகழார் எனவும் இது கருத நின்றது. இழை
த்ததை இகந்துபட விட்டுத் தானும்
இறந்துபடாமல் ஒருவன் திமிர்ந்து
திரிவனாயின் அவனை உலகம் இகழ்ந்துவிடும்

என்பதாம்.

அருஞ்சமம் சிதையத் தாக்கி
முரசமொடு

ஒருங்ககப் படேஎ னாயிற் பொருந்திய

புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மையா
னுறவே. எனப் பாண்டியன்
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்
செழியனும்,

இன்று அமரில் வானபிமன் இன்னுயிர்
இழக்கக்

கொன்றவனை நாளை யுயிர் கோறல்புரி
யேனேல், மன்றிலொரு சார்புற வழக்கினை
யுரைக்கும்

புன்மொழிலர் வீழ் நரகுபுக்கு
உழலுவேனே. என விசயனும்,

மன்னவன் நிரைகொண்டாரை
வளகர்த் தந்து மன்னன்

பொன்னவர் கழலிற் றங்கள் புனைமுடி
இடுவியேனேல்
இன்னிசை யுலகந்தன்னுள் என்பெயர்
சேறலின்றாய்க்
கன்னிய மகளிர் நெஞ்சிற் காமம்போற்
காக்க என்றான். எனச் சீவகனும்,
இழைத்துக்கொண்டதுபோல் போர்க்களம்
புகு முன்னரே வீரர்கள் இசைத்துக்கொண்ட
வஞ்சினம் இகவாமல் கண்ணூன்றி
முடித்துக்கொள்வர்; அஃது
இகந்தபடுமாயின் நல்ல வீரர் தாமே
இறந்துபடுவர் என்க.

எம்பியை வீட்டுதல் எம்மனைக்கா
யான்படுதல்
வெம்பகலின் முன் விளைப்பன்
என்றெழுந்தான்—தம்பி
புறவேலிற் பாணிப்பப் பொங்கெரிவாய்
வீழ்ந்தான்

வெண்பா.

அறமீனான் மறம் இருந்த வாறு. எனவரும் இதில் ஒரு வீரன் இழைத்தன இகந்தமையால் தான் எரியில் வீழ்ந்து இறந்து பட்டமை காண்க.

தான் சொன்ன வஞ்சினம் முடிக்கமாட்டாமல் போரில் ஒருவன் இறந்து படுவனாயின் அவ்வீரனை யாரும் இகழ்ந்து கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அதிகாயன் பால் உணரப்படும்.

கதை.

அதிகாயன் என்பவன் இராவணனுக்குத் தானியமாலையிடம் பிறந்தவன். அறந் திறம்பாதவன். சிறந்த போர்வீரன். அரக்கனயினும் இரக்கமிக்கவன். நீதியும் மானமும்

நெறிசெல் ஆண் மையும் நீதில் கொள்கையும் சேரப் பெற்றவன். வஞ்சம் புரியா மாண்பமை நெஞ்சினன். ஆற்றல் அழகு முதலிய எவற்றினும் இந்திரசித்தனோடிணைந்து எண்ணப் பெற்றவன். "பின்னோர் இந்திரன் இளமையால் பேர் அதிகாயன்" எனவும், "விதிகாயினும் வீரம் வெலற்கரியான், அதிகாயன்" எனவும் மதிமான்கள் மகிழ்ந்து கூற இவன் உயர்ந்து நின்றவன். தானவரை யடக்கிப் பல முறையும் வானவரை வென்று வாகை கொண்டவன். அருந் தவஞ் செய்து பரமன்பால் பெரும்படை பெற்றவன். சிறந்த கலைகள் பல பயின்று தேர்ந்தவன்.

கற்றான் மறை நாலொடு
கண்ணுதல்பால்
முற்றாதன தேவர் முரட்படை தாம்
மற்றாரும் வழங்க வலார் இலவும்
பெற்றான் நெடிது ஆண்மை

பிறந்துடையான்

அறன் அல்லது கல்லது மற்றறியான்;

மறன் அல்லது பல்பணி மாறு அணியான்;

திறன் அல்லதோர் ஆருயிருஞ் சிதையான்;

உறன் அல்லது பேரிசை என்று உணரான்.

காயத்து உயிரே விடு காலையினும்
மாயத்தவர் கூடி மலைந்திடினும்
தேயத்தவர் செய்குதல் செய்திடினும்
மாயத்தொழில் செய்ய மதித்திலனன். என இவனது

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

2097

குண நலங்களை மதித்து விபீடணன் கூறியுள்ளான். தன் தந்தை இழைத்துக்கொண்ட போரினையும் அதில் சிறிய தந்தையரியே கும்பகருணன் முதலானவர்களை இழந்து அவன்

சொக்குகின்ற தனையும் அறிந்து மிக வருந்தி அப் பகைவரை வென்றுவரக் கருதி இவன் வெ தண்டெழுந்தான். விரைந்து போய் வினை முடித்துவா இவனுக்கு வேகந் தோன்றுமாறு கருதி நீயும் அஞ்ச வையாயின் இங்கு நில் யான் போய்வருகிறேன் எ ன்று இராவணன் ஓர் போக்குரை யாடினன். அதனைக் கேட்டவுடனே இவன் மனங்கொதித்து வஞ்சினங் கூறினன்.

வான் அஞ்சுக; வையகம் அஞ்சுக;
மா
லான், அஞ்சுமுகத்தவன் அஞ்சுக;
மேல்
நான் அஞ்சினென் என்றுனை
நாணுகபோர்
யான் அஞ்சினென் என்றும்
இயம்புவதோ. (க)

காய்ப்புண்ட நெடும்படை
கையுளதாக்

தேய்ப்புண்டவனும், சில சில்
கணையால்
ஆய்ப்புண்டவனும், அவர்சொல்
வலியால்
ஏய்ப்புண்டவனும் என
எண்ணினையோ! (உ)
உம்பிக்குயிர் ஈறுசெய்தான் ஒருவன்
தம்பிக்கு உயிர் ஈறு சமைத்து
அவனைக்
கம்பிப்பதோர் வன்றுயர்
கண்டிலனேல்
நம்பிக்கொரு நன் மகனோ இனி
நான். (ங)
கிட்டிப் பொருது அக்கிளர் சேனை
எலாம்
மட்டித்து, உயர் வானரர் வன்
தலையை
வெட்டித் தரையிட்டு இரு
வில்லினரைக்

கட்டித் தருவென் இது காணுதியால்.
(ச)

என யாருங்காண வீரவாதங்கூறித் தன் படையோடெழுந்து பொருகளம் புகுந்து நீதி முறையோடு இலக்குவனை எதிர்த்து இவன் நிலைத்து அமர் விளைத்தான். அது பொழுது வானர வீரர்கள் புடைபரந் தீண்டிக் கடலென வளைந்து இவன் மேல் அடலமர் செய்தார். அதில் வீர வெறியோடு சீறித்திரிந்து யாரும் அஞ்சுமாறு பகழிகளை மாரிபோல் வீசி இவன் போரமர் புரிந்தான். 2098
திருக்குறட் குமரேச வெண்பா.

வானெலாம் பகழி; வானின் வரம்பெலாம் பகழி; மண்ணோர்
தானெலாம் பகழி; குன்றின் தலையெலாம் பகழி; சார்ந்தோர்
ஊனெலாம் பகழி; நின்றோர் உடலெலாம்

பகழி; வேலை

மீனெலாம் பகழியாக வித்தினன் வெகுளி மிக்கோன். (௪)

மறைந்தன திசைகளெல்லாம் வானவர் மனமே போலக்

குறைந்தன சுடரின் மும்மைக் கொழுங்கதிர் குவிங்கொன்றொன்றை

அறைந்தன பகழி வையம் அதிர்ந்தது விண்ணும் அஃதே

நிறைந்தன பொறியின் குப்பை நிமிர்ந்தன நெருப்பின் கறறை. (௫)

முற்றியது இன்றே யன்றோ வானர முழங்குதானை

மற்றிவன் தன்னைவெல்ல வல்லனோ? வள்ளல் தம்பி

கற்றது காலனோடோ கொலே? இவன் ஒருவன் கற்ற

விற்றொழில் என்னே என்றாத் தேவரும் வெருவலுற்றார். (௬)

இங்ஙனம் யாவரும் அஞ்சுமாறு கொடும்போர் செய்து கொன்றுவருதலைக் கண்டு இலக்குவன் கடுஞ்சினங் கொண்டு பல்லாயிரங்கூரிய கணைகளை வாரி வீசி இடையே ஓர் தெய்வப் படையைக் கைவைத்தெடுத்து கருதித் துதித்து இவன் கருந்தலை துணித்து வருமபடி கடுத்து விடுத்தான். தீயெனக் கனன்று அது சென்று துணிப்ப இவனும் பொன்றி விழுந்தான். இவனது வீர மேன்மைகளை நினைந்து இலக்குவன் முதலிய அனைவரும் வியந்து புகழ்ந்தார். பகைவரை வென்று வருவதாகப் பலரும் அறிய வஞ்சினங்கூறிவந்த இவன், அஞ்சியபின்பு எல்லாரும் துதித்து நின்றுரேயன்றி முன் சொல்லியபடி முடிக்கவில்லையே என்று எள்ளி யாதும் இவனை இகழ்ந்தார் இலர். இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே பிழைத்தது

ஒறுக்கிற்பவர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

முன்னுரைத்த வீரம் முடியா துயிர்முடிந்தால்
பின்னவர்க் கேது பிழை.

தாம் மொழிந்தது முடியாவிடத்துப் போரில் வீரர் முடிந்து போவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

78-ம் அதிகாரம் படைச் செருக்கு.
2099

780 வண்டார் வலம்புரித்தார் மன்னனழக் கன்னன்போர்
கொண்டிறந்தா ன் என்னே குமரேசா—கண்டு
பு ரந்தா ர் கண் ணீர்மல்கச் சாகற்பிற்

சாக்கா

டிரந்துகோட் டக்க துடைத்து.

(ய)

இ—ள்.

குமரேசா ! தன்னைப்புரந்துவந்த துரியோதனன் கண்

ணீர்விட்டழும்படி கன்னன் வன் போரில் இறந்துபோனன்

எனின், புரந்தார் கண் ணீர்மல்கச் சாகற்பின் சாக்காடு இரந்து கோட்டக்கது உடைத்து என்க.

வலம்புரித்தார் மன்னன் = துரியோதனன். நந்தியாவட்டம் என்னும் ஒருவகைப் பூமாலையைத் தனக்கு உரிமையாக வுடையவனுதலால் இப்பெயரினையடைந்தான். வலம்புரி = நந்தியாவட்டம்.

இது, போரில் நேரும் சாதலை எவ்வகையாயினும் ஒருவன் பொருந்திக்கொள்ளவேண்டும் என்கின்றது.

புரந்தார் = போற்றி வந்தவர்; அஃதா வது உணவு உடை உறையுள் முதலியன உதவித் தம்மை ஆதரித்து ஆண்டுவந்தவர் என்க.

கண் நீர் மல்க = கண்களில் நீர் பெருகும் வண்ணம். நீரின் தொழிலாகிய மல்கலைக் கண்மேலேற்றிக் கண்கள் நீர் பெருக எனின் உபசா ர வழக்காம். சாகிற்பின் எனவும் பாடம்.

மேல், போரில் இறந்தவர்க்குப் பழி இல்லை என்றார்; இதில், அவ் இறப்பினையடைந்தவர் மிக்க சிறப்படைவர் என்கிறார். தம்மை ஆதரித்துவந்த அரசர் கண்களில் நீர் பெருகும்படி படை வீரர் போரில் இறக்கப்பெறுவாராயின் அவ் இறத்தல் மிகவும் விரும்பிக்கொள்ளுந் தகுதியுடையதாம் என்பதாம்.

தாய் தந்தையர் முதலிய உறவினர் கண்கள் நீர் மல்கச் சாதல் இயற்கையில் நிகழும் பயனற்ற இழி சாவாதலால் அத

னிலும் வேறுபாடு தோன்ற, பூங்தார்கண் நீர் மல்கச் சாகஎன்ருர். நோயடைந்த அக் கோழைச் சாவைக் கொண்டோர் வினைப் பயனை மீளக்கொண்டு மேன் மேலும் மாள்வர்; போரமைந்த இவ் வீரச் சாவைக் கொண்டோர் தேவர்கள் போற்ற வீர சுவர்க் கத்தை மேவி என்றும் இன்புற இனிது விற்றிருப்பர் என்க.

263

2100 திருக்குறட் குமரேச வெண்பா.

சாவென்ருல் யாரும் விரும்பார்; அத்தகைய சாதலை மிக வருந்தி இரந்தேனும் அடைந்துகொள்ளவேண்டும் என்றது என்னையெனின், அதனல் இருமையிலும் எய்தும் அருமை கருதி என்க. கேட்டை ஒருவரும் விரும்பாராயினும் ஒப்புரவினல் வருமாயின் அஃது ஒருவன்

விற்றுக் கோட்டக்க துடைத்து என மேல் உணர்த்தியுள்ளதுபோல் இதனை உணர்ந்து கொள்க.

போரில் எய்தும் இறப்பினைத் தம் பிறப்பிற்கோர் பெரும் பேறுக நல்ல வீரர் பேணி நிற்பர் என்க.

ஒட்டிய பகைஞர் வந்து உருத்த போரிடைப்
பட்ட.வர்; அல்லரேற் பரம ஞானம் போய்த்
தெட்டவர்; அல்லரேற் செல்வம் ஈண்டென
விட்டவர்; அல்லரேல் யாவர் வீடுளார், எனத் தசரதன் கூறியதுங் காண்க. ஞானிகள் தத்துவ வுணர்வால் எய்தும் முத்தியை வீரர்கள் தம் வீரச் சாவால் எய்துவர் என்பதும், அச் சாக்காடு, தன்னைக்கொண்டவர் மீண்டு பிறந்து மற்றோர் சாவைக் காணுவண்ணம் சிறந்த நிலையில்

இகழச் செய்யும் என்பதும் இத நூல் எளிது தெளியலாகும்,

போரில் எவ்வகை ஈயிலும் வீரர் பின் வாங்கலாகாதென்பதும்,

அதில் இறந்து படுதலே தமக்குச் சிறந்த பேருக அவர் கருதி நிற்கவேண்டும் என்பதும் இதன் திரண்ட பொருளாம். படைச் செருக்கின் நிலையை உறுதிபெற அறுதியிட்டு இறுதியாக உணர்த்தியிருக்கும் அழகை இதில் உய்த்து நோக்குக.

வேலெதிர்வரினும் விழித்தகண் இமையா
வீறுமெய் யூறுகாணுமே
யாலிய சினத்தின் ஊழிலாட் டயரும
ஆண்மையும் அழியினல்லாது
சீலே வஞ்சினஞ் செய்யாத மையாத தீரமும்
வேந்து சிறினுஞ் செல்
வாலிய மறமும் மன்கண் நீருகுப்ப மடிதலும்
படைச் செருக்காகும்.

என்பதுங் காண்க. போரில் என்றும் உயிர்ப்பொருட்டு அஞ்சி வீரர் புறங்கொடுக்கலாகாதென்பது குறிப்பு. போர்க்களம் புகுந்தபின் வென்றுவருதல், அல்லது பொன்றிவீழ்தல் என்னும் இவ்விரண்டிலொன்றையே வீரர் பெரிதும் துணிந்து நிற்பர்; உயிரைப்பேணிப் புறங்கொடுத்தலே அம்மரபில் 78-ம் அதிகாரம் படைச் செருக்கு. 2101

தோன்றிய மகளிருங்கூட வெறுப்பர். முன்னாளில் பருவமுதிர்ந்த கிழவியொருத்தி தன் அருமை மகனைப் போருக்கனுப்பினாள்; அவன்போய் அமர்செய்து பகைவர் எவிய படைக்கலங்களால் உடலமுழுதும் துளைபட்டு முடிவில் இருபிளவாகி இறந்து வீழ்ந்தான்; சிலர் விரைந்துவந்து; அம்மா! " உன் மகன்

போரில்புறங்
காட்டி ஓடிவிட்டான் ” என மாறுபட
உரைத்தார்; அதனைக்
கேட்டவுடனே இவள் கிளர்ந்து கொதித்து
என்மகன் ஓடிய
துண்மையானால் அவன் பாலுண்டு வளர்ந்த
என் மு லை க ளை அறுத்து எறிவேன் என்று
சூளுரை புகன்று வாள்கைக்கொண்டு படுகளம்
புகுந்து பிணங்களைப் புரட்டித்தேடி
அங்குத் தன் அருமைமகனுடல் இரு துணி
பட்டுக்கிடப்பக் க ண்டாள். உடனே
அம்முதுமகள் துயரம் யாதும் உறுமல் அற்ற
துணிகளை எடுத்து முத்தம் கொடுத்துத் தான்
அவனைப்பெற்ற காலத்திலும் பெரு
மகிழ்ச்சியுற்றுப் பின்புபோய் அவன் பெயரை
ஓர் அருங்கல்லில் எழுதித் தன் மரபுக்கோர்
பெரும் பேறுசெய்தாள். அவளது
மனநிலையை அக்காலத்துப் புலவர் பலரும்
போற்றிப் புகழ்ந்தனர்.

நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்றுபலர் கூற
மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்
முலையறுத் திடுவென் யான் எனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே. ('புறம்') இதில், மேற்குறித்த இவளது வீரநிலை விளங்குதல் காண்க. இத் தகைய மனப்பான்மை ஆண்மக்களிடத்தும் இப்பொழுது பொய் யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப்

போயுள் எமையால் அச்சாவை இரங்தேனுங் கொள்க என்று அடிகளருளிய பொரு ளினருமையை அறிதல் அரியதாகும்; ஆயினும் ஆனவரையும் ஆய்ந்து அதன் மேன்மையை நன்றி உணர்ந்துகொள்க. போரில் இறப்பு வீரர்க்கு மேல் சிறப்பாம் என்பது கருத்து.



வெண்பா.

பொருகளத்தில் புகுந்து சாதலைச் சிறந்தவீரர் மிக விரும்பி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கன்னன்பால் உணரப்படும்.

கதை.

கன்னன் துரியோதனனுக்கு இன் னுயிர்த் துணைவனாய் நின்று பலவகையிலும் அவனுக்கு இதம்புரிந்துவந்து பாரதப் போர் மூண்டபொழுது அதில் எதிரிகள் மிக வருந்தி ஏங்குமாறு இவன் அடலமர் செய்தான்.

இவனது வீரநிலையை நினைந்து
கௌரவரனைவரும் விம்மிதமெய்தினர்.
பத்துநாள் வரையும் வீடுமரும்,
ஐந்துநாளாகத் துரோணரும் முறையே
சேனைத்தலைவரா யமைந்து நின்று
அழிந்துபோனமைபால் பதினேழாநாட்
போரில் இவன் படைத்தலைவனாய் நின்று
பொருது மறுநாள் படையை அணிவகுத்து
அமர்க்களம் புகுந்தான். பகைவரது
படைத்தலைவனாகிய திட்டத்துய்மனும்
தன்படையை அழகுபெற அணிசெய்து எதிர்
நிறுத்தினன். அமர் குறித்து அன்று
அமைந்துநின்ற அதன் நிலையினை நோக்கித் துரி
யோதனன் சிறிது நெஞ்சங்கவன்றான்.
இவன் அதனை நுணுகியறிந்து அரசே!
யாதும் கவலற்க; இன்று என்தேர் ஊர்தற்கு
ஓர் தலைமையான வலவன் வேண்டும். அதற்குச்
சல்லியன் அமைவனாயின் மிகவும் நல்லதாகும்.
அவன் இன்றென் மணிநெடுந்தேர் கடவுமாகில்
அருச்சுனனுக்கு அடலாழி

யவனேயன்றிச்
சிவன்வந்து தேர்விடினும் கொல்வேன்
அந்தத்தேர்நின்றார் இருவரையும்
செங்கோல்வேந்தே.
பவனன்சேய் முதலான துணைவர் ஒரோர் பகழிமுனை
தனக்காற்றார்;
பரவையாடைப
புவனங்க ளனைத்தையும் நின் குடைக் கீழாக்கிப்
புரிதிறல் வாகையும்
நினக்கே புனைவிப்பேனே. (க)
நஞ்சோற்றம் பெறநுகர் வுற் றிருண்ட கண்டர்
நற்றொண்டர் வடிவமென
நண்ணும் வெண்ணீற்
றஞ்சோற்று மடற்கைதை கமழுங் கானல் அகன்குரு
யானின் றிம்பால்
நாட்டரியேறே!
வெஞ்சோற்றோடு இனிதருந்தி யமுதருந்தும் விண்ணவர்போல் இந் நெடு
நாள் விழைந்து வாழ்ந்தேன்
செஞ்சோற்றுக்கடன் இன்றே கழியேனுகில் நின்டோள்கள் வளர்த்ததனால்
செயல்வேறுண்டோ. (உ)

# 78-ம் அதிகாரம் படைச் செருக்கு.

என்று மன்னன் தேறிநிற்குமாறு கூறிவிட்டுப் போரில் ஏறி இவன் வீர வில்லை வளைத்து வெஞ்சமர் விளைத்தான். நின்றவரை யெல்லாம் நிலை குலைத்து வெற்றிசெய்து வருங்கால் விசயன் வந்தெதிர்த்தான். கண்டவர் கலக்கக் கடும்போர் நிகழ்ந்தது. நாகாயுதம் முதலிய உறுதிகள் யாவும் ஒழிந்துபோக இறுதியில் தனியே இவன் இளைத்திடலானான்; உடல் முழுதும் பகழிகள் பாய்ந்து உதிரஞ் சோர்ந்து உயிர்நிலை தளர்ந்தும் பொருதிறங் குன்றாது உறுதிசெய்து நின்றான்.

எத்தலங்களினும் ஈகையாலோகைவாகையால் எதிரிலா வீரன்
மெய்த்தலமுழுதும் திறந்துகு குருதிவெயிலவன் கரங்கள்போல் விரிய

கொத்தலர் அலங்கல் மகுடமும் கவசகுண்டலங்களு முருக்குலைத்தும்
கைத்தலமறந்த தில்லைவிற் குனிப்பும் கடுங்கணை தொடுசதிருங் கணக்கும்.

அதுபொழுது கண்ணன் இனி அம்புதொடாதே என்று விசயனை நிறுத்திவிட்டு மறையவன்போல் வடிவுகொண்டு இவனிடம் வந்து "ஈண்டிய வறுமைப் பெருந்துயரடைந்தேன் இயைந்தது ஒன்று இக்கணத்து அளிப்பாய்" என்று வேண்டி அருகுநின்றான். அவனது நிலையினை இவன் அமையநோக்கினான், ஆவியோ நிலையிற் கலங்கியது ஆக்கையகத்ததோ புறத்ததோ அறியேன் பாவியேன் வேண்டும் பொருளெலாம் நயக்கும் பக்குவந்தன்னில் வந்திலை யால், ஒவிலாது யான் செய் புண்ணியமனைத்தும் உதவினேன் கொள்க நீ உனக்குப், பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றால் புண்ணியம் இதனினும் பெரிதோ. என்று

இனிதுமொழிந்து தன் இதயத்து
அன்பின்வாய் அம்பால் அன்போடு
அனைத்தையும் அவனுக்கு அளித்து ஆவி
நீங்கி என்றும் மீளாத மெய்ப் பதத்தை
மேவினான். இவனது ஆண்மை வண்மை
அறிவுகளை வியந்து அமரரும போற்றினர்.
இவன் இறந்ததை யறிந்து
பொருகளமுழுவதும் இரங்கியழுதது.
துரியோதனன் மறுகியோடிவந்து இவன்மேல்
உருகி வீழ்ந்தான்.

அனையார்தம் படைக் கடலின் அருவிலைக்குக்
கரையேறலான கோலப்
புணையாய் எத்திறங்களினும் பகைமுற்றவெலாம்
புகலத்தக்க துணையாய்
என்னுயிர்க்குயிராம் தோழனுமாகிய வுன்னைத்
தோற்றேனில் இணையாரும் இலா அரசே!
யாரைக்கொண்டு அரசாள இருக்கின்றேனே (க)

2104 திருக்குறட் குமரேச

வெண்பா.

சூழ்வே லே உலகாளுஞ் சூழ்ச்சியும் இப்பெருஞ் செல்வத் துவக்கு நெஞ்சால் வீழ்வேனோ? அமராட வீமனெடும் தலைசாலில் விளைந்த செற்றம்
தாழ்வேனோ? உனையொழிந்தா் தம்பியரை யொழிந்துமினித் தனித்து
னானே, வாழ்வேனோ? வாழ்வே! என் மனவலியே! வருகின்றேன் வருகின்
றேனே. என்று வாய்விட்டலறிக் கண்ணீர் சோரக் கலங்கி அழுதான். ஆதரித்தவன் கண்டு நேரில்இரங்கப்போரில் இவன் எய்திய சாவை வியந்து வீரரனைவரும் விரும்பிப் புகழ்ந்தார். புரந்தார் கண்ணீர் மல்கச் சாகற்பின்
சாக்காடு இரந்தும் கோட்டக்கது உடைத்து என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

போற்றினர் நின்றிரங்கப் போர்முகத்தில் சென்றிறந்தான்

தோற்றிஞன் மெய்ச்சீர் தொழு.

மே பாரிவிறந்திலை வீரர்க்குப் பெரும் பேறும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின்
தொகைப்பொருள்.

நல்ல வீரர் தம் ஆண்மை நலந்தோன்ற முன் சொல்லிப் பொருவர். புல்லியர் மீது அவர் பொருதிடச் செல்லார். எதிர்ந்த வர் தளர்ந்தால் உடனே இரங்கி யருள்வார். ஊறினுக்கஞ்சாது என்றும் போர்மேற் செல்வர். உயிரழிய நேர்ந்தாலும் தம் உள்ளங் கலங்கார். போர்பெற்ற நாளே புனிதம் என்றெண்ணு வார். உற்ற உயிர் ஓம்பாமல் அவர் வெற்றியே விழைவார். போர் பெறல் அவர்க்குப் பேரின்பமாகும். உரைத்த வஞ்சினம் முடியாரேல் தம் உயிரினை முடிப்பர். போரிற்சென்று சாதலே என்றும்

வீரர் காதலித்திருப்பர் என்பதாம்.

எஅ-வது படைச்செருக்கு முற்றிற்று.

ரு-வது படையியல் முற்றிற்று.

---

# ஆறாவது

# நட்பியல்.

அரசு அமைச்சு அரண் கூழ் படை என ஐந்து இயல்கள் இதன்முன் அமைந்துள்ளன ஆதலால் இஃது ஆறாவதென நின்றது. இது, நட்புமுதல் மருத்திருகப் பதினேழு அதிகாரங்களையுடையது. நட்புப் பதினேழ் என்றதனுங் காண்க.

79-ம் அதிகாரம் நட்பு.

2105

## 79-ம் அதிகாரம்

## நட்பு.

அஃதாவது ஒருவரை ஒருவர்

கேசித்துக்கொள்ளுதல். திண்மையான
படைபோல் உண்மையான நட்பினரும்
அரசனுக்கு உற்று துணையாய் நின்று
உதவவல்லராதலால் படைச்செருக்கின் பின்
இது வைக்கப்பட்டது.

781 தேர்ந்து கதிரோன்சேய் சிராமன்
நட்பினை மேயன்
கூர்ந்துணர்ந்து செய்தான்
குமரேசா—ஓர்ந்து
செயற்கரிய யாவுள நட்பின்
அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.
(க)

இ—ள்.

குமரேசா! சுக்கிரீவன் இராமனது
நட்பினை என் மிகப் பேணிச் செய்து
கொண்டான் எனின், நட்பின் செயற்கரிய
யாவுள; அதுபோல் வினைக்கு அரிய காப்பு

யாவுள என்க.

நட்பின் = நட்புப்போல. இன் உருபு ஒப்புப் பொருளது.

வினைக்கு அரிய காப்பு = பகைவர் செய்யும் தீயவினைகளை நீக்குதற்குரிய அரிய காவல். இனி, வினை என்பதற்குத் தான் செய்யக் கருதிய காரியம் என்று கொண்டு தன் காரியங்கள் இனிது
முடிதற்குரிமையான அரிய பாதுகாவல் எனினுமாம்.

நட்புப்போலச் செய்து கொள்ளுதற்கு அரிய பொருள்கள் யாவையுள;
செய்து கொண்டால்
அதுபோல வினை முடித்தற்குரிய அருமையான பாதுகாவல்கள் யாவையுள என்பதாம். யாதும் இல்லை என்பதை வினா உணர்த்தி நின்றது.

நட்பு மிகச் சிறந்தது; கருத்தூன்றி முயன்று நீ அதனை ஆக்கிக் கொள்க என்று

அடிகள் அருள, உடனே அதனை விரும்பிச் செய்துகொள்ள வேண்டுமா? தானே வந்து இசைந்து நில்லாதா? என இனந்தெரியாமல் ஒருவன் எதிர்ந்து நோக்க அவனை நோக்கி இயம்பியதாக இதனை உணர்ந்துகொள்க.

2106 திருக்குறட் குமரேச வெண்பா.

நல்ல நண்பர் கிடைப்பது அரிது; கிடைத்தாலும் உணர்ந்தறி யாமல் ஓர்ந்து தொடர்ந்து உரிமைசெய்து வரல் அரிது என்பார் நட்பின் செயற்கரிய யாவுள? என்றார்; அங்ஙனம் செய்துகொண்டால், பகைவரை வெல்லுதல் முதலாகத் தான் கருதிய கருமங்கள் யாவும் இனிது முடிக்கற்கும், அவர் ஆற்றும் இடர் வினைகள் தன்னை அணுகாவண்ணம் அடர்த்தொழித்தற்கும் சிறந்த துணையாம் என்பார் அதுபோல வினைக்கு அரிய காப்பு யாவுள? என்றார்.

அல்லல் வினைகளை யொழித்துத்

தன்னவும், நல்ல வினைகளை
வளர்த்துக் கொள்ளவும் நட்பு வல்லதாம் என்பதாம்; ஆகவே அதனை நன்குசெய்து கொள்ளாதவன், ஒன்றுவந்தபோது யாதும் செய்யமுடியாதவனாய் வெய்துயிர்த்து விழிப்பன் என்பதாயிற்று. இதனால் நட்பின் இயல்பும் அதனை உடையார் எய்தும் உயர்வும் உணரலாகும்.

எவ்வளவு ஒட்பமுடையவனாயினும் நட்பினரில்லையாயின் பக்கவேர் இல்லாத பழுமரம்போல அவன் நிட்பம் உறான் ஆதலால் தனக்கு உறுதுணையாகச் சிறந்தநட்பினைச் செய்துகொள்ள வேண்டும் என்றவாறு; அங்ஙனம் கொண்டால் கண்ணனைக் கொண்ட பாண்டவர்கள் போல

நண்ணலர் செய்யும் நலைகளை நீக்கி
எண்ணிய யாவும் இனிது முடித்துச்
சீரும் திறலும் பேரும் பெற்று
யாரும் போற்ற அமைந்து

விளங்குவர். என்க.

எய்தற்கரிய இப் பிறப்பினை எய்தியுள்ள

மக்கள் செய்தற்கரிய
நட்பினைச் செய்துகொள்ளவேண்டும் என்பது
கருத்து. முத்திக்கு வித்தாகும்
முழுதுணர்ந்தோர் பெருநட்பே சித்திக்கும்;
நாள்தோறும் தேவர் பெறற்கு அருந்திருவும்
சித்திக்கும் படி அருளும்; செப்பரிதால் அது.
என்பதுங் காண்க.
நல்ல நட்பினரை
அடைந்துகொண்டவர் அல்லல் நீங்கி எல்லா
நலங்களையும் எய்தி விளங்குவர் என்பது இதில்
உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை
சுக்கிரீவன்பாலும், இராமன்கண்ணும்
உணரப்படும்.

79-ம் அதிகாரம் நட்பு.

2107

## கதை.

சுக்கிரீவன் வாலியொடு பகைத்து வருந்தியிருந்தபொழுது இராமனது நட்பை அரிதிற்பெற்றான். தான்கருதியுள்ள காரியம் இனிது முடிதற்கு அப்பெரியவன் துணை கிடைத்தமையை நினைந்து பெருமகிழ்வுற்றான். மதிமந்திரியாகிய அனுமானும் மற்றை வானரங்களும் நகைமுகத்தர்களாய் உவகைமீக்கூர்ந்தார். தமக்கு மூண்டிருக்கும் வினைக்கு இத்துணை வேண்டியதே என இராம இலக்குவர்களும் தம்முள் மிகவும் களிப்புற்றார். இருதிறத்தார்க்கும் விழைந்துள்ள அருவினைகள் முடித்தற்கு இவ்வுறவு அமைந்ததாம் என அனைவரும் உவந்திருந்தார். வினைக்கு அரிய காப்பாயமைந்த இந்நட்பினை வியந்து புலவர் பலரும் புகழ்ந்து கூறியுள்ளார். கம்பர்பெருமானார் உவமையணியில்வைத்து

இதன் அருமையை அழகுபெற
அருளியுள்ளார்.
தவாவலி அரக்கரென்னும் தகா இருட்
பகையைத் தள்ளிக்
குவாலறம் நிறுத்தற்கேற்ற காலத்தின்
கூட்டமொத்தார்;
அவாமுத லறுத்த சிந்தை அநகனும் அரியின்
வேந்தும்
உவாவுற வந்துகூடும் உடுபதி இரவி
யொத்தார். (க) கூட்டமொத்
திருந்த வீரர் குறித்ததோர் பொருட்கு
முன்னாள்
ஈட்டிய தவமும் பின்னர் முயற்சியும் இயைந்த
தொத்தார்;
மீட்டும் வாளரக்க ரென்னும் தீவினை வேரின்
வாங்கக்
கேட்டுணர் கல்வியோடு ஞானமுங்
கிடைத்ததொத்தார். (உ)
இங்ஙனம் அருமையோடு பெற்ற
இவ்வுரிமையைக் கொண்டு தனக்கு முன்பு

அமைந்திருந்த பகைமையை யறுத்துச் சுக்கிரீவன் உவகையுற்றான். தன் பெருமகிழ்ச்சியால் இந் நட்புச் சிறிது பிறழ நேர்ந்தமையை யறிந்து மிகவும் கலங்கி அதன்பின் யாதும் குன்றுவண்ணம் ஆர்வமுடன் பேணி வந்தான். படைகளோடு இவனைத் துணைக்கொண்டு தன் வினை முடித்தற்கு இராமன் இலங் கையை யடைந்து சுவேல மலையில் நின்றபொழுது இச் சேனை யைக்காணுமாறு இராவணன் ஓர் சிகர கோபுரத்தின் மீதேறி நிகரற்ற தோற்றத்தோடு நிலவி நின்றான். அவனைக் கண்ட வுடனே இவன் காய்ந்து அவன்மேற் பாய்ந்தான். இருவருக்





கும் அங்குப் பெரும்போர் மூண்டது. முடிவில்

தெய்வாதீனமாக மணிமுடியைப் பற்றிக்கொண்டு அவன் கையிலிருந் து தப்பி இவன் கடுகி மீண்டு இராமனை யடைந்தான். நட்பின் திட்பத் தால் வீர வெறியோடு போய் இனமறியா மல் இவன் அழிவுற நின்றனே ! என்று அவ்வீர வள்ளல் வெய் துயிர்த்து இது செய்யலாமா ? என்றன். உடல் முழுதும் போர்வினையால் நிலை குலைந்து நின்றும் உறவினுரிமையை ஒரு சிறிதும் செய்யாமல் வறிது மீண்டேனே! என்று இவன் உருகி மொழிந்தான்.

காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்;
நாட்டிலே குகனர் செய்த நன்மையை நயக்கமாட்டேன்;
கேட்டிலேன் இன்று கண்டுங் கிளிமொழி மாதராளை மீட்டிலேன்; தலைகள்பத்தும் கொணர்ந்திலேன்;
வெறுங்கைவந்தேன். (க) வன்பகைமிற்க எங்கள்

வானரத் தொழிலுக் கேற்ற
புன்பகை காட்டும் யானே புகழ்ப்பகைக்கு ஒருவன் போலாம்
என்பகை தீர்தது என் ஆவி அரசொடும் எனக்குத்தந்த
உன்பகை உனக்குத் தந்தேன் ; உயிர்சுமந் துழலா நின்றேன். (உ) செம்புக்கும் சிவந்த செங்கட் டிசைநிலைக் களிற்றின் சீற்றக்
கொம்புக்கும் குறைந்ததுண்டே என்னுடைக் குரக்குப் புன்றோள்
அம்புக்கு முன்னஞ் சென்று உன் அரும்பகை முடிப்பல் என்று
வெம்புற்ற மனமும் யானும் நீநின்றி மீளவந்தேன்.
(ங) நூல்வலி காட்டும் சிந்தை நம்பெருந் தூதன் வெம்போர்
வேல்வலி காட்டுவோர்க்கும் வில்வலி காட்டுவோர்க்கும்
வால்வலி காட்டிப் போந்த வளநகர்புக்கு மற்று என்

கால்வலி காட்டிப்போந்தேன்; கைவலிக்கு அவதியுண்டோ. (ச) என்று இவன் கரைந்து நின்றதைக் கண்டு இராமன் உவந்து தழுவி மேல் உறவதைச் செய்தான். இவன் துணைவலியால் பகையின் வினைவலி கடந்து பின்பு அவன் விளங்கிநின்றான், இவனும் அப் பெரியவன் நட்பைப் பேணி யொழுகியதால் பகை வினை கடிந்து நல்வினையாளனாய்ச் சிறந்து நிலவினான். நல்ல நண்பர் அமைவது ஒருவன் பெறுதற்கரியதோர் பேறும் என்பதும், அது பெற்றால் அல்லல் யாவும் நீங்கி எல்லா நலங்களும் எளிதில் எய்தும் என்பதும், எண்ணியன முடித்தற்கு அதுபோ

79-ம் அதிகாரம் நட்பு.



லச் சிறந்த பாதுகாப்பு வேறு யாதும் இல்லை

என்பதும், அதன் உண்மையின் உயர்வும் உலகம் இவர்பால் உணர நின்றன.

நல்லார் தம் நட்போன்று நண்ணின் உயர்நலங்கள்

எல்லாம்பின் எய்தல் எளிது.

நல்லாரை நாடி நட்புச்செய்துகொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

782 கோடாமல் நத்தனியக் கோடனிவர் கேண்மையென்றும்

கூடி நின்றதென்னே குமரேசா—கூடி
நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(உ)

இ—ள்.

குமரேசா! நத்தன் நல்லியக்கோடன் என்னும் இவர் கேண்மை நாளும் பெருகி என் மேன்மைபெற்று

நின்றது எனின், நீரவர் கேண்மை
பிறைநிறைநீர; பேதையார் நட்பு மதிப் பின்
நீர என்க.
    மேல், நட்பினைச்
செய்துகொள்ளவேண்டும் என்று பொதுவாக
உரைத்தார்; அதனை யாரோடு
செய்துகொள்வது என்று ஒருவன் ஆராய்ந்து
நோக்க, நல்லகுணமுடையாரோடே செய்ய
வேண்டும் எனச் சிறப்பாக இதில்
உணர்த்துகின்றார்.
    நீரவர் = இனிய நீர்மையுடையவர்.
அஃதாவது அறி
வொழுக்கமுடையராய் ஆருயிர்க்கு அருள்
செய்யும் சிலர் என்க. நீர்மை = இயல்பு,
தன்மை. இனி, நீர் என்னும் பெயரடியாகப்
பிறந்ததாக்கொண்டால் நீர்போன்று
எவ்வுயிர்க்கும் இதம் புரியும் இயல்பினர்
என்று கொள்க. பேதையர் என்றதற்கு ஏற்ப
மேதையர் என்னாது நீரவர் என்றார் இனிய

நீர்மைகள் யாவும் அஃதுடையதென்பது தோன்ற.

பிறை = குறைந்த கலையையுடைய மதி; இளஞ்சந்திரன். குழந்தைவெண்மதிக்குடுமியன் எனவும், குழவித்திங்கள் எனவும், வருவன காண்க. மதி = கலைகள் நிறைந்த மதி; பூரணசந்திரன் 2110 திருக்குறட் குமரேச வெண்பா,

என்ப. " அணிநிழல் வயங்கொளி யீரொண் தீங்கதிர்ப், பிறைவளர் நிறைமதி " என்றார் இளவெயினனார்.

கேண்மை = கேளாந்தன்மை; கேள் = உறவு. கேட்குந் தன்மை என்றுகொண்டால் ஒருவரை ஒருவர் உசாவி உபகரிக்கும் இயல்பு என்க. நட்பு தொடர்பு கேண்மை என்பன பொதுவாக ஒருபொருள் சொற்களேயாயினும் சிறப்பாக இஃது உரிமையிக் குள்ளதை உய்த்துணர்ந்து கொள்க.

அறிவுடையார் கொண்ட நட்புக்கள் பிறை
நிறையுந் தன்மை போல் நாள்தோறும் வளர்ந்து
தோன்றும்; மற்றை அறிவிலார் நட்புக்கள்
நிறைந்தமதி பின்பு குறையுந் தன்மைபோல்
நாளும் கழிந்து ஒழிந்துபோம் என்பதாம்.

கொண்டாது பன்மையால்
நட்பியல்கள் பலவாமாதலால் நீர என்னும்
பன்மை முற்றோடு அது நேர நின்றது.
நல்லறிவாளரோடுதான் நட்புக்
கொள்ளவேண்டும்; புல்லரோடு
கொள்ளலாகாதென்பதை உணர்த்தத் துணிந்த
அடிகள், அவற்றின் உயர்வு இழிவுகளை எளிதில்
உணர்ந்துகொள்ளுமாறு உவமை முகத்தால்
விளக்கி இதில் உணர்த்தியருளினர். வேறு
உவமை
கூறாது பிறையினை உரைத்தது, நீரவர்
கேண்மையால் நிலவின்
தோற்றம்போல் இவ் உலகிற்றுண்டாம்
நிலைமைதோன்ற என்க.

கலைநிறைந்த மதியாளர்க்கு, கலைநிறைமதி
ஒப்புறநின்ற நட்பம்
உய்த்துணரத்தக்கது.

பூர்வபக்கத்துச் சந்திரன்போல்
அறிவுடையார் நட்பு நாளும்
வளர்ந்து விளங்கும்; அறிவிலிகள் தொடர்பு
அமா பக்கத்துச் சந்
திரன்போல் தேய்ந்து தொலையும் என்று சுட்டி
உறுதியான நட்
பினை ஓர்ந்துகொள்ளுமாறு இஃது உணர்த்தி
நிற்கும் அழகினை
யூன்றி உணர்ந்துகொள்க. கொள்ளத்தக்கது
கூறுவார், தள்ளத்
தக்கதையும் உடன் தந்து கூறினார்.

பெரியவர் கேண்மை பிறைபோல
நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந்
தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

என்றது நாலடி. அடிகள்

79-ம் அதிகாரம் நட்பு.

2111

அழகுபெறச் சுருக்கித்திரட்டி வைத்துள்ள கருத்தை அம்மொழி களைக்கொண்டே விரித்து இது விளக்கி நிற்றல் காண்க. இந் நூல், சில்வகை எழுத்திற் பல்வகைப் பொருளைத் திட்ப நுட்பம் பெறச்செப்பமாகச் செய்யவல்ல நம்ஐயனது தெய்வக்கவித்திறம் இனிது தெளிவாம். இக்கவிகளாகிய அமிர்த துண்டங்களை அருந்திஉய்யாதார் ஐயோ! பிறந்தும் பொய்யானார்.

கருணைமீக் கொண்ட கண்ணன், குசேலன் முன்

உரிமை மீக்கொண்ட

தன்பெனஒண்பிறை

கருணை மீக்கொண்டு தாமம்

தழைத்ததே. என்றபடி பெரி

யோர் கொண்ட நட்பு நாளும் பெருகி
நலம்பயந்து உலகம் இன்
புற என்றும ஓங்கி நிற்கும எனக.
கனைகடல் தண்சேர்ப்ப கற்றறிந்தார்
கேண்மை
நுனியிற் கரும்புதின் று
அற்றே—நுனிநீக்கித்
தூரிற் றின்றன்ன தகைத்தரோ
பண்பிலா
ஈரம் இலாளர் தொடர்பு.
எனவும்,
களிகடற் றண்சேர்ப்ப நாள்
நிழற்போல
விளியும் சிறியவர்
கேண்மை—விளிவின் றி
அல்கு நிழற்போல் அகன் று
அகன் று ஓடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.
எனவும் வருவன கண்டு

எண்ணற்குரியன. கருமையையும் நிழலையும் காட்டி மேன்மக்களுடைய கேண்மையின் பான்மையையும், கீழ்மக்களது உறவின் தன்மையையும் உணர்த்திநிற்கும் இவற்றோடு இதில் உவமையான கலைமதிக்குள்ள நிலைமையையும் தலைமையையும் உய்த்துணர்ந்து கொள்க.

அறிவுடையார் செய்துகொண்ட நட்பு, பிறை மதிபோல் வளர்ந்து நாளும் உயர்நலம் பயக்கும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை நத்தத்தனார் பாலும், நல்லியக்கோட னிடமும் உணரப்படும்.

கதை.

நத்தத்தனார் என்பவர் தொண்டைமண்டலத்தின் பகுதி 'யாகிய இடைக்கழி நாட்டிலே நல்லூரிலே பிறந்தவர். அறி 2112 திருக்குறட்

வொழுக்கங்களிற் சிறந்தவர். என்றும்
இனிய சீர்மையர். அரிய நூல்கள் பலவும்
பயின்றவர். செய்யுளியற்றும் திறமும்
வாய்ந்த வர். யாவரோடும்
பாடறிந்தொழுகும் பீடுடையவர். இவரது
இயற் பெயர் தத்தனார் என்பதே. குண
நலங்களில் சிறந்து நின்றமையால் நாடும்
ஊரும் சிறப்புக் குறியும் சேர்த்து இடைக்
கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் என யாவரும்
அன்போடு இவரை அழைத்துவ ந்தார்.
இவ ரது புல மையையும் நிலைமையையும் அறி
ந்து நல்லியக் கோடன் என்னும் குறுநில
மன்னன் இவரை அன்போடழைத்துத்
தன்பா ல் வைத்து இன்புற ஆதரித்து
வந்தான். வரினும் இவர் அடிக்கடி
விடை கொண்டு பிரிந்து தம் நகரினை யடைந்து
பின் நபப்ப மீண்டார். அகலாது அமருமாறு
அவன் செய்துவ ந்த அருமைகளை யறிந்து

இவர் அளவிலுவகை கொண்டார்.
பன்னாளும் உடனிருந்து பழகி அவன் உயர்
நலங் களைக் கண்டு உள்ளங் கரைந்து அவனை
உயிரென ஒப்பினார். ஒரு புலவனுக்கு
அவனிலைமையைப் புலப்படுத்தியுய்த்ததாக
உருவகித்துச் சிறுபாணாற்றுப்படை
என்னும் ஓர் இனிய நூலைச் செய்து உலக
முழுவதும் அவனது புகழ்மணங் கமழச்
செய்தார். அதில் அவன் இயல்பினை
விளக்கியிருக்கும் பகுதியுட் சிறிது
இதனடியில் வருகின்றது.

செய்ந்நன்றி யறிதலும் ; சிற்றினம்
இன்மையும் ;

இன்முக முடைமையும் ; இனிய
னாதலும் ;

செறிந்துவிளங்கு சிறப்பின்
அறிந்தோரேத்த,

அஞ்சினார்க்கு அளித்தலும் ;
வெஞ்சினம் இன்மையும் ;

ஆணணிப்குக லும் ; அழிபடை தாங்கலும் ;
வாண்மீக் கூற்றத்து வயவரேத்தக்
கருதியது முடிக்கலும் ; காமுறப் படுதலும் ;
ஒருவழிப் படாமையும் ; ஓடிய துணர்தலும் ;
அரியேறுண்கண் அரிவைய ரேத்த
அறிவுமடம் படுதலும்; அறிவுநன் குடைமையும் ;
வரிசை யறிதலும் ; வரையாது கொடுத்தலும் ;
பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்தப்
பன்மீன் நடுவண் பான்மதி போல
இன்னகை ஆயமொடு இருந்தோன்.
(சிறுபாண்)

79-ம் அதிகாரம் நட்பு.

2113

இவ்வனம் இருக்க அவனும் இவரது
இனிய நலங்களை
யுணர்ந்துணர்ந்து கழிபெருங் காதல்
கொண்டான். இவ்வாறு இவ்விருவருக்கும்
அமைந்திருந்த கேண்மை வளர்பிறைபோல்
நாளும் பெருகி வளர்ந்தது.
இவர்காலத்துச் சிலர் கொண்ட நட்புநிலை
குன்றிவீழ இவர் கேண்மை மட்டும் நிறைந்து
நிலைத்துத்
தமக்கும் பிறர்க்கும் பெரும்பயன் தந்து நிலவி
நின்றது. நீரவர் கேண்மை பிறை நிறை நீர
என்னும் உண்மையை உலகம் காண
இவர் உணர்த்தி நின்றார். சீர்மை மிக்க இந்
நீர்மையாளர் சங்கப்
புலவரோடு தங்கியிருக்குங்கால் நம் தெய்வத்
திருக்கதுறளின் மெய் மைத்திறனை வியந்து
பாடியுள்ளார். அதனை இதனடியில் காண்க.

ஆயிரத்து முந்நூற்று முப்பதா

அருங்குறளும்

பாயிரத்தி னோடு பகர்ந்த

கற்பின்—மேயவா நந்தர்

வாய்க்கேட்க நூலுளவோ? மன்னு

தமிழ்ப்புலவ

ராய்க் கேட்க வீற்றிருக்க லாம்.

(நக்கத்தனார்) இவாது நாமைபுலனும்,

நீர்மையும், புலமைபாண்மையும், மேன்மை யும்

இதனால்ளிது உணரலாகும்.

நலலார் செயுங்கேண்மை நாடோறும்

நன்றாகும்

அல்லார் செயுங்கேண்மை

யாகாதே—நல்லார்கள்

காய்முற்றின் றின்றீங் கனியாம்;

இளந்தளிர்நாள்

போய்முற்றின் என்னாகிப் போம்.

(சிவப்பிரகாசர்)

நூறுஆண்டு பழகினும் மூர்க்கர்
கேண்மை
நீர்க்குட் பாசிபோல்
வேர்க்கொள்ளாதே;
ஒருநாட் பழகினும் பெரியோர்
கேண்மை
இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே.
(அதிவீரராம பாண்டியர்).

அறிவாது கேண்மை யமிர்தாம் அறிவில்
சிறியரதோ வெங்கடுவே தேர்.

அறிவுடையார் நட்பே நாளும்
பெருகிவிளக்கும் என்பது இதனல்
கூறப்பட்டது.

---

2114 திருக்குறட் குமரேச
வெண்பா.
783 தென்னுகலைக் கண்ணனர்

தேர்வளவன் நண்பென்றும்

கொள்ளநின்ற இன்பேண்

குமரேசா—உள்ளி

நவிறொறும் நூனயம் போலும்

பயிறொறும்

பண்புடை யாளர் தொடர்பு.

(௩)

இ—ள்.

குமரேசா !

உருத்திரங்கண்ணனும் கரிகால்வளவனும் கொண்டிருந்த நட்பு என் குன்றாமல் வளர்ந்து என்றும் இன்பம் தந்து நின்றது எனின், நவில் தொறும் நூல்நயம் போலும் பயில் தொறும் பண்புடையாளர் தொடர்பு என்க.

மேல், குணமுடையார் நட்பு இளஞ்சந்திரன்போல் நாளும் வளம்பெற்று வளரும் என்றார்; இதில் நூல்நயம்போல் மேலான இன்பத்தை அது விளைவிக்கும்

என்கின்றார்.

நவில்தொறும் = கற்குந்தோறும். பயில்தொறும் = பழகுந் தோறும். பண்பு என்றது அறிவு, சீலம், அருள், அமைதி முதலிய உயர்குணங்களை. தொடர்பு = நட்பு.

படிக்குந்தோறும் நூல்நயம்போலப் பழகுந்தோறும் பண்புடையார் நட்பு இன்பந்தரும் என்பதாம்.

நல்ல குணவான்கள் நட்பு என்றும் இன்பந்தரும் ஆதலால் அதனைக்கூர்ந்து செய்துகொள்ளவேண்டும் என்று அடிகள் கூற உடனே ஒருவன் எதிர்ந்து நோக்கி அவ் இன்பம் எத்தகையது என்ன அவனைநோக்கி உணர்த்தியதுபோல் இஃதுரை நின்றது.

பண்புடையார் நண்பு பழகுந்தோறும்

நூல்நயம்போல் இன்
பம் மிகும் என்ற இது, நூல்வல்லார்க்கே
அன்றிப் பிறர்க்கு விளங்
காதே? எனின், அவர்க்கு அப்பொருளும்
விளங்காதாதலால் நய
முடைய இப்பயனுவமை கல்விப்
பயனுடையாரையே கருதி
நின்றதென்க. பொருள்கள் தெளிவாக
இனிது விளங்கும் பொரு
ட்டேஉவமைகள் எடுத்தாளப்படும்; இங்கு
உவமேயமாய பொரு
ளினும் மிக நுணுகி யுணரத்தக்க
நூல்நயத்தை உவமானமாக
இணைத்துவைத்தது என்னை? எனின்,
நவின்று நவின்று உளந்த
தும்பி நின்ற நம் தேவர் அனுபவத்தான்
என்க.

79-ம் அதிகாரம் நட்பு.

2115

தம் உளத்தில் முதிர்ந்துள்ள
அநுபவமே புறத்திற் சிறந்து வெளிவரும்;
தாம் செய்யும் வேள்விக்கு இடையூறாய்வரும்
அரக்கரை விலக்கிக் காக்கும்வண்ணம்
இராமனைத் துணைதரவேண்டி
வந்த விசுவாமித்திரர் "தவஞ்செய்வோர்கள்
வெருவாச்சென்று
அடைகாம வெகுளி என நிருதர் இடை
விலக்காவண்ணம், செரு
முகத்துக்காத்தி" என்று தசரதனை நோக்கி
உரைசெய்து நின்ற-
னர். முனிவருளத்தில் பயின்று பதிந்தன
உவமைகளாக இதில் பதிந்துள்ளமை காண்க.
பண்புடையார் நட்பு இவ்வுலகில் உயர் இன்பம்
பயக்கும் என்பார் நூல்நயம் என்றார்.
இறப்ப நினையுங்கால் இன்னாது
எனினும்
பிறப்பினை யாரும்
முனியார்—பிறப்பினுள்

பண்பாற்றும் நெஞ்சத்தவர்களோடு
எஞ்ஞான்றும்
நண்பாற்றி நட்கப் பெறின்.
என்றது நாலடி.
இப்பிறப்பு, துன்பமலிந்ததாயினும் ப
ண் பு டை ய ா ள ர் ' தொடர்பு
கிடைக்குமாயின் இன்பமாம் என
இஃதிசைத்து நிற்றல் காண்க.
மணமுடைய சந்தனக்கட்டை
தேயத்தேய மணம்பெறும்;, குணமுடையார்
நட்பு தோயத்தோயச் சுகம் பெருகும்;
கல்வி ஆய ஆய இன்பம தரும் என்க.
தேயச் சந்து சிறந்து மணம் பெறும்
பாய நீர்வயல் நன்கு பயன் தரும்
தோய மேலவர் நண்பு சுகம் புகும்
ஆய நூலின் அருஞ்சுவை
யோங்குமால், என்பதும் இங்கு
ஆயத்தக்கது. நூல் என்பது நுண்மாண்
நுழைபுல முடைய மேலோர்களது
மேதாவிலாசத்தில் நின்று தோன்றி என்றும்

மாறாத இன்பத்தை மன்னுயிர்க்கருளி நிற்கும்
மாண்புடைய தாதலால் அது
மேன்மக்களுடைய நட்பினியல்பை விளக்
க இங்கு ஒப்பாய் வந்தது. யூகியினது
நட்பினியல்பைப் பலமுறையும் ஆய்ந்துணர்ந்த
பிரச்சோதனன்

"நவில்தொறும் இனிய ஞானம்
போலப்
பயில்தொறும் இனியநின் பண்புடைக்
கிழமை
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் இன்புற"
இதனையே தன் உள்ளங்கொண்டு உரைத்துள்ளதும்

என்று
காண்க.

265



சிதையின் அழகைக் குறித்துக்

கூறுங்கால் அது "செஞ்சொற் கவி இன்பம்" போன்றது என்றார் கம்பரும்.

இம்பர் நாட்டிற் செல்வமெல்லாம் எய்தி அரசாண்டிருந்தாலும்
உம்பர்நாட்டிற் கற்பகக்கா ஓங்குநீழல் இருந்தாலும்
செம்பொன் மேருவனையபுயத் திறல்சேர் இராமன் திருக்கதையில் கம்பநாடன் கவிதையைப் போல் கற்றோர்க்கு இதயங்களிபாதே என்று நூல்நயத்தை நுவன்று சுவைத்த ஒருவர் புகன்றிருத்தல் காண்க. இத்தகைய கவிச்சுவையை, அவிச்சுவையே கொண்டு அகங்களித்துத் திரியும் புவிச்சுமைகள் காணா. ஒருமுறை புலவர் ஒருவர் காட்டப்புகுந்தும் அவர் அதனைக் காணமாட்டாமல் களித்திருந்தமைக்கு இரங்கி

மூடர் முன்னே பாடல் மொழிந்தால் அறிவரோ

ஆ ட்டுக் க தென புலியூர்
அம்பலவா—ஆடகப்பொற்
செந்திருவைப் போலணங்கைச்
சிங்காரித் தென்னையன்
அந்தகனே நாயகனு னல். என்று
அழுதுபோயினர்.

சிலமுள்ளார் தம நட்புக்கு ஒப்பாக வேறொன்றையுங் காட் டாது நூல்நயத்தைக் காட்டி ா து, என்றும சுவை குன்றாது நல மிகுந்து வரும் அதன் நிலைகூறி என்க.

தெள்ளமிர்தும் பாலும் தெளிதேனும் தீம்பாகும்
தள்ளரிய இன் சுவையே
தாங்கிடினும்—உள்ளமுறு
நூலின்பம் போல நுகருந்
தொறும்பெருகி
மேலின்பம் ஆமோ ? விளம்பு.
ஈண்டு இதனை உளங் கொள்க.
நற்குணமுடைய மக்கள்நட்பு நூல்நயம்போல்

என்றும் கலம் பயக்குமாதலால் அதனை நயந்து நாடிக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

குணமுடையார் தம்முட்கொண்ட நட்பு குன்றாமல் நின்று என்றும் இன்பந்தரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உருத்திரங்கண்ணனார் பாலும், வளவன் கண்ணும் உணரப்படும்.

79-ம் அதிகாரம் நட்பு.

2117.

கதை.

உருத்திரங்கண்ணனார் என்பவர் சோழநாட்டிலே கடியலூர் என்னும் ஊரிலே யிருந்தவர். மறையவர் மரபினர். நிறையும், பொறையும், நெறிசெல் ஒழுக்கமும், அறிவும், அருளும் அமையப் பெற்றவர். இல்லறத்தை இனிது நடாத்தி

நல்லிசை யுற்றவர்.
பிறவுயிர்கட்கு இதம் புரிதலையே தமக்குரிய
கடமையாகக் கருதி
நின்றவர். செய்யுள் இயற்றுதலிலும்
சொல்லாடலிலும் மிகவும்
வல்லவர். பெரும் புலமையோடு
அருங்குணங்களுமுடையராய்
இவர் விளங்கியிருத்தலைக் கண்டு
தொண்டைமான் இளந்திரையன் என்னும்
மன்னன் இவரோடு பெருநண்புகொண்டு மிக
மகிழ்ந்திருந்தான். அவனும் நூல்பலகற்ற
நுண்ணறிவாளனாதி
லால் அரசவையிலமர்ந்து இவர் கூறிவந்த
அறிவுரைகளைக் கேட்டு மேலும் மேலும்
இவர்பால் ஆர்வமிக்கூர்ந்தான். அவனது நுழை
புலனையும் தகவையும் நோக்கி வியந்து அவன்
குண நலங்களை என்றும்
உலகறிந்தின்புற ஓர் அழகிய நூலை இயற்றினர்.
அது, பெரும்பாணாற்றுப்படை என இது
பொழுது வழங்கப்படுகின்றது. நூலுகி

ஆராய்தற்குரிய அறிவு நயங்களும், உலக நிலைகளும் அதில் இனிது மிளிர்கின்றன.

முறைவேண்டுநர்க்கும்
குறைவேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு
அருளி
இடைத் தெரிந்துணரும் இருள்தீர்
காட்சிக்
கொடைக்கடன் இறுத்த கூம்பா
வுள்ளத்தோன். என்பதாதியாக அவன் உள்ளப் பெருமையும், வள்ளற் குணமும், பிறவும் விளங்க அதன்கண் இவர் உரை செய்துள்ளார். இவரது மதி நலத்தையும் தன்பால் வைத்துள்ள நண்பின் திறத்தையும் நினைந்து நினைந்து இவரை உயிரென ஓம்பி அவன் உபசரித்து வந்தான். வருங்கால் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்து வந்த கரிகால் வளவன் என்னும் மன்னர் பெருந்தகை இவரை விரும்பியழைத்துத் தன்னுடன இருந்துவருமாறு உவந்து பேணி னன். அவனது அன்பிற் பிணிப்புண்டு

சிலகாலம் அங்குஇவர் தங்கியிருந்தார்.
இருவருள்ளமும் ஒருமை மெய்தி அறிவும் திரு
2118 திருக்குறட் குமரேச வெண்
பா.
வும் சேர்ந்து நின்றதுபோல் இவர் அமைந்து
நின்றார். அவனது ஆண்மை
கேண்மைகளையறிந்து மகிழ்ந்து
பட்டினப்பாலை என்னும் நூல் ஒன்று
இயற்றி அவன் மேன்மையை இம்மேதினி
யெங்கும் இவர் விளங்கச் செய்தார்.
மலை அகழ்க்குவனே ; கடல்
தூர்க்குவனே ;
வான் வீழ்க்குவனே ; வளி
மாற்றுவனே. என அவன் எண்ணிய
எண்ணியாங்கெய்தும் திண்ணிய திறலை
வியந்து விளக்கிப் பிற நலங்களையும்
பட்டாங்குரைத்திருக்கும் இவரது
பாவன்மையை நோக்கி அக்காலத்துப் புலவர்
பலரும் போற்றினர். 'வம் மன்னன்

அகற்துப் பதிறை நூறாயிரம் பொன் பரிசி லாகத் தந்து
வரிசை பலவும்செய்ய இவர் உரிமை பெய்தி நின்றார். துறக்க இன்பம்போல் நட்பு நலந்துய்த்து நாளும் அவன் நயந்து நிற்குங்கால் தொண்டைமானும் வந்து இடை யிடையே கண்டுற வாடிக் களித்திருந்தான். பழகுந்தோறும் இவர்க்குள் அமைந்திருந்த நட்பு மிகுந்து தோன்றி நூல் இன்பம்போல் மேலின்பம் பயந்து விளங்கி நின்றது. இவரது கேண்மையின் பான்மையை அறிந்தவ ரெல்லாரும் வியந்து கொண்டாடினர். நவில் தொறும் நூல் நயம்போலும் பயில் தொறும் பண்புடையாளர் தொடர்பு என்னும் உண்மையை இவர் தொடர்ந்துணர்த்தினர்.
அல்லனூறும் இவ்வுலகாம் ஆரணியத் தோரிரண்டே

கலல கனிகளுள நாடுபினே—சொல்லினென்று
நூலாகும்; மற்றொன்றே நுண்ணறிவு சேலமிகு
மேலோர்நட் பாகுமிது மெய்.

இறைநேர் உணர்வேபோல் என்றும் புனிதர்
உறவால் உயரின் புறம்.

பண்புடையார் நட்பு நூல் நயம்போல நாளும் மேலின்பந் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

784

அன்றேன் இடித்துரைத்தார் ஆலத்து
குன்றுமற் சென்று குமரேசா—நின்று

சான்பு

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(ச)

2119

இ—ள்.

குமரேசா! தாம் நட்புற்றிருந்த அரசர்க்கு முற்பட்டு ஆலத்தூர்கிழார் என் நீதிகளை அறிவுறுத்திக்கூறினார் எனின், நட்டல் நகுதல் பொருட்டு அன்று; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு என்க.

மேல், குலமக்கள் தம்முட் கொண்ட நட்பு என்றும் நலம் மிகுந்து நிலைபெறும் என்றார்; இதில், நம்பினோர் நலமுறுவண்ணம் நாடிக் காப்பதே நட்பின் பயனும் என்கின்றார்.

• நட்டல் = நட்புக்கொள்ளல், நகுதல் பொருட்டு அன்று = சிரித்து விளையாடுதற்காக அன்று.

மிகுதி = நெறி கடந்தது ; அஃதாவது

பழியும் பாவமும் தருதற்குரிய வற்றைச்செயல். வடநூலார் இதனை அக்கிரமம் என்பர். இடித்தல் = அறிவுதோன்ற வற்புறுத்தி யுரைத்தல். இங்ஙனம் உறுதி சூழ்ந்து உரைப்பாரை இடிக்குநர் என்பர். இடிக்குந்துணையாரை என்றதுங் காண்க.

நட்பாடலில் நகையாடல் பெரும்பாலும் இயல்பாகுமாதலால் அதனை எடுத்துக்காட்டி அதன் பயன் அவ்வளவோடு அமைவதன்று; வேறொன்றுளது; அஃது இன்னதாம் என விளக்கி இஃதுணர்த்தியதென்க.

ஒருவனோடு ஒருவன் நட்புச்செய்தல் தம்முள் நளினம்பேசி நகையாடற்பொருட்டு அன்று; ஏதேனும் நெறிகடந்து தவறு செய்யத் துணிந்த இடத்து விரைந்து தாகி நெறியுரைத்து அறிவுறுத்தும் பொருட்டே என்பதாம்.

மக்கள் தம்முள் ஒருவரை ஒருவர் நயந்து தொடர்ந்து நட்பு ச்செய்துகொள்வது

களித்துப்பேசி, வீணே சிரித்துப் போவதற்
காக அன்று; இடையே யாதும் கவை புகா
வண்ணம் நன்கு பாது காத்து உயர்நிலை
யடைதற்காகவேயாம் என்பார் நகுதற்பொரு
ட்டு அன்று; இடித்தற்பொருட்டு என்றார்.
மிக்குழி இடித்தும் தக்குழி
எடுத்தும், இன்புற வாடியும் அன்புறையாடியும்,
கண்ணுமி. சொன்ன நண்ணிய நண்பினர்.
என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. 2120
திருக்குறட் குமரேச வெண்பா.

கிள்ளிவளவன் மலயமான் மக்களை
யானைக் காலிலிட்டுக் கொல்லச்
சென்றபொழுது அவன் நண்பாகிய
கோவூர்கிழார் விரைந்துவந்து அவனைத்தடுத்து
நிறுத்தி

நீயே, புறவின் அல்லல் அன்றியும்
பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன்

மருகனை;

இவரோ, புலன் உழுதுண்மார்

புன்கண் அஞ்சித்

தமது பகுத் துண்ணும் தண்ணிழல்

வாழ்நர்;

களிறுகண்டு அழூஉம் அழாஅல்

மறந்த

புன்தலைச் சிறாஅர்; மன்றுமருண்டு

நோக்கி

விருந்திற் புன்கணோ உடையர்;

கேட்டனை யாயின், நீ வேட்டது

செய்ம்மே, என்று இடித்து அறவுறுத்தி

விலக்கி உய்த்ததுபோல் நல்ல நட்பினர் தம்

நண்பரை நெறியே செல்லும் வண்ணம்

சொல்லியருள்வர் என்க. விருந்திற் புன்கண் =

புதியதோர் வருத்தம்.

நல்ல அறிஞர்கள் தம் நட்பினர்

அல்வழியிற் செல்லத்தொடங்கின் உடனே

நன்கு அறிவுறுத்தி நல்வழியிற் செல்லச்

செய் வர் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆலத்
தூர்கிழார்பால் அறியப்படும்.

## கதை.

ஆலத்தூர் கிழார் என்பவர்
சோழநாட்டிலே ஆலத்தூர் என்னும்
ஊரிலிருந்தவர். வேளாண் மரபினர்.
தாளாண்மை மிக்கவர். ஒருவர் சிறிது
நன்று செய்யினும் அதனைப் பெரிதாகக்
கொண்டு கருதும் இயல்பினர்.
பலகலைகளையும் நன்கு பயின்று தெளிந்தவர்.
சொல்வன்மையிலும், செய்யுள்
இயற்றுதலிலும் வல்லவர்.
பெரும்புலமையோடு அருங்குணங்களும்
அமைந்து சிறந்துநின்ற இவரை
அந்நாட்டுமன்னனாகிய குளமுற்றத்துத்துஞ்
சிய கிள்ளிவளவன் என்னும் சோழமன்னன்
கண்டு உரிமை மீக்கூர்ந்து உறவு
செய்துகொண்டான். இவரும் அவனது

ஆண்மை

மேன்மைகளையறிந்து ஆர்வமிகுந்து
கேண்மையுற்று நின்றார்.
இங்ஙனம் இருவரும் இணைபிரியாதிருந்து
அறிவுரைகளாடி இன்புற்று வருங்கால்
ஒருநாள் தம் ஊருக்குப் போய்வரவிரும்பி
அம்

79-ம் அதிகாரம் நட்பு.

2121

மன்னனிடம் இவர் விடைதர வேண்டினார்.
அவன் இவரைப் பிரியலாற்றாது மறுகிநின்று
இறுதியில் இசைந்து நண்பரே ! என்னை
மறந்துவிடாது விரைந்து வாரும் என்று
கரைந்து மொழிந்தான். அதனைக்
கேட்டவுடனே இவர் கண்ணீர் ததும்பி,
உண்ணீர்மை தோன்ற உருகி நின்றார்.
அதுபொழுது அவனை நோக்கி இவர் நண்பு
நலந்தோன்ற உரைசெய்த வற்றுள் சிறிது

இதனடியில் காண்க.

காலை அந்தியும் மாலை அந்தியும்
எங்கோன் வளவன வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடேனாயின்,
படுபறியலனே பல்கதிர்ச் செல்வன்;
யானோ தஞ்சம் பெரும! இவ் வுல
கத்துச்
சான்றோர் செய்த நன்று உண்டாயின்
இமயத்தீண்டி இன்குரல் பயிற்றிக்
கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழிய பலவே.

என்று சோழனை யோடு வழுத்திச் சென்று பின்வந்து மகிழ்ந்தார். காலமறிந்து இடங்கண்டு அரச நீதிகளை இடை யிடையே அவனோடு இவர் உரையாடி வந்தார். சிறிது தவறாற நேரினும் உடனே பெரிதும் துணிந்து இவர் உறுதிகூறி வருதலை அவனும் உவந்து கொண்டு வந்தான். ஒருமுறை கருவூரை முற்றுகைசெய்து அவன்

பொருதுகின்றபோது மருவலன் வெளிவராது மறைந்திருந்தான். மேலும் அடுமாறோடு கொடுமை விளைத்தான். அஞ்சினன் அரசே! அருள்புரிக என்று இவர் தடுத்தும் வீர வெறியோடு அவன் மீறிச் சென்றான். இவரும் விரைந்து புகுந்து "இச் செயல் உனக்குப் பழியும் பாவமும் பயக்கும்; அஞ்சினன் மீது வெஞ்சமர் தொடுத்தான் என்று உன்னை யாரும் கசைப்பார்; உன் பெருமைக்கு இது மிகச்சிறுமையாம்; விடுக நீ இதனை" என மேல் வெகுண்டு உரைத்தார்; உடனே அவன் வெறியடங்கி மீண்டு இவரது அறிவினை வியந்தான் தன் வெகுளி வேகத்தால் பிழை செய்து வசைபுறுவண்ணம் உரிமையோடு உரைசெய்து இன்சை பெறவைத்த மேன்மையை நினைந்து முன்னினும் இவர்மேல். 2122 திருக்குறட் குமரேச வெண்பா.

அவன் கேண்மைமீக் கொண்டான். யாரும் தடுத்தற்கரிய வீர னாகிய அவனை இடித்து அறிவுறுத்தி நீதியில் நிறுத்திய இவரது தகைமையும் நட்பையும் அக்காலத்தவரனைவரும் புகழ்ந்தார். நட்டல் நகுதற் பொருட்டு அன்று; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

அல்வழியிற் செல்லா தடக்கி
யறிவுறுத்தி
நல்வழியி லூக்குவார்
நட்புறுக—சொல்லி
நகைத்தாக கழிக்கும் நயமிலார்
நண்போ
பகைத்துன்பாம் என்றும பழி.

வீணே நகைத்து விலகுவார்
புன்கேண்மை
பூணாதே போக விடல்.

நல்லறி வுறுத்தலே நட்பின் பயனும்
என்பது இதனுற் கூறப் பட்டது.

---

785 பண்டு பழகாத பார்வளவன்
ஆந்தையர்பாற்
கொண்டிருந்தான் நட்பென்
குமரேசா—மண்டு
புணர்ச்சி பழகுதல் வேண்டா
வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்.
(௫)

இ—ள்.

குமரேசா! கோப்பெருஞ்
சோழன் பிசிராந்தையாரை நேரிற்கண்டு
பழகாதிருந்தும் ஏன் அவர்பால் பெரு நண்பு
கொண் டிருந்தான் எனின், புணர்ச்சி; பழகுதல்
வேண்டா; உணர்ச்சிதான் நட்பு ஆம் கிழமை
தரும் என்க.

பண்டு பழகாத = முன்பு நேரிற்கண்டு

அறியாது; பார் = பூமி.

மேல், இடித்து அறிவுறுத்தி நண்பரை நல்வழியிற் செலுத் தலே நட்பிற்குப் பயனும் என்றார்; இதில், அந் நட்பு உண்டாதற்கு உரிமையாயதோர் அரிய உண்மையை உணர்த்துகின்றார்.

புணர்ச்சி = சேர்க்கை; அஃதாவது ஓரிடத்தே நெருங்கி யிருத்தல். உணர்ச்சி = உள்ளப்பான்மை; கருத்தொற்றுமை என்க. தான் என்பது கட்டுரைச் சுவைக்கண் வந்தது; தேற்றம் எனினுமாம். பழகுதல் = அடிக்கடி கண்டுபேசிக் கலந்திருத்தல்.

79-ம் அதிகாரம் நட்பு.

2123

நட்பாம் கிழமை தருதற்கு உதவி உரிமை முதலியன பிறவு முளவேனும் அவையெல்லாம் புணர்ச்சி பழகுதல்

என்பவற்றுள் அடங்கும் என்க. இவ் எல்லாவற்றிலும் உணர்ச்சி ஒப்பே நட்புக்குச் சிறந்த காரணமாம் என்றவாறு. எனவே இதனால் அமையும் நட்பே என்றும் திட்பமுடையதாய்ச் சிறந்து தோன்றும் என்பதாயிற்று.

ஒருவனோடு ஒருவன் நட்பாதற்கு நெருக்கமும் பழக்கமும் வேண்டுவதில்லை; உள்ளத்து ஒத்த உணர்ச்சியே அவ் இருவர்க்கும் நட்பாம் உரிமையைத் தந்துவிடும் என்பதாம்.

மக்கட்குள் நட்புண்டாதற்குப் புணர்ச்சியும் பழக்கமும் வேண்டும் என்பது வெளிப்படையாதலால் அவற்றை விளக்கிக் காட்டி அவற்றினும் சிறந்த காரணம் அதற்கு உணர்ச்சி ஒத்தலே என உணர்த்தி யருளினர். புணர்ச்சியும் பழக்கமும் அமைந்திருப்பினும் உணர்ச்சி ஒத்திலதாயின் துரியோதனனுக்கும்

பாண்டவர்களுக்கும் போல நட்பாம் கிழமை
ஒரு சிறிதும் உண்டாகாதென்க.
தொல்லருங் காலமெல்லாம் பழகினும்
தூயால்லார் புல்லலர்; உள்ளந்தூயார்,
பொருந்துவர் எதிர்ந்தஞான்றே; ஒல்லைவந்து
உணர்வுமொன்ற இருவரும் ஒருநாளுற்ற
எல்லியும் பகலும்போலத் தழுவினர்
எழுவிற்றோளார். எனவும்,

பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சிற்
சிலநாளும் ஒட்டாரோடு ஒட்டா
ர்—பலநாளும்
நீத்தா ரெனக்கை விடலுண்டோ தம்
நெஞ்சத்து
யாத்தாரோடு யாத்த தொடர்பு.

எனவும்,
தண்டா மரையின் உடன்பிறந்தே தண்தேன்
நுகரா மண்டூகம் வண்டே கானத்திடையிருந்து
வந்தேகமல மதுவுண்ணும் பண்டே பழகி
யிருந்தாலும் அறியார் புல்லர் நல்லோரைக்

கண்டே களித்தங்குறவாடித் தம்மிற் கலப்பர் கற்ருேரே, எனவும் வருவன ஈண்டு எண்ணற் குரியன.

புணர்ச்சி, பழகுதல்களினும் உணர்ச்சி ஒப்பே நட்பிற்குச் சிறந்த காரணமாம் என்பது கருத்து.

266



இனி, புணர்ச்சி என்பதை நட்பு என்றுகொண்டு நட்பிற்குப் பழகுதல் வேண்டா; உணர்ச்சியே அதன் உரிமையை உதவி விடும் எனவும் இது, உரைகொள்ள நின்றது.

முத்து பவளம் மணி முதலியன தாம் பிறந்த இடங்களால் மிகச் சேய்மைப்பட்டிருப்பினும் தாம் ஒத்த இடத்து ஒருங்கி

யைந்து கோவையாய் அவை ஒரு
நிலைப்படுதல்போல் இடம்,
குலம், மதம், மொழி, தொழில்
முதலியவற்றால் மக்கள் வேறு
பட்டுப் பழகாதிருப்பினும் தம்முள் ஒத்த
வுணர்ச்சியுடையவர் ஒருவரை ஒருவர்
காணப்பெறின் உடனே உரிமைமீக் கூர்ந்து
பெருநட்புடையாராயமைவர் என்க.

பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினும், தொடை
புணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங்கு என்றும்
சான்றோர்
சான்றோர் பால ராப;
சாலார் சாலார் பாலராகுபவே. என்று
கண்ணகனார் கூறிய
தும் இங்குக் காணத்தக்கது.

முன்பு பார்த்துப் பேசிப்
பழகாதிருந்தாலும ஒத்த குண
முடையவர்கள் கண்டபொழுதே
காதல்மீக் கூர்ந்து நட்புக்
கொண்டு மகிழ்வர் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்
வுண்மை கோப்பெருஞ் சோழன்பால்
உணரப்படும்.

## கதை.

கோப்பெருஞ் சோழன் என்பவன்
உறையூரிலிருந்து அரசு
புரிந்தவன். அரிய குணங்கள் பல
அமையப்பெற்றவன். பல
கலைகளிலும் வல்லவன். தன்
குடிகளெல்லாரும் இன்புறும்
வண்ணம் இதம்பல செய்தவன். பெருந்
திருவுடையனாயிருந்தும்
அதில் அழுந்திவிடாமல் அருங்கலைவிநோதனா

யிவன் அமர்க்திருந் தான். பொத்தியார்,
எயிற்றியனார், பூதநாதனார், கண்ணகனார்
முதலிய புலவர்களைத் தன்னுடன்
அமரவைத்துக்கொண்டு புல
மைச் சுவையை நாளும் இவன் பொருந்தி
நுகர்ந்தான். அவ.
79-ம் அதிகாரம் கட்பு.
2125

எனைவரும் விழைந் துணருமாறு விழுமிய
கவிகள் பல விளங்கச்
செய்தான். தன்னைத் தனியே
இருக்கவிட்டுப் பொருள் விரும்
பிச் செல்ல நின்ற தன் தலைவனது நிலையினைக்
குறிப்பால் நோக்கி
ஒருதலைவி கூறியதாக ஒருமுறை இவன்
கூறிய கவியினழகை
வியந்து அக்காலத்துப் புலவரெல்லாரும்

புகழ்ந்து மகிழ்ந்தார்.

அதனை இதனடியில் காண்க.

அருளும் அன்பும் நீக்கித் துணை
துறந்து
பொருள் வயிற் பிரிவோர்
உரவோராயின்
உரவோர் உரவோராக;
மடவமாக மடந்தை நாமே.
(குறுந்தொகை.)

இங்ஙனம் புலமை இன்பந்துய்த்துத் தலைமையோடு விளங்கி நின்ற இவன் பிசிராந்தையார் என்னும் புலவரது குண நலங்களைக் கேட்டு அவர்பால் பெருங் கேண்மை கொண்டான். அவரும் அவ்வாறே இவனுணர்வியல்புகளை யறிந்து உயிரினும் இவன் மேல் உயர்காதல் கொண்டார். அவர் பாண்டிநாட்டிலுள்ளவர். இவன் சோழநாட்டில் இருந்தவன். ஒருவரை ஒருவர் முன்பு கண்டு

பழகாதிருந்தும் இருவரும் தம்முள்
உழுவலன்பு கொண்டிருந்தார். இங்ஙனம்
இருந்துவருங்கால் பலவகையானும் நிலையா
மையை யுணர்ந்து இவ்வுலகினை வெறுத்துத்
தனித்த ஓரிடத்தை யடைந்து வடதிசை
நோக்கி யமர்ந்து யோகப் பயிற்சியால் தன்
உயிரை விடத்துணிந்து இவன் உறுதி
பூண்டிருந்தான். மறுமை நோக்கி நின்ற
இவனது அருமையை யறிந்து குறுநில
மன்னரும் மறுபுலத்தவரும் புலவரும் பிறரும்
பெருந்திரளாக இவனிடம் வந்து இரங்கி
நின்றார். தன் இன்னுயிர் நீங்கும் அமயம்
இன்னதாம் என்று முன்னதாக இம் மன்னன்
குறித்துத் துணிவீர்! "எனது ஆருயிர்
நண்பன் பிசிராந்தையான் என்னுடன் வாவிரும்
பித் தன்னுயிர் தாங்கி இப்பொழுது இங்கு
வருவன்; அவனுக்குச் சிறிது இடம்விட்டு
நில்லுங்கள்" என்று தன் அருகுநின்றவரை

நோக்கி இவன் அருளுடன் மொழிந்தான். அதனைக்கேட்டு அங்குநின்றவரெல்லாரும் கண்கொண்ட அளவு திசைகளை நோக்கினார். சிலர் இவ்விருவரும் ஒருவரை யொருவர் கேள்வியுற்றிருப்ப 2126 திருக்குறட் குமரேச வெண்பா.

தன்றி ஒரு சிறிதேனும் இதன்முன் கண்டதில்லையே! நெடுந் தூரத்திலுள்ள அவர் இதுபொழுது இங்கு எவ்வாறுவர இயலும் என்று ஐயுறவோடு தம்முள் உரையாடி நின்றார். அதனை யுணர்ந்த இவன் அவர்களைநோக்கி நீவிர் யாதும் ஐயுறவேண்டாம்.

தெனணம் பொருப்பன் நன்னாட்டுள்ளும்

பிசிரோன் என்ப என் உயிரோம்புநனே

செல்வக் காலை நிற்பினும்

அல்லற் காலை நில்லலன் மன்னே.

என்று நிலைபெறச் சொல்லி யுளமுற வுணர்த்தினன். உணர்த்தியும் அவருள்ளங் கொண்டு ஐயுற் றொழியாதாகிற்றலைப் பட்டுணர்ந்து அவனது நட்பினியல்பை இவன் திட்பமுற உரைத்தான்.

கேட்டல் மாத்திரை யல்லது
யாவதும்
காண்டல் இல்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய
ராகினும்
அரிதே தோன்றல் அதற்பட ஒழுகல்
என்று
ஐயங்கொள்ளன்மின்; ஆரறி வாளீர்!
இகழ்விலன்; இனியன்; யாத்த
நண்பினன்;
புகழ்கெட வரூஉம் பொய்வேண்
டலனே;
தன்பெயர் கிளக்குங்கால என் பெயர்

பேதைச் சோழன் என்னும்; சிறந்த
காதற்கிழமையும் உடையன் ;
அதன்தலை
இன்னதோர் காலை நில்லலன்;
இன்னே வருகுவன் ஒழிகக அவற்கு
இடமே. எனத் திடம்பெற உரைத்துப்
பின்பு யாதும் பேசாமல் பழமைபோல்
யோகில் பதிந்திருந்தான். சிறிது
பொழுதுக்குள் கண்ணீர் ததும்பி அவர்
கரைந்து ஓடிவந்தார். எல்லாரும் வியந்து
விலகினர். அவர் விரைந்து புகுந்து இவன்
மெய்யினைத்தழுவி ஐயனே! என்று அலறி
யேங்கினர்; இவனும் இறுகப் புல்லினன்;
பின்பு இருவரும் ஒருவராய் இன்னுயிர்
நீங்கினர். இருவேறிடங்களிலிருந்து இது
வரையும் ஒரு போதும் கண்டறியாது நின்ற
இவர் உணர்ச்சி
ஒப்பினல் உடனுயிர் நீங்கும் உரிமைத் தாய
பெருகட்பினைத் தம்.

79-ம் அதிகாரம் நட்பு.

2127

மூன் உடைத்தாயிருந்தமையை உணர்ந்து
வியந்து அனைவரும் உள்ளம் இரங்கினர்.
புணர்ச்சி, பழகுதல் வேண்டா; உணர்ச்சி
தான் நட்பாம் கிழமைதரும் என்னும்
உண்மையை உலகம் இவர் பால்
உணர்ந்துநின்றது. நட்புரிமையால் அன்று
நிகழ்ந்ததை உட்னிருந்து கண்ட பொத்தியார்
என்னும் புலவர் உளமுருகிப் பாடினர்.
அதனை இதனடியில் காண்க.

நினைக்குங்காலை மருட்கை யுடைத்தே
எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது
துணிதல்;
அதனினும், மருட்கை யுடைத்தே
பிறனாட்டுத்
தோற்றஞ்சான்ற சான்றோன்
போற்றி
இசை மரபாக நட்புக் கந்தாக

இளையரோர் காலை ஈங்கு வருதல்;
வருவன் என்ற கோனது
பெருமையும்,
அதுபழுதின்றி வந்தவன் அறிவும்,
வியத்தொறும் வியத்தொறும்
வியப்பிறந்தன்றே
அதனால், தன்கோல் இயங்காத்
தேயத்துறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்றது
ஒன்றிசை
அன்னோனை இழந்தஇவ் வுலகம்
என்னாது அதுகொல் அளியது தானே.
(புறம்.)

தனக்கமைந்திருந்த பெருஞ்
சிறப்புக்களெல்லாவற்றையும் துறந்து
இச்சோழ மன்னன் உயிர்விடத்
துணிந்ததும், வேறு நாட்டிலிருந்த
பிசிராந்தையார்பால் இவன் பெருநட்புக்
கொண்டிருந்ததும், வருவார் என்றவுடனே
அவர் வந்ததும், உணர்ச்சி ஒப்புமையால்

இருவரிடத்தும் நிகழ்ந்திருந்த நட்புரிமையும், இத்தகைய மன்னனை இழந்தமையால் இனி இந்நாடு என்னபாடு படுமோ? எனப் புலவர் இரங்கியதும், பொருந்திய நண்பினரைப் போற்றிநின்றதும், பிறவும் இதனுள் ஒளிர்தல் காண்க.

> உணர்வொப்பே நட்பின் உயிராம்; உறினே
> புணர்வுடனே தோன்றும் பொலிந்து.

குணப்பொருத்தமே நட்பிற்கு மிகச் சிறந்ததாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---



வெண்பா.

786 முகநகநட் பல்ல மொழிந்தானே சேரன்
அகநகநட் புற்றார் குமரே
சசா—மோகி

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(௬)

இ-ள்.

குமரேசா! பொய்யாமொழிப்
புலவர் சீனக்கரோடு
அகம் கனிந்து உள் ஆழ்ந்து நட்புற்றார்
எனின், முகம்நக நட்
பது நட்பு அன்று; நெஞ்சத் தகம்நக நட்பது
நட்பு என்க.

மேல், ஒத்த உணர்ச்சியே நட்புக்கு
மிக்க உரிமையாம் என்றார்; அவ்வுணர்ச்சி
யில்லாமலே சிலர் மிக உரிமையாளர் போல்
முகமலர்ந்து சிரித்து நண்புகொண்டாடிக்
காலையில் ஒன்றுவர்; கடும் பகலில் ஒன்றுவர்;
மாலையில் ஒன்றுவர்; என்றபடி மாறியாடி
வருகின்றார்களே இவர் நட்பை எதனோடு
சேர்ப்பது என்று ஒருவன் எதிர்ந்து நோக்க

அது நட்பாகாது என அவனை நோக்கி உரைத்ததாக இதனை உணர்த்துகின்றார்.

மோதி = நேர்ந்து எதிரே கண்டபொழுது. முகம் நக = முகம் மலர. நெஞ்சத்து என்றது நெஞ்சுள் அமைந்த அன்பால் என்றவாறு. நெஞ்சத்து அகம் நக = நெஞ்சிடமாகிய உள்ளம் மகிழ எனினுமாம். நட்பதே நட்பு எனவும் பாடம்.

முகம் மாத்திரம் மலரும்படி செய்து நட்புக்கொள்வது நட்பு அன்று; அன்பினால் மனம் மகிழ நட்புக்கொள்வதே நட்பாம் என்பதாம்.

உள்ளும் புறமும் ஒத்து உண்மையோடு உவந்து முகமலர்ந்து நட்புக்கொள்ளவேண்டும் என்பார் அகம் முகம் என அவ்விரண்டனையும் குறித்துக் காட்டினார்.

களங்கமின்றி அகங்கனிந்து அப்பரும்,

அப்பூதியடிகளும் போல் ஒப்புறவெய்தி
நட்புற்றிருக்க வேண்டும் என்றவாறு.
அகம் நகாமலே வஞ்சர்க்கு முகம் நகும்
ஆதலால் அக் கள்ள நெஞ்சர் நட்பு
எள்ளற்பாற்று என்பார் அது நட்பு அன்று
என்றார்

79-ம் அதிகாரம் நட்பு.

2129

ஈரம் அல்லாதது கிளைநட்பு அன்று. என்றது முதுமொழிக் காஞ்சி. உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று காட்டிக் கரவு செய்வாரோடு உறவுகொள்ளலாகாதென்பது கருத்து.

அன்பால் உள்ளங் கனிந்து நல்லவர் நட்புக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மெய் பாமொழிப்

புலவரிடத்தும், சிறக்கப்பாலும் உணரப்படும்.

## கதை.

பொய்யாமொழிப்புலவர் என்பவர்
இற்றைக்கு ஆயிர ஆண்டுகட்கு முன்னர்த்
தொண்டை நாட்டிலே செங்காட்டங்கோட்
டத்தைச் சார்ந்த உறையூரிலே பிறந்தவர்.
நிறைந்த கல்வியாளர். ஒழுக்கத்திற் சிறந்தவர்.
வழுவற்ற மொழிநலமுடையவர். இவர் ஒன்று
சொல்லின் அது வேதம்போல் பழுதற்ற
பயனை விளைவிக்குமாதலால் பொய்யாமொழிப்
புலவர் என எவரும் போற்ற நின்றார்.
இவரது கவிகள் அழகும் இனிமையும்
தெளிவுமுடையன. உமாதேவிமீதே
உவந்துபாடும் இயல்பினர். ஒருநாளிரவில்
இவர் கனவில் எம்பெருமான் விநோதமாகத்
தோன்றி எம்மீது ஒருபாடல் பாடுக என்றார்.
புலவர் விழித்துணர்ந்து வியந்து மகிழ்ந்தார்.
கோழிக்கும்பாடி குஞ்சுக்கும் பாடவா?

என்று தலையசைத்து நெஞ்சங்கனிந்து கூறி
ஒன்றும் பாடாது நின்றார். நாள்பல
கழிந்தன. ஒருநாள் தஞ்சையிலிருந்து
தனியே காட்டு வழியாக இவர் வந்தார்.
பாட்டமிர்து பயன்கொடுக்கும் அப்பா மன்
ஒரு வேட்டுக்குமரன்போல் தோன்றி
இடையே எதிர்ப்பட்டு நீ யார்? நில் என்றார்.
இவர் என்செய்வார் பாவம்! கள்ளன்
என்று உள்ளம் அஞ்சினர்.
உடலும் நடுங்கினர். வேல்கொண் டிருக்கும்
அக்கையில் கோல்கொண்டிருப்பதைக்கண்டு
இவர் மால்கொண்டு மறுகினர். இன்று அடி
தப்பாது என்று அத்தடி யைநோக்கி இவர்
அலமந்துவிழித்து ஐயா, "யான் ஒரு
புலவன்" என்றார். புலவரா நீர்? எங்கே!
என்மேல் ஒரு கவிபாடும் பார்ப் போம் என்று
அவர் கனிந்து நெருங்கினர்.
வேட்டுவனுயினும் பாட்டருமை தெரிந்தவன்
போலும் என இவர் அச்சம்நீங்கி நல்லை; வேலை

இன்று அடிவிழாது என்று உள்ளந்தெளிந்து



குமரேச வெண்பா.

ந்து உங்கள் பெயர் என்ன ? என்றார். முன்பு சொன்ன குஞ்சியை நெஞ்சில் வைத்துக்கொண்டு என்பெயர் மு ட் டை என்றார். உடனே, அகப்பொருட்டுறையில் காதலனோடு தன் மகள் கலந்து போனதை நினைந்து தாய் இரங்கியதாக உருவகித்து

பொன்போலும் கள்ளிப்
பொறிபறக்குங் கானலிலே
என் பேதை
செல்லற்கிசைந்தனளே—மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாருய
தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்கும் காடு.

என்று இவர் பாடி நின்றார். கள்ளி கரிந்துபோன காட்டிலே கரு

வேலமுள் கரியாமல் நின்று
எப்படித்தைக்கும்காணும் ? சொற்குற் றம்
இல்லையாயினும் இதில், பொருள் நன்கு
பொருந்தவில்லை;
ஆயினும் இனிமேல் திருந்திக்கொள்வீர் !
என்று தேற்றிவிட்டு, குஞ்சுக்குப்
பாடமாட்டேன் என்ற நீர் இப்பொழுது
முட்டைக் குப் பாடலாமா ? என்று
அருள்நகைசெய்து எம் ஐயன் மறைந்து
போயினர். புலவர் விழிநீர் சொரிந்து அவ்
அருளாடலை நினைந் துருகிப் புகழ்ந் துபோற்றி
உவந்துபோ ஞர். ஒருமுறை மதுரை யை
யடைந்து அங்கு அரசாண்டிருந்த
பாண்டியனைக் கண்டு இவர் உரையாடிக்
கொண்டிருந்தபொழுது முற்காலத்துப்
புலவரிருந்து தமிழாராய்ந்த சங்கப்பலகை
பொற்றாமரையிலிருந்து வெளியே மிதந்து
வரும்படி பாடுவீரா ? என்று கேட்டான்;
அதற்கு இவர் யாதும் ஐயுறாமல்

அவ்வாவியினருகே வந்து யாவருங்காண அவ் வேந்தன் உணர்ந்து கொள்ளுமாறு எதிர்ந்து நின்று

பூவேந்தர் முன்போற் புரப்பார் இலையெனினும்
பாவேந்தர் உண்டென்னும் பான்மையால்—கோவேந்தன்
மாறன் அறிய மதுரா புரித்தமிழோர்
வீறணையே! சற்றே மித.

என்றார். உடனே அது மிதந்துதோன்றியது. இங்ஙனம் அற்புதங்கள் பலபுரிந்து தம் பெயரியல்புக்கேற்பப் புலமையின் மெய்ம்மையை விளக்கி இவர் நிலவிவருங்கால் சோழ நாட்டிலே ஆரசை என்னும் ஊரிலே சிறந்திருந்த சிக்க முதலியார் என்பவர் இவரை விரும்பியழைத்துத் தம் உடனிருக்கச்செய்து உயர்

நட்புக்கொண்டார். அகம்நக நின்ற அவரது தகவினை யறிந்து இன்முகத்தோடு உள்ளங் கனிந்து இவரும் அவர்பால் உயிர்க் கேண்மை கொண்டு உடனுறைந்திருந்தார். ஒரு நாள் அவர் மஞ்சத்தில் இவர் அயர்ந்து தனியே உறங்கினார். பதிவிரதையான அவரது மனைவியார், தன் நாயகனென்றே கருதி இனந்தெரியாமல் இவருடன் அதில் அமர்ந்துறங்கினார்; வெளியே போயிருந்த அவர் அங்குவந்து நோக்கினார். வஞ்சமில்லாத நெஞ்சினர்; வகையறியாது உறங்குகின்றார்; என்று தெளிந்துகொண்டு இருவருக்கும் இடையே சிறிது இடம் விடுபடி செய்து இணக்கமைந்து தாமும் உவந்து உறங்கினார். விடிந்தெழுந்தவுடன்

புலவர் அறிந்து மிகவருந்தினர். முதலியார் தேற்றினர்; தீங்கு ஒன்றும் நிகழவில்லை; நாம் இருவரும் ஒருவரே, உளங்கவலவேண்டாம்; என்று குழைந்து அன்பு செய்தார். இவ்வாறு அக நட்பாளராய் இவ் இருவரும் இருந்து வருங்கால் ஒரு முறை இவர் வேற்றூருக்குப் போயிருந்தார்; அவ் வமயம் அம்முதலியார் இறந்து போயினர். உத்தமியாகிய அவர் மனைவியும் உடனுயிர் துறந்தாள்; இருவரையும் ஒரே சிதையில் வைத்து அரசன் முதலாக அனைவரும்வந்து சூழ்ந்து அழுது நின்று பின்பு தகனஞ்செய்யத் தொடங்கினர். அதுபொழுது இவர் கேள்வியுற்று அலறி ஓடிவந்து தாமும் உடன் விழுந்து சாக உறுதி பூண்டு சென்றார். சோழ மன்னன் தடுத்துப் புலவர் திலகமே! சாவாமல் எஞ்சியுள்ள எம் போன்றவர் நலமுறும்படி நீவிர் நிலவி நிற்க வேண்டும் என்று நெஞ்சுறத்தழுவி நிறுத்தி மொழிந்தான்.

வாழி சோழ என் வாய்
மொழி கேண்மோ!
ஊழி நிலவெறி மாளிகையின்
வயின்
கட்டிளங் கணவன் கவின்பெறு
சேக்கையென்று
அறியா மனைவி நெடிது துயில்
கொளச்
செல்லக் கிடமின் எனக்கு
இடந்தருகெனச்
சொல்லிய நண்பன் தனிச்
செல்வானே
நாளும் வருவன் மற்றுணை அவற்கே,
'என்று உளங்கரைத்து அவனை நயந்து
விடுத்து - அக்கிழப் பிணைபடித்து நண்பர்
267
நிலையினை நோக்கி நினைந்து நினைந்துருகினர்..

வெண்பா,

அன்று நீ செல்லக் கிடஎன்றாய்
ஆயிழையோடு
இன்று நீ வானுலகம்
ஏறினாய்—மன்றலுறு
மாலைக்க வாள்விழியார் மாரனே!
கண்டியூர்ச்
சீனக்கா, செல்லக் கிட,
என்று சொல்லி அவ் இருவருக்கும் இடையே
படுத்துத் தம் இன்னுயிர் நீங்கினார்.
கண்டவரெல்லாரும் கரைந்தழுது கை குவித்
து நின்றார். உள்ளங்கலந்து உறவு
கொண்டிருந்த இவரது சிறந்த அருமை
பெருமைகளை நட்புக்குரிமையாக
எடுத்துக்காட்டி அக்காலத்தவர் ஆர்வமுடன்
கொண்டாடி வந்தார். முகம்நக நட்பது நட்பு
அன்று; நெஞ்சத்து அகம்நக நட்பதே
நட்பு என்னும் உண்மையை உலகம்

இவர்பால் உணர்ந்து நின்றது.

நெஞ்சோவ்வா வஞ்ச நிலையார் இழிநட்பு
நஞ்சமே நண்ணல் நவை.

உள்ளன்பில்லாத நட்புக்
கொள்ளலாகாதென்பது இதனல்
கூறப்பட்டது.

---

787 அன்று வளவனுற்ற அல்லலிலேன் பொத்தியார்
குன்றி
யுழந்தார் குமரேசா—என்றும்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதாம் நட்பு. (எ)

இ-ள்.

குமரேசா ! அறிவு கூறிவந்த பொத்தியார் வளவன்

உறுதுயர் கண்டு என் உளங் கலங்கிநொந்தார் எனின், அழிவி னவை நீக்கி, ஆறு உய்த்து, அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பு ஆம் என்க.

உள்ளன்பில்லாமல்
வெளியேபல்லைக்காட்டி விணேசொல்லா டிப்போவது நட்பு ஆகாது என்று மேல் உணர்த்தினூர்; ஆயின் உள்ளன்புடைய நட்பு எப்படி இருக்கும்? எனின், அதனை இதில் உணர்த்துகின்றூர். குன்றி உழந்தார் என்றது மனங்கரைந்து , வருந்தினமை கருதி.

79-ம் அதிகாரம் நட்பு.

2133

அழிவினவை = அழிவிணையுடையவை; அஃதாவது கேடு விணையும் தீய வழிகளே என்க. ஆறு உய்த்து = நல்ல நெறியின் கண் செலுத்தி. உழத்தல் = வருந்தல். தன்

நண்பன் தன் மார்க் கத்தில் செல்லத் துணிந்தால் உடனே தடுத்து நிறுத்தி, நன்மார்க்கத்திற் செலுத்தி, அவன் அல்லலுழவா வண்ணம் ஆதரித்து வருவதே நட்பாம் என்பார் நீக்கி உய்த்து என்றார்.

அழிதரு நெறியிற் செலவினை விலக்கி
ஆம்வழிச்செலுத்தி யூழ்வினையால்
அழிவுவர்தடுப்பின் அதற்கு உடன் அல்லாந்து ஆக்கை
வேறன்றி ஆருயிர்கள் ஒழிவகையின்றி
உணர்ச்சியொத்து அருநூல் உணர்தோறும் உறுநயம்
போலக், கழிமகிழ் நாளும் பயில்தோறும் வளரக்
கலப்பதே நட்புளனப்
படுமால். என்பதுங் காண்க.

தன் நண்பனது நலந் தீங்குகளில் தானும் உடன் பங்காளி யாயமைந்திருந்து உவந்து வருந்துவதே நட்பிற்குச் சிறந்ததன்மையாம் என்றவாறு. இங்ஙனம் நட்டவர்க்குப் புகழும் இன்பமும் பின்பு பொருந்துமாதலா ல் அதன்

அல்லலுழப்பிறது நல்லவர் அஞ்சார் என்க.

பிறைபது வளாந்தானும் வளர்ந்து
உடன்பெருகிப் பின்னாள்
குறைபடு மதியந்தேயக் குறு முயல் தேய்வதே
போல்
இறைவனுத் தன்னை ஆக்கியவன்
வழியொழுகின் என்றும்
நிறைமதி இருளைப்போழும் நெடும்புகழ்
விளக்கும் என்றான்.
இது தருமதத்தன் கருதியுரைத்தது.
இதில் நட்புரிமையின் அருமை யுணர்க.

கேடுபயக்கும் தியவழிகளை விலக்கி, நல்ல
நெறிகளில் செலுத்தி, விலக்கமுடியாதபடி
விதிவசத்தால் தன் நண்பனுக்கு அழிவு வந்த
இடத்து அத்துன்பத்தைத் தானும்
உடனமைந்து அனுபவிப்பதே நட்பாம்
என்பதாம்.

தனது நண்பன் கெட்டவழிகளில் செல்லத் துணியின் உடனே நட்பாளன் இடித்து அறிவுறுத்தித் தடுத்து நிறுத்தி உற்ற இடர்களை ஒழித்து உதவவேண்டும் என்பார் அழிவினவை நீக்கி என்றும், புகழறங்கள் பயக்கத்தக்க நல்ல வழிகளில் அவனைச் செல்லச் செய்து என்பார் ஆறு உய்த்து என்றும், இங்ஙனம் 2184

திருக்குறட் குமரேச வெண்பா.

செய்துவருங்கால் தன்னால் விலக்கமுடியாவண்ணம் தெய்வகதியால் கொடிய அலக்கண் வந்ததாயின் விலகிவிடாமல் தானும் அவனோடு உடனிருந்து அத்துயரினை அனுபவிக்கவேண்டும் என்பார் அழிவின்கண் அல்லல் உழப்பது என்றும் கூறினார். நீக்கி உய்த்து உழப்பது நட்பு என்றதனால் இவை இல்லதனை நட்பு என்று கொள்ளலாகாதென்பதாயிற்று.

நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு

நட்டார்

மறுமையுஞ் செய்வது ஒன்று உண்டோ ? இறுமளவும்

இன்புறுவ இன்புற்று எழீஇ அவரோடு

துன்புறுவ துன்புறுக் கால். என்பதும் காண்க.

அல்லலானவற்றை யெல்லாம் நீக்கி நல்ல செயல்களில் ஊக்கித் தம்நண்பரை என்றும் நன்கு பேணி வருவதே நட்பாம என்ற வாறு. மருமகன் உயிருக்கு இந்த மாமனே மறலி என்று துரி யோ தனனுக்குச் சகுனி அமைந்திருந்ததை நினைந்து அறிஞர் கொந் தளிபோல் நட்பினர்

ஆமைந்திருக்கலாகாதென்க.

கருத்தில்லா இறைவன் தீமை கரு தினல் அதனைக் காத்துத்

திருத்தலமாகின் அன்றே திருத்துதல் தீரா தாயின்

பொருத்தற்று பொருளுண்டாமோ?
பொருதொழிற்கு உரியாகி ஒருத்தரின்
முன்னஞ்சாதல் உண்டவர்க்கு உரியதம்மா.
என்று கும்பகருணன் குறித்து நின்றதுபோல்
நல்ல நட்பினர் தம்மாலானவரையும்
நண்பனைத் திருத்தி உய்த்து முடியாத
இடத்து அவனோடு முடிந்து போவர் என்க.

உண்மையான நட்பினர் தம் நண்பனை
என்றும் நல்வழியில் செலுத்துவர் என்பதும்,
அவனுக்கு ஏதேனும் அழிவுவந்தாயின்
தாமும் உடனமைந்து அதனை அனுபவிப்பர்
என்பதும் இதில் உணர்த்தப்பட்டன.
இவ்வுண்மை பொத்தியார்பால் உணரப்படும்.

கதை.

பொத்தியார் என்பவர் சோழநாட்டிலே
உறையூரிலிருந்தவர், கல்வியிற் சிறந்தவர். உ
ண்மையும் நேர்மையும் உரிமையுமுடையவர்.
அன்னவர் [illegible] தண்ணளியுடையர்.

கும் இதமே செய்யும் இனிய நீர்மையர்.
விநய சீலை என்னும் அருமை
மனைவியோடமர்ந்து இவர் இல்லறம் புரிந்தார்.
புரிந்து வருங்கால் எங்கும் இசை பரந்து நிற்ப
அவ்வூரிலிருந்து அரசு செய்துவந்த
கோப்பெருஞ் சோழன் என்னும் மன்னன்
இவரது திருந்திய பண்பையும், பொருந்திய
கண்பையும் அரும் பெரும் புலமையையும்
அறிந்து மகிழ்ந்து இவர்பால் அன்புமீக்
கூர்ந்தான். இவரும் அவன்மேல் ஆர்வமீக்
கூர்ந்து அடிக்கடி அரசவையடைந்து
அறிவுரைகளாடி அளவளாவி வந்தார். தான்
நெறிவழுவாத நீர்மையனாயினும் இவரது நீதி
முறைகளைக் கேட்டு மேலும் சீர் முடையனாய்
நூலறிவோடு அவன் நிலைபெற்று நின்றான்.
இங்ஙனம் நிலவிவருங்கால் புல்லர்சிலரோடு

பொருந்தித் தன் புதல்வர் செய்த அல்லலுக்கு
இரங்கி அவன் வெருண்டெழுந்து ஒருமுறை
அவரை வெல்ல விரைந்தான். அது பொழுது
இவர் இடைநின்று தடுத்து இதம்பல கூறி
நலம்பெற விடுத்தார். இங்ஙனமே கண்ணுக்கு
இமைபோல் அமைந்து தம் நண்பனை என்றும்
இவர் காத்து நின்றார். இறுதியில் மறுமை
நோக்கித் தன் உயிரினை நீக்க நினைந்து
அரசினைத் துறந்து தனியிடத்தை யடைந்து
தவநிலை கொண்டு அவன் இனிதமர்ந்திருந்தான்.
அந்நிலையினை யறிந்து நெஞ்சம் கவன்று
அவனோடு உடனமர்ந்து அவ்வாறே இவரும்
உயிர் துறக்கத் துணிந்தார்.
துணிவுகொண்டு தன் அருகிருந்த இவரை
அவன் அருளுடன் நோக்கினான். "இன்னு
யிர் நண்பீர்! என் னுடன் வருதல் இதுபொழு
து உமக்கு ஏற்றதன்று; அழகும்
இளமையும்வாய்த்த உமது அருமை
மனைவியோடமர்ந்து ஒருபுதல்வனைப்

பெற்றபின் இந் நிலையினைப் பெறலாம்;
ஊர்க்குச் செல்ல வேண்டும்" என்று அவன்
சொல்லி வேண்டினான். அதனை மறுக்க
அஞ்சி இவர் மறுகி மீண்டார். உறையூர்
புகுந்தார். அரசில்லாமையால் ஒளியிழந்த
விழிபோல் பொலிவிழந்து நிற்கும் அந் நகரின்
நிலைமையை நோக்கி நெடுமூச்செறிந்தார்.

பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு
புரந்த

பெருங்களிறு இழந்த பைதற் பாகன்
அதுசேர்ந்து அல்கிய அழுங்கல் ஆலை
வெளில்பா ழாகக் கண்டு
கலுழ்ந்தாங்கு 2336 திருக்குறட்
குமரேச வெண்பா.

கலங்கினேன் அல்லனோ யானே
பொலந்தார்த்

தேர்வண் கிள்ளி போகிய

பேரிசை மூதூர் மன்றங் கண்டே,

என்று நெஞ்சங்குழைந்து அழுது பாடினர். கவளம் ஊட்டித் தான் வளர்த்துவந்த யானை இறந்துபோக அது தங்கியிருந்த இடத்தை வந்து கண்டு ஒரு பாகன் கலுழ்ந்ததுபோல் அன்று இவர் கலங்கி அழுதமையை இதில் காட்டியிருத்தல் காண்க. இங்ஙனம் நட்புரிமையோடு இவ்வின்கண் நண்ணியிருந்து எண்ணியபடியே ஒரு புண்ணியப் புதல்வனைப் பெற்றார். அப் பேற்றின் அருமையையும் வண்பன் சாற்றிய உரிமையையும் நினைந்து இவர் போற்றி வியந்தார்.

" இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி

மறுமை யுலகமும் மறுவின்று எய்துப

செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்

சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்

பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே ஆகுதல் வாய்த்தனம்"

எனத் தம் நேய மனைவியோடு நெஞ்சங் கனிந்து இன்சொலாடினர். ஆயினும், அம் மகிழ்ச்சியிலிருந்து விடாமல் உடனே தம் நண்பனை நாடி நடந்தார். அவன் முடிந்து போனமையால் அவன் இருந்த இடத்தில் அறிகுறியாக ஒரு நடுகல் நிற்கக் கண்டார்.

அது பொழுது இவர் கொண்ட துயரை யார் கூறவல்லார்.

பாடுநர்க்கு ஈத்த பல்புகழன்னே
ஆடுநர்க்கு ஈத்த பேரன்பினனே
அறவோர் புகழ்ந்த ஆய்கோளன்னே
திறவோர் புகழ்ந்த திண்
அன்பினனே
மகளிர் சாயல்; மைந்தர்க்கு மைந்து;
துகளறு கேள்வி உயர்ந்தோர்
புக்கில்;

அணையன் என்னாது அத்தக் கோனை
வினையாக் கூற்றம் இன்னுயிர்

உய்த்தன்று

பைதல் ஒக்கல் தழீஇ அதனை

79-ம் அதிகாரம் கட்டி

2137

வைகம் வம்மோ வாய்மொழிப்

புலவீர்

னைந்தலை உலகம் அரந்தை தூங்கக்

கெடுவில் நல் இசை சூடி

நடுகல் ஆயினன் புரவலன் எனவே.

எனப் பலவாறாகப்

புலம்பிப் பாடி, நீ கூறியபடியே பேறு
செய்துவந்தேன் எனக்கு

இடந்தா? என்று அவன் இறந்த இடத்தில்
நின்றுகொண்டு ஏங்கி யேங்கி அழுதார்.

அழல் அவிர் வயங்கு இழைப்

பொலிந்தமேனி

நிழலினும் போகா நின் வெய்யோள்
பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வா
என
என் இவண் ஒழித்த அன்பிலாள
எண்ணாது இருக்குவை யல்லை
என்னிடம் யாதுமற்று
இசைவெய்யோயே.

என்று இவர் ஏங்கி அழுதபொழுது அந்நடுகல் பளர் என வெடித்து அசைந்து சிறிது இடம்கொடுத்தது. உடனே இவர் அகமகிழ்ந்து அவ் ஆழ்ந்த இடைவெளியில் இறங்கி மறைந்தார். தம் நண்பன் உவந்திருந்தபொழுது உடனமர்ந்திருந்து உறுதிகூறி நெறியில் உய்த்து அவன் இறுதியுற்ற பொழுது இவர் அல்லலுற்று அமைந் தனுபவித்து உடன் முடிந்துபோனதை நினைந்து அக்காலத்திருந் தவரனைவரும் வியந்து போற்றினர். இவர்தம நட்பின்

உயர் விளைப் புலவர் பலரும் புகழ்ந்து கூறியுள்ளார். அழிவினைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண் அல்லல் உழப்பதாம் நட்பு என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். அல்ல லுழந்து தம் நண்பனது நடு கல்லின் இடை வெளியே புகுந்து இவர் ஆழ்ந்து செல்லுங்கால் பாதி உடலளவில் நின்று அவன் நட்பின் பான்மையை வியந்து உள்ளம் உருகி ஓர் பாடல் பாடினார். அதனை இதன் அடியில் காண்க.

பலர்க்கும் நிழலாகி உலகம் மீக் கூறித்
தலைப்போகு அன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்,
இடங்கொடுத்து அளிப்ப மன்ற; உடம்போடு
இன்னுயிர் விரும்பும் கிழமைத்
தொல்நட்பு உடையார் தம்முழைச் செலினே. (பொத்தியார்)

2138 திருக்குறட் குமரேச வெண்பா.

உடலும் உயிரும்போல் அமைந்திருந்து இன்பதுன்பங்களை நண்பரோடு ஒன்றி நின்று இவர் அனுபவிக்க தன்மையும், மேற் குறித்த உண்மையும் இதில் ஒளிர்ந்து காண்க.

அறிவுறுத்திக் காக்கும் அறவோர்நட் பென்றும்

பொறைநிறுத்திக் கொள்க புரிந்து.

அல்லலகற்றித் தன் நண்பனுக்கு நல்லது செய்தலே நட்பிற் கழகாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

788 தேர்ந்த சுதஞ்சனைமேன் சிவகன்றன் போர்த்துடனே

கூர்ந்து களைந்தான் குமரேசா—சேர்ந்த

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே

இடுக்கண் களைவதாம் நட்பு.

(அ)

இ—ள்.

குமரேசா! சீவகன்
துயரடைந்தபொழுது சுதஞ்சணன் என்
விரைந்து வந்து அதனைக் களைந்துகாத்தான்
எனின், உடுக்கை இழந்தவன் கைபோல ஆ
ங்கே இடுக்கண் களைவது நட்பாம் என்க.

மேல், உற்ற துன்பங்களை நீக்கி
என்றும் உறுதி சூழ்ந்து தன் நண்பனைக்
கருதிக் காப்பதே ஒருவன் நட்பிற்குக்
கடமையாம் என்றார்; இதில் யாதும் சொல்லா
முன்னரே நல்ல நட்பினர் தம் நண்பரின்
அல்லல் களைவர் என்கின்றார்.

உடுக்கை = உடை; உடுக்கப்படுவது
என்னும் ஏதுவான் வந்தது. சிறை கழிய
உடுக்கையர் எனவும், உடுக்கை உலறி என
வும், வருவன காண்க. ஆடை அறுவை என
வேறு பெயரால் கூறின், தலை
தோள்களிலமைந்த மேலாடை எனவும்

கருதப்படும் ஆதலால் அங்ஙனம் படாவண்ணம் உறுதிபெறவும், இங்கு உரிமைதோன்றவும் உடுக்கை என்றார்.

ஆங்கே = இடுக்கணுற்ற அப்பொழுதே. இது விரைவு தோன்ற நின்றது. களைவது = நீக்குவது.

களைதலாகிய நண்பன் தொழில் நடபின்மேல் ஏற்றப்பட்டது.

79-ம் அதிகாரம் நட்பு.

2139

அகம்நகநட்பது, ஆராய்ந்து அல்லல் உழப்பது, இடுக்கண் களைவது என நட்பிற்கு உரிமைகளாகத் தொடுத்துச் சொல்லப் பட்ட இம்மூன்றினால் வஞ்சமின்றிக் கலந்து, சுகதுக்கங்களில் நெஞ்சம்பொருந்தி அநுபவித்து, உற்றுழி உதவி நிற்கவேண்டும் என்பது உணரலாகும்.

ஆகவே மனம் மொழி மெய்கள் என்னும்

முக்காணங்களும் நட்பிற்கு இன்னவகையில் டும் என்பதாயிற்று.

ஒக்கிருக்கவேண்

தன் அரையில் உடுத்திருந்த ஆடை நழுவினவன் கை விரைந்து அதனைத் தழுவிக் காத்தல்போல் நண்பர்க்கு நேர்ந்த துன்பத்தை அப்பொழுதே சென்று நீக்கிக் காப்பதே நட்பாம் என்பதாம்.

தனக்கு உற்ற அல்லலை நீக்குக என்று தன் துணைவன் சொல்லு முன்னரே நல்ல நண்பர் அதனை விரைந்து களைந்து அவனைக் காப்பர் என்பதை உணர்த்துதற்கு இடையிலிருந்த உடை நழுவினவன் கையை ஒப்புக் காட்டியது அக் களையும் தன்மை இயல்பாகவும் விரைவாகவும் நிகழும் என்பது கருதி என்க.

அவையின்கண் பலர்காண நின்ற ஒருவன் உடுத்தியிருந்த ஆடை நெகிழ்ந்து நழுவியதாயின் உடனே அவன் கை விரைந்து பற்றி மானக்குலை படாமல் காத்து நிலைநிறுத்துதல்போல் தன் அன்பனுக்குத்

துன்பம் நேர்ந்த இடத்து நல்ல நண்பன் அவன் சொல் லுமுன்னமே துடித்துச் சென்று அதனைக்களைந்து நீக்கி அவனைக் காக்கவேண்டும் என்பார் உடுக்கை இழந்தவன் கைபோல இடுக்கண் களைவது நட்பு என்றார். உண்மை இன்றி மனத்தினும் முற்பட்டு இயல்பாக உதவுந்தன்மையால் இங்கு உதவியாளனுக்குக் கை உவமையாய் நின்றது. தன்கையே தனக்கு உதவி; தோள் போல நின்று எனக்கு அவன் உதவினான்; எனவழக்கிலும், "தோள் உற்று ஓர் தெய்வம் துணையாய்த் துயர் தீர்த்தவாறும்." என்று செய்யுளிலும் இக் கை வந்துள்ளமை காண்க. தோள்உற்று = தோள் போல.

பேரறிஞர்
வீரமோடு

தாக்கும் பிறர் துயரம் தாங்கியே
காக்க விழைகுவார்—நேரிழாய்

மெய் சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேல்
கை சென்று தாங்கும் கடிது. என்றதும் காண்க.

268

2140 திருக்குறட் குமரேச வெண்பா.

துரோபதை உடுக்கை உரிந்த பொழுது கண்ணன் வந்து உதவி நின்றதுபோல் அன்பன் இடுக்கண் உற்ற இடத்து நண்பன் விரைந்து வந்து உதவி நிற்பதே நட்பிற்கு அழகாம் என்றவாறு.

நண்பனுக்குத் துன்பம் நேர்ந்தஇடத்து அதனை அக்கணமே நாடித் தீர்க்க வேண்டுமென்பது கருத்து

தன் நண்பனுக்கு ஓர் துனபம் நேரின் உண்மையான நட் பாளன் உடனே விரைந்துபுகுந்து அதனை நீக்கி அவனைக்காப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண் மை

சுதஞ்சணன் பால் உணரப்படும்.

## கதை.

சுதஞ்சணன் என்பவன் சங்கமிவண்டலையிலே சந்திரோதயம் என்னும் நகரிலிருந்தவன். இயக்கர் தலைவன். வியக்கத் தக்கவிஞ்சையும் நெஞ்சுறுதியும் வாய்ந்தவன். இசையில்வல்லவன். வில்லாடலில் மிகச்சிறந்தவன். போழகன். மதனசேனை, வசந்தமாலை, மானனீகை, சசிகலை முதலிய அழகிய கன்னியர் பலரை மணந்து பெரும் போகங்களை நுகர்ந்து சீரும் திறலும் தேசும் மிகுந்து இவன் சிறந்திருந்தான். கணிதநூற் புலமையில் இவ னுக்கு நிகரானவர் இவன் காலத்தில் ஒருவருமிலர். ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவகன்பால் இ வ ன் பேரன்புடையவன். முன்பு ஒருகாலத்தில் தனக்கு அவன் செய்திருந்த நன்றியை நினைந்து நாளும் அவனது நலங்களைக்

கருதி இவன் நயந்து நின் றான்.
தன் தேவியர்களோடு மேவியிருந்து
உல்லாசமாகப்பொழு துபோக்குங்காலத்தும்
அவன் குணங்களைப் புகழ்ந்து போற்று வன்.
இங்ஙனம் நன்றியறிவுடையனாய்
நண்புமீக்கூர்ந்து இவன் நின்றுவருங்கால்
இராசமாபுரத்தில் சீவகனை வஞ்சச்
சூழ்ச்சியால் கொன்றுவிடக் கருதி
கட்டியங்காரன் மதனன் என்பவனை ஏவி
னான்; அவன் பதினாலாயிரம் வீரர்களோடு
வந்து தனியான ஓரி டத்தில்
தங்கியிரு க்கையில் வளைந்தான்.
அதனையறிந்து சீவகன் விரைந்துபொர
வெகுண்டானாயினும் ஓராண்டுவரையும்
பொறுத் திருக்கவேண்டும் என்று ஆசிரியன்
உரைத்தபடியே ஒடுங்கி யடங் கினான்.
அவ்வள வில் கையகப்படுத்தி அக்
கண்டகனிடம் இவ

79-ம் அதிகாரம் நட்பு.

னைக்கொண்டு போனார். அந்நிலையினைக்கண்டு அந்நகரிலுள்ள வானவரும் நிலைகுலைந்து நொந்தார். அதுபொழுது தனது அழகிய மாளிகையில் மனைவிகள் புடைசூழ்ந்திருப்பத் தன் நண்பனாகிய சீவகனுடைய புகழமைந்த பாடலை யாழிசையோடு கலந்து ஓர் அரம்பையைப்பாடும்படி செய்து உவந்துகேட்டு இடையே இவன் இனிது வீற்றிருந்தான்.

தோழனும் தேவிமார்தம் சூழாத் துளான்
துளும்புமுந்நீர்
எழ்தரு பரிதிதன்மேல் இளம்பிறை கிடந்ததே
போல்
தாழ்தகை ஆரமார்பிற் சீவகன் குணங்கள்
தம்மை
யாழ் எழீஇப் பாடக்கேட்டு ஓர் அ

ரம்பையைச் சேர்ந்திருந்தான். இங்ஙனம் இரு
ந்த இவனுக்கு இடக்கண் துடித்தது.
ஏதோ? இடுக்கண் என்று திடுக்கிட்டுத்
தன்னுள் இவன் எண்ணி நோக்கினான்.
தன் நண்பனுக்கு உற்றதை உள் உணர்ந்தான்;
உடனே விஞ்சைவலியால் தன்போல் அங்கோர்
உருவம் தோன்றவைத்து ஊர்திமேலேறி
இங்கு விரைந்து வந்தான். அவ்வமயம்
இராச வீதியிடையே படைவீரர் சீவகனைப்
பற்றிப்போதல்கண்டு எங்கும் இல்லாத
இடியும் மின்னலும் மழையும் கவியுமாறு ஒரு
மாய வேலை செய்தான். யாவரும அதில்
மறுகிமயங்கி இருளடைந்து நின்றார். உடனே
இவன் புகுந்து பாய்ந்து அவனைத் தழுவிக்
கொண்டு மேல்தாவியெழுந்து தன்
நகரினையடைந்தான். " இவ் ஐயன் என்
ஆவித் துணைவன் என்று தன்
தேவிமார்களிடம் காட்டி" மேவிய சிறப்புக்கள்
யாவுஞ்செய்து தேவன்போலச் சில காலம் அங்

தத்தங்கியிருக்கச்செய்து பகைவரை வென்று அரசினை அடைவதற்குரிய உறுதிகள் பல உணர்த்தியருளினன். உற்ற இடரை உடனுணர்ந்து நீக்கித் தன்னை உவந்து பேணுகின்ற இவனது உள்ளப்பான்மையையும், உயிர்க் கேண்மையையும் அவன் உள்ளியுள்ளி உருகினன். தன் நண்பனது துன்பத்தை நாடிக் களைந்து நயந்துகாத்த இவன் நட்பின்தகவை வியந்து அமரர் முதலனைவரும் புகழ்ந்து போற்றினர். உடுக்கை இழந்தவன் கைபோல நல்ல நட்பாளர் தம் நண்பரின் இடுக்கண் களைவர் என்பதை இவன் இனிது காட்டினன். இவன் அன்று களைந்து காத்த 2142 திருக்குறட் குமரேச வெண்பா.

அருமையைத் திருத்தக்கதேவர் விரித்துக் கூறியுள்ளார். சில இதனடியில் வருகின்றன.

பொருள்களை நுணுகியுணர்க.

வயிரம் வேய்ந்த மணிநீண்
முடிவாலொளி வானவன்
செயிரிற் றீர்ந்த செழுந்தாமரைக்கண்
இடன் ஆடலும்
உயிரன்னானை நினைந்தான் உற்றது
ஓதியின் நோக்கினான்
மயிலன்னார்க்குப் படிவைத்தவன்
மால்விசும்பு எறினான். (1)

இடியும் மின்னும் முழக்கும் இவற்றான்
உலகம் நிறைந்து
ஒடியும் ஊழி இவணின்று உறுகால்
வரைகீழ்ந்தென
கடலை நோக்கிக்கதிர் நாணுவதுஒப்ப
மறைந்தபின்
கடலை எந்தி நிலத்துஇட்டென
மாரிகலந்ததே. (2)

விண்ணும் மண்ணும் அறியாது விலங்கி
காடு மாந்தர் தம்

கண்ணும் வாயும் இழந்தாம் கடல்
கொண்டது காண்கெனப்
பெண்ணும் ஆணும் இரங்கப்
பெருமான் மகன் சாமியை
அண்ணலேந்தி அகலம் புல்லிக்கொண்டு
எழுந்தேகினான்.(3)
தன் நண்பனுக்கு உற்ற துன்பத்தை
உய்த்துணர்ந்து உடனே
இவன் வந்து களைந்ததும், காத்துச்
சென்றதும, உடுக்கை இழந்
தவன் கை போல் உதவி நின்றதும், இதனுள்
ஒளிர்தல் காண்க.
கண்ணை இமை காப்பதுபோல்
காத்தலே நட்பாளர்
உண்மை யுரிமை யுணர்.
தன் நண்பனின் அல்லல்
களைவோனே நல்ல நட்பாளன்
என்பது இதனுல் கூறப்பட்டது.

---

789 மாறின்றி யூன்றி மதிசேனன் நண்பனலங்
கூறிநின்றான் என்னே குமரேசா—தேறிநின்ற
நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்றும் நிலை. (கூ)

இ—ள்.

குமரேசா! புத்திசேனன் தன் நண்பனாகிய சீவகனுக்கு உறுதிசூழ்ந்து என்றும் கண்ணூன்றி என் கருதிநின்றான் எனின்,

79-ம் அதிகாரம் நட்பு.

2143 நட்பிற்கு வீற்றிருக்கை யாது எனின், கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை என்க.

தன் நண்பனுக்கு நேர்க

இடுக்கணை ஓர்ந்துபோய் உடனே களைந்தருளல் வேண்டுமென்று மேலுரைத்தார்; இதில், யாண்டும் நிலைதிரியாமல் நின்று வேண்டுவன செய்தலை ஒருவன் நட்பிற்கு மேன்மையாம் என்கின்றார்.

கொட்பு இன்றி = திரிபு இல்லாமல். கொட்பு என்பது ஒரு நிலையின்றி விரைந்து சுழன்று வருதலை உணர்த்திவரும். "கவளங்கொள் புரவிக் கோட்பிற் காதலும் காந்து வைத்தான்" எனவும், "கோட்புற உலாவுந் தேசறும் குரத்தடை துகளின் குப்பை" எனவும் வருவனவற்றான் இஃது உணர்த்தி நிற்றலும் பொருளை யுணர்க. ஒல்லும்வாய் ஊன்றுதற்குக் கொட்பின்மை காரணமாதல் தோன்ற முதலில் நின்றது.

ஊன்றுதல் = தாங்குதல்; அஃதாவது இடர் புகுந்தவிடத்து எதிர்ந்து நீக்கித் தன் நண்பனைத் தளராமல் ஊன்றுகோல்போல்

தாங்கி நிற்றல் என்க. கொட்பின்மையும் ஊன்றுதலும் நட்பிற்கு இருக்கை என்றதனால் கொட்புதலும், ஊன்றாமையும், நட்பாகாது என்பதாயிற்று. நிலை திரிவாரையும் ஒல்லும்வாய் உதவா தாரையும் நட்பினராகக் கொள்ளலாகாதென்றவாறு. இருக்கை நிலை என இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றி நோக்குக.

நட்பிற்குச் சிறந்த இருக்கை யாது எனின், அஃது என்றும் திரிபில்லாமல் இயலும் இடமெல்லாம் உறுதிசூழ்ந்து தளராமல் தாங்கி நிற்கும் நிலையே என்பதாம்.

“பேர்படைத்த விசையனுடன் மும்மைநெடும் பிறவியினும் பிரியானாகிச் சீர்படைத்த கேண்மையினால் தேர் ஊர்தற்கும் இசைந்தரு” ளிய கண்ணன், கன்னன் ஏவிய நாகக்கணை வந்தபொழுது அத்தேரினைத் தரையில் அழுத்தும்படி ஊன்றித் தன் நண்பனைக் காத்துநின்ற

நிலையும் நட்பிற்கு வீற்றிருக்கையாக இங்குக் காணலாகும்.

என்றும் உளந்திரியாமல் நின்று, எதிர்ந்த இடர்களைத் துணிந்து நீக்கி, இருமையினும் பெருமை எய்துமாறு உறுதி சூழ்ந்து [illegible] திருக்குறட் குமரேச வெண்பா.

ஒல்லும் இடமெல்லாம் ஊன்றுகோல் போலமைந்து தன் நண்பனுக்கு ஒருவன் உதவுவனாயின் அவனது கேண்மையின்பான்மையைச் சிறந்த நிலையில்வைத்து எவரும் புகழ்ந்து போற்றுவர் என்பார் கொட்பு இன்றி ஊன்றும் நிலை நட்பிற்கு வீற்றிருக்கை என்றார். வீற்றிருத்தல் = பெருமிதத்தோடு சிறந்தநிலையில் விளங்கியிருத்தல்.

யாண்டும் மாறுபடாமல் நின்று உற்ற

இடர்களையெல்லாம் ஓர்ந்து களைந்து புகழும் அறமும் பொருந்தப் பேணி தன் நண்பனாகிய உதயணனை யூகி போற்றி வந்ததுபோல் நல்ல நட்பாளர் ஆற்றிவர வேண்டும் என்றவாறு.

தன்னைஉற்ற துணைவனது

குற்றங்களைந்து குணங்களை வளர்த்து இயலும் இடமெல்லாம் இகழ்ச்செய்து வருதல் முதலாயின நண்பாது கடமைகளாம் என்க.

அற்றங் காத்தலின் ஆண்மை போலவும்
குற்றங் காத்தலின் குரவர் போலவும்
ஒன்றி ஒழுகலின் உயிரே போலவும்
நன்றி யன்றிக் கன்றியது கடிதற்குத்
தகைவில செய்தலிற் பகைவர் போலவும்
இனையன பிறவும் இனியோர்க்கு இயன்ற
படுகடன். என்றதுங் காண்க. இனியோர் = நண்பர்

உள்ளம் கனிந்து நின்று தன் தோழனுக்கு யாண்டும் உதவி செய்து வரவேண்டும் என்பது கருத்து.

என்றும் மாறுபடாமல் நின்று
செல்லுமிடமெல்லாம் தன் தோழனுக்குச்
சிறந்த நண்பர் இதம்புரிந்து வருவர் என்
து இதில் உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை புத்திசேனன்பால் உணரப்படும்.

கதை.

புத்திசேனன் என்பவன் ஏமாங்கத
நாட்டிலே இராசமாபுரத் தில் இருந்தவன்.
சச்சந்தனுக்கு மந்திரியும் சேனாதிபதியுமா ய
மைந்திருந்த அதி வீரனாகிய அசலனுடைய
அருமைத் திருமகன். தாய்பெயர்
திலோத்தமை. மறையவர் குலத்தினன்.
அழகி லும் அறிவிலும் மிகச்சிறந்தவ ன்.
அந்தணனாயினும் அமரில் அா
79-ம் அதிகாரம் நட்பு.

சரும் வியக்கத்தக்க ஆற்றலுடையவன்.
எதிர்வதை முன்னறிந் தாற்றும்
துன்னறிவாளர்க் கெல்லாம் இவன்
காலத்தில் இவன் முன் எண்ணுகின்றான்.
தான் கருதியதைத் துணிவோடு நின்று இனிது
முடிக்கும் உறுதி வாய்ந்தவன்.

அளப்பரிய நான்மறையினான் அசலன்
என்பான்

தினைக்குந் திருவொப்புடைய திலோத்தமை
தன்கிறவன்

விளைந்த இரும்பு மெய்ந்தொழிந்த
பிச்சில்வரா பார்பன்

இளைப்பல் இவன்தேசு உரைப்பில்
புத்திசேன் இவ்விருந்தான். எனத் தேவதத்தன்
என்னும் அறிஞன் இவனைக் குறித்து ஒரு
முறை உரைத்துள்ளான். இதனால் இவன
து அருந்திறலும் பெரும் புகழும்
உணரலாகும். இங்ஙனம் சிறந்திருந்த

இவனிடம் சீவகன் பெருங்கேண்மை கொண்டிருந்தான். இவனும் அம் மன்னன் மகனை இன்னுயிர்போலெண்ணி இனிது பேணி வந்தான். யாண்டும் மாறுபடாமல் வேண்டிய நலன்களைக் குறிப்பறிந்து இவன் விளைத்து வருங்கால் மாற்றலன் சூழ்ச்சியால் தோற்றமின்றாகிச் சிலகாலம் அவன் மறைந்திருந்தான். அவனைப் பிரிந்திருக்கமாட்டாமல் வருந்தி யிரங்கி இடங்கடோறும் அருவி நாடித் தன் அறிவின் திறத்தால் அடைந்து மகிழ்ந்தான். அங்கு ஆவனசெய்து அவனோடு அமர்ந்திருந்தான். இவனது உணர்வையும் உரிமையையும் நோக்கி அவனும் உவகைமீக்கூர்ந்து உளங் கனிந்து நின்றான். பருவம் வந்தவுடன் பகைவனை வெல்லக் கருதி இவனுடன் ஆராய்ந்து பதுமுகன் முதலிய துணைவர்களுடன் படைகளைத் திரட்டினான். பகைவனாகிய கட்டியங்காரனோடு படுபோர்

மூண்டது. இருதிறத்திலும்
பெரும்படைகள் திரண்டு கொடும்போர்
புரிந்தன. அதில் இவன் உடனிருந்து
இதமறிந்து உறுதிகூறி அடையமர்ந்து
காக்கும் பறவைபோல அவனை இடைவிடாமல்
காத்து இடனறிந்து படைமேற் பாய்ந்து
அடலமர் செய்தான். இவனது
பொருதிறத்தால் பகைவர் பலர் பொன்றி
மடிந்தார். திரிபுரம் எரித்த விரிசடைக்
கடவுள்போல் அப்பொருகளத்தில் அன்று
இவன் பொங்கிவிளங்கினான். இவனது
போர்த்திறத்தைக் குறித்துச்
சீவகசிந்தாமணியில் திருத்தக்கதேவர்
கூறியுள்ள விருத்தக்கவி யொன்று
இதனடியில் வருகின்றது. 2146
திருக்குறட் குமரேச வெண்பா.

வினைகலந்து ஊழியும் பைந்தார் நான்மறையாளன் பைம்பொற்
புனைகலக் குப்பைஒப் பான் புத்திமாசேனன் பொங்கி
வினைகலத் திகிரித் தேர்மேல் மன்னனாக்

குடுமிகொண்டான்
கனைஎரி அபூவைப்பு எய்த கண்ணுதல் மூர்த்தி
யொத்தான்.
ஒப்பற்ற மூர்த்தியோடு இங்ஙனம்
ஒப்புறப்படி உயர்ந்து நின்ற இவன்,
உடனிருந்து பகைகடிந்து தன் நண்பனாகிய
சிவகளைஉயர் வடையச் செய்தான். அவன்
அரசடைந்தபின் அருகணைந்து இவன்
அகமகிழ்ந்து நின்றான். அப்புதிய ஆட்சியில்
அரும்பிக் கிளர்ந்த இடர்களையெல்லாம்
அவ்வப்போது அறிந்து களைந்து அரசினை
நிலைபெறத் தாங்கினான். மாற்றார்
செய்துவந்த சூழ்ச்சிகளை யெல்லாம் தன்
பெரியியல்புக்கேற்ப இவன் மதிவலியால்
வென்றான். புத்திசேனன் = அறிவையே
சேனையாகவுடையவன். மந்திரியாயமைந்து
மதிபுறத்தினான். தந்திரியாய் நின்று சமர்
நிறுத்தினான். நண்பனைபோக்கி
இன்பமூட்டினான்.

நீதிக ளுரைக்கும் நெறிமுறை யுய்த்தும்
தீதுசெய் பகைவர் தீவினை அகற்றியும்
அடல்வலி யீட்டியும் அ ரிவு நிலை
காட்டியும்
உடலுயிர் போல உடனமர்ந்திருந்தும்
அல்லும் பகலும் ஆய்ந்து பேணியும்
ஒல்லும் வாயெல்லாம் ஊன்றி உதவியும்
தன் நண்பனுக்கு ஆன்ற நலங்கள் பல இவன் அமையச் செய்தான். அவனும் இவனை ஆருயிர்போல் ஆதரித்து நின்றான். ஒருநாளும் வேறுபடாமல் உறவுதையோர்ந்து உற்ற இடமெல்லாம் உறுதிசெய்து ஊன்றி மறுமைஇம்மைகட்கும் உரிமையாக்கி நின்ற இவனது நட்பின் அருமையை அனைவரும் புகழ்ந்தார். நல்ல நட்பாளர்களுக்குள் அக்காலத்தில் இவன்ஒப்பற்றவனென்று உலகம்புகழ உயர்ந்து நின்றான். நட்பிற்கு வீற்றிருக்கை யாது? எனின், கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும்நிலை என்னும்

உண்மை இவன்பால் தோன்றி நின்றது.

தாய்மகவைத் தாங்குந் தகைமைபோல் நட்பாளர்

தோய்வார்க் கமைவர் துணை.

நிலை திரியாமல் நின்று என்றும் இதம்புரிந்துவருதலே சிறந்த நண்பாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

79-ம் அதிகாரம் நட்பு.

2147

790 வேறாக ஒன்றும் விளம்பாதேன் ஆக்கிரையன்

கூறானன் நட்பிற் குமரேசா—மீறி

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று

புனையினும் புல்லென்னும் நட்பு.

(ய)

இ—ள்.

குமரேசா! ஆக்கிரையனார்

யாதொரு முகமனும் கூறு
மல் தன் நண்பனாகிய ஆதனுங்களோடு
வன் அமைந்திருந்தார்
எனின், இவர் எமக்கு இனையர்; யாம்
இவர்க்கு இன்னம்; என்று
புனையினும் நட்பு, புல் என்னும் என்க.
உளங்கலந்தமைந்த சிறந்த நண்பர்க்கு
உரிமையாயதோர்
அரிய தன்மையை இஃதுணர்த்துகின்றது.

மேல், நிலைதிரியாமல் நின்று இயலும்
இடமெல்லாம் தன்
நண்பனுக்கு இதஞ்செய்து வருதலே ஒருவன்
நட்பிற்குச் சிறப்
பாம் என்றார்; இதில், உள்ளன்பு வாய்ந்த
உண்மை நட்பாளர்க்கு
வெளியேவேறு வாய் உபசாரங்கள்
வேண்டுவதில்லை என்கின்றார்.
இனையர் = இவ் இயல்பினர்.

அஃதாவது உரிமை உதவி அருமை அன்பு முதலியவற்றில் இவ்வளவினையுடையவர் என்றவாறு. இன்னம் = இன்னவகையான தன்மையுடையேம்; ஒரு முடிவுமின்றிப் பொதுவாகச் சொல்லுகின்றமையால் உள்ளியனவெல்லாம் கொள்ளுமாறு இனிதாக இன்னம்என்றார். அண்மைச் சுட்டடியாகப் பிறந்த தன்மைப் பன்மை முற்று. எமக்கு என்பதற்கு ஏற்ப இவர்க்கு என்பது இதில் வருவிக்கப்பட்டது.

புனைதல் அலங்கரித்துச் சொல்லல். உம்மை சிறப்புணர்த்தி நின்றது. புல் என்னும் = பொலிவிழந்துபோம்; அற்பமாகக் காணப்படும் என்றவாறு.

இவர் நமக்கு இவ் இயல்பினர்; யாம் இவர்க்கு இத்தன்மையம் என்று ஒருவரை ஒருவர் புனைந்து சொல்லினும் நட்புப் புல்லிதாம் என்பதாம். ஆகவே முகமனுரை யாதும் அங்குக் கூடாதென்பதாயிற்று.

உடலுக்கு உயிர்போல், கண்ணுக்கு இமைபோல் இவர்க்கு யான் மிக உரிமையுடையேன் என்று தன் நண்பன் முன்னிலையில் பிறர் நயப்புற ஒருவன் விரித்து உரைப்பனாகில் அவன் நட்பு இழிக்கத்தக்கதாம் என்பார் புனையின் நட்புப் புல் என்னும் என்றார். புல்லிய நட்பாளர்களே வீண் உபசாரங்களைத் தம்முள் மிகுதியும் சொல்லிக்கொள்வர் என்றவாறு.

எவ்வளவுக்கு எவ்வளவு வெளியே வாய் உபசாரங்கள் அதிகப்படுகின்றனவோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்தரங்க நட்பில் அகன்றவராவாதலால் வேற்றுமையின்றிக் கலந்து அமைந்த நட்பாளர்களுக்குள் வீண்

புகழ்ச்சி ஒன்றும வேண்டாம் என்றவாறு. புதிய விருந்தினனுக்கு வாரி வீசிக் கூறும் முகமன்கள் நெருங்கிப் பழகினவனுக்கு கோதி ருத்தலை நாளும் அனுபவத்தில் காணலாம்.

தன் நண்பன்பால் தனக்குள்ள அன்புநிலையை நல்ல நண்பினன் அவன் முன்னிலையில் பிறர் மெச்சச் சொல்லலாகா தென்பதாம். "நேசரைக் காணு இடத்து நெஞ்சாரவே துதித்தல்" என்றபடி நண்பன் நேரில் இல்லாதபொழுது உள்ளங் கனிந்து அவனுரிமையைச் சொல்லலாம் என்பதாயிற்று.

உள்ளங்கலந்து ஒன்றிநிற்கும் உண்மை நட்பாளர்க்கு உரிமையாயதோர் அரிய தன்மையை இதில் உய்த்துணர்ந்துகொள்க. உள்ளுறாக்கனிந்து உயிருறவாய் நெருங்கியுள்ளவர்க்குள் முகமனுரை உண்டாகாது என்க.

இராமன் தழுவிக்கொண்டு
போன்பணுகிய அனுமானை
" ஒன்று உரைக்க இருப்பது என் ?
உனக்கும் எந்தைக்கும்
இன்றுணைத்தம்பிக்கும் ஆய்க்கும் என்று "
ஒருமுறை அருளி நின்றதும் இங்கு
ஆயத்தக்கது. நாம் அவர் என்று
வேறுபிரித்துக் கூறாதபடி ஒருங்கிய இரண்டு
உடலுக்கு உயிர் ஒன்ருயினுர் என
நெஞ்சங்கலந்து நெருங்கிநிற்பதே சிறந்த
நட்பாம் என்பது கருத்து.

உள்ளன்புடைய உயர்ந்த நட்பினர்
புகழ்ச்சி மொழிகளைத் தம் நண்பர்முன்
வினை புனைந்துசொல்லார் என்பது இதில்
'உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆத்தி
உணரப்படும்.
ை ர ய ஞ ர் ய ா ல்

79-ம் அதிகாரம் நட்பு.

2149

# கதை.

அத்திரையனார் என்பவர்

தொண்டைமண்டலத்திலே கள்

ளில் என்னும் ஊரில் இருந்தவர். தாம்

இருந்த ஊரையும் இணை

த்துக் கள்ளிலாத்திரையனார் என்று இவர் சொல்லப்படுவர். அந்தணர் குலத்தினர். கருவி நூல்களோடு அறிவு நூல்களையும் வழுவறத் தெளிந்தவர் அடக்கமுடையவர். ஒருவன் ஏதேனும் ஒரு சிறு நன்றி செய்யினும் அதனை உள்ளத்தே வைத்துப் பெருநன்றி காட்டும் பெற்றியாளர். அருளும் தூய்மையும் அமைந்த நெஞ்சினர். இவர்காலத்தில் வேங்கடமலையில் விளங்கியிருந்த ஆதனுங்கன் என்னும் குறுநிலமன்னன் இவர்பால் பெருநண்பு கூர்ந்து பேணியிருந்தான். திருவோடமைந்த அவனது அறின்றிறத்தையும ஆகாவையும் குணநலங்களையும் அறிந்து வியந்து அவனை இன்னுயிர்த்துணைவனாக இவர் எண்ணியிருந்தார். இப்புண்ணிய நீரான என்றும் தன்னுடனே இருந்துவருமாறு அவன் போற்றிக்கொண்டான். இவரும் அங்குத்தங்கியிருந்து

கருமக் கியற்கையும் கருமக்கிடக்கையும்
தலைமையது தன்மையும் நிலைமையது நீர்மையும்
வேறு வேறாகக் கூறுகூறுணர்த்தி

ஆவனசெய்து யாவரும் புகழ அவனுடன் மேவி விளங்கினர். அறிவும் திருவுமுடைய இவ்விருவரும் உயிரும் உடலும் போல் ஒருமையெய்தி நட்பில் உயர்ந்து திகழ்ந்தார். இங்ஙனம் சிறந்து திகழினும் அவன் எதிராக ஒரு மொழியேனும் அவனை இவர் புகழ்ந்து கூறாமல் உள்ளன்போடமர்ந்திருந்தார். காணாத இடத்தில் பிறர்பால் அவனது உயர்நலங்களை உவந்துணர்த்தினரே யன்றி அவன் முன்னிலையில் புனைந்துரையொன்றும் இவர் புகலா திருந்தமையால் அவனுடனிருந்தார் சிலர் இவரது அன்புரிமையில் சிறிது ஐயுறவு கொண்டார். அவ்வளவோடு அமையாமல் அவனிடத்தும் கூறி நிலைகுலைக்கத் துணிந்தார். நெஞ்சில் நிலைத்த நண்போடு நின்ற அவன், அவர் புன்மொழிகளைப் பொருட்படுத்தவில்லை. நாள்பல கழிந்தன. புலவராயிருந்தும், உபசார உரைகள் யாதுங் கூறாமல் ஒடுங்கியிருக்கும் இவரை ஒருநாள் அவன்



வெண்பா.

உவந்துநோக்கி " என்னை மறந்துவிடாதீர்! "

என்றான். அவன் கருத்தை இவர் குறிப்பால் நோக்கினார் . அதுபொழுது ஒரு பாடல் பாடினார். அஃது இதனடியில் வருகின்றது. அதன் பொருளை நுணுகியுணர்க.

எந்தை வாழி ஆதனுங்க! என்
நெஞ்சம் திறப்போர் நிற்காண்குவரே
ர;
நின்னையான் மறப்பின் மறக்குங்காலை
என்னுயிர் யாக்கையில்
பிரியும்பொழுதும்
என்னியான் மறப்பின்
மறக்குவென்; வெல்வேல்
விண்பொரு நெடுங்குடைக்
கொடித்தேர் மோரியர்
திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலகஇடைகழி யறைவாய் நிலைஇய
மலர்வாய் மண்டிலத் தன்ன நாளும்

பலர்புர வெதிர்ந்த அறத்துறை
நின்னே. (புறம்)
எந்தையே ! ஆதனுங்க ! என் நாவில்
உன்னைக் காணார்; என்
நெஞ்சைத் திறந்து பார்ப்பவர் அங்கு
நின்னைக் காண்பர்; என்னுடைய உயிர் என்
உடம்பைவிட்டு நீங்குங் காலத்தும், என்னை
யான் மறக்கும் காலம் உண்டாயின்
அப்பொழுது உன்னை மறப்பேன்; அல்லது
வேறு என்றும் உன்னை மறவேன்; என
இதில்
இவர் உரை செய்துள்ள அருமையை
உய்த்துணர்க. இவரது அன்பினியல்பும்,
நண்பினுபர்வும், ஆதனுங்கனும் இவரும்
ஒருமைமெய்த்திக் களங்கமின்றி
உளங்கனிந்து நின்ற உண்மையும், சிறந்து
நெருங்கிய நண்பிற்குப் புனைந்துரை யாதும்
பொருந்தாது என்பதும், இதனுள்

பொருந்தியிருத்தல் காண்க. இவர் எமக்கு இனியர்; யாம் இவர்க்கு இன்னம், என்று புனையினும் நட்புப்புல் என்னும் ஆதலால் அங்ஙனம் புனைந்து சொல்லலாகாதென்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

பாலும் சுவையும்போல் பண்புடையார் நண்பாகும்

மேலொன்று விள்ளல் மிகை.

நெருங்கிய நண்பர்களுக்குள் புனைந்துரை கூடாதென்பது இதனால் கூறப்பட்டது.

80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.

2151

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

நல்ல நண்பன் ஒருவனுக்கு அமைவனவாயின இடர்களைந்து எல்லா நல

ங்களையும் அவன் எளிதில் அடைவான். அறிவோர் நட்பு நாளும் பெருகி வளரும்; சிறியோர் கேண்மை தேய்ந்து தொலையும். மேலோர் நட்பு நூல் நயம்போல் பழகுந்தோறும் பேரின்பமாம். அறிவுறுத்தி நல்வழியிற் செலுத்தலே நட்பின் பயனும். உணர்ச்சியொத்த நட்பே என்றும் உயர்ந்ததாகும். நெஞ்சம் பொருந்தாத வஞ்ச நட்பு நஞ்சமாகும். நண்பர் துயர் நீக்கலே நட்புக்கழகாம். தம் நண்பனுக்கு அல்லலுறுமாயின் சொல்லாமலே விரைந்து வந்து நல்லவர் நீக்கி நலம்புரிவர். கண்ணை இமை காத்தல் போல் தன்னைச் சேர்ந்தவனுக்கு ஆர்ந்த துணையாய் யாண்டும் அவர் அமைந்து நிற்பர். உடலுயிர்போல் நட்பில் உயர்ந்திருப்பவர் வீண்புகழ்ச்சிகளை விழைந்து கூறார்.

௭௯-வது நட்பு முற்றிற்று

# 80-ம் அதிகாரம்

## நட்பாராய்தல்

அஃதாவது சேர்ந்து கோடற்குரிய நட்பினரை நன்றாக ஆராய்ந்து தேர்ந்துகொள்ளுந்திறம். கருதிய வினைகள் யாவும் இனிது முடித்து இருமையினும் நட்பு இன்பம் பயக்கும் இயல்பினதாயினும் அதனை ஆராயாது கொள்ளின் அதனால் அளவில் துன்பம் விளையும் ஆகலான் அங்ஙனம் ஆராய்ந்து உணர்ந்துகொள்ளுமாறு அதன்பின் இது வைக்கப்பட்டது.

791 திண்டோட் டரித்தாமன் தேராமல் நட்டதனால்
கொண்டான்கே டென்னே குமரேசா—கண்டுநின்று
நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்

வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(க)

இ—ள்,

குமரேசா! அசுவத்தாமன் நாடாமல் நட்புக்கொண்டு என் அதனால் பின்பு கேடு அடைந்தான் எனின், நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை; ஆகலான், நாடாது நட்டலின் கேடு இல்லை என்க.



வெண்பா.

குணநலங்களையும் குற்றங்களையும் முன்னதாகச் சீர்தூக்கி நோக்கிப் பலவகையாலும் நன்றாக ஆராய்ந்து நலமிருந்தவரோடே நட்புக்கொள்ளவேண்டும்: இல்லையானால் அதனால் அல்லல் வரும் என்று இது உணர்த்துகின்றது.

நாடாது = ஆராயாமல்; அதாவது

ஒருவனுடைய குணம் செயல்களை நன்றாக ஆராய்ந்து பாராமல். நட்டல் = நட்புச் செய்துகொள்ளுதல். வீடு என்றது விட்டுநீங்குதல்; பிரிதல் என்க. நட்பை ஆராயாது கொண்டால் கெடுதல் உண்டு; விடுதல் இல்லை என்க.

நட்பினைப் பேணி ஆளும் இயல்புடையார்க்கு ஒருவனோடு நட்புச் செய்துகொண்டபின்பு அவனை விடுதல் உண்டாகாது ஆகலான், ஆராயாது நட்புச் செய்தல்போல் கேடு தருவது வேறு யாதும் இல்லை என்பதாம்.

கூடிப் பிரியேல் என்று ஒளவையார் கூறிய நீதியின்படி ஒருவனோடு நட்புக் கொண்ட பின்பு அவனை விட்டுப் பிரியலாகாது; பிரிந்தால் முன்பு அறியாது கூடின மூடன் எனவும்; நேசித்துப் பிரிந்த மோசக்காரன் எனவும், ஏசப்படுவன்; ஆதலால் கூடுமுன்னரே ஒருவனுடைய குணஞ்

செயல்களை நன்றாக நாடிக்கொள்ளவேண்டும் என்க. நட்டபின் விடில்லை என்று அச்சுறுத்தி எச்சரித்தது முன்னதாகவே நன்றாக நாடி நட்டலை வற்புறுத்தற்கென்க. ஆராய்ந்து பாராமல் எவரோடும் நட்புக்கொள்ளலாகாது; ஏனெனில், கொள்ளப்பட்டவன் கெட்டவனாயின் அவனுக்கு விளையும் பழிபாவங்களெல்லாம் கொண்டவனுக்கும் உளவாம்; ஆகவே இம்மை மறுமை என்னும் இருமையிலும் அவன் கெட்டவனாவான் ஆதலால் நாடாது நட்டல் கேடு என்றார். கேடு வேறுவாயிலாக நேரோவரின், தான் முன்னறிந்து முயன்று நீக்கலாப; தொத்துநோய்போல் நண்பன் வாயிலாக வருங்கேடு புலன் தெரியாமல் வந்து தன்னைத் தப்பாது பற்றிக் கொள்ளும் ஆதலான் அந்நட்டல்போல் போக்கமுடியாதபடி ஆக்கம் கெடுக்கும் கேடு வேறு யாதும் இல்லை என்க. நட்டவன்

கெட்டவன் என்று தெரிந்தவுடனே விலகிக்
கொண்டால் பின்பு 

கேடு இல்லையாம் அன்றோ? எனின், கெட்ட இயல்பினரோடு பழகினால் அப்பயிற்சியின் முதிர்ச்சியால் தன் இயற்கை உணர்ச்சி போம்; பின்பு அவனை விட்டுப் பிரியமுடியாது ஒட்டுப்பட்ட சிட்டுப்போல் கெட்டே போவன் என்பார் “வீடு இல்லை” என்றார்.

நாய் முதலிய இழிந்த விலங்கினங்களோடு பழகினும் பின்பு அவற்றைப் பிரிதலரிதாம் ஆதலால் உயிர் வாழ்க்கையிற் சிறந்த நிலையினையடைதற்குரிய தகுந்தவர்களை நலந்தரும்வகையில் முன்னதாக நாடியறிந்தே நட்புக்கொள்ளவேண்டும் என்றவாறு.

மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்

பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டுமே

பரீஇ உயிர் செகுக்கும் பாம்பொடும் இன்னா

மரீஇப் பின்னைப் பிரிவு. என்றதும ஈண்டு எண்ணத்தக்கது. உண்மைக்குஇவனே; வலிக்குஇவனே; உறவுக்குஇவனே; உரைக்குஇவனே திண்மைக்குஇவனே; நெறிககுஇவனே; தேசுக்குஇவனே; சிலைக்குஇவனே வண்மைக்குஇவனே; கன்னனெனும் மன்னன்கண்டாய் மற்றிவனே.
என்ன மாண் புற்றிருந்தும் நாடாது துரியோதனனோடு நட்புச் செய்து பின்பு விடில்லாதவனுய்க் கேடுகள் பல செய்து கன்னன் கெட்டதுபோல் கெட நேருமாதலால் யாரையும் நன்றாக நாடியறிந்து நன்மை தெரிந்து நட்புக்கொள்ளவேண்டும் என்பதாம்.

தான் நல்லவனாயினும் தீய

இயல்பினனோடு நட்புக்கொள்வானாகில் பின்பு விட்டு நீங்கமுடியாமல் அவன் கெட்டே போவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசுவத்தாமன் பால் உணரப்படும்.

## கதை.

துரோணர் அத்தினபுரத்திலிருந்து அரச குமாரர்களுக்கு வில்வித்தை பயிற்றி வருங்கால் அவருடைய அருமைத் திருமகனாகிய அசுவத்தாமனும் அங்கு அமர்ந்திருந்தான். அவர்களோடு கலந்து பயின்றான். அப்பயிற்சியில் விரைவாக உயர்ச்சியுற்றான். இவன் சிலையெடுத்து நின்ற தன்மையும், கணைதொடுத்து விட்ட வன்மையும், எவரும் வியக்கத்தக்க விசித்திரமுடையன. நல்ல 2164 திருக்குறட் குமரேச வெண்பா.

வில்லாளி என்று எல்லாரும் உவந்து

சொல்லும் வண்ணம் இவன் வல்லா னாயினான். இவனது ஆக்கம், ஊக்கம், அமைதி, அறிவு, ஆண்மை முதலியவற்றைக் கண்டு துரியோதனன் இவன்பால் பேரன்பு கொண்டான். இவனும் அவன்பால் உயர்நட்புடையனாய் உடனமர்ந்திருந்தான். இயற்கையில் நல்லவனாயிருந்தும் அவனது பழக்கமிகுதியால் இவன் இழுக்கில் நிமிர்ந்தான்.

பேசாது அடுக்கும் போரிவால்,
பெரும்போர்வலியால், பிறப்பால், மெய்த்
தேசால், இயற்றும் பலபடையால், திண்டோள்
வலியால், செஞ்சிலைக்கை
ஆசான்மைந்தன் இவன்றனக்கு இங்குயாரோ உவமை
அமரிலும்
ஈசானனைமற்று ஒருசிறிது ஒப்புளனலாம் அல்லது
இலையென்றார்.
என்றபடி நிலைபெற்று நின்ற இவன்
நெஞ்சந்திரிந்து அவன் வஞ்ச வினைகளுக்கு

எல்லாம் வயமாகி நின்றான். இங்ஙனம் நின்று வருங்கால் தூதுவந்தபோது மாயவன்செய்த ஒரு மாயவினையால் இவனது உறவு நிலையின் அம்மன்னன் ஐயுற்றான். அதனால் சிறிது உளந்திரிபினும் பெருந்தன்மையாளனாகலால் தான் சேர்ந்த நண்பன்பால் ஆர்ந்த கேண்மையோடே இவன் அமர்ந்திருந்தான். தன்மீதுள்ள ஐயத்தால் தன்னைச் சேனாதிபதியாக்காமல் சிறுமை செய்திருந்தாலும் பாரதப்போரில் அவனுக்காக இவன் பரிந்து செய்த ஆண்மைச் செயல்கள் அளவிடலரியன. தனது இயற்கையான மன நலத்தால் இடையிடையே அவனுக்கு இதங்களும் புகன்றான். பதினேழாம் நாட்போரில் போர்க்களம் இருந்த நிலைமையைக்கண்டு நெஞ்சம் இரங்கி தருமன் முதலிய இளைஞர்களோடு இகலுதலைவிட்டு இசைந்து வாழும்படி அவனுக்கு உறுதியுரைகளை இனிது கூறினான்.

தப்பருஞ்சமர் விளைத்தனிர். நீயும் அத்
தருமன்மைந்தனும் வென்றே
மெய்ப்பெறும் புகழ்புனைகுரு குலத்திடை
வீடுமன்முதலான
எப்பெரும் திறற் குரவரும் இளைஞரும்
எனைமன்னரும் யாரும்
ஒப்பரும்பெருஞ் சாதுரக்கத்துடன் உடன்றுயிர்
மாய்ந்தாரே. (1) வளைஇலாதன மங்கல
விழவும், நல்வரம்பினை மரபும், தொல்
வினைவுஇலா அரும்புலமும் முத்தீஇலா வேதியர்
மனைவாழ்வும்
அளை இலா மணிமுத்தும் அந்தண்புனல் அறையிலா
வளநாடும்
இளை இலா அரசியற்கையும் நன்றெனக்கேட்டு
அறிகுவதன்றோ. (2)

80-ம் அதிகாரம்

நட்பாராய்தல். 2155. தம்பிமா பரிமா
உள; தேர்உள; கருங்கிரி கருங்காமல்
தம்பிமார்களில் இருந்தவர் தம்மொடும் துவலரும்

பலசேன்வித் தம்பிமாரோடும் நம்முன் ஆகிய விறல்
தருமன்மா மகனோடும் பம்பிமாநிலம் புரப்பதே
கடன்எனப் பார்த்திவற்கு உரைசெய்தான். (3)
இங்ஙனம் உரைத்தாலும் அவன்
உணர்ந்துகொண்டானா? காரியம் புகல்வது
புவிஆட்சியில் கருத்துடையவர்க்கு அன்றோ?
என்று இகழ்ந்து தள்ளித் தான்
எண்ணியபடியே ஏறிச் சென்றான்.
ஆயினும் இவன் நேயம் விடாமல்
இறுதிவரையும் உறுதிபோடுநின்று
உழைத்தான். முடிவில் வீமன் கதையால்
அவன் சிதைந்து விழுந்தபொழுது
பொருகளத்தில் இவன் உருகி அழுதான்.
தன் நண்பனுக்குப் பகைவராயுள்ளவர்களை
எப்படியாவது கொன்று பழிக்குப்பழி
வாங்கிவரவேண்டுமென்று வன்மங்
கொண்டுபோனான். அன்றிரவு
பாண்டவர்களிருந்த பாசறையை அடைந்தான்.
அவ்வமயம் தருமன் முதலிய ஐவரும்

கண்ணனும் அங்கு இல்லை. ஐவருக்கும் துரோபதையிடம் பிறந்த அருமைப் புதல்வர்களும் திட்டத்துய்மனும் வேறு சில வீரர்களும் அங்கு அயர்ந்து உறங்கினர். நடுயாமத்தில் கூரிய வாளோடு யாரும் அறியாவண்ணம் உள்ளே வீரியத்தோடு புகுந்தான். கொஞ்சங்கூட இரக்கம் இல்லாமல் திட்டத்துய்மன் தலையை வெட்டினான். பின்பு பாவம்! அந்த அழகிய ஐந்து குழந்தைகளின் தலைகளையறுத்துத் தன் கையிலெடுத்துக்கொண்டு கடுகவந்து குற்றுயிராக் கிடக்கும் தன் நண்பனிடம் காட்டினான். கொடியவனாகிய அவனும் அவ் இளந்தலைகளைக்கண்டு இளகி ஏங்கினான்.

இருகுலத்தில் எமக்கும் அவர்க்கும்
இங்கு
ஒருகுலத்திலும் உண்டென
இல்லையால்
குருகுலத்தின் கொழுந்தினைக்

கிள்ளினே

வருகுலத்தொரு மாசறு மைந்தனே.

என்று அவன் மறுகி மறுகி நொந்தான்.

புறத்தில் எவ்வளவு இகல் மிகுந்திருப்பினும் குலப்பாசத்தின் தன்மை மக்கள் உள்ளத்துள் அழுந்திக்கிடக்கும் என்னும் உண்மையை இங்கு ஊன்றி நோக்குக. கன்னெஞ்சமும் கரையுமாறு இப்பழிவினையைச் செய்ய இவ்வன் 270

2156 திருக்குறட் குமரேச

வெண்பா.

நெஞ்சம் இவனுக்கு எங்கிருந்து வந்தது என்று வானவரும் வைதிரங்கினர். கெட்டவனோடு நட்புக்கொண்டதனால் அல்லவா ? பார்ப்பானயிருந்தும் இப்பழி செய்து வந்தான் என்று இழித்து முனிவரும் பழித்தார். இத்தீமையின்

பயனாக உடல்முழுதும் குட்டநோய்கொண்டு மூவாயிரம் ஆண்டுகளாகக் கொடிய அல்லல் களையடைந்து இவன் குலைந்து துடித்தான். இனக்கேட்டால் வந்த கேடு என்று எண்ணியெண்ணி யேங்கினான். குணங்குற்றங்களை நன்றாக ஆய்ந்துபாராமல் ஒருவனோடு நட்புக்கொண்டால் பின்பு அவனை விட்டு நீங்குதல் அரிது என்பதையும், அங்ஙனம் கொள்ளப்பட்டவன் கெட்டவனாயின் நட்டவன் பழிபாவங்களை யெய்தி இருமையினும் இழிவுறுவான் என்பதையும் எளிதில் விளக்குதற்கு அக்காலத்தவர் இவனையே இனமாக எடுத்துரைத்து வந்தார். நட்டபின் நட்பாள்பவர்க்கு விடுதல் இல்லை ஆகலால் நாடாது நட்டல் பெருங்கேட்டை உண்டாக்குமென்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

கூடிப் பிரிதல் குணமன்றும் ஆதலினால்

நாடியே நட்டல் நலம்.

நன்றாக ஆரா்ந்தே நட்புக்கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

792 அன்று பகதத்தன் ஆயாமல் கேண்மைகொண்டு
குன்றினன் என்னே குமரேசா—நன்றாக
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.
(உ)

இ—ள்.

குமரேசா! பகதத்தன் ஆய்ந்துபாராமல் கேண்மை கொண்டதனால் முடிவில் என் மாய்ந்துபோயினன் எனின்,

ஆய்ந்து ஆய்ந்துகொள்ளாதான் கேண்மை,
கடைமுறை தான்சாம் துயரம் தரும் என்க.
நன்றாக = தெளிவாக.

80-ம் அதிகாரம் நட்பாராய்தல். 21

57

நன்றாக நாடியே ஒருவனோடு நட்புக்கொள்ளவேண்டும்; இல்லையானால் கேடு வரும் என்று மேல் பொதுவாக உரைத்தார்; நாடாது நட்டலால் பொருட்கேடு முதலியன ஏதேனும் சிறிது தானே உண்டாம்; அதனால் என்ன ? என்று எண்ணிக்கொள்ளாதே அதனால் உன் உயிருக்கே நாசம் விளையும் எனச் சிறப்பாக
விளக்கி நட்பாராய்தலின் நலத்தை உறுதிபெற இதில் உணர்த்துகின்றார்.

ஆய்ந்து ஆய்ந்து என்று அடுக்கியது ஆய்தலாகிய அச்செய
லின் முடிவான பயன்நிலை தெளிவுற என்க.

பலவகையானும்
பல காலமும் நன்றாக ஆராய்ந்து
நலந்தெளிந்தபின்பே நட்புக்
கொள்ளவேண்டும் என்றவாறு.

கடைமுறை = முடிவில்; முதலில்
தோன்றாதாயினும் இறுதியில் துயரம் வருதல்
உறுதி என்பார் கடைமுறை தரும் என்றார்.

தான் என்றது கேண்மை கொண்டானை.

சாந்துயரம் = சாதற்கு ஏதுவாகிய துன்பம்.

பலவாற்றானும் நன்கு ஆராய்ந்து
ஒருவன் நட்புக்கொள்ளானாயின் அது,
முடிவில் அவன் இறந்துபடுதற்கு ஏதுவாகிய
துன்பத்தைக் கொடுத்துவிடும் என்பதாம்.

நன்றாக ஆராய்ந்து பாராமல்
தீயனொருவனோடு நட்புச் செய்
துகொண்டால் அத்தீமையின் இயல்பால் நேரே
அவன் மூலமாயினும், அல்லது அவனது
பகைவர் வாயிலாகவேனும் அடியோடு தான்

அழிந்துபோதற்குரிய அல்லல் தப்பாது
வந்து அடையும்
என்பார் அக்கேண்மை, சாம்துயரம் தரும்
என்றார்.

ஒருவனோடு நட்புச்செய்யவேண்டின்
அவனது குணம் குடி
செயல் இயல் முதலியவற்றைப் பலகாலும்
பலவாற்றானும் நன்கு
ஆராய்ந்தே நட்புக்கொள்ளவேண்டும்;
இல்லையாயின் ஆய்ந்து கொள்ளாத
கேண்மையால் சச்சந்தன் அரசிழந்து
அழிந்தது
போல் அழிவுற நேரும் என்க.

ஆராயாது நட்புக்கொண்டால் பின்பு தீராத கேடு உண்டாகும் ஆதலால் முன்புற நன்றாக ஆய்ந்து தெளிந்தே நட்பினை ஆக்கிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

2158 . திருக்குறட் குமரேச

வெண்பா.

'முன்னதாக ஆராய்ந்து பாராமல் கொடியவனோடு ஒருவன் நட்புக்கொண்டால் பின்பு அடியோடு அவன் அழிந்தே போவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பகதத்தன் பால் உணரப்படும்.

## கதை.

பகதத்தன் என்பவன் நாகாசுரனுடைய குமாரன். பூமிதேவியின் திருவருளால் பிறந்தவன். சோதிடம் என்னும் நகரிலிருந்து நீதிநெறி நின்று அரசுபுரிந்தவன். மாயால் அசுரனாயினும் இயல்பில் எவர்க்கும் இவன் இனிய நீர்மையன். மல்வலியில் மிகவும் வல்லவன். இவனது பட்டத்து யானைக்குச் சுப்பிரதீபம் என்று பெயர். போராற்றலில் அது பெரும்பேர் பெற்றது. அம்மத்த யானை மேலேறி இச்சுத்த வீரன் பொருகளம் புகுந்தால் எத்துணைப் படைவீரர்களும் ஒருமுகப்படார்.

பிணைக்கைப் பிறைவெண் கோட்டயிராவதமே

போலும் பகட்டில்இவன்
வினைக்கட் புகுந்தால் எதிர்நின்று வேறு ஆர்?
இவனை வெல்கிற்பார்
முனைக்கட் செங்கட் டையுமிழும் முகத்தான் யாதே
பகதத்தன்
தனக்குத் தானே நிகரென்னத் தருக்கோடு ஈண்டே
யிருக்கின்றான்.
என இசைபெற்று நின்றவன், ஒருமுறை
இந்திரன்மீது பகை
த்துவந்து கொடுமையோடு அமர் விளைத்த
அரக்கர் பலரையும்
இவன்போய் அடர்த்து வென்றான்.
அதனால் சதமகன் சகாயன் என ஓர் உயர்
பெயர் கொண்டான். அவ் அமரர்கோனும
இவன் பால் ஆர்வமீக்கூர்ந்து அரியன பலவுதவி
உரிமைசெய்திருந்தான்.
இங்ஙனம் திறல்மிகுந்து, நெறிமுறை கடந்து
எங்கும் இசைபரப்பி
உயர்நலமுடையனாய் இனிது வாழ்ந்து

வருங்கால் துரியோதனன்
இவனோடு உறவுசெய்து கொள்ள
விழைந்தான். வீரரை வீரர்
விரும்புவர் என்றபடி முன்னரே
அருச்சுனன்பால் இவன் அன்புற்
றிருத்தலை அவ் அரவக்கொடியோன்
அறிந்திருந்தானாதலால் போர்
மூளு முன்னர் எப்படியாவது
இவனைத் தன்னோடு இணைத்துக்கொ
ள்ளவேண்டும் என்று எண்ணிச் சூழ்ந்தான்.
இதம்பல செய்தான்.
அவ்வணங்கா முடியோன் இயல்பினை
யாதும் இவன் உணர்ந்து
தெளியாமல் உரிமையோடு இணங்கி
நின்றான். இக்கட்புகிலை.

80-ம் அதிகாரம்

நட்பாராய்தல். 2159

நாளடைவில் திட்பமுற்றது.
உற்றுவருங்கால் பகைமை மீக்கொண்டு
பாண்டவர்களோடு அவன் போர்
தொடங்கினன். அவனோடு ஈண்டிய
கேண்மையாளனாய் நின்ற இவனும் அதில்
இசைய நேர்ந்தது. இவனது
இசைவினையறிந்து ஐவரும் அகம் திரிந்தார்.
பகைமையும் மிகுந்தது. பின்பு
இருவகையிலும் படைகள் திரண்டன.
அக்கொடும்போரில் தனக்குரிய பெரும்படை
யோடுவந்து இவன் கடும்போர் செய்தான்.
அடல்மிகுந்த யானைகள்பல அதில் அழிந்து
தொலைந்தன. பதினெரு நாளும் உடனி
ருந்து உழைத்து பன்னிரண்டாம்நாட்
போரில் இருபதினாயிரம் யானை வீரர்கள்
புடைசூழ மானமீக்கூர்ந்து இவன் மண்டி
மேல் வந்தான். இவன் அன்று வந்த
நிலையினை வில்லி அழகுறச் சொல்லியுள்ளார்.
அடியில்வருவதில் சிறிது காணலாம்.

இருபது பதிற்று
நூறுகளிறுள இவனினும் மிகுத்தவீ ரர்
கடவுளர் ஒருபது பதிற்று நூறு மழகளிறு
உவமையென மிக்க வாகு
வலியினன், முருகனென வெற்றிகேமி
முகிலென முரணவுணருக்கு வாழ்வுகெடவுயர்,
சுரபதி தனக்கு வாழ்வு வரும்வகை சாருல
களிக்கதோழன் இவனோ.
எழிலணி தடக்கை மேருகிரி
நிகர் இபகிரமதைக்க மோதியருமென மொழியுற
அதிர்த்து நீடுபுயகிரி முறைமுறைகடி க்க
வேக மொடு புகை, பொழிசின மனத்தின் மூள
அவி சொளி புனைநுதல் வெயர் க்க
வாயுகதியென, விழிவழி நெருப்பு
விழுகிரையுடன் விறன்மிகு களத்தி
லானபொழுதிலே.
என்றபடி இவன் பொருகளம் புகுந்தமை
நோக்கி வீமன் வெகுண்டு மேல்வந்து
வெம்போர்செய்து யானைப்படைகள் யாவும்

அழிவுற நூறினான். பின்பு இவன் வில்லெடுத்து நின்றான். உடனே விசயன் ஓடிவந்து விசையுடன் பொருதான். நீண்ட நேரம் போர் மூண்டு நின்றது. முடிவில் நிலை குலைந்து இவன்
மாண்டு விழுந்தான். தனக்கு ஒரு பகையும் இல்லாதிருந்தும்
தீமைகொண்ட துரியோதனனோடு
கேண்மை கொண்டதனா
லன்றோ! இங்ஙனம் இவன் கெட்டு
அழிந்தான் என்று இவனு
டைய உறவினரனைவரும் உருகியழுதார்.
ஆராய்ந்து தெளியா 2160

திருக்குறள் குமரேச வெண்பா.

மல் தீயவர்களோடு சேர்ந்து நட்புச்செய்தால் அதனால் சாதல் நேரும் என்பதற்கு அக்காலத்தவர் இவன் சரிதத்தையே அடிக்

கூடி ஒதியுணர்த்தி வந்தார். ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை தான் சாம்துயரம் தரும் என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

வெண்ணெயென நாவியுண்டு
வீந்தான்போல் வீவாமே
எண்ணாது நட்டல் இடர்.

ஆய்தல் இல்லாத நட்பால் சாதல் நேரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

793 சேர்ந்துநின்ற கந்தனைத்
தேர்ந்துகண மித்திரன்முன்
கூர்ந்துகொண்டான் நட்பேன்
குமரேசா—சார்ந்த
குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு.

இ—ள்.

குமரேசா ! குபேரமித்திரன் கந்துக்கடனது குணம் குடி முதலியவற்றை நன்குக அறிந்தபின்பே என் நட்புக்கொண்டான் எனின், குணனும், குடிமையும், குற்றமும், குன்று இனனும், அறிந்து நட்பு யாக்க என்க.

ஆய்ந்து ஆய்ந்தே ஒருவனோடு கேண்மைகொள்ளவேண்டும் என்று மேல் உரைத்தார்; அதனை நோக்கியவுடனே எதனை ஆய்வது என எண்ணம் எழும் ஆதலால் ஆய்தற்குரியன சிலவற்றைப் பொதுவாக இதில் உணர்த்துகின்றார்.

குடிமை = குடிப்பிறப்பின் நீர்மை. மனம் மொழி மெய்கள் திரிபின்றி என்றும் சேர்மையுடையாராய் நிலவுதற்கு அப்பிறப்பு

மிக உரிமையாகுமாதலால் நட்பாராய்தற்கு இங்கு நாட நின்றது.

இனன் = சுற்றம்; உறவினர் என்க. குணம் இனம் என்ப வற்றின் ஈற்றில்வந்த னகரமெய் ஒத்து நின்றது. இஃது இரு திப்போலி. தன் இனத்தோடு திரிபின்றி அன்பாக ஒருவன் 80-ம் அதிகாரம்

நட்பாராய்தல் 2161

இசைத்தொழுகுவனாயின் தம்மோடும் நண்பாய் அமைந்தொழுகுவான் என்று தெளிந்துகொள்க என்பார் 'இனன் அறிந்து' என்றார். யாக்க = செய்துகொள்ளுக. பிணித்தல், கட்டுதல்களை புணர்த்திவரும் யாத்தல் என்பது ஈண்டுத் தழுவுதல் மேல் நின்றது. ககர ஈற்று வியங்கோள் விதித்தற் பொருளது.

ஒருவனது குணத்தினையும், குடிப்பிறப்பினையும், குற்றத்தினையும், குறைவற்ற சுற்றத்தினையும், நன்றாக ஆராய்ந்து அறிந்த பின்பே அவனோடு நட்புச்செய்யவேண்டும் என்பதாம்.

குண முதலியவற்றை ஆய்ந்தறியாமல் ஒருவனோடு நட்புக் கொண்டால் அது நிரந்தரமாக நலந்தாராதாதலால் அவற்றை முறையே அறிந்து நட்பு யாக்க என்றார். அறிந்து என்பதனை குணன்முதலிய நான்கனோடும் தனித்தனி கூட்டிக் காண்க.

நல்லன் என்றோ! தீயன் என்றோ! ஒருவனை நன்கு தெளிதற்கு அவனது இயல்பான குணமே மிகச்சிறந்த கருவியாகும் ஆதலால் முதலில் அதனை வலியுறுத்தினார். அக் குணமும் குடிப் பிறப்பின் அடிப்பட்டு விளங்குமாதலால் அதனையடுத்துக் குடிமையை வைத்தார்;

குணமும் குடியும் நல்லனவாயினும் ஒரோவழிக்
குற்றம் உளதாயின் அது பொறுத்தற்
குரியதா? அறவே வெறுக்கப் படுவதா?
என்று அதன் நிலையினை நிறுத்து நோக்கி
உரிமையாயின் கொள்ளலாம் என்பார்
குற்றமும் என்றார். இங்ஙனம் குணம் குடி
குற்றங்களைச் சீர் தூக்கி நோக்கி
நல்லனென்று ஒருவனைத் தெளிந்து
கொள்ளினும் இனத்தோடு அவன் இசைந்து
ஒழுகும் உரிமையை உறுதியாக அறிந்து
கொள்ள வேண்டும் என்பது கருதி இனனும்
என அதனை இறுதியில் வைத்தார்.

குணம் அறிந்து, குடி அறிந்து,
குற்றம் அறிந்து, இனம் அறிந்து
ஒருவனுடைய இநம் தெளிந்த பின்பே
அவன்பால் நட்பு இசைந்து கொள்ள வேண்டும்
என்றவாறு. குற்றமுடை யானைக்
கூடலாகாதென்று அறவே விலக்கி விடாமல்
அதன் அளவறிந்து

அமைத்துக்கொள்ளுமாறு இங்கு அமைய வைத்தது அமையுமோ? எனின், குற்றமே இல்லாதார் இவ்வுலகத்து ஒரு 2162

திருக்குறட்குமரேச வெண்பா.

வரும் உளராகார் ஆதலால் உள்ளவரையும், உள்ளவரை ஓர்ந்து கொள்ள வேண்டும் என்க.

பிழையிலான் கடவுளன்றி மக்களில் தப்பில்லாதார் பிறரும் உண்டோ

மழையினுமே அசனியுண்டு; மதிக்கும் ஓர் மறுவுண்டு; மலர்க்கு முள்ளாம்;

சுழையினுமேசக் கையுண்டு;கனியினும்

தோல்கொட்டையுண்டுசதிக்குங்காம விழைவினால் மறம்புரிதல் நார்க்கு இயல்பாதலின் அவரை வெறுக்கொண்

[ணாதே.

என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

ஒருவனது இயல்பு கஜை நன்கு அறிந்தே

அவனோடு நட்புக்கொள்ள வேண்டும் என்பது கருத்து ஒருவனுடைய குணங்களை நன்றாக ஆராய்ந்து உண்மை தெளிந்த பின்னரே அறிவோர் அவனோடு நட்புக் கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குபேர மித்திரன்பால் உணரப்படும்.

கதை

குபேர மித்திரன் என்பவன் ஏமாங்கத நாட்டிலே இராசமா புரியில் இருந்தவன். பெருந்திருவுடையவன். வணிகர் குலத்தினன். எவர்க்கும் இனிய நலத்தினன். அழகிலும் கற்பிலும் சிறந்த தன்மனைவியாகிய வினையமாலை என்பவளுடன் உளமகிழ்ந்திருந்து இல்லறத்தை இவன் இனிது பேணிவந்தான். பேருபகாரி யாதலால் யாவரும் இவன்பால் அன்புற்றிருந்தார். எல்லாரும் இன்புற்றிருக்கவே இவன் எண்ணியிருந்து புண்ணியங்கள் பல

பொருந்தப் புரிந்தான்.
துறந்தவர்கள் வேண்டியதோர் துப்புரவு நல்கி
இறந்தவர்கள் காமுறும் இருங்கடன் இயற்றி
அறம்பலவும் ஆற்றி விருந்தோம்புமுறை யல்லாற் பிறந்த நெறியால் உளதோர் பெருநவி யாதோ.
என்று ஆருயிர்க்கெல்லாம் இவன் அருள்செய்து உதவினன். செல்வமுடைமை கருதிப் பலரும் இவனோடு உறவு கொள்ள விழைந்து உரிமை கூறிச் சூழ்ந்தார். சூழினும் உடனே இவன் நயந்து கொள்ளாமல் அவர் தம் குணங்களையெல்லாம் நுணுகியுணர்ந்து பொது நிலையில் நின்றே முறை செய்துவந்தான். வருங் 80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.

கால் அவ்வூரிலுள்ள கந்துக்கடன் என்னும்

வணிகர் தலைவனது இயல்பினையறிந்து
அவன்பால் அகநட்பாளனா யமர்ந்துகொண்
டான் செல்வத்திலும் குணத்திலும் அவன்
மிகச் சிறந்தவன். தனக்கு அமைந்துள்ள
பெரும் பொருளெல்லாம் பரம்பொருளரு
ளால்வந்தது; பகுத்துண்டு
பல்லுயிரோம்புதற்காகவே அது பரி
ந்து நின்றுள்ளது; இல்லையாயின்
தன்னை இகழ்ந்துவிட்டுப்பறந்து போய்விடும
என்று அவன் உணர்ந்து நின்றவன். தன்
நாட்டு மன்னன் மகனாகிய சீவகனையெடுத்து
வளர்த்து இனிது போற்றினவன். நல்ல
நண்பனென்று அவன்பால் இவன்
உள்ளன்பு கொண்டிருப்பினும் வெளியே
ஒன்றும் உரையாடாதிருந்தான். இங்ஙனம்
இருந்துவருங்கால் பொழுது வாய்த்த தனது
அருமைத் திருமகளாகிய குணமாலை என்பவளை

ச் சீவகனுக்கு மணஞ்செய்து தர விரும்பினான். அவ் விருப்பத்தை இவன் விளங்க உரைத்து உளந்தெரிந்துவரும்படி சிலரை அவனிடம் வலினன். அதனைக் கேட்டு அவன் பெருமகிழ்ச்சியடைந்தான். உடனே திருமணம் நடந்தது. தனது அழகிய மகளைச் சீவகனுக்கு மணமகளாக்கி அவனுக்குச் சீதனமாகக் கோடி செம்பொன்னையும், உரிமையாக எழுநூறு இளமங்கையரையும், வயல்வளமிக்க ஐந்தூரையும் இவன் அன்புடன் உதவினான்.

மழைமொக்குள் அன்ன வருமென்முலை மாதர் நல்லார்

இழைமுற்றணிந்தார் எழுநூற்றுவர்; கோடிசெம்பொன்;

கழைமுற்றுந் தீந்தேன் கரும்பார் வயல் ஐந்துமூதூர்;

குழைமுற்று காதின் மணிகக்கொம்பொடு நாய்கன் ஈந்தான்.

என இவனது அவ் ஈகை நலங்களைத் திருத்தக்கதேவர் உவந்து கூறியுள்ளார். இங்ஙனம் ஈந்துநின்ற நிலையையும் அறிவமைதிகளை
யும் வியந்து அனைவரும் புகழ்ந்தார். வலிந்துவந்து தன்னை வளைந் தவர்களையெல்லாம் நண்பராக நயந்துகொள்ளாமல் வளையாதிருந்த கந்துக்கடனது குணத்தையும் குடியையும் இனத்தையும் மனத்தையும் கூர்ந்து அறிந்து அவனோடு நட்புச் செய்துகொண்ட இவனது திட்பநுட்பங்களை எல்லாரும் தெரிந்துமகிழ்ந்தார். தாம் நயந்துகொள்ளுதற்குரிய நண்பனது குணம் குடி இனம் முதலிய

271

2164 திருக்குறட் குமரேச வெண்பா.

வற்றை முன்னதாகவே நல்ல நட்பாளர் நன்றாக அறிந்துகொள்வர் என்பதை அன்று இவன் ஆற்றிநின்றான். குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்தியாக்க நட்பு என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

மனமறிந்து செய்கை வகையறிந்து சேர்ந்த
இனமறிந்து நட்டல் இனிது.

குணங்குடிகளின் நலந்தெரிந்தே ஒருவனோடு நட்புச்செய்ய வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

794 திண்டோட் டடமித்தன் தேர்ந்து கொடுத்துறவு
கொண்டானேன் கோனைக் குமரேசா—கொண்ட
குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்

கொடுத்துங் கொளல்வேண்டும் நட்பு.

(௪)

இ-ள்.

குமரேசா! தடமித்தன் தனது அருமைமகளைக் கொடு
த்துச் சீவகனை தன் உறவாக்கிக்கொண்டான் எனின், குடிப்பிற
ந்து தன்கண் பழி நாணுவானைக் கொடுத்தும் நட்புக் கொளல்
வேண்டும் என்க.

இது, சிலமுண்மையே நட்பிற்குச் சிறப்பாம் என்கின்றது.

தேர்ந்து என்றது பலநாளாகத் தன் நகரிலிருக்கும்படி
செய்து அவன் நிலையினை ஆராய்ந்து தெளிந்தமை கருதி.
கொண்ட உயர் நலங்களெல்லாம் தனக்கு உரிமையாகத் தழு
விக்கொண்டுள்ள என்றவாறு.

மேல், குணம் குடி இனங்களை
நாடியறிந்து நலம்பெறத்
தெளிந்தபின்பே ஒருவனோடு நட்புக்கொள்ள
வேண்டும் என்றார்;
இதில், நல்ல குடிப்பிறப்போடு
குணமுமுடையான் அமைவனாயின்
உடனே உவந்து அன்புசெய்து ஏதேனும்
கொடுத்தாயினும் நண்
பனாக அவனை நயந்துகொள்க என்கின்றார்.
பழி நாணுவானை = பழிக்கு
அஞ்சுகின்றவனை, பழி என்
றது பிறர்மனை நயத்தல், பொய்த்தல்,
காவுளங்கோடல், கவறுகை 80-ம் அதிகாரம்
நட்பாராய்தல். 2165
யாடல், கள்ளுண்டல் முதலிய தள்ளுண்ட
செயல்களை என்க, விலக்குதற்குரியவாக
நூல்களால் பழிக்கப்பட்டிருந்தனவாலும், தம்
மைக் கொண்டவர்க்கு இகழ்ச்சியான

பழிச் சொற்களை விளைத்தலாலும் இவை பழி என நின்றன. இவற்றிற்கு நாணுதலாவது இவற்றுள் யாதொன்றும் தன்கண் அணுகாவண்ணம் அஞ்சிக் காத்தலை.

நல்ல குடியிற் பிறந்து தன்னிடம் பிறர் சொல்லும் பழிக்கு அஞ்சுகின்றவனை இனிய பொருள் கொடுத்தாயினும் நட்புச் செய்துகொள்ளவேண்டும் என்பதாம்.

"கொடுத்தும் கொளல் வேண்டும்" என்று உறுத்தியுரைத்தது அக்கொள்முதலின் அருமை கருதி என்க. உம்மை சிறப்புணர நின்றது,

குடிப்பிறந்து பழிநாணுவானைக் கொளல்வேண்டும் என்றதனால் அங்ஙனம் பிறவாதானையும் நாணாதானையும் நட்பாகப் பேணலாகாதென்பதாயிற்று.

நட்புக் கோடற்குச் செல்வர் முதலிய வேறு சிறப்பினரைக் குறியாமல் குடிப்பிறப்பாளரைக் குறிப்பாக இங்குக்

குறித்துக் காட்டியது என்னை? யெனின்,
நிலைதிரியாமல்நின்று என்றும் நல
முடையராய்ப் பிழைபல பொறுத்துப்
பேணவல்லார் அவரே என்பது கருதி என்க.

அடுக்கிய கோடி பெறினும் குடி
ப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்.

எனவும்,

கடித்துக் கரும்பினைக் கண்தகா றறி
இடித்து நீர் கொள்ளினும்
இன்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணும்
குடிப்பிறந்தார்
கூறார் தம் வாயிற் சிதைந்து.

எனவும்,

இற்பிறப்பெண்ணி இடைதிரியார்
என்பதோர்
நற்புடை கொண்டமை
யல்லது—பொற்கேழ்

புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற
நாட

மனம் அறியப் பட்டதொன் றன்று.

எனவும், 2166 திருக்குறட்
குமரேச வெண்பா.

கள்ளார் கள்உண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை இகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற் பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவது இலர். எனவும
வருவனவற்றால் அவர்தம் இயல்பும் தகவும்
இகழும் அறியலாகும்.

பார்த்து விரிந்துள்ள மனித சுவர்க்கள் உருவத்தால் ஒத்து ஒரு படித்தாய் நிற்கின்றனரே; இதில், குடிப்பிறப்பாளன் என்று ஒருவனை எப்படிக் கண்டுபிடிப்பது? எனின், நீதி, நேர்மை, நிலைதிரியாமை, ஈகை, நகை, இன்சொல், இகழாமை முதலிய நலங்கள் தொடர்ந்தேறியாய் எந்தக

குடும்பத்தில் அமைந்து அடிப்பட்டு
வருகின்றனரோ அதில் பிறந்து வந்த
மகனையே அவனை அறி
ந்துகொள்ள வேண்டும் என்க
இக்குறையோன் பழியினை வைத்தால் ஒரு
வேளை மிக எளியவனாயிருந்தாலும் அவ் எ
ளிமை நோக்கித் தள்ளிவிடாமல் ஏதேனும்
சில பொருள்களைத் தந்தேனும் அவன்
உறவினைக் கொள்க என்பார் கொடுத்தும்
கொளல் வேண்டும் நட்பு என்றார்.
“கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடிபெறும்” என்றார்.
ஔவையாரும்.

தின்று மென்று துப்பிவிட்டுப்போகும்
மாம்பழங்களில்கூட நல்ல சாதி எது? என்று
ஆய்ந்து நோக்கி அரும்பொருள் கொடுத்து
வாங்குகின்றோமே! உயிர்க்கு உறுதிபயந்து
என்றும் இன்புறச் சிறக்கத் தக்க நட்பாளை

எவ்வளவு ஆராய்ந்து கொள்ளவேண்டும்? எண்ணிப்பாருங்கள்.

சிலர் குடிப்பிறப்பாளராய்ப் புறத்தில் அமைந்திருந்தும் அகத்தில் அதற்குரிய ஒழுக்கம் இல்லாது இனக்கேட்டால் இழுக்கியிருக்கவும் கூடும்; அன்னவரை அப்பிறப்பை மாத்திரம் நோக்கிக் கொள்ளலாகாது; பழிக்கு நாணுதலாகிய அச்செய்கையின் சிறப்புண்மையையே கருதிக் கொள்ளவேண்டும் என்பார் பிறந்து என்றே காடு அமையாது பழிநாணுவானை என உறுதிபெற உரைத்தார். குடிப்பிறந்தவனாயினும் குணம் இல்லையாயின் அவனை நட்பாகக் கொள்ளலாகாது என்பது குறிப்பு.

80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.

குடிப்பிறப்போடு குணச் சிறப்புக்களும் அமைந்திருப்பவனையே நட்பாக அணைத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

சிறந்த குடிப்பிறப்பும் உயர்ந்த குணங்களுமுடையானைக் கண்டால் ஏதேனும் கொடுத்தாயினும் தமக்கு நட்பாகத் தெளிந்தவர் உடனே உவந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தடமித்தன்பால் உணரப்படும்.

கதை

தடமித்தன் என்பவன் மத்திம தேசத்து மன்னன். ஏமமா புரம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். அமாற்றலிற் சிறந்தவன். அழகிலும் கொடையிலும் அறிவிலும் பெரியவன், சிவந்த மேனியன்; சிவந்த நீர்மையன்; உவந்த பார்வையன். திரண்டுருண்ட தோள்களும், புழுந்தாளளவும் நீண்டு படிந்த கைகளும்,

அகன்று நிமிர்ந்த மார்பும்
அமைபப்பெற்றவன். நீதிகளை நன்கறிந்து
நெறிபிறழாது நின்று உலகை
அடிந்து உயிர்க ளின்புற இவன் உயர்கோல்
கொண்டவன். நளினை என்னும் ஓர் அழகிய
கன்னியை மணந்து அரிய போகங்களை
நுகர்ந்து அமரர் கோன் போல் தமர்
மகிழ்ந் தேத்த எங்கும் புகழ் மணங் கமழ
இவன் இனிதமர்ந்திருந்தான். இங்ஙனம்
இருந்துவருங்கால் இவனுக்கு விசயன்
கதம்பன் கனகன் அசலகீர்த்தி சேனன என
மைந்தமைந்த ஐந்து புதல்வர்களும்,
கனகமாலை என்னும் அழகிய
ஒரு புதல்வியும் பிறந்தனர்.
இவ் அறுவரும் பருவமடைந்து கலை பல
பயின்று நிலவி நின்றனர். ஒருநாள் முன்
முதல் மகனாகிய விசயன் அங்கோர் சோலையில்
உருமாறி உலாவி நின்ற சிவனைக்
கண்டு உவந்து அழைத்துவந்து இவனிடம்

உணர்த்தி நின்றான்.
அவனது நிலையினை நாணுகி நோக்கி "ஓர்
குல ... றொரிருத்தல் வேண்டும்" என்று
கூர்ந்துணர்ந்து கொண்டு மேலும் ஆராய
விழைந்து தன் மக்களுக்குப் படைக்கலம்
பயிற்றுவிக்க வேண்டி
னான். அவனும் இசைந்து பயிற்றுவித்தான்.
வில் வேல் வாள் முதலிய பல்வகைப்
போர்த்துறைகளையும் அவ் வி ன்பால் அவர்
பழுதறப் பயின்று தெளிந்தார். அவற்றுள்
ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் வல்லுநராய்
நிற்றலையறிந்து எல்லாரும மகிழ்ந்து
புகழ்ந்தார். திசைமெச்சும்படி அவர்
இசைபெற்று நின்றார்.

ஆ 68 திருக்குறட் குமரேச
வெண்பா.

'விசயனை விசயன் விற்போர்க்; கதம்பனே
முருகன் வேற்போர்க்;

திசையெலாம் வணக்கும் வாட்போர்க்கு அந்தணன் செம்பொன் நாமன்;
அசைவிலான் யானைத் தேர்ப்போர்க்கு அசலனே அசல கீர்த்தி;
வசையிலான் புரவிச் சேனன்; என்று யாவரும் புகழப்பட்டார்.''

இதில் அந்தணன் என்றது பரசுராமனை. செம்பொன் நாமன் = கனகன். இங்ஙனம் அமர் வழியிற் சிறந்து தன் குமாரர்களை விளங்கும்படி செய்த அவனது சிறப்பினையும், பிறப்பினையும் குறிப்பாலறிந்து இவன் ஆர்வமிகுந்தான். சிறிதும் பிரியலாகாதபடி அவனை உரிமைசெய்து கொள்ள விழைந்தான். குன்று நண்பனைப் என்றும் தன்பால் அவன் நின்றுவரும்படி என்னவகை செய்யலாம் என்று எண்ணியாய்ந்தான். முடிவில் தன் அருமைத் திருமகளை அவனுக்கு மணஞ்செய்துதரத் துணிந்து ஒருநாள் தனியிடம் ஒன்றில்

அழைத்து அவனை இனிதுற இருத்தித் தான் கருதியுள்ளதை உறுதிபெற உரைத்தான். நகைபுற்றிருந்தும் முதலில் இசையாதவன்போல் அவன் நடித்துநின்றான். உடனே அவனது கையைப் பிடித்துக்கொண்டு தன் கொடையைக் கருதிக் கொள்ளும்படி இவன் கனிந்து மொழிந்தான்,

புண்முழு திறைஞ்சங் கோட்டுப் பொருகளிறு
அனையதோன்றல் மண்முழுதன்றி வானும்
வந்துகை கூடத் தந்தாய்;
கண் முழுதுட ம் : றெ
பெற்றேன்; காலைகைம்மாறு காணேன்;
பண்முழுதுடற்றும் தீஞ் சொற் பாவைநின்
பாலன் என்றான்.

இங ஙனம் கூறிநின்ற இவனது பான்மை மேன்மைகளை வியந்து இசைந்து மொழிந்தபடியே அவன் உவந்துகொண்டு என் றும் நீங்காத கேண்மையாளனாய்

நிலைத்திருந்தான். விழுக்குடிப் பிறப்பும், வியத்தகு கல்வியும், ஒழுக்கமும் வாய்ந்த அவனது நட்பினை இவன் நயந்து கொண்டதை நினைந்து அனைவரும் மகிழ்ந்து கொண்டார். தன் அழகிய மகளோடு விழுமிய பொருள்கள் பலவும் கொடுத்து அவன் உறவினை மிக உரிமை செய்திருந்தான். குடிப்பிறந்து தன்கட் பழி நாணுவானைக் கொடுத்தும் கொளல் வேண்டும் நட்பு என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சீவக சிந்தாமணியில் காண்க. 80-ம் அதிகாரம் நட்பாராய்தல். 2169

மணமறிந்து சேரும் மதுகரம்போல் நல்ல
குணமறிந்து கேண்மை கொளல்.

ஒழுக்கமுடையவன் நட்பே
உவந்து கொள்ளத்தக்கதென்பது இதனால்
கூறப்பட்டது.

---

795 ஓர்ந்திடிக்க வல்ல உயர்மருசி நட்பினையேன்
கூர்ந்துகொண்டான் மன்னன் குமரேசா—சார்ந்தே
அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். (ரு)

இ—ள்.

குமரேசா! தன்னை இடித்துச் சொல்லவல்ல மருசியின் நட்பினைச் சடிபரசன் ஏன் மகிழ்ந்து கொண்டான் எனின், அழச் சொல்லி அல்லது இடித்து வழக்கு அறியவல்லார் நட்பு ஆய்ந்து கொளல் என்க.

இது, நட்பாளனுக்கு அறிவும் சொல்வன்மையும் அமைந்திருக்கவேண்டும் என்கின்றது.

அழச்சொல்லி என்றது தன்னை
நண்பனைக் கொண்டவனிடம் ஏதேனும்
குற்றங்கண்டால் உடனே திருந்தும்படி
வருந்த உரைத்து என்றவாறு.

அல்லது = நெறியல்லாதது; கெட்டவழி
என்க. இடித்து = வற்புறுத்தி அறிவூட்டி.
அல்லது இடித்து என்றது தீய வழியில்
செல்லவொட்டாது தடுத்து நிறுத்தி
என்றவாறு.

வல்லார் = வன்மையையுடையவர்;
வல்லுநர் என்க. இது செய்யுள் வழக்காய்ச்
சிலவிடங்களில் வன்மையில்லார் என எதிர்
மறையாயும் வரும்.

மேல், நட்பாக அமைவானுக்குக் குடி
ப்பிறப்பும் குணமும் இயற்கையாக
அமைந்திருக்கவேண்டும் என்றார்; இதில்,
இடித்து அறிவுறுத்தல் முதலிய சில செயற்
கை நலங்களும் அவன்பால்
சேர்ந்திருக்கவேண்டும் என்கின்றார்.

வெண்பா.

திருந்தாத இடத்து வருந்தி அழும்படி சொல்லி அல்வழியிற் செல்லின் இடித்து அறிவுறுத்தி உலக வழக்கினைத் தெளிவுற அறிய வல்லாரது நட்பினை நல்லதென்று ஆராய்ந்துகொள்ள வேண்டும் என்பதாம்.

ஆய்ந்துகொளல் என்றது மேற்குறித்த சொல்லிலும், செயலிலும், அறிவிலும் அவரது இயல்பான மனநிலையின் தகுதியை ஆராய்ந்துகொள்ளவேண்டும் என்பது கருதி. அல்லற்று வியங்கோள் உடன் பாட்டில் வந்தது.

தான் பிழைசெய்ய நேர்ந்தால் ஓர்ந்து உளையும்படி உறுத்திச் சொல்லவும், தகாத வழியில் சென்றால் உடனே தடுத்து நல் வழியிற் செலுத்தவும், உலக வழக்கோடு அரச

நீதி முதலிய அரிய நூல்கள் பலவும் வழுவறவுணரவும் வல்லவனையே நட்பாகக் கொள்ளவேண்டும் என்றவாறு. சொல்லி இடித்து அறியவல் லாரைக் கொள்ளுக என்றதனால் அங்ஙனம் சொல்லாதும் இடியாதும் அறியாதும் உள்ளாரை நட்பாகக்கொள்ளலாகாதென்பதாயிற்று.

நோயாளி மருந்து அருந்தேன் என்று திமிர்ந்து நிற்பின் அவனைக் கட்டிப் பிடித்தேனும், அல்லது குத்தித் தொளைத்தேனும் அழுதாலும் விடாமல் உள்ளே மருந்தைச் செலுத்திக் குணப் படுத்தும் நல்ல மருத்துவன்போலத் தன் நண்பன் அல்லது செய்யப் புகுந்தால் உடனே அணைத்துப் பிடித்து “ஏ கெட்டுப் போவாய்! விட்டுத் திரும்பு” என்று அவன் உணர்ந்து கொள்ளும்படி துணிந்து சொல்லி நட்பாளன் அவனை நல் வழியில்

திருப்ப வேண்டும் என்பார் அழச்சொல்லி என்றும், ஒருவேளை அல்லதைச் செய்துவிட்ட ால் மீண்டும் அதனைச்செய்ய ஒட்டாதபடி வ துக்களை யெடுத்து விளக்கி அடுத்து அறிவுறுத்தி நல் வழியிற் செலுத்த வேண்டும் என்பார் இடித்து என்றும் கூறினார்.

அல்லன அகற்றி, நல்லன துணிந்து சொல்லித் தன்னை நல் வழியிற் செலுத்தவல்லவனையே தனக்கு நட்பாக ஒருவன் நயந்து கொள்ளவேண்டும் என்பது கருத்து.

80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.

2171

தன்னை இடித்துச் சொல்லவல்ல அறிவாளனையே நல்லவன் நட்பாக அணைத்துக்கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மருசிபால் உணரப்படும்.

கதை.

மரீசி என்பவன் இரத்நபுரம் என்னும் நகரிலிருந்தவன். விஞ்சையர் மரபினன். இவனுடைய தந்தை பெயர் அஞ்சுமான். தாய் அருசிமாலை. இவன் உருவிலும் திருவிலும் உயர்ந்தவன். நல்ல வீரன். உண்மையும் நேர்மையும் உறுதியுமுடையவன். உலகியலறிவோடு பலகலைகளிலும் வல்லவன். சொல்லாற்றலில் அக்காலத்திலிருந்த எல்லாரினும் இவன் சிறந்தவன். அரசியற்றுறைகளில் மிகச் சதுரன். இவனது அறிவு நிலைகளையறிந்து விஞ்சையர் திலகனாய் இலகின்ற சடி என்னும் முடியுடை மன்னன் இவனை நண்பனாக நயந்து கொண்டான். நெறி முறை பிறழாத அறிவுடையனாய அம்மன்னனோடு இன்னுயிர்த் தோழனாய் இவன் இசைந்து நின்றான். அசதி முதலிய காரணங்களால் எதேனும் சிறிது தவறு நேரினும் உடனே திருத்திக்

கொள்ளுமாறு இவன் துணிந்து சொல்லிவந்தான். இவனது தெளிவுரைகளை நோக்கி அவன் மிக மகிழ்ந்திருந்தான். வஞ்சமில்லாத நெஞ்சு நேர்மையனாதலால் இவன் வருந்தச் சொல்லினும் அவன் வருத்தங்கொள்ளான். தன் ஆட்சித் துறையில் அரிய காரியங்களை இனிது முடித்து வருதற்கு இவனே தக்கவன் என்று அவன் முடிவுசெய்திருந்தான். ஒருமுறை தன் அருமைத் திருமகளாகிய சயம்பிரபையின் மணவினையைக் குறித்து அமைச்சர்களோடு நெடிது சூழ்ந்து ஒரு முடிவு செய்துகொண்டு போதனபுரத்து வேந்தனிடம் தூதாக யாரைப் போகவிடலாம் ? என்று ஆய்வு செய்தான். யாண்டும் உறுதியோடு நின்று துணிந்து சொல்லவல்லவன் இவனே என்று அங்கிருந்தவரனைவரும் ஒருங்கே உவந்து சொல்லினர்.

"கற்றவன் கற்றவன் கருதுங்

கட்டுரைக்கு:
உற்றன உற்றவுய்த்து உரைக்கும் ஆற்றலான்
மற்றவன் மருசியே அவனை நாம் விடச்
சுற்றமும் கருமமும் சொல்ல வல்லனே."

272



வெண்பா.

என்று எல்லாரும் சொல்லிநின்றபோது அரசன் உள்ளம் மகிழ்ந்தான், உண்மையே என்று வியந்து ஊக்கி விடுத்தான். இவன் சென்று அந் நகரை யடைந்து மன்னனாகிய பயாபதியைக் கண்டு தான் உன்னிவந்துள்ளதை உறுதிபெற வுரைத்தான். இவனது உரையாடலையும் தனக்கு உறுவதாயுள்ள ஊதியத்தையும் கருதி வியந்து உவகை மிகுதியால் சிறிதுநேரம் அவன் யாதும் உரையாதிருந்தான். தான் வலிய

வந்ததாலன்றோ இங்ஙனம் மதி யாது இருக்கின்றான் என்று மாறுபட்ட நினைந்து அவனை நேராக நோக்கிச் சில நீதிகள் மொழிந்தான். இவன் அன்று இடித்துச் சொல்லியுள்ளவற்றைத் தோலாமொழித்தேவர் மிகஇனிமையாக எடுத்துப்பாடியுள்ளார். அடுத்துவருவதில் சிறிது காணலாம்.

முன்னமோர் கருமம் வேண்டி மொழிபவேல் மனிதர் தம்மால்
என்னவரேனும் ஆக இகழ்ந்திடப் படுப போலாம்
அன்னதே உலக வார்த்தை ஆவது இன்று அறியும் வண்ணம்
மின்னவின்று இலங்கும் வேலோய் நின்னுழை விளங்கிற்றன்றே. பூவிரி புருவக் கண்ணி!
பொலங்குழை இலங்கு சோதித்
தேவரே எனினும் தோன்றச் சில்பகல் செல்பவாயின்

எவரேபோல நோக்கி இகழ்ந்துரைத்து
எழுவதன்றே
மாவிரிதானை மன்னா! மனிதரது இயற்கை
யென்றான். (உ) உள்ளிய மரங்கொள்
சோலை மண்மிசை யுறையுமாந்தர்
ஒள்ளியரேனும் தக்கது உணர்பவர் இல்லை
போலாம்
வெள்ளியஞ் சிலம்பின் எங்கோன் விடுத்ததே
வதுவாக
எள்ளி ஒருவரையும் ஈயாது இருந்தனை இறைவ
என்றான். (௩)

இவனது அஞ்சாமையும், நெஞ்சப் பான்மையும், அரசன்பா லுள்ள அன்பும், பிழைகள் கண்ட இடத்து உறுதிகளை இடித்துக் கூறும் ஒண்மையும், சேர்ந்தவன் சிறிது தவறினும் உடனே சினந்து சொல்லும் வன்மையும், உலக நிலைகளை வழுவற அறிந் திருக்குந் தன்மையும், பிற நலங்களும்

இதனல் இனிதுணாலா கும். இங்ஙனம் வருந்தச்சொல்லியும் அவன் வருந்தங்கொள் ளாமல் இவனது மனநலத்தைப்புகழ்ந்து வாழ்த்தி நட்பாய் நயந்து நின்றான். இவன் மீண்டுவந்து தன் மன்னனிடம் விளங்க வுரை
80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.
2173

த்து வேண்டியன செய்தான். சிறந்து முன்கோபமுடையனாயினும் அஞ்சாமல் நின்று வழக்கறிந்து வஞ்சமில்லாமல் எதனையும் வற்புறுத்திச் சொல்லவல்லனாதலால் எல்லாரினும் சிறந்த நண்பனாக இவனை அம் மன்னன் உவந்து கொண்டான்.
அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய வல்லார் நட்பு ஆய்ந்துகொளல் என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய் நின்றான்.

விரிவைச் சூளாமணியில் காண்க.

உள்ளந் திருந்த உரைத்துணர்த்தும் ஒள்ளியனைக்

கோள்க துணையாக் குறித்து.

இடித்துச் சொல்லவல்லவனையே நட்பாக அணைத்துக்கொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

796 அன்றமைந்த கேட்டில் அயாதியேன் உண்மைகண்டு

குன்றாது நின்றான் குமரேசா—குன்றவந்த

கேட்டினும் உண்டோ ருறுதி கிளைஞரை

நீட்டி யளப்பதோர் கோல். (சு)

இ—ள்.

குமரேசா! தனக்கு முன்வந்த

கேட்டில் அயாதி மன்
னன் வருந்தாமல் மக்களது உரிமையை
அளந்து தெளிந்து ஓர்
ஊதியம் என்று என் அதனை
உவந்துகொண்டான் எனின், கேட்டினும் ஓர்
உறுதி உண்டு; கிளைஞரை நீட்டி அளப்பது ஓர்
கோல் என்க.

இது, நண்பர்களின் உண்மையான
உரிமை நிலைகளைத் தெளிவாக அளந்தறிதற்கு
உறுதியாயதோர் கருவியை உணர்த்துகின்
றது. உறுதி = நன்மை, பயன். " உறுதி நீ
உணர்ந்து சொன்னாய்
உயர்கதிச் சேர்" எனச் சிந்தாமணியிலும்,
"உள் பொருள்வலிக்கும் உறுதிச் சூழ்ச்சியன்
" எனப் பெருங்கதையிலும், "தாம்
அறிகுவர் தமக்கு உறுதி" எனப் புறத்திலும்
இது நின்றுணர்த்தும் பொருளையுணர்க. ஓர்
இரண்டளவுள் முன்னது உறுதிபுண் 2174

மையின் அருமையை வியந்துகூறியது. பின்னது கோலின் தகவு தோன்ற நின்றது.

கிளைஞரை என்றது நண்பர்களுடைய நிலைகளை. இஃது ஆகு பெயர். மரத்திற்குக் கிளைகள் போல ஒருவனைத் தழுவி நிற்றலின் இவர் இங்ஙனம் மொழிய நின்றனர்.

கோல் = அளவுகோல். எடுத்தல், முகத்தல், நிறுத்தல் முதலிய அளவு வகைகளுள் இங்கு நீட்டலளவைக் குறித்திருத்தலால் நீட்டி அளப்பது என்றார்.

மேல், அல்லதை நீக்கி நல்லதை இடித்துச் சொல்லி அறிவுறுத்த வல்லவரையே நட்பாக அணைத்துக் கொள்ளவேண்டும் என்றார்; நட்பாய் அணைந்து நின்றவரது உரிமை புன்மையைத் துணிவாகத் தெளிந்து கோடற்குத் தகுந்ததோர் இடத்தினை இதில் உணர்த்துகின்றார்.

அல்லலுறுங் கேட்டிலேயும் ஒரு நல்ல பயனுண்டு; நண்பராய்த் தழுவி நின்ற கிளைஞர் நிலையை வழுவற அளந்து தெளிதற்கு அஃது ஓர் இனிய கோலமாம் என்பதாம்.

ஆக்கத்திலே தான் நல்ல உறுதி உண்டு என்று எல்லாரும் எண்ணியிருப்பார்கள்; கேட்டிலேயும் அஃது உண்டு என அடிகள் ஈண்டுக் காட்டியிருக்கும் அழகையும் கருத்தையும் கருதிக் காண்க.

ஆக்கம் நிரம்பியுள்ள காலத்தில் நண்பர் நிலைகளையறிய முடியாது; ஏதேனும் கேடுவந்த போதுதான் அவர் உண்மை உரிமைகளை உள்ளபடி உணர்ந்துகொள்ள முடியும் என்றவாறு.

முட்டின்று ஒருவருடைய பொழுதின்கண் அட்டிற்றுத் தின்பவர் ஆயிரவராபவே

கட்டலர்தார் மார்ப கலியூழிக்
காலத்துக்
கெட்டார்க்கு நட்டாரோ இல்.
எனவும்,
கேளும் கிளையும் கெட்டோர்க்கு
இல்லை. எனவும்,
காலாடு போழ்திற கழிகிளைஞர்
வானத்து
மேலாடு மீனிற் பலராவர்—ஏலா
இடரொருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற
நாட
தொடர்புடையேம் என்பார் சிலர்.
எனவும்,
80-ம் அதிகாரம்-நட்பாராய்தல்.
2175

அருவன ஈண்டு எண்ணற்றரியன. இயில்
ஓடவைத் தயோ பொன்னின் இயல்பு
உண்மையாகப் புலனாதல்போல் கேடுசேர்த

போது தான் நண்பர்களின் உண்மை நிலைகள் வெளியாக உணரப் படும் என்க.

மண்ணியறிப மணிநலம்; பண் அமைத்து
ஏறிய பின் அறிப மாநலம்; மாசறச்
சுட்டறிப பொன்னின் நலங்காண்பார்; கேட்டறிப
கேளிரான் ஆய பயன். என்றது நான்மணிக் கடிகை.

மணி, குதிரை, பொன் என்னும் இவற்றின் தன்மைகளை யறிதற்கு மண்ணுதல் ஏறுதல் சுடுதல் கருவியாதல்போல் கிளைஞர் தன்மையை அளந்து அறிதற்குக் கேடு கருவியாம் என இணைத்து உணர்த்தி நிற்கும் இதனழகை உற்று நோக்குக.

தனக்குப் பொருளழிவு முதலாக எய்தினும் கேடுவந்தகாலையின் தன்னுடன் முன் அமைந்திருந்த நண்பர்கள் அது பொழு

து உள்ளன்பாய் உடனிருந்து அனுபவிக்கிறார்களா? அல்லது இவன் தொலைந்தான்; இனி மேல் நாம் ஒட்டியிருப்பது கொல்லை என மெல்ல விட்டு ஒழிந்துபோகிறார்களா? என்று அவர்தம் உண்மையான அன்பு நிலைகளை உள்ளபடி அளந்து தெளிகற்கு அக்கேடு நல்ல அளவு கருவியாயிருத்தலால் அதனை அளவுகோலாக உருவகஞ் செய்தார். கேட்டைக் கோல் என்றுகுறித்து ஏற்பக் கிளைஞர் நிலையைப் புலம் என்றமையால் இஃது ஏகதேச உருவகம். நீண்டு கிடந்த ஓர் நிலத்தின் எல்லையைக் கோலால் அளந்து கண்டு வரையறுத்துத் தெளிந்துகொள்ளுதல்போல் தன் நட்பினர் உண்மை நிலைகளைத் தன் கேட்டால் ஒருவன் உணர்ந்து கொள்ளலாம் என இங்ஙனம் உணர்த்திய நுணிபது, முட்டுற்று போது விட்டுப்போகும் அப்பட்டி மக்களைப் பின்பு என்றும் ஒட்டலாகாது

என்பதை உள்ளூற நன்கு உணர்ந்து தெரிந்து கோடற்கென்க.

யாதொரு அநுகூலமும் இல்லை என்று எல்லாரும் அஞ்சி வெறுக்கத்தக்க கேட்டிலும் ஓர் நன்மை யுண்மையை நாட்டி ஈட்டா ராய்தலை விளக்கி நிற்கும் இதன் நயத்தை நோக்குக.



கேடுவந்த காலத்தும் உள்ளன்போடு கூடி நிற்பவரே உண்மையான நண்பராவர் என்பது கருத்து.

தனக்கு வினையும் ஒரு கேடுவந்தபோதுதான் கிளைஞர்களின் உண்மையான உரிமை நிலைகளை ஒருவன் உணர்ந்து தெளியலாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அயாதியால் உணரப்படும்.

## கதை.

யயாதி என்பவன் சந்திர குல வேந்தனாகிய நகுடனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் பிரியம் வதை. அழகிலும் அறிவிலும் இவன் மிகச் சிறந்தவன். நல்ல போர் வீரன். வில் வலியில் மிக்கவன். இந்திர பதத்தை யடைந்து தந்தை இடை முறிந்து போனதை நினைந்து மிக வருந்தி நின்றவன். அருந்தவர் யாவரும் விரும்பத்தக்க பெருந்தன்மை வாய்ந்தவன். காண்டவப் பிரத்தம் என்னும் நகரிலிருந்து யாண்டும் புகழ் மணங் கமழ இவன் அரசு புரிந்தவன். சுக்கிரன் மகளும் பேரழகியுமாகிய தெய்வயானையை மணந்து பெரும்போகங்களை நுகர்ந்து யது வசு என்னும் புதல்வரிருவரைப் பெற்று உவகையுற்றிருந்தான். நகுடனது வழிமுறையைச் சொல்லி வருங்கால்

இவனைக் குறித்து வில்லியார் அழகுறச் சொல்லியுள்ளார்.

மற்றவன் திரு மைந்தன் வில் மைந்திறல் உயர்ந்த
கொற்றவன்; திறற் கொற்றவைக்கு இருபுயங் கொடுத்தோன்;
முற்றவன் பகை முகங்கெட முகந்தொறும் திசையிற்
செற்றவன்; பெருஞ்செற்றமில் குணங்களில் சிறந்தோன். (க)

யயாதி என்று கொண்டு இவனையே எவரினுஞ் சிறக்க
வியாதனும் புகழ்ந்துரைத்தது; மற்றிவன் மேனாட்
புயாசலங்களுக்கு இசையவே புகரவன் புதல்வி
குயாசலந் தழீஇ இருவர் வெங் குமாரை யளித்தான். (உ)

இவ்வணம் அளித்து மகிழ்ந்து வருங்கால் விடப்பன்மன் என்னும் அரசன்

மகளாகிய சன்மிட்டை என்பவளையும் மணந்து கொண்டான். அவள், பூரு என்று ஒரு புண்ணியப் புதல்வனைப் பயந்தாள். ஆண்டுகள் மூன்று கழிந்தபின் மீண்டும் மற அருகுவு

80-ம் அதிகாரம்

நட்பாராய்தல். 2177

என இரு மைந்தரைப் பெற்றாள். மனைமாட்சியும், மக்கட் பேறும், பெருந் திருவும், அருந் திறலும் பொருந்தி இரும்புவி எங்கும் இன்பங்கூரத் திருந்திய செங்கோல் திசை தோறும் செலுத்தி இவன் இசைமிக்கிருந்தான். இங்ஙனம் இருக்குங்கால் தனக்கு மாற்றாளாய் வந்துள்ள இளையாள் மீது வன்மங்கொண்டு மனங் கனன்று தெய்வயானைபோய்த் தன் தந்தையிடம் சிந்தை திரியும்படி சில கூறிச் சினத்தை மூட்டினாள். சுக்கிரன் உளங்

கொதித்து இவன் இளமை நீங்கிக் கிழவனாகும்படி சபித்தான். உடனே நரையும் பிணியும் நடுக்கமுமடைந்து இவன் நைந்து நின்றான். முன்பு நண்பராகி நணுகி நின்றவர்களுட் சிலர் இந்நிலையினை நோக்கித் தம் நிலையும் திரிந்தார். உரிமையாளராய் உடனிருந்த தன் புதல்வர் ஐவரையும் ஒருநாள் அழைத்து வைத்து "எனக்கு உசனர் தந்த மூப்பை நீர் கொள்மின்! நும் இளமை தந்து" என்று தனித்தனி இவன் இசைவுறக் கேட்டான். யது முதலிய நால்வரும் இசைந்திலர். பூரு ஒருவனே அகந்து இசைந்து தன் இளமையைத் தந்து அம்முதுமையைக் கொண்டான். அவனது உண்மையான உரிமையை நினைந்து இவன் உவகை மீக்கொண்டு அவ்விளமையை யெய்திப் பலகாலம் இன்புற்றிருந்து பின்பு தன் அரசு முழுவதும் அவனுக்கே தந்தான். கேடு

வந்த போது உதவாதொழிந்த அப் பிடில்
நால்வரைப் பேணாதொழிந்தான்.
உண்மையான உரிமையாளர் இவரென்பதை
நல்ல நிலைமையிலிருக்கும்பொழுது ஒருவன்
கண்டுகொள்ள முடியாது; அல்லற் காலத்தே
தான் நன்கு அறியலாகும் என்பதை அறிந்து
தெளிந்து அதன்பின் இவன்
அமைந்திருந்தான். கேட்டினும் உண்டு ஓர்
உறுதி கிளைஞரை நீட்டி அளப்பதோர் கோல்
என்னும் உண்மையை உலகங்காண இவன்
உணர்த்தி நின்றான்.

**கட்டளைக்கல் பொன்னிலையைக்**
**காட்டல்போல் நண்பருண்மை கேட்டநிலை**
**காட்டி விடும்.**

கிளைஞர் நிலைகளைக் கேட்டால் அறியலாம்
என்பது இதனால் கூறப்பட்டது.

---

இது, பேதையரோடு நட்புக்கொள்ளல் தீதாம் என்கின்றது.

ஊறியம் = இலாபம், பேறு.
பேதையார் = அறிவிலார்.

ஒரீஇ = ஒழித்து. ஒருவி என்னும் வினையெச்சம் திரிந்து
அளபெடுத்து நின்றது.

இன்பத்துக்கு ஏதுவான பொருள்கள் தன் கையில் நிரம்பப்
பெறுதலே ஒருவனுக்கு ஊதியமாம்; பேதையர் உறவினை ஒழி
த்து விடல் ஓர் ஊதியம் ஆமோ? எனின், அவ்விடுதலே, நரக நீக்
கம் போல் எல்லாத் துன்பங்களையும் நீக்கி இன்பம் பயப்பிக்கும்
ஆதலால் ஆம் என்க. ஏதம் கொண்டு ஊதியம்போகவிடும் இயல்

பிணரான பேதையரை விடுதலே ஒருவனுக்கு
ஊதியம் என்ற இத
னால் அவர் உறவின் தீமை உணரலாகும்.

மேல், நண்பர் நிலைகளை அறிந்து
தெளிதற்குக் கேடு நல்ல
கருவியாம் என்றார்; இதில், மூடர்களோடு
உறவு செய்தல் கூடா
தென்கின்றார்.

ஒருவனுக்கு நல்ல இலாபம் என்று
சொல்லப்படுவது அறி
விலாது நட்பினை ஒழிந்து நீங்குதலே
என்பதாம்.

அறிவிலிகள் உறவு ஒழிந்தபோமாயின்
சனியன் தொலைந்
தது தன்னை முழுத என்றபடி அவ் ஒழிவே
தனக்கு ஓர் சிறந்த
பேறாக நினைந்து ஒருவன்

உலக்துமகொள்ளவேண்டும் என்பார்

அதனை ஊதியம் என்றார். அறிவிலி துணைப்பாடு தனிமையிற்

றுவ்வாது. என்றது முதுமொழிக் காஞ்சி. பேதையருறவு தீதெ லாம் தரும். என்பதுங் காண்க

80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.

2179

பேதையார் கேண்மை பழி பாவங்களை விளைத்து இருமையி லும சிறுமைப்படுத்தித் தன்னைச் சீரழிக்க வல்லதாதலால் அம்மூடத் தொடர்பை எப்படியாவது முயன்று முற்றும் ஒழித்து விடவேண்டும் என்பார் " ஒரீஇ விடல் " என்றார்.

பேதையர்கள் நீதிநிலை தெளியாமல் தீது செய்வாராதலால்

அவரோடு கேண்மை கொள்ளின் தீமை மிகுந்து தன் மேன்மை

குன்றும்; குன்றவே தான் சேர்கின்ற எல்லா நலங்களையும் இழந்து இருமையினும் சிறுமையுற நேரும் என்க.

மேதையர் இருப்ப அவரைவிட்டுப் பேதையரோடு நட்புக் கொள்ளல் பசுவின் நெய்யினை ஒதுக்கித் தள்ளி வேம்பின்கசி விழுது நக்குதல்போல் வசையோடு மிக்க துயருமாகுமாதலால் அத் தீயினை யாதும் தீண்டலாகா தென்பார் ஒரீஇ என்றதோடு அமையாமல் விடல் என மேலும் வற்புறுத்தியருளினர்.

ஆன்படு நெய்பெய் கலனுள் அதுகளைந்து
வேம்படு நெய்பெய் தகைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு.

என்பதும் இங்கு எண்ணத் தக்கது. நல்ல அறிவாளன்

அறிவில்லாரோடு நட்பாய் அமைந்தி ரான்; அவரை அறவே வெறுத்துவிட்டு, அகன்றுபோவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விது ரன்பால் உணரப்படும்.

## கதை.

வில்வித்தையில் மிகச் சதுரனான விதுரன் துரியோதனனாகிய ருடன் முன்பு அன்பு செய்திருந்தான். இவன் அறிவிற் சிறந்தவனாதலால் அருகிருந்து பல உறுதிகள் கூறிவந்தான். அவை ஒரு பயனும் படாமல் வறிதிழந்து போயின. சகுனி முதலிய கொடியவர்களுடன் கூடி மன்னன் கொடுமை புரிந்து வருதலைக் கூடிய வரையும் இவன் நீக்க முயன்றான். ஒன்றும் முடியவில்லை. இனி இப் பேதையர்களோடு கூடியிருப்பது பெரும் பிழையாம்

என்று மனங்கவன்றான். உற்ற உறவினை முற்றும் ஒழித்துவிட்டு அகன்றுபோதற்குரிய

அமயம் நோக்கி யிருந்தான்.

2180. திருக்குறட் குமரேச வெண்பா.

கொம்புள்ளதற்கு ஐந்து; குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரந்தான் வேண்டுமே;—வம்புசெறி
தீங்கினர் தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. என்று இவன் உள்ளங் கருதி யிருக்குங்கால் பாண்டவர்க்காகப் பாகம் வேண்டிக் கண்ணன் அத்தினபுரிக்கு வந்தான், இவனது அரண்மனையில் தங்கி மறுநாள் அரசசபையை அடைந்து உரைசெய்தபோது அவன் இசையாது தேர்டு வசைகள்பல கூறி வைது விடுத்தான். கண்ணன் வருந்திப் போனான்.

அவ்வளவோடு அமையாது இவனையும் அவன் பழித்து இழித்துரையாடினான். உடனே இவன் வெதும்பி மனம் நொந்து தன் வில்லை முறித்துவிட்டு இனி உன் முகத்தில் விழிப்பதில்லை என்று வெறுத்து நொந்து வெளியே வந்து தன் இல்லினையடைந்தான். சிலநாள் தங்கியிருந்து பின்பு அங்கு இருத்தலும் தீதாம் என்று அகன்று போனான். தேசங்கள்தோறும் திரிந்து தீர்த்தயாத்திரைகள் செய்து சிறந்து நின்றான். இவன் போனவுடனே அங்குப் போர் மூண்டு அவரனைவரும் மாண்டுபோயினர். இவன் மீண்டு வந்தான். அப் பேதை மகளது பேதைமைக்கு இரங்கினான். அருந்தவக் கொள்கையிற் சிறந்து புகழும் புண்ணியமும் பொருந்தி பின்பு இவன் உயர் தெய்வமாயிருந்தான். அறிவிலிகளின் உறவை ஒழித்துவிட்டு அகன்றுபோனதே இவனுக்கோர் சிறந்த பேறு என்று எல்லாரும்

சொல்லிப் புகழ்ந்தார். ஊதியம்
என்பது ஒருவற்குப் பேதைடார் கேண்மை
ஒரீஇ விடல் என்னும்
உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து
நின்றது.

உற்ற பெருநோய் ஒழிந்ததுபோல்
வற்றதேல் இன்பம் அறி.

மூடுருற

மூடர்கேண்மை நீங்கலே ஒருவனுக்குக் கோத்
என்பது இதனுல் கூறப்பட்டது.
நன்மையாம்

---

798 கள்ளம் புரிந்த கழற்சிங்கன்
கட்பிணையேன்
கொள்ளவில்லை மன்னன்
குமரேசா—என்னளவும்

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ
கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.
(அ)

80-ம் அதிகாரம் நட்பாராய்தல்.
2181

இ—ள்.
குமரேசா! அல்லலுறும்படி
அகன்றுபோன இராசசிங்கனை வன்
பாண்டியன் பின்பு கொள்ளாது ஒழித்தான்
எனின் உள்ளம் சிறுகுவ உள்ளற்க;
அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்பு
கொள்ளற்க என்க.

இஃது உற்றுழி யுதவாரோடு உறவு
கொள்ளலாகாதெனகின்றது. உள்ளம் = மனம்,
ஊக்கம். உள்ளல் = நினைத்தல்.

உள்ளம் இருவேவ என்றது மன

வெழுச்சி குன்றுதற்கு ஏதுவான செயல்களை.
அவை வலியறியாது கிமிர்தல், வழியறியாது
முயலல். அழிவழிக் கேறல், அறங்கெட நீளல்,
பிறன் கேடு சூழல் முதலாயின.

ஆற்ற அறுப்பார் = உதவி செய்கலை
ஒழிப்பார். ஆற்றுதல் என்னும் தொழிற்
பெயர் விகுதி குன்றி முதனிலையாய் நின்று
அறுப்பார் எனபதனோடு அமைந்து
முடிந்தது. ஆற்றுதல் = உதவுதல். "
ஒருவிர் ஒருவிர்க்கு ஆற்றுதிர்" எனப்
புறத்திலும் " நம்பிக்கு ஆற்றின
தோழர்க்கெல்லாம்" எனச் சிந்தாமணியிலும்
இது கின்றுணர்த்துதல் காண்க. இனி, ஆறு
என்பதை நெறி யென்று
கொண்டு இடைவழியில் ஒழிவார்
எனினுமாம். " அற்றத் திட்டு " ஆற்றறுத்தா
ன்" எனக்கலியினும்," அரும்பிடி நம்மை

ஆற்றறுத்தன்று" எனக் கதையினும் வருதல் காண்க.

மேல், மூட ருறவு கூடாதென்றார்; இதில், கல்லவர்போ லமைந்து நின்று அல்லல் வந்தபோது அகன்று போகும் பொல்லாத வஞ்சர் நட்பைக் கொஞ்சமும் பொருந்தலாகா தென்கின்றார். மனங்குன்றுதற்கு ஏதுவான காரியங்களை நினையா தொழிக; அதுபோல அல்லல்வந்த இடத்துக் கைவிட்டு அகன்று போவார் நட்பினைக் கொள்ளா தொழிக என்பதாம்.

இவ் வுள்ளலும் கொள்ளலும் பின்பு அல்லலுற்று அழுங்கச் செய்யும் ஆதலால் உள்ளற்க; கொள்ளற்க; என்று அறிவுறுத்தி யருளினர். முன்னது அகத்தின்பாலது; பின்னது புறத்தின்

பேலது: வஞ்சர் நட்பைக்
கொள்ளலாகாது என்று உரைக்க
2182. திருக்குறட் குமரேச
வெண்பா.

வந்த அடிகள் நெஞ்சம் கொள்ளு கற்
றரியமேதார் நிலைத்த வுண்மை
யையும் உடன் இணைத்துணர்த்தினர்.
உள்ளம பெருகுதற்கு
ஏதுவான வினைகளை ஓர்ந்து உள்ளு தலு ம்,
கள்ளம் புரியார் நட்
பைத் தேர்ந்து கைக்கொள்ளுதலும்
வேண்டும் என்றவாறு.

முன்பு ஒருவனுக்கு உறுதியான
வழித்துணையாய் உடன
மைந்துவந்தவன் இடையே பயங்க ரமான
ஒரு காடடைந்து காடி
வந்தபொழுது அவனைத்தனியே
தள்ளிவிட்டுத் தானிப்போனது போல்

செல்வக் காலத்தில் மிக உறவாடி நல்ல
நண்பராய் உடனமர்ந்திருந்தவர் ஏதேனும்
அல்லல் வந்தபோது மெல்ல அகன்று
போவாரும் இவ்வுலகில் மிக உளராதலால் அப்
புல்லியரை நண்பர் என்று நம்பி யாண்டும்
பொருந்தலாகா தென்பார் "அல்லற்கண்
ஆற்றறுப்பார் நட்புக் கொள்ளற்க" என்றார்.
கொள்ளின் மண்
குதிரையை நம்பி ஆற்றிலிறங்கினவன்
போலவும், மரம் ஏறிக் கை
விட்டவன் போலவும் அறவே அழிந்துபோக
நேரும் என்க.

அல்லல் வந்த காலத்தும் தம் அன்பு
குன்றாமல் ஆறுதல்
கூறி உதவி நிற்போரே நல்ல நண்பராவர்
என்பது கருத்து.

அற்ற குளத்தில் அறுநீர்ப்
பறவைபோல் உற்றுழித் தீர்வார்
உறவு அல்லாதலால் அவரை அறவே

என்பது குறிப்பு.
ஒழித்துவிட வேண்டும்
கல்லவன்போல் உடனமர்ந்திருந்து
தன்னைச் சேர்ந்தவனுக்கு
ஓர் அல்லல்வந்தபோது விட்டு அகன்று
போவானைப் பின்பு யாரும்
நட்பாக உவந்து கொள்ளார் என்பது இதில்
உணர்த்தப்பட்டது.
இவ்வுண்மை இ ராச சிங் கன்பால்
உணரப்படும்.

## கதை.

இராசசிங்கன் என்பவன் மதுரை
மன்னனான இராசேந்திர
னுடைய தம்பி, குலபூடணனின் இளைய
மகன். இவன் அழகும்
ஆண்மையுமுடையவனாயினும் அறிவும்
அமைதியும் அமையப்
பெறாதவன். புகழ்ச்சி மொழிகளில் மிக்க
விருப்பினன், யாரே

அவனோடு கொண்டிருந்த பகைமையை
விடுத்து உறவு செய்துகொள்ளத் துணிந்து தன்
அருமை மகளை அவனுக்குத் திருமணஞ்
செய்துகொடுக்க முடிவு செய்து இருந்தான்.
அவ் வமயம் உள் நாட்டில் நிகழ்ந்த
குழப்பங்களால் குடிகள் மிகக்
கலக்கமுற்றிருந்தனர். குறும்பர் கொடுமைகள்
எங்கும் அரும்பி நின்றன. தன் அரசு
முறையில் நேர்ந்துள்ள அல்லலை நினைந்து தளர்
ந்த அவ் வழுதி மன்னன் அமைதியுறும்படி
செய்ய மந்திரிகளுடன் கலந்து முழுதும்
முயன்று நின்றான். அவன் இவ் அல்லல்
நிலையில் இருக்குங்கால் தம்பியாகிய இச்சிங்கம்
காஞ்சிபுரத்துக்கு ஓர் உள்ளாள் அனுப்பி
உளவு புலப்படுத்தித் தனக்கே மணமுடித்
துக் கரும்படி அவ்வளவனுக்கு உளமகிழ்
ஊட்டினன். அவனும் இசைந்து காவலாக
இவன் அங்கு வந்து சேருமாறு விரைவாக
ஓர் திருமுக முய்த்தான். உய்த்ததை

யறிந்து உளங்களி கூர்ந்து யாரும் அறியா
வகை எழுந்துபோய் அங்கு இவன்
சேரலானன். இவன் வரவினை யறிந்து
அவன் மனமிக மகிழ்ந்து எதிர்வந்து கண்டு
இனிது உபசரித்து நகர்கொண்டு சென்று
அழகிய தன் மகளை மணஞ்செய்து தந்தான்.
அவ்வளவோடு அமையாமல் இவன் துணை
வலியை நினைந்து அவன் மன நிலை திரிந்து அவ்
வழுதி மன்னனை வென்று கைக்கொள்ளவும்
விருப்பமெழுந்தான். இந்நிலையினைப்
பரஞ்சோதி முனிவர் வருந்திப் பாடியுள்ளார்.

செழியன் தனக்கு வரையறுத்த
செய்திகேட்டுச் செம்பியர்கோன்
கழியன்புடைய குலமகளைத் தான் போய்க்
கொள்வான் கருதிமதி வழிவந்தவற்குத்
தம்பியெனவந்த அரசசிங்கம் எனும் பழி
அஞ்சாதான் வஞ்சித்துப் பழனக் காஞ்சிப்
பதிபுகுவான். 21.84

திருக்குறட் குமரேச வெண்பா.

காஞ்சிப் பதிமுன் குமரதும் இளங் காவலோனைக் கடற்
சேனை
தாஞ்சுற்றியவந்து எதிர் கொடுபோய்த் தம்முன்றனைக்
கொன்றிருந்த மக
ளாம் சிற்றிடையை மணம் புணர்த்தி அந்த மருகற்கு
அரசளிக்க
வாஞ்சித்த அரசபுரத்தானைப் பிடிக்க மதித்தான்
வனம்எதிர்த்தான்.

இங்ஙனம் மதித்தெழுந்து படையோடு கொதித்து வந்து கொடும்போர் விளைத்தான். அந்த அமரில் வந்தவரை வரையும் வென்று இறைவனை நாள் இந்த வஞ்சனையும் அந்த மாமனையும் அம் மன்னன் பிடித்துக் கொண்டான். அருளாளனாதலால் அறவுரைகள் பல கூறி உரிமையோடு இனியன சில உதவி அவ்விருவரையும் விடுத்தான். தன்னை நம்பியிருந்த அண்ணனை அல்லல் சேர்ந்த காலத்தில் அகறவிட்டுப் போய் அவனுக்கு

வரைவு செய் திருந்த பெண்ணையும்
மணஞ்செய்துகொண்டு மனத்திரிந்து இவ்
வண்ணஞ் செய்தானே என்று அனைவரும்
இவனை வைது பழித்தார். *பின்பு என்றார்
தன்பால் இவன் அனுகாவண்ணம் அவன் சில
இசைவுகள் செய்துகொண்டான். கட்பிற்
கள்ளஞ் செய்தவர் களைக் குறித்துச்
சொல்லாடுங்கால் இப்பொல்லாதவனே
அக்காலத்தில் எல்லாருள்ளும் முதலில் எள்ள
நின்றான். அல்லற்கண் ஆற்றுப்பார்
நட்பைக்கொள்ளலாகாதென்பதற்கு நல்ல
உவமையாய் உலகம்காண இவன்
உறுதிசெய்திருக்தான்.

கள்ளத்தோர் செய்த கழிகேண்மை
போல்லாத
கொள்ளித்தீ யென்றே குறி.

அல்லலில் உதவாத புல்லர்களை நட்பா
க க் கொள்ளலாகா தென்பது இதனால்
கூறப்பட்டது.

இஃது அழிவு நேர்ந்தபோது உதவாது ஒழிந்துபோவார் நட்பின் கொடுமை கூறுகின்றது.

கைவிடுவார் = விட்டு விலகிப்போவார். கேடுற்றபோது ஒரு தவியும் செய்யாமல் தன்னைத் தனியே விட்டு அகன்றுபோவார் என்க. அடும் காலை = கொல்லுகின்ற பொழுது. அடுதல் = கொல்லுதல். காலம் என்பது ஈறு திரிந்து காலை என நின்றது.

உள்ளுதல் = நினைத்தல். உள்ளினும் உள்ளம் சுடும் என்றதனால் சொல்லினும் நாச்சுடும்; கேட்பினும் காதுசுடும்; எனப் பிற பொறிகளிலும் ஏற்றிப் பெருக்கிக் காண்க.

மேல், அல்லலுற்றபோது விட்டு அகன்று போவார் நட்பை என்றும் கொள்ளலாகாதென்றார்; அதனை நெஞ்சால் நினைத்தாலும் துன்பமாம் என்று அதன் கடுங்கொடுமையை இதில் உணர்த்துகின்றார். தனக்குக் கேடுவந்த காலத்தில் தன்னைவிட்டு

அகன்று ஒழிந்து போவார் நட்பினைக்
கூற்றுவன் வந்து கொல்லும்போது ஒருவன்
நினைப்பினும் அவ்வுள்ளத்தை அது மிகச்சுடும்
என்பதாம்.

விடுவார் கேண்மை சுடும் என்றது
அக்கொடியாரைக் கனவிலும்
கருதலாகாதென்பது கருத்து.

சுடுதலின் துயர்நிலையை உணர்த்தற்கு
அடுதலை எடுத்துக் காட்டியது அதன் கொடுமை
நோக்கி என்க. காணம். யாவும் கல
ங்கிநிற்கும் மரணகாலத்தில் எதனையும் உள்
ள முடியாதபடி உயிர் அசைவாடுமாதலால்
உள்ளுதற்கரிய அவ் உண்மையை உறுதி பெற
உணர்த்தியருளினர்.

மரணவேதனையே எல்லா வேதனைகளினும்
மிகக்கொடியது; அதனினும் தன்
நண்பனுக்குக் கேடுவந்த காலத்தில் அவனைக்
கைவிட்டு நீங்கிப் போவானது உறவுநிலை
கொடியதாய்நின்று ஒருவன் உள்ளத்தை

மிகவும் வருத்தும் என்பதாம். ஆகவே அக்


கள்ள நெஞ்சரோடு நட்புக்
கொள்ளலாகாதென்பதாயிற்று. கொள்ளின்,
காளை நம்பிக் கையிலுள்ளதை யிழந்து
களைத்துச் செத்தவன் கதைதான்.

நெடுங்காலம் நண்பன்போல்
உடனமர்ந்திருந்து பின்பு கெடுங்காலம்
வந்தபோது உதவி நில்லாது ஒழிந்துபோன
ஓர் இழிந்த மகனை ஒருவன் சாகுந் தருணத்தில்
நினைந்தான்; உடனே நேர்ந்து நின்ற யமவா
தனையிலும் மிஞ்சி அவ்வஞ்சகன் செய்கை
நெஞ்சம்
கனன்று நீண்டு நின்றது; அந்நிலையினை
உலகினுக்குரைத்து நிலை
திரிந்துபோகும் புல்லர் நட்பின்
கடுங்கொடுமையை உணர்த்தியுள்ள

தாக இதனை உணர்ந்துகொள்க.

அழிவந்தபோது ஒழிவுசெய்து போகும் பழிமிகு மக்களை நட்பினராகப் பழகிக்கொள்ளலாகாது என்பது கருத்து.

கேடு நேர்ந்தபோது ஓடிவிடாது அன்புசெய்து கூடி நிற்பவரே நட்பினராவர் என்பது குறிப்பு.

"கெட்ட காலை விட்டனர் என்னது
நட்டோர் என்பது நாட்டினை நன்று"

என இதனை ஒட்டி வந்துள்ளதும் காணக.

நட்பாய்ப் பழகிநின்றவன் கேடு வந்ததென்று கருதித் தன் நண்பனைக் கைவிடுவனாயின் அக்கொடியவனைச் சாகும்போது நினைத்தாலும் அவ்வுள்ளம் வேகும் என்பது இதனால் கூறப்பட்டது. இவ்வுண்மை தருமனத்தின்பால்

உணரப்படும்.

கதை.

தருமதத்தன் என்பவன் மொங்கத
நாட்டு மன்னனாகிய சச்
சந்தனுடைய மந்திரிகளுள் ஒருவன். நல்ல
புத்திமான். அவை
யறிந்து சொல்லவும், பகையறிந்து
வெல்லவும் வல்லவன். என்
றும் நேர்மையுடையவன். யாதும் அஞ்சா
நெஞ்சினன். அர
சர்க்கு நீதிகளை யறிவுறுத்துவதில்
மிகச்சதுரன். இவனது உறுதி
யுரைகளைக்கேட்டு மந்தர்களும் அறிவு
நிலையில் முந்தி நின்றனர்.
அரிய நூல்கள் பலவற்றிலும் இவனோர்
பெரிய தலைவனாய் விலகி
நின்றான். இவனது அறிவின்

திறத்தைக்கண்டு கலைஞர்கள் புக
ழ்ந்தனர். வீரநிலையை நோக்கி வீரர்கள்
போற்றினர். மறுபுல 80-ம் அதிகாரம்
நட்பாராய்தல். 2187

மன்னர்கள் யாவராயினும் முறை பிறழ்ந்து மாறுபடுவாராயின் இகல் வேண்டாம் என்று இடைநின்று இவன் ஒன்று கூறிவிடுவனாயின் அவர் மாறுபாடு நீங்கி ஆறிவிடுவர். ஆறாது வேறுபாட்டோடு மீறிவிடுவோர் அமராயினும் அமருற நேரும் என இவன் அறைகூவி விடுவன்.

இவனது அருந்திறலைக்குறித்துத் திருத் தக்க தேவர் கூறுங்கால்
" வாள் ஞமற்கு ஓலைவைத்தன்ன ஒண்டிறல் ஆற்றலான் " என உவந்து வியந்துள்ளார்.
ஞமன் = யமன். ஓலைவைத்தல் என்றது அந்தகா ! வல்லவனாயின் உடனே போர்க்கு வந்துபார் என வரைந்து விடுதலை. கூற்றுடன்று

மேல்வரினும் ஏற்றவகை அமர்செய்யும்
ஆற்றலோடு அறிவிலும் ஏற்ற முற்றிருந்த
இவன் யாதும் இன்னலுறாவண்ணம் தன்
மன்னனை இனிது பேணி வந்தான்.
வருங்கால் அவன் காமச்சுவையிலாழ்ந்து
தான் கூறிய உறுதிமொழிகளையும் கேளாமல்
உரிமையாளன் என்று கருதி அரசினை
கட்டியங்காரன் என்பவனைப் பார்த்து
வரும்படி கைவிட்டிருந்தான்.
நாளடைவில் குடி படை சூழ் முதலியவற்றை
அக்கொடியவன்
கைவசஞ் செய்துகொண்டான். அதனால்
அரசன் பெருங் கேடடைந்தான். தனக்கு
நண்பனும் முதல் மந்திரியுமாய் நின்ற அவன்
நிலைதிரிந்து அழிவு செய்து நிற்றலை இவன்
அறிந்து வருந்தினன். அவன் உணர்ந்து
திருந்து மாறு பொதுவாகப் பல உறுதிகள்
உரைத்தான். இவன் அன்று உரைத்தன
என்றும் நெஞ்சில்வைத்து நாளும்
சிந்திக்கத்தக்கன. சில ஈண்டுத் தருதும்

காட்டுதும்.

குழற்சிசைக் கோதை சூட்டிக் கொண்டவன் இருப்ப
மற்றோர்
கிழற்றிகழ் வேலினானை கோடிய கெடுங் கண்ணாளும்;
பிழைப்பிலாட் புறந்தந்தானும்; குரவரைப் பேணல்
செய்யாது
இழுக்கினர் இவர்கள் கண்டாய் இடும்பைநோய்க்கு
இரைகளாவார். (1) கட்பிடைக் குய்யம்
வைத்தான்; பிறர்மனை நலத்தைச் சேர்தான்;
கட்டழற் காமத்தீயிற் கன்னியைக் கலக்கினானும்;
அட்டுயிர் உடலர்தின்றான்; அமைச்சனாய்
அரசுகொன்றான்;
குட்டநோய் நரகத்தமுன் குளிப்பவர் இவர்கள்
கண்டாய். (2)

இவற்றிலிருந்து இவனது சீலமும், நன்றியறிவும், நட்புரிமையும், நன்கு உணரலாகும். உரிமையோடு கின்ற உறுதிகளை இங்ஙனம்



2183 திருக்குறட் குமரேச
வெண்பா.

உரைத்து வந்தும் அவ் வுணர்வில்லான் உணர்ந்துகொள்ளாது 'திமிர்த்து நின்று பல இடர்கள் விளைத்தான்; அதனால் தனக்கு நேர்ந்த பெருங்கேட்டையும் பொருட்படுத்தாமல் அரசனுக்கு நேர்ந்துள்ள அழிவினை நோக்கியே இவன் அல்லல் மிக்கூர்ந்தான்.

அவ்வமயம் சிறிதும் கண்ணோடாது இவனை அவன் அறவே கை விட்டான்.

அவ்வளவோடு அமையாமல் தன் அரசனையும் அக் 'கொடியவன் கொல்லத் துணிந்தான்.

நிலத்தலைத் திருவுள்ளதன் நீப்பருங் காதல் கூர

முலைத்தலைப் போகமூழ்கி முகிழ் நிலா முடிகொள் சென்னி

வெலற்கருந்தானை நீத்த வேந்தனை வெறுமை நோக்கிக்

குலத்தொடுங் கோறலெண்ணிக் கொடியவன்

கடிய சூழ்ந்தான்.
முடிவில் கொன்றே தீர்த்தான்.
நெடுங்காலம் உடனிருந்து பழகி
யிருந்தும் கெடுங்காலம் வந்ததென்று
சிறிதும் இரங்காமல் அப்
பழி மகன் செய்த பழிச் செயலை நினைந்து
இவன் உள்ளம் பதைத்
தான். உலகியலை வெறுத்தான். உளைந்து
உளைந்து நொந்து முடிவில் இறந்தான்.
அங்ஙனம் சாங்காலத்தும் அவன் செய்த
தீங்கையே நினைந்து சித்தங் கலங்கினான்.
சாதல் துன்பத்திலும் அத்தீதே உள்ளூற
ஓங்கி நின்றது. ஆ! பாதகா! என்று அலறி
முடிந்தான். கெடுங்காலைக் கைவிடுவார்
கேண்மை அடுங்காலை உள்ளினும் உள்ளஞ்
சுடும் என்பதை உலகம் அறிய இவன்
உணர்த்தி நின்றான்.
முட்டுற்ற போழ்தின் முடுகென்
ஆருயிரை

கட்டான் ஒருவன்கை
நீட்டேனேல்—கட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச்
செல்க
நெடுமொழி வையம் நக.
என்றது நாலடியார்.
தனது உயிரைக் கொடுத்தாயினும்
தன் நண்பனைக் காக்க
வேண்டும்; அதுவே நட்பின் பயனும்;
இது செய்யேனாயின்
இன்னாவேன் என ஆணையிட்டு ஒரு
குலமகன் கூறியிருக்கும்
அருமையை இதில் கூர்ந்து காண்க. முன்பு
நண்பர்போல் நின்று
பின்பு சொல்லளவிலுங்கூட
உதவிசெய்யாமல் அல்லல் வந்த
தென்று அகன்றுபோகும் புல்லர்க்கும்
இத்தகைய கல்லவர்க்கும் 80-ம் அதிகாரம்
நட்பாராய்சல். 2189

உள்ள வேற்றுமையை நாடி ஆராய்ந்து நட்பிற்குரியாரை நயந்து கொள்க

அல்லலின்கண் ஆற்று தகல்வா ருறவுடனே

கொல்லும் விடத்திற் கொடிது.

கெடுப்போது அகன்றுபோம் கொடும்பாவிகளைக் கூடலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

800 கேடில் இராமனுயர்

கேண்மைகொண்டேன் வீடணன்முன்

கூடினரை நீத்தான் குமரேசா—நாடி

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்

ஒருவுக ஒப்பிலார் நட்பு.

(ய).

இ—ள்.

குமரேசா! விபீடணன் இராமரது கேண்மையைக்
கைக்கொண்டு, முன்பு கூடியிருந்தவரது உறவினை எல்லாம் முற்றும்
ஒழித்துவிட்டான் எனின், மாசு அற்றார் கேண்மை
இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக என்க.

மருவு ; ஒப்பு ;

இது, நண்பாக
ஆய்ந்துகொள்ளுதற்கு உரியபெரியாரை
யும்; ஒர்க்குக தள்ளுதற்கு
உரியாரையும் ஒருங்குணர்த்துகின்றது.

மாசு = குற்றம். மருவுக =
தழுவிக்கொள்ளுக. ஒருவுக =
ஒழித்து நீக்குக. மாசு இல்லார் என்னாது அற்றார் என்றது அவ்
இன்மையின் அருமை கருதி. அறியாப் பருவத்தில் மாசு உற்றி
ருப்பினும் அறிவறிந்தபின் அஃது அற்றிருப்பின்
போதும் அவரை அன்புசெய்து தழுவிக்கொள்ளுக

அவ்வளவே

என்றவாறு.

ஒப்பு இலார் = நேரில்லாதவர்; அஃதாவது குணம் செயல்களில் தன்னோடு சமம் இல்லார் என்க. உலகியல்போடு ஒத்து நடவாதார் எனினுமாம். விதிமுறைகளுக்கு அடங்காமல் தான் தோன்றித்தம்பிரான்களாய்த் தருக்கித்திரியும் தறிதலைகள் என்க.

ஒன்று ஈத்தும் என்றது ஏதேனும் ஒரு பொருளைக் கொடுத்தாயினும் என்றவாறு. உம்மை இழிவு சிறப்பாய் நின்று அவ் • ஒருவுதலின் நலத்தை வலியுறுத்தி நின்றது.



வெண்பா.

மேல், உள்ளத்தில் கள்ளமுடையார் நட்பைச் சிறிதும் கொள்ளலாகாதென்றார்; இதில், நல்லவர் நட்பையே நாடிக் கொள்ளவேண்டும் என்கின்றார்.

குற்றமற்றார் நட்பினை விரும்பித்

தழுவிக்கொள்ளுக; ஒரு பொருளைக் கொடுத்தாயினும் ஒப்பில்லார் நட்பினை ஒழித்துவிடுக என்பதாம்.

உற்றது பொய்த்தல், உரைமுறை யாறல், செற்றம் பெருக்கல், சிறுமை மீக்கூறல், அற்றம் நோக்கி அல்லது புரிதல், முதலிய தீமைகள் இல்லாரை நட்பினராகத் தழுவிப் பேணிக்கொள்ள வேண்டும் என்பார் “ மாசு அற்றார் கேண்மை மருவுக ” என்றார்.

குணமுடையாரைப் பொருள் கொடுத்தாயினும் நட்பாகத் தழுவிக்கொள்ளுக என்று முன் உணர்த்தினார்; இதில், அஃதில் லாரை ஒருவேளை தெரியாமல் உறவு செய்திருந்தால் ஏதாவது கொடுத்தேனும் தள்ளிவிடுக என்கின்றார். இங்ஙனம் கொள்ளுதலிலும் தள்ளுதலிலும் கொடுத்தலைக் குறித்தது பின்பு அவற்றால் விளையும் பெரும்பயன் கருதி என்க.

கட்புக்கே காடற்கு ஆவாரை யும், ஆகாதாரையும் அறிவித்திருக்கும் அழகைப் பார்க்க.

நோயாவது பேயாவது பற்றிக்கொண்டால் ஏதாவது ஏற்றதொரு பரிகாரஞ்செய்து தொடக்கத்திலேயே அவற்றைப் பற்ற றத் துடைத்துவிடவேண்டும்; இல்லையாயின் அவை கொல்லவே நேரும்; அதுபோல் நலமில்லார் தொடர்பை அறவே விலக்கவில்லையானல் அஃது அல்லலையே விளைக்குமாதலால் எப்படியாவது அதனை அப்புறப்படுத்தவேண்டும் என்பார் "ஒன்று ஈத்தும் ஒப்பு இலார் கட்பு ஒருவுக" என்றார்.

கீழே புண்பெழுந்த குதிரை தன் உடம்பிலொட்டிய புழுதியை உதறிவிடுவதுபோல் இழிந்தவர் தொடர்பினைத் தெளிந்தவர் உடனே ஒழித்துவிடவேண்டும்

கவியுணர்த்தியிருக்கும் அழகைக் கருதிக்காண்க.

இணக்கம் அறிந்து இணங்கு என்றபடி இருமையினும் நன்மையுறத்தக்க நல்லவரையே நாடித் தெளிந்து நட்புக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

தீயவர் தொடர்பைச் சேராது வெறுத்து நல்லவர் நட்பையே நாளும் நாடிக்கொள்ளவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விபீடணன்பால் உணரப்படும்.

### கதை.

மதிமானான விபீடணன் இராவணனுக்கு உறுதிகள்பல ஓதி வந்தான். அரக்கனாயினும் இயற்கையில் நல்லவனாதலால் செயற்கையால் நேரும் தீமைகள் அவனைச் சேராவண்ணம் இவன் தெரிந்து காத்து நின்றான். நின்றும் அவன் நிலைதிரிந்து பல துயர்வினைகள் செய்தான். மகோதரன்

யோதான் வச்சிர தந்தன் முதலிய பல கொ
கொடிய மந்திரிகள் புடைசூழ இவன் இடை
யிருந்துகொண்டு கொடுமையே
விளைத்தான். அவ் விளைவினை நோக்கி இவன்
உளநிலை திரிந்தான்; "கருநிறத்தோனை,
வெளித்து வைகுவது அரிதென அவருருமேனி,
ஒளித்து வாழ்கின்ற கருமம் அன்னான்" என
அநுமனால் கருத நின்ற இவன்
அக்கொடியவர் கருமநிலைகளை நினைந்து
மறுகியுளைந்து மீண்டும் சில உறுதிகள்
கூறினான். ஒரு பயனும் இல்லை. இனி
அவரோடு கூடியிருப்பது தீதாம் என்று
தெளிந்து இலங்கையை விட்டு எழுந்தான்.
மறு படியும் அண்ணன்பால் வைத்த
உரிமையால் திரும்பினான்.

வாழியாய் கேட்டி யாய் வாழ்வு
கைம்மிக

ஊழிகாண்குறும் நினது உயிரை
ஓர்கிலாய்

கீழ்மையோர் சொற்கொடு கெடுதல்
சேர்தியோ
வாழ்மைதான் அறம்
பிழைத்தவர்க்கும் ஆகுமோ.
என்பதாகப் பல அழுது கூறினான்.
யாதும் பலியவில்லை. உடனே உரிமை
முழுவதையும் ஒருங்கே கைவிட்டு
வெளியே 2192 திருக்குறட்
குமரேச வெண்பா.

போயினான். எங்கே போவேன் என்று மு
தலில் ஏங்கி நின்றான். இராமனது குண
நிலைகளை நினைந்தான். அவரிடம் வந்து
அடைக் கலம் புகுந்தான். அருள்
வள்ளலாகிய அவரும் அணைத்து நின்றார்.
உழுவலன்புடையனாய் அன்பு செய்து இவன்
அவரோடு உவந்திருந்தான். தனக்குரிய
செல்வங்கள் எல்லாவற்றையும் விடுத்துத்
தன் மன நிலைக்கு ஒவ்வாமையால்

இராவணனுறவியளை ஒருவிவந்து புனிதாசிய
இராமனை உரிமையாக மருவிநின்ற இவனது
அறிவுடைமையை அனைவரும் அறிந்து பு
கழ்ந்தார். மருவுக மாசற்றார் கேண்மை; ஒன்று
ஈத்தும் ஒருவுக ஒப்பு இலார் நட்பு என்னும்
உண்மை யை உலகம் அறிய இவன்
உணர்த்தினான். இங்ஙனம் இவன் ஒருவி
மருவியபின்பு கும்பகருணனை ஒருமுறை காண
நேர்ந்தது. ஒப்பில்லார் என்றுகருதி நட்பினை
ஒழித்து வந்தமையைக் குறித்து அவன்
உளந்தெளிந்துகொள்ளுமாறு பலபட இவன்
உரைத்துணர்த்தினான். சில இதனடியில்
வருகின்றன. தீயவை செய்வாரிற் சிறந்தவர்
பிறந்த உற்றார்

தாயனை தந்தைமா ர் என்று உணர்வரோ
தருமம் பார்ப்பார்
தீயவை யறிஇயன்றோ நினக்குயான்
உரைப்பதென்றே

து யவை துணிந்தபோது பழிவந்து
தொடர்வதுண்டோ. (1) உடலிடைத்
தோன்றிற் றொன்றை அறுத்து அதன்
உதிரமூற்றிச் சுட றுறச் சுட்டு வேலி ஞர்
மருந்தினல் துயரந் தீர்வர்
கடலிடைக் கோட்டந்தேய்த்துக் கழிவது
கருமம் அனுல்
மடலுடை அலங்கல்மார்ப மதியுடை யவர்க்கு
மன்னே, (உ)
ஒப் பிலார் உறவை ஒருவிவந்ததும்
துப்புடையார் கட்டை இவன் தொடர்ந்து
கொண்டதும், ஒட்பமோடு கருதி என்றும்
உறுதியுற்று நின்றதும், பிறவும இவற்றுள்
உணரலாகும்.
பொலந்தா இராமன் துணையாகப்
போதந்து
இலங்கைக் கிழவற்கு
இளையான்—இலங்கைக்கே

பேர்த்திறை யாயதூஉம் பெற்றன்
பெரியாரைச்
சார்ந்து கெழீஇயிலார் இல். என்பது
பழமொழி. மாசற்
றூரை இவன் மருவி உடர்ந்த வுண்மை
இதன் கண்ணும் புலனுதல்
காண்க. கெழுமுதல் = பயன்பெறுதல்.
81-ம் அதிகாரம் பழைமை.
2191

தூயவர் தங் கேண்மை துழக்கமாம்
தீயவர்புன் சார்பு தெளி.
தோன்றுகே
நல்லவர் நட்பையே
நாடிக்கொள்ளவேண்டும் என்பது இத
னுல் கூறப்பட்டது ———
இவ் அதிகாரத்தின்
தொகைப்பொருள்.
நன்றாக ஆராய்ந்தறிந்த பின்னரோ

ஒருவனோடு நட்புக் கொள்ளவேண்டும். ஆய்ந்து பாராமல் நட்புக்கொண்டால் முடிவில் சாந்துயரம் உண்டாம். ஒருவனுடைய குணம் குடி இனம் முதலியவற்றை முன்னதாக ஆராய்ந்து நன்மைகண்ட பின்பே நட்புச்செய்யவேண்டும். குடிப்பிறப்போடு பழிக்கஞ்சுகின்றவனே நட்பிற்கு உரியவன். இடித்து அறிவூட்டவல்ல தெளிவுடையாரையே நட்பினராகத் தேர்ந்துகொள்ளவேண்டும். கிளைஞரை அளந்து காண்டற்குக் கேடே நல்ல கருவியாகும். அறிவிலார்களுடைய நட்பினை ஒழித்துவிடல் பெரியதோர் ஊதியமாகும். அல்லல் நேர்ந்தபோது விட்டொழிவார் நட்பை என்றும் கொள்ளலாகாது. சமயம்பார்த்து விலகிவிடுவார் நட்பு எமவாதையினும் கொடிதாம். தூயவர்களோடுதான நட்புக்கொள்ளவேண்டும். தீயவர்களை என்றுஞ் சேரலாகாது.

அ௰-வது நட்பாராய்தல் முற்றிற்று.

---

# 81-ம் அதிகாரம்

## பழைமை.

அஃதாவது பழைமையான் அமைந்த உரிமை. நண்பாய்ப் பழகிநின்றவர் ஏதேனும் பிழைகள் செய்வாராயின் அவ்வுரிமை நோக்கி நட்பாளர் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்று இதில் உணர்த்துகின்றாராதலால் நட்பாராய்தலின் பின் இது வைக்கப் பட்டது. " பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல் சுற்றத் தார் கண்ணே உள " என்றபடி பிறப்பு முறையால் உற்று நிற்கும் உறவினர்கட்குள் இவ்வுரிமை இயல்பாக அமைந்திருக்கும் ஆத லால் இடையே கொள்ளப்பட்டு உள்ளன்போடு இணைந்து நிற்கும் நண்பர்கள் இதனை நயந்துகொண்டு தம்

நட்பினை நலம்பெற வளர்த்து வரவேண்டும் என்பதாம். அதிகாரமுறைமையும் இதனானே புலனும்



801 பண்டு விசயன் படிறறிந்தும் என்பனுறவை
கொண்டமைந்தான் கண்ணன் குமரேசா—கொண்ட
பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. (க)

இ—ள்.

குமரேசா! விசயன் காவுசெய்து வந்திருக்கக் கண்ணன் அறிந்தும் பழைமையை நினைந்து உரிமையொடு என் அதற்கு இசைந்திருந்தான் எனின், பழைமை எனப்படுவது யாது? எனின், கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு என்க.

இது, பழைமையின் பான்மை

கூறுகின்றது.

படிறு என்றது தவமேவடர் தரித்துக்
கருதி. கொண்ட = உரிமையமைந்த.

காவாக வந்திருந்தமை

யாதும் என்றது
னும் எனினுமாம்.

சிறிதும் என்றவாறு. யாதொரு வகையி

கிழமை = உரிமை. இது ஆகுபெயராய்

உரிமையாற் செய்

யும் செயல்மேல் நின்றது. கெழுதகைமை = கேண்மை. கெடுதல் = சிதைத்தல், அறுத்தல். கெடுக்கா என்னும் குறிப்பால் அச்செயலின் இயல்பு புலனும். "மெலியவர் பெற்ற செல்வம் வேரொடுங் கீழ்ந்து" என்புழி இஃதுணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க.

பழைமை என்று சொல்லப்படுவது யாது? என்று வினவின், அது பழகி நிற்பவாது உரிமையைச் சிறிதும் சிதையாத நட்பே என்பதாம்.

தன்னோடு பழகி நிற்கும் நண்பர்கள் ஏதேனும் பிழைகள் செய்துவிடின் அவர் உரிமையை எவ்வகையிலும் வெறுத்து விடா

மல் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்றவாறு. பழைமை கருதிப் பிழை பொறுத்தவழியே நட்பு வளமையுறுமாதலால்

பழமை எனப் படுவது இழமையைக் கீழ்த்திடா நட்பு என்றார். பழைமைக்கும் நட்பிற்கும் உள்ள உரிமை ஒற்றுமைகளை இதில் ஊன்றி யுணர்க. பழைமை என்பது காலங்கழிந்த நேர் தொன்மை நிலையே என்று எல்லாரும் எண்ணியிருப்பர் ஆதலால் அஃது அன்னதன்று; என்றும் எவ்வாற்றானும் நட்பினைச் சிதையாத தன்மையேயாம் என அதன் உண்மை நிலையை உறுதிபெற இதில் உணர்த்தியருளினர்.

81-ம் அதிகாரம் பழைமை.

2195

தன் நண்பன் உரிமைகருதி ஒரு தவறு செய்யின் அதனைப் பழைமை கருதி நட்பாளன் பொறுத்துக் கொள்வனாயின் ஒருவர் பொறை இருவர் நட்பு என்ற பழமொழிப்படி என்றும் அது சிதைவுறாமல் நிலவிவரும்; இல்லையாயின் அஃது இலதாய் ஒழியும் என்க. "பழமையிற் றிரியார் பயன்தெரி மாக்கள்

கிழமையிற் செய்தனன்

கெழுதகை தரும்" என்றதுங் காண்க.

பழமை கடைப்பிடித்துக் கேண்மையைப் பாதுகாக்க வேண்டும் என்பது கருத்து.

தன் நண்பன் எவ்வளவு பிழைசெய்யினும் நல்ல குலமகன் அதனை உரிமையோடு நயந்து பொறுத்து அவனை உவந்துகொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணன்பால் உணரப்படும்.

## கதை.

கண்ணன் துவாரகையில் மன்னனாய் மன்னியிருக்குங்கால்

அருச்சுனன் தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு பல தலங்களுக்கும் சென்று முடிவில் அங்கரையடைந்து அங்கோர் இனிய மலையில் தனியே யமர்ந்திருந்து கண்ணன் வருமாறு கருத்திலெண்ணி ஒரு சூழ்ச்சிசெய்ய அவ்வண்ணமே வந்து அகமகிழ்ந்து தழுவி என்னகாரியமாக இவ்வேடந்தரித்து இங்குவந்து இவ்வாறு கண்

ணியுள்ளாய் என்று நகைமுகத்தனாய் அவனை நயந்து கேட்டான். அவன் உற்ற உண்மையை ஒளியாது உரைத்தான். கண்ணன் தங்கையும் தோழியுமாகிய சுபத்திரை என்பவளைக் களவாக மணந்து கவர்ந்துபோகக் கருதி வந்திருந்ததை அவன் உரையால் அறிந்துகொண்டு சிறிதுநேரம் ஒன்றும் உரையாதிருந்தான். பின்பு உவகையோடு அவன் முகநோக்கினான். புதலில் மறைந்திருந்து வேட்டுவன் புட்பிடிப்பதுபோல் இத் தவவேடத்தில் அமைந்திருந்து என் தங்கையைப் பிடிக்க வந்திருக்கிறாயே! இது உனக்குச் சரியா என்று சிரியாது கேட்டான். சரி இல்லை; ஆயினும், நீ சரிப்படுத்துவாய் என்றுதான் இங்ஙனம் சரித்து வந்





தேன் என்று அவன் தலைகுனிந்து சிரித்தான். சரி, காரியத்தை நான் முடித்துவிடுகிறேன் இந்த இனிதமர்ந்திரு என்று மொழிந்து விட்டு எழுந்துபோய் அரண்மனையையடைந்து தன் அண்ணனை பலராமர் முதலானவர்களை அழைத்துவைத்து நம் நகர்ப்புறத்திலிருக்கும்

மலையில் இந்திரனுக்கு விழாச்செய்யவேண்டும் ஆகலால் நம் குடும்பத்தாரெல்லாரும் நாளைக்கு அங்குச் செல்லவேண்டும் என்றுசொல்லி வேண்டினன். அவ்வாறே அ ந்தப்புரத்தோடு அனைவரும் அங்குச்சென்று குழுமினர். தவவேடங்கொண்டு தனியமர்ந்திருக்கும் அம்முனிவரைக்காட்டி அனைவரையும் தொழு ம்படிசெய்து தானும் விழுந்துவணங்கி பலராமனை நோக்கி இவர் நம் மாபு தழைக்க வந்த மாதவர் என்று வாழ்த்தியேத்தி விழா முடிந்து நகர்க்கு ஏகுங்கால் சுபத்திரையை யழைத்து அம்மா! இப்பெரியவருக்குச் சிறிதுகாலம் பணிவிடை புரிந்தால் உனக்கு நல்ல மணமுண்டாகுமென்று விநயமாக இருத்திவிட்டு அனைவரையும் அழைத்துச் சென்று ஒருவரும் அறியாவகை மறுபடியும் வந்து எம்மவர் அறிந்தால் இசையமாட்டார்: அமயநோக்கி இவளை உன்

நகர்க்கு அழைத்துக்கொண்டு போய்விடு என்று உறுதி செய்து விட்டு "அன்ன மென்னடை அரிவையர் பொருட்டு நீ இன்னம், என்ன என்ன மாதவநக் கொள்ளுதி" என்று புன்னகை செய்து ஒன்றும் அறியாதவன் போல் போய் உறைந்திருந்தான். வந்தவன் இன்னான் என்று பின்பு சுபத்திரையறிந்து பெரு மகிழ்ச்சிகொண்டு கருதிய இன்பந்துய்த்து இருவரும் கலந்து சென்றார். சென்றபின்பு பலராமர் முதலாயினோர் அறிந்து சினந்தார். போனதை நினைக்கலாமா என்று இவன் புகன்று அடக்கி மேல் இயைந்ததைச் செய்தான். தன் நண்பன் செய்ததை நயந்துகொண்டு உரிமையைச் சிறிதும் சிதையாமல் பழைமை கருதி நட்பினை இவன் அன்று பாதுகாத்து நின்றதை அனைவரும் புகழ்ந்து போற்றினார். பழைமை எனப்படுவது யாதெனின், யாதும் கிழமையைக் கீழ்ந்திடா

வட்பு என்னும் உண்மையை உலகங்களை இவன் உணர்த்தி நின்றான். இவன் பழைமை பாராட்டி நின்ற பான்மையைக்குறித்து வில்லிபாழ்வார் மிகப்பாராட்டிச் சொல்லியுள்ளார். சில எண்டுத்தந்து காட்டுதும்.

81-ம் அதிகாரம் பழைமை. 2197

ஆதவன்வந் துதிப்பதன்முன் மற்றைநாளில்
அணிநகர்வாழ் சனமனைத்தும்
அந்தக்குன்றில், மாதவனை தேவவினைல்
மழைக்காலத்து வாசவற்குவிழா
அயர்வான் வந்தகாலை, யாதவரிற் போசரில்
மற்றுள்ள வேந்தர்யாவருஞ்
சூழ்வர நறுந்தார்இராமன் வந்தான், சூகடர்
பச்சிளங் கொங்கைப் பச்சை
மேனிச் சுபத்திரையுந் தோழியர்கள் சூழவந்தாள்.
(க)
முக்கோலுங் கமண்டலமும் செங்கற்றூசும்
முந்நூலுஞ் சிகையுமா முதிர்ந்து
தோன்றும், அக்கோலம் அனைவருங் கைதொழுது
நோக்கி அருள்நலம் பெற்றகன்றதற் பின்

அனைத்துலோகத்து, எக்கோல யோனிகட்கும் .
உயிராய்த் தோற்றம் ஈரைந்தாய்ப் பாற்கடலின்
இடையே வைதும், மைக்கோலமுகில் வண்ணன்
தானுமெய்தி மனவணக்கம் புரிவோனை
வணங்கினனே.
(உ) துன்னியிருவரும் ஒருப்பட்டிருந்தகாலை
சுபத்திரை அத் தடங்குன்றின் சூழலோர் சார், மின்னிய
பைம்புயலின் எழில்மேகைபோல வெளிப் படலும்
மெய்புளக மேன்மேலேறிக், கன்னியிளந்தளிர்க்
கடம்புமலர்ந்த தென்னக் கண்ட விழி இமையாத
காட்சிதானு, மன்னிய மாதவத்தோனை மந்தமூரல்
மாதவன் மைத்துனமையினல் மகிழ்ச்சிகூர்ந்தே.
(ரு) அடிகள் திருவுளத்தென்னம் எம்மனோர்கள்
அறியின் இசையலர் பலர்இங்கு அறிவுருமல்,
கடி அயர்வுற்று உம் பதிகொண்டடைக என்றுங்
காவலர்க்குக் கடனென்றுங் கசியக்கூறி, கொடியிடை
வெங்கனபமுலைக் கன்னிமானைக் கூய்அணங்கே
மெய்மையுறக் கொண்டகோலப், படிவமுனிக்கு
இருபருவம் பணித்தவல் பரிவுடனீ புரிஎன்று
பணித்திட்டானே. (ச)

இழமையைக் கிழ்க்கிடாது கண்ணன்

பழைமை பாராட்டிச் செய்த தன்மையும,
மேற்குறித்த வுண்மையும் இவற்றான்றும்
விளங்குதல் காண்க.

பெற்றதாய் பிள்ளைதனைப் பேணல்போல்
நட்பிற்காம்
உற்ற பழைமை யுணர்.

பழைமையாவது கிழமைகுன்றாத
கேண்மையாம் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

802

கண்டுவெறு தன்று கல்ச்சிருக்கர் நன்றெனவுட்
கொண்டுவந்தார் என்னே குமரேசா—பண்டமைந்த

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

(உ)

இ—ள்.

குமரேசா ! உரோமம் பதன் கெடாது செய்திருந்தும் கலைக்கோட்டு முனிவர் என் கேண்மையோடு இசைந்து கொண்டார் எனின், நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை; மற்று அதற்கு உப்பு ஆதல் சான்றோர் கடன் என்க.

இது, பழைமையோடு நட்பிற்குள்ள உரிமை கூறுகின்றது.

கெழுதகைமை = உரிமை. இங்கு அதனால் செய்வதை உணர்த்தி நின்றது. உறுப்பு = அவயவம். உப்பு என்றது இங்கு இனி மையை. சுவைபயத்தலா நிற்பதாதலால் இங்ஙனம் சொல்ல நின்றது.

சான்றோர் என்றது
அறிவொழுக்கங்களால் நிறைந்த பெரி
யோர்களை.

மேல், உரிமையைச் சிதையாமல்
உறவினைப் பேணலே பழை
மையாம் என்றார், இதில், அதனை
உடையாரது கடமையை உணர்த்துகின்றார்.

நட்பிற்கு அவயமாவது நட்டார்
உரிமையாற் செய்வதே;
ஆனால் அஃது இன்னாதாயினும் அதற்கு
இனியராய் உடன்படு
தல் ஆன்றோர்க்குக் கடமையாம் என்பதாம்.

கெழுதகைமையால் இடையே பிழைகள்
நிகழின் அவற்றை
நல்ல நட்பாளர் பொறுத்துக்கொள்வர்;
அதனால் அந்நட்பு விழி
பெற்ற முகம்போல் ஒளிபெற்று விளங்கும்;
ஆதலால் கெழுதகை
மையை அதற்கு உறுப்பு என்றார்.

கெழுதகைமை இல்லாத நட்பு
உறுப்பற்ற உடல்போல் சிற
ப்பற்றிருக்குமாதலால் அதனால் விளைவதை
விழைந்துகொள்ள
வேண்டும் என்றவாறு.
கை கால் முதலிய உறுப்புக்கள் ஓர்
உடலுக்குக் கிளையாய்
நின்று அழகுறத் தொழிற்பட்டு
வருதல்போல் உரிமைச் செயல்
கள் உறவியாய் நின்று நட்பினை
உயர்த்திவரும்; அவ்வாறு நிலை
யில் எதேனும் பிழையுற நேரின் அதனை
வழுவென்று வெறுமல்
அறிவுடையார் இசைந்து
தழுவிக்கொள்ளவேண்டும் என்பார்
நட்பு ஆதல் சான்றோர் கடன் என்றார்.
81-ம் அதிகாரம பழைமை.
2193
இன்னு செயினும் விடுதற்கு

அரியாரைக்
குன்றக் குறைக்கல்
கருவமேதா — குன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப
களைபவோ
கண்குத்திற்று என்று தம் கை.
என்றது நாலடி.

பழைமைகருதிப் பிழைபொறுக்கவேண்டும் என்பதற்கு உறுப்புக்களை உவமைகாட்டி இஃதுணர்த்தி நிற்றலை யூன்றியுணர்க.

உரிமையாற் செய்தனவற்றை மேலோர் உவந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலைக்கோட்டு முனிவர்பால் உணரப்படும்.

கதை.

கலைக்கோட்டு முனிவர் என்பவர் வி
பாண்டக முனிவருடைய
புதல்வர். இவர் பிறப்பின் இயல்பு
மிகவியக்கத்தக்கது. இவர்
தலையில் கலைமான் கொம்பு ஒன்று க
ழித்துள்ளமையால் இவர் கலைக்கோடர்
எனப்பெற்றார். வடநூலார் இவரை
ருசியசிருங்கர் என்பர். ருசியம் = மான்,
சிருங்கம் = கொம்பு இவர் அருந்தவக்
கொள்கையிற் சிறந்தவர். உலகிய
லொன்றையும் உணராது
நெடுங்காலம்
அருங்கானில் தனிமைய அமர்ந்திருந்தனர்.
பலகலை
களையும் ஓதாதுணர்ந்த முதறிவாளர்.
உறவகை உணராது பொறிவழியோடி
மறுகியலையு நிலையினையொன்று மனிதரை மதி
யாது இவர் தனி நிலையில் நின்றனர்.
ஆயினும் அருள் நிறைந்த நெஞ்சினர்.

மாதவர்யாவரும் வழிபடும் மாண் பினர்,
வசிட்டர் இவரைக்குறித்துத் தசரதரிடம்
ஒருமுறை உவந்து உரையாடி
யுள்ளார். அவ்வுண்மை அடியில்வரும்
பாடல்களால் சிறந்தறிய
லாகும்.
வருகலை பிறவும்நீதி மறை நெறி வாய்மையில்
வாய்மை
தருகலை மறையும் எண்ணிற் சதுமுகற்
குவமை சான்றோன்;
திருகலை புடைய இத்தச் செகத்துளோர்
தன்மை தேரா
ஒருகலை முகச்சிருங்க உயர்தவன் வருதல்
வேண்டும், (1) பார்த்தனின்
மகுடகோடி பரித்தபாரதனில் வைகும்
மார்த்தரா விலங்கென்றுன்னும்
மனத்தன்;மாதவத்தன்;எண்ணின் பூத்தலி
சுகத்தோரும், பூரியும் புகழ்தற்கொத்த

சாத்தனும் வேள்விமுற்றின் தனயர் கள்
உளராம் என்றான். (2) 2200

திருக்குறட் குமரேச வெண்பா.

இங்ஙனம் அருந்தவரனைவரும் போற்றிப்
புகழ்த்தக்க பெருந்தன்
மையாளராய இவரைக்
கொண்டுவந்தால்தான் தன் நாட்டில்
மண்டியுள்ள பஞ்சம் நீங்குமென்று
உரோமபதன் என்னும் மன்
னன் தெளிந்து வஞ்சியரிருவரை
விடுத்தான். அவர் சென்று
வஞ்சித்துக் கொணர்ந்தார். இவர்
வரவினையறிந்து முனிவர் சில
ருடன் எழுந்து அவன் எதிர்வந்து
பணிந்தான். அப்போதுதான்
அவன் கருதிச் செய்திருப்பதை இவர் கண்டு
தெளிந்தார். சினம்

கொண்டுவிடுவரோ என்று அமரரும்
அவ்வமயம் அஞ்சிநின்றனர். யாதும்
வெகுளாது அரசன் உரிமையோடு செய்ததை
நினைந்து இவர் இனியராய் இசைந்தனர்.
இவர் அன்று அருள்செய்து இசைந்ததை
அடியில் வரும் கம்பர் கவிகளால் கண்டு
உணரலாகும்.

அரசனும் முனிவரும் அடைந்த ஆயிடை
வாமுனி வஞ்சமென்று உணர்ந்த
மாலவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன்
வேண்டலால்
கரையெறியாது அலை கடலும்
போன்றனன். (க)

வள்ளுறு வயிரவாள் மன்னன் பன்முறை
எள்ளரு முனிவனை இறைஞ்சி யாரினும்
தள்ளருந் தயாமும் சமைவும் சாற்றலும்
உள்ளுறு வெகுளி போய் ஒளித்த

காமரோ (உ)

அருள்சுரந்து அரசனுக்கு ஆசியும்
கொடுத்து
உருள்தரு தேரின்மீது ஒல்லைஏறி நற்
பொருள்தரு முனிவரும் தொடரப்
போயினன்
மருளொழி உணர்வுடை வரத மாதவன்.

(௩) அவ்வனம் போயடைந்தபின் சிலகாலம் தன் நகரில் தங்கியிருக்கும்படி அவன் போற்றி வேண்டினமையால் அங்கு வீற்றிருந்தனர். இவ்வாறு இருக்குங்கால் தசரதர் இவரை அயோத்திக்கு அழைக்கவா விரும்பி ஆங்கு வந்தடைந்து உரோமபதனிடம் உற்றதை யுரைத்தார். அவன் உவந்துபசரித்து முனிவரை யான் கொண்டுவந்து சேர்க்கின்றேன் நீங்கள் முந்திச் செல்லுங்கள் என்று உரிமைசெய்து அவரை அனுப்பிவிட்டு அமயநோக்கி . 81-ம்

யிருந்து ஒருநாள் இவரை அணுகி அடிவணங்கி நின்று அடியேற்கு ஒருவரம் அருளவேண்டும் என்றான். இவரிடம் யாதொன்றும் கேளாமல உரிமைகருதித் தானேகவே உறுதிசெய்துவிட்டு அதனை முடிவுசெய்ய எண்ணி அவன் முன்னி நிற்றலை முன்னுற அறிந்து புன்னகைசெய்து எய்தியது என்ன? என்றார். அம் மன்னன்வணங்கிய தலையினனாய் வாய்புதைத்து நின்றுஅயோத்திவரை எழுந்தருளி மீளவேண்டும் என்று மிக விநயமாக விளக்கியுரைத்தான். உடனே நல்லது என்று சொல்லி இவர் செலவு இசைந்தார். அவன் கெழுதகைமைபாற் செய்தகைப் பழுதென்று தள்ளிவிடாமல் இவர் பரிந்தமைந்து பழைமை பாராட்டிய பண்பினை அனைவரும் புகழ்ந்து போற்றினர். நட்பிற்கு உறுப்பு கெழுதகைமை மற்றதற்கு உப்பு ஆதல் சான்றோர் கடன் என்னும

உண்மையை உலகம் இவர்பால் அன்று
உணர்ந்து நின்றது, மன்னர்பிரான் அகன்றதற்பின்
மெய்வேந்தன் அருமறைநூல் வடிவங்
கொண்ட, தன்னமுனி வரனுறையுள் தனையணுகி
யிணையடிக தாமரை
களம்பொன், மன்னுமணி முடியணிந்து வரன்முறை
செய்திட இவணி
வருதற்கொத்த, தென்னையென அடியேற்கோர் வரம்
அருளும் அடிகளென யாவதென்றான்.
(௩) புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
பெருந்தகைதன் புகழிற் பூத்த
அறனென்று திருமனத்தான் அமரர்களுக்கு
இடரிழைக்கும் அவுணராயோர் திறலுண்ட
வடிவேலான் தெசரதனென்றுயர் கீர்த்திச்செங்கோல்
வேந்தன் விறல்கொண்ட மணிமாட அயோத்திநகர்
அடைந்துஇவணி மீடல்என் றால். அவ்வரந்தனம்
இனித்தேர் கொணர்தியென அருந்தவத்தோன்
அறை
தலோடும், வெவ்வரந் தின்றயில் படைக்கு ஞ்
சுடர்வேலோனடி பிறைந்தி
வேந்தர் வேந்தன், கவ்வையொழிந் துயர்ந்தனனென்

803 கன்னன் மனைவிதனில் கைபிடித்தும் மன்னவனே
கொன்னே பொறுத்தான் குமரேசா—முன்னே
பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. (ந)

இ—ள்.

குமரேசா! தன் மனைவி தனைக்

கன்னன் பிடித்திழுப் பக் கண்டும்
துரியோதனன் அதனைப்

பொறுத்திருந்தா ன்
ஏனின், கெழுதகைமை செய்தாங்கு
நட்பு எவன் செய்யும் என்க.
அமையாக் கடை பழகிய இது,
நின்றது.

பிழைபொறுத்தலே பழகிய நட்பிற்குப்

பயனும் என்

மனைவி என்றது துரியோதனனுடைய

தேவியாகிய பானு மதியை. உம்மை
பொறுத்தற்கரிய சிறப்புணர்த்தி நின்றது.
எவன்செய்யும் = என்ன

செய்யாதென்றவாறு.

பயனைச் செய்யும். யாதொருபயனையும் வினை இன்மை குறித்து நின்றது.

பழகாது பாவித்திருக்கும் நட்பின் பிழைபாடான செயல்கள் நிகழா ஆகலால் அவற்றின் நிகழ்ச்சிக்கும், பொறுத்தற்கும் மிக உரிமையாதல் கருதி பழகிய நட்பு என்றார்.

செய்து ஆங்கு = செய்தாற்போல்.

ஆங்கு உவமவுருபு.

இனி, ஆங்கு என்பது இடங் காலங்களை புணர்த்தியதாகக் கொண்டு செய்த காலத்து அமையாராயின் நட்பு எவன் செய்யும் எனினுமாம்.

மேல், நண்பர் பிழைசெய்யினும் அதற்கு அமைந்து பொறுத் துக்கொள்ளலே பெருந் தன்மையாம் என்றார்; இதில் அங்ஙனம்

அமைதலே நட்பிற்கு அழகாம் என்கின்றார்.

தன் நண்பன் உரிமையாற் செய்தனவற்றைத் தான் செய் தனவாக நினைத்து ஒருவன் பொறுத்துக் கொள்ளாத இடத்து அவனோடு பழகிவந்த நட்பு என்ன பயனைச்செய்யும் என்பதாம்.

வெறுத்தற்குரியதே யாயினும் தன் நண்பன் செய்ததைத் தான் செய்ததாகப் பாவித்து நட்பாளன் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்பார் " செய்தாங்கு அமை "

எனவும், அங்ஙனம்

81-ம் அதிகாரம் பழைமை.

2203

அமைந்து கொள்ளாதவிடத்து முன்பு பழகிவந்த நட்பினால்

யாதும் பயனில்லை என்பார் "

அமையாக்கடை பழகிய நட்பு

எவன் செய்யும்" எனவும் கூறினர்.

நல்லவனென்று முன்பு ஒருவனை நாடி ஆராய்ந்து நட்புக்
கொண்ட பின்பு அவன் செயலில் ஏதேனும் தவறு காணப்படின்
அதனைத் தன்னதாகக் கருதித்
தழுவிக்கொள்ள வேண்டும் என்றவாறு.

நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக்
கொண்டாரை
அல்லா ரெனினும் அடக்கிக் கொளல்
வேண்டும்
நெல்லுக்கு உமியுண்டு; நீர்க்கு நுரை
யுண்டு;
புல்லிதழ் பூவிற்கும் உண்டு. எனவும்,
நட்டாரால் கேடு வருவுள நாடாமே
ஒட்டா ரெனச் சினந்து ஊறவர்க்கு
அண்ணற்க
வெட்டார் நெறியிழந்து வீழினுங்கால்
நாக்கடிக்கப்

. . . . . . .

பட்டாலும் தட்டார் தம் பல. எனவும்,
நாவையே கடித்த தெனப் பல் தகர்க்கும் பேருளரோ
நடக்கும்வேளை பூவையே பொருவுகழல் சருக்கியதென்
றதைக்களைவோர் புவியிலுண்டோ காவையா
ருலகமெனும் பேருடலின் அவயவம்போல் கலந்த
சிலர் தாவையே செய்யினும் மிக்கறிவுடையோர்
கமைசெயதல் தகுதியாமால். எனவும் வருவன கண்டு
எண்ணற் குரியன.

நெருங்கிப் பழகி நின்ற நண்பன்
பெரும்பிழை செய்யினும் அதனைப்
பொறுத்துக்கொள்ள வேண்டும் என்பது
கருத்து.

தம் நண்பன் செய்தது
வெறுத்தற்குரியதாயினும் பழமை கருதினோர்
அதனைப் பொறுத்துக்கொள்வர் என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
துரியோதனன்பால் உணரப்படும்.

கதை.

துரியோதனனோடு கன்னன் ஆருயிர்
நண்பனாய் அமைந்து இணைபிரியாதிருந்து
வருங்கால் இவன் உவந்து செய்துவந்த உத

விகள் பல. இவ் இருவரது உறவுரிமைகளைக் குறித்துப் புலவர் பலரும் புகழ்ந்துள்ளதோடு மறபுலத்தவரும் வியந்துள்ளார். தான் ஒரு

276

முடிமன்னனாயிருந்தும் அவனை
உடன்வைத்து ஒரு 2204
திருக்குறட் குமரேச வெண்பா.

கலத்தில் உண்டான். பல பொற்கலங்களில் அமிர்தனைய உணவுகளை அழகுறப்பரப்பி இனிமையைவைத்து ஒன்றில் ஒரு கவளம் எடுத்தவுடன் எச்சில்என்று விடுத்து அடுத்ததில்கொண்டு அவ்வாறே புதுமையோடு உண்டுவந்த இவன் அவனை உடன் கொண்டு உண்டான்என்றால் இந்நட்புநிலை எவ்வளவில் இருந்திருக்கும் என்பதை இனிதுணரலாகும். பின்பு அங்கதேசத்துக்கு முடிசூட்டி அவனை அரசனாக்கினன். தன்பால் வைத்துள்ள இவனது அன்பின் பெருக்கை நினைந்து

அவனும் ஆர்வமீக் கூர்ந்தான்.

இன்னான் எனஅறியா என்னை முடி-
கவித்து

மன்னர் வணங்க

ஆசியற்றிப்—பின்னரும்

தன் எச்சில் தானுண் ணுத்

தன்மையான் என்னொடும்

என் எச்சில் உண்டான் இனிது.

என்று இவனது உரிமையியல்புகளை நினைந்து அவன் உருகி மொழிந்துள்ளான். ஒருநாள் வேட்டைமேல் இவன் வெளியே போயிருக்குங்கால் இவனுடைய அருமை மனைவியும் பேரழகியுமாகிய பானுமதி என்பவளோடு அந்தப்புரத்தில் தனியே அவன் சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்தான். அவ் ஆட்டத்தில் இருவரும் வகைதேர்ந்தவராதலால் ஒருவரை ஒருவர் வெல்லவிழைந்து வல்லியல் புரிந்தார். வெளியே போயிருந்த துரியோதனன் உடன் வந்தவரனைவரையும் நீக்கிவிட்டு அங்குத்

தனியே வந்தான். இவன் வருகையைக் கண்டவுடனே பாணுமதி மனம்பதறி விரைந்தெழுந்தாள். அவள் எழுந்த காரணத்தை அறிந்துகொள்ளாமல் தனது வெற்றி கிடைக்கும் சமயம் விட்டுப் போகின்றாளே என்று அவளது பட்டாடையைப்பற்றி வலித்து ஆட்டையை முடித்துப் போகலாம்என அவன் வெட்டியிழுத்தான். அதனால் மேகலை அற்று விழுந்தது; மணிகள் முற்றுஞ் சிதறின. உடனே மன்னனைக் கண்டு கன்னனுங் கலங்கினான். இவன் புன்னகை செய்து ஏன் கலங்குகின்றாய் மணிகளை எடுக்கவா? தொடுக்கவா? என்றான். நீ பொறுக்கித் தா மணிகளை யான் கோவை செய்கின்றேன்; அல்லது நான் தருகின்றேன் நீ அதனைச் செய் என இவன் கள்ளமின்றிக் கனிந்து மொழிந்ததை நினைந்து அன்பால் அவன் உருகி நின்றான். நட்பு நிலை தெரியவந்த இந் நிலையிலுங்கூட இவன் நிலை 81-ம் அதிகாரம் பழைமை.

தீராது நின்று பழைமை கருதிப்
பிழைபொறுத்ததனை அக்காலத்தவரனைவரும்
போற்றுகின்றார். தன் நண்பன் மிகையாய
தொன்றினைச் செய்துவிடினும் அதனைத்
தகுதியோடு தான் செய்ததாகக் கருதித்
தழுவிக்கொள்ளவேண்டும் என்பதற்கு இவ
னையே அக்காலத்தவர் எடுத்துக்காட்டி
வந்தார். கெழுதகைமை செய்தாங்கு
அமைதலே பழகிய நட்பிற்குப் பயனும்
என்பதை உலகம்காண இவன் உணர்த்தி
நின்றான். கொடியவனாயிருந்தும் நட்பு
நிலையில் இவன் நடந்துகொண்டதை நினைந்து
அனைவரும் நயந்து நின்றார். அன்று இவன்
செய்ததை என்றும் அவன் எண்
ணியிருந்தான்.

மடந்தை பொற்றிருமேகலைமணியுகவே மாசறத்

திகழும் ஏகாந்த இடத்தனிற் புரிந்தே நானயர்ந்திருப்ப
எடுக்கவோ கோக்கவோ என்றான் திடம்படுத்
திடுவேல் இராசராசனுக்குச் செருமுனைச்
சென்றுசெஞ்சோற்றுக் கடன்கழிப் பதுவே எனக்
கினிப்புகழும் கருமமும் தருமமும் என்றான்.

இது தம்பால் வந்திடுமாறு குந்திவந்து
கூறியபோது அவன் கூறிநின்றது. இவனது
நட்பின் தகவும், அவனது நன்றியறிவும்
மேற்குறித்த வுண்மையும் இதில் நன்கு
காணலாகும்.

மைத்தடங்கண் மாதேவி வார்துகிலை
யான் இழுப்ப

அற்று விழுந்த
அருமணிகள்—மற்றவற்றைக்

கோக்கோ பொறுக்குகோ என்றானுக்கு
என்னுயிரைப்

போக்கேனோ வெஞ்சமருட் புக்கு.

என்ற இதன் கண்ணும் மேற்குறித்த பழகிய நட்பின் அமைவு புலனாய் நிற்றல்காண்க.

நண்பர் பிழைசெய்யின் நட்பிற்கோர் மெய்ப்புகழ்சேர்
பண்பாம் பயனும் அது.

தவறுசெய்தாலும் நண்பரை அன்புசெய்து தழுவிக்கொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

804 பீறியன்று நண்பர் பிகைசெய்தும் என்கவிக்கோன்
கூறி யுவந்தான் குமரேசா—தேறி
விழைதகையான் வேண்டியிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

(ச) 2206 திருக்குறட் குமரேச வெண்பா.

இ—ள்.

குமரேசா ! தன் நட்பினர் தன்னைக் கேளாமல் சென்று மதுவனத்தை அழிவுசெய்திருந்தும் சுக்கிரீவன் பொறுமைசெய்து என் அவரைத் தழுவி நின்றான் எனின், நட்டார் கெழுதகையால் கேளாது செயின், விழைதகையான் வேண்டியிருப்பர் என்க.

இது, நண்பர் செய்ததை நயந்துகொள்க என்கின்றது.

மீறி என்றது பாதும் கேளாமல் தம் மனம் போனவாறே துணிந்துசெய் தமை கருதி. விழைதகை = விரும்புந் தன்மை.

கெழுதகை = பழகிவந்த உரிமை. " கிள்ளிவளவனொடு கெழுதகை வேண்டி " என்றது மணிமேகலை.

இருப்பர் என்னும் வினைக்கு ஏற்ற எழுவாய் இதில் வருவித்துக்கொள்க. நட்டார் செயின் வேண்டியிருப்பர்

என்றதனால் ஒட்டார் செயின் வெறுத்து வெகுள்வர் என்பதாயிற்று.

மேல், நண்பன் உவவாதன செய்யினும் அவற்றிற்கு உடன் படவேண்டும் என்றார்: இதில், அங்ஙனம் உடன்படுதலோடு உவந்துகொள்ளவும் வேண்டும் என்கின்றார்.

தம்முடைய நண்பினர் தம்மிடம் கேளாமல் ஒருகாரியத் தைச் செய்துவிடுவாராயின் அதனை விரும்புந்தன்மையோடு மேவிக் கொண்டு அறிவுடையார் உவந்திருப்பர் என்பதாம்.

வெறுக்கத்தக்க செயல்களுள் கேளாது செய்தலும் ஒன்றாகுமாதலால் அதனை எடுத்துக்காட்டி அவ்விடத்தும் நட்பாளர் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்று இஃதுணர்த்தியதென்க.

தமக்கு வெருளி மூளும்வகை தம் நண்பர் பிழைகள் பல செய்யினும் அவரை வெறுத்துவிடாது நல்ல குலமக்கள் மேல் விழைவகை எண்ணி விரும்பியே நிற்பர்

என்பார் விழைகையான் வேண்டி இருப்பர் என்றார்.

செறுத்தோ றுடைப்பினும்
செய்புனலோ டோர்
மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்கசை இ
வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும்
பொறுப்பரோ
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு.
(நாலடியார்). 81-ம் அதிகாரம் பழைமை.

2207

தம் செய்யில் நீரைத் தேக்கும்போது அது நில்லாது நீண்டு வாய்பு மீறிச்செல்லினும் நல்ல உழவர்கள் பொறுமையோடு நின்று அதனை அணைத்துப் போற்றிக்கொள்வர்: அதுபோல் தம் நண்பர் வருந்தச் செய்யினும் பெருந்தன்மையாளர் வருந்தாது நின்று அவரைப் பொருந்திக்கொள்வர் என

ஒப்புமைகாட்டி இஃதுணர்த்திநிற்றலை யூன்றியுணர்க.

இடையே நிகழ்ந்த பிழைகளைப் பொறுத்துத் தன் நண்பனை ஒருவன் தழுவி வருவனாயின் அவன் நட்பு நிலைநாட்டிய ஒட்பமுடையனாய் உயர்ந்து விளங்குவன் என்க.

> இறப்பவே தீய செயினும் தன் நட்டார்
> பொறுத்தல் தகுவதொன்று
> அன்றோ—நிறக்கோங்கு
> உருவவண் டார்க்கும் உயர்வரை நாட
> ஒருவர் பொறைஇருவர் நட்பு.

என்பதுங் காண்க.

நட்டோர் கேளாது செய்ததையும் நல்லோர் கேண்மையோடு விரும்பிக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

சுக்கிரீவன் கிட்கிந்தைக்கு அரசனானபின்
இராமனுக்கு உதவி செய்யும்பொருட்டுத் தன்
படைகளை அழைத்துச் சீதையைக்
தேடிவரும்படி கூறிவிடுப்ப அவை தனித்
தனியாய்ப் பிரிந்து திசைகள் தோறும்
சென்றன. அவற்றுள் தென்றிசை நோக்கிச்
சென்ற இரண்டுவெள்ள வானரங்களும் அனு
மான் அங்கதன் சாம்பவன் நீலன் குமுதன்
முதலிய தலைவர்களும் கருதியது காணப்
பெற்றமையால் பெருமகிழ்ச்சியடைந்து
கிட்கிந்தையை நோக்கித் திரும்பி வருகையில்
இடையிலிருந்த மதுவனத்தைக் கண்டு தம
க்கு ஒருபொழுது உணவுக்கு அதனை உ
தவும்படி வானரங்கள் வணங்கி அங்கதனைக்
கேட்டன. அவ்வாறே ஆகுக என்று அவன்
அருள் செய்தான். அவ்வனம் முன்பு
இந்திரனால் வாலிக்குக் கொடுக்கப்பட்டுப்
பின்பு சுக்கிரீவனுக்கு உரிமையாய் மிக
பாதுகாப்போடு மேவியுள்ளது. இனிய

கந்தமூலங்களும், விழுமிய தேனிறால்களும், அழகிய கனிகளும் அமையப்பெற்றது.

இரண்டு 2208 திருக்குறட் குமரேச வெண்பா.

கோடி வானரங்களும், ததிமுகன் என்னும் அதிசூரனும் காவலாளராய் அமைந்து நன்கு காக்க நின்றது. அத்தகைய அழகிய வனத்துள் யாதொன்றையுங் கேளாமல் புகுந்து திரிந்து வானர வீரர்கள் மிகுந்து உண்டனர். தடுத்து நின்றகாவலாளரை அடித்து வெருட்டினர். ததிமுகன் விரைந்து எதிரேறிவந்து அங்கதனை நோக்கி வெங்கதத்தோடு நின்று என்
ஆணையைக் கடந்து
இவ் அல்லலைச் செய்யலாயா?
என்று ஆர்த்து மொழிந்தான்.

இந்திரன் வாசிக்கிற இன்சுவை மதுவின் கானம்

அந்தரத் தவர்க்கும் நோக்கற்கு அரிய என் ஆணை தன்னைச்
சிந்தினை; கதிரோன் மைந்தன் திறலினை அறிதியன்றே;
மந்தரமனைய தோளாய் இற்றதுன் வாழ்க்கை இன்றே.

என்று வைது கிளர்ந்து ஒரு மலையினைவாரி எறிந்தான். அங்கதச் சிங்கம் அதனை ஆய்ந்து விலக்கி மேற்பாய்ந்து குத்தி யான் கேளாது செய்ததை உனக்குக் கேளானவர்களிடம் போய்ச் சொல்லுக என்று அவனைத் தள்ளிவிடுத்தான். அவன் தளர்ந்து போய் இங்கு நிகழ்ந்ததைச் சுக்கிரீவனிடம் வணங்கியுரைத்தான். இதனைக் கேட்டவுடனே அம்மன்னன் மகிழ்ச்சி மீக் கூர்ந்து கருதிச் சென்ற கருமம் முடிவுகண்டு வந்தமையால் தான் இச் செயல் இங்ஙனம் முடிய நின்றது என்று முன்னி எழுந்து இராமமூர்த்தியை வணங்கி

பண்டரு கிளவியாள் தன்னைப் பாங்குறக்
கண்டனர்; அன்னதோர் களிப்பினால் அவர்
வண்டுறை மதுவனம் அழித்து மாந்தியது
அண்டர்நாயக இனி அவலந் தீர்கென.
என ஆறுதல் கூறி விட்டுத் ததிமுகனை நோக்கி என் கேளிர் தோளாது என் உபவனத்தை உண்டதை யான் கேட்டு மகிழ்கின்றேன். நீ வாட்டமுறாது போய் அவரை வணங்கி உறவுசெய்துகொள் என்று அவனை வழிச் செலவிடுத்தான். தன்னையாதும் கேளாமல் கட்டளை கடந்து தன் கட்டோர் செய்ததை நல்லதென்றுகொண்டு அவன் வைத்திருந்ததை நினைந்து அங்கிருந்தவ ரனைவரும் வியந்து கொண் டாடினர். விழைதகையான் வேண்டியிருப்பர்; கெழுதகையான் 81-ம்

கேளாது நட்டார் செயின் என்னும் உண்மையை உலகம் காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

மழையுறப் பைங்கூழ்போல் மாயும் பழைமை

தழுவுறு நட்பின் தகை.

நண்பர் உரையாது செய்ததையும் அறிஞர் உவந்துகொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

805 பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

சேர்ந்தாள் பெருந்துன்பஞ் செய்தும் சிவகங்கையோன்
கூர்ந்து பொறுத்தான் குமரேசா—சார்ந்துநின்ற
பேதைமை யொன்றோ
பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

(ரு)

இ—ள்.

குமரேசா! தன்னுடன் உறவாய் நின்றவள் உளங் கனன்று தனக்குப் பெருந்துயர் செய்திருந்தும் சிவகலை என் பெருங்கிழமையோடு அவளைப் பேணி நின்றாள் ஆதலால், கட்டார் நோதக்க செயின், பேதைமை ஒன்றோ! பெருங்கிழமை என்று உணர்க என்க.

இது, வெறுப்பன செய்பினும் நண்பரைப் பொறுக்கவேண்டும் என்கின்றது.

சேர்ந்தாள் என்றது தன் கணவனுக்கு முகன் மனைவியாகப் பொருந்தியிருந்தாள் என்றவாறு. கூர்ந்து என்றது அன்பு மிகுந்து என்றவாறு. சார்ந்து நின்ற = இயல்பாகவே பற்றி நின்ற.

ஒன்றோ என்பது அறன் ஒன்றோ ஆன்றவொழுக்கு என் புழிப்போல எண்ணிடைச்சொல்லாய்ப் பேதைமைக்கும்

பெருங்கிழமைக்கும் இடையே இசைவுற நின்றது. இனி, இவ்வுரை கொள்ளாது ஒன்றுபோக்கிரமோ என்று தனியே கொள்ளினுமாம். பேதைமை = அறியாமை. பெருங்கிழமை = பெரிய உரிமை.

நோதக்க என்றது துன்புறத்தக்க செயல்களை, இது வினையாலணைந்த பெயர். நோதல் = வருந்தல், துன்புறல்.



மேல், தன்னைக் கேளாமல் தன் நண்பர் ஒரு காரியத்தைச் செய்துவிடின் அதனைக் கேண்மையோடு ஒருவன் தழுவிக்கொள்ளவேண்டும் என்றார்; இதில், அச்செயல் வெறுக்கத்தக்கதாயினும் பொறுக்கவேண்டும் என்கின்றார்.

தான் வருந்தத்தக்க செயல்களைத் தன் நட்பினர் செய்வாராயின் அறியாமையால்

செய்தார் என்றாவது அல்லது பெரிய உரி
மையால் அவற்றைச் செய்தார் என்றாவது
கருதி ஒருவன்
பொறுத்துக்கொள்ளவேண்டும் என்பதாம்.

பொறுத்தற்குப் பேதைமையும்,
கிழமையும் உரித்தாதல் கருதி அவற்றை
உணர்த்தியருளினார். பித்தர் செய்தவும்,
பேதையர் செய்தவும், பத்தர் செய்தவும்
நோதக்கவாயினும் அவை நோவாகக்
கொள்ளப்படா என்க. நட்டார் செயின்
என்றது அவர் அங்ஙனம் செய்யாமையை
உணர்த்தி நின்றது. பகைவராயின்
நோவன செய்வர்; நண்பர் அவை
செய்யார் என்க. செய்தால் அவர்
அறியாமையோ ? அன்போ காரணமாக
வந்தன வென்று கருதி அமைந்துகொள்க
என்பார் "பேதைமை ஒன்றோ பெருங்கிழமை
என்று உணர்க" என்றார்.

நண்பராய் நின்றவர்

ஒரோவழித்துன்பு செய்வாராயின் அவரை வெறுத்துவிடாமல் பொறுத்துக்கொள்ளுதற்கு ஏதாவது உபாயமுண்டா? என ஒருவன் உசாவ அவனை நோக்கி உணர்த்தியுள்ளதாக இதனை உணர்ந்துகொள்க.

துன்பமான செயல்களை நண்பர்கள் செய்தவிடத்து "வெற்றரசு எய்தி எய்தி விட்டரசு எனக்கு விட்டான்" என வாலி கருதியதுபோல் உரிமை மீக்கொண்டு கருதின் பொறுமை மேற் கொள்ளும்; கொள்ளவே மாறுபாடின்றி நட்பு மாண்புறும் ஆகலால் "நட்டார் நோதக்க செயின் பெருங்கிழமை என்றுணர்க" என்றுணர்த்தியருளினார்.

ஏதிலார் செய்தது இறப்பவே தீதெனினும்
நோதக்க தென்னுண்டாம் நோக்குங்கால்—காதல்

கழுமியார் செய்த கறங்கருவி நாட.
விழுமிதாம் நெஞ்சத்துள் நின்று.

என்றது நாலடி:

81-ம் அதிகாரம் பழைமை.

2211

பகைவர் துன்பஞ்செய்பினும் எம் வினைப்பயன் அவர் வாயிலாக வந்தது என்று அறிந்தோர் அமைந்திருப்பரே! அங்ஙனம் இருப்ப நண்பர் செய்கைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று ஈண்டு விரிக்கவும் வேண்டுமோ? என இது விரித்து கிற்றலை நுனித்து நோக்குக. காதல் கழுமியார் செய்தது எதுவாயினும் அதனை விழுமிதாகக் கோடலே பழைமையாளர்க்கு அழகாம்

என்றவாறு. கழு முதல் = நிறைதல், மிகுதல்.

உறவாய் உற்று நின்றவர் உறுதுயர் செய்பினும் பழைமை மிக்க பண்பினர் த ி

கிழமை குன்றார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை சிவகலையால் உணரப் படும்.

## கதை.

சிவகலை என்பவள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த தேவதத்தனுடைய அருமைத்திருமகள். அழகும் குணமும் அமையப்பெற்றவள். இவள் பருவம் நிரம்புமுன்னரே மதுரையிலுள்ள தன் மருமகனுக்கு உரியவளென்று தந்தை உறுதிசெய்திருந்தான். சின்னாட்கழிந்தபின் அத்தந்தையும் தாயும் இறந்துபோகப் பெருந் திருவோடு இவள் தனித்திருந்தாள். இவ்வுண்மையை உறவின் முறையார் மதுரைக்கு அறிவிப்ப அவ்வுரியவனும் வந்து உறுதியபூதத்தை அவ்வளத்தோடு இவளையும் அழைத்துக்கொண்டு தன் இல்லில் வைத்து மணமுடித்துக் கொள்வதாக ஊராரிடம் சொல்லிச் சென்றான். இடையே திரும்புறப்பயம் என்னும் ஊரையடைந்த

வுடன் பொழுதும் அடைந்தது. அன்றிரவு அங்கோர் கோயிலினருகே
தங்கியிருக்குங்கால் ஒருபாம்புவந்துகடிக்க அவன்பதைத்து உயிர் மாய்ந்தான். அதனை இவளறிந்து அலறித் துடித்தாள். மணமகளாக உடன்படிக்கையாயினும் மணம் முடிக்காமையால் மாண்ட அவ் உடம்பைத் தீண்டக்கூசி அருகே நின்று உருகியழுதாள்
.
என் நாயகனேயோ என்னிருகண் மணியேயோ என்னை யீன்றன்
தன்ஆவி யன்னதனி மருகாவோ ! முருகாவோ ! தாரார் முல்லை
மன்னவோ ! வணிகர்குல மணியேயோ ! விடஅரவின் வாய்ப்பட்டாயோ
உன்னுக கிழவான என்னைவிடுத்து எவ்வண்ணம் ஒளிப்பதேயோ ! (1)

உன்காதல் மாமனெனைப்பயர்க அன்றே உறவறிய உனக்கேபேசிப்
பின்காதல் மனைவியொடும் உயிரிழந்தான் யானும் அச்சப்பெற்றியாலே
என்காதல் உயிர்போக வெற்றுடம்போ இருக்கும், உடன் இறப்பேனென்றுத்
தன்காதல் துணையிழந்த அன்றில்என இருந்தழுதாள் தமியளானாள். (2)

இங்ஙனம் இவள் அழுது தவித்தலை
அவ்வமயம் அங்கு எழுந்தருளியிருந்த
சம்பந்தமூர்த்திகள் கேட்டு விரைந்தணுகி
விளைந்ததை

விளைவியறிந்து இறைவனருளால் இறந்தவனை
எழும்படி செய்தார். அவ் அற்புதத்தைக்கண்டு
இவள் வியந்து மகிழ்ந்து அவர் அடி
யில் விழுந்து வணங்கினாள். உடனே
அருகிருந்த வன்னிமரம்.
கிணறு, இலிங்கம் என்னும் மூன்றையும்
சாட்சியாகவைத்து மங்
கலநாண்பூட்டி மணஞ்செய்துவைத்தார்.
இருவரும் மகிழ்ந்து
சென்று மதுரையையடைந்தார்.
முன்னதாகவே ஒருத்திபை

அவன் மணஞ்செய்திருந்தானாகலால்
அவளோடு அன்புசெய்து
இவள் இணங்கியிருந்தாள். நட்புநிலையில்
இவள் நடந்திருந்தாள்
கயவாதனைபல அவள் நாளும் செய்துவந்தாள்.
வரினும் பொறுமை
யோடு இவள் உரிமை செய்திருந்தாள்.
ஒருநாள் இவளுடைய
அருமை மகனை அம்மூத்தவள் மக்கள்
வைது அடித்தார். மக்
காள் ! இப்படிச்செய்யலாமா ? என்று
சிறிது வருத்தத்தோடு
அதனையும் பொறுத்தாற்றினாள். இங்ஙனம்
ஆற்றியிருப்பவும் மற்
றொருநாள் அவள் மிகவும் மீறித் தகவழியப்
பேசினாள்.

எங்களூர்! எங்கச்சாதி ! யார்மகள்!
யாவர்காணச்

செந்தமிழ் சான்ற எங்கோன்

கடிமணஞ் செய்துவக்க
கொந்தவிழ் கோதை நீஎன்
கொழுநனுக்கு ஆசைப்பட்டு
வந்தவளான காமக் கிழத்திக்கு வன்
வாயும் வீறும். (க)

உரியவன் நீமன்றுக
உன்னை வேட்டதற்கு வேறு
கரியுளதாகிற் கூறிக்காட்டெனக்
கழறலோடும்
எரிசுடவாடிச் சாய்ந்த இணர்மலர்க்
கொடியிற் சாய்ந்திக்
தெரியிழை காணஞ்சாய்ப்ப நின்றிது
செப்புகின்றாள். (உ)

அரவின் வாய்ப்பட்ட வைகல் ஆருயிர்
அளித்த ஞானப்
புரவலர் அருளால் எங்கோன்
புறம்பயநாதன் வன்னித்
தருவொடு கிணறுங்காணச் செய்தனன்
சாறம் மூன்று

அவ்வல்வாபள் கூறியவற்றிற்கு இந்நல்லாள் இங்ஙனம் மயங்கி கூறியும் அவன் அமைந்துகொள்ளாமல் அச்சாட்சிகளை இங்குக் கொண்டுவந்து காட்டு பார்ப்போம என்று கனன்று நின்றான். என் செய்வாள் பாவம்! தன் நாயகன் அன்று வெளியே போயிருந்தான். அவள் வாயில்வந்தபடி வைவதைப் பொறுக்கமாட்டாமல் கோயிலை அடைந்தாள். இரவில் இறைவனை நினைந்து கூவியழுதாள்.

> தாதை தாய் இறந்த அன்றே சாபிளாய் இச்சப் போந்த
> பேதையேற்கு நன்மை பேதுறமே வணிகற்கு அன்று
> மாதுலனை ஞாதிவழக்கறுத்த உரிமையீந்த
> நாதனே! எதிலாள்வாய் வைப்பினிற காத்தி என்னை.

என்று கனிந்து வேண்டினாள். அக்கருணைவள்ளல் அவற்றைக்

காட்டி யருளினர் உடனே மாற்றவளை அழைத்துவந்து காட்ட
அவள் கண்டு பயந்தாள். பங்கயக்கண நற்பும், ஈசன் இடத்து
அவள் வைத்த அன்பும், அக்கணவன் இலட்சச் செய்த அருளை
யும் வியந்து நோக்கி, மங்கல நகரத்தெல்லாம் மகிழ்ச்சியுள் ஆழ்ந்
தார்; அவள் பாக்கியம் இகழ்ச்சி மீக்கூர்ந்து வருத்தமுற்றிருந்
தாள். இதனை மறுநாள் வந்து நாயகன் அறிந்து அவளை வைது
வெறுத்தான். அனைவரும் பழித்தார்.

மேதகு வணிகர் மூத்த வினைக்கொடியாளைப் பொல்லாப்
பாதகி இவளாம் என்று பழித்தனர்; படிறு பேசிக
கோதறு குணத்தினளைக் குடிப்பழு துரைத்தாய் நீஎன்
காதலி யாகாய் என்று கணவனுந் தள்ளிவிட்டான்.

இங்ஙனம் அவளைத் தள்ளியதை நோக்கி இவள் உள்ளம் இரங்கி
னள். கணவன் காலில் விழுந்தாள். அவளைக் கைக்கொண்டு

வாழுமாறு கனிந்து வேண்டினள் அக்காள் ஒருதவறுஞ் செய்
யவில்லை; ஏற்றுக்கொள்ளுங்கள் என்று மேலும் மேலும் பணிந்து
போற்றினள். இவள் போற்றினதைப்
அழகுறச் சாற்றியுள்ளார்.

பரஞ்சோதி முனிவர்

அந்நிலை இளையாள், கேள்வன் அடியில் வீழ்ந்து இரப்பாளைய
என்னை கற்பையின்று நிறுத்தினாள் இவள் மாற்றாள் அன்று

அன்னை இல்லாதேற்கு அன்னையாயினள் இவளும் யானும்
இன்னுயிர் உடல்போல் வாழ்வேம் எனத்தழீஇத் தம்மில் நட்டார்.



வெண்பா.

இதிலிருந்து இவளது குணநலங்களும் கெழுதகைமையும் இனிது புலனாகும். தனக்குக் கொடுந்துன்பஞ்செய்திருந்தும் அதனைப் பொருட்படுத்தாமல் நட்பிற் பிழைபொறுத்து அவளை நயந்து கொண்டுஇவள் பழைமை பாராட்டிநின்ற பண்பினை அனைவரும் புகழ்ந்து போற்றினார். நட்டார் நோதக்க செய்யின், பேதைமையினாலோ ! பெருங்கிழமையினாலோ அது செய்தாரென்று பொறுத்து அவரை அணைத்துக்கொள்ளவேண்டும் என்பதை

உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பேதைமைப் பாலினாகல் பெருங்கிழமையினாகல்
மேதக்க நட்டோர் மாட்டும் விரவிடும் பிழைகளெல்லாம்
காதுதற் பாலவல்ல காதிடற் கண்ணினோடி.
நோதக வேர்க்கி மெல்ல நோன்றுவே எறிகுவாரால். (கணிகை) அடிகள் அடியை இஃது அடியொற்றி வந்திருத்தல் காண்க.

ஒட்டார் வலியை ஒறுத்தல்போல் ஒண்புகழாம்
நட்டார் பிழைபொறுத்தல் நன்று

கோவன செய்யினும் நண்பனைக் கொல்லலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

806 பண்டு கொலைவுற்றுப் பாண்டவர்பால் பச்சனன்பு
கொண்டுநின்றான் என்னே

குமரேசா—கொண்டாடும்

எல்லைக்கண் நின்றார் துறவார்

தொலைவிடத்துந்

தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.

(௬)

இ—ள்.

குமரேசா! தனக்குத் தொலைவு நேர்ந்தவிடத்தும் விராடன் என் பாண்டவர்கள் தொடர்பினைத் துறவாமல் நின்றான் எனின், தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவிடத்தும் எல்லைக்கண் நின்றார் துறவார் என்க.

இஃது அழிவு நேர்ந்தபோதும் நட்பினை

r அகலவிடலாகா

தென்கின்றது. தொலைவுற்றும் என்றது தன்

அருமைப் புதல்வ 81-ம் அதிகாரம் பழைமை.



ரும், உரிமைப்

பழையும், உடைமையும், ஒழிவற்றமை கருதி. உற்றும் நின்றான் என்றதில் உம்மை அவனது
புணர்த்தி நின்றது.

நட்புநிலையின் சிறப்

எல்லைக்கண் நின்றார் என்றது நீதி ஒழுக்கங்களின் வரம்பில் நிலைத்து நின்றவர் என்றவாறு. நட்பின் எல்லையில் நின்றார் எனினுமாம். எல்லை = வரம்பு. துறவார் = நீக்கிவிடார். தொலைவு = கேடு.

துறத்தற்கேதுவாய தொலைவிலும் துறவார் யாளர் நிலைமை புலனும்.

என்றதனால் அந்நிலை

தொடர்பு = நட்பு. தொடர்ந்து பழகிவந்தகொண்டாம். தொல்லைக்கண் நின்றார் என்றது பழைமையின்கண் நிலைதிரியாது நின்றவர் என்றவாறு. தொல்லை = பழைமை.

மேல், வெறுக்கத்தக்கன செய்பினும் நட்பினைப்பொறுக்க வேண்டும் என்றார்; இதில், அவரால் அல்லல் வந்தாலும் அவரை

அகற்றிவிடலாகாதென்கின்றார்.

தொன்றுதொட்டு உரிமை குன்றாது பழகிவந்தாரது நட்பினை நெறிதிறம்பாது நின்ற பெரியோர்கள் தமக்குக் கேடுவந்த போதும் ஊடிவிடார் என்பதாம்.

தம நண்பால் பொருட்கேடு யோர்க்கேடு பு நலகத் தொல்லைகள் பல தொடர்ந்து தாம் தொல்லையுற்றபோதும் பழைமையான நல்ல குடிப்பிறப்பாளர் அவர் நட்பைத் தள்ளிவிடார் என்பார் தொல்லைவிடத்தும் தொல்லைக்கண் நின்றார் தொடர்பை எல்லைக்கண் நின்றார் துறவார் என்றார்.

இற்றைக்கு நூற்றுமுப்பதாண்டு கட்கு முன்னர்ப் பாஞ்சாலங்குறிச்சியிலமர்ந்து அரசுபுரிந்திருந்த வீரபாண்டியன் என்னும் எம் வீர மன்னன், தனக்கு நண்பனும் மந்திரியுமாய் நின்றவரால் அல்லல்பல தொடர்ந்தமையால் அவரைத்

தள்ளிவிடவேண்டும்; இல்லையாயின் அரசு தொலைந்துபோம் என்று பலரும் வந்து பல வகையாக உரைத்துவேண்டியும் அவற்றிற்கு யாதும் இசையாமல் இறந்திட நேர்ந்தபோதும் இசைந்தெம்மை அடுத்தோர் தம்மைத் துறந்திடோம் என்று இறுதிவரையும் உறுதியோடு நின்று பேணி வந்ததுபோல் நல்ல மேன்மக்கள் அல்லலுற்றபோதும் தம் நண்பரைத் தள்ளாது தழுவியிருப்பர் என்க.



நண்பனால் துன்பம் நேர்ந்ததாயின் அதனை இன்பமாகக் கருதித் தம் வினைப்பயனை நொந்து பழைமை திரியாமல் நின்று அவனை மிகவும் உரிமை செய்து கொள்ளவேண்டும்; அதுவே நட்பாளர்க்கு உரிய பெருமையாம் என்றவாறு.

இன்னா செயினும் இனிய ஒழிகென்று

தன்னைப            காதலின்
அல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ளல் அரிது.

என்பதும் ஒன்று எண்ணத்தக்கது.

உள்ளமுவந்து நட்புக்கொண்டவனைப் பின்பு எவ்வகையிலும் தள்ளலாகாதென்பது கருத்து.

தம் நண்பால் தமக்கு எவ்வளவு அழிவு நேர்ந்தாலும் பண்புடையார் அவரை ஒழிவுசெய்யாது உவந்தே நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விராடன்பால் உணரப்படும்.

கதை.

மச்சநாட்டு மன்னனாகிய விராடன் பாண்டவர்களைத் தன் நகரில் வைத்து ஓராண்டுவரையும் பாதுகாத்துவந்து

உண்மை கண்டபின்பு ஏண்டிய
கேண்மையாளனாய் அவரோடு இசைவுற்
றிருந்தான். தன் அழகிய மகளாகிய
உத்தரையை அபிமன்ன
னுக்கு மணம்புரிந்து தந்து வரிசைகள் பல
செய்து உரிமைமீக் கூர்ந்து அருமை பாராட்டி
நின்றான். இவனது அன்பையும் மனப்
பண்பையும் கண்டு ஐவரும்
அளவிலுவகைகொண்டார். இழந்த அரசினை
யெய்தி அவர்சிறந்து வாழுமாறு இரவும்
பகலும் எண்ணிச் சூழ்ந்து இவன்
இதஞ்செய்துவந்தான். அந் நட்பு நிலையில்
இவன் ஆற்றி நின்ற நலங்கள்பல.
துரியோதனனோடு அவர்போர் செய்யத்
துணிந்தபொழுது சுவேதன், உத்தரன்
என்னும் தன் புத்திரர் இருவரோடும்
நால்வகைப் படைகளோடுஞ் சென்று
அவர்க்கு இவன் படைத்துணையாய் நின்றான்.
முதல்நாட் போரில் தன் மூத்த மகனையே
படைத்தலைவனாக்கிப் பகைவரஞ்ச அடலமர்

செய்தான். அதில் படைகள் பல மாண்டன.
அன்று முடிவில் தன் புதல்வரிருவரும்
பொன்றிமுடிந்தார். பொழுது முடிந்து 81
-ம் அதிகாரம் பழைமை. 2217

பாசறையை யடைந்தபின் இவனுக்கு எய்திய
அழிவை நினைந்து அனைவரும் உளம்
இரங்கினர். அக்கொலைவினை யெண்ணி மலை
யாமல் தன் நோர்க்கு வேண்டிய
கலங்களையே கருதி உளந் தெளிந்து இவன்
உறுதிசெய்து நின்றான். அவ்வமயம்
கண்ணன் முதலானவர்கள் அருகணைந்து
இவன் சோகம் நீங்குமாறு நூலை மொழிகள் பல
உரைத்துத் தேற்றினர். இவனது
கெழுதகை
மையை வியந்து திருமர் உளமுருகி மொழிந்தார். அவர்
கூறியன அடியில் வரும்பாடல்களால் நன்கு காணலாம்.

அன்று
திருநெடுமால் முதலான தேர்வேந்தர்

விராடனுழைச் சென்றன்மைந்தர் இருவரும்
இன்றொருபடியே வெஞ்சமரில் ஏகினரென்றிரங்கல்
ஐயா பொருமுனையில் வீடுமனைப் புறங்கண்டு
நிருபரெலாம் பொன்றவென்று விராடன்வாள்
எடுப்பித்த பிறகன்றோ தொடுசரத்தால்
வீழ்த்தனென்றார். பேய்செய்த அரக்கனைய
பெருங்கானில் திரிவோர்க்கும் பெற்றதாதல்
தாய்செய்த உதவியினும் தருமுதவி பலசெய்தாய்;
சமரதனில்இன்று உன் சேய்செய்த உயிருதவி
தேவரெலாம் துதிக்கின்றார்; செறிந்தோர்தம்மில் நீ
செய்த பேருதவி யார்செய்தார் எனவுரைத்தான்
நெறிசெய்கோலான். இங்ஙனம் இவனது உரிமை
உதவிகளை நினைந்து தருமர் உளங்கனிந்து
சொன்னதைக் கேட்டவுடனே இவன் கிளை
ந்து நழுவித் தன் கெழுதகைமை தோன்றக்
குழைந்து மொழிந்தான். உன்னுயிர்போல்
நீவளர்த்த உத்தரன்றன் உயிரும்,
உருத்தெழுஞ்சிவேதன் தன்னுயிரும், போரரசர்
தாமிருந்த கொண்டாடச் சமரில் ஈந்தார்; என்னுயிரும்

வினைதன்றி யாரதினிச் சதுர்முகத்தோன் வையபாரில்
மன்னுபிருக்கு உயிரனையாய்! எனவுரைத்தான்
வளமலிசீர் மச்சர்கோமான்'

இதிலிருந்து இவனது மனப்பான்மையும், நண்பனை நயந்து போற்றுந் திறமும் நன்கு தெரலாகும். இவனது பழைமையின் பண்பும் நிலைதிரியாது நின்ற தலைமையும் நோக்கி யால்முதலாயினோர் மகிழ்ந்து புகழ்ந்தார். படையழிவு முதலாகப் பலகேடுகள் தொடர்ந்து தளர்வுற்றபோதும் தொடர்ந்தவர் தொடர்பினைத் துறந்துவிடாமல் இறுதிவரையும் உரிமை மீக்கூர்ந்து அவர்க்கு உறுதிசெய்து இவன் இசைபெற்று நின்றான். எல்லைக்கண் நின்றார் துறவார்
தொலைவிடத்தும் தொல்லைக்கண் நின்றார்
தொடர்பு என்னும் உண்மையை உலகம்
இவன்பால் உணர்ந்து நின்றது. 2218

திருக்குறட் குமரேச வெண்பா.

கண்வலித்த தேன்றதனைக் காய்ந்தகழார்
பண்ணினுமப் பண்பாகப் பார்.

நண்பால்லல்

என்ன துன்பம் வந்தாலும் தன்னையடைந்த நண்பரைத் தள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

807 காணைப் போவென்ற கைகைக்கேன் அன்புசெய்தான்

கோனும் இராமன் குமரேசா—மேனி
அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(எ)

இ—ள்.

குமரேசா! தனக்குத் துன்பஞ்செய்த கைகேசியிடத்தும் இராமன் என் அன்பு

நீங்காமல் அமைந்திருந்தான் எனின், அழிவந்த
செய்யினும் அன்பின் வழிவந்த கேண்மையவர்
அன்பு அறார் என்க.

இஃது, அழிவு செய்யினும் நண்பரை
தெளிகின்றது.

ஒழிவு செய்யலாகா

கான் = வன்மம்.

பசி இறங்கியதுபோல்

ஆளப்போ என்றது வாழைப்பழத்தில்
அவன் வாய்குளிரப்பேசி உய்த்தமைகருதி.

அழிவந்த என்றது அழிவு தருவனவற்றை.
அழி என்னும் முதனிலையே அழிவு என்னும்
தொழிற்பெயர்ப் பொருளையுணர்த்திநின்றது.
இங்ஙனம் வருவதை முதனிலைத் தொழிற்பெய
ரென்ப. அழிவு = கேடு. வந்த இரண்டனுள்
முன்னது அஃறிணைப் பன்மைப்பெயர்.
பின்னது பெயரெச்சம்.

அன்பின் வழிவந்த கேண்மையவர்

நண்பர் செய்தாராயினும் அன்பின்வழியே தொடர்ந்து பழகிவந்த நட்பினையுடையவர் அவர்மேல் வைத்துள்ள தம் அன்பு நீங்கார் என்பதாம்.

அழிவந்த செயல் கள் அன்பை அறுத்தற்கு ஏதுவாகுமாதலால் அவற்றை எடுத்துக்காட்டி அவ்விடத்தும வழிவந்த நட்பாளர் மனந்திரியாமல் நின்று பிழைபொறுத்துப் பழைமைபாராட்டுவர் என்றார்.

எல்லைக்கண் நின்றார் எனவும் அன்பின் வழிவந்தார் எனவும் புதுமைதோன்ற நெடும் பெயராகத் தொடர்ந்து குறித்தது பழைமை கருதிப் பிழைபொறுத்து நட்பாளரும் வெற்றியில் அவர் நின்றுவருதல்போல் யாரும் நிலைத்துவரவேண்டும் என்பது கருதி என்க.

இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்

பொன்னைப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு

நல்லிற் சிதைத்த தீ நாள்தொறும் நாடித்தம்
இல்லத்தி லாக்குத லால்." என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. ஒரோவழி மிகமீறி இல்லம் முதலியவற்றை எரித்தழிப்பினும் நெருப்பை வெறுத்துவிடாமல் உணவாக்கல், விளக்கேற்றல் முதலியவற்றில் பழக்கி நாள்தோறும் பாலித்துவருதல்போல் நண்பர் ஒரோவழித் துன்பஞ்செய்யினும் அவர்பால் அன்பு நீங்காமல் ஆதரித்து வரவேண்டும் என இஃது அறிவுறுத்தி நிற்கும் அழகைக்காண்க.

கொடுந்துன்பங்கள் செய்தாலும் அன்பு குன்றாமல் நின்று நண்பர்களைப் பேணவேண்டும் என்றது என்னையெனின், நிலைதிரியாத நட்பாளன் என்று உலகமுழுவதும் உவந்து போற்றும் பெருமையும், உறவோம்பியதாலாம் அறமும் உறுதல்கருதி என்க.

யானை யனையவர் நண்பொரீஇ

நாயனையார்
கேண்மை தழீஇக்
கொளல்வேண்டும்—யானை
அறிந் தறிந்தும் பாகனையே கொல்லும்
எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்.
என்றது நாலடி.

278

2220 திருக்குறட் குமரேச

வெண்பா.

யானையானது பலநாள் பழகியிருந்தாலும் பாகன் ஒருநாள் சிறிதுபிழை செய்யின், அவனை அது கொல்லவேதுணியும்; நாயானது சிறிது பழகியபின் புறங்கொ அழிவுறுமாறு வேல் கொண்டெறியினும் பழகினவன்பால் அன்பு நீங்காமல் அது வால் குழைத்து நிற்கும்; ஆகலால் முன்னது போலன்றிப் பின்னதுபோல் பழைமைகருதி

நட்புற்றிருக்கும் பண்புடையாளரையே நண்ப ராகப் பாவித்துக் கொள்ளவேண்டும் என்று இது பணித்துநிற்றல்காண்க. இழிந்த விலங்காயிருந்தும் அழிவந்தசெய்யினும் அன்பு அறாது நிற்கும் தன்மையால் உயர்ந்த மக்கட்கும் நட்புநிலையில் உவமையாக இங்கு உயர்ந்து நின்றது. நாயுங்கூட பழைமை பாராட்டி நட்பினைப் பாதுகாத்து வருகின்றதே மக்களாகிய நாம இதில் எப்படி நிற்கவேண்டும் எனபதை இஃது இடித்தறிவுறுத்தி எழுச்சிதோன்ற விளக்கிநிற்றல் காண்க.

தன் நண்பன் தனக்கு எவ்வளவு துன்பஞ் செய்தாலும் பழைமைகருதும் பண்புடையாளன் அவன்மேல்வைத்த அன்பு நீங்கான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

## கதை.

இராமபிரான் அரசுரிமையை மேற்கொண்டு முடிசூட எழுந்த பொழுது கைகேசி இடையேவந்து தடைசெய்து நிறுத்தி இவ் அரசினை என் மகனுகிய பரதனே ஆளவேண்டும்; நீ பதினன்கு வருடம் வனவாசஞ் செய்யவேண்டும்; இது மன்னன் கட்டளை என்று மனங் கூசாது சொன்னுள். அவளது விக்தைமொழிகளைக் கேட்டு இவன் யாதும் சிந்தைதிரியாமல் நின்று அம்மா! தந்தை கட்டளை என்றது என் ? நாங்கள் சொல்லினும் யான் அதனைத் தலைமேற்கொண்டு செல்கின்றேன் என்று தாழ்ந்து வணங்கினுன், வணங்கியும் தாதை எவினுன் என்று அவள் தளராது நின்ருள்.

மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ? என்

பின்னவன் பெற்றசெல்வம் அடியனேன் பெற்றதன்றோ

என்னினியுறுதி யப்பால் இப்பணி தலைமேற்
கொண்டேன்
மின்னொளிர் கான மின்றே போகின்றேன்
விடையுங்கொண்டேன்" 81-ம் அதிகாரம்
பழைமை. 2221

என்று தடையா துமின்றி
நடையேற்கொண்டான். தொடர்
ந்தவந்த மனைவியையும் தம்பியையும்
உடனழைத்துக்கொண்டு அடவியிற் புகுந்து
அல்லல்பல வுற்றான். அங்ஙனம் உறுங்கால்
இலக்குவன் முதலாயினோர் கைகேசியைக்
குறித்துக் கொடியவள் இங்ஙனம் கேடு
சூழ்ந்தாளே என்று கொதித்து வைதனர்.
அவ்வாறு வையுந்தோறும் இவன் தடுத்து
நிறுத்தி என் அம்மை எனக்கு நன்மை
செய்தாளேயன்றிப் புன்மையாதும் செய்ய
வில்லை; அரச பாரத்தை இச்சிறுவன் மீது
வைக்கலாமா ? என்று அருள்செய்து அகற்றி

இனிமையான இவ்விரதவேடத்தை நல்கி
என்னை மேன்மைப் படுத்தியுள்ள
பான்மையை யறியாமல் வீணாக
என் அம்மெய்மைத் தாயைப்
பழிக்கின்றீர்கள் என்று அன்பு
ததும்ப மொழிந்து அவரை அடக்கிவந்தான்.
அவ்வுரையின்படியே
அடவியில் அலைந்து முடிவில் இராவண
வதஞ்செய்து சீதையைச்
சிறைமீட்டிப் போர்க்கோலத்தோடு இம்
மூர்த்தி இலங்கையில்
நிற்குங்கால் பிரிவாற்றாமையால் இறந்துபோ
ன தசரதன் துறக்
கத்திலிருந்து தெய்வயாக்கையோடு
தோன்றித்தழுவி
அன்று கேகயன் மகள்கொண்ட வரமெனும்
அயில்வேல்
இன்றுகாறும் என் இதயத்தி னிடை நின்றது;
என்னைக்

கொன்றும் நீங்கலத் ; இப்பொழுது அகன்றது உன்குலப்பூண்

மன்றலாகமாம் கார்தமா மணியின்று வாங்க.

என்று ஒங்கியழுது
உருகி நின்று ஐய உனக்கு வேண்டியது யாதோ ? அதனைக் கேள் என வேண்டி நின்றான். "சென்று வானிடைக்கண்டு இடர்தீர்வன் என்றிருந்தேன், இன்று காணப் பெற்றேன் இனிப் பெறுவது என்" என்று இவன் இனிதுற மொழிந்தான்.

ஆயினும் உனக்கு அமைந்ததொன் றுரையென அழகன்

தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்

தாயும் தம்பியும் ஆம்வரந் தருகெனத் தாழ்ந்தான்

வாய்திறந்தெழுந் தார்த்தன உயிரெலாம் வழுத்தி.

தன் அருமைத்திருமகனுக்குக் கைகேசி

அழிவுச்சனை செய்தாள் என்று கருதித்
தசரதன் இறக்கும்பொழுது அவளைத்
தனக்கு மனைவியல்லள் என்றும், அவள்
வயிற்றில் தோன்றிய பரதனை மகன் அல்லன்.
என்றும் வயிறெரிந்து
மொழிந்திருந்தானுதலால் 2222
திருக்குறட் குமரேச வெண்பா.

அதனைப் பொறுத்து உரிமைசெய்தருளும்படி
அன்போடு நின்று இவன் உரைத்ததைக்
கேட்டு அனைவரும் உளங்கரைந்து நின்றார்.
தசரதனும் திகைத்தான்.
அவள்மீது கொண்ட கோபந்தணியாது நின்று
இக் குமரனை நோக்கினான். தன்
உளஉறுதியை முடிவாக உரைக்கத்துணிந்து
வாத கேள் எனத் தயரதன்
உரைசெய்வான் மறுவில்
பரதன் அன்னது பெறுக; தான்
முடியினைப்பறித்தில்

விரதவேட மற்றுதவிய பாவிரேல் விளிவு
சாதநீங்கல தாமென்றான் தழீஇ பகைதளர.
செற்றம் நீங்காமல் கொற்றவன் கொண்டுள்ளதை இந்நற்றவன் தெளிந்து
அன்போடு தான் நயந்து நிற்றலைத் துணிந்துணர்த்தினன்.
ஊன் பிழைக்கிலா உயிர்கெடிதளிக்கு நீள் ஆசை
வான் பிழைக்கிது முதலெனுது ஆள்வுறமதித்து
யான் பிழைத்த தல்லால் என்னையீன்ற எம்பிராட்டி
தான்பிழைத்ததுண்டோ என்றான்; அவன் சலந்தவிர்ந்தான்.
இதிலிருந்து இம்மேன்மையாளனது கேண்மையின் பான்மை இனிதுணரலாகும்.
இதனைக் கேட்டவுடனே இப்பெருந்தகை யின் அன்பின் தன்மையையும்

அருந்துணைகளையும் அனைவரும் வியந்து புகழ்ந்தார். நெடுங்காலம் வருந்தியுழையத்தக்க கொடுந் துன்பங்களைச் செய்திருந்தும், கைகேசியின் மீது சிறிதும் அன்பு குன்றாமல் பழைமை பாராட்டி அவளை உவந்துபோற்றி உரிமை செய்து நின்ற இவ்வுத்தமனது நட்பினியாவைப் புலவர் யாவரும் புகழ்ந்துபோற்றினர். தம் நண்பினர் அழிவந்த செய்யினும் அன்பு அறார்; அன்பின் வழிவந்த கேண்மையவர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

கெட்டார் நவையாற்றின் நாடி நயக்கநாப்
பட்டதென்று தட்டுவரோ பல்.

அல்லல்செய்தாலும் நண்பரை அகற்றலாகாதென்பது இத நூல் கூறப்பட்டது.

---

808 பண்டமனன் செய்த பழிநாளை என் குமணன்
கொண்டான் இனிதாக் குமரேசா—மண்டிநின்ற
கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின். (அ)

இ—ள்.

குமரேசா! தன்னை அமணன் கொல்லச்செய்த நாளை நல்லதென்று கருதிக் குமணன் என் நயந்திருந்தான் எனின், கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு நட்டார் இழுக்கம் செயின் நாள்

எனக.

இது, நண்பர் இழுக்கத்தின் நலங்கூறுகின்றது.

பழிநாள் என்றது குமணன் தலையைக் கொண்டுவருவார்க்குக் கோடி செம்பொன் கொடுப்பதாகப் பறையறைவித்த கொடுமை கருதி, 'வீடிவீழும் வெறுந்தலைக்கு என் தம்பி கோடி என்றது என் கோதறு மாதவம்' என்று குமணன் குறித்து நக்கானாதலால் இனிதாக் கொண்டான் என்றும்.

கேள் என்றது நண்பரை. இழுக்கம் = பிழை, குற்றம்.

கெழுதகைமை வல்லார்க்கு நாள் நல்லதாம் என்றதனால் அஃதிலார்க்கு அந்நாள் இடராய்த் தோன்றும் என்பதாயிற்று.

மேல், நண்பினர் துன்பஞ் செய்யினும் பழைமைமிக்க பண்பினார் அன்பு நீங்கார் என்றார்; இதில், அச்செய்கை நிகழ்ந்தநாளே தமக்குச் சிறந்த நாளாக உவந்திருப்பர்

என்கின்றார்.

நண்பர் செய்த பிழையைத் தாம் காணுமையேயன்றிப் பிறர் வந்து சொன்னாலும் கேளாத உரிமையுடையார்க்கு அவர் பிழை செய்வாராயின் அது நல்ல நாளாம் என்பதாம்.

நட்பாளன் பழைமைகருதிப் பிழைபொறுக்கும் பெற்றியனு யினும் தன் நண்பன் அது செய்தாலன்றி இப் பொறுமைத் தன்மை புறத்தே புலனாகாது; அவன் என்று இழுக்கம் செய்தானே அன் றுதான் இவனுரிமை ஒழுக்கம் வெளிப்படும்; படவே அந்நாள் இவனுக்கு நல்லநாளாய்ப் பயன்பட்டு உறுதி பயந்து நிற்கும் ஆக லால் நட்டார் இழுக்கம் செயின் கெழுதகைமை வல்லார்க்கு அது

2224 திருக்குறட் குமரேச வெண்பா.

நாள் என்றார். நாள் எனப் பொதுவாகக்

கூறியிருப்பினும் நல்ல, சிறந்த, உறுதியான, பயன்பட்ட, என ஏற்றதொன்றை வருவித்து இசைத்துக்கொள்க.

தான் நயந்துகொண்ட நண்பர்
துயர்செய்த நாளே ஒருவனுக்கு உயர்
நாளாகும் என்றது என்னை எனின், புகழும்
கேண்மையும் மிக்கெய்தி அவன் உயர்ந்து
நிற்றற்கு அஃது உரிமையாய் நிற்கும்
அருமைகருதிஎன்க. கேளிர்
அல்லல்செய்தநாள் கெழு
தகைமை வல்லார்க்கு நல்லநாளாமென்பதை
அடியில்வரும் இராம வாக்காலும் அறியலாகும்.
பிறந்தநாள் தொடங்கி யாருந் துலைபுக்க
பெரியோன் பெற்றி மறந்தநாள் உண்டே?
என்னைச் சான்என்று வாழ்கின்றனைத்
துறந்தநாட்டு இன்றுவந்து துன்னினன்
சூழ்ச்சியாலே இறந்தநாள் அன்றோ என்றும்
இருந்தநாள் அவதென்றான்.

விபீடணன் பகைப்புலந்தவன் அவனை

நண்பனாகக்கொண்டால் எதேனும் அல்லல்
செய்துவிடுவன்; ஆதலால் அவனைக்
கொள்ளலாகாதென்று அடுத்துநின்ற
சுக்கிரீவன் முதலாயினோர்
தடுத்துரைத்தபோது இராமன் அவர்களை
நோக்கி யான் இவனை நட்பாக்கிக்
கொண்டபின்பு இவன் இழுக்கம்செய்து
அதனால் யான் இறந்துபட நேருமாயின்
அந்நாளை எனக்கு என்றும் நன்னாளாம்
எனத் துணிந்து சொல்லிக் கேளிரைப்புரக்கும்
தன் கெழுதகைமையை இதில்
உணர்த்தியிருத்தல் காண்க. இக்கவியின்
பொருட்பெருக்கையும், கருத்தையும் நுனித்து
நோக்குக. ஈண்டு விரிப்பிற் பெருகும்.
துலைபுக்கபெரியோன் எனச் சிபிச்சக்கர
வர்த்தியை முன் எடுத்துக்காட்டி நட்பாளும்
தன் தன்மையை இராமன் இங்கு காட்டி
யிருக்கும் நுட்பம் நன்கு உய்த்துணர்ந்து
நயந்து இன்புறத்தக்கது.

தன் நண்பன் செய்த பிழையைப்

பொறுத்து நயந்து கோடலே ஒருவனுக்கு நல்லதாம் என்பது கருத்து.

தாம் கேளிர் பிழைசெய்த காலை நல்ல கேண்மையாளர் தமக் கோர் நன்றாகக் கருதிக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குமணன்பால் உணரப்படும். ' 81-ம் அதிகாரம்

பழைமை. 2225

## கதை.

குமணன் தன் நகரிலிருந்து அரசுபுரிந்து வருங்கால் அவன் தம்பியாகிய அமணன் அல்லல்புல செய்துவர அவற்றையெல் லாம் பொறுத்து அவனை ஆதரித்து வந்தான். தன்னை அடுத்தவர் தன் பக்கல் என்ன பிழை செய்யினும் யாதும் கேளாமல் இவன் அன்புசெய்து நிற்றலை அவன் நன்கு அறிந்திருந்தமையால் அச்சம் யாதுமின்றி இச்சைப்படியே மேலும் மேலும் இடர் மிகச்

செய்தான். மருவலர்க்கு வெருவருந்
திறலினனாயினும் இரவலர்க்கும் உறவினர்க்கும்
இயல்பில் மிக இனியனாதலால் யாவரும்
இவன்பால் அன்புசெய்து நின்றனர். அவன்
மாத்திரம் அழிமதியுடையனாய் அவலஞ்செய்து
வந்தான். அவனது இழுக்கு நிலையை
நோக்கித் தன் மைத்துனர் முதலியோர் வந்து
உடன்பிறந்தே கொல்லும் நோய்போல்நின்று
அவன் மடம் புரிந்து வருகின்றான்; உரியன
சில கொடுத்தேனும் அவனை ஒதுக்கி
விடவேண்டும் என்று உறுதிபெற
உரைத்தும் இவன் சிறிதும் கேளாமல் என்
தம்பி நல்லவன்; கொஞ்சம்
முன்கோபமுண்டு ஆயினும் காலடைவில்
திருந்திவிடுவான் நீவிர் வருந்தவேண்டாம்
என்று கெழுதகைமையோடு அவரை இவன்
தேற்றி விடுத்தான். இங்ஙனம் கேள்

இழுக்கம் கேளாக் கெழுதகைமையாளனும் இவன் கேண்மையுற்றிருந்தும் அவன் பான்மையறியாமல் கீழ்மையேகன்றி மூடர் சிலருடன் கூடி கேடொன்று சூழ்ந்து நாட்டைவிட்டு நீக்கி இவனைக்காட்டில் உய்த்தான். அரசிழந்து இவன் வனத்தில் புகுந்தும் மனத்தில் யாதொரு கவலையும் இன்றி

ஆக்கமும் வறுமைதானும் அல்லலும் மகிழ்வுமெல்லாம்
நீக்கமில் உயிர்கட்கென்றும் நிலையெனக் கொள்ளற் பாற்றே
மேக்குயர் கடவுட் டிங்கள் வெண்ணிலாக் கதிரின் கற்றை
போக்கொடு வரவுநாளும் முறைமுறை பொருந்திற் றன்றே.

என்று உண்மை தெளிந்து உறுதிசெய்திருந்தான். இங்ஙனம்

இருப்பவும் மேலும் அவன் மிக்க
இன்னலிழைக்க எண்ணினான்.
இவன் மறுபடியும் நகர்க்கு வந்துவிட்டால்
தான் அரசிழக்க
நேருமே என்று நினைத்து இவனைக்
கொல்லவே துணிந்தான்.

2226 திருக்குறட் குமரேச
வெண்பா.

இவன் தலையைக் கொய்துவருவோர்க்குக்
கோடி செம்பொன் பெய்துவிடுவதாக
உலகறிய அவன் பறைபறைவித்தான்.
இதனை அறிந்த ஒருவன் இவனிடம் வந்து
பரிந்து கூறினான். இப்பழி மொழியைக்
கேட்டவுடனே இவன் யாதும் வருந்தாது
இன்று
தான் யான் பிறந்த பயனைப்பெற்றேன்
என்று பெரு மகிழ்ச்சி

யுற்றான். இவன் அன்று கருதி நின்றவை
களின் இனிது காணலாம்.

அடியில் வருங்கவி

அம்மொழி அறிந்தபோதின் அரசிழந்
தன்னுள் தன்னின்

மும்மடங் கூக்குப் பொங்கி முடுகுட எக்
கழுத்தணுகி

தெம்முனை அடுபோர் சாய்க்கும்
சிங்கவே றனையசெம்மல்

தம்முணர்க் கவரின் நெஞ்சம் சலிப்பிலா
துறைதலுற்றான்,

ஆயுவோ யுற்ற காலை அடுப்பவ
ரருவருக்கச்

சீயொடு புழுவும் மண்ணும் சேருமஇச் சென்னிதன்னை
மீயுயர் செம்பொன் கோடி விலையென விளங்கச்செய்தான்

தாயினும் இனியன் எம்பி தாமெனக்
கருதலுற்றான்.

இவ்வாறு கருதிநின்ற இவன்பால் சாத்தனார் என்னும் புலவர் பெருமானார் வந்து உண்மை தெரிந்து வருந்தி அவ் இழுக்கினை வசஞ்செய்து பின்பு இருவரையும்

ஒருமைப்படுத்தி உவகையுற வைத்தார். தன்
தம்பி தன்னைக் கொல்லத்துணிந்த நாளே
தனக்கு நல்ல நாள் என்று எண்ணி அவன்
பிழையினையுட்கொள்ளா மல் பழைமை
பாராட்டி நின்ற இவனது
கெழுதகைமையைப் புலவர் யாவரும்
புகழ்ந்துபோற்றி நின்றார். கேள் இழுக்கம்
கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு, நட்டார்
இழுக்கம் செயின் அந்த
நாள் நல்ல நாளாம் என்னும் உண்மையை
உறுதிசெய்திருந்தான்.
உலகம்காண இவன்

தமரென்று தாங்கொள்ளப் பட்டவர்
தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயின் அவரைத்
தமரினும் நன்கு மதித்துத் தமரன்மை
.
தம்முள் அடக்கிக் கொளல்.
(நாலடியார்.)

நட்டோர் பிழையாற்றின் நட்பாளர்க்
சுட்டால் மிகாதோ சுடர்.

கின்பாம்போன்

நண்பர் பிழைசெய்த நாளே
என்பது இதனால் கூறப்பட்டது.

நட்பாளர்க்கு நல்ல நாளாம்

---

81-ம் அதிகாரம் பழைமை.
**2227**

809 ஓர்ந்துபழங் கேண்மை உவந்துவிடா வேகனையேன்
கூர்ந்துகொண்டார் மற்றோர் குமரேசா—சேர்ந்து
கெடாஅ வழிவந்த கேண்மையார்

கேண்மை

விடாஅர் விழையு முலகு.

(க)

இ—ள்.

குமரேசா ! பழைமைகருதிக் கேண்மைபாராட்டி நின்றகலுழவேகளை என் அனைவரும் விழைந் திருந் தார் எனின், கெடா வழிவந்த கேண்மையார் கேண்மைவிடார் உலகு விழையும் என்க.

இது, பழைமை பாராட்டுவாரை உலகம் பாராட்டும் என்கின்றது. கூர்ந்துகொண்டார் = அன்புகூர்ந்து விரும்பிக்கொண்டார்.

கெடாது என்னும் எதிர்மறை வினையெச்சம் ஈறு கெட்டுக் கெடாஅ என அளபெடுத்து நின்றது. அளபெடைகள் ஈரிடத் தும் செய்யுளிசை நிறைக்கவந்தன. கெடாது = உரிமை அறாது; தாம் கொண்ட அன்பு நிலை நீங்காமல் என்றவாறு. இனி இதனைப் பெயரெச்சமாக்கொண்டு வழிக்கு

அடையாக்கின் என்றும் நிலை திரியாத குலமுறையே வந்த என்று கொள்க. கெடாஅர் எனவும் பாடம். அங்ஙனம் கொண்டால் யாண்டும் அன்புநிலை கெடாராய் நல்ல குலத்தின் வழியேவந்த கேண்மையாரது நட்பினை விடாரை உலகு விழையும் என்று கொள்க. இனி, உலகு என்பதை ஆகு பெயராக்கொண்டு வழிவந்த கேண்மையாரது கேண்மையை உலகர் விடாராய் விழைவர் எனவும் இது கருத நின்றது.

உரிமை கெடுதற்கும், உவர்த்து விடுதற்கும் காரணங்களைத் தம் நண்பர் செய்யினும் தாம் அங்ஙனம் கெட்டுவிடலாகாதென் பதைக் கெடா, விடார் என்பவற்றால் விளக்கியருளினார்.

மேல், தம் நண்பர் பிழை செய்யின் நல்ல நட்பாளர் அதனைப் பொறுத்து உவந்திருப்பரென்றார்; இதில், அங்ஙனம்

இருப்பவரை எல்லாரும் மிக விரும்பியிருப்பர் என்கின்றார்.

நிலை கெடாமல் நெறிமுறையேவந்த நட்புடையாரது நட்பினை என்றும் விடாது நிற்பாரை உலகம் விரும்பிநிற்கும் என்பதாம்.

279

2228 திருக்குறட் குமரேச வெண்பா.

வழிமுறையே தம்மோடு பழகிவந்த நட்பினர் விதிவசத்தால் வறுமை முதலிய சிறுமைகளை மருவினும், அல்லது பணிவு அச்சங்களின்றித் தம்பால் பிழைகள் பல செய்யினும் அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல் பழைமைகருதி அவரைப் போற்றி வருவாரை எல்லாரும் விழைந்து போற்றுவர் என்பார் “ வழிவந்த கேண்மையார் கேண்மை விடாரை உலகு

விழையும்" என்றார் அங்ஙனம் விழைதற்குக் காரணம் தம்மையும் அவ்வாறு விடாது பேணுவர் என்னும் மெய்ம்மை கருதி என்க.

தம் நட்பினர் எவ்வளவு பிழை செய்யினும் அவரை எள்ளி விடலாகாதென்று அடிகள் அருளியதைக் கேட்டு அங்ஙனம் விடாதார்க்கு வரும் பயன் யாது? என்று ஒருவன் வினவ அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்துகொள்க.

தான் கைவிடும்படி தன் நண்பன் கடும் பிழைசெய்யினும் அவனைக் கைத்துவிடாமல் ஒருவன் காத்து வருவனாயின் அவனை உலகம் என்றும் விடாமல் விழைந்து போற்றிவரும் என நட்பிற் பிழை பொறுத்தலால் வரும் பயனை அறிவுறுத்திப் பழைமையைப் பேணிவருமாறு உறுதிபெற உணர்த்திநிற்கும் இதன் அழகினை நோக்குக.

நண்பொன்றித் தம்மாலே
நாட்டப்பட் டார்களைக்
கண்கண்ட குற்றம் உளவெனினும்
காய்கிலார்
பண்கொண்ட தீஞ்சொற்
பணைத்தோளாய் ! யாருளரோ
தம் கன்று சாக்கறப்பார், என்றது
பழமொழி.

தம் பசுவின்கன்று தாம் கட்டிய
கயிற்றை யறுத்துச் சென்று பால்
உண்டதாயினும் பின்பு தாம் கறக்குங்கால்
அதற்குப் பால் விடாமல் அது வருந்துமாறு
பாலை முற்றக் கறப்பார் யாரும் இல்லை; மீண்டும்
அருந்துமாறே அதனை அணைத்து நிற்பர்;
அதுபோல் வரம்புமீறித் தம்மைக் கேளாமல் தம்
நண்பர் பிழை செய்துவிடின் அவரை
வெறுத்துவிடாமல் பொறுத்துப்
பேணவேண்டும் என இஃது உணர்த்திநிற்கும்

அருமையை யுன்றியுணர்க.

பழமை பாராட்டித் தம் நண்பரை என்றும் உவந்து பேணு வோரை எவரும் விழைந்து சூழுவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கலுழவேகன்பால் உணரப்படும்.

## 81-ம் அதிகாரம் பழமை.

## 2229

### கதை.

கலுழவேகன் என்பவன் ஓர் விஞ்சையர் வேந்தன். வெள்ளி வேதண்டத்தை அணுகியிருந்த காந்தார நாட்டிலே விச்சாலோகம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். அழகிலும் அறிவிலும் அருளிலும் சிறந்தவன். இசைநூலில் இவன் இசைமிகப் பெற்றவன். பெருந் திருவும் அருந்திறலும் உடையனாயிருந்தும் உளத்தில் ஒரு களிப்புமின்றி யாவர்மாட்டும் உள்ளன்போடு நெறிமுறையே

திருந்திய பண்பினனாய் இவன் அமைந்திருந்தான். தாரணி என்னும் தனது அழகிய மனைவியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து ஆருயிர்க்கெல்லாம் இனியனாய் இவன் அருள்செய்து விளங்கினான். இங்ஙனம் தண்ணளியுடையனாயினும் பகைவரும் தீயரும் இவனைக்கண்டால் கருடனைக் கண்ட பாம்புபோல் கலங்கி யடங்குவர்.

மாடியந் தானை மன்னர் மாமணி நாகமாகக்
கேடில் சீர்க் கலுழனாய கலுழ வேகற்குத் தேவி
கோடலர் கோதைத் தொல்சீர்த் தாரணி சுரும்புண்கண்ணி
ஆடவர் அறிவுபோழும் அணிமுலை அணங்கின் அன்னாள்,

என இவனது வீரநிலையும், பெயரியல்பும்,

மனே நலமும் விளங்கத் திருத்தக்கதேவர் விளக்கியுள்ளார். இன்னணம் விளங்கியிருந்த இம் மன்னனது முன்னோர்க்கும், இராசமாபுரத்தில் இருந்த சீதத்தன் என்னும் வணிகனது முன்னோர்க்கும் வழிமுறையே நட்பமைந்திருந்தது. இதனை அத்தத்தன் அறிந்திருந்தும் வழக்கப் படியே அடிக்கடிவந்து காணுமல் நெடுங்காலம் இடையே கடந்திட நின்ருன். அங்ஙனம் நின்ருலும் அவனைக் காணவேண்டுமென்று இவன் காதல்கொண்டிருந்தான்.

ஒருமுறை அவன் கலமேறிக் கடல்கடந்து மறுபுலமடைந்து வாணிகமியற்றி மீண்டு வருங்கால் அவ்வாவினை யறிந்து தரன் என்னும் ஒருவனை ஏவி விஞ்சைவலியால் அவனை வசப்படுத்தி விரைய்மாகக்கொண்டுவரும் படி செய்தான். அவ்வாறே அவன்

கொண்டுவர்துவிடுத்தான். அவனைக் கண்டவுடனே இவன் பெருமகிழ்ச்சிகொண்டு இன்னுரையாடி ஓர் சிறந்த ஆதனத்தில் இருக்கச்செய்து தந்தைதாயர் 2230 திருக்குறட் குமரேச வெண்பா.

முதலானவர்களின் நலம் விசாரித்து மிக உபசரித்துத் தனக்கும் அவனுக்கும் வழிமுறையே அமைந்துள்ள நட்பினை விளக்கி நயந்துபேணினன். அன்று இவன் உரிமையோடு பழைமை கருதி உருகி உரையாடிய உண்மையை அடியில்வரும் சிந்தாமணிக் கவிகள் நன்குணர்த்துகின்றன. உற்றுநிற்கும் உவமைகளையும், உரிமை நிலைகளையும் ஊன்றியுணர்க.

முதிர்பெயல் மூரிவானம் முழங்கிவாய் விட்டதொப்ப

அதிர்குரல் முரசம்நாண அமிர்துபெய்

மாரிஎய்ப்பக்

கதிர்விரி பூணிறற்குத் தந்தைதாய் தாரம் காதல்

மதுரமா மக்கள் சுற்றம் வினவிமற் றிதுவும் சொன்ஞன். (க)

இன்றைய தன்றுகேண்மை எமர்நுமர் எழுவர்காறும்

நின்றது கிழமை நீங்கா வச்சிரயாப்பின் ஊழால்

அன்றியும் அறனும் ஒன்றே; அரசன்யான், வணிகன்நீயே

என்று இரண்டில்லை கண்டாய்! இது நினது இல்லம் என்ருன். (உ)

இதிலிருந்து இவனது பழைமை பாராட்டும் பண்பும், கிழ மையும் இனிதுணரலாகும். அன்பு ததும்ப இவன் உரைத்த அருமைமொழிகளைக்கேட்டு அவன் அகமிக மகிழ்ந்தான். நீண்ட காலமாகத் தான் நெருங்காது மறந்திருந்தும் அப்பிழை நோக்கி வெறுத்துவிடாமல் தன்னைவலிய

அழைத்துவைத்து வழிவந்த உரிமையை எடுத்துரைத்து மிகப்பெருமைப் படுத்திப் பழைமை பேணி நின்ற அவனது பே கண்மையின் பெற்றியை அவன் நினைந்து நினைந்து நெஞ்சுருகினன். இக்கேண்மை யுண்மையைக் குறித்துத் தன் பாட்டன், தன்னுடைய தந்தைக்குச் சொல்லி யிருந்ததை இவன் கேட்டிருந்தபடியே அவன் கேட்கமொழிந் தான்.

மந்திரமன்ன சொல்நீர் மாரியால் வற்றிநின்ற சந்தனந் தளிர்த்ததேபோல் சீதத்தன் தளிர்த்து நோக்கி

எந்தைக்குத் தந்தைசொன்னன் இன்னணம் என்றுகேட்ப

முந்தைதான் கேட்டவாறே முழுதெடுத்தியம்பு கின்றான். (௪)

வெள்ளிவேதண்டத் தங்கண் விவில்தென் சேடிப்பாலில்

கன்னவிழ் கைதை வேலிக் காசில் காந்தார நாட்டுப்

புன்னணி இடங்கின் விச்சா லோகமாககரிற்
போகா

வெள்ளிவேற் கலுழவேகன் வேதண்டவேந்தர்
வேந்தன். (2) 81-ம் அதிகாரம் பழைமை.

2231

சங்குடைத் தனையவெண்டா மரைமலர்த்
தடங்கள் போலும்

எங்குடித் தெய்வங்கண்டீர் எமரங்காள்!
அறிமின் என்னக்

கொங்குடை முல்லைப் பைம்போது இருவடங்
கிடந்தமார்ப!

இங்கடி பிழைப்பதன்றால் எங்குலம் என்று
சொன்றான். (உ)

உறவுண்மையை உள்ளபடி இங்ஙனம்
உரைத்துப் பணிந்த அவனைக் கையைப்பற்றி
அழைத்துச் சென்று அந்தப்புரம் முதலிய
அரிய இடங்கள் யாவற்றையும் காட்டி
அமிர்தனைய உண்டியை முகமனோடு ஊட்டி,

நிதிகளும் மணிகளும் நிறையக் கொடுத்துத்
தன் நட்பினை எழுமையும் மறவா வண்ணம்
இவன் கிழமை செய்து விடுத்தான்.
வழிமுறையே வந்திருந்தும் இடையே
தன்னை மறந்துவிட்ட நண்பனைத் தான்
வெறுத்துத் துறந்துவிடாமல் உவந்து
போற்றிப் பழைமையை இவன் பாதுகாத்து
நின்றதை யறிந்து உலகமுழுவதும் புகழ்ந்து
போற்றியது. அறிந்து தெளிந்தவரனைவரும்
இவனோடு நட்புச்செய்துகொள்ள மிக
விழைந்திருந்தனர். கொடா வழிவந்த கேண்
மையாரது கேண்மையை விடாதாரை உலகம்
விடாது விழையும் என்னும் உண்மையை
அன்று இவன் விளக்கி நின்றான்.

விலங்கேயும் தம்மோ டுடனுறைதல்
மேவும்

கலந்தாரைக் கைவிடுதல்
ஒல்லா—இலங்கருவி

தாஅய் யிழியு மலைநாட இன்னாதே

பே எ வொ டாலும் பிரிவு.
(பழமொழி.)

நட்பு நிலை திரியா நல்லோரை
எல்லோரும்

பெட்புற்று நிற்பர் பெரிது.

நட்பிற் பிழைபொறுத்தாரை உலகம்
நயந்து போற்றும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

810 மன்றநோய் செய்தும் மணிமே
கலைபழமை

குன்றாத தென்னே குமரேசா—என்
றும்

விழையார் விழையப் படுப
பழையார்கட்

பண்பிற் றலைப்பிரியா தார்.

(ல) 2232 திருக்குறட் குமரேச
வெண்பா.

இ—ள்.

குமரேசா! பழைமை கருதிப் பண்புற்றிருக்க மணிமேகலையை என் பகைவரும் புகழ்ந்து போற்றினர் எனின், பழையார்கண் பண்பின் தலைப் பிரியாதார், விழையார் விழையப் படுப என்க.

இது, பழைமை கருதுவாரைப் பகைவரும் புகழ்வர் என்கின்றது.

மன்றநோய் என்றது பொறுத்தற்கரிய பெருந் துன்பங்களை ' அரசி செய்தமை கருதி. செய்தும் குன்றாதது என்னே என்று வியந்து வினவியது தனக்குக் கொடுந் துயரங்களைச் செய்திருந்தும பழைமைகருதி அரசிமேல் அன்பு செய்து தன் பண்பு நீங்காமல் இவள் நின்ற பான்மையை நினைந்து என்க. விழையார் என்றது பகைவரை. விரும்பாதவர் என்னும் பொருளுள்ள இப் பொதுப் பெயர் இங்குச்

சிறப்பாகப் பகைவரைக் குறித்து நின்றது. இங்ஙனம் குறித்து வருவது காரணக் குறியாம். படுப என்ற வாய்பாட்டை நோக்கி விழையாரானும் என ஆன் உருபும், உம்மையும் இதில் வருவித்துக்கொள்க. விழையப் படுப = விரும்பப் படுவர். விழைதல் = விரும்புதல். பழையார் =

பழைய நண்பினர். நெடுங்காலம் நட்பாய்ப் பழகி வந்தவர் என்பதாம்.

பண்பு = குணம்; இங்கு நட்பிற் பிழை பொறுத்து உரிமையோடு நயந்து நிற்குந் தன்மை. தலைப் பிரியாதார் = நீங்காதார் நீக்கத்தை உணர்த்தும் பிரிவு என்பது இங்ஙனம் தழுவி வந்தது. "செயிரிற் றலைப் பிரிந்த காட்சியார்" என்பதுங் காண்க.

தலைப்பிரியாதார் விழையாரானும் விழையப்படுவர் என்றத

னால் தலைப்பிரிவார் விழைவாரானும் வெறுக்கப்படுவர் என்பது

பெறப்பட்டது.

மேல், நட்பிற் பிழை பொறுக்கும் நல்லோரைப் பொதுவாக எல்லோரும் உவந்து பேணுவர் என்றார்; இதில், பகைவரும் அவரை விரும்பி நிற்பர் என்கின்றார்.

81-ம் அதிகாரம் பழைமை.

2233

தம்மோடு பழகிவந்த பழைய நண்பர்கள் பிழை கள் செய்யி னும் அவர் மாட்டுத் தம் நிலைமை திரியாமல் நிற்பார் பகைவரா னும் விரும்பப்படுவர் என்பதாம்.

நட்பாய்ப் பழகிக்கொண்ட பின்பு ந ண்பன் என்ன பிழை செய்யினும் பொறுத்துக்கொ ள்ள வேண்டும்; இதுவே பழமையை பாராட்டும் தன்மையாம்; இப் பண்புடையார்க்குப் பகைவரும் நண்பராவரென்றது எல்லாரையும்

தமாக்கவல்ல இவ் வுடைமையையடைந்து
அனைவரும் உள்ளன்புடையாராய் உய்யவேண்டு
மென்று உணர்த்தியபடி யென்க.

ஒருவன் எவ்வளவு நல்ல குணங்களை
யுடையனாயினும் அவன் பகைவர், அவனை
விரும்பார்; அவ்வியல்பினரான பகைவரும்
பழைமை கருதிப் பிழைபொறுத்துப் பண்பு
நீங்காமல் தன் நண்பனை அவன் பேணி
நிற்பனாயின் தம் பகைமை நீங்கி உவகை
யோடு அவனை உறவுகொள்ள விழைவர் என்ற
திதனால் பழைமையின் அருமையும், அதனைத்
தழுவி நிற்பார்க்குண்டாம் பெருமையும்
இனிதுணரலாகும்.

கெடுதியில் உதவ வல்லவர் நட்பாற்
கிளைத்திடா தொன்றனைச் செயினும், மெ
கடும்வகை செய்தல் வேண்டினதாமே
கெழுவுதல் பணி வச்சமின்மை, படுதரும்
ஊழிற் புரியினும் அவற்றைப்
பழைமையென்றறிந்துள முவப்பின்,

நெடு நில முழுதுங் கேண்மையாம் மைந்தா!
நோலார் தாமும் கேளாவார். என்றதும்
காண்க.

எல்லா நலங்களையும் நல்கவல்ல
நட்பானது, பிழை பொறுத்தலால்
நிலைபெறும்; அப் பொறுமை பழைமையால்
அமையும்; அத் தகைய இப் பழைமையைத்
தழுவி ஒருவன் ஒழுகி வருவானாயின் பகை
முதலிய தடைகள் யாதொன்றுமின்றி அவன்
எல்லார்க்கும் இனியனாய், எண்ணிய யாவும்
எய்தி இருமை பினும் இன்பமெய்துவன்
என்க.

பழகிய நண்பன்பால் என்றும் பண்பு
திரியலாகாது என்ற இதனால் ஒருவனை
நண்பனாகக் கொள்ளுமுன்னரே இவன் என்
2234 திருக்குறட் குமரேச
வெண்பா.

றும் நிலைதிரியாத நிற்பனா ? என்று

பலவகையானும் நன்றாக நாடி ஆராய்ந்து கொள்ளவேண்டும்; கொண்டபின்பு அவனது பிழைகளை ஒன்றும் குறிக்கொள்ளலாகாது என நட்பாட்சியி லுள்ள பொறுப்பையும் சிறப்பையும் இஃது உணர்த்தி நிற்றல் காண்க. நாடாது நட்டலிற் கேடு இல்லை என முதலிலேயே அடிகள் எச்சரித்திருக்கும் அருமையை ஈண்டு எண்ணி நோக்குக. " பெரியோர் நாடி நட்பினல்லது, நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே " என்று நற்றிணையில் கபிலர் சுட்டியுள்ளதுங் காண்க.

கொழித்துக் கொளப்பட்ட நண்பி
னவரைப்
பழித்துப் பலர்நடுவட் சொல்லாடார்
என்கொல்
விழித்தல நம் நெய்தற் றுறைவ
உரையார்
இழித்தக்க காணிற் கனா. என்றார்

முன்றுறையரையனார்.

பிழைபல புரியினும் பழைமையை நினைந்து பொறுத்து நண் பினைப்போற் றிக்கொள்ள வேண்டுமேயன்றித் தூற்றிவிடலாகாது என ஒற்றுமை நயந்தோன்ற இடக்கரடக்கில் வைத்து அடக்க மாக இஃது உணர்த்தி நிற்கும் நயத்தை யூன்றி யுணர்க.

பழைமை கருதிப் பிழை பொறுப்பவர் பகைவரானும் புகழ்ந்து போற்றப் பெறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மணிமேகலைபால் உணரப்படும்.

## கதை.

மதி நலத்தில் சிறந்து துறவு நிலையை மேற்கொண்டு புனிதவதி யாய் நின்ற மணிமேகலை ஒருமுறை காவிரிப்பூம் பட்டினத்தை யணுகியிருந்த இனிய மலர் வனத்தில் புகுந்து தனியே உலாவித் தவங்கருதி நின்றாள். இவள்பால் முன்பு

இயல்பாகவே காதல் கொண்டிருந்த உதயகுமரன் என்னும் அரசகுமரன் அறிந்து அங்கு வந்தான். அவன் வரவினை நோக்கித் தன் விஞ்சை வலி யால் ஓர் விஞ்சை மகள்போல் இவள் வேடங்கொண்டு விலகி நின்றாள். அவன் மீண்டுபோய் மறுபடியும் யாரும் அறியாவண் ணம் இரவு தனியே வருங்கால் காஞ்சனன் என்னும் வித்தியா தரன் ஒருவன் தன் மனைவியைக் கருதிவந்தான் என மாறுபடக்





கருதி அவனை வேறுபடவெட்டி வீழ்த்தினான். இதனை அரசன்முத லனைவரும் அறிந்து வருந்தினர். அரசன் தேவியாகிய சீர்த்தி என்பவள் சீற்றங்கொண்டு இவளைச் சிறை செய்வித்தாள். தன் மகனுடைய விருப்பத்திற்கு இணங்காமல் இவள்

ஒழுக்கமுற் றிருந்தமையே அவனது
ஒழிவுக்குக் காரணம் என்று நினைந்து
இவனுக்கு அவள் அளவில் துன்பங்களைச்
செய்தாள். பித்தேறிப் பிதற்றித் திரியும்படி
கருதி மயக்கு மருந்தை யூட்டினாள். அதனை
உண்டும் அருள்வலியால் யாதொரு
மாறுமின்றி இவள் அமர்ந் திருந்தாள்.
பின்னாட் கழிந்தபின் திண்ணிய மதமீறிய
காளைப் பருவத்தனை ஒரு காமுகனை
யழைத்து எப்படியாவது வற்புறுத்தி
இவளைக் கற்பழித்து வரவேண்டுமென்று
கைப்பொருள் சில கொடுத்துக் கட்டளையிட்டு
விடுத்தாள். குறித்த தீங்கைச் செய்ய அக்
கொடியவன் சென்று தனியே இரவிற்
புகுந்து கதவினைத் தாழிட்டான். அத்
தீயவன் நிலையை இத்தூயவள் தெரிந்து
உடனே ஓர் மந்திரவலியால் ஆணுரு வெய்தி
எதிரொடு திகழ்ந்தாள். கண்ட அவன் யாதோ

வஞ்சம் என்று அஞ்சி அகன்றான். பின்னரும் உணர்ந்து இரங்காமல் பல நாளாக இவளைப் பட்டினி கிடக்கச் செய்தாள். இங்ஙனம் பல்வகைத் துயரங்களைச்செய் தும் தெய்வ அருளால் இவள்யாதும் தீதின்றி மேதகவோடு விளங்கினாள். கொடிய பிழைகள் செய்திருந்தும் அவ் அரசி யைச் சிறிதும் இகழாமல் பழமை கருதிப் பொறுத்து இவள் பண்பு குன்றாதிருந்தாள். இவளது அன்பின் பெருக்கையும் நண்பின் தகவையும் கண்டு தன் பகைமையை அறவே ஒழித்து அவள் கடுங்கிப் பணிந்தாள். தனக்கும் அவளுக்கும் தொடர்பாக அமைந்துள்ள உரிமையை உணர்ந்தி மாமிமுறையில்வைத்து அவளை இவளும் வணங்கிப் போற்றினாள். அன்பு நீங்கும்படி அவள் துன்பு பல செய்தும் இவள் பண்பு நீங்காமல் நின்று

பழைமை பாராட்டி அவள்மேல் இவள் கிழமைசெய்து நின்றதை யறிந்து முன்பு விழையாதிருந்தவரும் விழைந்து புகழ்ந்து இவளை வியந்து போற்றினர். விழையாராலும் விழையப்படுவர் பழை யார்கண் பண்பிற் றலைப்பிரியாதார் என்னும் உண்மையை உலகம் இவள்பால் அன்று உணர்ந்து நின்றது. நட்பிற் பிழைபொறுத்து





வெண்பா.

இவள் பழைமை பேணிநின்ற பான்மையைக் குறித்துக் கூல வாணிகன் சாத்தனார் என்னும் புலவர் பெருமானார் தம் நூலாகிய மணிமேகலையில் அணிபெற அருளியுள்ளார். அடியில் வருவதில் சிறிது காணலாம்.

அறிவு திரித்துஇவ் அகனகர் எல்லாம்
எறிதரு கோலம்யான் செய்குவல் என்றே
மயற்பகை யூட்ட மறுபிறப் புணர்ந்தாள்
அயர்ப்பது செய்யா அறிவின ளாகக்,
கல்லா இளைஞன் ஒருவனைக் கூஉய்
வல்லாங்குச் செய்து மணிமே கலைதன்
இணைவளர் இளமுலை ஏந்தெழி லாகத்துப்
புணர்குறி செய்து பொருந்தினள் என்னும்
பான்மைக் கட்டுரை பலர்க்கு உரைஎன்றே
காணம் பலவும் கைந்நிறை கொடுப்ப,
ஆங்கவன் சென்றுஅவ் ஆயிழை யிருந்த
பாங்கில் ஒருசிறைப் பாடுசென் றணைதலும்
தேவி வஞ்சம் இதுவெனத் தெளிந்து
நாவியல் மந்திரம் நடுங்கா தோதி
ஆண்மைக் கோலத் தாயிழை இருப்பக்,
காணம் பெற்றோன் கடுந்துய ரெய்தி
அரச ருரிமையில் ஆடவர் அணுகார்
நிரயக் கொடுமகன் நினைப் பறியேனென்

றங்கர் கைவிட் டாங்கவன் போயபின்
மகனைநோய் செய்தானை வைப்பது என்றென்
றுய்யா நோயின் ஊன்றொழிந் தனளெனப்
பொய்நோய் காட்டிப் புழுக்கறை அடைப்ப
ஊன்றொழி மந்திர முடைமையின் அந்த
வாணுதல் மேனி வருந்தா திருப்ப,
ஐஎன விம்மி ஆயிழை நடுங்கிச்
செய்தவத் தாட்டியைச் சிறுமை செய்தேன்
என்மகற் குற்ற இடுக்கண் பொறுத்து
பொன்னே ரனையாய் பொறுக்கென்
றவள்தொழ 81-ம் அதிகாரம் பழமை.
2237

ஆங்கவள் தொழுதலும் ஆயிழை
பொறாஅள்
தான்தொழு தேத்தித் தகுதி செய்திலை
காதலற் பயந்தோய் அன்றியும் காவலன்
மாபெருந் தேவி! என் றெதிர்

வணங்கினள்.

இராசமாதேவி செய்த அல்லலும், அவ் எல்லாவற்றையும் பொறுத்துப் பழைமையை நினைந்து தன் பண்பு நீங்காமலிருந்து மணிமேகலை அவள்பால் அன்புசெய்து நின்ற தன்மையும், பிழை புரிந்து நின்ற அவளும் பின்பு இவளை வியந்து போற்றிய உண்மையும் இதன்கண் இனிது விளங்குதல் காண்க.

பெரியார் பெருநட்புக் கோடல்தாம் செய்த
அரிய பொறுப்பஎன் றன்றோ—அரியரோ
ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட
நல்லசெய் வார்க்குத் தமர்.
(நாலடியார்).

ஒட்டாரும் ஒட்ட வுறுவர் உறுபிழையை

நட்டார்கண் நாடார்தம் நட்பு.

பழைமை பாராட்டுவாரைப் பகைவரும் பாராட்டுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின்
தொகைப்பொருள்.

உரிமை குன்றாத பொறுமையோடு நின்று உறவினையாள் வதே பழைமையாகும். நட்பிற்கு அதுவே நல்லுறுப்பாகும். நண்பர் எது செய்யினும் அதனை நயந்துகொள்ளவேண்டும். அவர் உரிமை கருதிச் செய்ததை உவந்துகொள்வோரே உயர்ந்தவராவர். அவர் செய்கை வருந்தத்தக்கதாயினும் விரும்பிக் கொள்ளவேண்டும். தமக்கு அழிவுவந்த விடத்தும் தம் நண்பரை அகலவிடலாகாது. துன்பஞ் செய்தாராயினும் அவர்பால் அன்பு குன்றலாகாது. தம் நண்பர் அல்லல்செய்த

ளே தமக்கு நல்ல நாளாகும். அவரைப் பேணிநிற்பவரை உலகம் என்றும் போற்றி நிற்கும். கிழமையோடு நண்பரைத் தழுவிநிற்கும் பழைமையாளரைப் பலரும் விழைவர்.

அ-வது பழைமை முற்றிற்று.

---



வெண்பா.

# 82-ம் அதிகாரம்

## தீநட்பு.

அஃதாவது தீயாரது நட்பின் தீமைத் திறன். நற்றுணைக்ச ராய்த் தம்மோடு பழகிவந்த நட்பினர் ஒரோவழிப் பிழைகள் செய்வாராயின் பழைமை கருதிப் பொறுத்து

அவரைப் போற்ற் வரவேண்டும் என மேலே அதிகாரத்தில் உரைத்தார்; இசிலயாதும்
பொறுக்கமுடியாதபடி கோதுமிக்க
தீதுடையாரை யாண்டும் நட்
பாகக் கொள்ளலாகாதென்று
உணர்த்துகின்றார்; ஆதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

811 வென்றிச் சதவிந்தேன்
மெய்மையிலாச் சாலுவன்கேள்
குன்ற விடுத்தான் குமரேசா—நின்று
பருகுவார் போலினும் பண்பிலார்
கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது.
(க)

இ—ள்.
குமரேசா! சதவிந்து என்பவன் குணமில்லாத சாலுவ
னது நட்பினை என் வளரவிடாமல்

குன்றச்செய்தான் எனின், பருகுவார்
போலினும் பண்பு இலார் கேண்மை
பெருகலின் குன்
றல் இனிது என்க.
இது, தீயோர் நட்பின் தீமை
கூறுகின்றது.
வென்றி என்றது இங்குக்
காரியவெற்றியை. தான் கருதிய
யாவும் கருதியாங்கு முடித்து
உறுதிகொண்டிருந்தானாகலால் வென்றியால்
அவன் விசேடிக்க நின்றான். கேள் = உறவு,
நட்பு.
பருகுவார்
போலினும் = பருகுவாரைப்போல மிக்க
அன்
புடையாராயினும். அஃதாவது மிக்க
நீர்வேட்கை யுடையவன்
தண்ணீர் கண்டுழி விழைந்து

அள்ளிக்குடித்தல் போல் அன்பு
மிகுதியால் தன்னைப் பருகுவார்போன்று
அமைந்தவராயினும்.
பருகுதல் = குடித்தல். மிக்க
காதலுடைமையை விளக்க இது
காட்டியதென்க. "பருகு காதலிற் பாடி
ஆடினார்" எனச்
சிந்தாமணியிலும், "பருகுவனன் போலப்
படைப்பெரு வேந்தன்"
எனப் பெருங் கதையிலும்,
"பருகுவான்போல நோக்கும்" எனப்
பாகவதத்திலும், "பருகுவன்ன அருகா
நோக்கமோடு, உருகு

82-ம் அதிகாரம் நிகட்பு.
2239

பாவைபோல்" எனப் பொருநராற்றுப்
படையிலும், "பருகு வன்ன

காதலுள்ளமொடு " என அகநானூற்றிலும், " பருகுவன் அன்ன ஆர்வத்தனாகி " என நன்னூலிலும், " கண்ணேவாயாப் பருகுவான்போல நோக்கி " எனக் கூர்மபுராணத்திலும், " இரு கண்ணின் முகத்தழகு பருகநோக்கி " என இராமாயணத்திலும் இஃது உணர்த்தி நிற்கும் பொருளையுணர்க. போலினும் என்பதில் உம்மை சிறப்புணர்த்தி நின்றது.

பண்பு இலார் = நற்குணம் இல்லாதார்; தீக்குணமுடையார் என்றவாறு. அதிகாரத்திற்கியையத் தீயர் என வெளிப்படையாக வுரைக்காமல் பண்பிலார் என நளினமாக இவ்வணம் நயம் படவுரைத்தது அவ் இன்மையால் எய்தும் புன்மையை புணர்ந்து அதனை யுடையராய் மக்கள் உயர்ந்துகொள்ள விரும்பிஎன்க.

பெருகலின் = வளர்தலின். இன் உருபு எல்லைப்பொருளது. குன்றல் = தேய்தல், குறைதல். இனிது = நன்று.

அள்ளி விழுங்ுவார்போன்று அன்புடையாராயினும் நல்ல பண்பு இல்லாதார் நட்பு உண்டாய் வளர்தலினும் இல்லையாய் ஒழிதல் நல்லது என்பதாம்.

குன்றல் இனிது என்றதனால் பெருகல் இன்னாது என்பதா யிற்று. ஆகவே அக்கேண்மையின் தீமை கூருமலே தெளிய நின்றது. தீயவர் நட்புப் பெருகி ஞல் தொழுநோயின் பெருக்கம் போல் முடிவில் அல்லலும் அழிவும் விளக்கும ஆகலால் அதனைச் சிறிதும் வளரவிடாமல் அறவே ஒழிக்கவேண்டும் என்பார் பண்பு இலார் கேண்மை குன்றல் இனிது என்றுர்.

துரியோதனன் காவாக உறவு கூறித் தன் அரண்மனைக்கு வந்துபோகும்படி தருமனுதியரை அழைத்தபொழுது அத்தீயவ னேடு நண்புகொள்ளுதலினும் கொள் ளாதொழித்தலே நல்ல தென்று வீமன் கொதித்துக்கூறியுள்ளது ஈண்டுக் குறிக்கொள் ளத்தக்கது.

மூளையிலே உயிர் கொல்வதோர் கடுவிடம் முற்றி வன்காழேறி
விளையில் ஏதுசெய்யாது ! மற்றவருடன் விளையு நண்புஇனி வேண்டா
விளையில் ஏதமேபுரிந்து மேல் மலர்ந்திடும் வன் படைகொடுமோதி
விளையிலே கழக்கு இருப்புள தென்றனன் காற்றருள் கூற்றன்னன்.

2240 திருக்குறட் குமரேச வெண்பா.

கொடியவர்கத விடத்தை ஒப்பிட்டு அவர் கேண்மையின் தீமையைக் குறிப்பாக உணர்த்தி அதனை வளரவிடாமல் அறவே ஒழித்துவிட வேண்டுமென்று இதில் விளக்கியிருக்கும் அழகை நுனித்து நோக்குக.

தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே—தீயார்

குணங்கள் உரைப்பதுவும் தீதே;
அவரோடு
இணங்கி யிருப்பதுவும் தீது. என்றார்
ஔவையாரும்.
தீயவர்கட்டை வளரவிடாமல்
ஒழித்துவிடுதலே ஒருவனுக்கு நல்லதாம்
என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்
வுண்மை சதவிந்துபால் உணரப்படும்.

கதை.

சதவிந்து என்பவன் சாமை நாட்டிலே
போதனபுரம் என்
னும் நகரில் இருந்தவன். வேதியர்
மரபினன். அறிவு நூல்களையும் கருவி
நூல்களையும் கசடறக்கற்று அரசர்க்கு
உரியதோர் அரிய நீதி நூல் ஒன்றை இவன் அ
ருளிச் செய்தவன். மதிநலத்
தினும் மன நலம் சிறந்ததென்று இவன்
மதித்திருந்தவன். ஒரு
வன் மனநலம் ஒன்றுமாத்திரமுடையனாயின்

எல்லா நலங்களும்
அவன்பால் இனிது வந்தடையும்
என்னும் துணிவினையுடையவன்.
பிறர் மிகைவினை புரியினும் என்றும் தன்
தகவு நீங்காதவன்.
சொல்வன்மையிற் சிறந்தவன். தான்
உண்மையென்று கண்ட-
தை எவர்க்கும் உறுதிதோன்ற உணர்த்த
வல்லவன். இவனது
அறிவின் சிறந்தையும் தெறியையும்
உணர்ந்து அச்சுவகண்டன்
என்னும் அரசன் தனக்கு அமைச்சனாகவும்
புரோகிதனாகவும்
அமைத்து இவனை ஆதரித்து வந்தான்.
வருங்கால் ஒருமுறை
அவன் நிலைதிரிந்து காமச்சுவையிலாழ்ந்து
களித்திருத்தலைக்கண்டு
மிகவருந்தி அறவொழுக்கங்களை அவனுக்கு
இவன் அன்போடுவற்

புறத்தியுணர்த்தினன். அறிவுடையனாய அவனும் இவனது அற
வுரைகளைக் கேட்டு மிக மகிழ்ந்து நின்றான். இவன் அன்று
உணர்த்தியன என்றும் யாரும் உணர்ந்து பேணுதற்குரியன ஆத
லால் அவற்றுட் சிலவற்றை ஈண்டுத் தந்துகாட்டுதும்.

82-ம் அதிகாரம் திரட்டு.

2241

மன்ன! கேள், வளை மேய்திரை மண்டிலம்
தன்னை ஆள்பவர்க் கோதின தக்கவை
பன்னின் ஆறு பகைக்குலமாம் அவை
முன்னம் வெல்க என்றான் முகம் நோக்கினான். (க)

பெற்றதன்முத லாப்பின் பெறுதலும்
சுற்றிவக் தடையும்படி சூழ்ந்
தும்சென்று
உற்றவான்பொருள் காத்துயர்
ஈகையும்
கற்றவன் பிறர் காவல னாகுவான். (உ)

அருக்கன் தன் அறிவாக ,
அலர்ந்துநீர்த்
திருக்கவின்ற செல்வச் செழுந்
தாமரை
செருக்கெனப்படும திண்பனி
வீழுமேல்
முருக்கும்; மற்றதனைமுகத் தாரிணய். (௩)

அறிவைச் சூரியனாகவும், திருவைத்
தாமரையாகவும, செருக்கைப் பனியாகவும்
உருவகஞ்செய்து செருக்கொழிந்து தேர்ந்து

சூழ்ந்து, குற்றம் களைந்து வாழவேண்டும் என
இதில் இவன் உணர்த்
தியிருத்தல் காண்க. இவ்வாறே யார்க் தூய
இகழ்மைாந்து உயா கலமுடையனுய்
ஒழுகின்ற இவனேடு சாலுவன்
என்பவன்
கேண்மையாகச் சார்ந்தொழுகினு ன். ஒ
ழுகிவந்தாலும் செல்வச் செருக்கால் அவன்
சிந்தை திரிந்து தீய வழிகளில் திமிர்ந்து நின்
ருன். ஆயினும் இவனிட மாத்திரம்
அன்புடையவன்போல் மிக
அடங்கி நடந்துவந்தான். அவனது கள்ள
இயல்பினையறிந்து நல்ல அறிவுரைகளை
இடையிடையே இவன் இடித்துக் கூறினுன்.
கூறியும் அவன் குணப்படவில்லை.
குறித்தபடியே தீமையில் அவன்
குறிக்கொண்டொழுகினுன்.

பரிந்தறி லூட்டிலும் பண்பிலார் என்றந்
திருந்தார் திமிர்ந்தே திரிவார்—கருந்தாதைப்
பொன்னுக்கப் பன்னுளும் போற்றி முயன்றாலும்
என்னும் அதனியல்பே எண்.

என்றபடியே அவன் எண்ணிட நின்றான். காளடைவில் அவன் விலகிவிடுமாறு இவன் விழைந்திருந்தான். அவ்வாறே அவன் அகன்று போனான். பொல்லாதவனுயிருந்தும் செல்வமுடைமையாலன்றோ தீமிநிச் சாலுவனைத் தெளிந்த மதிமானை சதவிந்த



வும் சேர்த்துவைத்துள்ளான் என முன்பு தூற்றி நின்றவரெல்லாரும் அவன் போக்கினையறிந்த பின்பு ஒன்றும்புகலாதிருந்தார். தன்பால் அன்புசெய்து அவன் உறவாய் நின்றபொழுது உற்றிருந்த கவலையை அவ்வொழிந்த பின்பு இவன் உறுதிருந்தான். பண்புஇலார் கேண்மை

பெருகலினும் குன்றல் இனிது என்பதை அன்று இவன் உணர்ந்து மகிழ்ந்தான்.

நியமதிச் சாலுவன்முன் தெளிந்தமதிச் சதவிக்தைச் சேர்ந்திருந்தும்
ஆயமதியடையாமல் துகள்மிகுந்து பிரிந்தகன்று துயரேயுற்றான்
நேயமிகப்புரிந்தணைத்துக் காலம்பார்த்தூணவூட்டி வெறிசெய்தாலும்
நாயொரு தீ யூன்கண்டால் அதை காடியோடிமிக நவியுந்தானே.

இதில் மேற்குறித்த சரிதம் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

எட்டி வளர்தலினும் இற்றலினி தன்றேகீழ்
நட்டலினும் நள்ளாமை நன்று.

நல்ல குணமில்லாரை நண்பாகக் கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

812 உற்ற பயன்கொண் டொழிந்த சதகணிக்கோன்
குற்றமென்றேன் நீத்தான் குமரேசா—பற்ற
உறினட் டறினொருஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என். (௨)

இ—ள்.

குமரேசா! தனக்குப் பயன் உற்றபொழுது உறவாய் நின்று அஃது அற்றவிடத்து அகன்றுபோன சதகணி என் உலோகமாபாலன் பின் மேவாது விட்டான் எனின், உறின் நட்டு அறின் ஒருஉம் என்? என்க.
ஒப்பு இலார் கேண்மை பெறினும் இழப்பினும்

இது, தனக்கு ஊதியமொன்றையே
புக்கொள்ளலாகாதென்கின்றது.

உள்ளி நிற்பாரோடு கட்

உறின் = உற்றால்; தமக்குப் பயன் பொருந்தியிருந்தால்
றவாறு. கட்டு = கட்புச்செய்து.

என்

அறின் = பயன் அற்றால்; ஊதியம்
போனால்.

இல்லாது ஒழிக்கு

82-ம் அதிகாரம் தீநட்பு.

2243

ஒரூஉம் = ஒழிகின்ற. ஒருவும் என்பது
இங்ஙனம் அளபெடுத்து நின்றது. ஒருவுதல் =
ஒழிதல், நீங்குதல். ஒப்பு இலார் என்றது
குணம் செயல்களில் நல்லாரோடு இயைபு
இல்லார் என்றவாறு. இழிகுணங்களில்

தமக்கு நிகரிலார் எனினுமாம்.

மேல், நற்றுணையில்லாரோடு நட்புக் கொள் ளலாகாதென்றார்;

இதில், தமக்கு ஊதியமொன்றையே கருதி ரோடு சேரலாகாதென்கின்றார்.

நிற்றும் தீதுடையா

தமக்கு ஊதியம் இருந்தால் நட்புச்செய்து நின்று அஃது இல்லையாயின் விட்டு ஒழிந்துபோகின்ற இழிந்த மக்களது நட்பினைப் பெற்றாலும் இழந்தாலும் ஆவதொரு பயன் யாதும் இல்லை என்பதாம்.

தீக்குணமுடையாரைப் பண்பு இலார் என முதலில் பொதுவாகக் குறித்தார்; அவர் எப்படி இருப்பர்? அவரது செயல் வகைகள் எவ்வாறு இருக்கும்? என எண்ணி ஆராய நேருமாதலால் அங்ஙனம் நேருவார் தேறுமாறு உள்ளன்பின்மை, உறு பயன்பார்த்தல், உலைவிடத் தொழிதல், இன்னலியற்றல், எஞ்சாராமை முதலிய தீமைகளை அவர் எய்தியிருப்பர் என அவரியல்

புகளை இதுமுதல் முறையே உணர்த்துகின்றார். இத்தீய இயல் பினரை நட்பினராகக்கொள்ளின் அல்லலும் சிறுமையும் அழிவும் எய்துமாதலால் அவருறவு யாதும் எய்தலாகாதென்க.

உள்ளன்பு இல்லாமல் தமக்கு ஓர் ஊதியம் கருதி வருவாரை நண்பராகக் கொள்ளலாகாது என்பது குறிப்பு.

தன்னயங்கருதி நிற்போர் நட்பினை நன்னயமுடையார் கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உலோகமாபாலன்பால் உணரப்படும்.

## கதை.

உலோகமாபாலன் என்பவன் ஓர் குறுநில மன்னன். வாரணவாசி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். அறத்துறை பலவும் அறிந்து தெளிந்தவன். எவர்க்கும் இனிய நீர்மையன்; இன்னருளாளன். உள்ளிய உறுதிகளை இனிது சொல்லுதலில்

வல்ல வன். முடிமன்னர் பலரும் இவனது
அறிவுரைகளைக் கேட்டு



அகமகிழ்ந்து இவன்பால் அன்பு
செய்திருந்தனர். எவரும் புகழ்ந்து
போற்றச் சிறந்த திருவோடு இவன்
விளங்கியிருந்தான். அங்ஙனம் இருந்து
வருங்கால் சகடன் என்பவன் இவன்பால்
நண்பனைச் சார்ந்திருந்தான். அவன்
கணிதநூலில் நல்லபயிற்சி யுள்ளவன்.
புனிதமான இவனோடு எப்பொழுதும் நட்பாய்
இனிதமர்ந்திருந்தானாதலால் அவன்
வேண்டியனவெல்லாம் இவன்
விரும்பிக்கொடுத்தான். அவனும்
புன்புலவர்கள் போல் பல பாடல்களை இவன்
மீது புனைந்து பாடினான். இரவும் பகலும்
இணைபிரியாது நல்ல நண்பன்போல் அவன்

இங்ஙனம் நண் ணி வருங்கால் பழவினை
வலியால் யானைத்தீ என்னும் கொடுநோய்
வந்து இவனைப்பற்றி வருத்தியது. யானைத்தீ
என்பது என்றும் தணியாதபடி கடும்பசி
விளைப்பதோர் கொடும்பிணியாதலால் அதனால்
இவன் நெடுந்துயரடைந்தான். இவனது
நிலையினை யறிந்து மனைவிமுதலனைவரும்
மறுகிநொந்தார். உறுதிகள்பல கூறித் தன்
அரசுரிமையை மகனிடம் தந்துவிட்டு
உலகியலை வெறுத்து இவன் நிலைகுலைந்து
நின்றான். இத்துன்ப நிலையை யடைந்து
இவன் துடித்திருக்குங்கால் முன்பு
நண்பனாயிருந்த அவன் சிறிது சிறிதாகப்
பிரிந்து இனிப்பயனில்லை என்று தெரிந்து
முடிவில் அறவே ஒழிந்தான். இருவோடமர்
ந்து இவன் சிறந்திருக்கும்பொழுது
போன்பன்போல் பேணிநின்று
பெரும்பயன் பெற்றுவந்து அஃது அற்ற
தென்றவுடனே அகன்றுபோனதை நினை

ந்து அன்னவரும் அவனை இகழ்ந்து மொழிந்தார். உள்ளன்பின்றித் தனக்கு வரும் பயனையே கவர்ந்து ஒழிந்துபோகின்ற கள்ள நெஞ்சனாகக் குறித்துச் சொல்லாடுங்கால் அக்காலத்தவர் அவனையே முதலில உள்ளி நின்றார். இவனும் வினைப்பயனை நோக்கு அவன் உறவிலும் ஒழிவிலும் ஒருகவலையுமின்றி மேலுறவதைபுணர்ந்து உறுதிசெய்திருந்தான். உறின்நட்டு, அறின் ஒரூஉம் ஒப்பிலாரோடு நட்புக் கொள்ளலாகா தென்பதை உலகம் அறியப்பின்பு இவன் உணர்த்தி நின்றான்.

தன்னயமே பார்க்கும் தகவிலார் நட்பென்றும்
இன்னுயிர்நோய் எய்தல் இடர்.
82-ம் அதிகாரம் தீநட்பு.

2245

உள்ளன்பில்லாதாரோடு நட்புக்

கொள்ளலாகாதென்பது
இதனுல் கூறப்பட்டது.

---

813 பண்டுறவ தொன்றையே
பார்த்திழிந்தான் காசிபன்முன்
கொண்டநட்பில் என்னே
குமரேசா—ஒண்டி
உறுவது சீர்தூக்கும நட்பும்
பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்.
(௩)

இ—ள்.

குமரேசா ! காசிபன் பழகிய நட்பினை நினையாமல் தனக்குதவரும் பயனென்றையே கருதியதால் என் இழிவு எய்தினன் எனின், உறுவது சீர்தூக்கும் நட்பும், பெறுவது கொள்வாரும், கள் வரும நேர் என்க.

இது, தன்னயம் பார்ப்பார் நட்பின்

புன்மை கூறுகின்றது.

உறுவது = பொருந்துவது, வருவது. சீர்தூக்கும் = நிறுத்து நோக்கும். அஃதாவது தனக்கு வரும் பயனை நன்றாக ஆராய்ந்து பார்க்கின்ற என்றவாறு. “சமன் செய்து சீர்தூக்கும்” என்றதுங் காண்க. இவனோடு நட்புக்கொண்டால் இலாபம் கிடைக்குமா? எவ்வளவு கிடைக்கும்? எவ்வகையில் கிடைக்கும், எது வரை கிடைக்கும், என்று இவைமுதலாக மேல்வரும் பயன்களை வழுவற ஆராய்ந்து பார்க்கும் என்பார் உறுவது சீர்தூக்கும் என்றார். பெறுவது = பெறப்படுகின்ற பொருள்.

நட்பு ஆகுபெயராய் இங்கு நட்பினரை உணர்த்திநின்றது.

பெறுவது கொள்வார் என்றது விலைமகளிரை. விலையாகப் பொருளைப்பெற்றுக்கொண்டு தம் போகத்தை யாவர்க்கும் கொடுப்பவராதலால் இங்ஙனம்

உரைப்ப நின்றார்.

நேர் = நேர்வர்; ஒப்பர் என்றபடி. நேர் என்னும் முதனிலையே இங்ஙனம் முற்றுற நின்றது.

மேல், தமக்கு ஊதியம் கருதி வருவார் நட்பைச் சாலாகா தென்றார்; இதில், அவரைக் கள்வர் வேசியராக எள்ளித் தள்ள வேண்டும் என்கின்றார்.

தமக்கு வருகின்ற பயனையே ஆய்ந்துபார்க்கும் நட்பினரும், கணிகையரும், கள்வரும் தம்முள் ஒப்பர் என்பதாம்.



வெண்பா.

தமக்கு வரும் ஊதியம் ஒன்றையே நோக்கி உறவுசெய்து நிற்பாரைக் கள்வரோடும் வேசையரோடும் ஒப்புற வைத்தது என்னை யெனின், உள்ளன்பு இல்லாமல் உறுபொருள் கருதி நிற்கும் சிறுமை நோக்கி என்க.

அன்பின்றிப் பொருளை வெளவிப்

போதும் புல்லிய நட்பினரை அவ்வகையில் கவர்ந்து திரியும் கள்வரோடு கலந்து வைக் காமல் அவரைக் கடையில் நிறுத்தி இடையே நின்ற பொதுமகளிரோடு பொருந்த வைத்தது, தழுவிப்பறிக்கும தன்மையில் இவ் இருவர்க்குமுள்ள உரிமை நோக்கி என்க.

பருகுவாரிற் புல்லிப் பயங்கள் மாறத் துறக்கும்

முருகு விம்மு குழலார் போல மொய்கொள் தும்பி

உருவப் பூங்கொம்பொசியப் புல்லித் தீந்தேன் பருகி

அருகு வாய்விட்டார்ப்ப அண்ணல் மெல்லச் சென்றான், என்றது சிந்தாமணி.

தேன் உள்ளபொழுது பூங்கொம்பு ஒசியப் புல்லிப்பருகி அது வற்றியவுடனே அதனை வண்டு விட்டெழுதல் போல், கைப்பொருளோடுற்றவரைக் காதலால் பருகுவாரைப் போலப் புல்லி அஃது

அற்றபொழுது பரத்தையர் அவரை விட்ட
கல்வர் என உணர்த்திநிற்கும் இதன் அழகை
நோக்குக.

உள்ளுநறவிலா வெளி யுறவு
செய்து தான்
தெள்ளுறும் இளைஞர் தம் திருவெலாம்
கவர்ந்து
எள்ளுறு ராகினும் இடுதலால் வெறுங்
கள்ளரிற் கொடியவர் கணிகை மாதரே.

எனவும்,

காய வுரைத்துக் கருமஞ் சிதையாதார்
தாயரோ டொவ்வாரோ
தக்கார்க்கு—வாய்பணிந்
துள்ளம் உருக வுரைத்துப் பொருள்
கொள்வார்
கள்ளரோ டொவ்வாரோ தாம்.

எனவும், வருவன ஈண்டு எண்ணற்குரியன.

வஞ்ச நட்பினர், கள்வர், கணிகையர்

என்னும் இவர் நஞ்சம்
போல் மிக அஞ்சத்தக்கவராதலால்
இவரையாதும் அணுகாமல்
அகற்றிவிடவேண்டும் என்பது இதன்
திரண்ட பொருளாம்.

82-ம் அதிகாரம் தீநட்பு.

2247

தன்னையப் பார்க்கும்
புன்னெறியாளரைத் தனக்கு உறுதியாக
நம்பி என்றும் நண்பராகக் கொள்ளலாகாது;
கொள்ளின், " குட்டிக் கிடா காடி
ஆழுமுழுகக் கோன் குதித்துக், கட்டிப்
புணர்ந்த கதை " தான்.
நெஞ்சில் அன்பில்லாத வஞ்சகரை
நண்பராக என்றும் நம்பலாகாது என்பது
கருத்து.

உள்ளன்பில்லாமல் தனக்கு வரும்
ஊதியம் ஒன்றையே கருதி நல்ல

நண்பன்போல் கள்ளஞ்செய்து நிற்போன் எல்லாராலும் பின்பு எள்ளப்படுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காசிபன்பால் உணரப்படும்.

### கதை.

காசிபன் என்பவன் சற்றேறக்குறைய இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் இந்திரப் பிரத்தத்திற்கும் அக்கினிபுரத்திற்கும் இடையே இருந்த சகளாபுரி என்னும் நகரில் இருந்தவன். வேதியர்மரபினன். சோதிடப் பயிற்சியில் சிறந்தவன். மந்திர சித்திவாய்ந்தவன். எத்துணை கொடிய விடமாயினும் ஒருநொடியில் இறக்கிவிடும் இயல்பினை யுடையவன். சொல்விபகலைகளில் இவன் வல்லவனாயினும் உள்ளம் நலமில்லாதவன்; சொல்லாடலில் எவரையும் தன்வசம் செய்து தனக்கு இதம் செய்துகொள்பவன். பொருளாசைமிக்க இவன்மீது பரிச்சித்து மன்னன் சிறிது பற்று

வைத்திருந்தான். அவனிடம் நல்லபயன் கொள்ளலாம என்று நட்பாய் இவன் நாடிநின்றான். நின்றுவருங்கால் அவன் பாம்பு கடித்து இறக்குமாறு சாபம்பெற்றமையால் அதனைத் தப்பிப் பிழைக்குமாறு தக்கசூழ்ச்சிசெய்து தனியே யிருந்தான். குறித்த சமயம் வந்தபொழுது பாம்புகளின் தலைவனாகிய தக்ககன் என்பவன் அவனைக் கடிக்க வந்தான். அதனையறிந்து இவ் அமயஞ் சென்று அரசனுக்கு விடத்தை நீக்கினால் பெரும்பொருள் கிடைக்கும் என்று இவன் விரைந்து சென்றான். இடையே வந்த தக்ககன் இவனை எதிர்ந்துகண்டு நிலைவினை வினவியறிந்து மந்திர வலியில் இவன் பெற்றுள்ள நிலையினைத் தெளிந்தான். உனக்குப் • பெரும்பொருள் தருகின்றேன் பரீச்சித்திடம்போகாமல் நீ பிரிந்து 2248 திருக்குறட் குமரேச வெண்பா.

போய்விடுவாயா ? என்றான். வந்தது வாவென்று இவன் மகிழ்ந் திசைந்தான். அவன் அவ்வாறேகந்து விடுத்தான். விரும்பிய பொருள் கிடைத்ததென்று இவன் மீண்டு வந்தான். அம்மான் னன் அங்கு மாண்டுபோனன். நண்புடைமை கருதிக் கொஞ்சம் கூட அன்புசெய்து உதவாமல் உறுபயன் ஒன்றையேகொண்டு ஒழிந்துபோன இவனை அனைவரும் சினந்து இகழ்ந்தார். வஞ்ச நெஞ்சன் என்று அன்றுமுதல் இவனை யாரும் மருவாதொழிந்தார். கொலைஞரினும் கள்வரினும் கொடியன் என்று பேசி ஏச இவன் கூசியலைந்தான். உறுபயன் சீர்தூக்கும் நட்பினர் வேசியரும் கள்வரும்போ ால் ஏசப்படுவர் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

ஊதியமே யுன்னி யுறவார் களவாடும்
தீதரினும் தீயர் தெளி.
வஞ்சநெஞ்சரை நண்பாக

சமயவலாகாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

814 பண்டமரில் நீத்த பலரா மனை நினைந்து

கொண்டுளைந்தான் கோனென் குமரேசா—கொண்ட

அமரகத் தாற்றறுக்கும் கல்லாமா வன்னார்

தமரிற் றனிமை தலை.

(ச)

இ—ள்.

குமரேச ! திமராய் நின்ற பலராமர் அமர்வந்தபோது அகன்றுபோனதை நினைந்து துரியோதனன் ஏன் மிக நொந்தான் எனின். அமர் அகத்து ஆற்று அறுக்கும் கல்லா மா அன்னார் தமரின் தனிமை தலை என்க.

இஃது உற்றுழியுதவார் நட்பின் குற்றங் கூறுகின்றது.

அமர் = போர். அகம் = இடம். மா = குதிரை. தமர் என்றது நட்பினரை. தம்மவர் என்றவாறு.

அமர் அகத்து = போர்க்களத்தில். ஆற்று அறுக்கும் = ஆற்றுதலை ஒழித்துப்போம்; அஃதாவது வலிமையுற நின்று உதவாது இடையே தள்ளிவிட்டு ஓடிப்போகின்ற என்றவாறு. ஆற்றுதல் = வல்லதாய் நின்று உதவுதல்.

82-ம் அதிகாரம் திரட்டு.

2249

கல்லா மா = கல்வியில்லாத குதிரை. இந்தக் கல்வியாவது பொருதிறமொடு கதியும் சாரியும் கசடற அறிதல். கதியாவது நடையின் பேதம், அது மயில்போல் ஒயிலா நடத்தல், மல்லனைப்போல் மருவிச் செல்லல், வானரம்போல் வாய்ந்து தாவல், புலிபோல் விரைந்து பாய்தல், அம்புபோல்

பறந்து போதல் என ஐவகைப்படும். "மல்லமே மயூ ரம் மற்றை வானரம் வல்லியம்மே, சொல்லிய சாமே என்ப தாகத கதிகள் ஐந்தாம் " என்றது சூடா மணி. சாரியாவது வலம், இடப, நேர், கோணப், வளைவு, நிமிர்வு, மறிவு, குழைவு, சரிவு, ஒழிவு, தெரிவு, ஓங்கல், வாங்கல், ஊறுதல், சேர்தல், ஊடல், நீடல், உயர்தல் எனப்பதினெட்டாம். இவற்றைக்கற்றுவல்ல புரவியே பொருந்திறனுடையதாம். இதனைத் தம் உயிரினும் சிறந்ததாகப் போற்றிப் பொ ருமுகத்திலூர் ந்துசென்று மன்னர் வெற்றிபெற்று வருவர். இவ்வாவு இங்கு இப்பொழுது எப்படியுள்ளது!

ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும்

கந்தமறமும் கறங்குளைமா — புந்தற
மேல்கொண் டவைசெலீஇ

வெல்வேலான் மேம்பட்டான்

வேல்கொண்ட கண்ணாளை மீட்டு.

எனவ நம் இப்பழம் பாட்டும் மேற்குறித்த போர்மா நிலைமையைக்காட்டி நிற்றல் காண்க. இங்ஙனம் பயின்று வல்ல குதிரைகள் பல ஓர் அமர்க் களத்தில் பண்டு ஆடல் செய்த பான்மையை அடியில் வரும் பாடலில் காணலாம்.

அடலில் வலிமையில் விரைவினில் உயர்வன;
அகிலபுவனமும் கொடியினில் வருவன,
பொடியின்மிசை வெளி புதைத ர விடுவன;
புணரியிடை அலைஅலை யொடு பொருவன; மிடலில்
அடுபடை மடிதர நிமிர்வன; விரியுநளமலர்
கமழ்முக வுயிரன; படியில் ஒருபடி நிலையறுகதியன;
பரிகளே
பவனமெனநனி பரவின இவ்வாறு போர்ப் பயிற்சியில் சிறந்திருந்தமையால் புரவியை அம ரகத்துக்கு உரிமையாக்கி அடிகள் இங்கு உரைத்தருளினர். ஆற்றறுத்தற்குக் கல்லாமை காரணமாதல் தோன்றக் கல்லா என்னும் அடை, மாவினை அடுத்து நின்றது. அறுக்கும் மா, கல்லா மா எனத்

தனித்தனியும் கூட்டி க் காண்க.

2250 திருக்குறட் குமரேச
வெண்பா.

மேல், தன்னயக் கருதுவார் நட்பின் புன்மை கூறினார்
இதில், சமயத்தில் விட்டொழிவார் நட்பின் தீமை கூறுகின்றார்.

தன்னைச் சார்ந்து நின்ற நல்வினைப் போர்க்களத்தில் வீழ்த் திவிட்டுப்போகும் கல்வியில்லாத குதிரைபோல்வாரது துணைமையினும் தனிமைசிறந்தது என்பதாம்.

கள்ள நட்பினர்க்குக் கல்லா மாவை உவமை காட்டியது தன்னை நம்பி நின்றவனைச் சமயத்தில் தள்ளிவிட்டுப் போகும்
அதன் புன்மை கருதி என்க. வீறுமதலிய வெற்றிடங்களிலெல் லாம்

உற்றதுணையாயமைந்து ஒழுங்கா நடந்துவந்து போர்க்களம் புக்கபொழுது வெருண்டு தன் தலைவனைத் தள்ளிவிட்டுப்போகும் பொல்லாக்குதிரை ரபோ ல்,
துன்பம் இல்லாதபோதெல்லாம் ஒருவ னுக்கு நல்ல நண்பர்போல் அமர்ந்திருந்து அது வந்தபோது யாதும் உதவாமல் அவனைக்கைவிட்டு அகன்றுபோகும் கள்ளமக்களை என்றும் நட்பாகக் கொள்ளலாகாதென்பார் " அமாகத்து அற்றறுக்கும் கல்லாமா அன்னார் தம ரின், தனிமை தலை'' என்றார். தமரின் என்பதில் இன் உருபு எல்லைப்பொருளது. ' அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்புக் கொள்ளற்க' என்றதும் ஈண்டு உள்ளத்தக் கது. ஒன்றுபோல் தோன்றுகின்ற இவ் இரண்டிற்குமுள்ள வேற்றுமையை ஊன்றியுணர்க.

கல்லாமாவை நம்பி அமர்முகத்தில் புகுந்தான் அழிவுறுதல் போல் கள்ள

நட்பினரை நம்பினால் உள்ள வுறுதியும் தொலைந்து ஒழிவுற நேருமாதலால் அப்பொல்லாதாரை நட்பாகக் கொள்ளு தலினும், கொள்ளாதிருத்தலே நல்லதாம் என்க.

தன் நண்பனுக்கு உலைவுவந்தபோது உடனிருந்து உதவி செய்யாதான் உறவு மிக இழிவுறும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை பலராமர்பால் உணரப்படும்.

## கதை.

பலராமர் என்பவர் வசுதேவருடைய புதல்வர் . உரோகணி யிடம் பிறந்தவர். கண்ணனுக்கு மூத்தவர். வெண்மை நிறத்தி னர் . இவருடைய மனைவி பெயர் இரேவதி. கலப்பை ஆயுதத்தை யுடையவராதலால் அலாயுதன் எனவும் இவர் அழைக்கப்படுவர்.

82-ம் அதிகாரம் தீநட்பு.

2251

காமபாலன் எனவும்பெயர். தாம் கருதியபடியே யமுனை உற்றுசெய்யாமையால் தம் கலப்பை ஆயுதத்தால் அதனை ஒருமுறை இவர் காய்ந்து பிளந்தார். அத்தெய்வ நதி கலங்கிவந்து ஒரு நீல ஆடையை இவர்க்கு உவந்தளித்து நண்பாயமைந்து நின்றது. அதனைத் தரித்துக்கொண்டமையால் நீலாம்பரன் எனவும் இவர் நிலவிநின்றார். மிக்கமுன்கோபமுடையவர்; அதனால் எண்ணிய காரியங்களை இனிது முடிக்காமல் இழந்துபோகவிட்டுப் பலமுறையும் இரங்கி நொந்துள்ளார். கண்ணனுக்கு அண்ணனயிருந்தும் காரியங்களில் இவ்வண்ணமுள்ளாரே என்று பிறர் புன்னகை செய்து எண்ணுமாறு இவர் நண்ணி நின்றனர். வேண்டாத வினைகளில் விரைந்து புகுதலும் வேண்டியவற்றில் விலகிநிற்றலு மான செயல்கள் இயல்பாகவே

இவர்பால் மேவியிருந்தன.

அலத்தால் முன்னம் பிளந்தபகை அட ர்ப்பான் கருதிப்பிளப்புண்ட
சலத்தால் யமுனை பிணித்ததெனத் தயங்கும் படி சேர்தானையினன் குலத்தால் உயர்ந்த வசுதேவன் குமரன், களபக்கொங்கையர்மெய்க் கலத்தால் மகிழுஞ் சிந்தையினன் நறுந்தாரிராமன் இவன் என்றார்.

என இவர் திரௌபதியின் சுயம்வரத்திற்கு வந்திருந்தபோது அங்கு நின்றிருந்த பெண்கள் இவரைக்குறித்து இவ்வாறு உரை யாடியுள்ளார். தருமசீலர்களான பாண்டவர்களை விரும்பாமல் கொடியவர்களான துரியோதனனதியர் மீதே இவர் மிக அன்பு கொண்டிருந்தார். பதின்மூன்று வருடங்களாக வனவாசஞ் செய்து மீண்டுவந்து தம் அரசினை அடையுமாறு கண்ணனேடு அப்பாண்டவர் கலந்து

ஆலோசிக்குங்கால் " வல்லினால் அவன் கொண்டமண்மீளவும் வல்லினாற் கொளலன்றி, வில்லினால் அமர் மலைந்து கொள்ளுதும் " என அம்மாதவன்சொல்லி அவரை மகிழ் வுறுத்தினான். அவ்வமயம் இவர் அவர்க்கு இடையூறு கூறினார். சூதாடி இழந்துபோன நாட்டினை மறுபடிவந்து எப்படிக் கேட்க

லாம் என்று இவர் எதிர்த்து நின்றார். உடனிருந்த சாத்தகி

இவரை உருத்துவைதான். பிறரும் இவரை வெறுத்து இகழ்ந்

தார். அன்று செய்த இவர் வாதாட்டத்தையும், மனக்கோட்டத்

தையும் வில்லியாழ்வார் அழகுறச் சொல்லியுள்ளார்.

வெண்பா.

உரிய அம்புலி உதிட்டிரன்றனை அவன் உற்றவர்
பலர்காண அரிய வன்பெருஞ் சூதினால்வென்று
பல்லாண்டடிப்பட ஆண்டான் இரியவன்புடன்
வாங்குதற்கு எண்ணுமித் தீமதி கொடிதென்று
கரியவன் புகல் கட்டுரைகேட்டபின் காமபாலனுஞ்
சொன்னான். (1) இளையசாத்தகி தமையனை
மிகக்கரிது இதயம் ஆயினும் நாவில் விளையுமாற்றம்
நின் திருவடிவினும் மிகவெள்ளை யாகியதென்ன
உளையவார்த்தைகள் உரைத்தனன் உரைத்தலும்
உற்றவர் இருகண்கள் கிளையுமாப்புயல், இருவரும்
ஒழிமின்நும் கட்டுரை இனி என்றான். (2)
இவ்வாறு துரியோதனன்பால் இவர் அன்பு
மிக்கவராய் அமர்ந்திருத்தலால் அவனுக்கே
படைத்துணையாகுமாறு கண்ணன் இவரை
ஒதுக்கி விட்டான். உண்மையில் எவரும்
வெல்லமுடியாத திண்மையாளராதலால்

இவரை இன்னுயிர்த் துணைவராய் நம்பி அம்மன்னன் நன்னயம் செய்தான். இவ் நம் பகைவரை வென்று உயர் நலம் பெறலாம் என்று உறுதிகள்பல செய்து அவனை ஊக்கி நின்றார். இவரைத் தமராக் கொண்டமையால் எவரும் தனக்கு இனி எதிரில்லையென்று அவன் இறுமாந்து எதிரிகள் பக்கம் சேர்ந்துள்ள கண்ணன் முதலானவர்களை யெல்லாம் எண்ணியிருந்தான். அமர் மூண்டது. இருதிறத்தவர்களும் இன்ன நாளில் பொருவதென்று முன்னதாகவே அறுதியிட்டுக்கொண்டு படைகளைத் திரட்டினர். குறித்தநாள் வந்தது. போர் என்ற வார்த்தையைக் கேட்டவுடனே தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு இவர் தேசாந்தரம் போயினர். எப்படியும் வந்து உதவுவார் என்று வழிநோக்கி நின்ற அவன், இவர் வழிநோக்கிப் போனதைத் தெரிந்து மிக ஏங்கி நொந்தான். முன்பெல்லாம்

தமாய் நின்று ஊக்கிவந்த இவர் சமயத்தில்
உதவாமல் அமரில் கைவிட்டு அகன்று
சென்றதை நினைந்து அனைவரும் இவரை
இகழ்ந்து நின்றார். இயல்பாக மிக்க
நல்லவராயிருந்தும் தம்மை நம்பிநின்றவர்க்கு
அமயத்திலாற்றுமல் அகன்று போனமையால்
இவர் அவமதிப்புற்றார்.
போர்க்குதிரையென்று நம்பி ஊர்ந்து
வந்தவனைப் பகைவர் வளைந்தபொழுது
பொருகளத்தில் தள்ளி விட்டு அது
போய்விடுமாயின் அவன் எப்படி
ஆய்விடுவானே அதுபோல் அம்மன்னன் ஆகி
நொந்து அழிவுறலானன். அமயத்
தில் கைவிட்டுப்போவாரைத் தமாக்கொள்
ளுதலினும் தனியா•
82-ம் அதிகாரம் திரட்டு.
2253

பிருக்கல் மிக நல்லதென்று உலகம் காண
நின்றார்.

இவர் உணர்த்தி

பாப்புக் கொடியாற்குப் பால்மேனி
யான்போலத்

தாக்கி அமருள்
தலைப்பெய்யார்—போக்கி

வழியாய் நட்டார்க்கு மாதவஞ்செய்
கழிவிழாத் தோளேற்று வார்.

வாரே

என . மேற்குறித்த சரித்திரத்தை
முன்றுறையரையனார் தமது நூலாகிய
பழமொழியில் இவ்வாறு குறித்துள்ளார்.
பாப்புக் கொடியான் என்றது துரியோதனனை.
பாம்பு என்பது பாப்பு என வலித்து நின்றது.
பால்மேனியான் என்றது பலராமனை. இவர்,
தம்மைத் தமராக்கொண்டிருந்த
துரியோதனனுக்கு உறு துணையாய் நின்று
அமரில் ஆற்றாது கைவிட்டுப் போய் அவன்

அழிந்தபின்பு வந்து ஆதரவு செய்தது திருவிழாக் கழிந்துபோன பின் தேரிழுக்க வந்ததுபோலுள்ளதென்று இவரை இதில் எள்ளியிருத்தல் காண்க.

அமிர்தென்று நஞ்சை அருந்தலாம் வஞ்சர்
தமரென்று கோள்ளல் தவிர்.

சமயத்தில் உதவாமல் தள்ளிவிட்டுப்போகும் கள்ளமக்களை நட்பாகக்கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

815 ஓர்ந்துவைத்தும் உற்றுதவா உத்தரனைப் பின்மிலேச்சன்
கூர்ந்தொழித்தான் என்னே குமரேசா—தேர்ந்துநன்கு
செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று.

(ரு)

இ—ள்.

குமரேசா ! உறவுசெய்திருந்தும் இதமாகா தொழிந்த உத்தரனை மிலேச்சன் ஏன் வெறுத்து ஒழித்தான் எனின், செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை எய்தலின் எய்தாமை நன்று என்க.

இது, சிறியவர் நட்பின் தீமை கூறுகின்றது.

செய்து என்றது தமக்குத் துணையாய் நின்று உதவுமாறு உறுதிபெற ஆக்கி வைத்தும் என்றவாறு. சிறப்பும்மை இதில்





வருவிக்கப்பட்டது. தாமாகவே அவர் கேண்மை செய்திருந்தும் எனவுமாம். ஏமம் = பாதுகாவல், இன்பம். சிறியவர் என்றது

அறிவு குன்றிய புன்மக்களை.

சிறியவர் கேண்மை என்றது புன்மையை இடையே வைத்து அக்கேண்மையின் இழிவுதோன்ற என்க.

மேல், காலத்தில் உதவாமல் கைவிட்டுப்போகும் பேடி மக்களைக் கூடலாகாதென்றார்; இதில், சொல்லியும் செய்யாத புல்லியரை நட்பாகப் பொருந்தலாகாதென்கின்றார்.

இதமாக நட்புச் செய்துவைத்தாலும் ஏமமாகாத இழிமக்களது புல்லிய நட்பு ஒருவனுக்கு உண்டாதலினும் இல்லையாதொழிதல் நல்லதாம் என்பதாம்.

எய்தினால் வருந்தீமை எய்தாவழி இல்லையாதல் கருதி எய்தாமை நன்று என்றார். சிறியார் கேண்மை எய்தின் ஏமம் சாரா திருக்கும் அவர் இயல்பினை முதலில் அறியமுடியாதாதலால் "நமக்கு உதவிக்கு ஆளிருக்கிறது" என்று கருதி ஊக்கமெய்தி

அரிய காரியங்களையும் பொருட்படுத்தாமல் எது வந்தாலும் சரி என எதிர்த்து நிற்கச்செய்யும்; அந்நிலையில் நிற்குங்கால் ஏதேனும் இடையூறு வந்ததாயின் அவர் யாதும் உதவாமல் உமக்கு வந்த
விதிக்கு யாமென்ன செய்வோம் என்று
உள்வீடின்றி ஒழிந்து
போவர்; போகவே நின்றவன் அடியோடு
அழிந்துபோக நேரும்
ஆதலால் அவ் இழிந்த மக்களை நண்பாக நம்பிக்கொள்ளுதலினும் கொள்ளாதிருத்தல் நல்லதாம் என்க.

தனக்கு உதவியாவான் என்று
உள்ளப்பட்டு நின்றவன் உதவாதொழிவனாயின்
உள்ளி நின்றவன் பெருந்துயர் கொள்வன்;
அங்ஙனம் கொண்டவர்களுள்
பண்டொருவன் இதஞ்செய்து
வைத்தும் தனக்கு வமஞ்சாரமல்
இழிந்துபோனவனை ஒருமுறை

எதிர்ந்து கண்டபொழுது எ!
உன்னை நம்பியிருந்ததைக்காட்டிலும்
ஒருச்சாண் வயிற்றை
நம்பியிருந்திருக்கலாமே! என்று வயிற்றெ
ரிச்சலோடு உரைத்து நொந்ததும் ஈண்டு
உள்ளத்தக்கது.
தமக்கு அரணாய் நிற்குமாறு
வில்வித்தை முதலியன கற்
பித்துத் துச்சாதனனாதியரைத் துரோணர்
வலியுறுத்தி வைத்ததும்'
82-ம் அதிகாரம் திரட்டு.

2255

ஒருநாள் அவரை முதலை
பிடித்துக்கொண்டபொழுது அடுத்து நின்ற
அவர் செய்யும்
வகையறியாமல் கைவிட்டுக் கால்வாங்கினது
போல் தொலைவில் உதவாமல் தம்மைச்

சார்ந்தவனை விட்டுத் தொலைந்து போவாரை கண்பாக நம்பிக்கொண்டால் மிக்க துன் பங்களேயுண்டாகும் ஆதலால் அச்சிறியார் கேண்மை எய்தலினும் எய்தாமை நன்று என்றார்.

உருட்டிவைத்தாலும் உருக்கூடாத உவர் மண்ணைப்போல உணர்த்தி வைத்தாலும் உணர்ந்துதவாத இழிந்த மக்களை நட்பி னராக எண்ணலாகாதென்றவாறு.

சிறியார் கேண்மை நெடிது நிலைபெறாது; ஒருவேளை நிலை பெற்றாலும் அதனால் துயரும் பழிபுமே தொடருமாதலால் அப் புல்லர் நட்பைத் தொடக்கத்திலேயே துண்டித்துவிடவேண்டும் என்க. சிறியார் கொண்ட தொடர்பிற் செல்லச் செல்ல அஃகும் என இடர்மிக்க ஒரு மலைவழியைக் குறித்துக் கூறுங்கால் திருத் தக்கதேவர் இப்புன்கேண்மையை எடுத்துக்காட்டியுள் ளார். அற் பர் சகவாசம் பிராண சங்கடம்

என்பது பழமொழி. எவ்வளவு அநுபவத்தின்மீது இவ்வளவு கொடுமையோடு இம்மொழி எழுந்திருக்கவேண்டும் என்பது இங்கு எண்ணத்தக்கது.

செயல்வகையறியாத சிறியவர்களோடு யாதும் நட்புச் செய்யலாகாதென்பது இதன் திரண்டபொருளாம்.

சிறியவரை நம்பி நட்புக்கொண்டால் அதனால் பெருந்துன்பம் விளையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மிலேச்சன்பால் உணரப்படும்.

## கதை.

மிலேச்சன் என்பவன் மகதநாட்டையடுத்திருந்த போதனபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். அக்காலத்திருந்த முடிமன்னர் வரிசையில் இவன் மூன்றாவதாவன். நல்ல நீதிமான். வீரமும் நேர்மையும் விளங்கிய நெஞ்சினன்.

பல போர்முனைக ளிலும் பொருதுவென்று உயர்புகழ் கொண்டவன். இவனுடைய படைவீரர்கள் போன்புடையராய் இவனைப்பேணி நின்றனர். 2256 திருக்குறட் குமரேச வெண்பா.

ஒருமுறை இவனைப் பொருதுவெல்லவேண்டுமென்று கருதிவந்த பகைவர் பலரையும் இவன் ஒருசேர வென்று பெரு வீரமோடு அப்பொருகளத்தில் நின்று அரிய வீர வேள்வி ஒன்று யாவரும் வியக்கச் செய்தான். தீயோரைத் தேய்த்து நல்லோரைக் காத்துச் செங்கோலுடையனாய் எங்கும் இசைபரவ இவன் இனிது வீற்றிருந்தான். இவனது ஆண்மை மேன்மைகளைக் குறித்துக் கொங்குவேளிர் தமது நூலாகிய பெருங்கதையில் மிக வியந்து கூறியுள்ளார்.

மாற்றோர்க் கொலைத்த கூற்றுறழ்
கொடுந்தொழில்
மிக்குயர் வென்றியொடு வேந்தரை
அகப்படுத்து
அக்களம் வேட்ட அடலருஞ்
சீற்றத்துப்
புனைமதில் ஓங்கிய போதன புரத்திறை
தடவரை மார்பிற் றளராச்
செங்கோல்
மிலைச்சன் என்னும் நலத்தகை
ஒருவன்.
என்பதாதியாக இங்ஙனம் புலவர் பலரும்
புகழ்ந்து போற்றத் தலைமையோடு இவன்
நிலைபெற்று வருங்கால் உத்தரன் என்னும்
ஒருவன் இவனோடு மித்திரனாகி நின்றான்.
அவன் செல்வமுடை யவனாயினும் வினைசெயல்
வகைகளில் உறுதி நன்மைகள் சிறிதும்
இல்லாதவன். அன்பன்போல்

அணுகியிருந்தமையால் அவனுக்கு வேண்டிய நன்மைகளைச்செய்து அவன்பால் இவன் நண்பு செய்
திருந்தான். அவனுடைய சிறிய தந்தை மகன் நந்தன் என்பவ
னையும் அவனோடு வைத்து இவன் ஆதரித்து வந்தான். வருங்
கால் மகதமன்னனோடு இவனுக்குப் பகைமை மூண்டது. படை
கள் திரண்டு கொடும்போர் புரிந்தன. தனக்கு உதவி செய்யு
மாறு உறுதிசெய்திருந்த அவ்வுத்தா நந்தர்கள் யாதும் உதவாமல்
அதில் ஒழிவு செய்திருந்தார். மாற்றலன் படை ஏற்றமுற்றிருந்
தமையால் அதில் இவன் மறுகி மீண்டான். என்றும் வென்றி
யாளனாய் நின்ற இவன் அவரை நம்பி

மோசம் போனதை நினை
ந்து தன்னுள்ளேயே வெம்பியிருந்தான்.
பின்பு அவரை நஞ்
செனை வெறுத்து நலுகாதகற்றினன்.
அவரும் அஞ்சி அகன்ருர்.
அப்புல்லியர் உறவு ஒழிந்ததே தனக்கு
மிகவும் நல்லதென்று
82-ம் அதிகாரம் தீநட்பு.
2257

சொல்லி இவன் உள்ளம் உவந்தான். செய்து
வைத்தாலும் இதமாகாத சிறியவர் நட்பு
எய்தலினும் எய்தாமை நன்று என்னும்
உண்மையை இவன் அன்று உணர்ந்து
எவரும் அறிய நின்றுணர்த்தினன்.
கற்றறியார் செய்யுங் கடுநட்புந்
தாங்கூடி
உற்றழியும் தீமைநிகழ்

வுள்ளதே—பொற்றொடீ.

சென்றுபடர்ந்த செழுங்கொடிமென் பூ
அன்றே மணமுடைய தாம்.

மலர்ந்த

(கன்னெறி) கொடிப்பூவானது மலர்ந்த அன்றுமாத்திரம் மணம் வீசிப் பின்பு வாடிப்போதல்போல் அறிவிலிகள் நட்பு முதலில் இனிதுபோல் தோன்றினும் முடிவில் இன்னதாய் இடர் விளைக்கும் ஆதலால் அச்சிறியரைச் சிறிதும் கூடலாகாதென இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

பிள்ளை யெனமனையைப்
பேணினுமென் பேருரேகீழ்
நள்ளலினும் விள்ளல் நலம்

சிறியார் உறவு சிறிதும் கூடாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

 பேதை அசமுகிதன் பேருறவால் சூரனென்

கோதுமி க வுற்றான் குமரேசா—தீதுமிகு

பேதை பெரு ங்கெழீஇ நட்பின் அறிவுடையார்

ஏதின்மை கோடி யுறும். (௬)

இ—ள்.

குமரேசா! அறிவில்லாத அசமுகியின் உறவால் சூர பன்மன் ஏன் அழிவுற்றான் எனின், பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் என்க.

இஃது அறிவிலார் நட்பின் கொடுமை கூறுகின்றது.

பேதை = அறிவில்லான்.

பெருங்கெழீஇ = மிக நெருங்கிய; இடம் நோக்கி ஈறுதிரித்துப் பெயரெச்சமாக இது

கொள்ளப் பட்டது. கெழுவுதல் என்பது கெழீஇ என அளபெடுத்து நின் றது.

கெழுவுதல் = நெருங்குதல், பொரு ந்துதல்.
" கிளையொடு 2258 திருக்குறட் குமரேச வெண்பா.

கெழீஇ" எனப்பரிபாடலிலும், " புரிந்த . சுற்றமொடு புணர்ந் துடன் கெழீஇ". எனப் பெருங்கதையிலும்" கேளல் கேளிர் கெழீஇயினரொழுகவும்" என அகநானூற்றிலும் இது நின்றுணர்த்துதல் காண்க.
ஏதின்மை என்றது பகைமையை; ஏதும் அன்பில்லாமை என்பதாம். ஏதிலர் பகைவர் என்க. "ஏதிலாளர்க்குப் பசந்த என்கண் ணே" என்றது ஐங்குறு நூறு.
கோடிஎன்றது மிகுதியை விளக்குதற்கு ஓர் பெரிய எண்ணைப்பொதுவாக

எடுத்துக்காட்டியபடி. கோடியுறும் = கோடிபங்கு நன்மையுண்டாம். கோடி = நூறு நூறாயிரம்.

மேல், சிறியாரோடு நட்புச் செய்யலாகாதென்றார்; இதில், மூடரோடு உறவு கூடாதென்கின்றார்.

அறிவில்லாதது மிகச் செறிந்த நட்பினும் அறிவுடையாரது பகைமை கோடி மடங்கு நன்மையாம் என்பதாம்.

மூடன் ஒருவனது நட்பினும், அறிவுடையார் பலாது பகைமை மிகவும் நல்லது என்பார் "பேதை நட்பின் அறிவுடையார் ஏதின்மை கோடி உறும்" என்றார். இங்ஙனம் கூறியது

அவர்தம் இயல்பினை இனிது தெளிக்கென்க.

அறிவுடையார் தீவினைக்கஞ்சி நெறியறிந்தொழுகும் இயல்பினராதலால் அவர் பகைமையால் யாதொரு தீங்கும்

தாகை
உண்டாகாது; அறிவில்லார்
எதிர்வதையறியாது கொடு விலங்கு
கள்போல் கடுவினை புரிந்து நெறி
பிறழ்ந்தொழுகும் வெறியினரா
தலால் அவர் உறவு அரவின் உறவுபோல்
இழிவோடு அழிவே
பயக்கும் என்க. பேதை நட்பின்
தீமையைக் குறித்து அடியில்
வரும் பழம் பாட்டு பண்டு நிகழ்ந்ததைப்
படியெடுத்துக் காட்டி
இனிது விளக்குகின்றது.

அறிவன் பகையேனும் அன்புசேர்
நட்பாம்;

சிறுவன் பகையாம்
செறிந்த—அறிவுடைய

வென்றி வணசான்றான் வேதியனைக்
காத்தான்முன்

கொன்றதொரு வேந்தைக் குரங்கு.

(நீதி வெண்பா.)
82-ம் அதிகாரம் திரட்டு.
2259

இவ் வெண்பா இரண்டு சரிதங்களைத் தன்னுள் பிண்டமாகக் கொண்டுள்ளது. அவை வருமாறு: நாகநாதன் என்னும் வேதியன் ஒருவன், ஒரு குறுநில மன்னனிடஞ் சென்று நயப்புரை யாடிச் சிறந்த மாணிக்கமணி ஒன்றை வாங்கிச்சென்றான். அதனை யறிந்த ஆதகன் என்னும் வேடன் அம் மன்னன்பால் மிக்க அன்புடையவனாதலால் பார்ப்பான் வந்து பசப்பி நம் அரசனிடமிருந்த அரிய மணியை வாங்கிப் போகின்றானே ! என்று வருந்தி நின்று எப்படியாவது அதனைக் கவர்ந்துகொண்டு வரவேண்டும் என்று அவனைத் தொடர்ந்து சென்றான். இடையே ஒரு காடடைந்த பொழுது ஓய் ! நில்லும்

என்றான். அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்; இன்று தொலைந்தேன் என்று அவன் உள்ளங் குலைந்து நின்றான். தொடர்ந்தவன் நெருங்கிவருமுன் எப்படியாவது பின்பு எடுத்துக்கொள்ளலாமென்று துணிந்து மடியி லிருந்த மணியை அவன் வாயில்போட்டு விழுங்கிவிட்டான். வந்தவன் மணியைக் கொடு என்றான். அவன் என்னிடம் ஒன்றும் இல்லையே என்றான். இவன், உன் வயிற்றில் உள்ளது என்றான். இங்ஙனம் சொல்லாடி நிற்குங்கால் கள்வர் நால்வர் அங்குக் கடுகி வந்தார். அவர் வரவைத் தெரிந்து ஒரு சூழ்ச்சிசெய்து ஐயோ என் கையில் இருந்த மணியைப் பிடுங்கி விழுங்கி விட்டாயே; உன் வயிற்றிலுள்ளதே ! என்று அவ் வயிற்றுமணியின் வாயடித்து வல் வழக்காடினான். இருவரையும் பிடியுங்கள்; வயிற்றைக் கிறிப் பார்ப்போம் என்று அக்

கள்வர் நால்வரும் துணிந்தார். உடனே இவ் வேடன் இரங்கினன்; பாவம்! பார்ப்பான் வீணே கச் செத்துப்போவானே என்று நினைந்து அவர்களைநோக்கி ஐயா, நாங்களிருவரும் விளையாட்டாகப் பேசினேமே யன்றி எங்களிடம் யாதொன்றுமே யில்லை என்றான். அவர்கள் நம்பவில்லை. உங்களுக்கு ஐயம் இருக்குமானால் என் வயிற்றை முதலில் சோதித்துப் பாருங்கள்; இல்லை என்பது உங்களுக்கு இனிது விளங்கும் என்றான். அப் புல்லர்களும் அவ்வாறே பார்த்து யாதும் இல்லாமை கண்டு நீ நில்லாதே போ என்று அவ் ஆசைப் பார்ப்பானை விட்டு அகன்று போயினர். பகைமை கொண்டுவந்தும் இவன் செய்த பெருந்தன்மையை நினைந்து அவன் வியந்து போயினன். 283

2260 திருக்குறட் குமரேச வெண்பா.

ஓர் அரசன் வால் இல்லாத ஒரு பெருங்

குரங்கை வளர்த்து

வந்தான். தான் சொல்லியபடியெல்லாம் செய்யும்படி அதனை நன்கு பழக்கி யிருந்தான். ஒருநாள் பகலில் அவன் படுத்துறங் கும்பொழுது தன்னை யாரும் தொடாதபடி பாதுகாத்து நில் என்று கூறிய வாளொன்றைக் கொடுத்து நிறுத்தினன் சிறிது நேரம் கழிந்தபின் ஈ ஒன்று வந்து அவன் மூக்கில் இருந்தது. அப் பேதைக் குரங்கு வாளால் அதனை ஓங்கி எறிந்தது. அதனால் அம்மன்னன் மாண்டு போயினன். இவ்வாறு, அறிவுடையார் பகைவராயினும் நீதிலராவர்; பேதையர் பெருங் கேண்மை செய்யினும் கொடுங்கேடே விளைப்பர் என்னும் உண்மையை உறுதி பெறத் தெளிவாக உணர்த்தியிருத்தலை இதில் உண ரலாகும்.

மூடருறவு என்றும் கேடே பயக்குமாதலால் அவரை நண்ப ராகக்கொள்ளவே கூடாது; ஒருவேளை அவர்

நயந்து நெருங்கினும் ஆடுமாடுகளை
ஆகரித்து அகலவைத்திருப்பதுபோல் இக
லுறவகை எண்ணி
வைத்திருக்கவேண்டுமேயன்றி இனிய உற
வினராக நம்பித் தெளியலாகாதென்க.
வறியவரைச் செல்வர் மதித்துறவு
கொள்ளல்
உறினும் அறிவுடையார் பேதையரை
ஒன்றார்;
அறினும் அவர் சேர்க்கை யெனின்
அம்புய நீர் சேரப்
பெறுமுறவு போலாம் பிற.
என்பதுங் காண்க.
அறிவில்லார் தொடர்பு
கொடுந்துயரங்களுக்கே ஏதுவாகுயா தலால்
அதனைச் சிறிதும் அணுகலாகா தென்பது
இதன் திரண்ட பொருளாம். “ நுண்ணூல்
உணர்விலராகிய ஊதியம் இல்லார்ப் புணாதல்
கிரயத்துள் ஒன்று ” என்ற

உறுதிமொழியையும் ஈண்டுணர்ந்துகொள்க.

இசைந்த சிறுமை இயல்பிலா தார்கண்
படைசைந்த துணையும் பரிவாம்—அசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கண்
பகையேயும்பாடு பெறும். என்றது நாலடியார்.

அறிவில்லாரோடு சிறிது நட்புக்கொண்டாலும் அதனால் பெருந் துன்பமே உண்டாம்; அறிவுடையாரோடு பகைத்தாலும்

82-ம் அதிகாரம் தீநட்பு.

2261

பெருமையேயாம் என இஃது உணர்த்தி நிற்றல் காண்க. பேதை நட்பினும

அறிவுடையார் பகைமை நல்லதெனை அடிகளருளியுள்ள தனை இஃது அடியொற்றிவந்திருத்தல் உணரலாகும்.

உறுதியுணராது நெறிதிறம்பி நின்றுகெட்டொழுகும் அறிவில்லார்களை நட்பினராகச்சிறிதும் கொள்ளலாகாதென்பது கருத்து.

பேதைகள் நட்பால் பெருங்கேடு விளையுமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசமுகியால் உணரப்படும்.

## கதை.

அசமுகி என்பவள் சூரபன்மனுடைய தங்கை, சிங்கமுகனுக்கும் தாரகனுக்கும் பின் பிறந்தவள். பருத்து நிமிர்ந்த அழகிய நல்ல வுருவினளாயினும் முகம் மாத்திரம் ஆட்டு முகமா யமைந்திருந்தனள். அதனால் அசமுகி என அழைக்கப்பட்டாள். அசம் = ஆடு. முகி = முகத்தையுடையவள். இளமைநலங் கனிந்து இன்பச்செவ்வியில் சிறந்தவளாயினும்

அறிவொழுக்கங்கள் சிறிதும் இல்லாதவள், முதியவராயினும் முனிவராயினும் எவரையும் மதியாத இயல்பினையுடையவள். ஒருவனை மணந்துகொண்டு அடங்கி அவனுடனமர்ந்திருப்பது தன் பெருமிதத்திற்குத் தகுதியன்றென்று நினைந்து பலரையும் வலித்து நுகர்ந்து மனம் போன படி திரிந்து வாதாவி, வில்வலன் என்னும் புதல்வரிருவரைப் பயந்து உடன்பிறந்த முதல்வர் மூவரையும் வாம்புகடந்து புகழ்ந்து உலகமெங்கும் உலாவித் திலைமையோடு நின்றாள். இப்பேதையின் தீதுடைமையைக் குறித்துக் கச்சியப்ப சுவாமிகள் தாம் அருளியுள்ள கந்தபுராணத்தில் விரிவாக விளக்கியுள்ளார். இங்குச் சிறிது காட்டுதும்.

கழிகின்றதொர்
அழிகின்றவள்;

கடலேபுரை காமத்தெறு நோயால்

எவர்தம்மையும் வலிதே பிடித் தணையும்
இழிகின்றதோ ரியல்பாள்; முகி லினம் வாய்திறந் தெனவே
மொழிகின்றதோர் கடியாள்; அசமுகி என்பதோர் கொடியாள்;

பொறை யில்லவள்; அருளில்லவள்; புகழில்லவள்; சிறுதும்
நிறை யில்லவள்; நாணில்லவள்; நிற்கின்றதோர் அறத்தின்
முறையில்லவள்;
சிறை யில்லவள்;

வடிவில்லவள்; முடிவில்லதோர் கற்பின்
உலகோர்க்கொரு சிறையாமெனத் திரிவாள்;



பொய்யுற்றவள்; களவுற்றவள்; புரையுற்றிடு
சுரையூன் துய்யுற்றவள்; களியுற்றவள்;
சோர்வுற்றவள்; கொலைசெய் கையுற்றவள்;
விழியால் அழல் காலுற்றவள்; பவத்தின்
மெய்யுற்றவள்; படிறுற்றவள்;
முனிவுற்றவள்; மனத்தின். இங்ஙனம் மிகவும்

இழிகுணமெய்தி அழிமதி
யுடையளாயிருந்தும் தங்கை என்று அன்பு
மீக்கூர்ந்த சூரபன்மன் இவள்பால் நண்பு
கொண்டிருந்தான். தான்
எண்ணியபடியெல்லாம் திரிந்துவரும்படி
அண்ணன் இடங்கொடுத்து வருகின்றனே
என்று எண்ணியெண்ணி அவனது
உரிமையை வியந்து உறவுமிக்கு இவளும் மிக
உவந்திருந்தாள். அவள் இந்திராணிமீது மி
கவும் காதலுற்றிருந்தமையால் அவளைக்
கைப்பற்றிவரத் துணிந்து காந்துறையும்
இடத்துட் கடிதிற்புகுந்து மேல்வருவதை
அறியாமல் அவளை இவள் வலிந்திழுத்தாள்.
அவ்வமயம் அங்குக் காவலாயிருந்த
வீரமாகாளர் விரைந்துவந்து
அக்கட்டழகியைத் தொட்ட இக்கெட்டவள்
கையை வெட்டி வீழ்த்தினர். இவள்
அஞ்சி ஓடி வீரமகேந்திரத்தையடைந்து
அண்ணன் அடிகளில் வீழ்ந்து அழுது
புலம்பி அவன்பொருட்டுக்

கெழுதகைமையோடு தான் செய்ததையும்
அகுறல் தனக்கு எய்திய இழவையும்
இழிவையும் எடுத்தியம்பி யேங்கி அலறினாள்.
சூரனும் பெயர்படைத்த அவுணர்கள்தம்
பெருவாழ்வே தொல்லையண்டம் சேரவே புரந்தனை
நின்பரிதி செங்கோல் குடையெங்குஞ் செல்லா
நிற்கும் ஆரும் வானவரவற்றிற் கச்சுறுவர்
பொன்னகரோனுணை போற்றும் வீரமா காளனிடைக்
கண்டிலனுல் வலியர்முனம் மேவுறுவோ. (1)
புரங்குறைத்தும் வலிகுறைத்தும் பொங்கியதொன்
னிலைகுறைத்தும் புரை யுறத, வரங்குறைத்தும்
புகழ்குறைத்தும் மறைமொழுக்கந் தனைக்குறைத் தும்
மலிசீர் தொல்லை, யுரங்குறைத்தும் வானவரை
யேவல்கொண்டோ மென்றிருப்பீர் ஒருவன்
போங்தென், கரங்குறைத்த தறியீர்நும் நாசிகுறைத்
தனன்போலும் காண்மின் காண்மின்.
(2) ஒன்னார்தம் சூழ்ச்சியினுல் ஒருமுனிவன் என்சிறுவ
ருயிர்கொண்டுற்றான் இந்நாளில் அஃதன்றி ஒருவனைக்
கொண்டெனது கையும் இழப்பித்தாரே பின்னுளிவ்
வருத்தமுற நன்றாக புரிந்தனையாற் பிழையீதன்றே

வுறலானன். இந்திரன் முதலாகப் பகைவர்
பலர் நின்று மிகை செய்தபோதும்
நிலைகுலையாது நின்ற அவன் இப்பேதை நட்பா
ல் நிலையழிந்து போனன். அறிவில்லா
அசமுகியால் அழிவில்லா அரசனைத்தும்
அழிந்ததந்தோ என்று அசுரர் எனைவரும்
அலமந்து நொந்தார். அறிவுடையார்
பகைமையினும் ஒரு பேதை நட்பால் வரும
தீமை கோடிபங்கு கொடிதாம் என்பதை
உலகட்கெல்லாம் இவள் உணர்த்தி நின்றாள்.

தெளிவிலார் நட்பிற் பகை நன்று;
சாதல்
விளியா அருநோயின்
நன்றால்—அளிய
இகழ்தலிற் கோறல் இனிதே மற்
றில்லை
புகழ்தலின் வைதலே நன்று.
(நாலடியார்)

'நெறியகன்ற துன்ப நிலையமே நேரும்

அறிவிலிதன் கேண்மை யகல்.

அறிவில்லார் உறவினை அறவே ஒழிக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

817 நாடிநின்றும் சாம்பன் நகைவகையார் நட்பினால்

கோடி தொகுத்தான்
என்னே குமரேசா—பீடில

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்

பத்தடுத்த கோடி யுறும். (எ)

இ—ள்.

குமரேசா! சாம்பன் எதனையும் நன்கு ஆராய்ந்திருந்தும் நீசும் இயல்பினரோடு நட்புக்கொண்டதனால் என் மிகுதுயர் 2264 திருக்குறட் குமரேச வெண்பா.

அடைந்தான் எனின், நகை வகையர் ஆகிய நட்பின் பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் என்க.

இது, வீணே சிரித்துக் களிக்கும் சிறியாரோடு நட்புச் செய்யலாகாதென்கின்றது.

நகை வகையர் = நகுதலைச் செய்து நாள் வீண் கழிக்கும் வகையினர்; அவராவார் "விடரும், தூர்த்தரும், விட்டேற்றாளரும், நடவை மாக்களும், நகையொடு வைகி வட்டுஞ் சூதும் வம்பக் கோட்டியும்" வாய்ந்த துன்பப் பகுதியர் என்க.

பத்து அடுத்த கோடி = பத்தினை முதலில்கொண்ட கோடி; என்றது பத்துக்கோடி என்றவாறு. பத்தாக அடுக்கிய கோடி எனவுமாம். எழுபது கோடியுறும் என முன் உரைத்தபடியே இங்கு இது மிகுதி தோன்ற எடுத்துக்காட்டியதென்க.

மேல், பேதையாது நட்பால் வரும்

தீமையைப் புணர்த்தினர்; இதில், வீணர் உறவால் விளையும் வெம்மையைப் புணர்த்துகின்றார்.

கருதலைச் செய்து பழகிக் பொழுதுபோக்கும் பகுதியான வீணாது நட்பால் வரும் இன்பங்களினும், பகைவரால் வரும் துன்பங்கள் பத்துக்கோடி பங்கு இனிதாம் என்பதாம்.

நகை வகையார், சுவையுரையாடி வினை நகுவித்து அறிவைத் திரித்துப் பழிமிகப் பண்ணி இம்மை மறுமை என்னும் இருமையும் இழப்பித்து என்றும் இடருறச் செய்வர்; பகைவரோ காலங் கருதி நின்று இடம் வாய்த்தபோது மாத்திரம் இயன்றவரை துயருறச் செய்வர்; ஆதலால் எதிர் நின்று தப்பத்தக்க அவரினும் நாளும் உடனிருந்து நகைத்துக் கெடுக்கின்ற இவ் வீணர் மிகக் கொடியராவர் என்க.

பதினாயிரங்கோடி பகைவர்

பகையிருந்தாலும் பொறுத்துக்
கொள் ளலாம்; ஆகனல் அவ்வளவு
கேடுவந்துவிடாது; நகைவகை
யான வினர் ஒருவர் இருவரேயாயினும் பல்
துயரங்களை விளைத்
துப் பாழாக்கி விடுவர் ஆகலால் இவரது
உறவினை அறவே ஒழித்து
விடவேண்டும் என்றவாறு. பத்து அடுத்த
கோடியாகப் பகை
82-ம் அதிகாரம் தீநட்பு.
2265

வரைப் படைக்கெடுக்துக் காட்டி இக்
கொடியர் நட்பின் கொடுமையை அடிகள்
உணர்த்தியிருக்கும் அருமையை
வென் ]ணர்க.

அறிவு திரிந்து வறிதுரை பகர்ந்து
உறுதி போராது பெரிது மாறுகிச்
செய்வினை தவிர்ந்து தீவினை மிகுந்து

நகைப்புற மாடி நகையுளாயாடி

நச்சினாரும் இச்சகம் பேசி

உற்றது கொண்டு ஒழிவுறுகின்ற

கொச்சை மக்களை நட்பினராக

யாதும் கொள்ளலாகா

தென்பது கருத்து. அன்புடையராய்நின்று

நல்ல நெறியுய்த்து என்றும் இன்புறுதற்கு

ஏதுவாய பண்புடையாரையே நண்பராக நட்ப

வேண்டும் என்பது குறிப்பு.

சிரித்துக்களிக்கும் சிற்றினத்தாராகிய

வீணர்களோடு நட்புக்

கொண்டால் விலக்கு தற்கரிய பெருந்தீமை

அதனால் விளைந்து

வருத்தும் என்பது இதில்

உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை

சாம்பன்பால் உணரப்படும்.

கதை.

சாம்பன் என்பவன் கண்ணனுடைய

அருமைத் திருமகன்,

சாம்பவதியிடம் பிறந்தவன். பாம்பொருளை நோக்கி அருந்தவஞ்
செய்து அருமையாக இவனை அவர் அடையப் பெற்றார். இவன்
சிறந்த உடல் நலமுடையவன். அழகில் இவனுக்கு நிகரானவர்
அக்காலத்தில் யாரும் இலர். தத்துவ ஞானியாகிய நாரதமுனி
வரும்கூட இவனது அழகினை நோக்கி வியந்துள்ளார். ஒரு
முறை கண்ணனோடு அவர் கலந்து பேசிக்கொண்டிருந்தகால்
இவனைக் குறித்துச் சாம்பன் மலர்க்கணை வேளிற் செவ்விவாய்ந்
தோன் என்று சிறிது அவ்வியத்தோடு செப்பி நின்றனர். தன்
எழில் நலங்களை நினைந்து தனக்குள்ளேயே இவன் மிகக் களித்தி
ருந்தான். துரியோதனனுடைய அருமைத்

நிருதர்களாகிய இலக்

கணை என்பவளை மணந்து அவளது

இன்பச் செல்வியை நுகர்ந்து

வேறொன்றையுங் கருதாது இறுமாந்து

திரிந்தான். திருவமைந்

திருந்தும் அறிவமைந்தாரை யணுகாமல் மிக

நிமிர்ந்து நின்றான். இயற்கையில் மிக

நல்லவன். நெஞ்சிரக்க முள்ளவன்.

எவரையும் 2266 திருக்குறட்

குமரேச வெண்பா.

எளிதில் நம்பும் இயல்பினன். விருதகமன், வேதன், நந்தனன் நவநீதன் முதலிய நகைவகையாளரோடு கூடி நாளும் உவகையாடி நின்றான். அவர் உறவொன்றும் அறியாராயினும் உயர் மகனாகிய இவனைப் பலவகையாலும் மகிழ்வித்துப் பயன் பெற்று வந்தார். ஒருநாள் மாலையில் அழகிய ஓர் சோலையுட் புகுந்து விளையாடி வருங்கால்

சூல் முதிர்ந்த ஓர் பெண்போல் இவனுக்கு வேடந்தரிப்பித்து அங்கிருந்த கண்ணுவ முனிவரிடஞ்சென்று இந்த அம்மாள் வயிற்றில் என்ன பிள்ளை பிறக்கும் என்று முன் னிறுத்திக் கேட்டார். சிரித்துக் களிக்கும் வீணர்கள் என்று அவர் தெரிந்து சினந்து இருப்புலக்கை பிறக்கும்; அதனால் உங்கள் குலமும் அழியும் என்று அவரை நோக்கி வெறுப்போடு சொன்னார். முனிவர் சொல் வழுவுமா? அவ்வாறே வயாவும் வருத்தமும் இவனை வந்து பிணித்தன. பாவம்! வயிற்றைப் பார்த்து வருந்தி நாணினான். முடிவில் தன் குலத்தைக் கெடுக்கவே ஓர் உலக்கை பிறந்தது. பகைவரையெல்லாம் வென்று மிகு புகழ்கொண்டு உயர் நலமுற்று விளங்கியிருந்த அவ் யாதவகுலம் இவன் கொண்ட கட்பின் கொடுமையால் குலைந்தழிய நேர்ந்தது. பல்கோடி பகைவர்கள் ஒருங்கு திரண்டு செய்தாலும் செய்ய

முடியாக கேட்டினை "நகைத்துத் திரியும் வீணராகிய இத்திய வகையினர் செய்துவிட்டாரே"யென்று எல்லாரும் சேர்ந்து வருந்தினர். அப் புல்லர் நட்பினுல் விளைந்த பொல்லாங்கை நினைந்து இவனுந் தன் உள்ளங் கலங்கினன். மேலுறுவதை யெண்ணி யெல்லாரும் உளைந்து நின்றார். பகைவாது பகைமையால் வருவனவற்றினும் நகைவகையாதுநட்பினுல் வருங் கேடுகள் பத்துக் கோடி. பங்கு கொடியனவாம் என்பதை உலகமகாண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

பகல்போலும் நெஞ்சத்தார் பண்பின்மை
நகையாய நண்பினர் நாரின்மை இன்ன

இன்ன

இகலின் எழுந்தவரோட்டின்ற இன்ன
நயமில் மனத்தவர் நட்பு. (கபிலர்.)

பேணுப்பழியும் பெருந்துயரு
வீண ருறவு விடல்.

மேவிஜையும்

வீணர்களோடு நட்பு
மேவலாகாதென்பது இதனுல் கூறப்பட்டது.

82-ம் அதிகாரம் திரட்பு.
2267

818 வேறாய் உடற்றிநின்ற விச்சனிடம் பின்கபிலர்
கூ றாதே ன் விட்டார்
குமரேசா—ஆறாக
ஒல்லுங் கருமம் உடற்று
பவர்கேண்மை
சொல்லாடார் சோ ர விடல்.
(அ)

இ—ள்.
குமரேசா ! தான்
வேண்டிநின்றதனை விரும்பி முடிக் காமல் வீணே கடத்திவந்த விச்சிக்கோனிடம் பின்பு கபிலர் ஒன் றும் கூறாமல் அவனுறவினை என் ஒழித்துவிட்டா ர் எனின், ஒல் லும் கருமம் உடற்றுபவர் கேண்மை சொல் ஆடார் சோர விடல் என்க.

இஃது ஒல்வது செய்யாருறவினை ஒழிக என்கின்றது.

வேறு ஆய் உடற்றி நின்ற என்றது முடியாது என்று உடனே வாய்திறந்து தெளிவாகச் சொல்லிவிடாமல் உள்ளம் திரிந்து கடத்தி வந்தமை கருதி.

ஒல்லும் கருமம் = முடியும் காரியம். ஒல்லுதல் = முடிதல், இயலுதல். உடற்றுபவர் என்றது இங்கு ஒல்லுவதை ஒல்லாத 1 கக் காட்டி வருத்தமுறக் கடத்தி நிற்பவர் என்க. சொல்லாடார் என்னும் எதிர்மறைப் பலர்பால்முற்று சொல்லாதே என எச்ச மாகி விடல் என்பதனோடு மேவி முடிந்தது.

சோரவிடல் = தளரவிடுக. அல்லீற்று வியங்கோள் உடன் பாட்டி ல் வந்தது. உடனே விடின் தம் கள்ளத்தை உணர்ந்து கொண்டதாகத் தெளிந்து நம்புமாறு சில கூறி அதனை ஒளித்து முடித்து மேலும்

உறவுறுவராகலால் அங்ஙனம் உறுவாறு மெல்ல ஒழிய விடு என்றார்.

ஒல்லாக் கருமமாயின் அவர்மேற் குறை சொல்ல இயலாதாதலால் ஒல்லும் என்றார். உடற்றி நிற்கின்ற அவரது உள்ளக் கள்ளத்தை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மேல், வினைசெயலறியாதவராளா நகைத்துத் திரியும் வீணர்களோடு நட்புச் செய்யலாகாதென்றார்; இதில், உதவிசெய்ய வன்மையிருந்தும் அது செய்யாது நடித்துவரும் நயவஞ்சகரை நணுகலாகாதென்கின்றார்.





தம்மால் முடியும் காரியத்தை விரும்பிமுடிக்காமல் காலங் கடத்தி வருபவரது நட்பினைப் பின்பு யாதும் சொல்லாடாது நின்று மெல்லச்

சோரவிடவேண்டும் என்பதாம்.

உண்மையோடு நின்று உதவி செய்தலாகிய நிலையிலிருந்தே ஒருவனது உள்ளன்பினை புணர்ந்து கொள்ளலாம் ஆதலால் உடற்றுதல் கள்ளஉறவினைக் காண்டற்குக் கருவியாயிற்று. சோரா நன்னட்பு உதவியி னறிப என்றது முதுமொழிக் காஞ்சி.

உற்ற இடத்தில் உதவுதற்குரிய தகுதியிருந்தும் அது செய்யாது வீணே காலங்கடத்திவரும் கள்ள நட்பினர்பால் நல்ல அறிவுடையார் பின்பு யாதும் சொல்லலாகாதென்பார் சொல்லாடார் என்றும், அவ்வஞ்ச உறவினை நாளடைவில் தளரவிட்டு முடிவில் அறவே ஒழித்துவிட வேண்டும் என்பார் சோரவிடல் என்றுங் கூறினார். தம் நண்பன் வேண்டி நின்ற காரியத்தைத் முடித்துத் தரத்தக்க தன்மை

தமக்கு அமைந்திருந்தும் அதனை மனம்வைத்து முடிக்காமல் தம்மால் முடியாததாகப் போக்குக் காட்டி வினை கெடத்தி நடித்து நிற்கும் வஞ்சகரை நண்பாக நயக்கலாகா தென்றவாறு.

எளிதில் தன்னால் முடித்துத் தரத்தக்கதனை அங்ஙனம் முடியாதாகக் காட்டி நடித்தலும், முடித்து வருகின்றேன் என்று கடத்தலும் நேயமில்லாத தீய செயல்களாகுமாதலால் அத்தியர் நட்பு இருத்தலினும் இல்லாதொழிதலே நல்லதாம் என்க.

ஒல்லும் கருமத்தை ஒல்லாதாக உடற்றிவருதல்போல் ஒல்லாததனை ஒல்லும் என்று சொல்லலும் தீமையாம்; ஏனெனின் நம்பினார்க்கு இவை நாசத்தை உண்டாக்குதலான் என்க. இங்ஙனம் நம்பிக்கைமோசஞ் செய்வோரைக்

கொலைஞரினும் கொடியராக அஞ்சி
நீக்கவேண்டும் என்றவாறு.
செய்யாத செய்தும் நாம் என்றலும்
செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண்
டோட்டலும்—மெய்யாக
இன்புறூஉம் பெற்றி
இகழ்ந்தார்க்கும் அந்நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும். என்றது
நாலடி.
82-ம் அதிகாரம் நீநட்பு.
2269)

கருமக்கேடு செய்யும் கள்ள நெஞ்சர்
செய்கை சுகதுக்கங்
களில் தோய்ந்து வருந்தாத துறவிகட்கும்
துன்பந்தரும் என
இதில் உரைத்திருத்தல் காண்க. வஞ்சித்து
நின்று கொஞ்சிப்

பேசி வஞ்சனை காட்டும் விழலரை விட்டு விலகி விடுக; இல்லையா
யின் அளவில்லாத துன்பங்கள் விளையும் என்று இஃது அறிவுறு
த்தி நிற்றலை ஆய்ந்து கொள்க.

இயல்வது கரந்து மயல்வினை செய்யும் வஞ்சமக்களை நண்ப
ராக நம்பி மருவலாகாதென்பது இதன் திரண்ட பொருளாம்.

தன் நண்பன் நயந்து நின்ற காரியத்தை விரும்பி முடிக்கா
மல் கள்ளமாக ஒருவன் கடத்திவருவனுபின் அவன் நட்புப் புல்
லிதாக எள்ளிவிடப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது.

இவ்வுண்மை விச்சிக்கோன்பால் உணரப்படும்.

## கதை.

விச்சிக்கோன் என்பவன் ஒரு குறு நிலமன்னன். செல்வக் கடுங்கோ ஆழியாதன்

என்னும் சோழன் காலத்தில் சிறந்திருந்தவன். இவனது ஆட்சிக்குட்பட்ட நாடு குறுகிய எல்லையினையுடையதாயினும் நீர்வளமும் நிலவளமும் நன்கு அமையப் பெற்றது. விச்சி என்னும் மலைக்குத் தலைவனாதலால் விச்சிக் கோன் என இவன் விளங்கி நின்றான். சிறந்த யானைகளைத் தொகுத்து வைத்து மிகுந்த அன் போடு பாதுகாத்து வந்தான். அவை போராற்றலில் மிகச்சிறந்திருந்தன. திண்மையும் வண்மையும் சேரப்பெற்று எவர்க்கும் இனியனாய் இவன் இசைபெற்றிருந்தான். தானே தன்னைப் புகழ்ந்து சொல்வதும், பிறர் அங்ஙனம் புனைந்து கூறுவதை உவந்து கேட்பதுமான புல்லிய தன்மைகளும் இவனைப் புல்லியிருந்தன. ஆயினும் நல்ல கல்விமான்; புலவர் பெருமானாகிய கபிலர்பால் மிக்க அன்புடையனாய் நண்பு செய் திருந்தான். அவரும் அடிக்கடி வந்து

அறிவுரைகளாடி இவனோடு அளவளாவி
யிருந்தார். இங்ஙனம் இருந்துவருங்கால் அவரை
ஆதரித்துவந்த வள்ளலாகிய பாரி
இறந்துபோனமையால் அவர் மிக வருந்தி
அவனுடைய புதல்வியரிருவரையும் போற்றி
நின்று பருவமெய்தியுள்ள அவ் அருமை
மகளிரை ஒருநாள் 2270
திருக்குறட் குமரேச வெண்பா.

இவனிடம் அழைத்துவந்து காட்டி நீயே
இவரை உவந்து கொண்டு
பாதுகாத்து வருக; அல்லது தக்க
இடத்தில் மணம் புரிந்து தருக என்று அவர்
மனங்குழைந்து வேண்டினார். அழ
கிகளாயினும் தம் அருமைத் தந்தையை
இழந்து அதுபொழுது வறியராயிருக்கும் அம்
மங்கையரை இவன் நன்கு மதியாதிருந்
தான். அவர் விரும்பிநின்றபோதெல்லாம்
செய்வோம் செய்வோம் என்று வீணே

போதுபோக்கி வந்தான். அப்போக்கினை யறிந்து பின்பு யாதும் சொல்லாமல் இவனுறவினை அறவே ஒழித்து அவர் அகன்று போயினர்.

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்கால்

தேற்று ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்

ஆற்றுந் துணையும் பொறுக்க பொறுஅயின்

தூற்றாதே தூரவிடல். என்றபடி பெருந்தன்மையோடு நின்று ஒரு சொல்லும் ஆடாராய்த் தன் தொடர்பினை அவர் சோவிட்டதை யறிந்து இவன் துயர்மிக அடைந்தான். பின்பு இளஞ் சேரலிரும் பொறை என்னும் சேரமன்னன் வந்து போரில் வென்றுகொள்ள இவன் சீரழிந்து நின்றான். ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை சொல்லாடார் சோவிடல்

என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. தம் கருமம் கருதி இவனிடம் வந்து உரையாடியபோது ஒருமுறை அவர் உரைத்துநின்ற பாடல் ஒன்று இதனடியில் வருகின்றது.

பனிவரை நிவந்த பாசிலைப் பலவின்
கனிகவர்ந்து உண்ட கருவிரற் கடுவன்
செம்முக மந்தியொடு சிறந்து சேண் விளங்கி
மழைமிசை யறியா மால்வரை யடுக்கத்துக்
கழைமிசைத் துஞ்சுங் கல்லக வெற்ப,
நிணந்தின்று செருக்கிய நெருப்புத்தலை
நெடுவேல் களங்கொண்டு கனலும் கடுங்கண்
யானை விளங்குமணிக் கொடும் பூண் விச்சிக்
கோவே! இவரே, பூத்தலை அறாஅப்
புனைகொடி முல்லை நாத்தழும் பிருப்பப் பாடா
தாயினும்

82-ம் அதிகாரம் நிரூட்டு.

கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்
யானே, பரிசிலன் மன்னும் அந்தணன் நீயே
வரிசையில் வணக்கும் வாண்மேம் படுநன்
நினக்குயான் கொடுப்பக் கொண்மதி சினப்போர்
அடங்கா மன்னரை அடக்கும்
மடங்கா விளையுள் நாடு கிழவோயே.
(புறம்)

கல்லக வெற்ப, விச்சிக்கோவே! என இவனைப் புகழ்ந்து பாடி, யான் பரிசிலன் அந்தணன் எனத்தன் நிலையினை விளக்கிக் காட்டிக் கருமம் கருதி அவர் நின்ற தன்மையும், மேற்குறித்த வுண்மையும் இதன் கண்ணும் விளங்குதல் காண்க.

நாடி நலந்தீங் கவற்றுள் நலமிக்கார்க்
கூடுக; கூடிற்பிற் குற்றங் கருதற்க;
நாடுங்கால் தோன்று நவைபலவிற்
காலினுடன்
வீடாது மெல்ல விடல்.
(இன்னிசை யிருநூறு.)

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே
விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்
தம
ஆக்கம் கெடுவ துளதெனினும்
அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.
(குமரகுருபரர்.)

ஒல்லும் இடத்துத் தம் செல்வாக்கை
நன்கு செலுத்தி உதவாதார் தீயவராதலால்
அத் தீவினையாளரோடு நட்புச்செய்ய
லாகாதென இஃதுணர்த்திநிற்றல் காண்க.

வாய்வழியச் சொல்லி வறிதொழியும்

வஞ்சகுற

வோய்வுறின் இன்பாகும் உணர்.

ஒல்லும்வகை உதவாத புல்லரோடு நட்புக்கொள்ளலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

819 வள்ளல் விசாலனேன் வஞ்சனைசெய் சாலுவனைக்
கொள்ள அஞ்சி நின்றுன் குமரேசா—தள்ளும்
கனவினும் இன்னது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. (௯)



இ—ள்.

குமரேசா ! நான் சொல்லியபடி செய்யாமல் வஞ்சஞ் சூழ்ந்து நின்ற சாலுவனை விசாலன் என் அஞ்சி நீங்கினுன் எனின், வினை வேறு சொல்வேறு பட்டார் தொடர்பு

கனவினும் இன்னாது என்க.

இது, நயவஞ்சகரோடு நட்புச்செய்யலாகாதென்கின்றது.

வள்ளால் என்றது தன்னை உள்ளிவந்தவரெவர்க்கும் இல்லையென்னாமல் உவந்து வழங்கிவந்தமை கருதி.

வினை = செய்கை. தொடர்பு = நட்பு. இன்னாது = துன்பந் தருவது. பட்டார் தொடர்பு இன்னாது என்றதனால் அங்ஙனம படாதார் உறவு கனவினும் இனியதாம் என்பதாயிற்று.

கனவு என்பது உறக்கம் விழிப்பு என்னும் இருவகை அமைவுகட்கும் அயலாயுள்ளதோர் உயிர்நிலை. உம்மை இழிவு சிறப்பு. நனவினுமேயன்றிக் கனவினும் என்று கொள்ளின் இறந்தது தழீஇய எச்சவும்மையாம். மன்னோ என்றது வியப்பும், அச்சமும் விளங்க நின்றது. நனவு = விழிப்பு.

மேல், இயல்வது செய்யாது எமாற்றி நிற்பாரது உறவினை ஒழித்துவிடவேண்டும் என்று உணர்த்தினர்; இதில், வாக்கும் காயமும் மாறுபட்டிருக்கும் வஞ்சர் நட்பினை அஞ்சவேண்டும் என்று உணர்த்துகின்றார்.

செயலும் சொல்லும் ஒவ்வாது வேறுவேறாய் மாறுபட்டிருப் பாரது நட்பு கனவிலுங்கூடத் துன்பமாம் என்பதாம்.

கனவினும் என்றது இன்னாமையின் கொடுமை விளங்க என்க. மனவுணர்ச்சி தெளிவாய் நெடிது நிலைபெறாத கனவுக் காட்சியிலேயும் இன்னாது என்றதனால் நனவில் அதன் கொடிய நிலைமை நன்கு புலனாம்.

வினைவாக்குகளின் வேறுபாடு கூறியதனால் அவற்றிற்கு இனமாயுள்ள மனம் மாறுபட்டதும் உணரப்படும். இவ்வாறு படுகின்ற படிறரை நண்பாக நம்பினால் என்றும் துன்பமே பட
நேருமாதலால் அவர் தொடர்பினை அறவே

82-ம் அதிகாரம் தீநட்பு.

2273

நலமாம் என்க. "உள் ஒன்றுவைத்துப் புறம் ஒன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்" என்றதும் ஈண்டு உள்ளத்தக்கது.

நினைத்தல் சொல்லல் செய்தல் என்னும் வினைகளுக்கு நிலைக்
களனாயுள்ள மனம வாக்கு காயங்கள் மாறுபடாமல் அமைந்து
தாம் சொல்லியபடியே செய்கையிலும் காட்டி நேர்மையோடு நிற்
றலே மேன்மக்கள் இயல்பாம்; அங்ஙனமின்றிச் சொல்வது ஒன்று செய்வது
வேறாய் மாறுபடுவது கீழ்மக்கள் தன்மையாம்

என்க.

மனம்வேறு சொல்வேறு மன்னு
தொழில் வேறு
வினைவேறு பட்டவர்பால்
மேவும்—அனமே
மனம்ஒன்று சொல்லொன்று
வான்பொருளும் ஒன்றே
கனமொன்று மேலவர்தம் கண்.
என்றதுட

ஈண்டுக் காணத்தக்கது. அவ்வினை
வேறுபட்ட வெய்பவரை விட்
டொழிக்கவேண்டும் என இது விளக்கிற்றல்
காண்க.

சொல்லும் செயலும ஒவ்வாது
நிலைதிரிந்து நிற்கும் [illegible]ல்லரோடு
நட்புகொண்டால் அதனுல் அல்லலும்
பழியுமே விளையுமாதலால் அவரை உள்ளலுர்
நீதாம் என்று உணர்ந்து ஒழித்து
விடவேண்டும் என்பார் அவர் தொடர்பு
கனவிலும் இன்னது என

உணர்த்தியருளினர். அகத்தில் அன்பில்லாமல நண்பர் போல் வஞ்சித்து நிற்கும் தீயரை முகத்தில்கூட விழிக்கலாகா தென்பது கருத்து.

செயல் மா றுபடுகின்ற வஞ்சர் நட்புத் துன்பத்திற்கே ஏது வாகும் ஆதலால் அதனை அறவே ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசாலன்பால் உணரப் படும்.

## கதை.

விசாலன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆ ண்டுகட்கு முன்னர்க் காசியிலிருந்து அரசு புரிந்தவன். உயர்ந்த மன்னர் பலரும் வியந்து புகழத்தக்க சிறந்த குணங்கள் வாய்ந்தவன். உள்ளங் கனிந்து எவர்க்கும் விரைந்துதவும் வள்ளன்மையுள்ள



வெண்பா.

வன்; இவன் மதிநலமிக் கவனு யிருந்தும் எவரையும் எளிதில் நம்பும் இயல்பின னு யிருந்தான். இவன்பா ல் சாலுவன் என்னும் குறுநில மன்னன் சால அன்புடையவனுய்ச் சார்ந்து நண்பு செய்து வந்தான். அவன் அரசர் வரிசையோடு ஒருவகையில் அமர்ந் திருந்தவ னுயினும் அமைதியும் நேர்மையும் அமையப் பெருதவன். சமயங்கண்டு கிலேதிரிந்தொழுகும் புலேமிகு தறுகண்ணன். எவர் எவ்வாருயினும் தன் காரியத்தில் கண்ணும் கருத்தும் உடையவன். நன்மையே கண்டொழுகும் இவன் அவ் வன்மையாளனே உண்மை யான நண்பனுக நம்பியிருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் தன் அருமைத் திருமக ளாகிய அம்பை என்பவளே அவன் விழை ந்து வேண்டிக்கொண்டபடி மணஞ்செய்து தருவதாக இவன் இசைந்திருந்தான்.

அவள் மிக்க எழிலோடு விழுமிய குணமும் மேவப்பெற்றவள். "வம்பை மோதுமுலை வம்பை வீசுகுழல்" "வம்பை மன்னும் எழில் வரி கொள்கூர் அம்பை" எனக் கவிகள் புகழ்ந்து பாடும்படி அவள் விளங்கியிருந்தாள். அவளுடன் பிறந்த இருவரை அத்தினபுரத்து மன்னன் மணந்துகொண்டு போனமையால் தான் கருதினின்றபடியே அவள் அரச செல்வ முழுவதையும் கைக்கொள்ள முடியாதென்று எண்ணி அவளை உவந்துகொள்ளாது வேறொருத்தியை மணந்துகொண்டான். அவள் நிலை திரியாத குலமகளாதலால் முதலில் ஒருவனைக் கணவனாகக் குறித்துவிட்டுப் பின்பு வேறொருவனைக் கருதுவது தகுதியன்றென உறுதி செய்து இறுதிவரையும் மணம்புரியாது மறுகியிருந்தாள். அதனால் இவன் மிகவருந்தினான். முன்பு அன்புரைகள் பலகூறித் தன்பால் நண்புகொண்டிருந்ததனை நினைந்து அவனை

இவன் காடி அழைத்தான். அவன் யாதும் இசையாமல் கொடுமதி யாளனாய்க் கோடியிருந்தான். அவ்வளவிலமையாமல் தன் தளர்வுநோக்கி இவனுடன் பகைமையுற்றிருந்த சிலரோடுகூடி மிகைவினை செய் தான். செயலும் சொல்லும் மாறுபட்ட அவனது தீய இயல் பினை எண்ணுந்தோறும் இவன் சிந்தைமிகநொந்தான். கனவிலுங் கூட அக்கொடியவன் செய்கைதோன்றிக் கலக்கச்செய்தது. வினை வேறு சொல் வேறுபட்டார் தொடர்பு கனவினும் இன்னாது என்னும் உண்மையை உண்மையாக இவன் அநுபவித்துணர்ந்தான்.

82-ம் அதிகாரம் தீநட்பு.

2275

> உடம்பா டிலாத மனைவிதோள் இன்னா;
> இடனில் சிறியாரோடு யாத்த நண்பு

இன்னா ;

இடங்கழியாளர் தொடர்பு இன்னா;

இன்னா

கடனுடையார் காணப் புகல்.

(கபிலர்.)

கடன்கொண்டான் நெஞ்சமும், கருத் தொவ்வா மனைவியும், உள்ளன்போடு உடம்படாத புல்லிய நட்பும் உயிர்கட்குப் பெருந் துன்பங்களாம என இஃதுணர்த்தி நிற்றல்காண்க.

உள்ளநல மில்லா ருறவு கனவின்கண்
உள்ளினுந் தீதாம் ஒழி.

சொல்லும் செயலும் ஒவ்வாத புல்லரோடு உறவுகொள்ளலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

820 நேசித்துப் பின்பழித்த நீமகனை ஆமகனேன்

கூசி அகன்றான் குமரேசா—மூசி
எனைத்துங் குறுகுதல் ஓம்பல்
மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.
(ம)

இ—ள்.

குமரேசா! தனியே யிருக்கும்பொழுது முன்பு அன்பு செய்து புகழ்ந்து பேசிப் பின்பு பலர் காணப் பழித்த நீ மகன் என்பவனை அஞ்சி ஆமகன் ஏன் அகன்று போயினான் எனின், மனைக்கெழீஇ மன்றில் பழிப்பார் தொடர்பு, எனைத்தும் குறுகுதல் ஓம்பல் என்க.

இது, நிலைமாறிப் பேசும் புலைமக்கள் உறவினைப் போக்கவேண்டும் என்கின்றது.

நேசித்துப் பின் பழித்த என்றது முன்பு நண்பனாய்ப் பழகி யிருந்தும் பலர் இரண்டபொழுது பழித்துரைத்தமை கருதி.

எனைத்தும் = எவ்வளவாயினும்;

சிறிதேனும் என்றவாறு.

குறுகுதல் ஓம்பல் = குறுகுதலைச் செய்யா தொழிக; நெருங்காமல் தன்னைப் பாதுகாத்துக்கொள்க என்றவாறு. அல் ஈற்று வியங்கோள் ஒழிதற் பொருளில் வந்தது.



வெண்பா.

மனைக்கெழீஇ = மனையின்கண் நன்பாய்ப் பொருந்தியிருந்து.

மன்று—அவை, இது பலர் கூடியிருக்கும் இடம் ஆதலால் தனியே யிருக்கும் மனையோடு எதிர்தோன்றவைத்தார். தனியே வீட்டிலிருக்கும்பொழுது உறவாய் நெருங்கி உவந்து உரையாடலும், பலரோடு சபையிலிருக்கும் பொழுது பெருமிதம் தோன்ற இகழ்ந்து பேசலும் [illegible]ல்லர்

செயலாகுமாதலால் அவரை எள்ளளவும் புல்லலாகாதென்பதை எனைத்தும் என்பதனால் உணர்த்தியருளினர்.

மேல், செயல் மாறுபடுகின்ற தீயரோடு நட்புச் செய்யலாகாதென்றார்; இதில், சொல் மாறிப் பேசும் புல்லமக்களோடு நட்புப் பொருந்தலாகாதென்கின்றார்.

மனையகத்திருந்த பொழுது உவந்து உறவாடி மன்றின்கட் பழிக்கும் வஞ்சரது நட்பினைச் சிறிதும் அணுகாவண்ணம் குறிக்கொண்டு காத்து அறவே ஒழிக்கவேண்டும் என்பதாம்.

உள்ளொன்று வைத்துப் புறம்பு ஒன்று பேசும் கள்ள நெஞ்சர்போல், வீட்டில் ஒன்று சொல்லி வெளியில் வேறு கூறும் பொல்லாத மக்களும் மிகத் தீயாராவராதலால் அவரைச் சிறிதும் சேரலாகாதென்ற வாறு.

வஞ்ச நெஞ்சினரைக் கண்டால் நஞ்சு தீ பாம்புகளைக் கண்டு நடுங்கி நீங்குவதுபோல்

அஞ்சி அகன்றுபோக வேண்டுமேயன்றி நண்பாக நம்பி அவரை யாண்டும், யாதும் நணுகலாகாதென்பார் எனைத்தும் குறுகுதல் ஓம்பல் என்றார்.

சில புல்லர்கள் தனியே யிருக்குங்கால் வியந்து புகழ்ந்து இனிதாகக் குழைந்து பேசுவர்; தான் இல்லாத பொழுதும், பலர் கூடியவிடத்தும் தம் பாடுதோன்ற உறவாய் நின்றவனை இகழ்ந்து கூறுவர்; தமக்கோர் உயர்வுண்டாமென்று கருதிப் புன்மையோடு இங்ஙனம் மாறுபட்டுக் கூறுகின்ற அக் கேடு கெட்ட மக்களோடு சிறிதும் உறவுகொள்ளலாகாது; கொள்ளின் கொள்ளித் தீயைக்கொண்டு தலையைச் சொரிவதுபோல் எப்பொழுதும் கொடுந் துன்பமே விளையும் என்க.

82-ம் அதிகாரம் திரட்டு.

2277

சான்றவர் கேண்மை தலைப்படின்

அஞ்ஞான்றே

ஆன்ற பெருமை அளிக்கும் உயிர்த் துணையாம்

வான்தரினும் தீயார் தம் கேண்மை மதியற்க

தோன்றும் பின் எண்ணில் துயர்.

என்றதுங்காண்க.

இற ககை இன்பம் வருவதாயினும் தியரை நண்பாகத் தீண்ட லாகா தென்ற இதனால் அவரது தீமையும், நோய்மையும் தெளியலாகும்.

வெவ்வாய் நிரயத்து வீழ்க்துமால் கீழோர் நண்

பெவ்வகை யானும் விடல்; பகையும் எய்தற்க;

செவ்வியோர் தம் பகை தீ நய்பிற் றீரவே

எவ்வகையும் தீயார் இகல். என்ப தும் ஈண்டெண்ணற் குரி யது. தூயவரைத்

தமாக்கொள்ளவேண்டுமேயன்றித் தீயவரோடு உறவு சிறிதும் கொள்ளலாகாதென இவை உணர்த்தி நிற்றல் காண்க.

தனியேயிருக்கும்போதெல்லாம் அன்புமிக்க நண்பர்போல இன்புரையாடி அமர்ந்திருந்தவரேனும் இடர்வந்தபோது பலர் காண மன்றில் பழித்துரைக்கும் புல்லரைப் பின்பு என்றும புல்லாது ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீமகன்பால் உணரப்படும்.

## கதை.

நீமகன் என்பவன் பாண்டிநாட்டிலே வயனங்கோடு என்னும் நகரிலிருந்த ஓர் மறையவர் மரபினன். செல்வத்தோடு சிறிது கல்வியுமுடையவன். நல்ல வல்வாயன். அறிவுடையவர்கள் மதியாராயினும் கல்லா மக்களெல்லாரும் புகழ்ந்துகொள்ளும் படி புனைந்து பேசுவதில் இவன் மிகுந்த வல்லவன்.

எங்கும் தன் னயமே கருதிநிற்கும் புன்மையாளன். ஏதேனும் காரியங்கருதிப் பொது நிலையங்களில் யாவர் கூடின் அங்கு இவன் புகுந்து சங் கைகள் பலசெய்து தனக்கு ஓர் உறுதியைச் சாதித்துக்கொள் வான். கொஞ்சம் தற்புகழ்ச்சியுடையவன். தான் எவர்க்கும் மிக உபகாரியாயிருப்பதுபோல் தன் சொல்லிலேயே பிறர் க்குத் தோன்றச் செய்வான். உண்மையில் தீய நெஞ்சினன். இவன், 2278 திருக்குறட் குமரேச வெண்பா.

அவ்வூரில் பூதி என்னும் வேதியன் வீட்டில் வளர்ந்துவந்த அபுத் திரன்பால் மிக நண்பு செய்திருந்தான். மன்னுயிர்க்கு இரங்கும் தண்ணளியாளனாய அப்புண்ணியனோடு நண்பாய் இவன் நண்ணி வருங்கால் வேள்வியில்

கொலைசெய்தல் தீதென்று அவன் உரைத்
துநிமித்தம் வேதியர்சிலர் கூடியிருந்து
ஒருநாள் அவனை வெறுத்துரைத்தார். அவனது
குணநலங்களையெல்லாம் நன்கு தெரிந்து நாளும்
உடனிருந்து பழகிப் புகழ்ந்து போற்றிவந்த
இவனும் அன்று அவர்களுடன் சேர்ந்து
மிக இகழ்ந்து தூற்றினான். "இவன் தாய் வா
ரணாசியிலிருந்த ஆரணஉவாத்தி என்னும்
வேதிய னுடைய மனைவி; சாலி என்னும்
பெயரினையுடையவள்; தன் கண வனிருப்பவும்
காம மிகுதியால் நெறிகடந்து
ஒழுகினமையால் அவளை அவன் நீக்கிவிட்டான்.
அதனால் அவள் போக்கொன்று மின்றி மிக
வருந்தித் தென் திசையடைந்து கன்னி
யாகுமரியில் தீர்த்தமாடி மீண்டுவருங் கால்
இடையேயிருந்த ஓர் இடையர்
சேரியையணுகிப்
பிள்ளையைப்பெற்றுத் தள்ளிவிட்டுப் போனாள்;

அக்கள்ள மகனே இவன் " என்று அம்மன்றில் உள்ளவரெல்லாரும் கேட்க இவன் எள்ளி மொழிந்தான்; தம்முடன் சேர்க்காமல் அவனைத் தள்ளிவிடவேண்டுமென்று மேலும் இவன் துள்ளி நின்றான். இதுவரையும் ஒன்றும் சொல்லாமல் உடன் பழகியிருந்து இப்பொழுது இப்படிச் சொல்லுகின்றாயே! உனக்கு இது எப்படித் தெரியும் என்று அங்கொருவன் எதிர்த்துக் கேட்டான். தான் சொல்லலாகாதென்று இதுவரை பொறுத்திருந்ததாகவும், அவன் தாயே தனக்குச் சொன்னதாகவும் இவன் வாய் திறந்துரைத்தான். இவன் உறுதிதோன்ற அன்று உரைத்த உண்மையை இதனடியில் வரும் மணிமேகலையிலும் இனிது காணலாம்.

> "தமரிற் றீர்ந்த சாலிதன் போள் தனை
> யாதனின் னூர்! ஈங்கென் வரவென

மாமறை யாட்டி வருதிறம் உரைக்கும்
வாா ஞெசியோர் மாமறை முதல்வன்
ஆரண உவாத்தி அருப்பெறன் மனைவி
யான்;
பார்ப்பார்க்கு ஒவ்வாப் பண்பின் ஒழுகிக்

82-ம் அதிகாரம் திரட்டு.

2279

காப்புக் கடைகழிந்து கணவனை
இழந்தேன்;
எறிபய முடைமையின் இரியல் மாக்
களொடு
தெற்கட் குமரி ஆடிய வருவேன்,
பொற்றேர்ச் செழியன் கொற்கையம்
பேரூர்க்
காவதங் கடந்து கோவலர் இருக்கையின்
ஈன்ற குழவிக்கு இரங்கே னாகித்
தோன்றாத் துடலையின் இட்டனன்

போர்க்கேன்

செல்கதி யுண்டோ நீவினை யேற்கென்

றல்லலுற்றழுத அவள் மகன் ஈங்கு

இவன்

சொல்லுதல் தேற்றேன் சொற்பயம்

இன்மையிற்

புல்லல் ஓம்பன்மின் புலைமகன் இவன்"

என இப்புலைமகன் சொல்லினன்.

இக்கொலைமொழியைக் கேட்டவுடனே அவன்

குலைநடுக்கங்கொண்டான். நாளும்

நன்பாய் நன்கு தழுவியிருந்து மன்றில் வந்து

இங்ஙனம் அன்று பழித்துநின்ற இவனைப்

பலரும் இழித்து வைதார். இப்பொல்லாப்

புல்லியனைச்சிறிதும் பொருந்தலாகாதென்று

துணிந்து அவ்வூரிலுங் கூட அவன்

நில்லாதகன்றான். பிறரென்று தெளிந்து

வைதும் பின்பு இவனைச்சோதிகழ்ந்தார்.

மனைக கெழீஇ மன்றில் பழிப்பார்

தொடர்பினை எனைத்துங் குறுகலாதென்பதை

உலகப் காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

இலங்குநீர்த் தண்சேர்ப்ப இன்று செயினும்
கலந்து பழிகாணார் சான்றோர் — கலந்தபின்
தீமை யெடுத்துரைக்கும் திண்ணறி வில்லாதார்
தாமும் அவரிற் கடை. (நாலடியார்.)

தலைமேல் அரதனமே தாங்கினும் வாயின்
நிலைகடுவாற் பாம்பஞ்சி நீங்குப யாரும்
கலைபலதேர் நுண்ணறிவ னேனும் கடுஞ்சொல்
சொலுமாயிற் கொள்ளார் தொடர்பு. (இன்னிசை).

புல்லிப்பின் எள்ளும் புலைமக்கள் புன்கேண்மை
கொல்லும் விடமே கொளல்.

வாய்மாறித் தூற்றும் வஞ்சருறவினை அஞ்சி நீக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

பண்பிலார் நட்பு என்றும் துன்பமே பயக்கும். தன்னயம் பார்ப்பாரோடு நட்புச் சாரலாகாது. அவரைக் கள்வர் வேசியர் போல் கருதித் தள்ளிவிடவேண்டும். சமயத்தில் கைவிட்டுப் போகும் வஞ்சநெஞ்சரை நண்பராக நம்பலாகாது. சிறியாரோடு உறவு சிந்தை செய்யலாகாது. அறிவில்லார் நட்பு அல்லலையே விளைக்குமாதலால் அதனைக் கொள்ளலாகாது. சிரித்துக் கழிக்கும் வீணர் உறவினை வெறுத்து நீக்கவேண்டும். இயல்வது செய்யாதாரை நண்பராக எண்ணலாகாது. உள்ளன்பில்லாதாரை நண்பராக உள்ளினும் துன்பமாம். கண்டுபுகழ்ந்து காணாது பழிக்கும் வீணமக்கள் நட்பினை விட்டொழிக்கவேண்டும்.

---

# 83-ம் அதிகாரம்

## கூடாநட்பு.

அஃதாவது அகத்திற் கூடாதிருந்தே புறத்தில் வஞ்சமாகக் கூடியொழுகுவார் நட்பின் கொடுமை. இயற்கையாகவே குணக்கேடான தீயவர்களோடு நட்புச்செய்யலாகாதென்று மேலே அதிகாரத்தில் உரைத்தார்; இதில், உளத்தில் பகைசெய்துகொண்டே வெளியே நகைசெய்து நணுகுவாரை நட்பாக நண்ணலாகா தென்று உணர்த்துகின்றார் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

821 வல்லதார் நட்பாகி வந்தார்
இடங்கண்டு

கொல்ல நின்றார் என்னே குமரேசா—நல்லதொரு
சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(க)

இ—ள்.

குமரேசா! நல்ல
நட்பினர்போல்நின்ற வல்லதரர் என்
பவர், இடம் கண்டபோது என்
எறிந்துகொல்லவந்தார் எனின், நேரா நிரந்தவர்
நட்பு, சீர் இடம் காணின் எறிதற்குப்
பட்டடை

என்க.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.
2281

இடங்கண்டு கொல்ல நின்றார் என்றது
இவ் எல்லை தப்பினால் இனி நல்ல இடம்
இல்லையென்றெண்ணி விரைந்து கொன்று
பொருளைக் கவர்ந்து கொள்ளத் துணிந்தமை

கருத்து.

இது, கூடா நட்பின் கொடுந்தீமை கூறுகின்றது.

சீர் இடம் = சீர்மையான இடம்; அஃதாவது தான் கருதியதை முடித்தற்குத் தகுதியான இடம் என்க.

நேரா = இசைந்து கூடாதிருந்தே. எதிர்மறை வினையெச்சம் ஈறுகெட்டு நின்றது. நேர்தல் = இசைதல், உடன்படல்.

நிரந்தவர் = கூடியொழுகுபவர். நிரத்தல் = கலத்தல், கூடல். "நிழலவிர் கதிர்மதி நிரந்து நின்றுழிக், திலகத் திருமுகம் செவ்வன் திருத்தி" எனப் பெருங்கதையிலும் "நிரந்து கன்னலூர் நெய்யும நீக்கப் பெய்து" எனச் சிந்தாமணியிலும் இது நிரவுணர்த்துதல் காண்க.

பட்டடை என்பது பொன் இரும்பு முதலியவற்றை வைத்து அடித்துப் பணிசெய்வதற்கும், வெட்டுதற்கும்

உரிமையாக அமைந்துள்ளதொரு கருவி. பெரும்பாலும் இஃது இருப்பாலமைந் திருக்கும். படுதற்கு அடையாயிருத்தலால் பட்டடை என்று பெயராயிற்று.

முதலில் ஆதாவுபோல் அமைந்திருந்து முடிவில் அடியோடு அழிக்கும் இயல்பினதாதலால் கூடா நட்பினைப் பட்டடையாகக் குறித்துக் காட்டி இங்கு உணர்த்தியருளினர்.

அகத்திற் கூடாதிருந்தே வஞ்சகமாகப் புறத்திற்கூடியொழு குவார் நட்பு, வாய்க்கும் இடங்கண்டால் அமைந்த பட்டடையாம் என்பதாம்.

அறும்படி எறிதற்கு

உள்ளம் ஒட்டாதிருந்தும் கெட்ட மக்கள் இனியர்போல் ஒட்டி நின்று பின்பு கேடு விளைப்பாதலால் அவரைக் கேண்மை யாளராக

நம்பிக்கொள்ளலாகாதென்பர் அவர் நட்பு, பட்டடை என்று சுட்டியருளினர்.

பொற்கொல்லரும், கொல்லரும் பொன்னையும் இரும்பையும் வைத்து வெட்டிரும்பால் வெட்டுதற்கு ஆதாரமாயுள்ள பட்டடை, அவர் ஓங்கி வெட்டும்வரையும் தாங்குவதுபோலிருந்து அவ்



வெட்டு வீழுங்கால் துண்டாய் அவை பட்டு வீழுமாறு கிட்டி நிற்குமாதலால் அது, தம்மை அடுத்தவர்க்கு உதவியாளர்போல் தழுவிநின்று பின்பு அவர் ஒழியுமாறு அழிவு செய்து நிற்கும் இழிமக்களுக்கு ஒப்பாக வந்தது. இது தொழிலுவமையாம்.

அகத்தே கறுவுகொண்டிருந்தும் புறத்தே உறவுகொண்டாடிப் பாண்டவர்களை அடியோடு அழித்தற்கு வாய்க்கும் இடம் நோக்கி

நின்ற புரோசனன்போன்ற கொடிய தீயரும் இனிய நண் பாக நெருங்கி வருவர்; நம்பினால் நாசமுற நேருமாதலால் அந்த வைய வஞ்சநெஞ்சரைக் கொஞ்சமும் நட்பாகக் கூடலாகாதென்க.

கண்ணுள் மணியேபோல் காதலால் நட்டாரும்
எண்ணுந் துணையிற் பிறராகி நிற்பரால்
எண்ணி யுயிர்கொள்வான் என்று திரியினும்
உண்ணுந் துணைக் காக்கும் கூற்று (பழமொழி.)

காலம்வரும்வரையும் உடனுறைந்திருந்து அது வந்தவுடனே தன்னை நம்பியிருந்தவனைக் கொன்று தீர்க்கும் கொடியரைக் கூற்றுவனோடு ஒப்பவைத்து இதில் குறித்திருத்தல் காண்க.

உண்மையோடு பொருந்தாமல் காரியங்கருதிக் கள்ளஞ் செய்து நிற்பாரோடு

நட்புக் கொள்ளின் பின்பு அவர் சொல்லுக்
கிறந்தாய் அல்லலேல விளைப்பார் என்பது
இதில் உணர்த்தப்பெற் றது. இவ்வுண்மை
வல்லன் தான் என்னும் இவ்விருவர்பாலும் உ
ணரப்பெறும்.

## கதை.

வல்லன்தான் என்னும் இவர் இற்றைக்கு
ஆயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர்
மதுரையம்பதியி லிருந்தவர். மறவர் மர
பினர் . அறிவு நூல்களைச் சிறிதும்
கல்லாதவர்; ஆயினும் உலக நிலைகளைப்
பெரிதும் அறிந்தவர். ஒருவரை யொருவர்
பிரியாமல் யாண்டும் மிக
உரிமையுற்றிருந்தமையால் வல்லதார் என
இருவரை யும் ஒரு தொகையாக ஒற்றுமை
தோன்ற யாவரும் அழைத்து வந்தனர்.
இவர் மிகவும் வஞ்ச நெஞ்சினர். தம் காரியம்
கருதி எவரையும் தம் வசஞ் செய்யும்

இருந்து வருங்கால் அந் நகரில் மரகதம், கமலம் என்னும் மங்கையார் இருவர் விளங்கி யிருந்தனர். அவ்விருவரும் மாணிக்கவல்லி என்னும் ஓர் கணிகையின் புதல்வியர். தம் குலத்தியற்கையை அறவே ஒழித்து, அறிவிலும் ஒழுக்கத்திலும் அமர்ந்து விளங்கி னர். பதிவிரதைகளான குலமகளி ரெல்லாரும் புனித மிக்க அவரது நிலைமையைப் புகழ்ந்து போற்ற அவர் உயர்ந்து நின்றனர். கற்றவர்களையும் சிவனடியார்களையும் கண்டால் மிகுந்த வணக்கத்தோடு பணிந்து பசரித்துச் சிறந்த தவவொழுக்கமுடையாராய் அவர் திகழ்ந்தி ருந்தனர். அவ் வஞ்சியர் இயல்பினை யறிந்த இவ் வஞ்சகர் தாமும் மிகச்

சீலமுடையார்போல் நடித்து அடிக்கடி
சென்று அறிவுரைகளாடி அவர்பால்
அன்புசெய்து வந்தார். வாதும் சூதும் யாதும்
அறியாத அப் பேதையர் இத் தீதுடையா
ரியல்பினைத் தெளிந்து கொள்ளாமல் நல்ல
நண்பரென்றே மிக நம்பி யிருந்தனர். நாள் பல
கழிந்தன. உள்ளத்தே பகைமையோடு
கள்ளமிக்கிருந்தும் நல்ல நட்பினர்போ
லமர்ந்து அவர் செல்வத்தைக் கவர்ந்துகொண்டு
போதற்குரிய காலங் கருதி நின்ற இவர்,
திருக்காளத்தி சென்று அங்கு அ
நருருவாயமர்ந் திருக்கும்
பரம்பொருளைக்கண்டு பணிந்து போற்றிவர
இயல் பாகவே விரும்பியிருந்த அவரை மிக்க
விநயத்தோடு புகழ்ந்துரை யாடி ஒருநாள்
அழைத்துச் சென்றார். சிறந்த
அணிகலன்களையும் செல்வப் பொருளையும்
உடன் கொண்டு சென்ற அவரை இடையே

தமக்கோர் உறுதியான இடங்கண்டபோது இக் கொடியவர் கொல்லத் துணிந்தார். அவ் வமயம் காளத்தியப்பர் ஓர் அடியவர்போல்வந்து அவரை ஆதரித்தருளினர். இத்தீயவஞ் சகர் அஞ்சி அகன்று போயினர். தமக்கு நல்லதுணைபோலமைந் திருந்து முடிவில் தம்மைக் கொல்லத் துணிந்த இப் புல்லர் நட் பினை நினைந்து அவர் எள்ளி இரங்கினர். நோரா நிரந்தவர் நட்பு, சிறிடம் காணின் எறிதற்குப் பட்டடையாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. இவரது இயல்பினைக் குறித்துச் சீகாளத்திப் புராணத்தில் வேலைய சுவாமிகள் விரிவாக விளக்கி யுள்ளார். அடியில் வருவதில் சிறிது காணலாம்.





வெண்பா.

நான்மறை பாவு மீசன் நற்றவ வேடம் புக்குப்
பால்மறை விடமும், இந்தியபழமறை
புழுவுஞ், செய்ய வன்மறை தூண்டிற்
பொனனும், விலங்கினம் உயிர் செகுப்பான்
கான்மறை மறவரும், போற் கள்வர்தாம்
மறைந்து சென்று. (க) "இனிநகர் குறுகிற்று;
அப்பால் இலை நமக்கு இடணிக் காட்டில்
கனிஅதர் இடை இம மாதர் மெய்யெலாம்
உயிர் செகுத்துப் புனையிழை கவர்தும்" என்று
பொதிந்து முன் வைத்தபொல்லா நினைவினை
வெளிப்படுத்து நின்றனர் தொடர்ந்த கள்வர்.
(உ) கொடியவர் நிலைகண்டு உள்ளங்
குலைகுலைந்து இளையாள், நம்மை முடி
வுசெய்வதனுக்கு இன்னோர் முயன்றனர்
என்ன; மூத்தாள், கடிகமழ் மலர்த்தண்
சோலைக் காளத்தி யண்ணல் காப்பன்
விடுபவன் அல்லன்; எங்காய்! வெருவல்நீ
வெருவல் என்றாள்.(ந) அரவின்வாய்த்
தேரைதன்னை அகற்றிநின் றளிப்பான்

போலக் காவரி னின்று நீக்கிக் கன்னியர்
தம்மைக் காக்கத் திருவுளங்கொண்டு மிக்க
தென்கயிலாயத் தெம்மான் விடைவொடு
மலர்கொய் தொண்டர் வேடமுற்
றடைந்தானன்றே. கன்னியர் பொருள்
விழைந்த கள்ளவேடத்தர், அந்தக் கன்னியர்
தமைவிழைந்த கள்ளவேடத்தற் கண்டு
கன்னியர் தம்மைவிட்டுக் கதுமென இரிந்து
போனார் கன்னியர் அருகுவந்தான் கறைமிட
றொளித்து நின்றான். (ரு)

கோதிருந்தே இக் கள்ள
வுள்ளத்தர் நிரந்து கட்புக் கொண்டதும்,
பாலில் மறைந்த விடமும், பழத்தில் காந்த
புழுவும், தூண்டிலில் ஒடுங்கிய இரையும்போல
வஞ்சமாக இவர் ஈண்டி வந்ததும், சீரிடம்
கண்டபோது தம்மை நம்பியிருந்தவரைக்
கொல்லத்துணிந்ததும்,
பட்டடைபோலமைந்து முன்பு இப்பட்டி
மக்கள் நின்றதும், இதன் கண்ணும்

விளங்குதல் காண்க.

வெள்ளங் கரந்த விடம்போல் உயிர் கொல்லும்
உள்ளங் கரந்த உறவு.

உள்ளம் பகையாயுள்ளவரை உறவாக கம்டலாகாதென்பது இதனுல் கூறப்பட்டது.

---

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2285

822 மாறுத தேவியும் மாறினளென் விப்பிரனைக்
கூறுக விட்டுக் குமரேசா—தேறும்
இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(உ)

இ—ள்.

குமரேசா ! உறவினர்போல் மிக உரிமை செய்திருந்த தேவகி பின்பு விரைவில் வேறுபட்டு விப்பிர நாராயணரைக் கெடுத்து ஏன் விலகிப் போனாள் எனின், இனம் போன்று இனம் அல்லார் கேண்மை மகளிர் மனம்போல வேறுபடும் என்க.

இது, கள்ள நண்பாது உள்ள நிலையினை உணர்த்துகின்றது.

விப்பிரன் என்றது தொண்டரடிப் பொடியாழ்வாரை. மாறுத என்றது முதலில் அவள் யாதொரு வேறுபாடும் இல்லாதவள் போல் இணங்கி யிருந்தமை கருதி.

இனம் என்பது சுற்றம், கூட்டம், சாதி வருக்கங்களைக் குறித்து வரும். "புல்வாயினத்திற் புலிபுக்காங்கு" எனவும், "வண்டினம் முரலுஞ் சோலை" எனவும், "மான் இனம் வருவ போன்றும், மயிலினம் திரிவ போன்றும்" எனவும் வருவன காண்க.

ஒரு சாதியில் உறவாய் நெருங்கியுள்ளவரை இனத்தவர் என்பர்.

இனம் போன்று இனம் அல்லார் என்றது வெளி நோக்கத்தில் உரிமை மிக்க நண்பர்போல் அமைந்திருந்து உள்ளத்தே அவ்வாறில்லாமல் கள்ளஞ்செய்து நிற்பாரை.

மேல், உள்ளன்பில்லாமல் நண்பர்போல் ஒன்றி நிற்கும் கள்ள நெஞ்சரின் கொலைத் தீமையை ஓர் உவமை காட்டி உணர்த்தினர்; இதில், அவர் நிலை மாறுபடும் புலைத்தன்மையைத் தெளிவாக ஓர்ந்துகொள்ளுமாறு உணர்த்துகின்றார்.

தமக்கு உற்றார் போன்று புறத்தே அமைந்து தோன்றி உண்மையில் உறாதிருப்பவரது நட்பு, பெண்கள் மனம்போல விரைந்து வேறுபடும் என்பதாம்.

உள்ளம் பொருந்தாத கள்ள நண்பரின் உள்ள நிலைமையை உணர்த்தற்கு மகளிரது உள்ள நிலையை ஒப்புக்காட்டியது என்னை 2286

யெனின், அவர் மனம் மிக்க சஞ்சலமும்
வஞ்சமுமுடையதாய் நிலைமாறி விரைவில்
வேறுபடுதல் கருதி எண்க.
பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில
பிறப்பு நோக்கா உண்ணிறை யுடையவல்ல
ஓராயிர மனத்த வாகும் எண்ணிப்பத்து
அங்கையிட்டால் இந்திரன் மகளும் ஆங்கே
வெண்ணெய்க்குன்று எரியுற்றுற்போல்
மெலிந்துபின் நிற்கு
மன்றே. (சீவகசிந்தாமணி.)
பங்கயத் தொருவனும், விடையின் பாகனும்,
சங்குகைத் தாங்கிய தருமமூர்த்தியும்,
அங்கையின் நெல்லிபோல் அனைத்தும்
நோக்கினும் மங்கையர் மனநிலை உணா
வல்லரோ. (இராமாயணம்.)
தெண்ணீர் பரந்து திசைதொறும் போய்க்
கெட்ட வெண்ணெய்கொண் டிட்ட விவறுதல்
என்றெக்கும் பெண்மனம் பேதின்

ஒருருப்படுப்பேன் என்னும் எண்ணில்
ஒருவன் இயல்பெண்ணு மாறே.
(க) பள்ள முதுநீர்ப் பழகினும் மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறாஉம்
கள்ளவிழ் கோதையர் காமனோ டாயினும்
உள்ளம் பிறிதா யுருகலும் கொண்ணீ.
(வளையாபதி.) (உ) நுண்ணறி வுடையோர் நூ
லொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்
பேதைமைத்தே. (இறை-யுரை). அத்தி
மலரும் அருங் காக்கை வெண்ணிற மும
கத்துபுனல் மீன்பதமும் கண்டாலு
ம்—பித்தரே
காணார் தெரியற் கடவுளரும் காண்பரோ
மாணார் விழியார் மனம்.
(நீதிவெண்பா.) ஐம்புலன்களும்போல் ஐவரும்
பதிகளாகவும் இன்னம் வேறொருவன் எம்பெருங்
கொழுநனுவதற் குருகும் இறைவனே எனதுபே
ரிதயம்.

(பாரதம்.)

ஏர்தெழில் மிக்கான் இளையான் இசை வல்லான்
கார்த்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை இன்சொல்லான் கேளெனினும்
மாதர்க்கு அயலார்மே லாகும்
மனம். (நீதிநெறி விளக்கம்.)



மகளிர் மனம் வேறுபடுதலைக் குறித்து இவ்வாறு பல நூல்களும் ஒருமுகமாகத்து உரையாடுகின்றன. மகளிர் என்றது பெண்பாலார் எல்லாரையும் இங்குப் பொதுவாகக் குறித்து நின்றது. அவரது இயற்கையான மனநிலையைப் பொது நிலையில் நின்று உணர்த்தி நிற்றலால் இதில் யாதும் இழுக்கில்லை என்க. மேற்குறித்தவற்றுள் இராமாயணத்திலும் பாரதத்திலும் சீதையும், திரௌபதையும், முறையே மகளிர் மனநிலையைக் குறித்துத் தகவுற நின்று

உரைத்திருத்தலையும் அதன் உண்மைக் கருத்தையும் ஊன்றி யுணர்க. இனி, இக்கு மகளிர் என்றது விலை மகளிரையே என்று கொள்ளின் அத்துணை அமைவில்லையாம்; அவ்வுரை ஆய்ந்து கொள்க.

உள் வஞ்சமுடையார் மிக உரிமையாளர்போல் அளவளாவி ஒட்டி உறவுகொள்ள வருவர்; அவ் வரவு பின்பு பெரிய இழவுக்கு ஏதுவாகுமாதலால் சிறிதும் நெருங்கவொண்ணாமல் நெஞ்சறிந்து முன்னதாகவே அவரை நீக்கிவிடவேண்டும் என்பது கருத்து.

உண்மையில் உள்ளன்பில்லாமல் உரிமையாளராய்ப் புறத்தே உறவுசெய்து நிற்பாரை துணையாக நம்பலாகாது; நம்பினால் காவு செய்து நிற்கும் அவர் காலம் வாய்த்தபோது வேறுபட்டுக் கடுந் துயர் விளைப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தேவகியால் உணரப்படும்.

## கதை.

தேவகி என்பவள் சோழநாட்டிலே திருக்காய்ப்பான் என்னும் ஊரிலே கணிகையர் குலத்திலே பிறந்தவள். இசை நூலோடு அறிவு நூல்களிலும் நல்ல பயிற்சி யுள்ளவள். ஆடல் பாடல் அமைதி அழகு என்னும் இவற்றில் அக்காலத்தி லிருந்தவ ரெவரும் வியந்து புகழுமாறு இவள் விளங்கி யிருந்தாள். தனது குலத் தொழில் மிகவும் ஈனமான தென்று வெறுத்துத் தன் மானங்குலையாமல் நின்று இயல்பாகவே தனக்கமைந்துள்ள இசைஞானத்தினால் உயிர்வாழ்க்கைசெய்து உபாவெய்தி நின்றாள். யாழ் முதலிய இசைக்கருவிகளை உடன்வைத்துக்கொண்டு இனி கானங்களைப்பாடி அரசர்முதலாக எவரையும்

கில் பலபெற்று இவள் இசைமிக்கு வருங்கால் ஒருநாள் திருவரங்கத்தையடைந்தாள். அங்கோர் நந்தனவனத்தில் தனியே நின்று கொண்டிருந்த தொண்டரடிப்பொடியாழ்வாரைக் கண்டாள். அவர் உலக இயல்பை வெறுத்துத் துறவுநிலையை மேற்கொண்டு இறைவனருளை நாடி உணர்வொளி மிகுந்து உறுதிபூண்டிருத்தலை நெடிது நேரம் இவள் கருதி நோக்கினாள். பேரழகியாகிய தன்னைச் சிறிதும் அவர் கருதவில்லையென்று சினந்து அவரது உறுதியைக் குலைக்கத் துணிந்து அவர்பால் உறவுகொள்ள விழைந்தாள். தனது மணியணிகளையும் விலையுயர்ந்த அரிய

ஆடைகளையும் அகற்றிவிட்டு எளிய
உடையினைத் தரித்துத் துறவு நிலை
ததும்பிய இனிய கோலத்தோடு வந்து இனம்
போன்று அவர் முன் மனங் கனிந்து நின்றாள்.
அடிபணிந்து நிற்கும் இவளது நிலையினை
நோக்கித் தம்போல் ஞான நிலையிலுள்ளவள்
என்று நம்பி ஐயமொன்றுங் கருதாது உவகை
மீக்கூர்ந்து அவர் உறவுசெய்து கொண்டார்.
இவளும் அடியவள்போலமைந்து நெடுநாள்
நெறி திறம்பாமல் நின்று இனிது
நடந்துவந்தாள்.

மழைக்காலமான ஒருநாளிரவில் அவர்
தனியாயிருக்கும் இடத்தை யடைந்து தன்
எழில் நலந் தோன்றக் காமக் குறிப்போடு
எதிர்வந்து நின்றாள். கள்ளம் யாதுமின்றித்
தவநிலையில் மிகவூறிக்கொண்டிருந்த அவரு
ம் உள்ளமுருகினார். இவளை விழைந்து தழுவ
விரைந்தார். அமயம் வாய்த்ததென்று
இவளும் அவர் கருத்திற் கிணங்கி அமைந்

திருந்தாள். மெய்யின்பத்தையே நாடி நின்ற அவர் இவளது மெய்யின்பமே மெய்யெனத் துணிந்து நாளும் விரும்பி நுகர்ந்து வேறொன்றனையும் நோக்காமல் காமச் சுவையில் காலாழ்ந்திருந் தார். அச் சுவையினை நவையென்று கருதாமலும் அப்போக்கினை நீக்கமுடியாமலும் அவர் ஏங்கி நின்றார்.

அனலென நினைப்பிற் பொத்தி அகந் தலைக்கொண்ட காமக்
கனலினை யுவப்புநீராற் கடையற அவித்து வென்றார்
நினைவிலாப் புணர்ச்சிதன்னால் நீக்குதும் என்று நிற்பார்
புனலினைப் புனலினாலே யாவர் போகாமை வைப்பார்.

(குண்டலகேசி.) 83-ம் அதிகாரம் கூடாநட்பு.

தன்பால் அவர் அவசமாகி நிற்றலை இவள் நன்கறிந்து இங்கிதங்கள் பலசெய்து முன்பு தொகுத்து வைத்திருந்த அவரது பொருளனைத்தையும் கவர்ந்துகொண்டாள். பின்பு பொருளற்றவுடனே அவரைப் பொருள் செய்யாது விட்டாள். 'உள்ளத்தில் அன்பில்லாமலே கள்ள நட்புச்செய்து அவரது நிலையினைக்கெடுத்து தன் காரியங் கைவந்தபின் கருத்து வேறுபட்டு இவள் வெறுத்துவிட்டதை நினைந்து அவர் வெய்துயிர்த்து வெதும்பி மிகவும் வருந்தினார். இனம்போன்றுவந்த இவளை இனந்தெரியாமல் நட்புக்கொண்டதால் அவர் இடர்மீக்கொண்டு இறைவனை நோக்கி இரங்கிப்பாடினார்.

வேதநூல் பிராயம் நூறு மனிசர்தாம்
புகுவரேனும்

பாதியும் உறங்கிப் போகும் நின்றதில்
பதினையாண்டு

பேதை பாலகன தாகும் பிணிபசிமூப்புத்
துன்பம்

ஆகலால் பிறவிவேண்டேன் அரங்கமா
நகருள்ளானே.

என்பதாதியாகத் திருமாலை நோக்கி அவர் பாடி
யுள்ள பாடல்கள் திருமாலை என வழங்கி
வருகின்றது. இதில் பேதை பாலகன்
என்றவுடனே அடுத்துக் காளைப்பருவத்தை
வாய்விட்டுக் கூறாமல் அது என்று கூசிச்
சுட்டியது கூடா நட்பினைக் கூடிநின்ற அதில்
அவர் பட்டபாட்டை நினைந்தென்பர்.
இனமாய் மிக்க உறவினள் போல் மேவிநின்ற
இவள் தக்கசமயம் வந்தவுடனே வேறுபட்டு
அவரைத் தள்ளிவிட்டுப்போனதை எள்ளிச்
சொல்லி அங்கு உள்ளவர் தூற்றினர்.
இனந்தெரியாமல் கூடி மிழிந்து வருந்திய
அவரது இயல்பினை நினைந்து அனைவரும் இரங்கி
நகைத்தார். இனம் போன்று இனமல்லார்
கேண்மை மகளிர் மனம்போல வேறுபடும்

என்னும் உண்மையை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பெருகுவதுபோலத் தோன்றி வைத்தீப்போல்
ஒருபொழுதும் செல்லாதே நந்தும் — அருகெல்லாம்
சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட
பந்த மிலாளர் தொடர்பு. (நாலடியார்.)

வெள்ளமுற மீன்போல் விலகுவார் உள்ளத்தே
கள்ளமுற வுற்ரூர் கடிது.

கள்ள நெஞ்சமோடு நட்புக் கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

2290 திருக்குறட் குமரேச வெண்பா.

823 தேர்ந்துபல கற்றிருந்தும் செற்றமுறு தேனெயினன் கூர்ந்துகொல்ல நின்றான் குமரேசா — ஓர்ந்து

பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது.

(கூ)

இ—ள்.

குமரேசா! ஆய்வாளன் பல நூல்களை நன்கு படித்திருந்தாள் உளத்திருந்தாமல் அஃமைக்கமேல் என் கொலைகுறித்து நின்றான் எனின், பலநல்ல கற்றக் கடைத்தும் மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது என்க.

இது, பகைவர் எவ்வளவு நல்லவராகத் தோன்றினும் நட்பாகக் கொள்ளலாகாதென்கின்றது.

பல = பலவகையான. நல்ல என்றது நல்ல நூல்களை. இது பலவின் பாற் பெயர். நூல்கள் என்பது கற்ற என்ற குறிப்பால் காண நின்றது. அவற்றிற்கு நன்மையாவது தம்மைப் பயின்றவர்க்கு உறுதியாகிய நல்ல அறிவு பயக்குந் தன்மை என்க.

மனம் நல்லாதற்குப் பலநல்ல கற்றல்

காரணமாதல் கருதி இங்ஙனம் காட்டியமை தன்க. மனத்தினது நன்மை அதனையுடையார் மேல் ஏற்றி உரைக்கப்பட்டது. இதனைச் சினைவினை முதல் மேல் நின்றதென்னும் இயல்பிதி.

கற்றக் கடைத்தும் = படித்தறிந்தவிடத்தும். உம்மை உயர் சிறப்பு. மாணார் = பகைவர்; அன்பு செய்து தன்பால் மாண்புடையாராய் அமையாதவர் என்றவாறு. அருமை இன்மை குறித்து நின்றது.

மேல், உள்ளம்இல்லார் உறவினை உறுதியாக நம்பலாகா தென்றார்; இதில், அக்கள்ள நெஞ்சர் என்றும் நல்லாராகார் என்கின்றார். நல்லனவாகிய பலநூல்களை நன்கு கற்றபோதும் மனந் திருந்தி இனியராகுதல் பகைவர்க்கு இல்லை என்பதாம்.

பருத்திருந்தாலும் வெண்காந்தள் உரிக்குந்தோறும் ஒன்றும் இன்றுதல்போல் விரிக்குந்தோறும் பொருளொன்றுமின்றி விந்து போகும் பதர் மயமான நூல்கள் பல

படித்தாலும் பயனில்லை
யாதலால் நல்ல என்றார்; நல்லதாயினும் ஒன்று
மாத்திரம் கற்றால்



l

கிணற்றுத் தவளைபோல் தாம் கண்டதே
பெரிதாகக்கொண்டு
களித்திழிவாராதலால் அங்ஙனம்
ஆகாவண்ணம் அத்தகைய நூல்கள் பல
கற்கவேண்டும் என்பது தோன்ற அதனோடு
பல எனவும் கூறினார்.

வேத முதலிய கலைகள் பலவற்றையும்
வழுவறத் தெளிந்து தவமுதிர்ந்திருந்தும்
பரசுராமரும், விசுவாமித்திரரும் இனியராகா
மல் உள் வயிரங்கொண்டு
அரச மரபினரையும், வசிட்டரது அரு மை
மக்களையும் கொன்றொழித்தவாறு போல
பகைமை மீக் கொண்டவர் எவ்வளவு

கல்வியுடையராயினும் மனந்திருந்தாமல் நின்று என்றும் சினந்திருக்கித் தம் பகைவர்பால் தீங்கே கருதி
நிற்பாராதலால் அவரைக் கல்வியுடைமை பற்றி நல்லரென்று நம்பி
நட்புக் கொள்ளலாகாதென்பார் கற்றக் கடைத்தும் மனநல்ல ராகுதல் மாணர்க்கு அரிது என்றார்.

பகைமையோடு சிறுமை மேற்கொண்டவர் அறிவு நூல்கள் பலவும் வழுவறக் கற்றிருந்தாலும் அவர் நல்ல மனமுடையராய் நின்று நட்புக்கொள்ளாராதலால் அவரை நண்பராக நம்பிக்கொள்ளலாகாதென்பது இதன் திரண்ட பொருளாகும்.

உரத்தின் வளம்பெருக்கி, உள்ளிய தீமைப்
புரத்தின் வளம் முருக்கிப்,
பொல்லா—மரத்தின்

கனக்கோட்டம் தீர்க்குநூல்
அஃதேபோல் மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு.
என்றபடி நூல் கள் மனத்தைத் திருத்தி மக்களை நல்லராக்க வல்லனவாயினும் இயற்கையாகவே அகத்திற் பகையும், பொறாமையும் பொருந்தியுள்ளவர் அவற்றால் திருந்திப் பண்படமாட்டார்; ஆகவே வன்கண்ணராய அவ்வஞ்ச நெஞ்சரை உறவாக நம்பலாகாதென்ற வாறு. கங்கைநீர் வார்த்து வளர்ப்பினும் காஞ்சிரங் காய் இனிய கனியாகாத வாறுபோல் அக்காயினரும் கல்வியால் நல்லராகார் ஆதலால் அவரை நண்பாகக்கொள்ளலாகாதென்க.

இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறா பேய்ச்சுரையின் காய்.
என்றதும் காண்க.

வெண்பா.

பல நூல்களையும் படித்து மிக அறிவுடையராயினும் இயல்பாகவே தம் பகைவர் மேல் சினந்திருகி நிற்பவர் மனந்திருந்தி நல்லாராகார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆய் எயினன்பால் உணரப்படும்.

## கதை.

ஆய்எயினன் என்பவன் வெளியம் என்னும் ஊரிலிருந்த ஓர் குறுநில மன்னன். பெருவலியுடைய வேளிர் மரபிற் பிறந்தவன். அறிவிலும் கொடையிலும் அமர்புரி திறலிலும் மிகு புகழ் பெற்றவன். கருவி நூல்கள் பலவும் கசடறக் கற்றவன். கவிகள் பாடிவந்த புலவர் பலருக்கும் பரிசில் பல தந்து மிக உபசரித்தவன். கருதிய காரியங்களைக் கடைபோகச் செய்யும் உறு

கியுடை யவன். இவனது கல்வி நலத்தையும், வெல்லுந் திறத்தையும் வியந்து நார்முடிச் சேரலன் என்னும் சேர மன்னன் இவன்பால் மிக அன்பு செய்திருந்தான். அவனுக்கு இன்னுயிர்த் துணைவனாய் நின்று எங்கும் இசை பரப்பி இவன் இனிது வாழ்ந்தான். அக்காலத்தில் அகுதை என்னும் குறுநில மன்னனொருவன் மது ரையிலிருந்தான். அவன் உள்ளியதை முடிக்கும் ஊக்கமுடையாளன். நல்ல வள்ளற்குணம் வாய்ந்தவன். இல்லையென்னுமல் என்றும் இனிதுகவ வல்லனாதலால் தன்னை நாடிவந்தவர்க்கு யானை முதலிய அரும் பொருள்களை நயந்து கொடுத்துப் பெரும புகழோடு சிறந்து விளங்கினன். "பாவடி யானைப் பரிசிலர்க்கு அருகாச் சீர்கெழு நோன்றாள் அகுதை" என வெள்ளெருக்கிலையார் என்னும் புலவர் அவன் வள்ளன்மையை வியந்து பாடியுள்ளார். "

மணம் நாறு மார்பின் மறப்போர் அகுதை
குண்டு நீர் வரைப்பிற் கூடல்" எனக்
கபிலரும், "இன்கடுங்கள்ளின் அகுதை
தந்தை, வெண்கடைச் சிறுகோல் அகவன்
மகளிர், மடப்பிடிப் பரிசில்" எனப் பரணரும்,
இவன் பண்பினைப் பாராட்டிப்
பாடியிருக்கின்றனர். இங்ஙனம் வண்மையும்,
திண்மையுமுடை யனாய் விளங்கியிருந்த
அவன்பால் இவன் சினஞ்செய்திருந்தான்.
இவனது ஆற்றலை நோக்கி முதலில் அவன்
யாதும் ஆற்றாது அடங்கி நின்றான். பின்பு
இடங் காலங்களின் இதங்கண்டு மூண்டு
அவன் அமர் செய்யவந்தான். இவனும்
வெகுண்டு புகுந்



தான். ஒருவரை ஒருவர் வெல்ல முடியாமல்
இருவரும் முடிவில் முரணழிந்து பிரிந்தார்.
நெடுங்காலம் கடந்தபின் புலவர் சிலர் இடை

நின்று இருவருக்கும் உறவு செய்து
வைத்தார். இவனது கல்வி நலத்தைநோக்கி
நல்லவனென்றே நம்பி அவன் மிகவும் நண்பு
செய்து நின்றான். நின்று வருங்கால்
அமயங்கண்டு அவனை அடியோடு
தொலைத்துவிட இவன் கடுஞ் சூழ்ச்சி செய்
தான். அதனை எதிர்ந்து நீங்கி
உறவொழிந்து மிகவும் கண் விழிப்புடைய
னாய்ப் படைபல தொகுத்துத் தன்னை அவன்
பாது காத்து வந்தான். கல்வியறிவோடு
எவர்க்கும் இரங்கி உதவும் வள்ளலாயிருந்தும்
தன் மனந்திருந்தி அவன்பால் நலம்புரியாமல்
பழம் பகையோடு இவன் சினந்தேயிருந்தான்.
பலநல்ல கற்றக் கடைத்தும்
மனநல்லராகுதல் மாணார்க்கு அரிது என்னும்
உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து
நின்றது. இவன் பின்பு எவர் தடுத்தும்
கேளாமல் தன்னறிவே பொருப்புத்தக

அவன் படைத்தலைவனாகிய மிஞிலி என்பவனால்
அமர்க்களத்தில் அழிக்கப்பட்டான்.
இவனைக்குறித்துப் புலவர் சிலர் பாடியுள்
ளார் அடியில் வரும் பாடலிலும் இவன் சரிதம்
சிறிது காணலாம்.

யாம விரவின் நெடுங் கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோல் அகவுநர் வேண்டின்,
வெண்கோட்டு
அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்
வெளியன்; வேண்மான்; ஆஅய்
எயினன்;
அளி இயல் வாழ்க்கைப் பாழிப்
பறந்தலை
இழைமணி யானை இயல்தேர்
மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவில் புண்கூர்ந்து
ஒள்வாள் மயக்கமர் வீழ்ந்தெனப் புள்
ஒருங்கு

அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண்கதிர் தெறுமைச் சிறகரிற் கோலி
நிழல்செய்து உழறல் காணேன் யான்
எனப்

படுகளங் காண்டல் செல்லான்
சினஞ்சிறந்து

உருவினை நன்னன் அருளான் காப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்,
2294 திருக்குறட் குமரேச
வெண்பா.

குருஉப்பூம் பைந்தார் அருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந்
தானை

அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்
உப்புச் சிறை நில்லா வெள்ளம்போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே, ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்

கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ஓதி மாஅ யோளே.
(அகம்.)

இது, கூடி நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறியதாகத் துறையமைத்துப் பாணர்பாடியது. ஆய் எயினன் முரணிப் புகுந்த பாழி என்னும் இடத்தில் அமர் தொடங்கி, மிஞிலியால் மடிந்ததும், அப்பொழுது இவன் மீது வெயில் படாவகை பறவைகள் சிறகர்விரித்துப் பந்தரிட்டாற்போல் பரிந்து சூழ்ந்ததும், இவனது உரிமை மகளிர் இவன் உருவம்போன்ற ஒன்றைக் காவிரியில் விட்டுக்கரைந்து நீராடிப் போனதும், தன் பகைவன் போனான் என்று தெரிந்த அகுதை தன் படையினைச் சுருக்கி மகிழ்ந் திருந்ததும், கலைநலமுடைய ராயினும் மாணர்க்கு மன நலம் உண்டாதல் அரிது என்பதும், பிறவும் இதில் உணரலாகும்.

ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக்
கடைத்தும்
விரிநீர்க் குவளையை ஆம்பல் ஒக்கல்லா
பெருநீரார் கேண்மை கொளினும்
நீரல்லார்
கருமங்கள் வேறு படும்.
(நாலடியார்.)
உள்ளம் பகையா யுறுவாரைக் கல்விநலம்
உள்ளமையால் தேறி
உறுதொழிக—வெள்ளென்று
நீறுபுறம் பூத்து நெருப்பிருத்தல்
போலவருட்
சிறிநிற்பர் தீமை தெளி.
பொன்னிருக்கும் என்றரவின் புற்றிற்கை
வைத்தலினும்
இன்னதே ஒன்னா ருறவு.
உள்ளம் பகையாயுள்ளாரை
நல்லரென்று நம்பிக்கொள்ள லாகாதென்பது
இதனுல் கூறப்பட்டது.

824 அன்றுநெஞ்சில் வஞ்சமுடன்
ஆதரித்த பூதனையைக்
கொன்றதென்னே அஞ்சிக் குமரே
சா—நன்று
முகத்தின் இனிய நகாஅ அ
கத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.
(ச)

இ.—ள்.

குமரேசா! அகத்தே வஞ்சஞ் செய்துவந்த பூதனையைக் கண்ணன் என் அஞ்சிக் கொன்றான் எனின், முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை அஞ்சப்படும் என்க.

இது, வஞ்சரை அஞ்சி அகலவேண்டும்

என்கின்றது.

வஞ்சமுடன் ஆதரிக்க என்றது அகத்தில் பகைமை கொண்டு துயர் இழைக்கத் துணிந்து கரவாக முகத்தில் நகைவிளைத்து வந்தமை கருதி.

நகா = நகைத்து; உடன்பாட்டு இறந்தகால வினை யெச்சம். அளபெடை இசை நிறைத்து நின்றது.

அகத்து = மனத்தில். இன்னா வஞ்சர் = இன்னாதவராய வஞ்சர்; இன்னாமையை விளைத்தற்குரிய தீய வழிகளை நினைத்து நிற்கின்ற மாயக்காரர் என்க.
இன்னாமை = துன்பம். படும் என்றது கண்டு வேண்டும் என்றபடி. இது வியங்கோள்போல் அமைந்து விதிப்பொருட்டாய் உறுதியை விளக்கி நின்றது. தம் அகத்தி லுள்ள பகைமையை எதிரி அறியாமல் மறைக்கும் பொருட்டு

வஞ்சர், முகத்தில் நகுவாராதலால் அச்செயற்கையைச் செவ்விதாக விளக்கி இனியநகாஅ என்றார். இங்ஙனம் இன்னாமையை நெஞ்சுள் வைத்து இனிய நகுவாரை நய வஞ்சகர் என்பர். வஞ்சரி னும் இவர் மிக அஞ்சத்தக்கவர் என்க.

மேல், நல்ல கல்வியுடையாராயினும் உள்ளே பகைமையுள்ளவரோடு உறவுகொள்ளலாகாதென்றார்; இதில், அவர் அன்பர்போல் இன்புறச் சிரித்தாலும் நம்பலாகாதென்கின்றார்.

முகத்தில் இனியராகச் சிரித்து மனத்தில் இன்னாரா யிருக்கும் வஞ்சரை அஞ்சவேண்டும் என்பதாம்.

2296 திருக்குறட் குமரேச வெண்பா.

மேலே அழகாகப் பசும்புல் அடர்ந்து படர்ந்து, அடியில் விழுந்தவரை வீழ்த்திவிடும்

வண்மைய ஆழ்ந்தழுங்கி யிருக்கும் பாழ்ங்
கிணறுபோல அகத்தில் இன்னாமை கொண்டு
முகத்தில் இனிய நகைசெய்து கொடிய
வஞ்சர் உறவுகொள்ள வருவர்; நல்ல
ரென்று நம்பிக் கூடினால் நாசமுற நேரும்
ஆதலால் அந் நீசரை அஞ்சி
நீங்கிவிடவேண்டும் என்பார் வஞ்சரை
அஞ்சப்படும் என்றார்.

நகை யினிமையை நோக்கி
நல்லரென்று நம்பிச் சார்ந்துபின்பு அவர்
தீயரென்று கண்டபோது நெஞ்சம் பகீர் என
நடுங்கிப் போம் ஆதலால் அகத்தின்னாத அவ்
வஞ்சர் அஞ்சத்தக்கவ ராயினர்.

சான்றோர் எனமதித்துச் சார்ந்தாய்மற்
சார்ந்தாய்க்குச்

சான்றாண்மை சார்ந்தார்கண்
இல்லாயின்—சார்ந்தோய் கேள்

சாந்தகத் துண்டென்று செப்புத்
திறந்தொருவன்

பாம்பாகத்துக் கண்ட துடைத்து.
(நாலடியார்)

இனியன் என ஒருவனை நம்பிக் கூடிப் பின்பு இன்னான் எனக் கண்ட பொழுது உண்டாம் துன்பத்தைக் காட்டிக் கூடா நட்பின் கொடுமையை விளக்கி நிற்கும் இதன் அருமையைக் கூர்ந்து காண்க. நப வஞ்சகரைப் பாம்போடு நேர்வைத்து அடுத்தார்க்கு உயிர்க்கேடு செய்யும் அவர்நட்பேகேடு நோக்கி என்க. அககொடியபாப அவரை மிகக்
கடியவேண்டும் என்பது கருத்து.

மனத்திற் கடும்பகை முகத்தினால் அறியலாம் என்றபடி உள்
ளத்தன்மையை உறுதியாக அறிந்து
கோடற்குக் கருவியாயுள்ள
முகத்தின் கண்ணும் அது தோன்றாவண்ணம் மறைத்துச் சிலர்
இனிக்கப் பேசிச் சிரித்துறவாடி முடிவில்

சகுனிபோல் குடியைக் கெடுத்து விடுவர்
ஆதலால் அக் கொடியவரைச் சிறிதும்
கூடலாகா
தென்று இது குறித்துணர்த்தியது.
முகத்தின் இனிய நகாமல் அகத்தில்
இன்னாமைகொண்
டுள்ள வன்கண்ணரினும், அங்ஙனம்
நகைத்து வருகின்ற நய
வஞ்சகர் மிகக் கொடியராவராதலால் அவரை
நஞ்சென அஞ்சி
அகலவேண்டும் என்க.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2297

செங்கமலப் போதலர்ந்த
செவ்விபோலும் வதனம்,
தங்குமொழி சந்தனம்
போலும்,—பங்கியெறி
கத்தரியைப் போலும் இளங்

காரிகையே! வஞ்சமனம்
குத்திரர்பால் மூன்று குணம். என்றது நீதிவெண்பா.

அகத்தில்கொண்ட தீமையை முகத்தில் யாதும் காட்டாமல் நகைத்துக் கெடுக்கும் வன்மை நய வஞ்சகர்க்கு உண்டு என்பதை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. வாய்பிளந்து இளிக்காய்க் கழுவு வது போல் வந்து அழிவுசெய்து அதனும் இயல்பு கருதி வஞ்சர் நெஞ்சுக்குக் கத்தரியை இதில் ஒப்புக்காட்டியிருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

கத்தரி = மயிர்வரி கருவி. இதனால் அப்பழி வினையாளர் மனம் என்றும் இழிவினையே கருதி நிற்கும் என்பது உணரலாகும். ஆகவே அப்பழியனை யாண்டும் உறவாக நம்பி உற்றலாகாதென்பது தெற்றெனப் புலனாம். கேடமைந்த நெஞ்சரை என்றும் எவ்வகையிலும் நம்பிக் கூடலாகாதென்பது குறிப்பு.

வஞ்ச நெஞ்சர் அன்பர்போல் வந்து புன்சிரிப்புச் செய்து கொஞ்சிப் பேசினும் அவரை நண்பராக நம்பலாகாது; அழிவு செய்பவந்த பழிகாரர் என்றே அஞ்சி நின்று ஒழிந்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூதனை பால் உணரப்படும்.

## கதை.

பூதனை என்பவள் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன் னர் வட மதுரையிலிருந்தவள். பல்வகை மாயங்களையும் நன்கு பயின்றவள். வேண்டியபோது வேண்டும் உருவங்களை வேண் டியபடியே எடுத்து விரும்பியதைச் செய்பவள். விண்ணவர் மகளிரோ! மண்ணவர் மடந்தையோ! விஞ்சையர் மங்கையோ! நஞ்சுறழ்காக வஞ்சியோ! என அழகிய வடிவங்களைகொண்டு அரசர்

பலரையும் அமைச் செய்தவள்.
கல்வியாளரொவருடவியந்து புகழும்படி
அவையஞ்சாது நின்று சுவை ததும்ப நாற்
பொருள் களை யெடுத்துச் சொல்லுதலிலும்
இவள் மிக வல்லவள். இவளது
ஆற்றலைக்கண்டு கஞ்சன் தனக்கு ஓர் ஏற்ற
துணையாக இவளைப்போற்றிக் கொண்டான்.
பெண்ணாயிருப்பினும் அவன் 2298
திருக்குறட் குமரேச வெண்பா.

எண்ணிய வினைகளை எளிதில் முடித்து
இசைபெற்று நின்றாள். தீய செயல்களைச்
செய்வதைக் குறித்துச் சகுனியோடு
துரியோதனன் ஆய்ந்துகொண்டதுபோல்
இவளோடு அவன் சூழ்ந்து செய்துவந்தான்.
"மாரியும் திருவும் மகளிர் மனமும், தக்குழி
நில்லாது பட்டுழிப்படும் எனும், கட்டுரை
"ப் படியே எங்கும் இவள்

பட்டுவர் நாளாயினும் அக்கெட்டவனிட
மாத்திரம் ஒட்டியிருந்தாள். அவன்
குறிப்பின் வழியே நடந்து கண்ணனைக்
கொன்றுவிடத் துணிந்தாள். அங்கு நாள்பல
தங்கினாள். அழகிய வடிவங்கொண்டு
நந்தகோபனை நணுகிப் பழைமை பாராட்டி
நகைமுகத்தளாய் நின்று நாளும் உறவுசெய்து
வந்தாள். அகத்தில் பகைமையெய்தி
முகத்தில் நகைசெய்து நிற்கும் இவளது
நிலையினைத் தெரிந்து என்னைக்
கொல்லவந்தவள் இவ்வண்ணம்
செய்கின்றாளே! என்று எண்ணி நகைத்து
வரட்டும் பார்ப்போம் என்று கண்ணன்
எதிர்பார்த்திருந்தான். இளங் குழவி யாய்
விளங்கியிருக்கும் அக் களங்கனிவண்ணனை
ஒருநாள் அமயம் நோக்கி நெருங்கி மிக
ஆதரவுடையாள்போல் அருநகை செய்து
அணைத்தெடுத்துத் தொடைமேல்
இருத்திவைத்துத் தான் முன்னினைத்திருந்த

நச்சுப்பாலை இவள் நச்சி ஊட்டினாள்.
இவ்வஞ்சகியை இனி வெளியேவிட்டால்
வஞ்சித்து நம் குடியைக் கெடுத்துவிடுவாள்
என்று அஞ்சித் தன் கொடுங்கையால்
முலையை இறுகப்பற்றிப் பாலோடு இவள்
உயிரையும் அப்பாலன்
பருகிப் பிரிந்தான். இக்கள்ளி அன்று
புரிந்ததையும், அக்கள்ளப்
பிரான் செய்ததையும் குறித்து ஆரியப்பப்
புலவர் அழகுறக்கூறியுள்ளார். அடியில்
வருவதில் சிறிது காணலாம்.

குண்டலம் இலங்கவோர் குறங்கினி திருத்தி
வெண்டள வருப்பனைய மென்னகை விளைத்து
மண்டுபுனல் வேலிதிகழ் மண்ணும் உயர்
விண்ணும் உண்டவனை வெய்யமுலை யூட்டினள்

அணைத்தே. (1) அறிந்துநகை யாடி
முலை அங்கை கொடு பற்றி மறங்குலவு
வஞ்சமகள் மாமுலை மணிக்கண்
திறந்தொழுகு பாலினொடு செய்யதனி
யென்னப் பிறங்குகனி வாய்முகில் பிழிந்துயிர்
குடித்தான். (2) 83-ம் அதிகாரம்
கூடாநட்பு. 2299

உளத்திற் கொலை குறித்துவைத்து உதட்டில் நகைவிளைத்து வந்து இவள் இங்ஙனம் உஞற்றி ஒழிந்ததைக்கண்டு நந்தகோபன் முதலிய அனைவரும் அஞ்சிநடுங்கினர். குழந்தை செய்ததை நினைந்து நினைந்து பின்பு வியந்து மகிழ்ந்தார். நெஞ்சு தீதாயுள்ள வஞ்சகரை நகைவகைகொண்டு நம்பலாகாது; அஞ்சி நீங்கவேவேண்டும் என அன்று அவர் நன்கு தெளிந்தார். முகத்தின் இனியநகா அகத்து இன்னாவஞ்சரை அஞ்சப்படும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து

நின்றது.

மாதுலனாகியும் எதிலனாகிய வஞ்சன் கஞ்சன் வரவிட்ட
பூதனை தன்னுயிர் முலையொழி பாலொடு போதரவுண்ட புயல்வண்ணா
மாதவ யாதவ வாசவ நேசவ மாயா ஆயா மதுசூதா
ஆதியும் அந்தமும் ஆகிய நின்புகழ் அல்லா துரையேன் அடியேனே. (க)

அரிபகங்குலின் அன்னைதன் வடிவுகொண்டலகையாகிய நங்கை
பரிவு பொங்கவந் தெடுத்தணைத் துவந்துளம் பரிந்துடன் பாராட்ட
உருதமாமுலைப் பாலுடன் அவளுயிர் உண்டமுமுருகார் மெய்க்
கரியகோவலன் செய்யதாள் மலர்களென் கருத்தைவிட்டகலாவே. (உ)

இவை, வில்லிபுத்தூராழ்வார் சொல்லியன. இவ் வாழ்த்துப்பாடல் களில் மேற்குறித்த சரிதம் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. நெஞ்சில் இன்றைவஞ்சளாயிருந்து இனிய

நகைசெய்து பூதனை கொஞ்சி வந்ததையும், கண்ணன் அவளை நின்று கொன்றதையும் கவி கருதி உருகித் துதித்திருக்கும் அழகை இதில் ஊன்றியுணர்க.

நெஞ்சுதீ தான நிலைகேடர் நண்பென்றும்
அஞ்சுதீ நஞ்சென் றகல்.

வஞ்ச ருறவினை அஞ்சி நீக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

825 சேர்ந்தனலன் சொல்லியும்பின்
தேர்ந்துகொளா தேன் வசுமுன்
கூர்ந்தகல நின்றான்
குமரேசா—நேர்ந்து
மனத்தி னமையா தவரை
எனைத்தொன் றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.
(ரு)

2300 திருக்குறட் குமரேச

வெண்பா.

இ.—ள்.

குமரேசா! முன்பு
சினங்கொண்டு மனம்பொருந்தா
திருந்த அனலன் என்பவன் பின்பு
உரிமைசெய்து வந்து இனியன
பல சொல்லியும் என் அவனை நயமி வசு
உறவுகொள்ளவில்லை
எனின், மனத்தின் அமையாதவரை எனைத்து
ஒன்றும் சொல்லி
னால் தேறற்பாற்று அன்று என்க.

இது, மனம்பொருந்ாதவரை உறவாக
மருவலாகாதென் கின்றது.

அமையாதவர் = அன்பாய்ப்

பொருந்ாதவர். அமைதல் = பொருந்தல்.

எனைத்து ஒன்றும் = யாதொரு வகையிலும் : எவ்விதமான காரியங்களிலும் என்க. உம்மை எச்சாமைப் பொருட்டு.

தேறற்பாற்று அன்று = தெளியும் பான்மையுடையதன்று : நல்லவரென்று தெளிந்து கொள்ளலாகாதென்றவாறு.

அகத்தில் வஞ்சமுடையவரை புகத்தில் அவர் செய்யும் நகைகொண்டு நம்பலாகாதென்று மேல் உணர்த்தினார்; இதில், இனிமையுறச் சொல்லினும் அவரை உரிமையாளராகக் கொள்ளலாகா தென்கின்றார்.

மனத்தில் பொருத்தமில்லாதவரைச் சொல்லினால் நல்லரென்று எவ்வகையிலும் தெளியலாகாதென்பதாம்.

சொல்லுக்கு முதன்மையானது மனம்

ஆகையால் அஃது இனிதாக அமையவில்லையாயின் அவர் எவ்வளவு நலங்கள் அமையச் சொல்லினும் அவரை இனியாராக எண்ணலாகாது ; வஞ்சித்துத் தனக்கு இடர் இழைக்க வந்த கொடியரென்றே தெளிந்து சிறிதும் இடங்கொடாமல் ஒழியவிடவேண்டும் என்பார் " அவரை எனைத்தொன்றும் சொல்லினால் தேறற்பாற்று அன்று " என்றார்.

பழம்பகைகொண்டு உளம் பொருந்தாதிருந்தும் புறத்தில் வந்து உரிமையாளர்போல் மிக நெருங்கி நின்று இனிமையோடு வஞ்சர் இதம்பெறச் சொல்லுவர் ; அச் சொல்லை நல்லதென்று நம்பி அவரை நட்பாகக் கொள்ளலாகா தென்க.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

உள்ளத்தால் நள்ளாது உறுதித்
தொழிலாய்க்
கள்ளத்தால் நட்டா ர்
கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும்
பூங்குன்ற நாட
மனத்துக்க ண் மா சாய் விடும்.
என்றது நாலடி.

மனத்தால் அமையாதிருந்தும் தமக்கு
நயங்கருதிப் பொல்லா தார் சில ர்
நல்லவர்போலச் சொல்லாடி வருவர் அவரை
நம்பி நட்புக்கொள்ளலாகாது; கொள்ளின்
பின்பு அவரால் விளையும்
அல்லல்களையெல்லாம் உள்ளி உள்ளி உள்ளங்
குன்றிவிடும் என இஃது உணர்த்தி நிற்றலை
ஊன்றி யுணர்க.

வஞ்சநெஞ்சர்சொல்லை நல்லதென்று

என்றும் நம்பலாகாது; நம்பினால் வில்வலன்
சொல்லை நம்பி முனிவர் மாண்டதுபோல்
மாளநேரும் ஆதலால் அப்பாழான வஞ்சர்
சொல்லைக் கேளாமல் நீங்கவேண்டும் என்க.

சொல்லைக்கொண்டு ஒருவனை நல்லன்
என்றோ? அல்லன் என்றோ?
கொள்ளலாகாது; மனத்தின் செம்மையை
நோக்கியே நட்பாக மருவிக்கொள்ள வேண்டும்
என்றவாறு; என்னை? அஃது இனிதாயின்
இனியராய்; இன்னாதாயின் இன்னாதவராய்
மக்கள் இருப்பாராதலான் என்க.

இனியவர் என்சொலினும் இன்சொல்லே;
இன்னார்
கனியும் மொழியும் கடுவே;—அனல்
கொழுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும்;
மெய் பொடிப்பச்
சிங்கி குளிர்ந்தும் கொலும்.

(நீதிநெறிவிளக்கம்.)

மனத்தில் நலம்பொருந்தாத வஞ்சர் சொல்லை நஞ்சோடு ஒப்பவைத்துக் கொல்லுந் தீமையைக் காட்டி அக் கொடியரைக் கூடாதகலுமாறு இது குறித்து நிற்றல் காண்க.

உள்ளன்பில்லாமல் சொல்லால் பசப்பிக் கள்ளஞ்செய்வா ரோடு நட்புக்கொள்ளலாகாதென்பது குறிப்பு.

அன்பர்போல் பொருந்தி இன்புரையாடினும் உளம் பொருந் தாதவரை உணர்ந்தவர் உறவாக உட்கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசுவின்பால் உணரப்படும்.

2302 திருக்குறட் குமரேச வெண்பா.

கதை.

வசு என்பவன் இற்றைக்கு
ஐயாயிரத்திருநூறு ஆண்டுகட்கு
முன்னர் இப்பாரதகண்ட முழுதும்
புகழ்மணம்கமழ நிலவியிருந்த ஓர் அறிவுடை
மன்னன். சேதி நாட்டைத் தனக்கு உரிமை
யாக உடையவன். இவனுடைய மனைவி
பெயர் கிரிகை. சிறந்த அழகியாகிய
அவளோடமர்ந்து அரிய போகங்களை
நுகர்ந்து அறங்கள் பலசெய்து இவன்
விளங்கியிருந்தான். இவனது மன
நலத்தையும், எதிரறிந்து செய்யும் வினை
நலத்தையும் கண்டு இந்திரன்
உவகைமீக்கொண்டு விநோதமான தெய்வ
விமானம் ஒன்றை இவனுக்கு
விரும்பிக்கொடுத்தான். அதனை யூர்ந்து
விசும்பாறாக எங்குஞ்சென்று செங்கோல்
செலுத்தி இவன் இசைபெற்று வந்தான்.
அங்ஙனம் ககனமார்க்கமாய் வருங்கால்
ஒருநாள் மிகு காதலோடு தன் மனைவிமீது
நினைவுதோன்ற அதனால் இவனது வீரியம்

வெளியாய் நேரே யிருந்த யமுனை நதியில் விழுந்தது. அங்கு அத்திரிகை என்னும் அரமகளொருத்தி கருபதிபன் என்னும் ஓர் முனிவரன் சாபத்தால் மீனுருவாகி மேவி யிருந்தாள். அவ்விழுமிய மீன் அதனைப்பற்றி விழுங்கிக் கரு முற்றியிருந்து ஓர் பாதவன் வலைப்பட்டு ஒரு புதல்வனையும், மகளையும் பெற்று நின்றது. அம்மக்களிருவரையும் அவ் யமுனைத்துறைவன் மச்சன், மச்சகந்தி எனப்பெயரிட்டு வளர்த்து வந்தான். அப்பெண்ணே

பின்பு குருகுலத் தலைவனாகிய சந்தனுவுக்கு மனைவியாயினள். இவ்வுண்மையை அடியில்வரும் வில்லி பாடலினுங் காணலாகும்.

வாசவன்அளித்த விமானமீதொருவன் வசுஎனும் சேதியமாபோன்

கேசரன் எனப்போம்

விசும்பிடைமனையாள் கிரிகையை நினைந்துடல்

கெழுமி, சேசமோடிதயம் உருகுமக்கணத்தில்
வினைவறவிழுர்த வீரிய
மெய்த், தேசவனளித்த நதியிடைத்தானத்
திரளெனச் சிந்தியதொருபால். ஒருமுனி முனிவால்
அரமகள் ஒருத்தி மீனமாயுற்பவித் துழல்வான்
இரையெனை அதனை விழுங்குமுன் கருக்கொண்டு
ஈன்முதிர்காலையிலதனை ப் பாதவர் வலையி
னகப்படுத்து அரியபாலகனொருவனும் இவளும்
இருவரும் அந்த மீன் வயிற்றிருந்தார் யமுனையும்
யமனும் கேளெனவே.(2) மானவர் பதியாம்
வசுவினுக்கு இவரை மகிழ்வுறக் காட்டலும் மகனை
மீனவன் எனப் பேர்கொடுத்தனன்
கொண்டுமெல்லியல் இவளை மீண்ட
ளித்தான், யானும் இன்றளவும் என்மகள் என்னும்
இயற்கையானினிமை யின் வளர்த்தேன், கானமென்
குலத்திடை கலந்தாள்.
குயில்போல் வந்துமீனவுந்தன் காவலர்
(3)

83-ம் அதிகாரம் கூடாரகட்பு.
2303

இவ்வாறு அப்பாதவர் தலைவன் சந்தனுவோடு சூழமிருந்த அரசர்களுக்கு உரைத்திருக்கின்றான். இதனால் சங்கிரமேலம் இவனோடு கொண்டுள்ள கேளாயுரிமை இனிதுணர லாகும். இங்ஙனம் வரத்தினும் வலியினும் சிறந்த இவன் நிலவி வருங்கால் அனலன் என்னும் பெருநில மன்னன் இவன்பால் பகைகொண்டு மிகை பலசெய்தான். அவன் புரிவினையாவையும் பொறுத்திருந்து இறுதியில் பொருபடை எடுத்து இவன் பொருது வென்றான். அதன் பின் அவன் அடங்கியமர்ந்தான். ஆண்டுகள் பல கழிந்தன. பின்பு உரிமைபாளனைப் இவன்பால் உறவுகொள்ள விழைந்தான்.

அவன் கல்வியறிவோடு சொல்வன்மையுமுடையவனாதலால் உறுதி கள் மிகச்சூழ்ந்து நல்லனபல சொல்லி இவனிடம்

நயந்து நின்றான். அங்ஙனம் நிற்பினும் பண்டுதொட்டுப் பழம்பகை அவனுளத்திருந்தமையால் அவனை நண்பனாகத் தெளிந்து கொள்ளாமல் இவன் அகன்று நின்றான். இவன் நிலையினை நோக்கி இனி யாதும் பயிலாதென்று அவனும் நெஞ்சந்திரிந்து நீங்கிப்போனான். கூடாதான் வந்து கோடி சொல்லியும் கூடாதுநின்ற இவனது பீடுடைமையைக் குறித்துப் புலவர் பலரும் பாடிப் புகழ்ந்துள்ளார். மனத்தின் அமையாதவரை எனைத்தொன்றும் சொல்லினால் தேறலாகாதென்பதை இவன் தெளிய உணர்த்தினான்.

கல்விமிக வல்லாய்க் காட்சிகளில் நல்லாய்ச்

சொல்லில் இனியாய்த் தோன்றினும் —புல்லார்கம்

உள்ளநலம் எய்தி உரிமையுற்ற நட்பாகக்

கொள்ளலோ தீதாம் குறி.

சொல்லால் நகையால் துணைவர்போல் தோன்றிஒன்னார்

கொல்வார் உறவு கொளல்.

உள்ளம் பொருந்தாதவரை உறவாகக் கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

826 சார்ந்துநன்று கண்ணில்லான் சார்வாகன் சொல்லினும்

கூர்ந்துணர்ந்தார் தீதென் றுமரோ—சேர்ந்துநின்று

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்

ஒல்லை யுணரப் படும்.

(௬



இ—ள்.

குமரேசா! திருதராட்டிரனும் சார்வாகனும் உரிமை யாளர்போல் நல்லன சொல்லினும் அவர் தீமையுண்மை என் விரைவில் தெளிபப்பட்டது எனின், நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும் என்க.

இது, பகைவர் சொல்லை நம்பினால் பழுதே விளையும் என்கின்றது.

திருதராட்டிரனைக் கண் இல்லான் என்றது அவன் கண்ணோட்ட மின்றிக் கடுங் குருடனயிருந்தமை கருதி.

சொல்லினும் என்றது அவர் அங்ஙனம் சொல்லுதலின் அருமை தோன்ற

நின்றது. உம்மை, சிறப்போடு எதிர் மறையும் உணர நின்றது.

ஒட்டார் = பகைவர் ;
ஒல்லை = விரைவு.
உள்ளம்பொருந்தாதார் என்றவாறு.

நல்லன நாடிச் சொல்வார் நண்பரே யாதலால் அவற்றை அவர்மேல் வைத்துக் கூறினர்.

மேல், பகைவர் இனிமையாகச் சொல்லினும் அதனை நம்பி அவரை உரிமையாகக் கொள்ளலாகாதென்றார் ; இதில், அவர் சொல் தோற்றத்தில் நல்லதுபோல் இருந்தாலும் உண்மையாகத் தீமையே விளைக்கும் என்கின்றார்.

நண்பர் போன்று நன்மை பயக்கும் சொற்களை இனிதாகச் சொன்னாராயினும், பகைவர் சொல் அது பயவாமல் தீங்கு பயத்தலை அப்பொழுதே அறியலாகும் என்பதாம்.

உள்ளம் பகையாயுள்ளவர் அதனை

மறைத்து இனியர்போல் வந்து அரிய நீதிகளையும் பெரிய நலங்களையும் அழகுபெறச் சொல்லி உரிமை மிகச் செய்யினும் அச் செயல் நேர்மையான தன்று; தம் காரியம் கருதியே யுள்ளது என்னும உண்மை உடனேயே வெளிபாய் விடும் என்பார் ஒட்டார் சோல் ஒல்லை உண ரப்படும் என்றார்.

உரிமையாளனுப் வந்து தனக்கு இனியன சொல்லினும
பகையாய் நின்றவனை உடனே நம்பி ஒருவன்
உறவாகக் கொள்ள
லாகாதென்றவாறு.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2305

மன்னவர் அன்றி நின்னுயர்
அனைம்பினைப்
பின்னவர் எவரும் பெறுவார் அல்லர்

தென்னவன் எங்கோன் முன் இது
காட்டி
நன்னயஞ் செய்து நின்னடிக்கு
அன்பன்,
இன்னே வருவன்; இருக்க
ஈண்டெனப்
போற்றிப் புகழ்ந்து போனபொற்
கொல்லன்
சொல்லினை நம்பி நல்லதென் றிருந்த
கோவலன் பின்பு அப் பாவிவன்
சொல்லால்
ஒல்லையில் விளைந்த அல்லலைக் கண்டு
உள்ளங் கலங்கி உயிரழிந்ததுபோல்
அழிதுயர் மிகுந்து பழியோடு
ஒழியவரும் ஆகலால் உள்ளம் ஒட்டாத
கள்ளமக்கள் சொல்லை நல்லதென்று நம்பி
அவரை நட்புக்கொள்ளலாகாதென்பது இதன்

திரண்டபொருளாம்.

நெஞ்சம் பகையாயுள்ளவர் அன்பர்போல் நெருங்கி நல்ல நீதிகளை இன்புறச் சொல்லினும் அதில் துன்பமே அமைந்திருக்கும் ஆதலால் அதனை உண்மையென்று நம்பலாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருதராட்டிரன் கண்ணும், சார்வாகனிடமும் உணரப்படும்.

## கதை.

உலகிற்கு ஓர் முடிமன்னனாயிருந்தும் திருதராட்டிரன் உளத்தில் மிகக் கொடுமை கொண்டிருந்தான். தன் மகனாகிய துரியோதனன் புரிந்த வஞ்சச் செயல்களிலெல்லாம் உடன்பட்டிருந்து நெஞ்சொத்து வந்தான். நீதிமான்களாகிய பாண்டவர்களை யழைத்துச் சூதாடிவென்று துயர்ப்படுத்த விரும்பிச் சகுனியோடு சூழ்ந்து

அக்கொடியவன் முடிவுசெய்துகொண்டு
முடிவில் அதனை இவனோடு மொழிந்தான்.
அம்முடிவினை நினைந்து இவன் அகமிக
மகிழ்ந்தான்

மகன்மொழி நயந்துகேட்டு வாழ்வுறு
தந்தை தானும்

மிகநயந்துநகை நல்ல விரகினால் வெல்ல
லுற்றீர்

அகநெடும் போர்செய்தாலும் ஐவரை
அடர்க்கொணாது

சகுனியை யன்றி வேறோர் காவல்லார்
காணி என்றான். 2306 திருக்குறட்
குமரேச வெண்பா.

விழிபில வென்றி வேந்தன் விதுரனை
அழைத்து நீபோய்

மொழியில் யா நலகில் மற்றுன்
மொழியினை மறுக்கவல்லார்

பழியிலா இசைகொள் நீதிப்பாண்டவர் வந்தான் மைந்தர்
வழியிலாய் ஒழு தும்வண்ணம் மருட்டி நீ கொணர்தி என்றான் இங்ஙனம்

உள்வஞ்சமுற்றிருந்தும் "உன் தம்பி அழகிய மாளிகை ஒன்று புதுமையாக அமைத்துள்ளான்; இளைஞர்களோடு வந்து நீ அதனைக்கண்டு மகிழவேண்டும் என்று யான் காதல் கொண்டுள்ளேன்" என உரிமையாளன்போல் தருமருக்கு ஓர் திருமுகம் எழுதி விதுரனிடம் தந்து அவரை விரைவுடன் கொணருமாறு இவன் விதுரனை ஏவினான். அந்நன்மையாளன் போய்ச் சொன்னவுடனே உண்மையை உற்றறிந்து இன்னல் விளைக்க இவனென முன்னறிந்து தறியென அவர் எண்ணி இரங்கினர்.

அன்று தாழ்புனல் துறையினில் கழுவினைத்து
அரியவஞ்சனை செய்தான்

குன்றுபோலுயர் வாழ்மனைக் கொடுங்கழல் கொளுத்தி வன்கொலை சூழ்
தான், வென்று சூதினில் யாவையும் கவரவே விரகினலழைத்திட்டான்
என்றுதான் நமக்கு அன்புடைத் துணைவனு யிருந்தகவ் இகலோனே. (க) தேற லார்தமைத் தேறலும், தேறினர்த் தேறலாமையும், என்றும்
மாறலாருடன் மலைதலும், மாறுடன் மருவிவாழ்தலு, முன்னே
ஆறலாதன அரசருக்கென்று கொண் டரச நீதியிற் சொன்னர் ;
கூறலாதன சொல்வதென் ! செல்வதென் ! கொடியவனருகென்றான். (உ) என்பன ஆதிபாக வீடன் விசயன் முதலாயினோர் பல வெகுண் டுரைத்தும் தந்தைசொல்
மறுக்கலாகாதென்று தருமன் அவ ரோடு வந்து சேர்ந்தான். வந்து வணங்கிய ஐவரையும் வாழ்த்தி யிருத்தி நல்ல நீதிகள் பல

உள் ளம் உருகுமாறு சொல்லி உழுவ
வன்பாளன்போல் உவந்து பேணிப் " புதிய
மண்டபத்தில் இங் குள்ள இனிய
தம்பிமார்களோடு கலந்து
நாளை விழவு கொண்டாடி என்றும் உரிமை
குன்றாது உடனமர்ந்திருங்கள் " என
உதடினிக்க உரைத்தான். இவன் சொல்லிய
து முழுவதும் வஞ்சமென் பதை மறுநாளே
அவர் நெஞ்சுறத் தெளிந்தார். சூதாடி
அவரு டைய அரசுரிமையனைத்தையும்
கவர்ந்துகொண்டு, துரோபதை யைத்
துகிலுரிந்து தன் மக்கள்
துயருறுத்திவிட்டபொழுது, இவன் தோன்றி
அத்தீது நிகழ்ந்தது தனக்கு யாதும்
தெரியா

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2307

தென்று சொல்லி நல்லவன்போல் நின்று

இழந்தனவெல்லாம் பெற்றுத் தம்பியர் செய்த பிழையினைப் பொறுத்துத் தங்கள் அழகிய நகருக்கு ஏகுங்கள் என்று அவ் அவையை நோக்கிப் பொய் புறங் கூறினான். இவனுரையினை நம்பி அங்கிருந்தவரனைவரும் முதலில் இவனை உவந்து போற்றினர். " வெளிக்கு ஒப்பனையாக நான் விடைகொடுத்து விடுவேன்; நீ விட்டு விடாதே " என்று சகுனியிடம் உள்ளே இவன் உரைத்திருந்தானாகலால் அவ்வாறே அவன் மீண்டுவந்து தூண்டி அகப்படுத்தி அவரை அவமானஞ் செய்து அடவியிலுய்த்தான். உடனே இவன் உரைவஞ்சத்தைக் கண்டு அனைவரும் உள்ளங்கொதித்தார்.

நயவஞ்சகனை இவன் அன்று சொல்லிய பான்மையை அடியில் வரும் வில்லிபாடலில் விளங்கக் காணலாம்.

உத்தமமாம் குலமயிலே என் சிறுவர் அறியாமல்
உனக்கு நேரே

மைத்துனராம் முறையால் இவ் வழக்கலாதன
செய்தார்; மதியிலாமல்
எத்தனை தாழ்வு இவர்புரிந்தா ரென்றாலும் அவை
யொன்றும் எண்ணு
தின்னே, பித்தர்மொழி எனக்கருதி மறந்தருளென்று
ஒருகோடி

பிதற்றினனே.

மைவரையுந் தடங்கண்ணுன் மனச் சோகம்
பலமுகத்தான் மாற்றி மைந்தர் ஐவரையுந்
தனித்தனியே முகங்கொண்டு, கொடுங்கோபமகற்றி
நீங்கள்
மெய்வரையும் பொருபுயத்தீர் ! வற்போரில் இழந்த
வியனிலமும் தேரும் கைவரையும் பரிமாவும்
செல்வமும் யாவையும் மீண்டுங் கைக்கொள்வீரே.
கோம ந்றில் அருந்ததியைக் கொண்டினிநீர்
நில்லாமல் குருநாடே
போமென்று வரவழைத்துத்
தழீஇக் கொண்டென்கண்மலரே போல்வான் எம்பி,
யாமென்றும், அவனென்றும், இரண்டில்லை;
விளையாட்டென்

திருந்தேன் இவ்வா, றுமென்ப தெனக் கொருவர் உரைத்திலரால் யானு

முதலறிந்திலேனே. என் மைந்தர் இவர்; நீங்கள், அவன் மைந்தரென நினையேன்; இவரே எம்பி தன்மைந்த ர்; உங்களை யே என் மைந்தரென வளர்த்தேன்; சம்புநாட்டு மன்மைந்தர் உங்களைப்போல் வேறுபடா தித்தனைநாள் வளர்த்தாருண்டோ வின்மைந்தர் நடக்கவென விடைகொடுத்தான் விரகினுக்கோர்

வீடு போல்வான்.

உள்ளே காவுகொண்டிருக்கும்

இனியவுன்போல் இவ்வணம் உறவுகொண்டு உரையாடி நின்ற இவனது உண்மையை உடனே



2308 திருக்குறட் குமரேச

வெண்பா.

தெரிந்து சினந்து போய் வனம் புகுந்து அவர்
உறைந்திருந்தார். பகைமை மூண்டு துரி
யோதனன் முதலாயினோர் முடிவில் மடிந்து
போனபின் அவர் அத்தினபுரியை
அடைந்தார். மக்களனைவரும்
அழிந்துபோனதை நினைந்து அழுது நொந்து
அப்பொழுது அரண் மனையிலிருந்த இவன்
அவர் அடைவினைத் தெரிந்து அவர்பால்
ஆதரவுடையான் போல் அமைந்து
தோன்றி எனக்கு இனித் தருமனுதி ஐவரே
அருமை மக்களாவர் என்று உரிமைகூறிச் சஞ்
சயனல் அவரை அருகுவரச் செய்தான்.
அவ்வாறே அவர் வந்து வணங்கினர்.
குருடனமையால் யார்? அவர் என்று
இவன் குறித்துக் கேட்டான். எந்தையே!
நும் மைந்தர்யாம் என்று அவர் வாழ்த்தி
நின்றார். தன் மகனைக் கொன்றவன்

வீமனுதலால் அவனைக் கொன்றுவது பழிக்குப் பழிவாங்கிவிட வேண்டுமென்று வன்மங்கொண்டு "என் அப்பா வீமா! இங்குவா உன்னைக் தழுவி முத்தமிட இக் கிழவன் எண்ணுகின்றேன்; என் கண்ணே வருக வருக" என்று இருகரங்களையும் நீட்டி உரிமையோடு கூவினான். இக் கொடியவன் சொல்லை நம்பாமல் உடனிருந்த கண்ணன் அங்கு நின்றதோர் வயிரஞ் செறிந்த தூணைக் கொண்டுபோய் விசயமாகத் தந்தான். உடனே அதனை இறுக்கிப் பிடித்து நொறுக்கி விடுத்தான். குருட்டுப் பிடியாக அன்று இவன் கொண்டு செய்ததைக் கண்டு ஐவரும் குலை நடுக்கங்கொண்டார். புன்னகைசெய்து கண்ணன் நகைத்தான். நல்லவன்போல் உருகி நன்கு சொல்லினும் இவன் கொல்ல நின்ற உண்மை உடனே குறித்துணர நின்றது. நட்டார்போல் நல்லவை சொல்லினும், ஒட்டார்சொல் ஒல்லை

உணரப்படும் என்னும் உண்மையை உலகம்
காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.
அத்தினபுரியதனில் ஐவருடன் சென்று அரியும்
அந்தன் முன்னர்ப் பத்தியினால் இறைஞ்சிட. மற்றெவர்
கொல்? எனத் தருமன் முதற்பாலர் என்ன;
வித்தகனும் ஆசி சொற்றுச் சதாகதி சேயினைத்
தழுவவேண்டும் என்ன; அத்தன், அத்தான்
அளித்தருளத் தழுவி செரித்தனன்,

தகன்களாயது
அம்மா!

இப் பாரதப் பட்டு மேற்குறித்த
உண்மையை உணர்த்தி நிற்றல் காண்க.
அந்தன் = திருதராட்டிரன். இவனை வித்தகன்
. 83-ம் அதிகாரம் கூடாநட்பு.
2309

என்றது சொல்லால் மயக்கி வினைசூழ்ந்து
நின்ற விரகுடைமை கருதி. சதாகதி சேய்
= வீமன். கண்ணனை இதில் அத்தன்

என்றது தந்தைபோல் அமைந்து ஐவரை அன்று அருளுடன் காத்துநின்ற அருமை கருதி. ஒட்டார் இன்புறச் சொல்லினும் அதனை நல்லதாக
நம்பிக்கொள்ளலாகாதென்னும் உண்மையை இக் கண்ணில்லான்பால் கண்டு தெளிந்து கண்ணன் முதலாயினோர் வியந்து சென்றார்.

## கதை 2.

சார்வாகன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு
முன்னர் அத்தினபுரியை அடுத்திருந்த உக்ராகிரி என்னும் ஊரி லிருந்தவன். சித்திரப் புலமையில் இவன் மிகச் சிறந்தவன். அசு

ரர் மரபினன். குறுசில மன்னரையினும் பெருசில வேந்தரும் பேண நின்றவன். யாதும் அஞ்சா நெஞ்சினன். உள்ளியதை உறுதிபெற முடிக்கும் கொள்கையுடையவன். வஞ்ச நிலையோடு பல்வகை உபாயங்களையும் நன்கு பயின்றவன். இவனது விஞ்சை வலியை

நோக்கிச் சஞ்சயரும் வியந்துள்ளார்.

துரியோதனன்

இவன்பால் மிக உறவு கொண்டிருந்தானாகலால் அவன் இறந்ததை நினைந்து இவன் ஏங்கி வருந்தினான். அவன் பகைவராகிய பாண்டவர்கட்கு இடர் இழைக்கத் துணிந்து இடம் காலங்களை எதிர் நோக்கி நின்று அவர் பரிவேள்வி செய்யுங்கால் முனிவேடம் கொண்டு இடையே புகுந்து முனிவர் பலரோடு உடனமர்ந்திருந்து வெளியில் நல்லதுபோல் சொல்லி உள்ளே மந்திரங்களை மாறுபட ஓதி அவர்க்கு ஊறு செய்து நின்றான். இவனது சொல்லின் தீமையைக் கண்ணன் சூழ்ச்சியால் உடனே உணர்ந்து முனிவர்கள் கொதித்துச் சபித்தார்; அதனால் இவன் குலைந்து தொலைந்தான். நல்லவை நட்டார்போல் சொல்லினும் ஒட்டார்சொல் ஒல்லை யுணரப்படும் என்பது இவனிடமும் அன்று உணர நின்றது.

எட்டிக் கனியினிதா எய்தினும்உள் இன்னாதே
ஒட்டார்சொல் அற்றே உணர்.

கூடார் வாய்ச்சொல் கேடே விளைக்கும்

என்பது இதனால்

கூறப்பட்டது.

---

வெண்பா.

827 வள்ளற் சடிமன் மருவலன்வாய்ச் சொல்லைநம்பிக்
கொள்ளவில்லை என்னே குமரேசா—எள்ளளவும்
சொல்வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.
(எ)

இ—ள்.

குமரேசா! முன்பு தன்பால் பகைமை கொண்டிருந்த கருணகண்டன் பின்பு வணங்கி வந்து இனியன பல சொல்லியும் சடி அரசன் அதனை நல்லதென்று நம்பி ஏன் கொள்ளவில்லை எனின், வில்வணக்கம் தீங்கு குறித்தமையான், சொல்வணக்கம். ஒன்னார்கண் கொள்ளற்க என்க.

இது, பகைவர் இனிமையுறச்

சொல்லினும் உரிமையாக வுள்ளலாகாதென் கின்றது.

ஒன்னார் = பகைவர். தீங்கு = தீமை.

சொல்வணக்கம் என்றது பகைவரது பணிமொழியை. செருக்குஞ் சினமும் ஒழிந்து பணிந்துவந்து தம் வணக்கத்தைச் சொல்லால் உணர்த்தி நிற்றலால் இது சொல் வணக்கம் எனநின்றது.

உள்வணக்கம் இல்லாமலே சிலர் சொல்வணக்கம் காட்டுவராதலால் அதனை நல்வணக்கம் என்று நம்பலாகாதென்பதை நன்குணருமாறு வில்வணக்கத்தை விளக்கிக் காட்டி இஃதுணர்த்தி நிற்கும் அழகையும் அருமையையும் ஊன்றியுணர்க.

மேல் உரிமையாளர்போல் இனிதுறச் சொல்லினும் பகைவர் சொல்லை நல்லதென்று நம்பலாகாதென்றார்; இதில், அச்சொல் கொல்லுந் திறத்தையே குறித்து நிற்குமென

உணர்த்துகின்றார்.

சொல்லினது வணக்கம் தீமை செய்தலைக் குறித்துள்ளமையால் பகைவரிடம் தோன்றும் சொல்லினது வணக்கத்தையும் நல்லதென்று நம்பிக்கொள்ளலாகாதென்பதாம்.

பிறரிடங் கொண்டால் ஒரு துயரும் உண்டாகாதாதலால்

கொள்ளாமைக்கு ஒன்னார் உற்றபிடமாயினார்.

83-ம் அதிகாரம் கூடாநட்பு. 2311

பகைமையெல்லாம் ஒழித்தேன்; இன்றுமுதல் உங்கள் உவகையின்படியே நடந்துகொள்வேன்; என்னை உறவினனாகக் கருதிக்கொள்ளவேண்டுமென்று பகைவனொருவன் வந்து பணிந்து சொல்லின், அதனை உண்மையென்று நம்பிக்கொள்ளலாகாதென் பார் ஒன்னார்கண் சொல்வணக்கம் கொள்ளற்க என்றார்.

பகைவரது சொல்வணக்கத்தின் தீமையை உணர்த்தற்கு வில்வணக்கத்தை இணைத்துக் காட்டியது கொலை குறித்து நிற்கும் அதன் கொடுநிலை எளிதில் தெளியும் என்பது கருதி என்க.

வில் நிமிர்ந்திருக்குங்கால் யாதொரு தீங்கையும் நிகழ்த்தாது; வளைந்தபோதுதான் குறிபிழையாதபடி அம்பினை எவிக் கொலை விளைத்து நிற்கும் ஆதலால் வில் வணக்கம் தீங்கு குறித்தமை யான் என்றார்.

உள்ளத்தில் இணக்கமில்லாது சொல் வணக்கத்தை உண்மையென்று நம்பி உறவு கொள்ளின், பின்பு உறுதியாக அழிவு கொள்ளவரும் ஆதலால் அதனைக் கொல் வணக்கம் என்றே தெளிந்து குறிக்கொண்டு ஒழித்துவிடவேண்டும் என்றவாறு.

உளத்தால் பகைத்தாரை ஓராது நட்டல்
வளத்தோடு உயிர்போக்கும் அந்தோ !

வபவர்க்

களைப்பில் புறப்பகை யாற்றுயமொன் ?

அஃதே

விளக்கின்கண் விட்டில் விழல்.

என்பதூஉம் காண்க.

ஒன்னார் சொல்லை கா பி

உறவுகொள்ளலாகாதெ்தன உறுதி தோன்ற இந்துணர்த்தி நிற்றலை ஊன்றி உணர்ந்து கொள்க,

வான்வகுத்த படையிரும்பு, வேர்சாயக் கிளைத்தழுது வளர்க்குஞ்சாலி

ஆன்வகுத்த கூனிரும்பு தான்பணிதல்போல் அடியூடரிந்த வாற்றால்

கேள்படைத்த மனத்தயோர்

பகைமைபாராட்டுகினும் கேண்மைநீங்கார்;

தான்பிடித்து முடிவணங்கித் தனது பாராட்டுகினும் தடிவார் தெவ்வர்.

(திருக்குற்றால புராணம்).

படையிரும்பு = உழுகின்ற கொழு. கூனிரும்பு = அரிவாள். தெவ்வர் = பகைவர். தடிவார் = கொல்வார்.

புன்செய்களில் செய்யும் பயிரடிப்பையும், பயிரறுப்பையும் குறித்துத் திரிகூடப்பக் கவிராசர் பாடியுள்ள இதில் ஒன்னார் 2812 திருக்குறட் குமரேச வெண்பா.

வணங்கிய சொல்லினராய் வரினும் அவரோடு உறவாய் இணங்கலாகாது; அவரது சொல்வணக்கம் உறுதியாகக் கொல்வினைக்கே ஏதுவாம் எனத் தெளிவுற மிக வினயமாக உணர்த்தியிருக்கும் அழகை நோக்குக.

உள்ளம் உருகும்படி குழைந்துபேசி நல்லவர் போல் நடித்து நயந்துவரினும் கூடாதாரை நம்பக்கூடாதென்பது குறிப்பு.

பகையாயிருந்தவர் இனியராகவந்து வணங்கிச் சொல்லினும் அச் சொல்லை நம்பி நட்புக்கொள்ளலாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சடிமன்பால் உணரப்படும்.

## கதை.

சடிமன் என்பவன் இற்றைக்கு மூனாயிர ஆண்டுகட்கு முன்னர் இரதநூபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். நல்ல நீதிமான். கலைபல பயின்றவன். நுழைபுல முடையவன். அழகும் வன்மையும் ஆண்மையும அடக்கமும் விழுமிய ஒழுக்கமும் மேவப் பெற்றவன். அரசிய லமைவுகள் யாவும் வழுவறத் தெளிந்து அருள் மிகவுடையனாய் உயிர்களுக்கென்றும் இதம் மிகச் செய்தவன். இவனுடைய மனைவி பெயர் வாயு வேகை. அவள் பொற்பிலும் கற்பிலும் புகழ் மிகப்

பெற்றவள். உயிரும் உடலும் போல் ஒருமையெய்தி அவளோடு இவன் மருவி வாழ்ந்து அருக்க கீர்த்தி என்னும் புதல்வனொருவனையும், சயம்பிரபை என்னும் ஓர் அழகிய மகளையும் பெற்றுப் புகழ்வளர்ந் தொளிர இவன் உளமகிழ்ந்திருந்தான். சுமந்திரி சுச்சுதன் சுதாகரன் பவச்சுதன் என்னும் அமைச்சர் நால்வரும் இவனுக்கு உயிர்த்துணைவராய் அமைந்திருந்தனர். அம்மதிமான்களும் வியந்துகொள்ளுமாறு அரசநீதிகளை நுணுகி யுணர்ந்து இவன் இனிது கூறிவந்தான். மந்திராலோசனை செய்யும் சபாமண்டபத்தில் ஒருமுறை அவர் முதலாக அறிஞர் பலர் முழுமியிருந்தபொழுது மன்னரியல்களைக் குறித்து நன்னயம்பெற இவன் இன்னுரையாடினன். அவ்வுரை யாடலை

அக்காலத்திருந்தவரனைவரும் புகழ்ந்து போற்றினர். அன்று இவன் உரைத்தவற்றுள் சில இதனடியில் வருவன.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2313

வாள்வலித் தடக்கைமன்னர் வையகம் வணக்கும் வாயில்
தோள்வலி, சூழ்ச்சி என்றாங்கு இருவகைத் தொகையிற்றாகும்
ஆள்வலித் தானையார்கட்கு ஆதியது அழகிதேனும்
கோள்வலிச் சீயம்ஒப்பீர் சூழ்ச்சியே குணமதென்றான் (க) வடந்திசழ் முலையினார்தம்
காமத்தில் மதர்த்த மன்னர்க்கு
அடைந்தவா மாண்பும் ஆங்கொன்றில்லை; அவ் அரசவாழ்க்கை
கடந்தவழ் கடாத்த வேழம் களித்தபின் கல்விமாணா
மடந்தவழ் ஒருவன் மேல் கொண் டன்ன தோர்

வகையிற்றுமே. (௨) சந்தரச் சுரும்புண் கண்ணிச் சூழ்கழல் அரசர் வாழ்க்கை,
தந்திரம் அறிந்து சூழ்வான் சூழ்ச்சியது அமையல்வேண்டும்
மந்திரம் வழுவுமாயின் வாளெயிற்று அரவுகாய்ந்து
தந்திரம் தப்பினாற்போல் தன்னையே தபுக்குமன்றே. (௩) இவற்றால் இவனது ஒழுக்கமும், அடக்கமும், மதிமாட்சியும், அரசாட்சியும், மனப்பான்மையும்
இனிதுணராகும். இவன் உடைத்துள்ள பொருள் நலங்களை யென்றி நோக்கி உணர்ந்துகொள்க. இங்ஙனம் போற்றிவாளாய் விளங்கி நின்ற இவன்பால் கருணைகண்டன் என்பவன் பகைமை கொண்டிருந்தான். அவனோர் பெருநிலமன்னன். தன் காரியங்களைச் சாதித்துக்கொள் வதில் மிகச்

சுந்தரன். பலமுறையும் இவனோடு அமர் செய்
[illegible] பலியாமல் முனைமடங்கி
மீண்டான். மீண்டும் நெஞ்சம் [illegible]றுங்கியே
நின்று வஞ்சங்கள் பல சூழ்ந்தான்.
ஒன்றும் முடியாமையால் முடிவில் இவனோடு
உறவுகொள்ள முடிவுசெய்துகொண்டான்.

மன்னவர் மன்னனே! மாசிலாத நின்
பொன்னடிக் கன்பனாய்ப் பொருந்தி
நின்றேன்;

முன்னைய பகைபிழை முழுவதும்
பொறுத்து

அன்னைபோல் இனியெனை
அருளவேண்டுமே.

என்பதாதியாக இதம்பெற எழுதிய இனிய திருமுகங்களைத் தூதுவர் வாயிலாக இடையிடையே நலம்பெற விடுத்துப் பகைமறந்து ஒருமுறை நேரில்வந்து வணங்கியவாயினனாய் இணங்கியிருந்து இன்னுரை பாடி நட்புச் செய்துகொள்ளும்படி.

கன்னயங்கள் பல செய்தான். இவன் தண்ணளியுடையனாதலால் உடனே இரங்கி



உவந்துபசரித்து ஆதரவுசெய்து போதர விடுத்தான். போன அவன் சின்னாட்களுள் அச்சுவக்கிரீவன் என்னும் அரசனோடு உறவுசெய்துகொண்டு உள்வஞ்சமாய் நின்று பின்பு இவனுக்கு அழிவுசெய்ய எண்ணினான். அதனை இவன் எதிரறிந்து தெளிந்து வரவிடாதபடி செய்து அவன் புதிய உறவினை அறவே ஒழித்தான். முன்பு அவன் வணங்கிச் சொல்லியவற்றையெல்லாம் நினைந்து நினைந்து பின்பு இவன் உளக்கொதித்து நின்றான். ஒட்டார்சொல் நம்பி உறவுகோளல் உற்றகுடி, கெட்டார் செயல்அந்தோ கேடு என இவன் நாடித் தெளிந்து அன்றுமுதல் உலகப்பளவில் யாரையும் நம்பாமல்

தேறியிருந்தான். இழிந்தவஞ்சர் சொல் குளிர்ந்த நஞ்சு என்று எவரும் தெளிந்துகொள்ளும்படி பலமுறையும் தன் அரச சபையில் இவன் உரைசெய்து வந்தான். வில்வணக்கம் போலவே ஒன்னார் சொல்வணக்கம் தீங்கு விளைக்கும் ஆகலால் அதனை நல்லதாக நம்பிச் சிறிதும் கொள்ளலாகாதென்பதை இவன் குறிக்கொண்டுணர்த்தினான்.

*பச்சென் றடர்ந்த பசும்புல்லை மேற்கொண்டு*
*நச்சுநீர்ப் பாழ்ங்கூவல் நண்ணல்போல்—இச்சையுறப்*
*பேசி நகைத்துறவு பேணி நயவஞ்சர்*
*நாசமுறச் செய்வரே நாடு.*

அன்பரேன வஞ்சர் அருகணைவார் ஆமாபோல்
நம்பினல் நாசமே நாடு.
*பகைவர் சொல்லை நம்பி*

உறவுகொள்ளலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

828 சார்ந்து தொழுதிடினும் தத்தனேன் மூத்தனைமுன்
கூர்ந்துயிர்த்து நின்றான் குமரேசா—சோர்ந்தே
தொழுதகை யுள்ளும் படையொடுக்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! தொழுத கையனாய் உரிமையோடு வந்த மூத்தாதனை நம்பாமல் தத்தன் ஏன் அயிர்த்து நின்றான்



ரணின், தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்;

ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து என்க.

இது, பகைவர் வணங்கிவரினும் உறவாக நம்பி இணங்கலாகாதென்கின்றது.

முத்தனை முன்கூர்ந்து தக்கன் அயிர்த்தான் என்றது அவனது நடையினையும் வரவினையும உருவையும் கண்டு வஞ்சவேடமென்று ஐயுற்று 'அரசுக்கு இதுபொழுது அமயமில்லை சிறிது நில்லுங்கள்' என்று வாயிலில் நின்று நிறுத்தினமை கருதி.

படை என்றது கொலைக்கருவியை. படுத்தற்குரியது படை என்க. படுத்தல் = அழித்தல். ஒன்னார் = பகைவர்.

இடையே நின்ற ஒன்னாரை எரிடத்தும் இயைத்துக் காண்க.

ஒன்னார் தொழுதகையுள்ளும் அழுதகண்ணீருள்ளும் படை ஒடுங்கும் என அச்சுறுத்தியது அவரை நம்பி மோசம்போகாமல் அஞ்சி நீங்குமாறு அறிவுறுத்தற்கென்க. உம்மை இரண்டனுள் முன்னது சிறப்போடு எதிரது தழுவிய எச்சமாம்; பின்னது இறந்தது தழீஇயதென்க.

தொழுத கைஉள்ளும் படையொடுங்கும் ஒன்னார் அழுதகண் ணீரும் அனைத்து. (828)

தொழுத கையுள்ளும் படையொடுங்கும் - பகைவர் தொழுத கையினுள்ளும் கொலைக்குரிய படைக்கலம் மறைந்திருக்கும்; ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து - அவர் அழுத கண்ணீரும் அத்தன்மைத்து.

தொழுது நெருங்கிய பின்னரே அழுது வஞ்சிக்க அமையுமாதலால் அவ்வுரிமை தோன்ற அது முதலில் நின்றது.

மேல், பகைவர் சொல்லை நம்பலாகாதென்றார்; இதில், அவர் செயலை நம்பிச் சோராகாதென்கின்றார்.

பகைவர் தொழுதகையகத்தும் கொலைக்குரிய படைக்கலம் மறைந்திருக்கும்; அவர் அழுத கண்ணீரும் அவ்வாறே அதனை மறைத்து வைத்தற்கு இடமாம் என்பதாம்.

நெஞ்சில் நேர்மையின்றிப் பகைமைகொண்டு நிற்கும் வஞ்ச மக்களது கை கண் வாய்களில் நிகழும் தொழுதல் அழுதல் சொல்லல் முதலிய செயல்வகைகளால் அவரை நல்லரென்று நம்பலாகாதென்றவாறு. தொழுகையும், அழுகையும், பணிவுரிமைகளைப் புலப்படுத்தற்குக் கருவிகளாகுமாதலால் அவை வாயிலாக, வஞ்சித்துப் பகைவர் அழிவு செய்வர் என்பது கருதி அவ் இரண்டையும் ஈண்டு எடுத்துக் காட்டினார்.

வெண்பா.

பகைவர் தொழுதாலும் அழுதாலும் அவரை இனியரென்று நம்பித் தழுவலாகாது; தழுவின் வாழ்வாமல் அழிவு நேரும் என்றவாறு. தன் பகைமை தோன்றாவண்ணம் நீலி வந்து அழுது தெளிவித்துப் பின்பு பழிவாங்கிப் போனதுபோல் தம் கண்ணீரால் வஞ்சர் காரியங்கொண்டு போவாராதலால் அக் காரியப் புலிகளை முன்புற அஞ்சி நீங்கவேண்டும் என்க.

தொழுத தம் கையினுள்ளும், அறுமுடி யகத்தும், சோர
அழுதகண்ணீரினுள்ளும், அணிகலத்தகத்தும், ஆய்ந்து
பழுதுகண்ணரிந்து கொல்லும் படையுடனெடுங்குப; பற்று

தொழிக யார் கண்ணும் தேற்றம;
தெளிதுற்றா விளிசுற்றரோ.

என்றார் திருத்தக்கதேவரும். நம் அடிகள் கருத்தை அடியொற்றி மேலுஞ் சிலகூறிக் கூடா நெஞ்சரை நண்பாகக் கூட லாகாதென உறுதிபெற இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

மெழுகினால் நமக்கு ஆலயம் வகுத்ததும் விரகே;

ஒழுகுகின்றதன் ஒழுக்கமும் வஞ்சனை ஒழுக்கே;

எழுகடற்படை யாவையும் இவன்வழி யனவே

தொழுத கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்,

இது, கொலைசூழ்ந்து தம்முடன் வஞ்சித்து நின்ற புரோசனனது செயல்களை நோக்கித் தம்முள்ளேயே பஞ்சவர் சொன்னது. அடிகள் அருள்மொழியை

இதுவும் தழுவியுள்ளமை காண்க. அவ் வஞ்சனை நம்பாமல் முன்புற நீக்கித் தம்மை அவர் பாது காத்துக் கொண்டதுபோல் கூடாரைக் கூடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்றவாறு.

அழுதும், தொழுதும், அன்புரையாடியும் வஞ்சர்தம் காரியங்களை முடிவுசெய்து கொள்வாராதலால் அம் முடிவாளரை முன்னறிந்து முடிவாக நீக்கிவிட வேண்டும்; இல்லையாயின் நஞ்சை யுட்கொண்டதுபோல் நாசமுற நேரும் என்க.

நெஞ்சில் அன்பின்றி யிருந்தும் அழுதல் முதலிய செயல்களால் வஞ்சித்துக் காரியங்கொண்டு போகும் புல்லனை அழுகள்ளன், தொழுகள்ளன், ஆசாரக் கள்ளன் என்பர்.



பகைவர் பல்வகை மாயங்களைச் செய்து

கல்லவர்போல் நனு
துவா ாதலா ல் அவை ர இனியரென எளிதில்
நம்பிக்கொள்ளலாகா
தென்பது இதன் திரண்ட பொருளாம்.
ஒன்றைத் தேறேல். என்றார்
ஔவையாரும்.
கூடாதவருறவாக் கூடல் கோடுங் கேடு,
கோடாமல் கோள்
ளுங் குறி. என்று உள்ளங்கொண்டு
எவ்வகையிலும் நம்பாமல்
அவரைத் தள்ளிவிடவேண்டும் என்பது கருத்து.
பகைவன் வந்து பணிந்து தொழுதாலும்
உண்மையென்று நம்பி அவனை நட்பாக
உட்கொள்ளலாகாது என்பது இதில்
உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை தத்தன்பால்
உணரப்படும்.

கதை.

தத் தன் என்பவன் இற்றைக்குப் பல
நூற்றாண்டுகட்கு முன்னர்த் திருக்கோவலூ ரி

பிறந்தவன். அந் நகரிலிருந்து அரசு புரிந்தசெகி மன்னனாகிய நீதிமானுக்கு ஆருயிர்த் துணைவனாயும்
அமைச்சனாயும் இவன் அமைந்திருந்தான். எப்பொழுதும் மெய்ப் பொருளையே சிந்தித்திருந் ததால் மெய்ப்பொருளார் என விளங்கி நின்ற அவ் அரசர் பெருமானுக்கு உழையிருந்து உறுதிகள் பல சூழ்ந்து உயிர்களுக்கு இவன் இதஞ்செய்துவந்தான். அரசியற் றுறைகளை வழுவறத் தெளிந்து பருவந் தவறாமல் இனிது நடாத்துவதில் இவன் மிகவுஞ் சதுரன். வில் வாள் முதலிய பல் வகைப் படைக்கலங்களிலும் நல்ல பயிற்சி யுள்ளவன், போரில் வல்லவன். எதனையும் நுணுகி நோக்கி எதிர்ந்து வினைசெய்யும்

இயல்பினை யுடையவன். திண்ணியனாய் நின்று எண்ணியதை முடித்துக் கண்ணுக்கு இமைபோல் மன்னனுக்கு இனியனாய் இவன்நண்ணி யிருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் தன் அரசோடு மாறுபட்டுப்பல முறையும் போர்செய்யவந்து சோழிந்து போன முத்தநாதன் என்னும் குறுநில மன்னன் இனி நேரில் வெல்லமுடியாதென்று தெளிந்து கெடுமதி யுடையனாய்ச் சதி செய்ய நினைந்து உடல் முழுவதும் வெண்ணீறு பூசிச் சடைமுடி தரித்து மாதவன்போல் வஞ்சவேடங்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். அரண்மனை வாயில்கள் பலவும் கடந்து அரசன்



தனியே அமர்ந்திருக்கும் அழகிய மாளிகையை அணுகினான். அவ்வமயம் அங்கு வாயிலின்கண் நின்ற இவன் அவனது நிலையினை நோக்கி ஐயங்கொண்டு, “நில்லுங்கள் இப்பொழுது உள்ளே செல்லலாகா”தென்று சொல்லி நிறுத்தினான். அவன் நல்லவன்போல் நகைபுரிந்து நின்று, “

மன்னனுக்கு யான் மிக உரிமை யுடையவன்; ஓர் அரிய பொருளை அருள்செய்ய வந்தேன்'' என்பதாதியாக இனிமை ததும்பக் குழைந்து பேசிக்கொண்டே உள்ளே நுழைந்து விட்டான். அடியவர்பால் பெரு விருப்புடைய அவ் அரசர் பெருந்தகை அக் கொடியவன் வாயினைக் கண்டு வஞ்சமென்று கொள்ளாது மகிழ்ந்துகொண்டார். அவர் உவந்து கொண்டபின் இவன் யாதும் செய்யமாட்டாமல் அருகே அயிர்த்து மறைவில் அமர்ந்து நின்றான். அவ் வஞ்சன் உள்ளே ஒரு வரையும் வாவிடாதபடி செய்து உடனமர்ந்திருந்து சிறிது உரையாடிய பின்பு தன் கையில் மறைத்துவைத்திருந்த கூர் வாளைக் கடுக எடுத்து அம் மெய்யர் கவிழ்ந்திருக்குங்கால் கழுத்தற வீசினான். உடனே உருவிய வாளோடு உள்ளே இவன் துள்ளிப் பாய்ந்து அவனைக் கொல்ல ஓங்கினான்; தவ வேடங்கொண்டுள்ளாரை கொல்லாதே

என்று அவர் சொல்லி வீழ்ந்தார். மன்னர் சொல்லை மறுக்காத இவன் மறுகி நின்றான். அவர் மொழியையும் அன்றா நின்ற இவன் நிலையையும் அடியில் வரும் பெரிய புராணப் பாடலிலும் இனிதுணரலாகும்.

மறைத்தவன் புகுந்த போதே மனம்
அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினால்
எறிய லுற்றான;
நிறைத்தசெங் குருதி சோர
வீழ்கின்றார், நீண்ட கையால்
தறைப்படும் அளவில் தத்தா நமரென்று
தடுத்து வீழ்ந்தார்.

அடியவன்போல் வந்த கொடியவனை நம்பி அரசு இங்ஙனம் முடிவடைந்ததே யென்று இவன் உளமிக நொந்தான். தொழுது வந்தாலும் அழுது நின்றாலும் பகைவரை நம்பலாகாதென்று தான் நம்பி

யிருத்தலைக் கண்கூடாக அன்று இவன் கன்கு கண்டான், வஞ்சகரை நஞ்செனவெறுத்தான். கூடா நட்பின் கொடுமையை யாரும் தெளிந்து கொள்ளுமாறு கேரில்.
83-ம் அதிகாரம் கூடாநட்பு.
2319

யொழிந்து வந்தான். தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் ஒன்னார் அழுத கண்ணீரும் அனைத்து என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

தூயவர்போல் தோன்றித் தொழுதழுவார்
மாயவினை செய்வார் மதி.

துன்னார்பின்

கோடிவகை செய்தாலும் கூடாரை நம்பிக் கூடலாகாது என்பது இதனால் கூறப்பட்டது.

829 உள்ளிகழ்ந்த வாகனிடம்
ஓகைசெய்து கோமுகனென்
கொள்ளநின்றான் வேறு
குமரேசா—கள்ளம்
மிகச்செய்து தம்மெள்ளு வாரை
நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. (கூ)

இ—ள்.

குமரேசா! உள்ளே
பகைமைகொண்டிகழ்ந்து புறத்தே
நகைசெய்துவந்த வாகனோடு கோமுகன் என்
வஞ்சமாக நட்புச் செய்து விட்டான் எனின்,
மிகச்செய்து தம் எள்ளுவாரை நகச் செய்து
நட்பினுள் சாப்புல்லல் பாற்று என்க.

இது, வஞ்ச நெஞ்சரோடு மருவி வாழும்
வகைமை கூறுகின்றது.

வேறுகொள்ள நின்முன் என்றது நேரில் வந்தபோது முகத்தில் மாத்திரம் உரிமையாளன் போல் நகைசெய்து அகத்தில் உறவு கொள்ளாது அகன்றிருந்தமை கருதி.

மிக = மிகுதியாக. செய்து என்னும் வினைக்கு ஏற்ற செயப்படு பொருளை இதில் வருவித்துக் கொள்க. அப்பொருள் நட்பு என்பது அதிகாரத்தால் காண்க. புகழ்ச்சியுமாம்.

சாப் புல்லல் = சாகும்படி பொருந்தல்; அஃதாவது நீளப் பொருந்தாது விரைவில் மாளச் செய் தொழிக என்றவாறு. சாவ என்பது ஈறு தொக்கு நின்றது. சாவ என்னும் செயவெனெச் சத் திறுதி வகரம் கெடுதலும் உரித்தே. என்றது தொல்காப்பியம். "கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக் குத்தி" என்ற முல்லைக் கலியும் ஈண்டு உள்ளத்தக்கது. "தாய் சாப்பிறக்கும் புள்ளிக்களவன்" என்றதும் காண்க.

2320 திருக்குறட் குமரேச வெண்பா.

பாற்று = பான்மையுடைத்து. உள்ளம்
ஒட்டார் உறவினை ஓர்ந்து
ஒழிக்கவில்லையாயின் மெல்ல வளர்ந்து
பின்பு அல்லல் விளைக்குமாதலால் புல்லாது
அதனைப் போகவிட வேண்டும் என்றவாறு.
இன்னாதே ஒற்றுமைகொள்ளாதார் நட்பு.
என்பதும் காண்க.

மேல், பகைவர் வணங்கிய
சொல்லினராய்த் தொழுதவரினும் அவரை
நம்பலாகாதென்றார்; இதில், அவ்
வகையினரோடு இணங்கி ஒழுகவேண்டிய
இயல்பினை புணர்த்துகின்றார்.

புறத்தில் உரிமையை மிகச் செய்து
அகத்தில் தம்மை இகழும் பகைவரைத்
தாமும் புறத்தே அவர் நகும் வகைசெய்து
அகத்தே அவர் உறவினை
ஒழித்துவிடவேண்டும் என்பதாம்.

நகைவகையில் புல்லி நட்பினில்

அவருறவினைக் கொல்லவேண்டும் என்பார்
நட்பினுள் சாப்புல்லல் என்றார்.
என்னுவாரைப் புல்லல் என்றது அவரால்
விளையும் அல்லல் கருதி என்க.
உள்ளம் பொருந்தாமல் என்னலைச்
செய்துகொண்டு புறத்தே கள்ளம் புரிந்து
நல்லவர்போல் நடித்துச் சிலர்
நட்புச்செய்ய வருவர்; அவர்பால் தாமும்
அவ்வாறே கள்ளஞ்செய்து நின்று
கழித்துவிடவேண்டும் என்பார் நகச்செய்து
நட்பினுள் புல்லல் என்றார். இவ்வாறு
அகமொன்று புறமொன்றுதல் தகவன்றாயினும்
பகைவர் மாட்டு அது தகும் என்க.
உள்ளே எள்ளிநின்ற துரியோதனன்,
எதிரே புகழுறவுகளை மிகச்செய்து தன்னைப்
படைத்துணையாக அழைக்கவந்த பொழுது.
"வருக வருக" என்று பெருக மொழிந்து
இறுகத் தழுவி நகச்செய்து கண்ணன்
அவனை நழுவவிட்டதுபோல் உள்ளங்கூடா

தாரை உரை யளவில் புல்லி
ஒழியவிடவேண்டும் என்க.

மெல்லிய நல்லாருள் மென்மை; அது
விறந்து
ஒன்றாருட் கூற்றட்கும் உட்குடைமை;
எல்லாம்
சலவருட் சாலச் சலமே; நலவருள்
நன்மை வரம்பாய் விடல். என்றது
நாலடி.

சேர்ந்து வருவார் இயல்புகளை
ஓர்ந்துகொண்டு தன்னிலை குன்றாமல் தேர்ந்து
ஒழுகலே ஒருவனுக்குச் சதுரப்பாடாம் என்க.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

8321

மாசர்க்கு இகம்; கவி வாணர்க்குச் சால
வணக்கம்; குரு
நாதர்க்கு நீதி யொடாசாரம்;
நண்பினயந்தவர்க்குக்,

கோதற்ற வாசகம்; பொய்க்குப் பொய்;
கோணுக்குக் கோண்; அறிவி
லாதர்க்கு இரட்டிப்பு; அறிவுடையோர் செய்யும்
ஆண்மைகளே.

என்பதும் ஈண்டு அறியத்தக்கது.

இடங்கண்டு இனமறிந்து, இதந்தெரிந்து மக்கள் ஒழுகும விதங்களைத் தெளிவாக இஃதுணர்த்தி நிற்றல் காண்க

அகம் நகாமல், முகம்நக நிற்பது கூடாதாயினும், கூடா நட்பினர்பால் அது கூடும் என அடிகள் இதில் குறித்திருக்கும் அருமையைக் கூர்ந்து காண்க.

முகத்தெதிரே புகழுரைகளை மிகச் செய்து புறத்தேபோய்
எள்ளி நிற்கும் புல்லரை நட்பாகப்
புல்லலாகாதென்பது கருத்து.

உள்ளன்போடு உரிமை செய்து நிற்போரையே உறவாகக் கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

நெஞ்சில் அன்பில்லாமல் புறத்தே

வஞ்சித்து ஒருவன் உறவு கொள்ளவரின் அவ்வாறே அகம் ஒட்டாமல் நின்று முகத்தை காட்டி நடித்து அதனையும் முடிவில் அறவே ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோமுகன்பால் உணரப்படும்.

## கதை.

கோமுகன் என்பவன் கௌசாம்பி நகரிலிருந்த மதிமந்திரி யாகிய இடவகனுடைய அருமைத் திருமகன். பல கலைகளிலும் இவன் தலைமையான புலமை வாய்ந்தவன். நல்ல அழகன். "வலம்பெறு சிறப்பின் வனப்பொடு புணர்ந்த, நலம்பெறு கோமுகன்" என இவன் விளங்கியிருந்தான். இயற்கையில் மிக்க நுண்ணறிவாளன். தாவர தத்துவத் தேர்ச்சியிலும், உருவ நூலுணர்விலும் இவனுக்கு நிகரானவர் அக்காலத்தில்

ஒருவரும் இலர். ஒருவனை நேரிலே காணாமலே அவனது கழிந்த கேசம், உதிர்ந்த மயிர் முதலிய இயைபுடைய ஏதேனும் ஒன்றைக் கொண்டு அவனுடைய குணம், செயல், பருவம், உருவம், அழகு முதலியன அனைத்தையும் வழுவற வடிவமைத்து இவன் காட்டி 2322 திருக்குறட் குமரேச வெண்பா.

விடுவான். உயர் அரசனை நரவாணனுக்கு ஆருயிர்த் தோழனும் அமைச்சனும் இவன் அமைந்திருந்தான். அவன் ஒருநாள் யானைமேலேறித் தோழர்கள் புடைசூழ உலா வருங்கால் நிலா முற்றத்திலிருந்து மதனமஞ்சிகை என்னும் ஓர் அழகி விளையாடிக் கொண்டிருந்த இனிய பந்து ஒன்று துள்ளிவந்து அவன் துகிலில் விழுந்தது. அதனை எடுத்துக்கொண்டுபோய் ஒரு

பனிமலர்ச் சோலையில் தனியேயிருந்த
இவனிடம் வந்து இதனை எறிந்தவள் யார்?
என்று அறிந்து சொல்லும்படி விழைந்து
வேண்டினான். சந்தனம் தோய்ந்த கையால்
அவ்வமயம் அது பற்றப் பட்டிருந்தமையால்
விரல்களின் சுவடுகளை நுணுகி நோக்கி அப்
பொழுகியின் முழுவடிவத்தையும்
விரைவிலெழுதிக் காட்டினான். இவன்
யூகத்தால் அன்று சிந்தித்துத் தெளிந்த
அருமையைக்
கொங்குவேளிர் என்னும் புலவர் பெருமானார்
ளார். இங்குச் சிறிது காட்டுதும்
அழகுறக் கூறியுள்

"செய்பந்து ஈதுடைச் சேயிழை
மாதரை
ஐயமின்றி அறிதி யாயின்
மெய்பெற உரையென, மேயினன்

வினவக்

கையிற் கொண்டோன் கண்டனன்
அதன்மிசை

ஒற்றிய ஒற்றைத் தெற்றெனத்
தெரிந்து

நறுவெண் சாந்தம் பூசிய கையால்
செறிவுறப் பிடித்தலின் செறிவிரல்
நிரைவடுக்

கிடந்தமை நோக்கி உடங்கு உணர்
வெய்தி

விரலும், விரலிற்கு ஏற்ற அங்கையும்,
அங்கைக்கு ஏற்ற பைந்தொடி
முன்கையும்,

முன்கைக்கு ஏற்ற நன்கமை தோளும்,
தோளிற்கு ஏற்ற வாளொளி முகமும்,
மாம்படு வடுவுறழ் மலர்நெடுங்
கண்ணும்,

துப்பன வாயும், முத்தொளி

முறுவலும்,
ஒழுகு கொடிமூக்கும், எழுதகன்
புருவமும்,
சேடமை செவியும், சில்லிருங்
கூந்தலும்,
ஒல்குமயிர் ஒழுக்கும், அல்குற் பரப்பும்,
மருங்கின் நீளமும், நிறங்கிளர் சேவடித்
83-ம் அதிகாரம் கூடாநட்பு.
2323

தன்மையு மெல்லாம் முன்முறை நூலின்
அளந்தனன் போல வளம்பட எழுதிப்
பாவை இலக்கணம் பற்றி மற்றதன்
நிறமும் நீளமும் பிறவுந் தெரியாச்
செறிதாள் அண்ணலைச் செவ்வியின்
வணங்கி
இதன் வடிவு ஒப்போள், இந்நகர்
வரைப்பின்
மதன மஞ்சிகை யாகும் என "

(பெருங்கதை).

மதிநலங்கோன்ற இவன் உணர்த்தினன். இவ்வகையில் பல வும் விளக்கி உ.வ ந்தனசெய்து எவரும் வியந்துபுகழுமாறு விளங்கி யிருந்தான். அன்னைபோல் யார்க்கும் இ வ ன் இன்னருள் செய்தான்.

"தாயர்போலத் தக்கது நாடிய
வாவழிப் படுதலின் ஆகிய இவனே
கோமுகன்" எனப்பாவலர் முதலாக யாவரும்போற்ற இவன் மேவியிருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் வாகன் என்னும் குறுநில மன்னன் ஒருவன் இவன்பால் பொ ர ா மை கொண்டிருந் தான். அவன் திருவோடு அறிவும் சிறிது சேரப் பெற்றவன். தனக்கு அமைந்துள்ள செல்வாக்கையெல்லாம் அல் வழியிற் செலுத்திச் செருக்கித் திரிந்தானாயினும் தன்னை யடுத்துப் புகழ்ந்த வர்க்கு அவன் நல்ல உபகாரிபோல் கொடுத்துவந்தான். செல்வ

மும் கல்வியும் சேரப் பெற்றிருந்தும் நல்ல அமைவு இல்லாமையால் பொல்லாதவன் எனப்பொதுவாக எல்லாராலும் எள்ள நின்றான். புகழ்க்குரியன் கற்றோன் எனினும் புவியில், இகழ்க்குரியன் சாந்த மிலனேல்; என்னும் நேர்ந்த நீதிக்கு ஆர்ந்த இனமாய் நேர்ந்து நின்ற அவன், இவன்மீது நாளும் பகைமை பாராட்டி இடர் விளைத்து வந்தான். இவனது மதிநலத்தைக் குறித்து யாரேனும் வியந்து பேசின் உடனே அவன் இகழ்ந்து விடுவான். யாரும் புகழ்ந்து போற்றிவந்த இவனை அவன் இகழ்ந்து தூற்றி வந்தும் கண்டபோது மிக உரிமையாளன்போல் நகை முகங்கொண்டு உவகையாடி நின்றான். அவனது நயவஞ்சகத்தை நன்கு தெளிந்த இவன் இனியனாய் நின்று இன்னுரையாடி இதம் பல செய்வதுபோல் நலம்பல காட்டி உள்ளுற யாதும் உறவுகொள்ளாமல்

வெண்பா.

ஒழுகி வந்தான். மிகச் செய்து தம்மை எள்ளுவாரைத் தாமும் அவ்வாறே மிகச் செய்து நட்பின்றி நழுவவிடவேண்டும் என்பதை உலகம் காண இவன் ஒழுகி உணர்த்தினான்.

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின் று
அழித்துரைக்கும் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை.
(அறநெறிச்சாரம்).

மிகச்செய்து எள்ளும் வஞ்சர், மிக அஞ்சத்தக்கவராவனை இஃதுணர்த்தி நிற்றுர்

அழகை வென்றிப்பார்க்க.

கள்ளம் பொருந்தினர் காதலுறின்
ஆதல்செய்
துள்ளம் பொருந்தல் ஒழி.
உள்வஞ்சரோடு
உண்மையுறவுகொள்ளலாகாதென்பது இத
னால் கூறப்பட்டது.

---

830 வென்றி நரவாணன் மேவலனை
மேவிநண்பேன்
குன்றவிடுத்தான் குமரேசா—நின்ற
பகைநட்பாங் காலம் வருங்கால்
முகநட்
டகநட் பொரீஇ விடல்.
(௰)

இ—ள்.

குமரேசா! தன்னோடு
பகையாயிருந்த மானசவேகன் பின்பு நட்பாய்
வந்தபொழுது நரவாணதத்தன் அவனை

உறவாக உள்ளங்கொள்ளாமல் வன் நகையாடி விட்டான் எனின், பகை நட்பு ஆம் காலம் வருங்கால், முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல் என்க.

இது, பகைவரோடு மருவியொழுகும் பான்மை கூறுகின்றது.

மேவலனை மேவி நண்பு குன்ற விடுத்தான் என்றது பகைவனாய் நின்ற மாணசவேகன் உறவாய் வந்தபொழுது இசைந்து பொறுத்து அவனோடு உண்மையாக உளம் பொருந்தாமல் வெளியே உவகை தோன்ற உபசரித்து விட்டமை கருதி. 83-ம் அதிகாரம் கூடாநட்பு. 2325

பகை = பகைவர். நட்பு ஆம் காலம் = நண்பாய் நேரும் காலம். பகை, நட்பு என்பன இதில் ஆகு பெயர்களாய் நின்றன. வருங்கால் என்றது அவ் வரவின் அருமை

தோன்ற நின்றது.

ஒரீஇ = ஒருவி, நீக்கி. விடல் = விடுக.

முகம் நட்டு = முகத்தால் மட்டும் நட்பினைச் செய்து ; அஃதாவது புன்னகை செய்தும். இன்னுரையாடியும் உள்ளன்பில்லாமலே உரிமையாளன்போல் நன்னயஞ் செய்தல் என்க.

மேல், உள்ளூற எள்ளி நின்று புறத்தில் உறவுகொள்ள வந்தவரோடு தாமும் அவ்வாறே வஞ்சமாகச் சார்ந்தொழுக வேண்டும் என்றார்; இதில், பழம் பகைவர் அங்ஙனம் வரின் அவரோடு அமைந்தொழுகும் விதங்கூறுகின்றார்.

பகைவர் நண்பராய் ஒழுகும் காலம் வந்தால் அவரோடு முகத்தால் மாத்திரம் நட்புச்செய்து உளத்தில் அதனைவிட்டு ஒழித்துவிட வேண்டும் என்பதாம்.

பண்டுதொட்டுப் பகையாயிருந்தவன்

அதனை அறவே அறந்து இன்று கொட்டு இனி நட்பாயுள்ளேன் என்று நகையிற் காட்டியும், நயந்து சொல்லியும், நணுகுவனாயின், அவ்வாறே தானும அவனோடு மிக உறவாயிருப்பதாக உவந்து பேசி இனியனாய் நின்று உதவிகள் செய்பவன்போல் நகைமுகங் காட்டி உள்ளத்தில் ஒட்டு வைக்காமல் ஒழித்து ஒருவன் ஒழுகவேண்டும் என்பார் பகைநட்பாய்வரின், முகம்நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல் என்றார்.

முன்பு பகைத்திருந்த கலி பின்பு நட்பாய வந்தபொழுது நளன் நகையுறவு செய்து நழுவ விட்டதுபோல் பகைவர் உறவாய் வரின் உள்ளம் ஒட்டாமல் வெளியே கட்டிப்பூசி களினமாகத் தொட்டுவிட வேண்டும் என்றவாறு.

நண்பாய் வரும் பகைவர்பால் அகம் பொருந்தாமல் நின்று

முக நட்புச் செய்பவில்லையானால் என்னை
எனின், எவ்வகையிலும் பகைமையில்லையா
யொழிதலே ஒருவனுக்கு நல்லதாதலால் அவ்
ஒழிவுற அது
மேலும் பகை

செய்யவேண்டும்; செய்பவில்லையாயின் மேலும்
வளர்ந்து காலக்கழிவில் ஓரோ வழி மிகு துயர்



வெண்பா.

விளக்கும் என்க. பகைமை தணியுமாறு
முக நகைசெய்து, தம்மைப் பாது காத்
தொழுகல் மன்னர்க்கு அழகாம் என்க.
செந்நீரார் போன்று சிதைய
மிதிப்பார்க்கும்;

பொய்ந்நோர் போன்று பொருளை முடிப்பார்க்கும்;

அதநா அவ ' வாக கக தககா கரு ஒழு துபம்வ

வெந்நீரில் தண்ணீர் தெளித்து.

என்றது பழமொழி.

தோற்றத்தில் செவ்வியர்போன்றிருந்து உள்ளே அவ்விய முடையாய்க் காரியங்களில் அழிவுசெய்வாரோடும், பழம் பகை யை நினைந்து கூசி வெளிப்படையாக நெருக்காமல் வினைகளை இனிது முடித்து நலம் புரிந்து அகத்தே நட்பினை நாடி வருவா ரோடும் கருதி யறிந்து அரசன் உறவு கொள்ளவேண்டும் என இதை துணர்த்தி நிற்றல் காண்க. வெந்நீரின் சூடு தணியுமாறு தண்ணீரை அள்ளிக் கழுவிக்கொள்ளுதல் போல் பகைவரின் பகைதணியுமாறு முகநட்புச் செய்து இதமுறக்கொள்ளவேண்டுமென இது குறிக்க

நிற்கும் அழகைக் கூர்ந்து நோக்குக.

பகையாளி குடியை உறவாடிக் கெடு என்றபடி தம் பகைமையை உள்ளே மறைத்து வைத்து வெளியே நகைமிகச் செய்தும், நல்லுரையாடியும், எளிமை தோன்றத் தொழுதும், உரிமைகாண அழுதும், பகைவர் உறவுகொள்ள வருவர்; அவரை உண்மையாக நம்பி உடனே ஒட்டிக்கொள்ளாமல் அப் பகை நீங்குமாறு தானும் நகை ஓங்கச் செய்து, சொல்லளவில் புல்லி உள்ளதை யோர்ந்து மெல்ல ஒழியவிட்டு ஒருவன் ஒழுகிவர வேண்டும் என்றவாறு. உள் வஞ்சமுடைய கெட்ட மக்கள் பட்டடை முதலியன போன்று ஒட்டி நின்று இடர்விளைப்பரென அவரியல்புகளை இனிதுவிளக்கி, அவர் இணங்கவரின் அவரோடு அமைந்து ஒழுகவேண்டிய விதங்களையும் காட்டிக் கூடா நட்பின் கொடுமையை அடிகள் உணர்த்தி முடித்திருக்கும்

அருமையை ஊன்றி உணர்ந்துகொள்க.
நல்லன பலநூல் கற்பினும் கூடா நட்பினர் மனநலன் எய்தார்;
சொல்லின்முன் வணக்கும் வணக்கமும், தொழலும், சொரிந்த கண்ணீரும் தப்பாது, கொல்லும் வன்படையாம்; ஆதலிற் பகையுட்கொண்டவர்க்கு அவரென நீயும், ஒல்லுக; அதுவும் நீக்குறாக் காலம் உற்றுழி அல்லது
வேண்டா. என்பதும் ஈண்டு உள்ளத்தக்கது.

83-ம் அதிகாரம் கூடாநட்பு.

2327

பகையாயிருந்தவர் உறவாய் வந்தால் அவரை உண்மையாளராக நம்பி உடனே தழுவிக்கொள்ளலாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை
நாவாணன்பால் உணரப்படும்.

கதை.

நாவாணன் என்பான் கௌசாம்பி

நகரிலிருந்து அரசுபுரிந்த முடிமன்னனாகிய
உதயணனுடைய அருமைத் திருமகன்.
தாய்
பெயர் வாசவதத்தை. அப்பெற்றோர்
இருவரும் பெருந் தவம்
பேணி இவனைப்பெற்று மகிழ்ந்தார்.
நிதிபதியாகிய குபேரனரு
ளால் இவன் தோன்றினனாதலால்
நரபதிகளுக்கெல்லாம் அதிபதி
யாவான் என்னும் இயைபுதோன்ற
நரவாணதத்தன் எனப் பெயர்
புனைந்தழைத்தார். கருவிலேயே திருவுடைய
இவன் அறிவினும் சிறந்து தன் குலத்துக்கு
ஓர் அணியாய் விளங்கினான். நல்ல வீரன்.
ஆடவர்களும் காதல்கொள்ளும்படியான
பேரழகுடைய
வன். சாமுத்திரிகம் என்னும் உருவநூலில்
சொல்லியுள்ள உயரிலக்கணங்களெல்லாம்
தன் உடலில் இவன் ஒருங்கமையப் பெற்ற

வன். பல்வகைக் கலைகளையும் வழுவறப் பயின்று தெளிந்தவன்.

"நற்பொருள் ஞானம் நவின்று துறைபோகி
விற்பொருள் நன்னூல் விதியின் துணித்துப்
படைக்கலக் காணம் பல்வகை பயிற்றிக்
கொடைக்கடன் பூண்ட கொள்கையனாகிக்
குறைவில் செல்வமொடு குமார காலம்
நிறைவுற உய்த்து நீர்மையின் வழாஅ
எமஞ் சான்ற இந்நில வரைப்பில்
காமன் இவனெனக் கண்டோர் காமுறக்
குலக்கு விளக்காகத் தோன்றிக் கோலமொடு
லைத்தகு சிறப்பின் நல்லோர் நாப்பண்
இலக்கணம் பொறித்த வனப்புடை யாக்கையன்;

விசும்பிற் சு அவாவும் வேட்கைபணுகிப்
பசும்பொற் பல்படை இலங்குங் கழு
த்தினன்;
திருவாழைப தேங்கமழ் மார்பன்;
நரவாண தத்தன்;" எனக்
கொங்குவேளிர் கூடறு நூலாகிய 2328
திருக்குறட் குமரேச வெண்பா.
பெருங்கதையில் இவனைக் குறித்துக்
கூறியுள்ளார். இவன் பருவமெய்தியவுடனே
இமயமேயன்றி உம்பருலகையும் ஆள உறுதி
கொண்டிருந்தான். மதனமஞ்சிகை என்னும்
விழுமிய ஓர் அழகியை மணந்து அரிய பே
ரகங்களை நுகர்ந்து அமரரும் புகழ இவன்
உளமகிழ்ந்திருந்தான்.
இழைகிளர் இளமுலை எழுது
நுண்ணிடைத்
தழைவளர் மதுமலர் தயங்குபூஞ்சிகைக்
குழைமுகக் கொடியொடு குருதி
வேலினன்

மழைமுகில் மாரியின் வைகும் எனபவே.
என்றபடி இவன் வைகிவருங் கால்
மானசவேகன் என்னும் விஞ்சை மன்னன்
இவனது இன்ப நிலைகளைக்கேட்டு வியந்து
அழுக்காறுகொண்டிருந்தான். ஒருமுறை
அவன், அக்கௌசாம்பியில் நடந்த
விழவினைக்காணவந்தபோது தன் மனைவியோடு
அமளியில் இவன் அயர்ந்துறங்குவதைக்கண்டு
தன் விஞ்சைவலியால் யாதும்
அறியாவண்ணம் இவனை
அகலத்தள்ளிவிட்டு அவளைமட்டும்
கவர்ந்தெடுத்து விசும்பாறுகச்சென்று தன்
நகர்போயடைந்தான். அங்ஙனம் போனவன்
தன்னாலானவரையும் அவளை நயந்து புல்ல
முயன்றான். யாதும முடியாமையால் வேகவதி
என்னும் தன்தங் கையை ஏவினான்.
அவள்புகுந்து அண்ணனது கருதி முதலிய
வற்றையெல்லாம் மிகுதியாக விளக்கி

நேசமுறும்படி ஆசை மூட்டினாள். உடனே சீசீ உன் ஊன உரைகளை ஒழியவிடு! "காம னும் நாணும் கட்டழகுடைய என் சாமியையன்றி ஆவி நீங்கினும் யான் யாரையும் கருதேன்" என்று அவள் அறைந்து நின்றாள். கேட்ட அவள் விரைந்து மீண்டு எப்படியாவது இவனைக் கலந்து மகிழவேண்டுமென்று காதல்மேற்கொண்டு ஓர் விமானமூர்ந்து தன் பெரியல்புக்கேற்ப விரைவில் வந்து அந்நகரிடைப் புகுந்து யாரும் அறியாவண்ணம் ஓர் விஞ்சை வலியால் மதனமஞ்சிகை போல் வடிவங்கொண்டு இவனெதிர் நின்றாள். உயிரைப்பிரிந்த உடல்போல் அவள் பிரிவால் நிலைகுலைந் துகிடந்த இவன் அவளைக் கண்டவுடனே கழிபேருவகைகொண்டு உழுவலன்போடு தழுவி யின்புற்றான். இங்ஙனம் இணங்கி இனந்தெரியாமல் மகிழ்ந்திருக் குந்தால் நீலவேகன் என்னும்

கந்தருவ வேந்தன் தன் அருமைத் 

திருமகளாகிய அநங்கவிலாசனி என்பவளை இவனுக்கு மணம் புரிந்து தந்து தன் அரசினையும் உரிமையாக உதவி முடிபுனைந்து பெருமை செய்து நின்றான். அன்று இவன் தங்கித் தன் செங்கோலை எங்குஞ் செலுத்தினான். அரசரனைவரும் வந்து திறைகொணர்ந்து தந்து இவன் அடிபணிந்து நின்றார். இவனது அரிவையும் நிலையுங்கண்டு அம் மானசவேகன் அகமிக அஞ்சி மகன் மஞ்சிகையை உடனழைத்துவந்து இவனிடம் விடுத்துத் தான் செய்த பிழையினைப் பொறுத்தருளும்படி வேண்டி. முன் பொருந்தி நின்ற தன் தங்கையையும் இவனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். நாற்பத்து அரசர்களுக்குத் தலைவனாயுள்ள அவன்

பகைமொழிந்து

இங்ஙனம் தலைவணங்கி வந்ததைக்கண்டு இவன் மிக மகிழ்ந்து கொண்டான்; ஆயினும் பழம்பகைவனாதலால் உளம்பொருந்தாமல் இருந்தான். இருந்தும, அவனுக்குவேண்டிய நலங்களையெல்லாம் நாடிச்செய்து நகைமுகத்தனாய்ப் பகை தணிய நின்றான். அகத்தில் அன்புகொள்ளாமலே முகத்தில் நண்புகொண்டு பகைத்திறங் கண்டு பாடறிந்தொழுகி அரசினை இவன் பாதுகாத்து வந்தான்.

பகை நட்பாம் காலம் வருங்கால் முகம நட்டு, அகநட்பு ஒரீஇ விடல் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்று ஒழுகிவந்தான். உதயோதயகாவிய முதலிய நூல்களிலும் இவன் சரிதம் விரிவாக உரைக்கப் பெற்றுள்ளது

நேர்ந்த பகைவர் நிலைதளர்ந்து நீள்வறுமை

சார்ந்தெளிய ராய்வரினும்
சார்ந்—காய்ந்துலர்ந்த

வித்துமழை வீழ்ந்தவுடன்
விம்முதல்போல் வேறுதானே

ஒத்தவுடன் ஓங்குவார் உள்.

ஒன்றுதவருறவாய் ஒன்றின்
உடனமர்ந்து

நின்றார்போல் நின்று விடல்.

கூடாரை நகைபளவில்
கூடிவிடவே ண்டும் என்பது இதனால்
கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்
பொருள்,

'உள்ளம்பொருந்தாமல் கள்ளஞ்செய்து
நிற்பாரோடு நட்புக் கொள்ளலாகாது. மகளிர்
மனம்போல் இவர் வினைவில் மாறு 2330
திருக்குறட் குமரேச வெண்பா.

படுவர். எவ்வளவு கல்வியுடையாராயினும் நல்லவரென்று அவரை நம்பிக்கொள்ளலாகாது. அகத்தில் பகைமைகொண்டு முகத்தில் நகைசெய்துவரும் வஞ்சமக்களை அஞ்சி அகலவேண்டும். உரிமையுறச் சொல்லினும் அவரை இனியரென்று நம்பலாகாது. உள்ளம் பகையாயுள்ளவர் நல்ல நண்பர்போற் சொல்லினும் அதனு

ண்மை ஒல்லையிலுணரப்படும். அவர் வணங்கிச் சொல்லினும்

அதனை நம்பி இணங்கலாகாது. அழுது தொழுதவரினும் பகைவரை நம்புதல் பழுதேயாகும் . உளத்தில் இகழ்ந்து வைத்துப் புறத்தே புகழ்ந்துவரும் பொல்லாத மக்களை அவ்வாறே பொருந்

திவிடவேண்டும். பகைவர் நண்பராய் வரின் அவரோடு நகை.

செய்து நின்று அகத்தில் ... துவருதலே நல்லதாம் என்பதாம்.

அநுபூதி கூடாநட்பு முற்றிற்று.

---

௨

## சிறப்புப்பாயிரம்.

ஸ்ரீ பொன்னம்பலசிவம் அவர்கள் இயற்றியது.

முத்தமிழான கடலின் முகந்துணர் வுச்சூலு கொண்

டுத்தமமான குணவரையேறி உயர்குறள் சேர்

சத்தியமான குமரேச வெண்பா தனைப் பெய்குதால்

சித்துருவான செகவீரபாண்டியச் சீர்முகிலே.

ஸ்ரீமான் முத்துகிருஷ்ண மதுரகவி ராமாநுஜரவர்கள். சூட்டுமுகப் பாம்பணைமால் ஈரடியான் மூவுலகந் தொக அளந்தான்; பாட்டுமுகத் தீரடியான் முப்பால்வள் ளுவனளந்தான்; பயில வேற்றுக் காட்டுமுகத் தீரடிமேற் றொகுத்துமும்மைத் தமிழளந்து காட்டித் தந்தான்; ஈட்டுபுகழ்ச் செகவீர பாண்டியநா வலவனெனும் இருந்தக்கோனே.

ஸ்ரீமான் அ. க. மு. மு. முத்தப்ப

செட்டியாரவர்கள். எக்காலத் தெக்கலையு
மெல்லாரும்பயின் றுவள மின்புற்றெய்த
மைக்கால முனிவனைய ஜெகவீரபாண்டியனும்
வள்ளலன்பால்
அக்காலத் தவருரைத்த பொருளெல்லாம் தெளிவாக அமைத்தி
இக்காலத் தவர்க்களித்தார் இந்நூலை அமுதமென இனிதேயம்மா

---